உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய

# திருவாசகம்

# எட்டாம் திருமுறை - (I)



நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெல்லாம் பிச்சு தேற்றும் பெருந்துறையாய்
அரிய பொருளே அவிநாசி அப்பா பாண்டி வெள்ளமே
தெரிய அரிய பரஞ்சோதீ செய்வ தொன்றும் அறியேனே.

உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

**மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய**

# திருவாசகம்

# எட்டாம் திருமுறை (I)


பதிப்பாசிரியர்

**டாக்டர் இராச.வசந்தகுமார்**

வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்



**பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**

## கற்பகம் பல்கலைக்கழகம்

ஈச்சநாரி, கோவை - 21

## நூற்குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | **திருவாசகம் எட்டாம் திருமுறை –(I)** |
| ஆசிரியர் | : | **மாணிக்கவாசகர்** |
| நூல் வகை | : | செய்யுள் நூல் |
| வெளியீடு | : | **பன்னிரு திருமுறை ஆய்வு மையம் கற்பகம் பல்கலைக்கழகம்** |
| வெளியீட்டு எண் | : | **45** |
| முதற்பதிப்பு | : | **2016** பிப்ரவரி |
| பக்கங்கள் | : | **784** |
| தாள் | : | மேப்லித்தோ 80 gsm |
| அளவு | : | டெமி 1/8 |
| அச்சகம் | : | செஞ்சுடர் அச்சகம்<br>கோ.வா.பாளையம்,<br>போத்தனூர், கோவை – 23.<br>அலைபேசி : 98431 74238 |




## மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய
## திருவாசகம்
## எட்டாம் திருமுறை (I)

# பொருளடக்கம்



**மாணிக்கவாசகர் திருவாசகத்தைத் திருவாய் மலர்ந்தருள,**
**தில்லை அம்பலவனார் அத்திருப்பாடல்களைப்**
**படியெடுக்கின்ற திருக்காட்சி.**

உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

## மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய

# திருவாசகம்

# எட்டாம் திருமுறை (I)

வாட்டமிலா மாணிக்க வாசக நின் வாசகத்தைக்
கேட்ட பொழுது அங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டமுறு மென்னில் இங்கு நானடைதல் வியப்பன்றே.

**– ஆளுடைய அடிகள் அருள் மாலை**

**– வடலூர் இராமலிங்க சுவாமிகள் – வள்ளலார்**

## பதிப்புரை

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன்அடி சேரா தார். – திருக்குறள்

**1. உயிரின் நோக்கம் / இலட்சியம்** - வீடுபேறு, முத்தி, மோட்சம். (சொர்க்க நரகங்கள் அல்ல)

**2. எடுத்துக்கொண்ட கொள்கைகள்**

அ) எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன் தாள் மறவாமை.

ஆ) யாதொரு தெய்வங் கொண்டீர்; அத்தெய்வமாகி மாதொரு பாகர் தாம் வருவார் எனத் தெளிதலும்/ உறுதிபட நிற்றலும்.

இ) பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும், மாதொரு பாகர் மலர்த்தாள் மறப்பிலாமை.

ஈ) மற்றொரு தெய்வத்தைக் கனவிலும் நினையாதிருத்தல்.

உ) தம்மைத் தாம் முற்றிலும் மறத்தல்.

**3. வகுத்துக்கொண்ட நெறிகள்**

1) சிவபூசை – விசேட தீக்கை பெற்றுத் தினமும் சூரிய உதயத்தில் ஆன்மார்த்த

படிகலிங்க மூர்த்திக்கு ஆனைந்துத் திருமஞ்சனத்துடன் 1008 போற்றி மலர் வழிபாடு.

2) எழில் ஞானபூசை – திருமுறைகளையும், சாத்திரங்களையும் ஓதுதல், ஓதுவித்தல்.

3) சிவாலயத் திருப்பணிகள் – அன்றாட, வாராந்தர, மாதந்தர, வருடாந்தர பெருஞ்சாந்தி பெருவிழாக்கள் நடத்த உதவி செய்தல் – நல்விழாப் பொலிவு காணுதல் – காண்பித்தல்.

செய்யவார்சடைத் தெய்வசிகாமணி
பாதம் போற்றும் வாதவூரன்ப
பாவெனப்படுவதுன் பாட்டுப்
பூவெனப்படுவது பொறிவாழ் பூவே.

– நால்வர் நான்மணிமாலை
– சிவப்பிரகாச சுவாமிகள்

அன்புடையீர் வணக்கம்,

இருபது மற்றும் இருபத்தொன்றாம் நூற்றாண்டுகளைச் சைவ மறுமலர்ச்சிக் காலம் என்று சொல்லலாம். முந்தைய நூற்றாண்டுகளில் அடியார் பெருமக்களுக்குக் கிடைக்காத பல அரிய வாய்ப்புகள் இப்போது நமக்குக் கிடைத்துள்ளன. இவை நாம் பெற்ற பெரும்பேறு. ஏழாம் நூற்றாண்டில் சம்பந்தர் அவதாரத்துக்குச் சற்று முந்தைய காலம் வரை மங்கையர்க்கரசியார் போன்ற அடியார்களால் வெளியுலகத்துக்குத் தெரியும் வண்ணம் சைவத்தைப் பின்பற்றி வாழ முடியவில்லை. திருநீறு இடுவதற்கே தடைவிதிக்கப்பட்டிருந்த காலங்களில், மற்ற வேடமிடுவது எப்படி? சைவப்பொலிவோடு வாழ வாய்ப்பில்லை. தமிழ்நாட்டில் 1835 ஆம் ஆண்டு வரை காகிதத்தில் தமிழ் நூல்களை அச்சடிப்பதற்கு ஆங்கில அரசுத் தடைசெய்து வைத்திருந்தது. அந்தத் தடையை நீக்கி, இன்று கோடிக்கணக்கான திருவாசகப் பிரதிகளை அச்சடிக்கும் வாய்ப்பை இறைவன் நல்கியுள்ளான். அதுவரை ஓலைச்சுவடிகளில் எவ்வளவு படிகளை எடுத்திருக்க முடியும்? காகிதத்தைக் கடந்து, கணினிக்கு வந்து குறுந்தகட்டுப் பயணத்தில் பென்டிரைவ் எனப்படும் நுண்ணிய எழுது கரணிக்கு வந்து சேர்ந்துள்ளோம்.

தொழிற்புரட்சி, பசுமைப்புரட்சி, வெண்மைப்புரட்சி என்று பல புரட்சிகளைச் சந்தித்த மானுடம் இன்று அலைபேசி, ஊடகப் புரட்சியையும் சந்தித்துக் கொண்டிருக்கிறது. திருவில்லிப் புத்தூரில் ஆண்டாளுக்குப் பூசை முடித்து அன்னம் படைக்கப்பட்ட பின்பே, தாம் உண்பது என்பதைக் கோட்பாடாக 16 / 17 நூற்றாண்டில்

மதுரையை ஆண்ட திருமலை நாயக்கர் கொண்டிருந்தார். தொலைபேசித் தொடர்பு வசதிகள் மானுடர்களால் கண்டுபிடிக்கப்படாத அக்காலத்தில், மதுரையிலிருந்து திருவில்லிப்புத்தூர் வரை 64 கல் தொலைவிற்கு 64 கல் மணிமண்டபங்களை அமைத்தார். ஆண்டாள் பூசை முடிந்தவுடன் திருவில்லிப்புத்தூர் முதல் மணிமண்டபத்தில் மணி ஒலிக்கும். ஒரு சில விநாடிகளில் வரிசையாக அடுத்தடுத்து அனைத்து மண்டபங்களிலும் மணி ஒலிக்க, மதுரையின் திருமலைநாயக்க மணிமண்டப மணியும் நிறைவாக ஒலிக்கும். நாயக்கர் உணவருந்துவார்.

ஐந்து நூற்றாண்டுகளுக்குப் பின், இன்று அமெரிக்க நாட்டில் சில தமிழ்ச் சிவனடியார்கள் சிதம்பரம் நடராசரின் ஆறுகால பூசையையும் அந்த விநாடியே எந்தத் தொய்வுமின்றி வாட்ஸ்அப் எனப்படும் அலைபேசி புகைப்பட வசதிகள் மூலம் பார்த்துப் பிறவிப் பயனடைகிறார்கள். திருவாரூரில் பிறக்க முக்தி என்பது போல இந்தச் சைவ மறுமலர்ச்சிக் காலத்தில் பிறந்து நாம் சைவக்காற்றை ஆனந்தமாகச் சுவாசித்துக் கொண்டுள்ளோம். கோடிக்கணக்கான திருவாசகப் பிரதிகள் – ஆயிரக்கணக்கான திருவாசக முற்றோதல்கள். ஆயிரக்கணக்கான சிவாலயங்கள் – ஆயிரக்கணக்கான திருப்பணிகள் – குடமுழுக்குப் பெருவிழாக்கள். 20/01/2016 அன்று, இராமர் கோடி மாதவங்கள் செய்த திருஇராமேச்சுரத்து இறைவனுக்குப் குடமுழுக்குப் பெருவிழா நடந்தது. அதை நடத்திவைத்த பிள்ளையார்பட்டி பிச்சைக்குருக்கள், தாம் இப்பிறவியில் இதுவரை 2800 கும்பாபிடேகங்கள் நடத்தியுள்ளதாகத் தெரிவித்தபோது வியப்பு மேலோங்கியது. கொங்கு நாட்டில் மணிவாசகப் பெருமன்றத்தாரும் அத்தகு பெரும்பணிகளைச் செவ்வனே ஆற்றி வருகிறார்கள்.

இந்தக் கன்மபூமியில் பிறந்து வாழும் அடியார் பெருமக்களை நெறிப்படுத்த வேண்டுமென்று திருவுள்ளம் கொண்ட சிவபரம்பொருள் பன்னிரு திருமுறைகளை அடியார் பெருமக்கள் மூலம் அடையாளங் காட்டினார். அதில் எட்டாந் திருமுறையாகத் திகழ்வன திருவாசகமும், திருக்கோவையாரும். திருவாசகத்துக்கு ஆக்கியோன் பெயரும், நூற்பெயரும், நூல் பெருமையும் கூறும் பாடலாசிரியர் பெயர் தெரியவராத கீழ்க்காண் பாடலைச் சிறப்புப் பாயிரமாகப் போற்றி மகிழ்கிறோம்.

தொல்லை இரும்பிறவிச் சூழுந்தளை நீக்கி
அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கியதே – எல்லை
மருவா நெறி அளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவாசகம் என்னும் தேன்.

இப்பாயிரத்துக்கு விளக்கம் :

| | |
|---|---|
| தொல்லை இரும்பிறவி | தொன்றுதொட்டுவரும் பெரும்பிறவியாகிய |
| சூழுந்தளை | உயிரைச் சூழ்ந்த கட்டு (அ) பாசம் |
| நீக்கி | போக்கி, அகற்றி |
| ஆனந்தம் ஆக்கியது | இன்பத்தை விளைவித்தது |
| எல்லை மருவா நெறி | முடிவுபடாத இன்பத்தினை உடையதாதலின் வீட்டுநெறி |
| அளிக்கும் | தரும் |
| வாதவூர் எங்கோன் | பாண்டிய நாட்டில் மதுரையம்பதியிலிருந்து 15 கல் தொலைவில் உள்ள வாதவூரில் அவதாரம் செய்த எம் தலைவனார் மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்தருளிய |
| திரு | அழகு. வாசகம் – சொல், வார்த்தை |
| திருவாசகம் | அழகிய சொற்களால் ஆன நூல் |
| திருவாசகம் என்னும் தேன் | திருவாசகம் என்று சொல்லப்படும் தேன் |

தேன் உண்டார்க்கு இன்பந்தந்து நோய் தீர்ப்பதுபோல, திருவாசகமும் கற்பார்க்குப் பிறவிப் பிணியையும் அதற்கேதுவான அறியாமையையும் தொலைத்துப் பேரின்பம் நல்கும். திருவென்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கமாகிய அழகு. திருவாசகம் மாணிக்கவாசகரால் அவ்வப்போது பாடப்பட்டுப் பின்னர் இறைவன் திருக்கரத்தால் நூலாக எழுதப்பட்டது.

## நூலின் பயன்

தன்னைக் கற்போர் உள்ளத்தை உருகச் செய்து, அவரைப் பேரின்பப் பெருக்கின்கண் ஆழ்த்தி விடுதல் என்றவொரு அருமை பிறிது எந்நூலுக்குமில்லாத சிறப்பாகும்.

அன்பு பொதிந்த இதன் பாடல்களை நினைக்குந்தோறும், ஓதுந்தோறும், நெஞ்சம் நெக்குருகக் கண்ணீர் பெருக, நாவுரை குழற, மெய்ம்மயிர்ச் சிலிர்ப்பப் பேரின்ப வெள்ளம் கிளர்ந்து எழுதல் யாவர் மாட்டும் நிகழக் காணப்படுதல் தொன்றுதொட்டு தொடர்புபட்டு நிகழும். இந்நிகழ்வுகள் மற்றைய நூல்களை ஓதுவார்க்கு வருவதில்லை. ஓதற்கு எளிதான காரணம் பற்றியே திருவாசக முற்றோதல் நாடெங்கும் அடிக்கடி

நடைபெறுகிறது. திருவாசகம் இயற்றமிழ் நூலாகும். ஆகவே இயற்றமிழ் யாப்புப்பெயரே பதிகப் பெயராக இருக்கும். பண்ணமைதி கூறப்படும் வழக்கமில்லை.

ஒவ்வொரு அடியாரும் தாம் பெற்ற இன்ப அனுபவங்களை மற்றவர்களோடு பகிர்ந்து கொள்ளவேண்டும். பதிப்பாசிரியரும் ஒத்தக்கால்மண்டபம் நிறைநிலா வழிபாட்டுமன்ற அன்பர்களும் 20 ஆண்டுகளுக்கு முன்பு நடத்திய திருவாசகக் கருத்தரங்கில் ஈரோட்டுச் சிவனடியார் ஆங்கில மருத்துவர் இராசமாணிக்கனார்,

"மயிர்க்கால்கள் தோறும் அமுதூறச் செய்தனன்
ஏற்புத் துளைதொறும் ஏற்றினன் ஏற்றினன்"

என்ற தலைப்பில் மாலை 04.00 மணிக்குப் பேசத் தொடங்கினார். 06.00 மணிக்கு நிறுத்த வேண்டிய அவரால் பேச்சை நிறுத்தவும் முடியவில்லை. எங்களால் 08.30 மணி வரை நகரவும் முடியவில்லை. ஒரு அன்பர் கூட கலையவில்லை. அரங்கம் கண்ணீர் மழையில் நனைந்தது.

மருத்துவர் நம் உடம்பில் ஒரு ஊசி போட்டாலே தாங்குவதற்குச் சற்றுக் கடினமாக இருக்கிறது. இந்த உடலில் எத்தனை மயிர்க்கால்கள் உள்ளன? எத்தனை வியர்வைத் துவாரங்கள் உள்ளன? அவ்வளவு துவாரங்களிலும் அமுதத்தைச் சிவபெருமான் ஏற்றுகிறான். யாருக்கு ஏற்றுகிறான்? எப்போது ஏற்றுகிறான்? எப்படி ஏற்றுகிறான்? ஊசி போடாமலேயே நினைத்த (சங்கற்ப) மாத்திரத்திலேயே இன்பமயமாக ஏற்றுகிறான். திருவாசகம் போன்ற நூல்களைப் படித்துப்படித்து அன்பு உருக உருக மயிர்க்கால்கள் தோறும் அமுதம் ஏற்றப்படுகிறது. அப்போது, (செப்டிக் டேங்க்) என்று சொல்லப்படும் மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலான இந்த உடல், மற்றவற்றை உண்பதை நிறுத்திச் சிலகாலம் நீரை மட்டும் உண்டு, பின்பு அதையும் தவிர்த்து, காற்றை மற்றும் உண்டு, பசுகரணங்கள் பதிகரணங்களாக மாறி, உயிர் பிறப்பற்ற நிலைக்குச் செல்கிறது.

சிறு குழந்தைகளை அடித்து அடித்து, அங்ஙனம் அடிக்குந் தோறும் அடிக்குந் தோறும், அக்குழந்தை வாயைத் திறக்கும்போது, அதன் வாய்க்குள் சர்க்கரைச் சோற்றைத் தீற்றி உண்ணச் செய்யும் தாய்போல, 'எனக்குத் தானே தாயாகி வருத்தி வருத்தித் திருவருளாகிய இனிய சிவானுபவங்களை அமுதமாக ஊட்டிய அற்புதத்தை – வியப்பை அறியேன்' என்று மாணிக்கவாசகர் பாடியுள்ளார்.

'நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து நானென தெனுமாயக்
கடித்த வாயிலே நின்று முன் வினைமிகக் கழறியே திரிவேனைப்
பிடித்து முன்னின்றப் பெருமறை தேடிய அரும்பொருள் அடியேனை
அடித்து அடித்து அக்காரம் முன் தீற்றிய அற்புதம் அறியேனே'

எனவரும் திருவாசகத்தின் 571ஆவது பாடலுக்குள்ள, 1954ஆம் ஆண்டு இலங்கையிலிருந்து வெளிவந்த க.சு. நவநீதகிருஷ்ண பாரதியார் உரையையும், 10 ஆண்டுகள் கழித்து 1964 ஆம் ஆண்டு திருவாவடுதுறைத் திருமடத்திலிருந்து வெளிவந்த ச. தண்டபாணி தேசிகர் உரையையும் படித்தபின் வந்த கண்ணீருக்கு அளவேயில்லை. பல காலத்தில் பல அடியார்களும் திருவாசகத்தை ஓதியதால் வந்த கண்ணீர்ப் பெருக்கை பற்றி அவரவர்களே ஒரு நூல் எழுதலாம்.

திருவாசகத்தை முழுவதுமாக ஆங்கிலத்திலே மொழிபெயர்த்த ஜி.யு. போப்பையர் அவர்கள் எவருக்கேனும் கடிதம் எழுதத் தொடங்கினால் அக்கடிதத்தின் மேற்பகுதியில் திருவாசக மேற்கோள் ஒன்றை எழுதுவது வழக்கம். சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி சர் எஸ். சுப்பிர மணிய அய்யர் அவர்களுக்கு, போப் எழுதிய கடிதத்தின் மேற்பகுதி சற்றே நீரால் நனைந்து எழுத்துக்கள் கலைந்த நிலையிலிருந்தும், போப் அவர்கள் அப்படியே கடிதத்தை அனுப்பியிருந்தார். கீழே அதற்குக் காரணமும் அவர்களே கூறியிருக்கிறார். திருவாசகத் தேனமுதமானது போப் அவர்களின் கண்களில் நீர் பெருகச் செய்திருக்கிறது. பெருகிய கண்ணீர் கடிதத்தை நனைத்தது. அதை கவனியாமல் மை உறிஞ்சித் தாளால் கடிதத்தை ஒற்றி எடுத்தபோது எழுத்துக்கள் கலைந்தன. திருவாசகத்தால் எழுந்த கண்ணீர் போற்றத்தக்கது என்ற எண்ணத்தால் போப் அவர்கள் கடிதத்தை அப்படியே அனுப்பிவிட்டார்.

‘வாக்கிறந்த அமுதம் மயிர்க்கால் தோறும் தேக்கிடச் செய்யவும்
அற்புதமான அமுத தாரைகள் ஏற்புத் துளைதொறும் ஏற்றிடச் செய்யவும்’

என்ற திருவண்டப்பகுதியின் 170, 175ஆவது அடிகளை நினைத்துக் கொண்டேயிருந்தால் வீடுபேறடைதல் திண்ணம்.

திருவாசகத்துக்கு இதுவரை வெளிவந்துள்ள உரைகளில் மூன்று உரைகள் மிகவும் இன்றியமையாதவை; உயர்ந்தவை. ஒவ்வொருவரும் 6 முதல் 10 ஆண்டுகள் வரை கடினமாக உழைத்து உரையைத் தயாரித்துள்ளார்கள்.

1. 1954 ஆம் ஆண்டு வெளிவந்த க.சு. நவநீதகிருஷ்ண பாரதியார் உரை (முழுநூல்) – 1192 பக்கங்கள்.

2. 1964 ஆம் ஆண்டு வெளிவந்த ச. தண்டபாணி தேசிகர் உரை (முழுநூல்) 1422 பக்கம். இரண்டு பகுதிகள்.

3. 1947, 1953, 1980 ஆண்டுகளில் வெளிவந்த பண்டிதமணி கதிரேசச் செட்டியார் எழுதிய கதிர்மணி விளக்கம் என்னும் திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை உரைகள். மூன்று தனி நூல்கள்.

ஒவ்வொரு சிவனடியாரும் இவ்வுரைகளைப் படிக்கவேண்டும். இப்பிறவி இடங்கொடுத்தால் இவற்றை முழுமையாக வெளியிட வேண்டும் என்பது பதிப்பாசிரியரின் நோக்கமாகும். அது நிறைவுறுவதற்குத் திருவருள் துணைசெய்யும். தமது நாட்காட்டியைக் கீழ்க்கண்டவாறு அவர் தயாரித்து வைத்துள்ளார். அது நிறைவடையத் திருவருள் கூட்ட வேண்டும்.

| **வ.** எண் | **நூலின் பெயர்** | **ஆசிரியர்** | **நிகழ்வு நாட்கள்** |
|---|---|---|---|
| 1. | திருக்கோவையார் | மாணிக்கவாசகர் | ஏப்ரல் 2016 |
| 2. | ஒன்பதாம் திருமுறை, திருவிசைப்பா திருப்பல்லாண்டு | கருவூர்த் தேவர், திருமாளிகைத்தேவர் உள்ளிட்ட 9 ஆசிரியர்கள் | ஏப்ரல் 2016 |
| 3. | பத்தாம் திருமுறை | திருமூலர்<br>முதல் ஆயிரம் பாடல்கள்<br>இரண்டாவது ஆயிரம் பாடல்கள்<br>மூன்றாவது ஆயிரம் பாடல்கள் | <br>ஜுன் 2016<br>ஆகஸ்டு 2016<br>அக்டோபர் 2016 |
| 4. | பதினோராந் திருமுறை | சிவபெருமானார், நக்கீரதேவர் உட்பட 12 ஆசிரியர்கள் | டிசம்பர் 2016 |
| 5. | பன்னிரெண்டாம் திருமுறை | தெய்வச் சேக்கிழார்<br>முதல் பகுதி<br>இரண்டாம் பகுதி<br>மூன்றாம் பகுதி | <br>பிப்ரவரி 2017<br>ஏப்ரல் 2017<br>ஜுன் 2017 |
| 6. | சாத்திரங்கள் ஞானாமிர்தம், களிறு, உந்தி | வாகீச முனிவர், திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனார் | ஆகஸ்டு 2017 |
| 7. | சிவஞானபோதம் | மெய்கண்டார் | அக்டோபர் 2017 |
| 8. | சிவஞானசித்தியார் | அருள்நந்திசிவம் | டிசம்பர் 2017 |
| 9. | இருபாவிருபது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன் | அருள்நந்திசிவம், மனவாசகங்கடந்தார், உமாபதிசிவம் | பிப்ரவரி 2018 |

| | | | |
|---|---|---|---|
| 10. | வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் | உமாபதி சிவம் | ஏப்ரல் 2018 |

திருவாதவூரர் – அமைச்சர் – குதிரை வாங்கச் சென்றார் – குருந்த மரத்தடியில் ஆட்கொள்ளப்பட்டு மணிவாசகர் ஆகிறார் – துணையான சுற்றங்கள் துறந்தார் – தம்மை மறந்தார் – பகல் இரவு வேறுபாட்டை அறியாத நிலைக்குச் சென்றார் – அற்புதமான அமுத தாரைகள் ஏற்புத் துளைத்தொறும் ஏற்றப்பெற்றார். பரா அமுதமாகிய திருவாசகம் பாடும் ஆற்றல் பெற்றார். இவை அனைத்தும் பல பிறவிகளில் கிடைத்த வளர்ச்சி அன்று. ஒரே பிறப்பில் ஒரே நொடியில் இவை அனைத்தும் ஒரு மனிதருக்குக் கிடைத்ததென்றால் இதைவிட அற்புதம் வேறு என்ன இருக்கமுடியும்? அதனால் திருப்பெருந்துறையில் அற்புதம் இருக்கவேண்டும் என்று எண்ணி முதற்கண் அற்புதப்பத்தைப் பாடினார் என்று நம்பி திருவிளையாடலில் பதிவு செய்துள்ளார்.

இந்த அற்புதம் அவரளவில் அனுபவிக்கத்தக்கது ஒன்றேயன்றி அறியத்தக்கதொன்றன்று என வியந்து கூறுகிறார்.

**முதல்வகை அற்புதம் – பிரபஞ்ச காரணனாய், மனம், வாக்குகளுக்கு எட்டாதவனாய் – ஒரு நாமம் ஓருருவம் இல்லாதவனாய் உள்ள இறைவன் மானிட வடிவு தாங்கி, தமக்காக, தம்முடைய ஊனக்கண்களும் காணும்படியாக தமக்கு எதிரே வந்தது, முதல் அற்புதம். பொன்னடி இணைகாட்டி மெய்யனாய் வெளிக்காட்டி முன்நின்றதும் ஓர் அற்புதம்.**

**இரண்டாவது அற்புதம் – ஒன்றுக்கும் உதவாதவராகிய தம்மை ஆண்டுகொண்ட அற்புதம். இதைவிட அற்புதம், ஆண்டதோடு நில்லாமல், முன்னரே ஆண்டு கொள்ளப்பெற்ற அடியார்களிடையே அமருமாறு செய்தமை.**

## அற்புதம்

**அற்புதம் என்பது வியப்பு. எண்வகைச் சுவையுள் ஒன்று. இதனை மருட்கை எனத் தொல்காப்பியம் வழங்கும். வியப்பு – புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் ஆகிய நான்கினையும் நிலைக்களனாகக் கொண்டு தோன்றும் என்பார் தொல்காப்பியர்.**

I. **நடக்க முடியாதது என்று அனைவரும் உறுதியாக நம்பிக்கூறும் ஒரு செயல், நம் கண்ணெதிரே நடந்தால், அது அற்புதம். இது ஆக்கம் பற்றிய வியப்பாகும்.**

II. உள்ளத்தின் கண்ணே நிகழ்ந்து உயிரினால் அனுபவிக்கப்படும் ஆனந்தமயமான பெருமித உணர்ச்சிகளை இன்னதென்றும்; யான் அனுபவிக்கிறேன் என்றும் அறியாது அனுபவிப்பது அற்புதம்.

III. அற்புதமாவது ஆண்டவன் கூட்டம்.

IV. சிவப்பேற்றை உணர்த்திய அற்புதப்பத்து. 'அற்புதம் விளம்பேனே' 'அற்புதமறியேன்' என்று காட்டி, உயிர் சிவானுபோகத்தில் இன்னதென்று பகுத்தறிவின்றி தான் அற்புத நிலையிலே ஆனந்தானுபவம் அனுபவிக்கும் நிலையை உணர்த்தியது.

V. இதுவரை நுகரப்படாத ஒன்று, நுகர்ச்சிக்குப் புலனானபோது விளைந்த தன்வசமற்றநிலை.

## அதிசயம்

I. ஒரு செயல் அல்லது நிகழ்ச்சி அடிக்கடி நடைபெறாவிட்டாலும், முன்னர் என்றோ ஒரு நாள் நடைபெற்றதுண்டு; அதுபோல இனியும் என்றோ ஒரு நாள் நடைபெறக்கூடும். ஆனால், நாம் எதிர்பார்த்த நேரத்தில், எதிர்பார்த்த இடத்தில், அந்நிகழ்ச்சி நடைபெற வாய்ப்பில்லை; எதிர்பாராத நேரத்தில், எதிர்பாராத இடத்தில் நாம் சற்றும் எதிர்பாராத முறையில் நடந்தால் அது அதிசயம்.

II. உள்ளத்தின் கண்ணே நிகழ்ந்து உயிரினால் அனுபவிக்கப்படும் ஆனந்தமயமான பெருமித உணர்ச்சிகளை அவை இன்னதென்று உணர்ந்து அனுபவிப்பது அதிசயமாகும்.

III. அதிசயமாவது அடியார் கூட்டம்.

IV. அதிசயப்பத்திலே "அதிசயம் கண்டாமே" என்று பாடி அருளுகிறார். அதிசயப்பத்தின் பத்துப் பாடல்களிலும் தம்மை அடியாரில் கூட்டியதை அதிசயம் என்று விளம்புகிறார். இறைவன் திருவடிகளை விட்டுப்பிரியாத அடியார் கூட்டத்தில் தாமும் ஒருவராக அமரும் வாய்ப்புக் கிட்டியதை அதிசயம் என்று போற்றுகிறார்.

V. அதிசயம் – மிகுதி காரணமாக விளைந்த மேன்மையை உணர்த்துகிறது.

ஒருமுறை மட்டும் அக்காரம் தீற்றுவது போதாதா? அடித்து அடித்து அக்காரம் தீற்ற வேண்டிய அவசியம் என்ன? ஒருமுறை தீற்றியவுடன் விட்டொழிக்கிறோம். ஆனால் எல்லாவற்றையும் விட்டொழித்தவர்கள்கூட 'விட்டோம்' என்ற எண்ணத்தை விடுவது கடினம். அந்த வாசனா மலம் வந்து தாக்காமல் இருக்கவே அடித்து அடித்து அக்காரம் தீற்றுகிறான்.

பதிப்பாசிரியரைச் சிவபெருமான் 26 ஆண்டுகளாக அடித்து அடித்து அக்காரமுன் தீற்றிய அற்புதம் தான், இந்தத் திருமுறை நூல் பதிப்புகள். முதலடி 27.06.1990 திருப்பெருந்துறை குடமுழுக்கின்போது விழுந்தது. அதற்குப்பின் அடிமேலடியாகக் கொடுத்து அக, புறத்தொண்டுகளைச் செய்யவைத்துச் சரியை, கிரியை நெறிகளுக்குத் திருப்பிச் சித்தம் சிவமாக்கி, வழிநடத்தி வருகிறார்.

1990ஆம் ஆண்டு ஜுன் மாதம் 27ஆம் நாளன்று நடந்த (இந்நாளில் ஆவுடையார் கோயில் எனப்படும்) திருப்பெருந்துறை ஆத்மநாத சுவாமி திருக்கோயில் திருக்குடமுழுக்கு விழாவில் கலந்து கொண்டதற்குப் பின் தாளாளரின் சைவ வாழ்க்கைப்பயணம் தொடங்கியது. அந்த மானசதீக்கைக்குப்பின் 1990-95ஆம் ஆண்டுகளில் கோவை ஒத்தக்கால்மண்டபம் அருள்தரும் பூங்கோதையம்மன் உடனமர் அருள்மிகு புற்றிடங் கொண்டீசப் பெருமான் திருக்கோவில் திருப்பணிகள் செய்து திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடத்தும் பேறுபெற்ற காலத்தில், உடனிருந்த பல அடியார் பெருமக்களுடன் சார்ந்து, சமய தீக்கை பெற்றுச் சிவ வழிபாடு செய்துவந்தார். 1997-98ஆம் ஆண்டுகளில் சமயதீக்கை பெற்றுச் சிறப்பாக ஆன்மார்த்த பூசைசெய்து வந்த அடியார் பெருமக்களுடன் இணைந்து, விசேட தீக்கை பெற்றுத் தினமும் திருமேனியை வைத்து, அபிடேகித்து 1008 மலர் அர்ச்சனை செய்து சிவவழிபாடு சிறப்பாக இதுகாறும் செய்துவருகிறார். கண்ணுதற்பெருங் கடவுளின் கருணை கைகூட அவருக்கும், அவருடைய அடியார் திருக்கூட்டத்தில் சிலருக்கும் நிர்வாண தீக்கை பெற வேண்டுமென்ற எண்ணம் மேன்மேலும் வளர்ந்து வருகிறது. அரும்பாகி இருந்து, மலர்ந்து கொண்டிருக்கும் அவர்கள் காயாகும் காலத்தை நோக்கிக் காத்திருக்கிறார்கள். இந்த நிலையில் நிர்வாண தீக்கை என்றால் என்ன? எப்போது பெறுவது? அதற்குண்டான தகுதிகள் என்ன? அந்தப்பக்குவ நிலைக்கு நம்மை உயர்த்திக் கொள்ளுவது எப்படி? என்ற கேள்விகள் எழுகின்றன. அதற்குண்டான நூல்களை எடுத்து நோக்கும்போது, அத்துவசுத்தியால் மலநீக்கம் பெற்ற ஆன்மா, நிர்வாண தீக்கை வழியே உய்வு பெறும் என்ற கருத்து கிடைக்கிறது.

மந்திரங்கள் 11, பதங்கள் 81, வன்னங்கள் 51, புவனங்கள் 224, தத்துவங்கள் 36, கலைகள் 5 எனப்படுகின்ற ஆறு அத்துவாக்களையும் (அத்துவா - வழி /வகை) ஒன்றினுள் ஒன்று அடக்கி, முடிவில் நின்ற சாந்தியாதீதக் கலையைத் திரோதான சத்தியிலும், அச்சத்தியைச் சிவத்திலும் அடக்கும் அத்துவ சுத்தியாம் பெருநிலையைப் பெறுவதற்கான படிநிலைகளை ஆய்வு செய்யும்போது நமது முன்னோர்கள் தயாரித்து வைத்திருந்த கீழ்க்கண்ட சாதனவியல் பட்டியல் கிடைத்தது.

| | | | | |
|---|---|---|---|---|
| சரியையில் | சரியை, | கிரியை, | யோகம், | ஞானம் |
| கிரியையில் | சரியை, | கிரியை, | யோகம், | ஞானம் |
| யோகத்தில் | சரியை, | கிரியை, | யோகம், | ஞானம் |
| ஞானத்தில் | சரியை, | கிரியை, | யோகம், | ஞானம் |

இந்தப் படிநிலைகளை ஆழ்ந்து நோக்கும்போது,

| |
|---|
| சரியையில் கிரியை நிலையில் ஒருவருக்குத் சமயதீக்கையும் |
| கிரியையில் சரியை நிலையில் ஒருவருக்கு விசேடதீக்கையும் |
| கிரியையில் ஞான நிலையில் ஒருவருக்கு நிர்வாண தீக்கையும் |
| யோகத்தில் சரியை நிலையில் ஒருவருக்கு ஆசாரிய அபிடேகமும் |

வழங்கலாம் என்ற ஒரு தெளிவு பிறக்கிறது.

இந்தப் படிநிலைப்பட்டியலை மேற்கொண்டு ஆராய்ந்தால், ஒவ்வொரு மனிதரும் தாம் எந்தப் படிநிலையில் உள்ளார் என்பதைத் தெரிந்துகொண்டு மேற்கண்ட படிநிலைகளுக்கு அவரவர் தம்மை உயர்த்திக் கொள்ளும் வாய்ப்பைப் பெறலாம். சான்றாக, தாளாளர் தாம் கிரியையில் கிரியை என்ற நிலைக்கு நுழைந்து கொண்டிருப்பதாக நினைக்கிறார். மேம்பட்ட நிலைகளுக்குச் செல்வதற்காக முயற்சி செய்து கொண்டிருக்கிறார். மேற்கண்ட படிநிலைப்பட்டியலில் சகலர் எந்த நிலையில் பிரளயாகலர் ஆகிறார்?, எப்போது விஞ்ஞானகலர் ஆகிறார்?, இராசத குணம் எந்த நிலையில் தாமதமாகும்?, அது எப்போது சாத்துவிகம் ஆகும்? என்ற கேள்விகளுக்கெல்லாம் விடை கண்டுகொண்டே சென்றால், எல்லாவகையான தீக்கைகளையும் பெற்று ஆசாரியனாகப் பல அடியார்களை உருவாக்கியபின் சிவனருளால் ஞானம் கைவரப்பெற்று, நிட்டையடைந்து சிவபரம் பொருளுடன் இரண்டறக் கலந்து பேரானந்தமடையலாம் என்ற தெளிவு கிடைக்கும். இவை சில எண்ண ஓட்டங்கள். இவற்றைத் தக்காருடன் பகிர்ந்து கொண்டும், சான்றோர்வாய் விளக்கம் கேட்டும், நூலறிவின் மூலம் தெளிவு பெறவும் உதவுபவை பன்னிரு திருமுறைகள். அவ்வகையில், இறைவனே ஞானகுருவாக எழுந்தருளிவந்து உண்மை ஞானத்தை உதவி ஆட்கொண்டதன்பின் ஞானச் சீடனுக்குச் சிவம் எங்ஙனம் சுவானுபூதிகம் ஆகின்றது என்பதை நன்கு விளக்குவது நமது திருவாசகம்.

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்

தம்முதல் குருவுமாய்த் தவத்தினின் உணர்த்தவிட்டு
அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே

என்ற சிவஞானபோத எட்டாஞ் சூத்திரத்தின் அநுபவப் பொருளையறிவிப்பது என ஆன்றோர்களால் கருதப்பெறுவது எது? எட்டாம் சூத்திரத்திற்கு இலக்கியம் திருவாசகம். எட்டாம் திருமுறைக்கு இலக்கணம் எட்டாம் சூத்திரம்.

பலகாலும் பயின்று அழுந்தி அழுந்தி ஆனந்தத்தில் தோய்ந்த அநுபவத்தால் கற்றாரையும் மற்றாரையும் பணிக்கும் பெருமை பெற்றுச் சொல்நடையும் பொருள்நடையும் அப்படியப்படியே பின்னிப் பிணைந்துள்ள பல ஆயிரம் பாடல்களைப் பாடவைத்து, வடலூர் இராமலிங்க அடிகளை ஆனந்தக் கூத்தன் அருட்டுறை ஆக்கியது எது?

பல்லாயிரம் கல் தொலைவிற்கப்பால், பறந்து, புறச்சமயத் தொண்டராகச் செந்தமிழ்நாட்டில் அடிவைத்த போப் அவர்களைத் தனது பொதுமை உணர்ச்சியாலும், புதுமை அனுபவத்தாலும், செந்தமிழ் மாணவனாகச் செய்து, சிறந்த மொழி பெயர்ப்பாளராக மாற்றி அமைத்தது எது?

எளிமையில் இன்பம் இருக்கிறது. ஒவ்வொருவருடைய உள்ளத்தையும் தீண்டித் தன்வசம் ஆக்கும் வன்மையிருக்கிறது. கருத்தைக் கரைத்துக் கண்ணீர் பெருக்கும் கனிவு இருக்கிறது என்பதை உலகிற்கு உணர்த்துவது எது?

இன்ப அன்பே எங்கள் மொழியின் இயல்பு என்பதை எல்லாரும் என்றும் அறியத் துணையாக நின்று நிலவுவது எது?

தமிழ் மக்களின் தத்துவக் கூறுபாடுகளையும், முத்தியுபாயத்தையும், முத்தியின்பத்தையும் முற்றும் அநுபவத்திற்கு ஒத்தவகையில் மொழிவது எது? திருவாசகமாகிய இந்த நூலன்றோ!

இத்தகைய திருவாசகத்தில் வைத்த ஈடுபாட்டாலன்றோ இறைவன் பிட்டுக்கு மண் சுமந்து பிரம்படிபட்டார். கடையூழி வருந்தனிமை கழிக்க, மானிடவடிவு தாங்கிக் கையேட்டெழுத்தாளராகி ஒரு பிரதி எழுதி வைத்துக்கொண்டார். மற்ற பிரதிகள் நமக்கு உதவின. இன்னும் உதவிக்கொண்டு இருக்கின்றன. 1834 ஆம் ஆண்டு வரை ஓலைச்சுவடிகளிலும் 1835 ஆம் ஆண்டு முதல் அச்சேறியும் பல மூலப்பிரதிகள் திருவாசகத்திற்கு வெளிவந்துள்ளன. ஆனால் நம் போன்றவர்களை உய்விக்க எழுந்த முதல் உரை சீகாழித் தாண்டவராயர் செய்த திருவாசக அனுபூதியுரை. இதைத் தொடர்ந்து வாசுதேவ முதலியார், இராமசாமி

முதலியார், முருகேச முதலியார், சுந்தரமாணிக்க யோகீஸ்வரர், மறைமலையடிகள், கா.சு. பிள்ளை, பண்டிதமணி, நவநீதகிருஷ்ண பாரதி, சிவ. அருணகிரி, சி. அருணைவடிவேலு, ச. தண்டபாணி முதலிய பெரியோர்கள் திருவாசகம் முழுவதற்கோ, சிற்சில பகுதிகளுக்கோ உரைவிளக்கம் செய்தனர்.

இதனை ஒவ்வொரு தமிழனும் ஞானக் கருவூலமாகக் கருத்திலும் கையிலும் எப்போதும் தாங்க வேண்டுவதன் இன்றியமையாமையை நன்கு உணர்ந்தே பல பதிப்புக்களைப் பெரியோர்கள் அன்றும் அளித்தார்கள். இன்றும் அளித்து வருகிறார்கள். இதுவரை, பன்னூறு ஆண்டுகளாக வெளிவந்துள்ள திருவாசகம் பற்றிய பன்னூறு நூற்பதிப்புகளைப் பட்டியலிடுகிறோம். அந்த நூற்பதிப்பாளர்களை வணங்குகின்றோம். இந்நூல் வெளிவருவதற்கு அன்னார்களின் நூல்கள் பேருதவியாக இருந்தன.

## திருவாசக நூல் பதிப்புகள்

| வ.எ. | காலம் | இயற்றியவர்கள் - நூல் பெயர் - பதிப்பாளர் / வெளியீடு | மூலம் | உரை | பகுதி | போற்றிப் பரவிய நூல்கள் | பிற மொழிகள் | பிற குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | 13ஆம் நூற்றாண்டு | பெரும்பற்றப்புலியூர் நம்பி - திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம் | | | | ✓ | | 1906ஆம் ஆண்டு உ.வே.சா. பதிப்பு வெளிவந்தது. |
| 2. | 16/17ஆம் நூற்றாண்டு | பரஞ்சோதி முனிவர் - திருவிளையாடற் புராணம் | | | | ✓ | | 1951ஆம் ஆண்டு திருப்பனந்தாள் காசி மடம் அறக்கட்டளை வெளியீடாக நூலை வெளியிட்டது. |
| 3. | 16/17ஆம் நூற்றாண்டு | துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் - நால்வர் நான்மணிமாலை | | | | ✓ | | ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் நால்வர் நான்மணி மாலைக்கு 1962ஆம் ஆண்டு ஒரு விருத்தியுரை எழுதியுள்ளார். அற்புதமான நூல். |
| 4. | 16/17ஆம் நூற்றாண்டு | சுந்தரலிங்க முனிவர் - பழைய திருப்பெருந்துறை புராணம் | | | | ✓ | | |
| 5. | 1713 | பாதிரியார் சீகன்பால்கு "தென்னிந்தியக் கடவுளரின் வம்சாவளி" ஜெர்மன் மொழி. ஆங்கில ஆக்கம் 1869ல் வெளிவந்தது. மறுபதிப்பு 1984. | | | | | ✓ | தாம் தமிழ்நாட்டில் வாழ்ந்த காலத்தில் பிரசித்தியாக விளங்கி வந்த நூல்களாகத் திருவாசகம், தேவாரம், சிவஞானபோதம், சிவகவசம் ஆகியவற்றைக் குறிப்படுகிறார். |
| 6. | 17/18ஆம் நூற்றாண்டு | கடவுள் மாமுனிவர்-திருவாதவூரர் புராணம் மூலமும் உரையும் 1977, 2007 ஆண்டுகளில் | | | | ✓ | | கிடைத்தற்கரிய பழைய நூல்கள் மறுபதிப்புத் திட்டத்தின் கீழ் வெளியிடப்பட்டது. |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | திருவாவடுதுறை ஆதீனத்தால் வெளியிடப்பட்டது. (சிவஞான சுவாமிகள் பேரவை) | | | | | | |
| 7. | 19ஆம் நூற்றாண்டு | மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை - திருப்பெருந்துறைப் புராணம் (புதியது) (06.4.1815 - 10.02.1876) | | | | ✓ | | 1892ஆம் ஆண்டு உ.வே.சா. பதிப்பு வெளிவந்தது. |
| 8. | 19ஆம் நூற்றாண்டு | வள்ளலார் - ஆளுடைய அடிகள் மாலை (05.10.1823 - 30.01.1874) | | | | ✓ | | |
| 9. | 1834 | சீகாழித் தாண்டவராயர் - திருவாசகத்திற்கு அனுபூதி உரை என்னும் வியாக்கியானம் | ✓ | ✓ | | | | ஒவ்வொரு திருப்பாடலுக்கும் பொழிப்பநுபூதி, பதவநுபூதி, நுட்பவனுபூதி, விரிவநுபூதி என்ற முறையில் சொல்கிறது. |
| 10. | 1835 | கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் -திருவாசக முழுநூல் | ✓ | | | | | முதன்முதல் அச்சேறிய திருமுறை திருவாசகமே. |
| 11. | 1845 | இராமசாமி முதலியார் | ✓ | | | | | |
| 12. | 1857 | சிவக்கொழுந்து தேசிகர், சரவணப் பெருமாள் ஐயர் பதிப்பு | ✓ | | | | | |
| 13. | 1859 | சதாசிவப்பிள்ளை | ✓ | | | | | |
| 14. | 1862 | இரத்தின முதலியார் புங்கத்தூர் சபாபதி முதலியார் கல்வி விளக்க அச்சுக்கூடத்தில் வெளியானது | ✓ | | | | | பாடக்கிரமம் – திருவாரூர் குருசாமி தேசிகர். காஞ்சிபுரம் சபாபதி முதலியார் பார்வையிட்டு. |
| 15. | 1864 | மதுரைத் தமிழ்சங்கப் புலவர் களத்தூர் வேதகிரி முதலியார் புதல்வர் சுப்பராயலு முதலியார் பதிப்பித்தது | ✓ | | | | | இரத்தின முதலியார் – சண்முக விலாச சென்னை அச்சுக்கூடத்தில் அச்சானது. |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 16. | 1865 | சண்முக தேசிகர் பரிசோதித்து நுங்கம்பாக்கம் இரத்தின முதலியாரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது | | | | | | சண்முக விலாச அச்சுக்கூடத்தில் அச்சடிக்கப்பட்டது |
| 17. | 1868 | அனந்தய்யர் பதிப்பு | ✓ | | | | | சிவக்கொழுந்து தேசிகர். சரவணப் பெருமாள் ஐயர் பதிப்புக்கு இணங்க |
| 18. | 1868 | கா.பீர்காதறொலி ராவுத்தர் அவர்களால் காஞ்சிபுரம் திருவேங்கட முதலியாரது இயற்றமிழ் விளக்க அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது | ✓ | | | | | திருப்புன்கூர் சிவலோக நாத பண்டிதரால் பரிசோதிக்கப்பட்டது |
| 19. | 1869 | பாதிரியார் சீகன் - பால்குவின் நூல் ஆங்கிலத்தில் வெளிவந்தது | | | | | ✓ | |
| 20. | 1870 | சண்முக முதலியார் பதிப்பு | ✓ | | | | | |
| 21. | 1871 | தண்டலம் தமிழ் உபாத்தியாயர் திருநாகராச முதலியார் குமாரர் சுப்பராய முதலியாரால் பரிசோதிக்கப்பட்டு வெளியானது | ✓ | | | | | தக்கோலம் நரசிம்மலு நாயுடு அவர்களது விவேக சந்திரோதய அச்சுக்கூடத்தில் பதிப்பானது |
| 22. | 1876 | கோகுலபுரம் அருணாசல முதலியார் | ✓ | | | | | கொண்ணூர் மாணிக்க முதலியார் – மனோன்மணி விலாச அச்சுக்கூடத்தில் வெளியானது |
| 23. | 1890 | கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், தணிகை சரவணப் பெருமாள் அய்யர் | ✓ | | | | | சிதம்பர சுவாமிகளால் பரிசோதிக்கப்பட்டது |
| 24. | 1892 | ப.சிதம்பர முதலியார் - திருவாசகம் - சிரோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை | ✓ | | | | | சந்தி பிரிக்காமல் மூலம் பதிக்கப் பெற்றுள்ளது. |
| 25. | 1892 | சிங்காரவேலு முதலியார் | ✓ | | | | | |
| 26. | 1897 | ஊ. புஷ்பரதச் செட்டியார் பதிப்பு | ✓ | | | | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 27. | 1897 | பட்டாளம் வாசுதேவ முதலியார் - மதராசு ரிப்பன் அச்சுயந்திர சாலை | ✓ | ✓ | | | | பதவுரை, கருத்துரை, விசேட உரை என்னும் அமைப்புகள் கொண்டது. |
| 28. | 1897 | ப.இராமசாமி முதலியார் - திருவாசகம் - இந்து யூனியன் அச்சுக்கூடம், சென்னை | ✓ | ✓ | | | | ஆங்கில மொழிபெயர்ப்புப் பற்றி கூறப்பட்டது. |
| 29. | 1897 | போப் ஐயர், சர் பொன்னம்பலம் அருணாசலம் - மாணிக்கவாசகர் தாயுமானவர் ஆகியோர் அருட்பாடல்களில் சில | | | | ✓ | | |
| 30. | 1897 | ஜே.எம்.நல்லுசாமிப்பிள்ளை - ”சித்தாந்த தீபிகை”- ஆங்கில மாத இதழ் | | | | ✓ | | ஆங்கில மொழிபெயர்ப்பில் திருவாசகப் பாடல்கள். வேதாந்தத்துக்கு விவேகானந்தர், சித்தாந்தத்துக்கு நல்லுசாமிப்பிள்ளை |
| 31. | 1899 | திருமலைக்கொழுந்துப்பிள்ளை - மாணிக்கவாசகரது காலம் | | | | | ✓ | ஆங்கில நூல் |
| 32. | 1899 | திருமயிலை செந்தில் வேலு முதலியார் | ✓ | | | | ✓ | சென்னை கலாரத்நாகரம் அச்சுக்கூடத்தில் திருவாசகம், திருக்கோவையார், திருஇசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம், 11 ஆம் திருமுறை ஆகிய நூல்கள் ஒரே புத்தகமாக வந்தன. |
| 33. | 1900 | தம் கல்லறையில் “தமிழ் மாணவன் ஜி.யு. போப்” என்று பதிக்க வேண்டுமென்று *20.10.1900*ஆம் ஆண்டு ஜே.எம். நல்லுசாமிப் பிள்ளைக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். | ✓ | | | | ✓ | ஜார்ஜ் யுக்லோ போப் 24.04.1820ல் நோவோ ஸ்கோட்டியாவில் உள்ள பிரின்ஸ் எட்வர்டு தீவில் நான்கு சகோதரிகளுடன், ஐந்து சகோதரர்களுடனும் பிறந்தவர். |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | (1820-1908) ஜி.யு.போப் அய்யர் பதிப்பு ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம். மறுபதிப்பு சென்னைப் பல்கலைக்கழகம் 1960, 1970, 1979. | | | | | | இங்கிலாந்துக்கு ஆறாவது வயதில் குடிபெயர்ந்து 1839ஆம் ஆண்டு தமிழகம் வந்தார். கப்பல் பயணம் செய்த 8 மாதங்களில் தமிழைக் கற்றுக் கொண்டார். தமிழின் மீது கொண்ட தணியாத தாகத்தால் உலகம் உய்ய 1886 செப்டம்பர் மாதம் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். பிப்ரவரி 1893ல் நாலடியாரை மொழிபெயர்த்தார். 24.04.1900 ஆண்டு தமது எண்பதாவது ஆண்டுப் பரிசாகத் திருவாசகத்தை முழுமையாக ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். |
| 34. | 1902/03 | சர் பொன்னம்பலம் இராமநாதன் - சித்தாந்த தீபிகை "கடவுள் தன்மையின் இரகசியம் " | | | ✓ | | | சில பதிகங்கள் மூலம் கடவுள் தன்மை விளக்கப்படுகிறது. |
| 35. | 1903 | சென்னை - இட்டா பார்த்தசாரதி நாயுடு. 264 பக்கங்கள் | ✓ | | | | ✓ | பத்மவிலாச அச்சுக்கூடம் சென்னையில் வெளியானது. மைலம் சுப்பிரமணிய சுவாமிகளால் பார்வையிடப்பட்டது. |
| 36. | 1906 | சோளங்கிபுரம் சிவ. அருணகிரி முதலியார் | ✓ | | | | | சென்னை வித்யா பாஸ்கர அச்சுக்கூடம். திருவாசகம் + திருக்கோவையார் செய்யுள் திரட்டு. விஷய சூசன நூல் 250 வேத பிரமாணங்கள் காட்டப்பட்டுள்ளன. |
| 37. | 1906 | சிவ அருணகிரி முதலியார் - இரங்கூன் சமரச ஞான சன்மார்க்க சபை | ✓ | ✓ | ✓ | | | விஷயசூசனம் - 60 என்ற தலைப்பில் சன்மார்க்க சபையினர் சில பகுதிகளுக்கு வேதாகம உபநிடதப் பிரமாணங்களுடன் தடைவிடை விளக்கமும் தந்திருக்கிறார்கள். |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 38. | 1907 | அம்பலவாண உபாத்தியாயர் | ✓ | | | | | சென்னை பலவிருத்த போதினி அச்சுக்கூடம் |
| 39. | 1907 | முருகேச முதலியார் உரைப்பதிப்பு | ✓ | ✓ | | | | வாசுதேவ முதலியார் உரைப்பதிப்பை ஒட்டி வந்தது. சென்னை பத்மநாப விலாச அச்சுக்கூடம் |
| 40. | 1907 | சர். பொன்னம்பலம் இராமநாதன் - பார்-அட்-லா. அரசியல், சட்டம், பொதுவாழ்வு, கல்வி, சமயம் அனைத்திலும் சிகரமாய் நின்றவர். "மேலை நாடுகளில் ஆன்மாவின் பண்பாடு" | | | | | ✓ | இலங்கை பொன்னம்பல வாணேசுவரர் கோயில் திருப்பணி செய்து குடமுழுக்குக் கண்டவர். |
| 41. | 1907 | மாசிலாமணி முதலியார் - திருவாசகம் கோளப்பஞ்சேரி செல்லப்ப முதலியார் - ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம் | ✓ | ✓ | | | | 1897ல் வெளிவந்த இராமசாமி முதலியார் பதிப்பை ஒட்டி வெளிவந்தது. |
| 42. | 1913 | மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த திருவாசகம் - யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரவர்கள், மாணாக்கரின் மாணாக்கருள் ஒருவராகிய அம்பலவாணப் பிள்ளை அவர்களால் பரிசோதிக்கப்பட்டது | ✓ | | | | | மதராஸ் என்.வீ. கோல்டன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பெற்றது |
| 43. | 1915 | நா.கதிரைவேற் பிள்ளை - திருவாசகம் - வித்தியாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை. பல மறுபதிப்புகள் வெளிவந்தன. | ✓ | | ✓ | | | 1860-1907. பரசமயக் கோளரி. |
| 44. | 1917 | எம்மன்ஸ் ஈஓயிட் - அமெரிக்கப் பாதிரியார் -"தமிழ் மக்களின் ஞானம்" ஆங்கில நூல் ஆசிரியர் | | | | | ✓ | சில திருவாசகப் பாடல்களின் ஆங்கில மொழிபெயர்ப்பு |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 45. | 1918 | மு.கோவிந்தசாமி அய்யர் - ஸ்ரீ மாணிக்கவாசக வெண்பா | | | | ✓ | | |
| 46. | 1919 | ஜே.என். பர்குஉறார் - இந்து சமயத்தின் கிரீடம் | | | | ✓ | ✓ | ஆங்கில நூல் |
| 47. | 1919 | சிட்னி கேவ் இந்து கிறித்துவ மீட்சி - ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம் பதிப்பித்தது | | | | | ✓ | மாணிக்கவாசகரைப் பற்றி 16 பக்கங்களில் செய்தி வெளியிடப்பட்டிருந்தது. |
| 48. | 1919 | ஜே.என். ஃபர்குஉறார் - இந்து சமயத்தின் கிரீடம் 1971 மறுபதிப்பு. திருவாசகச் சிறப்பு | | | | ✓ | ✓ | ஆங்கில நூல் |
| 49. | 1920 | ஆ.முத்துத்தம்பிப்பிள்ளை - திருவாசகம் - யாழ்ப்பாணம் நாவலர் அச்சுக்கூடம் | ✓ | | | | | |
| 50. | 1921 | சர் சார்லஸ் எலியட் - ”இந்து சமயமும், புத்த சமயமும்” மூன்று தொகுதிகள் | | | | | ✓ | இந்நூல் இறைவன்பாற் பெருக்கெடுத்தோடும் ஆன்மார்த்த வெள்ளம், இறைவனோடு நேரடித் தொடர்புடையது என்று கூறுகிறது. |
| 51. | 1921 | கிங்ஸ்பரி, ஃபிலிப்ஸ் - தமிழ்ச்சைவ முனிவோரின் அருட்பாடல்கள் | ✓ | | | ✓ | ✓ | திருவாசகப் பாடல்கள் தமிழ் மூலத்திலும், ஆங்கிலத்திலும் உள்ளன. கிங்ஸ்பரி, சி.வை. தாமோதரம்பிள்ளை மகன் ஆவார். |
| 52. | 1923 | ஜெர்மன் பாதிரியார் சோமரஸ் - திருவாசகத்தின் ஜெர்மன் மொழிபெயர்ப்பு | | | | | ✓ | 215 பக்கங்கள் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 53. | 1924 | மறைமலையடிகள் (15.07.1876-15.09.1950) திருவாசக உரை முதற் பாகம் - வ.திருவரங்கம்பிள்ளை, பாளையங்கோட்டை வெளியீடு | | ✓ | ✓ | | | முதல் நான்கு அகவல்கள் உரை |
| 54. | 1927 | சிவ அருணகிரி முதலியார் - இரண்டாம் பதிப்பு, சென்னை | ✓ | ✓ | ✓ | | | விஷய சூசனம் என்னும் பகுதி சிறப்பானது |
| 55. | 1927 | சோளங்கிபுரம் சிவ. அருணகிரி முதலியார் | ✓ | | | | | பன்னிரு திருமுறைத் திரட்டு என்ற பெயரில் விரிவான மீள்பதிப்பின் மூலம் 1906 ஆம் ஆண்டு வெளிவந்தது |
| 56. | 1928 | கா.சு.பிள்ளை - மணிவாசகப் பெருமான் வரலாறு -சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு. மறுபதிப்பு 1947, 1955, 1959, 1974, 1987 | | | | ✓ | | காந்திமதிநாதன் சுப்பிரமணியப்பிள்ளை 1888-1945 |
| 57. | 1929 | சுந்தரமாணிக்க யோகீசுவரர் - திருவாசகம் இரண்டு பதிப்புகள் 1974, 1979 | ✓ | ✓ | | | | அட்டாங்க யோகங்களை விளக்கி அன்பு நூலாகிய திருவாசகத்தை யோக அனுபவ நூலாக மாற்றிவிட்டார். |
| 58. | 1929 | சிட்னி கேவ் - கிறித்தவமும் கிழக்கில் உயிர்த்து விளங்கும் சில சமயங்களும் | ✓ | | | | ✓ | மாணிக்கவாசகரை வியந்து போற்றியுள்ளார். |
| 59. | 1929 | எம்.எஸ்.பூரணலிங்கம் பிள்ளை - மாணிக்கவாசக அடிகள் வாழ்வும், உபதேசங்களும் | | | | | ✓ | ஆங்கில நூல் |
| 60. | 1930 | மறைமலையடிகள்-மாணிக்க வாசகர் வரலாறும் காலமும். மறுபதிப்பு 1957, 1967. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | | | | ✓ | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 61. | 1931 | கா.சு.பிள்ளை (1888-1945) - திருவாசகம் மூலமும் உரையும் - சைவ சித்தாந்த சமாஜம். மறுபதிப்பு 1959 | ✓ | ✓ | | | | பொழிப்புரை. தெளிவான சொற்பொருளுடன் வெளியிடப்பட்டது. சிறந்த வழிகாட்டி. முற்றிலும் உள்ளது. |
| 62. | 1931 | நீ.கந்தசாமிப்பிள்ளை - திருப்பள்ளியெழுச்சி | | ✓ | ✓ | | | |
| 63. | 1933 | மாணிக்கவாசகர் வரலாறு | | | | ✓ | ✓ | வடமொழியில் கிரந்தத்தில் வெளியிடப்பட்டுள்ளது. |
| 64. | 1934 | வேதமுத்து - திருவம்மானையும், திருச்சாழலும் மொழிபெயர்க்கப் பட்டன - சென்னை கிறித்தவசங்கம் | | | | | ✓ | |
| 65. | 1935 | மறைமலையடிகள் - மாணிக்கவாசகர் மாட்சி | | | | ✓ | | |
| 66. | 1937 | சர் பொன்னம்பலம் அருணாசலம் - ”ஆய்வுகளும், மொழிபெயர்ப்பு களும்”- இலங்கை அரசு வெளியிட்டது. மறுபதிப்பு 1981 | | | | | ✓ | திருவாசகப் பாடல்களின் மொழிபெயர்ப்பு. பொன்னம்பலம் இராமநாதனின் சகோதரர். |
| 67. | 1938 | அ.சோமசுந்தரம் செட்டியார் - அரும்பொருள் விளக்கவுரை - சமாசம் | | ✓ | ✓ | | | |
| 68. | 1939 | என்.நாராயணன் - யாழ்ப்பாண இந்து கல்லூரி உதவி விரிவுரையாளர் | | | ✓ | | ✓ | முதல் நான்கு பதிகங்கள். ஆங்கில மொழிபெயர்ப்பு |
| 69. | 1941 | சைவ சித்தாந்த மகா சமாச வெளியீடு | ✓ | | | | | பலவகை ஆராய்ச்சிக் குறிப்புகளோடு வெளிவந்தது. மறுபதிப்பு 1968, 1978 |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 70. | 1946 | திருவாசகம் - திருச்சதகம் புகழ் முத்துசுவாமிப்பிள்ளை உரை | | ✓ | ✓ | | | |
| 71. | 1947 | பண்டிதமணி மு.கதிரேசச் செட்டியார் - திருச்சதகம் - கதிர்மணி விளக்கம். | ✓ | ✓ | ✓ | | | |
| 72. | 1948 | மறைமலையடிகள் - திருவாசக விரிவுரை - சங்கர் கம்பெனி | | ✓ | ✓ | | | மாணிக்கவாசகரின் காலத்தைப் பற்றியும் விரிவான ஆராய்ச்சி நூலை வெளியிட்டுள்ளார். |
| 73. | 1949 | ச.தண்டபாணி தேசிகர் குறிப்புரை - திருவாசக நூலாராய்ச்சி - தருமையாதீனம். ராஜாஜி மதிப்புரையுடன் கூடியது | ✓ | ✓ | ✓ | | | உ.வே.சா.நூலகம் வெளியிட்டது. |
| 74. | 1950 | நீ.கந்தசாமிப்பிள்ளை - திருப்பள்ளியெழுச்சி - திருவாவடுதுறை ஆதீன வெளியீடு | | | ✓ | | | |
| 75. | 1950 | பண்டிதமணி மு.கதிரேசச் செட்டியார் - நீத்தல் விண்ணப்பம் - கதிர்மணி விளக்கம் | ✓ | ✓ | ✓ | | | |
| 76. | 1950 | கீ.ராமலிங்கம் - "திருவெம்பாவை தெளிவுரையுடன்" | | ✓ | | | | |
| 77. | 1951 | தண்டபாணி தேசிகர் - திருவெம்பாவையும், திருப்பள்ளி எழுச்சியும் - தருமை ஆதீனம் | | ✓ | ✓ | | | |
| 78. | 1951 | சுந்தரமூர்த்திப் புலவர் - மாணிக்கவாசகர் அம்மானை | | | | ✓ | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 79. | 1953 | பண்டிதமணி மு.கதிரேசச் செட்டியார் - திருவெம்பாவை - கதிர்மணி விளக்கம் | ✓ | ✓ | ✓ | | | |
| 80. | 1954 | சீகாழித் தாண்டவராயர் உரை பதிப்பாசிரியர் - ரா.விசுவநாதையர் திருவாசக வியாக்கியானம். இரண்டு தொகுதிகள் | ✓ | ✓ | | | | 1834 வெளியிடப்பட்ட அனுபூதியுரை.டாக்டர் உ.வே.சா. நூலகம் 998 பக்கங்கள் |
| 81. | 1954 | க.சு.நவநீதகிருஷ்ண பாரதியார் உரை, பத்மா பதிப்பகம், இலங்கை | ✓ | ✓ | | | | அரசஞ்சண்முகனார் மாணாக்கர். இலங்கையில் வெளிவந்தது. |
| 82. | 1955 | கீ.ராமலிங்கம் -திருவெம்பாவை தெளிவுரையுடன் - தருமை ஆதீனம் | | ✓ | ✓ | | | |
| 83. | 1955 | "திருவெம்பாவையும் திருப்பள்ளி யெழுச்சியும்" தருமபுர ஆதீனம் | | ✓ | ✓ | | | |
| 84. | 1956 | தண்டபாணி தேசிகர் - மர்ரே நிறுவனம் வெளியீடு | ✓ | | | | ✓ | |
| 85. | 1956 | எஸ்.இராஜம் வெளியீடு - திருவாசக மூலம் | ✓ | | | | | நூலின் விலை ரூபாய் ஒன்று. |
| 86. | 1957 | மு.இ.வீரபாகுப்பிள்ளை உரை - ஒற்றுமை நிலையம், சென்னை - முதல் பதிப்பு | ✓ | ✓ | | | | மூலம் இடப்பக்கத்திலும், உரை வலப்பக்கத்திலும் பதிப்பிக்கப்பட்டுள்ளன. |
| 87. | 1958 | திருவாசக மணி கே.எம். பாலசுப்பிரமணியம் - ஆங்கில மொழிபெயர்ப்பு - பதிப்பு சென்னமல்லேசுவரர் தேவஸ்தானம், சென்னை | | | | | ✓ | |
| 88. | 1960 | திருவெம்பாவை பி.ஸ்ரீ. - அமுத நிலையம் | | ✓ | ✓ | | | இரண்டாம் பதிப்பு 1960 |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 89. | 1961 | ப.இராமநாதம்பிள்ளை - சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக வெளியீடு (1890-1972) | ✓ | | ✓ | | | பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டாக வெளிவந்தது. |
| 90. | 1961 | தண்டபாணி தேசிகர் - திருவெம்பாவை, திருப்பள்ளிஎழுச்சி, திருப்பாவை - திருவாவடுதுறை ஆதீனம் | | | ✓ | | | |
| 91. | 1961 | தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் - சயாமில் திருப்பாவை, திருவெம்பாவை. பாரி நிலையம், சென்னை | | | ✓ | ✓ | | |
| 92. | 1963 | பண்டிதர் இராமநாதம்பிள்ளை - திருவாசக உரை - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | ✓ | ✓ | | | | |
| 93. | 1963 | புலியூர் கேசிகன் தெளிவுரை - அப்பர் புத்தக நிலையம் | ✓ | ✓ | | | | மூலம் சந்தி பிரிக்கப்பட்டு தெளிவுரையுடன் வெளியிடப்பட்டது. |
| 94. | 1963 | கா.சு.பிள்ளை உரை - ப.இரத்தின நாயகர் அன் சன்ஸ் வெளியீடு. மறுபதிப்பு 1979 | ✓ | ✓ | | | | |
| 95. | 1963 | எம்.எஸ்.இரத்தினாநவரத்னம், ஜாப்னா, இலங்கை - திருவாசகம் : ஓர் இந்து பக்தி சாசனம் - அன்பால் இறைவனை அடையும் இந்துக்கள் - பற்றிய பதிப்பு பாரதீய வித்யாபவன், மும்பை. 256 பக்கம் | | | | ✓ | ✓ | திருவாசக விளக்கம் - ஆங்கில நூல்.யாழ்ப்பாணத்தில் பிறந்து, இலண்டனில் பயின்றவர். சிறந்த ஆங்கிலப்புலமை. |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 96. | 1963 | ரத்ன நவரத்னம் மொழிபெயர்த்தது | ✓ | | | | ✓ | புதுதில்லி பாரதீய வித்யாபவன் வெளியீடு. ஆங்கில மொழிபெயர்ப்பு |
| 97. | 1964 | நீ. கந்தசாமிப்பிள்ளை – திருவாசகம் | ✓ | | | | | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் |
| 98. | 1964 | ச.தண்டபாணி தேசிகர் உரை - திருவாவடுதுறை ஆதீனம். இரண்டு பகுதிகள் 1449 பக்கங்கள். | ✓ | ✓ | | | | குருவருள் விளக்கம் என்பது உரையின் பெயராகும். சிறந்த உரை. |
| 99. | 1964 | நீ.கந்தசாமிப்பிள்ளை குறிப்புரை - அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியீடு. மறுபதிப்பு 1984 | ✓ | ✓ | ✓ | | | சிறந்த உரை நூல். சுவடியில் உள்ளபடி மூலப்பதிப்பும், அதன் எதிரே சீர் பிரித்த பாடமும் தரப்பட்டுள்ளன. |
| 100. | 1964 | திருவெம்பாவை - ஆர்.வி. உரை | | ✓ | ✓ | | | |
| 101. | 1965 | ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகம். நீலகண்டீய உரைவிளக்கம் | ✓ | ✓ | | | | தவத்திரு நித்தியானந்த சுவாமிகள், வேட்டைக்காரன்புதூர் |
| 102. | 1965 | மு.அருணாசலம் - திருவாசகம் சில ஆராய்ச்சிக்குறிப்புகள் - சைவ சித்தாந்த மகாசமாசம். 1909-92 | | | ✓ | | | சமாசத்தின் அறுபது ஆண்டு நிறைவு விழா மலர். 6000 பக்கங்களில் பன்னூறு ஆண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றை வழங்கிய தனிநபர், சைவப் பல்கலைக்கழகம். |
| 103. | 1966 | சு. அருளம்பலவனார் – திருவாசக ஆராய்ச்சியுரை முதல்பாகம் | ✓ | ✓ | ✓ | | | யாழ்ப்பாணம் – இரண்டாம் பாகம் – *1973* |
| 104. | 1966 | வ.சு.செங்கல்வராயப்பிள்ளை - திருவாசக ஒளிநெறி - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை | | | | ✓ | | 1883-1971. பன்னிரு திருமுறைகளுக்கும் ஒளிநெறிக்கட்டுரை எழுதிய சான்றோர். |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 105. | 1966 | சி.அருணைவடிவேல் முதலியார் குறிப்புரை - திருவாசகம், திருக்கோவையார். எட்டாம் திருமுறை - பொழிப்புரை, விளக்கக் குறிப்புரை களுடன் - தருமையாதீனம். இரண்டாம் பதிப்பு 1997 | ✓ | ✓ | ✓ | | | வெளியீடு எண். 572. குருஞானசம்பந்த தேசிகர். குருபூசை விழா மலர் : 09.06.1966. 1106 பக்கம் |
| 106. | 1967 | இ.மு.சுப்பிரமணிய பிள்ளை - மெய்கண்ட உரை - திருநெல்வேலி, சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தார். இரு பகுதிகள் | ✓ | ✓ | | | | |
| 107. | 1968 | சுவாமி சித்பவானந்தரின் உரை திருவாசகம் ஒப்புள்ள உபநிடத மந்திரங்கள் இணைக்கப்பெற்றுள்ளன. திருப்பராய்த்துறை ஸ்ரீராமகிருஷ்ண தபோவன வெளியீடு. 993 பக்கம் | ✓ | ✓ | | | | தொடர்ந்து 2013 ஆம் ஆண்டு 17ஆம் பதிப்பு வரை 107000 பிரதிகள் வெளியிட்டுள்ளார்கள். இலட்சம் பிரதிகளைத் தாண்டிய இவர்கள் பணியை இறைவர் ஏற்றுக்கொண்டு நல்லருள் புரிய வேண்டும். அவர்கள் பணி பல காலம் தொடர வேண்டும். சைவ உலகம் போற்றிப் புகழ வேண்டும். |
| 108. | 1968 | மு.வை.அரவிந்தன் - உரையாசிரியர்கள். மணிவாசகர் நூலகம், சிதம்பரம் | | | | ✓ | | |
| 109. | 1969 | சிவக்கவிமணி சி.கே.சுப்பிரமணிய முதலியார் - ஸ்ரீமாணிக்கவாசகர் அல்லது நீத்தார் பெருமை திருவாவடுதுறை ஆதீனம் | | | | ✓ | | சைவத்திரு சி.சு.கண்ணாயிரம் அவர்கள் சிறப்புரையுடன் வெளிவந்தது. |
| 110. | 1969 | ப.இராமநாதம்பிள்ளை உரை - சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் | ✓ | ✓ | | | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 111. | 1970 | ஜி.மைக்கேல் - பாதிரியார் - திருவாசக உண்மைகளை கிறித்தவரும் ஏற்கின்றனர் - துறைசை ஆதீன வெளியீடு | | | | ✓ | | |
| 112. | 1970 | கோ.வன்மீகநாதன்-மாணிக்கவாசகர்-ஆங்கில நூல் அவரே வெளியீட்டார். | | | | | ✓ | |
| 113. | 1971 | கோ.வன்மீகநாதன் - திருவாசகம் - டில்லி தமிழ்ச் சங்கம் | ✓ | | | | ✓ | |
| 114. | 1971 | ஜி. வரதராஜன் உரை - பழனியப்பா நிறுவன வெளியீடு | ✓ | ✓ | | | | |
| 115. | 1971 | இரத்தினா நவரத்தினம் - திருவாசகத்திற்குப் புதிய அணுகுமுறை - அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு | | | | ✓ | ✓ | |
| 116. | 1971 | மரியசூசை தவமணி - சைவ சித்தாந்தம் காட்டும் கடவுள் பக்தி - ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம், லண்டன் | | | | ✓ | ✓ | ஆங்கில நூல் |
| 117. | 1973 | அருளம்பலவாணர் உரை - இரண்டாம் பாகம். ஸ்ரீ லங்கா புத்தகசாலை, யாழ்ப்பாணம். முதல் பாகம் 1966 | | ✓ | | | | |
| 118. | 1974 | இராய.சொக்கலிங்கம் எழுதிய குறிப்புரை - திருவாசகத்தேன் | | ✓ | ✓ | | | 1898-1974. திருவாசகம் முழுதும் மனனம். |
| 119. | 1974 | ந.ரா.முருகவேள் உரை - நீத்தல் விண்ணப்பம் | | ✓ | ✓ | | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 120. | 1974 | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், கையடக்கப் பதிப்பு | ✓ | | | | | |
| 121. | 1975 | திருப்பனந்தாள் காசிமட வெளியீடு | ✓ | | | | | குமரகுருபர சுவாமிகள் 287ஆம் ஆண்டு குருபூஜை மலர் |
| 122. | 1975 | எஸ்.என்.தாஸ்குப்தா - இந்தியத் தத்துவ சாத்திரம் - திருவாசகம். விளக்கம் தொகுதி 5ல் உள்ளது | | | | ✓ | ✓ | ஆங்கில நூல் |
| 123. | 1976 | குன்றக்குடி அடிகளார் - திருவெம்பாவை,திருப்பள்ளியெழுச்சி விளக்கம். அருள்நெறிக்கூட்டம், திருச்சி | | ✓ | ✓ | | | |
| 124. | 1977 | ஆல்பர்ட் ஃபரென்ஸ், ப.நாகராசன் - திருவாசகமும் மாணிக்கவாசகரும் - தென்னிந்திய அச்சகம் | | | | | ✓ | ஜெர்மன் மொழியில் காரைக்குடியில் அச்சிடப்பட்டுள்ளது. 292 பக்கங்கள் |
| 125. | 1977 | கே.சுவாமிநாதன்-சிவபுராணம்-சைவ சித்தாந்த ஆங்கில சஞ்சிகை | | | | | ✓ | ஆங்கில நூல் |
| 126. | 1978 | சரவணானந்தா - திருப்பள்ளி யெழுச்சி (விளக்கம்), இராமலிங்கர் நற்பணி மன்றம் | | ✓ | ✓ | | | |
| 127. | 1978 | வரதராஜன் ஜி.திருவாசகம் விரிவுரை - பழனியப்பா பிரதர்ஸ் | ✓ | ✓ | | | | |
| 128. | 1979 | தந்தை ஜி மைக்கேல் - திருவாசக உண்மைகளைக் கிறித்தவரும் ஏற்கின்றனர் - துறைசை ஆதீனம். | | | | ✓ | | |
| 129. | 1979 | நார்மன் கட்லர் - எங்கள் விரதத்தைக் கருதுக - முத்து பதிப்பகம், மதுரை. திருப்பாவை, திருவெம்பாவை - பாடல்கள் மூலமும் மொழிபெயர்ப்பும் | | | ✓ | ✓ | ✓ | ஆங்கில நூல் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 130. | 1976/1979 | கோ.வன்மீகநாதன் - மாணிக்கவாசகர் - சாகித்திய அக்காதெமி. இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை | | | | ✓ | ✓ | ஆங்கிலத்தில் வெளிவந்துள்ளது. |
| 131. | 1980 | கோ.வன்மீகநாதன் . திருவாசகவழி இறைவனை அடைதல் - ஆங்கில நூல் - திருப்பனந்தாள் காசி மட வெளியீடு | | | | ✓ | ✓ | |
| 132. | 1981 | அடிகளாசிரியர் - கோயிற்றிருப்பதிகம் - சொற்பொருள் உரை | | ✓ | ✓ | | | |
| 133. | 1982 | கிளென் ஈயோகும் - ஆடும் சிவனுக்கு அருட்பாடல்கள் - டெல்லியில் வெளியிடப்பட்டது. 250 பக்கம் | | | | ✓ | ✓ | திருவாசக ஆய்வு ஆங்கில நூல். ஆசிரியர் எந்நேரமும் திருவாசகச் சிந்தனையில் ஈடுபட்டிருந்தவர். |
| 134. | 1983 | இராதா தியாகராசன் - திருவாசகத்தில் இறைமை இணைவுப் பண்பு; ஓர் ஆய்வு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம் | | | | ✓ | ✓ | ஆங்கில நூல் |
| 135. | 1983 | கோ.வன்மீகநாதன் - மாணிக்கவாசகர் தமிழ் நூல் - சாகித்திய அக்காதெமி வெளியீடு. மறுபதிப்பு 1989 | | | | ✓ | | |
| 136. | 1984 | ச.தண்டபாணி தேசிகர் - திருவாசகம் - ப.ரத்தினநாயகர் அன்ட் சன்ஸ். 1903-1990 | ✓ | ✓ | | | | |
| 137. | 1985 | கமலா - சிவபுராண மூலமும் உரையும் - பைலட் பப்ளிகேஷன், சென்னை, இரண்டாம் பதிப்பு | ✓ | ✓ | ✓ | | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 138. | 1985 | கோ.வன்மீகநாதன் பிள்ளை - அருஞ்சொற்பொருள் விளக்கம் சொல்லகராதியுடன் | ✓ | ✓ | | | | காசிமட வெளியீடு |
| 139. | 1985 | திருவாவடுதுறை ஆதீன வெளியீடு - மூலம் | ✓ | | | | | ஆடல்வல்லான் அபிடேக நாளில் 05.01.85 அன்று வெளியிடப்பட்டது. |
| 140. | 1985 | ச.தண்டபாணி தேசிகர் - திருவாசகம் - எட்டாம் திருமுறை திருவாவடுதுறை ஆதீனம் | ✓ | ✓ | | | | மறுபதிப்பு |
| 141. | 1986 | அடிகளாசிரியர் - சிவபுராணச் சிற்றுரை - மறுபதிப்பு 1999, 2007 | | ✓ | ✓ | | | |
| 142. | 1986 | ஆர்.வேங்கடராமன் - திருவெம்பாவை - வானதி பதிப்பகம், எட்டாம் பதிப்பு | | ✓ | ✓ | | | |
| 143. | 1986 | மணிமேகலைப் பிரசுர வெளியீடு மூலம் | ✓ | | | | | |
| 144. | 1986 | ச.தண்டபாணி தேசிகர் - திருவாசகம் - எட்டாம் திருமுறை, மணிமேகலைப் பிரசுரம் | ✓ | ✓ | | | | |
| 145. | 1987 | ஏ.எஸ்.வழித்துணை இராமன் தெளிவுரை | | ✓ | ✓ | | | |
| 146. | 1987 | தண்டபாணி தேசிகர் - திருவாசகம் - எட்டாம் திருமுறை - கழக வெளியீடு | ✓ | ✓ | | | | |
| 147. | 1987 | நார்மன் கட்லர் - அனுபூதிப் பாடல்கள் - அமெரிக்காவில் வெளியாயிற்று. | | | ✓ | ✓ | ✓ | ஆங்கில நூல் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 148. | 1987 | கிளென் ஈயோகும் -"ஞானம் காட்சிப் பொருளாகிறது" என்ற திருவாசகக் கட்டுரை - ஸ்டுடியோ மிஷனலியா என்ற பத்திரிகையில் வெளியானது | | | ✓ | ✓ | ✓ | ஆங்கில நூல்/ ரோமாபுரியிலிருந்து வெளிவருவது. மிகவும் மதிக்கப்படும் பத்திரிக்கை. உண்மைச் சான்றோரின் கட்டுரை மட்டும் வெளிவரும். |
| 149. | 1988 | தி.பாலகிருஷ்ணன் - மாணிக்கவாசகர் வரலாறு - மணிவாசகர் பதிப்பகம் | | | | ✓ | | |
| 150. | 1990 | சி.ஏகாம்பரம் - சிவபுராணம் - சைவ சித்தாந்தப் பெருமன்றம் | | | | | ✓ | சிவபுராண மொழிபெயர்ப்பு |
| 151. | 1991 | முனைவர் சி. சீநிவாசன். இரண்டு பாகங்கள் ஆங்கில மொழிபெயர்ப்பு | ✓ | | | | ✓ | பதிப்பாளர் திருமதி. மோகனாம்பாள் சீனிவாசன் |
| 152. | 1991 | திருவாசகன் - திருவாசகம், அருள், சுடர் பதிப்பகம், வளசரவாக்கம், சென்னை | ✓ | ✓ | | | | |
| 153. | 1992 | பேராசிரியர் அ.சிவலிங்கனார் - எட்டாந்திருமுறை - உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் | | | | ✓ | | |
| 154. | 1992 | திருவாசகம் - மூலமும் பல ஆராய்ச்சி அகராதிகளும் - அகத்தியர் அருட்பணி மன்றம், அம்பாசமுத்திரம் | ✓ | ✓ | ✓ | | | சிவபெருமான் பெயரகராதி, உவமை அகராதி, சொல்லகராதி, சிறப்புப்பெயரகராதி, அரும் பொருளகராதி, தேவார ஒப்புமை அகராதி, தலக்குறிப்பு அட்டவணை, யாப்பு வகை அட்டவணை, சாத்திரமேற்கோள் அகராதி |
| 155. | 1992 | "மணிவாசகர் - அமுது அடி அடைந்த அன்பர்" | | | ✓ | | | அ.மு. சரவண முதலியார், பேராசிரியர் அ.சா. ஞானசம்பந்தனார் |
| 156. | 1993 | சுந்தரம் - திருவாசகத்தில் ஒரு பகுதி | | | ✓ | | ✓ | இந்தி நூல் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 157. | 1993 | மோகனவேலு - ஜெர்மானியத் தமிழியல் | | | | ✓ | ✓ | ஆங்கில நூல். திருவாசகம் தொடர்புடைய படங்கள் உள்ளன. |
| 158. | 1993 | டாக்டர் ரவீந்தரகுமார் சேட் - தமிழ்ச் சைவப்பத்தி இலக்கியம். பாஷா சங்கம் | | | | ✓ | ✓ | இந்தி நூல் |
| 159. | 1993 | எம்.நாராயணவேலுப்பிள்ளை - உரை திருவாசகம், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை | ✓ | ✓ | | | | |
| 160. | 1995 | முனைவர் இரா.சுந்தரமூர்த்தி - தமிழ் வளர்க்கும் திருவாசகம் - ஆய்வு நூல் நியு செஞ்சுரிப் புக் ஹவுஸ் | | | | ✓ | | மூலப்பதிப்புகள், உரை வரலாறுகள், இயல்புகள், உரை வேற்றுமைகள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. |
| 161. | 1995 | கா. இராமநாதன் - திருவாசகத் தேன் | | | | ✓ | | முதல் நான்கு அகவல்கள் மட்டும் |
| 162. | 1995 | குன்றக்குடி அடிகளார் - திருவாசகத்தேன் | | | | ✓ | | |
| 163. | 1996 | சிவப்பிரியா - மாணிக்கவாசகர் உண்மை வரலாறும் காலமும் | | | | ✓ | | திருத்தொண்டு வெளியீடு. புதுடெல்லி |
| 164. | 1997 | நாகேஸ்வர் சுந்தரம் - இந்தி மொழிபெயர்ப்பு | | | | | ✓ | சாந்தி நிகேதன் - மேற்கு வங்காளம் |
| 165. | 1997 | கா.சு.பிள்ளை - திருவாசகம் மூலமும் உரையும் - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | ✓ | ✓ | | | | |
| 166. | 1998 | திருவாசகம் மூலம் - வெளியீடு கங்கை புத்தக நிலையம். மறுபதிப்பு 2001, 2002, 2005 | ✓ | | | | | 2006, 2007, 2009, 2010, 2012 |
| 167. | 1999 | சுவாமிஜி இறையன்பன் | ✓ | | | | ✓ | புதுடெல்லி அபிநவ் பப்ளிகேஷன்ஸ் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 168. | 1999 | டாக்டர் அ.அறிவொளி - சிவபுராணம் - அனுபவ உரை - வர்த்தமானன் பதிப்பகம் | | | | ✓ | | |
| 169. | 1999 | அ.ச.ஞா. - திருவாசகம் - சில சிந்தனைகள். 5 தொகுதிகள் | | | | ✓ | | |
| 170. | 2000 | அடிகளாசிரியர் - திருவாசக அநுபூதி - திருவருள் நிலைய வெளியீட்டகம், குகையூர். | | | | ✓ | | 102 ஆண்டுகள் சைவமும், திருமுறைகளும் தழைக்க வாழ்ந்து சிவத்தில் கலந்தார் |
| 171. | 2000 | உரையாசிரியர் சி.சு.கண்ணாயிரம். - திருவாசகம் விளக்கவுரை (சிவக்குடில் விளக்கம்) - ஸ்ரீசித்தர் ஞான பாடசாலை வெளியீடு | | | ✓ | | | |
| 172. | 2000 | டாக்டர் சிவப்பிரியா - பொய்யடிமை யில்லாத புலவர் மாணிக்கவாசகர் - திருத்தொண்டு வெளியீடு, புது தில்லி | | | | ✓ | | |
| 173. | 2000 | புலவர் கருப்பூர் திரு.மு. அண்ணாமலை - திருவாசகம் தெளிவுரை | ✓ | ✓ | | | | |
| 174. | 2001 | திருவாசகம் சில சிந்தனைகள் - 5 தொகுதி நூல்கள் | ✓ | ✓ | | | | பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 175. | 2001 | சேக்கிழார் அடிப்பொடி டி.என். இராமச்சந்திரன் - தமிழ் - ஆங்கில மொழிப்பெயர்ப்பு - அனைத்துலக தமிழ் ஆராய்ச்சி நிறுவனம். ஆங்கிலத்தில் வெளிவந்துள்ள சைவ நூல்கள் அனைத்தையும் தொகுத்து ஒரு நூலை வெளியிட்டுள்ளார். | ✓ | | | ✓ | ✓ | இவர் சைவத்தை உலகம் முழுவதும் நிலைநாட்டப் பெருந்தொண்டாற்றி வரும் சிறந்த சிவனடியார். நடமாடும் சைவப் பல்கலைக்கழகம். 25000க்கும் மேற்பட்ட நூல்கள் கொண்ட மிகப்பெரிய நூலக அதிபர். இந்தப் பதிப்புப் பட்டியலைத் தயாரிக்க இவருடைய நூல்கள், ஆய்வுக்கட்டுரைகள் பெரிதும் உதவின. "நெய்த்தானம் எனீரே, நெய்த்தானம் எனீரே" என்று சம்பந்தர் குறிப்பிடும் திருநெய்த்தானத்தைச் சார்ந்த இவரோடு நெய்த்தானத் திறைவனுக்குத் திருப்பணி செய்து, குடமுழுக்கு நடத்தும் வாய்ப்பைத் தாளாளர் பெற்றார். |
| 176. | 2001 | திருவாசகம்-ஆங்கில மொழி பெயர்ப்பு-சூரியனார் கோயில் ஆதீனம் | ✓ | | | | ✓ | |
| 177. | 2002 | ச.தண்டபாணி தேசிகர் - திருவாசகம் குருவருள் விளக்கம் என்னும் உரையுடன். இரண்டு பெரிய தொகுதிகள். வெளியீடு - விக்கிரம சிங்கபுரம் சிவஞானசுவாமிகள் பேரவை | ✓ | ✓ | | | | இரண்டாம் பதிப்பு – மிகச் சிறந்த உரை |
| 178. | 2002 | டாக்டர் சாது. சு.சீனிவாசன் - திருவாசகம் மூலமும் உரையும் - ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ், சென்னை | ✓ | ✓ | | | | |
| 179. | 2003 | அப்பரடிமை ஆறுமுகம்-திருவாசகம், திருவம்மானை - பேருரை - மெய்யப்பன் பதிப்பு | | | ✓ | | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 180. | 2003 | சைவ நூல் அறக்கட்டளை.சென்னை | ✓ | | | | | |
| 181. | 2003, 2014 | திருவாசக விரிவுரை - நான்கு அகவல்கள். உரையாசிரியர் - மறைமலையடிகள் | | | ✓ | | | பூம்புகார் பதிப்பகம். முதல் நான்கு அகவல்களுக்கு மட்டும் உரை |
| 182. | 2004 | தோட்டயில் என். கிருஷ்ண நாயர். மலையாள மொழிபெயர்ப்பு | ✓ | | | | ✓ | நூலின் பெயர் சிவ பஞ்சாமிர்தம். ஹலாஸ்யம் பப்ளிகேசன்ஸ், திருவனந்தபுரம் |
| 183. | 2004 | அரங்க. இராமலிங்கம் - திருவாசக ஆய்வு மாலை - கங்காராணி பதிப்பகம், சென்னை | | | | ✓ | | |
| 184. | 2004 | தமிழண்ணல் - புதிய நோக்கில் திருவாசகம் - மணிவாசகர் பதிப்பகம் | | | | ✓ | | |
| 185. | 2004 | மயிலம் மகாவித்துவான் வே.சிவசுப்பிரமணியன் - திருவாசக மணியொளி - உவமைகள் விளக்கவுரை - வெளியீடு காஞ்சி சிவனடியார் திருக்கூட்டம்<br><br>'வைகறை வரிகள்' - திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சிக்கு நயவுரை 2012 - ஆம் ஆண்டு இயற்றி உள்ளார். | | | ✓ | | | இறையருளால் நமது மையத்தில் இரண்டு மாதங்களுக்கு ஒருமுறை எனக் கடந்த 15 ஆண்டுகளாக நடக்கும் திருவிளையாட்டில் எப்போதும் தொடக்க ஆட்டக்காரர் இவரே. 84 அகவையைத் தாண்டிய பின்னரும் சைவத்திலும், தமிழிலும் எந்தத் தலைப்பைக் கொடுத்தாலும் 4 மணி நேரம் பேசும் ஆற்றல் பெற்றவர். ஏராளமான நூல்களுக்கு ஆசிரியர். நமது மையத்தை வழிநடத்துபவர். |
| 186. | 2004 | வை.ஆறுமுகம், தலைவர் சமூக சமயச்சங்கம், திருநெல்வேலி. 1200 பக்கம் - 2 தொகுதி | ✓ | ✓ | | | ✓ | சிறந்த சிவனடியார். 94 வயதைத் தாண்டிய பின்னும் உயிருக்கு வயதில்லை என்று தேவாரத்துக்கு (இரண்டாம் திருமுறை 122 பதிகம் - 1331 பாடல்கள்) ஆங்கில மொழி பெயர்ப்பைத் தந்தார். திருவாசக ஆங்கில மொழிபெயர்ப்பு விரிவான, தெளிவான நூலாகும். |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 187. | 2005 | திருவாசகம் மூலம் மட்டும் - 2010 மறுபதிப்பு | ✓ | | | | | குமரன் பதிப்பகம், சென்னை |
| 188. | 2005 | கி.மஞ்சுளா - திருவாசகத்தில் புராணக்கதைகள். | | | | ✓ | | ஸ்ரீவித்யா பதிப்பகம், சென்னை |
| 189. | 2006 | சிவ.ச.த.ஆறுமுகம் - நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனே | | | | ✓ | | |
| 190. | 2006 | முனைவர் சி.சுப்பிரமணியம் - திருவாசகம் ஓர் அறிமுகம் | | | | ✓ | | |
| 191. | 2006 | திருவாசகம் தெளிவுரை. உரையாசிரியர் புலவர் வ. சிவசங்கரன் | ✓ | ✓ | | | | மணிவாசகர் பதிப்பகம், சென்னை. மறுபதிப்பு 2014 |
| 192. | 2007 | திருவாதவூரர் புராணம் (மூலமும் உரையும்) உரையாசிரியர் பொன் சுப்பிரமணியப் பிள்ளை | | | | | | சிவஞானசுவாமிகள் பேரவை, விக்கிரமசிங்கபுரம். மாணிக்கவாசகர் வரலாற்று விளக்க நூல். மூல நூல் ஆசிரியர் - கடவுள் மாமுனிவர் |
| 193. | 2007 | அருட்செல்வர் டாக்டர் ந.மகாலிங்கம் - மலிவு விலையில் பன்னிரு திருமுறைகள் - வர்த்தமானன் பதிப்பகம், 24 தொகுதிகளாக வெளியீடு | ✓ | ✓ | | | | காந்தியடிகளின் சுயசரிதம் முதல் திருமுறைகள் வரை ஏராளமான நூல்களைத் தம் சொந்த செலவில் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். நூல்களுக்கென்று 20, 21ஆம் நூற்றாண்டில் இவரைப்போல் யாரும் செலவு செய்ததில்லை. எவ்வளவு என்று இன்னம்பர் ஈசனுக்குத்தான் தெரியும். |
| 194. | 2007 | கே.ஆர்.சுந்தரம் - சிவபுராண விளக்கவுரை - திருவாசகத் தெள்ளமுது பதிப்பகம் | ✓ | ✓ | ✓ | | | |
| 195. | 2007 | கி.மஞ்சுளா - திருவாசகத்தில் மகளிர் ஆடல் -(ஸ்ரீவித்யா பதிப்பகம், சென்னை) | | | | ✓ | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 196. | 2007 | அடிகளாசிரியர் - சிவபுராணச் சிற்றுரை - திருவருள் நிலைய வெளியீட்டகம், குகையூர். | ✓ | ✓ | ✓ | | | |
| 197. | 2008 | திருவாசகம், கா. பீர்காதறொலி ராவுத்தர் மறுபதிப்பு. முதற்பதிப்பு 1868-140 ஆண்டுகளுக்குப் பின் வரும் மீள்பதிப்பு | ✓ | | | | | அமரர் ரோஜாமுத்தையா நினைவு வெளியீடு-வெளியீட்டாளர்கள்-தெய்வச் சேக்கிழார் சைவ சித்தாந்த பாடசாலை. |
| 198. | 2008 | சொ.சொ.மீ.சுந்தரம்-திருவாசகம் மூலமும் எளிய உரையும் | ✓ | ✓ | | | | வெளியீடு - சிங்கப்பூர் திருமுறை மாநாட்டுக் குழு |
| 199. | 2008 | ஜீ.ச.முரளி. சதுரா பதிப்பகம் | ✓ | ✓ | | | | |
| 200. | 2008 | ஜீ.ச.முரளி - திருவாசகம், திருக்கோவையார் மூலமும், உரையும் - சதுரா பதிப்பகம் | ✓ | ✓ | | | | |
| 201. | 2008 | சைவ நூல் அறக்கட்டளை, சென்னை | ✓ | | | | | |
| 202. | 2008 | கே.ஆர்.சுந்தரம் - ஆசிரியர் திருவாசகத் தெள்ளமுது மாத இதழ். | ✓ | ✓ | | | | மூலமும் விளக்க உரையும் - 395 பக்கங்கள். 2012 மறுபதிப்பு |
| 203. | 2009 | திருவாசகம். வெளியீடு - தஞ்சை பெரிய கோயில் வார வழிபாட்டு மன்றம் | ✓ | | | | | |
| 204. | 2009 | புலவர் ஜீ.சிவஞானம் - விஜயா பதிப்பகம், கோயம்புத்தூர் | ✓ | ✓ | | | | |
| 205. | 2010 | கே.ஆர்.சுந்தரம் - ஆசிரியர் திருவாசகத் தெள்ளமுது மாத இதழ். | ✓ | ✓ | | | | மூலமும் விளக்க உரையும் - 400 பக்கங்கள். கையடக்கப் பதிப்பு |
| 206. | 2010 | திருவாசகம் – திருச்சதகம், பண்டிதமணி மு. கதிரேச செட்டியார் | | | ✓ | | | பூம்புகார் பதிப்பகம். சதகம் நுதலிய பொருள் மட்டும் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 207. | 2011 | ஸ்ரீ மாணிக்கவாசகரின் திருவாசகம் – திருக்கோவையார் (எட்டாம் திருமுறை) பதிப்பாசிரியர் சிவ. திருச்சிற்றம்பலம் | ✓ | | | | | தமிழகச் சைவநெறிக்கழக வெளியீட்டு எண் 21. ஒன்பதாவது சிவபூசை மாநாட்டு வெளியீடு |
| 208. | 2011 | பேராசிரியர் இராம.இருசுப்பிள்ளை - திருவாசகச் சொல்லகராதி | ✓ | ✓ | | | | (மூலத்துடன்) - 414 பக்கங்கள், தாயக வெளியீடு |
| 209. | 2011 | திருவாசகம் அருஞ்சொற்பொருள் விளக்கம் - சொல்லகராதி திருப்பனந்தாள் காசித்திருமட வெளியீடு 15ஆம் பதிப்பு - 1000 படிகள் - 258 பக்கங்கள் | ✓ | ✓ | | | | 15 பதிப்புகளிலும் சேர்ந்து அறுபதாயிரம் படிகள் வெளியிட்டுள்ளார்கள். |
| 210. | 2011 | சரவண பவானந்த தேசிகர். தமிழகச் சைவ நெறிக்கழகம், திருச்சி–8 | ✓ | | | | | |
| 211. | 2010, 2011, 2012 | திருவாசக உரை கா.சு. பிள்ளை *(5.11.1888 – 30.4.1945)* | | ✓ | ✓ | | | பெருமாள் புத்தகாலயம், சென்னை |
| 212. | 2012 | அ.ச.ஞானசம்பந்தம் - திருவாசகம் சில சிந்தனைகள். இரண்டு தொகுதிகள் 1834 பக்கம் | | | | ✓ | | |
| 213. | 2013 | திருவாசகத்தில் முக்தி டாக்டர் தி.நா. பிராணதார்த்திஹரன் | | | | ✓ | | வெளியீடு ந. சிவகாமசுந்தரி, மதுரை |
| 214. | 2006. I<br>2014. II | திருவாசகம் மூலமும் உரையும் உரையாசிரியர் வ.த. இராமசுப்பிரமணியம் | ✓ | ✓ | | | | பதிப்பகம் – திருமகள் நிலையம் |
| 215. | 2014 | மாணிக்கவாசகர் திருவாசகம் – எட்டாம் திருமுறை (மூலமும் உரையும்) | ✓ | ✓ | | | | தருமை ஆதீனப் பதிப்பு. விளக்கக் குறிப்புரை– முனைவர் சி. அருணை வடிவேல் முதலியார். பொழிப்புரை – முனைவர் சிவச்சந்திரன் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 216. | 2014 | திருவாசகம் தெளிவுரை கருப்பூர் அண்ணாமலை | ✓ | ✓ | | | | குமரன் பதிப்பகம், சென்னை |
| 217. | 2014 | திருவாசகம் மூலமும் உரையும், கையடக்கப் பிரதி | ✓ | ✓ | | | | கே.ஆர். சுந்தரம், திருவாசகத் தெள்ளமுது, மதுரை |
| 218. | 2014 | திருவாசகம் மூலமும் உரையும், பதிப்பாசிரியர் எஸ். கௌமாரீஸ்வரி | ✓ | ✓ | | | | கௌரா புத்தக நிலையம், சென்னை |
| 219. | 2014 | திருவாசகம் மூலம் மட்டும் | ✓ | | | | | மணிவாசகர் பதிப்பகம், சென்னை. பதிப்பாசிரியர் ச.மெ. மீனாட்சி சுந்தரம் |
| 220. | 2014 | திருவாசகம், திருக்கோவையார், முனைவர் சிவப்பிரியா | ✓ | | | | | தென்னவர் திருநெறிப் பதிப்பகம், புதுதில்லி |
| 221. | 2014 | திருவாசகம் மூலமும் உரையும் | ✓ | ✓ | ✓ | | | திருச்சதகம் உரை. ஆசிரியர் தம்பிரான் தோழர் கபிலனார் |
| 222. | 2016 | மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம் எட்டாந் திருமுறை– I | ✓ | ✓ | | | | முழுநூல். பன்னிரு திருமுறை ஆய்வு மையம், கற்பகம் பல்கலைக்கழகம், கோவை |

நமக்குத் தெரிந்த பதிப்புகளின் பட்டியலை மேலே வெளியிட்டிருக்கிறோம். நம் கண்களுக்குப் புலப்படாத, வெளிவந்த நூல்களும் இருக்கலாம். ஒவ்வொரு அடியாரும் ஒரு திருவாசக நூலகத்தைத் தங்கள் இல்லத்தில் ஏற்படுத்திக் கொண்டு போற்றிப் பரவுதலைச் செய்யவேண்டும். கணினியிலும் ஏற்றி வைத்துக் கொள்ள வேண்டும்.

| | |
|---|---|
| நூற்றுக்கணக்கான | பதிப்புகள் |
| இலட்சக்கணக்கான | பிரதிகள் / படிகள் |
| கோடிக்கணக்கில் | படித்தவர்கள் |
| ஆயிரக்கணக்கில் | அறிந்தவர்கள் |
| நூற்றுக்கணக்கில் | உணர்ந்தவர்கள் |
| இரண்டிலக்க எண்ணிக்கையில் | சிவனை அடைந்தவர்கள் |

நாம் எங்கேயிருக்கிறோம் என்பதை அவரவர் அறியவோ உணரவோ முயலலாம்! இயற்றி, பதிப்பித்து, வெளியிட்ட சாதனைச் செம்மல்களுக்கு நன்றி மலர்களைக் காணிக்கையாக்குகிறோம்.

நம் சைவ சமயத்தில் சிவபெருமான் குருவாக வந்து ஆட்கொண்ட செய்தி திருவாசகத்தில் மிகச் சிறப்பாக இடம்பெற்றுள்ளது. மாணிக்கவாசகர் இறைவன் இம்மண்ணுலகிற்கு வந்து, தன் அரிய நலன்களைக் காட்டி, தன் சிந்தையுட்புகுந்து, பெரும் மாற்றத்தை விளைவித்த தன்மையை ஆனந்தமாக ஆடியும், நன்றியுணர்வோடு பாடியும், மீண்டும் காண வேண்டுமென அவாவியும், அங்ஙனம் காணப் பெறாமையால் ஊடியும் இரங்கற்குறிப்போடு உருகியும் பாடிய பாடல்களின் தொகுதியான திருவாசகத்தை - சிவபெருமானைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டு மாணிக்கவாசகர் நமக்கருளிய திருமுறையை, எட்டாம் திருமுறை வழிபாட்டுக் கருத்தரங்கமாக 2016-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 27, 28-ம் தேதிகளில் சனி, ஞாயிறு நாட்களில் பின்கண்ட நிகழ்ச்சி நிரல்படி நடத்தத் திருவருள் கூட்டியுள்ளது. இதுவரை கீழ்க்காண் அட்டவணைப்படி திருமுறைப்பனுவல் கருத்தரங்குகள் நடைபெற வழிநடத்திவரும் திருவருளுக்கு நன்றி சொல்கிறோம்.

| திருமுறை வரிசை | பதிகங்கள் | பாடல்கள் | ஆசிரியர் | நடைபெற்ற தேதி |
|---|---|---|---|---|
| முதல் திருமுறை | 136 | 1469 | திருஞானசம்பந்தர் | டிசம்பர் 27, 28 - 2014 |
| இரண்டாவது திருமுறை | 122 | 1331 | திருஞானசம்பந்தர் | பிப்ரவரி 21, 22 - 2015 |
| மூன்றாம் திருமுறை | 127 | 1369 | திருஞானசம்பந்தர் | ஏப்ரல் 18, 19 - 2015 |
| நான்காம் திருமுறை | 113 | 1070 | திருநாவுக்கரசர் | ஜீன் 27, 28 - 2015 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஐந்தாம் திருமுறை | 100 | 1064 | திருநாவுக்கரசர் | ஆகஸ்டு 29, 30 - 2015 |
| ஆறாம் திருமுறை | 99 | 981 | திருநாவுக்கரசர் | அக்டோபர் 24, 25 - 2015 |
| ஏழாம் திருமுறை | 100 | 1026 | சுந்தரர் | டிசம்பர் 26, 27 - 2015 |
| எட்டாம் திருமுறை | 51 | 658 | மாணிக்கவாசகர் | பிப்ரவரி 27, 28 - 2016 |

இரண்டு மாத இடைவெளியில் சுமார் 1500 பாடல்கள் கொண்ட ஒரு திருமுறையை முறையாகப் படித்து, அச்சுப்பிழை பலமுறை பார்த்துக் கடின உழைப்பின் பயனாக நூலை வெளியிடும், திருமதி ப. தமிழரசியைத் தலைவியாகக் கொண்டு செயல்படும் தமிழ்த்துறையின், திரு. இரா. மதன்குமார், திருமதி. ச. கவிதா, திரு. பு. பிரபுராம், திரு. செ. ஆறுச்சாமி ஆகியோருக்கும், நூலாக்க ஒருங்கிணைப்புப் பணியில் செயலாற்றுகின்ற திரு. ப. வெள்ளிங்கிரி, திரு. ப. மணிசேகர், திரு. அ. இராமசாமி ஆகியோருக்கும், கணினி நிபுணர்களான திரு. மு. மகேஷ், திரு. து. சசி அவர்களுக்கும், நூலைச் சிறப்பாக வெளியிடும் செஞ்சுடர் அச்சகத்தார்க்கும், மனமுவந்த நன்றிகள். அவர்கள் இம்மை, மறுமை இன்பம் பெறுவார்களாக.

மென்னூல் வடிவம் http://www.panniruthirumurai.org என்ற இணைய முகவரியில் உள்ளது. அன்பர்கள் படித்தும், படியெடுத்தும், தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்க்கு எடுத்துரைத்தும் இன்புற அன்புடன் அழைக்கின்றோம்.....

நன்றி,

அன்பன்,

கோவை – 21
01.02.2016

**இராச. வசந்தகுமார்**
நிறுவன வேந்தர்
கற்பகம் பல்கலைக்கழகம்

# நிகழ்ச்சி நிரல்

| வ. எண் | நாள் / நேரம் | சொற்பொழிவாளர் | திருப்பதிகங்கள் |
|---|---|---|---|
| 1. | 27.02.2016 சனி காலை 09.00–11.00 | மகாவித்துவான் மயிலம் வே. சிவசுப்பிரமணியம் அவர்கள் | சிவபுராணம், கீர்த்தித் திருஅகவல், திருஅண்டப்பகுதி, போற்றித் திருஅகவல் |
| 2. | 27.02.2016 சனி நண்பகல் 11.00 – 01.00 | பேராசிரியர் ம.வே. பசுபதி அவர்கள் | திருச்சதகம் |
| 3. | 27.02.2016 சனி பிற்பகல் 02.00 – 04.00 | சிவத்திரு ப. குமரலிங்கம் அவர்கள், கோவை | நீத்தல்விண்ணப்பம், திருவெம்பாவை, திருஅம்மானை, திருப்பொற்சுண்ணம் |
| 4. | 27.02.2016 சனி மாலை 04.00 – 07.00 | பக்க வாத்தியங்களுடன் திருவாசக இன்னிசை – முனைவர் கோ.ப. நல்லசிவம் அவர்கள், தஞ்சாவூர் | |
| 5. | 28.02.2016 ஞாயிறு காலை 09.00–11.00 | சைவத்திரு சு. குஞ்சிதபாதம் அவர்கள் | திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருஉந்தியார், திருத்தோள்நோக்கம் |
| 6. | 28.02.2016 ஞாயிறு நண்பகல் 11.00 – 01.00 | சைவத்திரு சிவ. காந்தி அவர்கள் | திருப்பொன்னூசல், அன்னைப்பத்து, குயில்பத்து, திருத்தசாங்கம், திருப்பள்ளிஎழுச்சி, கோயில்மூத்த திருப்பதிகம், கோயில் திருப்பதிகம், செத்திலாப்பத்து, அடைக்கலப்பத்து, ஆசைப்பத்து, அதிசயப்பத்து, புணர்ச்சிப்பத்து |

| வ. எண் | நாள் / நேரம் | சொற்பொழிவாளர் | திருப்பதிகங்கள் |
|---|---|---|---|
| 7. | 28.02.2016 ஞாயிறு பிற்பகல் 02.00 – 04.00 | சைவத்திரு சொ.சொ.மீ. சுந்தரம் அவர்கள், மதுரை | வாழாப்பத்து, அருட்பத்து, திருக்கழுக்குன்றப் பதிகம், கண்டபத்து, பிரார்த்தனைப்பத்து, குழைத்தபத்து, உயிர்உண்ணிப்பத்து, அச்சப்பத்து, திருப்பாண்டிப் பதிகம், பிடித்தபத்து, திருஏசறவு, திருப்புலம்பல் |
| 8. | 28.02.2016 ஞாயிறு மாலை 04.00 – 06.00 | முதுமுனைவர் ந.இரா. சென்னியப்பனார் அவர்கள் | குலாப்பத்து, அற்புதப்பத்து, சென்னிப்பத்து, திருவார்த்தை, எண்ணப்பதிகம், யாத்திரைப் பத்து, திருப்படைஎழுச்சி, திருவெண்பா, பண்டுஆயநான்மறை, திருப்படைஆட்சி, ஆனந்தமாலை, அச்சோப்பதிகம் |




# திருவாதவூரடிகள் வரலாறு

பழம்பதியாகிய பாண்டியநாட்டில், மதுரையம் பதியிலிருந்து 15 கல் தொலைவில் திருவாதவூர் என்னும் தலமுள்ளது. அதில் சிவநெறிபிறழாச் சிந்தையாளராகிய அந்தணர் ஒருவருக்கு அரும்பெறல் மகவாய் அவதரித்தவர் திருவாதவூரர். கலை ஏற வயதும் ஏறி எல்லாம் பதினாறாயின. நிறைமதியர் ஆனார். நல்லொழுக்கின் தலைநின்றார். உற்றது கொண்டு மேல்வந்து உறுபொருளுணரும் தன்மையாளரானார். இவரது அறிவுத்திறமும் நிர்வாக ஆற்றலும் அரிமர்த்தனபாண்டியன் செவியிற் சென்றடைந்தன. மன்னன் மந்திரியாக்கினான். தென்னவன் பிரமராயன் என்ற பட்டத்தையும் சேர்ப்பித்தான். முதன்மையும் அளித்தான். அரசியல், அமைச்சியலால் அல்லல் இன்றி நடந்துவந்தது. அமைச்சர்க்கு ஆட்சிமுறை பற்றிய அல்லல் இல்லையாயினும், உலக வாழ்வும் வாழ்விற் கண்ட பெரும்போகமும் நிலையற்றன என்பதை அறிந்தமையின் உவர்ப்புத் தோன்றிற்று. கூத்தினர் தன்மை வேறு கோலம் வேறு ஆகுமாறுபோல, வாதவூரர் மேற்கொண்டுள்ள அமைச்சுரிமைக்கும் அன்புகனிந்த அகத்துரிமைக்கும் சிறிதும் தொடர்பின்றியிருந்தது. அதனால் குருவைத்தேடும் வேட்கை நாளுக்குநாள் மிகுந்துகொண்டே வந்தது. தாம் பிறந்ததன் பயனை அடைந்தோமா ? அதற்குரிய வழி என்ன ? என்பதிலேயே இவருடைய கருத்து ஓடிக்கொண்டிருந்தது.

ஒருநாள் குதிரைக்காவலர் அரசவைக்கு வந்து, குதிரைப்படைகள் குறைந்து விட்டதாகவும், குதிரை கொள்ளுதற்கு ஏற்றதான சமயம் இது என்பதையும் அறிவிக்க அரிமர்த்தனன், முதலமைச்சரை நோக்கி, இப்பொழுதே சென்று குதிரை வாங்கி வருக என்று ஆணையிட்டான்.

அமைச்சரும் அவ்வண்ணமே சென்று பொற்பண்டாரத்தைத் திறந்து பெரும்பொருளை வாரிக்கொண்டு கடற்கரையை நோக்கிக் குதிரை கொள்ளப் புறப்பட்டார். வழியில் திருப்பெருந்துறையை அடைந்தார். அரகர முழக்கம் இவர் செவிவழியாகப் புகுந்து சிந்தையை உருக்கிற்று. ஒலிவழியே விரைந்து

சென்றார். குருந்த மரத்தடியில் குருமூர்த்தியையும் சீடர்களையும் கண்டார். காந்தங்கண்ட இரும்புபோல் மனம் அவர் வசமாயிற்று. விரைந்து அணுகி அடிபணிந்தார். ஆட்கொண்டருளுக என வேண்டிக் கொண்டார். இறைவன் கருணைக் கண்ணோக்கஞ் செய்து, கரத்தால் தீண்டி, திருவடிசூட்டிச் சிவஞானோபதேசம் செய்தார். அதனால் உயிரும் உடைமையும் அவர் வசமாயின வாதவூரர் மாணிக்கவாசகரானார். குருநாதன் திருவுளக்குறிப்பின்படி கொண்டுவந்த பொருள்களெல்லாவற்றையும் சிவாலயப்பணிக்கு ஆக்கினார். நாட்கள் சென்றன. அமைச்சர் அருளாரமுதத்தை உண்டுகொண்டே தெருளார் சிவானந்தபோகத்துத் திளைத்திருக்கின்றார்.

அமைச்சர் அருள் வாழ்க்கையை அரசன் மருளாட்சி அறியுமா ? குதிரை வாங்கச்சென்ற மந்திரியைக் காணோமேயென்று ஆள்விட்டான். அரசன் ஏவலாளர்கள் மதியமைச்சருடைய நிலைமையை மன்னர்க்கு அறிவித்தார்கள். மன்னன் சினந்து, திரும்பிவர ஓலையனுப்பினான். வாதவூரர், பெருமானிடம் சென்று முறையிட்டார். இறைவன் விலைமதிக்க முடியாத ஒரு மாணிக்கத்தைக் கையுறையாகக் கொடுத்து அரசிடம் சென்று இதனை அறிவித்து வருக என்று ஆணையிட்டார். அமைச்சரும் அவ்வாணையின் வண்ணமே ஆவணி மூலநாளில் குதிரை அனைத்தும் வரும் என்று அறிவித்தார். அரசன் எதிர்நோக்கி இருந்தான். பின் ஒற்றர்கள் மூலமாகப் பொய்யென்றுணர்ந்தான். மாணிக்கவாசகரை சிறையிலிருத்தி நிறைய ஒறுத்தான். கருணைக்கடவுள் நரிகளைப் பரிகளாக்கிப் பாண்டிய மன்னனிடம் ஒப்புவித்து மீண்டார். அன்று இரவே பரிகள் நரிகளாயின.

அவதி ஆற்றாத அரசன் அடிகளாரைச் சுடுமணலில் நிறுத்தி கல்லேற்றி ஒறுத்தான். அடிகளார் பொறுத்தார். ஆண்டவன் வெறுத்தான். ஆற்றுவெள்ளம் பெருகியது. மதுரை அழியுமோ என்ற வருத்தம் அனைவரையும் வாட்டியது. அரசன் அவரவர் கரையை அவரவர் அடைத்துக்கொள்ளும்படி ஆணையிட்டான். வந்தி பங்கு அடைபடாமல் இருந்தது. இறைவன் வந்தி தந்த பிட்டமுதையுண்டு வையை அடைப்பர்போல, உண்ட களைப்பால் உறங்கினார். நூற்றைக் கெடுத்தது குறுணி என்றதுபோல், ஒருத்தி பங்கு ஊரார் பங்கையும் கரைத்தது. சினந்த அரசன் கைப்பிரம்பு கொண்டு அறிவுருக்கொள்ளும் ஆளை அடித்தான். அவ்வடி சராசரப் பொருள்கள்

அனைத்தின் மேலும் பட்டன. மன்னன் திருவாதவூரர் பெருமையை அறிந்தான். மன்னிப்பு வேண்டினான். அமைச்சியலைத் துறந்த மாணிக்கவாசகர் திருப்பெருந்துறை, திருவுத்தரகோசமங்கை, திருவாரூர், திருவிடைமருதூர் முதலிய தலங்களை வணங்கிப் பதிகங்கள் பாடிக்கொண்டு தில்லையை அடைந்து, பிச்சதேறி, நிச்சலும் வழிபாடு செய்துகொண்டு எழுந்தருளியிருந்தார். தில்லை வாழந்தணர்களோடு வாதுக்கு வந்த புத்தர்களை இறைவன் ஆணையின்வண்ணம் வென்றார்.

ஒருநாள் இறைவன் அந்தணவடிவுகொண்டு திருவாசகம், திருக்கோவையார் இரண்டையும் தாம் எழுதிக் கைச்சாத்திட்டுக் கனகசபையில் வைத்து மறைந்தார். திருவனந்தலில் திருவேட்டைக்கண்ட தில்லைவாழந்தணர்கள் மிகமிக வியந்து, அதனை எடுத்து அவிழ்த்துப் பார்த்தனர். அதில் அம்பலவாணன் கையெழுத்திருப்பதையறிந்து அடிகளாரைப் பொருள் விரிக்க வேண்டினர். அடிகளார், "அனைத்திற்கும் பொருள் அம்பலவாணர் அடியிணையே'' என்று சொல்லி அவற்றோடு இரண்டறக்கலந்தார். நால்வரில் தில்லையில் கலந்த பெருமை மாணிக்கவாசகருக்கே உண்டு.



உ

சிவமயம்

வடலூர் வள்ளலார் இராமலிங்க அடிகள்

அருளிய

# ஆளுடைய அடிகள் அருள்மாலை

(துரவு கொச்சகக் கலிப்பா)

01. தேசகத்தில் இனிக்கின்ற தெள்ளமுதே மாணிக்க
வாசகனே ஆனந்த வடிவான மாதவனே
மாசகன்ற நீதிருவாய் மலர்ந்ததமிழ் மாமறையின்
ஆசகன்ற அநுபவநான் அநுபவிக்க அருளுதியே.

02. கருவெளிக்குட் புறனாகிக் கரணமெலாங் கடந்துநின்ற
பெருவெளிக்கு நெடுங்காலம் பித்தாகித் திரிகின்றோர்
குருவெளிக்கே நின்றுழலக் கோதறநீ கலந்ததனி
உருவெளிக்கே மறைபுகழும்உயர்வாத வூர்மணியே.

03. மன்புருவ நடுமுதலா மனம்புதைத்து நெடுங்காலம்
என்புருவாய்த் தவஞ்செய்வாம்எல்லாரு மேமாக்க
அன்புருவம் பெற்றதன்பின் அருளுருவம் அடைந்துபின்னர்
இன்புருவம் ஆயினைநீ எழில்வாத வூரிறையே.

04. உருவண்டப் பெருமறையென் றுலகமெலாம் புகழ்கின்ற
திருவண்டப் பகுதியெனுந் திருவகவல் வாய்மலர்ந்த
குருவென்றெப் பெருந்தவருங் கூறுகின்ற கோவேநீ
இருவென்றத் தனியகவ லெண்ணமெனக் கியம்புதியே.

05. தேடுகின்ற ஆனந்தச் சிற்சபையிற் சின்மயமாய்
ஆடுகின்ற சேவடிக்கீ ழாடுகின்ற ஆரமுதே
நாடுகின்ற வாதவூர் நாயகனே நாயடியேன்
வாடுகின்ற வாட்டமெலாம் வந்தொருகால் மாற்றுதியே.

06. சேமமிகுந் திருவாத வூர்த்தேவென் றுலகுபுகழ்
மாமணியே நீயுரைத்த வாசகத்தை யெண்ணுதொறுங்
காமமிகு காதலன்றன் கலவிதனைக் கருதுகின்ற
ஏமமுறு கற்புடையாள்இன்பினும்இன் பெய்துவதே.

07. வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே

தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல்இனிப்பதுவே.

08. வருமொழிசெய் மாணிக்க வாசகநின் வாசகத்தில்
ஒருமொழியே என்னையுமென் னுடையனையு மொன்றுவித்துத்
தருமொழியாம்என்னிலினிச் சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பிஅயல் கூடுவதேன் கூறுதியே.

09. பெண்சுமந்த பாகப் பெருமான் ஒருமாமேல்
எண்சுமந்த சேவகன்போல் எய்தியதும் வைகைநதி
மண்சுமந்து நின்றதுமோர் மாறன் பிரம்படியாற்
புண்சுமந்து கொண்டதுநின் பொருட்டன்றோ புண்ணியனே.

10. வாட்டமிலா மாணிக்க வாசகநின் வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளு மெய்ஞ்ஞான
நாட்டமுறும் என்னில்அங்கு நானடைதல் வியப்பன்றே.

## திருவாதவூரர் திருத்தாள் போற்றி!

எழுதரு மறைகள் தேறா இறைவனை யெல்லிற் கங்குற்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமீ தேறத் துளும்புகண் ணீருள் மூழ்கி
அழுதடி யடைந்த வன்ப னடியவர்க் கடிமை செய்வாம்.

**– திருவிளையாடற் புராணம்**

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் – கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர். **– ஔவையார்**

## நால்வர் நான்மணி மாலை

**(துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்)**

1. விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரணனுரையெனு மாரண மொழியே
ஆதிசீர் பரவும் வாதவூரண்ணல்
மலர்வாய்ப் பிறந்தவாச கத்தேனோ

யாதோசிறந்த தென்குவீராயின்
வேதமோதின் விழிநீர்ப் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவாசகமிங் கொரு காலோதிற்
கருங்கன்மன முங்கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர்ப்பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப்பெய்தி
அன்பராகுநரன்றி
மன்பதையுலகின் மற்றையரிலரே.

2. பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்
மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே
வாசக மதற்கு வாச்சியந்
தூசகலல்குல் வேய்த் தோளிடத் தவனே.

3. கடல் நிறவண்ணன் கண்ணொன்றிடந்து
மறைச் சிலம்பரற்று மலரடிக்கணியப்
பரிதி கொடுத்த சுருதிநாயகற்கு
முடிவிளக் கெரித்துங் கடிமலர்க் கோதைச்
சுரிகுழற் கருங்கட்டுணைவியை யளித்தும்
அருமகணறும் பூங்கருமயிருதவியும்
நென்முளை வாரியின்ன முதருத்தியுங்
கோவண நேர்தனை நிறுத்துக் கொடுத்தும்
அகப்படு மணிமீனரற் கெனவிடுத்தும்
பூட்டி யரிவாளூட்டி யரிந்துந்
தலையுடை யொலிக்குஞ் சிலையிடை மோதியும்
மொய்ம்மலர்க் கோதை கைம்மலர் துணித்துந்
தந்தையைத் தடிந்து மைந்தனைக் கொன்றுங்
குற்றஞ்செய்த சுற்றங் களைந்தும்
பூக்கொளு மாதர் மூக்கினை யரிந்தும்
இளமுலை மாதர் வளமைதுறந்தும்
பண்டைநாளொரு சிலர் தொண்டராயினர்
செங்கண் மாறடக்கையிற் சங்கநாண
முட்டாட்டாமரை முறுக்கவிழ் மலர்மேல்
வலம்புரி கிடக்கும் வாதவூரன்பா
பாடும்பணிநீ கூடும் பொருட்டு
மதுரைமா நகரிற் குதிரை மாறியும்

விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்தும்
நீற்றெழின் மேனியின் மாற்றடி பட்டும்
நின்னைத்தொண்டனென்னக் கொண்டனன்
இருக்கு மடுக்கலரக்க னெடுப்ப
முலைபொர வரைபொரு மொய்ம்பின்
மலைமகடழுவ மன மகிழ்வோனே.

4. வலமழு வுயரிய நலமலி கங்கை
நதிதலை சேர்ந்த நற்கருணைக்கடன்
முகந்துல குவப்ப வுகந்த மாணிக்க
வாசகனெனுமொரு மாமழை பொழிந்த
திருவாசகமெனும் பெருநீரொழுகி
ஓதுவார் மனமெனு மொண்குளம் புகுந்து
நாவெனு மதகினடந்து கேட்போர்
செவியெனு மடையிற் செவ்விதிற் செல்லா
உளமெனு நிலம்புகவூன்றிய வன்பாம்
வித்திற் சிவமெனுமென் முளைதோன்றி
வளர்ந்து கருணை மலர்ந்து
விளங்குறு முத்தி மெய்ப்பயன் றருமே.

5. வேண்டு நின்னடியார் மெய்யன் பெனக்கும்
அருள்செய் சிவனே யலந்தே னந்தோ
முறையோ முறையோ விறையோனே யென்
றழுது செம்பொனம்பலக் கூத்தன்
அருளாற் பெற்றவன் பினிலொருசிறி
தடியனேற்கு மருளல்வேண்டும்
நீயே கோடனின் னருட் பெருக்கிற்
கேற்ற தன்றிள வேறுகந்தேறியைப்
பரிமாமிசை வரப்பண்ணிய வித்தக
திருந்திய வேதச் சிரப்பொருண் முழுதும்
பெருந்துறையிடத்துப் பெருஞ்சீர்க்
குருந்துறு நீழலிற் கொள்ளை கொள்வோயே.

6. நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ
மனநின் றுருக்கு மதுரவாசக
கலங்குறு புலனெறி விலங்குறுவீர
திங்கள் வார்சடைத் தெய்வநாயக

ஒருகலையேனும் முணரா னஃதான்று
கைகளோ முறிபடுங் கைகள் காணிற்
கண்களோ வொன்று காலையிற் காணும்
மாலையி லொன்று வயங்கித் தோன்றும்
பழிப்பினொன்று விழிப்பி னெரியும்
ஆயினுந் தன்னை நீபுகழ்ந் துரைத்த
பழுதில் செய்யு ளெழுதின னதனாற்
புகழ்ச்சி விருப்பன் போலும்
இகழ்ச்சி யறியாவென் பணிவானே.

7. பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெறாரி னழுங்கி
நெஞ்சநெக் குருகி நிற்பை நீயே
பேயேன் பெறாது பெற்றார் போலக்
களிகூர்ந் துள்ளக் கவலை தீர்ந்தேனே
அன்னமாடு மகன்றுறைப் பொய்கை
வாதவூரன்ப வாதலாலே
தெய்வப் புலமைத் திருவள் ளுவனார்
நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவலமில ரெனுஞ்
செஞ்சொற் பொருளின் றேற்றறிந் தேனே.

8. திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தின்
நீழல்வா யுண்ட நிகரிலா னந்தத்
தேன்றேக் கெறியுஞ் செய்யமா ணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம்
யாவரு மோதுமியற்கை த்தாதலின்
பொற்கல நிகர்க்கும் பூசுரர் நான்மறை
மட்கல நிகர்க்கு மதுரவாசகம்
ஓதின் முத்தியுறு பயன்
வேத மோதின் மெய்ப்பய னறமே.

9. தானே முத்தி தருகுவன் சிவனவன்
அடியன் வாதவூரனைக்
கடிவின் மனத்தாற் கட்ட வல்லார்க்கே.

10. செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூரன்ப
பாவெனப் படுவதுன் பாட்டுப்
பூவெனப் படுவது பொறிவாழ் பூவே.

"பாய்பரியோன் தந்த பரமானந் தப்பயனைத்
தூயதிரு வாய்மலரால் சொற்செய்து – மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தேன்" **– களிறு (73).**

வருவா சகத்தினில், முற்றுணர்ந் தோனை, வண் தில்லைமன்னைத்
திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண் டேயுமற் றப்பொருளைத்
தெருளாத வுள்ளத் தவர்கவி பாடிச் சிறப்பிப்பரே.

**– கோயில் திருப்பண்ணியர் விருத்தம் (58)**

## முகம்மதிய நண்பரின் 1868ஆம் ஆண்டு திருவாசக மூல வெளியீட்டு முகப்பு





உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருவாசகம்.

சைவசமயாசாரியாராகிய

திருவாதவூர்

மாணிக்கவாசகசுவாமிகள்

அருளிச்செய்தது.

இஃது,

திருப்புன்கூர்

சிவயோகநாத பண்டிதரவர்களால்

பரிசோதித்து.

இவை

திருநெல்வேலிப்பேட்டை

பரிமளக்காவீதியிலிருக்கும்

கா-பீர்காதரொலிராவுத்தரவர்களால்.

காஞ்சிபுரம்,

திருவேங்கடமுதலியாரது

இயற்றமிழ்விளக்கவச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

பிரபவஹு-பங்குனிமீ.

## திருவாசகத்திற்கு டாக்டர் ஜி.யு. போப் உள்ளிட்ட மேற்கத்திய கற்றறிஞர்களின் பங்களிப்பு

திருவாசக மணி K.M. பாலசுப்பிரமணியம் அவர்களின் ஆங்கிலக் கட்டுரை

# The Tiruvachagam

Tributes Paid By Western Savants by

Tiruvachagamani **K.M. Balasubraminan**, B.A., B.L.,

The celebrated Dr. G. U. Pope was one of the tallest and most remarkable Christian Missionaries who have made history in India during the past three centuries. He was one of those, perhaps the chief among them, western missionaries of Christianity who had arrived in India to scorn but who had to remain here to pray, not only at the alter of the charming goddess of Tamil but also in the shrine of the sublime Saiva lore. The mighty Moralist Thiruvalluvar and the magnificent Saint Manikkavachagar of this marvellous Land of the Tamils had take the soul of Dr. Pope by storm to such an extent that he did not stop short of immortalising them and incidentally himself by translating the respective works into the undying English language. To the end his life. Dr. Pope was proud of calling himself a Student of Tamil Nadu, his last fervant wish was that "Here lies a Student of Tamil; should be the epitaph over his grave.

In the course of the Introduction to his immortal life-work-the Translation of Thiruvachagam Dr. Pope has made some pregnant observations about the Saint of Vathavur and his sacred utterances and I would fain quote the most important among them.

"In the whole legendary history of this sage …………. there standsout a real historical character, which seems to be a mixture of that of St. Paul and of St. Francis of Assisi. Under other circumstances what an apostle of the East might he have become! His poetry lives in all Tamil hearts, and in the main and true essence of it, deserves so to live."

"These poems, of which the Translation is here printed, are daily sung throughout the whole Tamil country with tears of rapture and committed to memory in every Saiva Temple by the people amongst whom

it is a traditional saying that 'he whose heart is not a heart" It is impossible to read the poems without felling that the Sage of Thiruvathavur was a sincere seeker after God, whom, in ways that he then knew not of, he has since been permitted to know and worship."

"The success of Manikkavachagar in reviving Saivism which seems to have been then almost extinct, was immediate and we must say, permanent... In considering the causes of his success, I feel inclined to set aside all stories of persecution carried at his instigation (?) His own personal devotion and fervor of spirit made him an altogether irresistible apostle of his faith. I see no evidence of anything like it in the after times. He went about testifying that he had seen Sivam in Perundurai and had then and there passed from darkness to light. He thus declared to all what he fully believed himself to have seen and handled. He was an enthusiast but absolutely sincere. He taught the people that there was one supreme personal God no mere metaphysical abstraction but the Lord of gods and men. He also taught that it was the gracious will of Sivan to assure humanity, to come to the earth as a Guru and to make disciples of those who sought him with adequate preparation. He announced that this way of salvation was open to all classes of the community. He also taught very emphatically the immortality of the released soul-its conscious immortality-as he said that the virtual death of the soul which Buddhism teaches is not its release. It will be seen how very near in not some unimportant respects, the Saiva system approximates to Christianity…"

"Again, the Saivites led the way in the propagation of their system by means of popular songs. Anyone who compares the fervid piety of our Sage's very beautiful and generally very simple lyrics will feel with what force they must have struck the chord that vibrated them, as it vibrates still in millions of hearts! 'One touch of nature makes the whole world kin' and no one can read the Sage's verses without profound emotion. Scarcely ever has the longing of the human soul for purity and peace and divine fellowship found worthier expression."

"In considering the poetry of Thiru Manikkavachagar, the Tamil Student must feel its superiority, to all the vast collections of the Devaram, although the authors of some of these enjoy perhaps a wider popularity among the Tamil people ... It is quite certain that the influence of these poems (of Thiruvachagam) in South India is like that of the Psalms among

Christians and that they have touched generations the hearts to the vast majority of the Tamil speaking people."

Here let me mention in passing that Dr. Pope, though throughout very sympathetic, has a tendency now and then to lapse into a habit of criticising as 'absurd' and 'unintelligible' certain customs of the Saivites and some acts and passages of the Saint of Thiruvathavur. A close consideration of these points of his criticism and a convincing answer to them are certainly called for; but that arduous though pleasant task is reserved to a later occasion, when, God willing it is proposed to do fuller justice to our priceless work than that which Pope himself has done.

Finally, the learned Doctor concludes by solemnly declaring as follows: "The effect, therefore of these songs - full of a living faith and devotion - was great and instantaneous. South India needed a personal God, an assurance of immortality and a call to prayer. These it found in Manikkavachagar's compositions."

The mere fact that our Manikkavachagar has found such an ardent disciple as Dr. G.U. Pope from the most unexpected quarter is a sufficiently significant one. For, it was responsible for breaking down the linguistic barrier that had preserved the Thiruvachagam as the monopoly of the Tamils and kept away the approach and appreciative study of a wider and wiser world. The advent of Dr. Pope's EnglishTranslation definitely conquered for our Saint a far wider circle of fervent admirers than had been the case prior to that. In fact, I cannot help feeling that this unique Translation which bespoke and advertised the beatific splendour of Thiruvachagam went a long way in blowing into a blaze the dying embers of interest which the Saivites themselves had in their sacred heritage of spiritualism. As in almost every case where a foreigner's appreciation has fostered the local interest, in the case of Thiruvachagam also, the genuine and gigantic efforts of Dr.Pope in uttering the 'Open Sesame' to throw open the doors of the Treasure-cave of Thiruvachagam to the cultured Savants of the West,Stung the Tamils of his days into a shame of their callousness and started them into an awakening and appreciation of their past. That was not all. The English language is essentially a universal language, in spite of all its critics and in spite of all their vendetta. It is spoken by millions in the hemispheres; it is understood everywhere in the world. The Diplomatic world no less than the Deacons and Church Dignitaries speak that tongue and understand it. Hence, any

piece of literary or religious work written or translated in that language is sure to reach the entire civilised world. The Germans and the French, the Swiss and the Danish would avidly devour its entire civilised world. The Germans and the French, the Swiss and the Danish would avidly devour its contents by at once translating that work into their respective national language. That is the unique advantage which many a philosophical work of India have enjoyed for a long time by dint of their translation into English, Pope's English 'Thiruvachagam' has done a similar service to Manikhavachagar and the Tamil language. It has introduced our Saint to a far wider circle of students and a greater variety of nationals than any other effort by anyone else could have possibly ever done.

It was one of the proudest moments of my humble life when once,perchance, I had the good fortune of going through an excellent book in English entitled 'Prayer'. The book is an English translation of a work of that name in the German language. The author of that original German work is one Friedrich Heiler. It took my breath away to see that the magic name of my Manikhavachagar was mentioned in the book in five or six places. The book was originally written during the First World War and was published before the end of the War, though its English Translation saw the light of day only in 1932. And what was it that had introduced our eminent Saint to that German Savant to the edification of both of them? It was undoubtedly the English Translation of Dr. Pope that made available to that German author such a priceless asset as Thiruvachagam to the eternal benefit of everyone concerned. And how could the Saivite world of Tamil Nadu ever express its gratitude to that self-less and sincere Missionary who, more than any other individual was responsible for the such a rare piece of service in the cause of Saivism and Tamil! May his memory ever be green in the mind of every Tamilian!

Let us now see where all and how the honoured Saint of Thiruvathavur is referred to or mentioned by that celebrated German author. In three places he is referred to and in three other places his statements are quoted with approval. First of all, while speaking of the various classes of the mystic saints, Friedrich Heiler refers to our Saint as belonging to a particular class. On page 172, says the author: "There is a simple and fanciful mysticism (Sufis, Manikkavachagar, Bernad, Francis of Assist, Suse, Symen, the New Theologian) …"

Again, on page 121, writes the author: "Mohamed, the Islamic Mystics Bayazid, Ferid-ed-din-Attar, and Jalal-ed-din Rumi, the Indian Mystics Manikkavachagar, Yamuna Muni, Tulsi Das, and Nanak are Non-Christian personalities worthy to be placed beside the men of genius in Israel and Christendom as great men prayer."

Thirdly, the author refers to the cultural prayer of some saints and as an excellent example of the genuine inspiration that the sacred images in the temples breathe in the souls of the saints who worship in their holy presence, he cites the instance of the Saint of Thiruvathavur on page 205. Since this author has given a graphic and sympathetic picture of the form and rationale of idol worship unlike many an unimaginative alien who scruple not to dub it as vulgar idolatry. I make no apology to quote that entire paragraph.

"In Bhakti mysticism the motive of worship is an important factor; tender mystical piety and the popular cult of the gods merge into each other. The mystical adoration of the divine Lord (Iswara) and Saviour, of Vishnu is inspired by the god's image. In the statue that has been consecrated by a special ceremony (avahanam) the god is really and personally present; his image is an "avatara", i.e., a personification and incarnation of the god beyond time and space. When the devotee sees the statue of his god, illumined by the dim gleam of flickering lamps and veiled in clouds of incence, he sinks down in rapturous amazement and adores in profound devotion the greatness, beauty and love of his god who is so present to him. The fervent and impassioned psalms of the great Tamil Mystic, Manikkavachagar which were all written or conceived in the Temples of Siva were produced by the contemplations of the god's sacred image. In the temple they are to this day recited daily by the faithful in the presence of the statue.

" Now we come to the three instances where in Manikkavachagar is quoted by the German author. Firstly, the theme of the author is that the Mystic contemplates God as the only highest and infinite Good, as the source of all values intellectual, ethical and aesthetic, as the cause of bliss and blessedness, as the single highest goal of all human striving. To illustrate this sublime theme the author quotes such a variety of Saints as Augustine, Anselm, Francis of Assisi Gertrude of Helfta, and Thomas A Kempis and then concludes with a gem-like piece from Thiruvachagam. Says the author: "In a hymn of Manikkavachagar we read: '0 unstained brightness, gleam of a flower

in full blossom. 0, teacher, honey-sweet food of the gods, thou highly honoured guardian, loosener of chains, great stream of boundless tenderness?"

On the same page 186, the writer again quotes our Saint. The contemplation of the opposites included in the being of god may at times rise to the pantheistic thought of the "One and All". This is the statement to substantiate which Heiler quotes a passage from the Maitrayana Upanishad. Then says the author: "Manikkavachagar exclaims: 'Thou art the Heaven, Thou art the earth, Thou art the wind, Thou art the light, Thou art the body and the soul, being and not being."

Lastly, the theme the author wishes to illustrate is that the passionate yearning which is poured forth in prayer does not spring in man's narrow heart but god's eternal love to allure and to draw man upwards towards itself. He cites passages from various saints such as Pascal, Savonarola and A. Stolz and concludes thus. 'In the deepest sense, therefore, the prayer of the devout soul is god's own prayer; it is the great god praying through the small heart and weak mouth of man. 'The tongue itself' says Manikkavachagar, which cries to Thee, may all the powers of my being which cry to Thee-all are Thine." - (Page 110)

It is not possible to exhaust the entire catalogue of the eminent admirers of Manikhavachagar within the short compass of this brochure. Nor is it possible for me to dive deep just now into the oceanic depth and expanse of this wonderful work of Thiruvachagam and bring out and exhibit its priceless pearls to the perfect delight of the wondering world. It is also quite necessary to determine the high place which our glorious Saint occupies in the gallery of God's Prophets of all the religions of the world. But once again, let me repeat that all these edifying researches are reserved to a future date.

In the meanwhile, let me rest content with the consolation that thanks to the boundless grace of Sivam and the generous gesture of the present Holiness of the Dharmapuram Mutt, I have been blessed for the present with the unique and enviable privilege of indicating to some extent how our renowned Sage of Thiruvathavur has achieved a universal fame and established a world - wide empire. Dr. Pope and Friedrich Heiler have become his worthy votaries and their signal service in popularizing our Saint should be applauded by the entire Saivite world.

Our present Governor-General, the Hon. Mr .. C. Rajagopalachari has also honoured himself by honouring Manikkavachagar. He has handsomely acknowledged the greatness of the Saint by nobly confessing that Thiruvachagam had kept him company along with a few other select works during the days of his political incarceration and that he had derived no little peace and consolation from a study thereof. Saint Manikkavachagar is the Apostle Paul ofSaivism. His gemlike Thiruvachagam is the high water mark of our spiritualism. May we drink deep from this eternal spring of Manna sweet is my humble appeal to my sisters and brothers of all countries! May we all enjoy its bliss in this world and beatitude in the next is my humble prayer to Lord Siva!

Long live Thiruvachagam!
Glory to Manikkavachagar!!
Long live our Saivism!!

# ஆவுடையார் கோயில் சிறப்பு



பாண்டிய மன்னனுக்காகக் குதிரை வாங்கக் கடற்கரைப் பட்டினம் நோக்கிப் பயணம் மேற்கொண்டிருந்தார் வாதவூரர். வழியில் அந்நாளைய திருப்பெருந்துறையாம், இந்நாளைய ஆவுடையார் கோயில் தலம் நிலைகொண்டிருந்தது. வந்த இடத்தில் ஆவுடையார் கோயிலில் உள்ள குருந்தமரத்து நிழலில் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார். திருவாசகத்தின் பெரும் பகுதிகளை இங்குதான் பாடினார்.

கவிச்சக்கரவர்த்தி கம்பரால் பாண்டிய நாட்டின் எல்லையெனக் கூறப்பட்டுள்ள, இன்றளவும் குன்றாச் சிறப்போடு விளங்குகிற வெள்ளாற்றின் தென்கரையிலே பாண்டிய நாட்டு மன்னனாகிய அரிமர்த்தன பாண்டியரின் அமைச்சராக இருந்த மாணிக்கவாசகரால் எழுப்பப்பெற்ற திருப்பெருந்துறை என்கிற ஆவுடையார்கோயில் இன்றளவும் வாழ்வாங்கு வாழ்ந்து, வளரும் தமிழ் கலைகளுக்குக் கட்டியம் கூறுவது போல அமைந்திருக்கிறது.

## 1100 ஆண்டுகளுக்கு முந்திய கோயில்

ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலே எழுப்பப்பட்ட இந்தக் கவிபாடும் கலைக்கூடத்தின் சிறப்புகளை ஒன்றிரண்டு வரிகளிலே சொல்லி அடக்கிவிட முடியாது.

அடங்காமை என்று கூறுவார்களே, அந்த அடங்காமையாகிய தன்மை இந்த ஆவுடையார் கோயிலுக்கு மிகவும் பொருந்தும். புதிதாகக் கோவில்கள்

கட்டுகிற ஸ்பதியார்கள் கூட, 'ஆவுடையார் சிற்ப அடங்கலுக்குப் புறம்பாக' என்று தங்களது ஒப்பந்தத்தில் குறிப்பிட்டு எழுதுவதிலிருந்தே, இந்தக் கோயிலின் கலைத்திறன் வேறு எந்தக் கோயிலிலும் அடங்காது என்பது தெளிவாகும்.

## தேரின் சிறப்பு

இங்குள்ள தேர், தமிழகத்திலுள்ள பெரிய தேர்கள் சிலவற்றில் ஒன்றாகும்.

திருவில்லிப்புத்தூர், திருநெல்வேலி, திருவாரூர், ஆவுடையார்கோயில் ஆகிய ஊர்களில் உள்ள தேர்கள்தான், தமிழகத்தில் உள்ள கோயில்களின் தேர்களில் மிகவும் பெரிய தேர்களாகும். இந்த தேர்ச் சக்கரத்தின் குறுக்களவு மட்டும் 90 அங்குலம் ஆகும். சக்கரத்தின் அகலம் 36 அங்குலமாகும்.

50 முதல் 500 பேர் வரை கூடினால் எந்தத் தேரையும் இழுத்துவிடலாம். ஆனால் இந்த ஆவுடையார் கோயில் தேரை, சுமார் 5000 பேர் கூடினால் தான் இழுக்க முடியும். தேர் மாணிக்கவாசகருக்கானது. உற்சவங்கள் எனப்படும் எல்லாப் பெருவிழாக்களும் மாணிக்கவாசகருக்குத்தான் நடைபெறுகின்றன.

## கல்லோ – மரமோ – காண்போர் வியப்பர்

இந்த ஆவுடையார் கோயிலுக்கு என்னென்ன அதியற்புத வினைத்திறன் கொண்ட கற்சிலைகள் இருக்கின்றனவோ அவை அனைத்துமே, மரத்திலும் செய்து இந்தத் தேரில் எட்டுத் திசையும் பொருத்தி இருப்பதைக் கண்ணுறும்போது, இந்தச் சிலைகள் கல்லோ மரமோ! என வியக்கத் தோன்றும்.

## வடக்கயிறு

இந்தத் தேரை இழுப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட வடக்கயிற்றை நமது இரு கைகளாலும் இணைத்துப் பிடித்தால்கூட, ஒரு கையின் விரல் இன்னொரு கையின் விரலைத் தொடாது. இருகைகளால் பிடிக்கும்போது வடக்கயிறு நமது கைக்குள் அடங்காது. இதிலும் அதன் அடங்காத்தன்மை பளிச்செனத் தெரியும்.

## உருவம் இல்லை – அருவம் தான்

தமிழகத்திலுள்ள ஆலயங்கள் எல்லாவற்றிலுமே உருவ வழிபாடுகள் தான் நடைபெற்று வருகின்றன. ஆனால் இந்த ஆத்மநாதர் ஆலயத்தில்

மட்டுந்தான் அருவ வழிபாடு நடைபெற்று வருகிறது. மூலஸ்தானத்தில் எந்தவிதச் சிலையும் கிடையாது. அப்படிப் பார்த்தாலும் இது மற்ற கோவில்களில் அடங்காத கோயில் என்பது சொல்லாமலே விளங்கும்.

## பூதம் கட்டிய கோயில்

ஆவுடையார் கோயிலை, பூதம்தான் கட்டிற்று என்று இவ்வட்டார மக்களின் நம்பிக்கை. பெரிய பாறைகளைக் கொண்டுவந்து, தூண்கள் அமைத்தும், சிலைகள் வடித்தும், கொடுங்கைக் கூரைகள் இணைத்தும், மதில் சுவர்கள், கோபுரங்கள் எழுப்பியும் வைக்கப்பட்டுள்ளன.

## கொடுங்கை

கோயிலின் தாழ்வாரத்திலுள்ள கொடுங்கைகள், கல்லை தேக்குமரச் சட்டம் போல் இழைத்து அதில் (கம்பிகளை இணைத்துச் சேர்த்து அதிலே குமிழ் ஆணிப்பட்டை ஆணிகள் அறைந்திருப்பது போல) எல்லாமே கல்லிலேயே செய்யப்பட்டுள்ளது. அதன் மீது மெல்லிய ஒடுவேய்ந்திருப்பது போல செய்திருப்பது சிற்பக்கலை வியக்கத்தக்க ஒப்பற்ற திறனாகும்.

ஒரு கல்லுக்கும் மறு கல்லுக்கும் எப்படி, எந்த இடத்தில் இணை சேர்க்கப்பட்டுள்ளது என்பதைக் கண்டுபிடிக்க முடியாத அளவிற்கு அமைக்கப்பட்டுள்ள இந்தத் தாழ்வாரம் எனப்படும் கொடுங்கைக்கூரையானது, மொத்தம் பதிமூன்றரை அடிநீளமும், ஐந்தடி அகலமும் இரண்டரையடி கனமும் உள்ளதாகும். இந்த இரண்டரையடி கனத்தை இப்படி தாழ்வாரக் கூரையாக்கி செதுக்கிச் செதுக்கி ஒரு அங்குல கன்னமுள்ள மேலோடு அளவிற்குச் சன்னமாக்கப்பட்டிருக்கிறது.

திருவலஞ்சுழிப் பலகணி, திருவீழிமிழலை வெளவால் நந்தி மண்டபம், ஆவுடையார் கோயில் ஆத்மநாதசுவாமிகோயில் கொடுங்கை போன்ற கட்டடப் பணி தவிர்த்து, பிற வகையிலான கட்டட அமைப்புகளைக் கட்டித் தருவதாகக் கட்டடக் கலைஞர்கள் உறுதி கூறுவதுண்டு. இதன் மூலமாகக் கட்டடக் கலைநுட்பத்தை உணரமுடியும். திருவலஞ்சுழிப் பலகணி (சன்னல்) மிகவும் நேர்த்தியாகவும் நுட்பமானதாகவும் அமைக்கப்பட்டிருக்கும்; திருவீழிமிழலை வெளவால் நந்தி மண்டபத்தில் வெளவால்கள் தொங்க முடியாது; ஆவுடையார் கோயில் கொடுங்கையோ மிகவும் மெல்லியதாக இருக்கும்.

## ஒரே கல்லிலான கற்சங்கிலி

கல்வளையங்களாலான சங்கிலி இதே மண்டபத்தில் வளையங்கள்

கொண்ட ஒரே கல்லிலான கற்சங்கிலி செதுக்கப்பட்டு உயரத்தில் பொறுத்தித் தொங்கவிடப்பட்டுள்ளது.

### மாணிக்கவாசகர் சோதியிலே கலந்துள்ளார்

இதேபோல இக்கோயிலின் சிறப்புக்களைக் கூறத் தலைப்பட்டால் அது ஏட்டில் அடங்காது.

உருவம் இல்லை
கொடிமரம் இல்லை
பலிபீடம் இல்லை
நந்தி இல்லை

இந்தக் கோயிலிலே மற்ற சிவாலயங்களில் இருப்பதுபோல, கொடிமரம் இல்லை. பலிபீடமும் இல்லை. நந்தியும் இல்லை. சுவாமி, அம்பாள் இருவருக்கும் முழுக்க முழுக்க அருவ வழிபாடு மட்டுமே. உருவமும் இல்லை. இன்னும் சொல்லப்போனால், இங்கு வருகின்ற பக்தர்களுக்கு, மற்ற கோயில்களைப் போல, தீப ஆராதனையினைத் தொட்டு வணங்க அனுமதியும் இல்லை. மாணிக்கவாசகர் சோதியிலே கலந்துள்ளார் என்பதாலேயே தீபம் தருவதில்லை. அம்பாள் ஆலயத்துக்கு முன் வாசல் இல்லை.

### படை கல்

இங்கே மூலஸ்தானத்தில் அமுது மண்டபத்திலே படைகல் என்கிற ஒரு திட்டுக்கல் இருக்கிறது. இந்தத் திட்டுக்கல் 3 அடி உயரம் 7 அடி நீளம் 6 அடி அகலம் கொண்ட ஒரே பாறைக்கல்லாகும். இந்தத் திட்டுக்கல்லில்தான் கால பூசைகளுக்கும் உரிய அமுதினை வடித்துப் படைத்து ஆற வைக்கிறார்கள்.

### புழுங்கல் அரிசி நெய்வேத்தியம்

எல்லா ஆலயங்களிலும் பூசை நடைபெறும்போது பச்சை அரிசியிலே அமுது படைத்து நெய்வேத்தியம் செய்வார்கள். ஆனால் இந்த ஆவுடையார் கோயிலிலே காலத்திற்குமே புழுங்கல் அரிசியால்தான் அமுது படைக்கப்படுகிறது. அதோடு பாகற்காய் கறியும் கீரையும் சேர்த்துப் படைக்கப்படுவது இங்கு மட்டும்தான்.

## அணையா நெருப்பு

ஆறு கால பூசைக்கும் தொடர்ந்து அமுது படைத்துக் கொண்டிருப்பதனால் ஆயிரக்கணக்கான வருடங்களாக இங்கு உள்ள அமுது படைக்கும் அடுப்பின் நெருப்பு அணைந்ததேயில்லை. இந்தக் கோயிலில் ஆனந்த சபை, தேவ சபை, கனக சபை, சிற்சபை, நடன சபை, பஞ்சாட்சரம் போன்ற மண்டப அமைப்புகள் உள்ளன.

இக்கோயிலினுள் கருவறைப் பகுதியை மட்டும் மாணிக்கவாசகர் கட்டியதாகவும் அதைத் தொடர்ந்து விக்ரமசோழபாண்டியர் (பார்த்திபன் கனவு என்கிற சரித்திர நாவலில் சொல்லப்படுகிற அதே விக்கிரமாதித்ய சோழன்தான்) மற்றும் சோழ மன்னர்கள் தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னர்கள், மகாராஷ்டிர மன்னர்கள், இராமனாதபுரம் சேதுபதி மன்னர், சிவகங்கை மன்னர், புதுக்கோட்டை தொண்டைமான் மன்னர், பாலைவன ஜமீன்தார் ஆகியோரால் ஆறு மண்டபங்கள் இணைத்துக் கோவிலாகக் கட்டப்பட்டுள்ளது.

## உருவமற்ற அருவக்கோயில்

தமிழகத்திலே மற்றதொரு உருவமற்ற அருவக்கோயிலான தில்லையம்பல சிதம்பர நடராசர் ஆலயத்திலே பொன்னோடு வேயப்பட்ட விமானம் உள்ளது. அதே போல இங்கு செப்போடு வேயப்பட்ட விமானம் இருக்கிறது. இந்த செப்போடு விமானத்தின் இணைப்பையும் வடிவையும் நாளெல்லாம் பார்த்து ரசிக்கலாம். இந்த விமானத்திலுள்ள மரங்கள் எல்லாமே தேவதாரு மரத்தால் ஆனவையாகும்.

## தேவதாரு மரம்

மரங்களில் உறுதிவாய்ந்தது தேக்கு மரம் என்பதும், தேக்கு மரங்கள் நூற்றாண்டு கணக்கில் கெட்டுப் போகாமல் தாங்கும் சக்தி படைத்தவை என்பது நமக்குத் தெரியும். ஆனால் இக்கோயிலில் பயன்படுத்தியுள்ள தேவதாரு மரங்களோ ஆயிரக்கணக்கான ஆண்டுகள் தாங்கும் சக்தி பெற்றவையாகும்.

இந்த தேவதாரு மரங்கள் இந்தியாவில் இல்லை என்றும், பர்மாவில் உள்ளன என்றும் கூறப்படுகிறது. அதேநேரத்தில் சிவபெருமான் வாசஸ்தலமான கைலாயத்தில் தேவதாரு மரம் இருப்பதாக புராணங்கள் வாயிலாக நாம் அறிய முடிகிறது.

அந்தத் தேவதாரு மரத்தின் மீது இந்தச் செப்போடு வேயப்பட்ட விமானம் உள்ளது. இந்த தேவதாரு மரத்தின் பலகைச் சட்டத்தை இன்று பார்த்தாலும், நேற்று அறுத்து இன்று வழவழப்பேற்றி பலகையாக்கி இணைக்கப்பட்டிருப்பது போல எண்ணெய் செறிந்துள்ள பளபளப்பைக் காணலாம். இது ஆயிரம் ஆண்டுகள் தாங்கும் சக்தியை படைத்தது என்றும் கூறப்பட்டுள்ளது.

### வற்றாத திருக்குளம்

இங்கு, 'திருத்தமாம் பொய்கை' எனப்படும் வற்றாத திருக்குளமும், மூல விருட்சமான குருந்தமரமும், 96 அடி உயரம், 51 அடி அகலம் உடைய ராஜகோபுரமும் உள்ளன. இந்தக் கோவிலுக்குள் கருவறைக்கும் மிக அருகில் 2 கிணறுகள் உள்ளன. இதில் 5 அடி ஆழத்தில் இன்றும் தண்ணீர் ஊறுவது அதிசயத்திலும் அதிசயம்.

### கவிபாடும் கற்சிலைகள்

உயிர்த்துடிப்பு ஒன்றைத் தவிர, மற்ற எல்லா அம்சங்களும் இங்குள்ள சிலைகளில் உள்ளன என்று கூறியுள்ளார்கள். அந்த அளவிற்கு ஈடு இணையற்ற கவிபாடும் கற்சிலைகள் இங்கே ஒவ்வொரு தூண்களிலும் நிறைந்து விளங்குகின்றன.

ஆயிரங்கால் மண்டபம் முதல் 12 அடி உயரம் உள்ள அகோர வீரபத்திரர் சிலை வரை சிற்பக்கலை தேனடைபோலச் செறிந்து கிடக்கிறது.

இங்குள்ள எல்லா உருவச் சிலைகளிலேயும் காலில் உள்ள நரம்புகூட வெளியே தெரிகின்றன. சிலைகளின் தலைமுடி கூட சன்னமாக அளந்து நீவி விடப்பட்டுள்ளன.

### நவநாகரிக நகைகள்

தற்காலிக நவநாகரிக நகைகள் கல்லூரி மாணவிகளும் உயர்தர குடும்பப் பெண்களும் அணிகின்ற நவீன அணிகலன்கள், தங்க நகைகள், சங்கிலிகள் போன்ற எந்த வகை நகையானாலும், அவையனைத்தும் 1000 ஆண்டுகளுக்கு முன்னமேயே இங்குள்ள சிலைகளிலே வடிக்கப்பட்டுள்ளதை இன்றும் காணலாம்.

குதிரையின் அமைப்பில் ஒவ்வொன்றாய்ப் பார்த்தால் உயிர்க்குதிரையோ ? என்று தோன்றும். குதிரைகளிலே சிறந்ததும் அழகு வாய்ந்ததும் பஞ்ச கல்யாணிக் குதிரையாகும். பஞ்சகல்யாணி என்றால், அந்தக்

குதிரையின் நான்கு கால்களிலும் அதன் கணுக்காலிலும், வெள்ளை நிறம் இருக்கும். நெற்றியிலும் பொட்டு வைத்தாற் போல வெள்ளை நிறம் இருக்கும். இவ்வாறு ஐந்து இடத்தில் வெள்ளைநிறம் இருக்கும் குதிரை, பஞ்ச கல்யாணி குதிரையாகும்.

சிவபெருமானைத் தாங்கி நிற்கின்ற குதிரைச் சிலையிலும் மேற்சொன்ன ஐந்து இடங்களிலும் வெள்ளை நிறம் இருக்கிறது. அதுமட்டுமல்ல, அந்தக் குதிரையின் பற்களும் வெண்மையான கற்களால் செதுக்கப்பட்டுள்ளன.

## வேடுவச்சி எனப்படும் மலைக்குறத்தி

இந்தக் கோயிலுக்குள் வேடுவச்சி எனப்படும் மலைக்குறத்தியின் சிலை ஒன்று அனைவரின் கவனத்தையும் ஈர்க்கும் இடத்தில் அமைக்கப்பட்டுள்ளது. ஓலையினால் செய்யப்பட்டது போன்ற ஒரு கூடையினை இடுப்பில் வைத்து கையில் இடுக்கிக் கொண்டு குறி சொல்ல வருகின்ற குறத்தி போல அமைந்துள்ளது அச்சிலை.

இந்தச் சிலையை இந்தக் கோயிலின் செக்போஸ்ட் என்று சொன்னால் கூட பொருந்தும். இந்தச் சிலையை யார் பார்த்தாலும் பார்த்தவர்கள் அந்த இடத்தை விட்டு எளிதில் அகலமாட்டார்கள். தன்னிலை மறந்து அந்தச் சிலையையே சுற்றி வருவார்கள்.

'தோள் கண்டார் தோளே கண்டார்' என்று கம்பர் கூறியதைப்போல இந்தச் சிலை அழகில் மயங்கியவர்கள் 'ஆடை கண்டார் ஆடையே கண்டார்; கூடை கண்டார் கூடையே கண்டார்' என்று சிலையின் ஒவ்வொரு அங்குலத்தையும் ரசிப்பதிலேயே மனம் பறிகொடுப்பார்.

## 1000 ஆண்டுகளுக்கு முந்திய ஓலைச்சுவடி

ஆவுடையார் கோயில் ஆத்மநாதர் ஆலயத்தில் 1000 ஆண்டுகளுக்கு முந்திய திருவாசகம் மற்றும் திருக்கோவையார் ஓலைச்சுவடிகள் மிகவும் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளன. தற்காலத்தில் இக்கோயில் நிர்வாகம் திருவாவடுதுறை ஆதீனத்தின் வசம் உள்ளது. 1990ம் ஆண்டும், 2013ம் ஆண்டு நடந்த திருப்பணி மற்றும் குடமுழுக்குத் திருவிழாக்களில் கலந்துகொள்ளும் பேற்றைப் பதிப்பாசிரியர் பெற்றார். இராசகோபுரத் திருப்பணிகளைச் செய்யும் பேற்றை நமது அறக்கட்டளையும் பெற்றது.

## எட்டாம் திருமுறை - திருவாசகம் - நூல் உள்ளீட்டுப் பொருள், பாவகை அட்டவணை

| வ. எண் | பதிக எண் | பதிகப் பெயர் | அருளிய இடம் | பாடல்கள் எண்ணிக்கை | உள்ளீட்டுப் பொருள் | பாவகை |
|---|---|---|---|---|---|---|
| 1. | 1 | சிவபுராணம் | திருப்பெருந்துறை | 1 | சிவனது அநாதி முறைமையான பழமை | கலிவெண்பா |
| 2. | 2 | கீர்த்தித் திருஅகவல் | தில்லை | 1 | சிவனது திருவருட் புகழ்ச்சி முறைமை | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 3. | 3 | திரு அண்டப்பகுதி | தில்லை | 1 | சிவனது தூல சூக்குமத்தை வியந்தது | இணைக்குறள் ஆசிரியப்பா |
| 4. | 4 | போற்றித் திருஅகவல் | தில்லை | 1 | சகத்தின் உற்பத்தி | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 5. | 5 | திருச்சதகம் | திருப்பெருந்துறை | 100 | பத்தி வைராக்கிய விசித்திரம்<br>அ. மெய்யுணர்தல்<br>ஆ. அறிவுறுத்தல்<br>இ. சுட்டறுத்தல்<br>ஈ. ஆத்தும சுத்தி<br>உ. கைம்மாறு கொடுத்தல் | (அந்தாதி)<br>கட்டளைக்கலித்துறை<br>தரவு கொச்சகக்கலிப்பா<br>எண்சீர்க் கலிநெடிலடி ஆசிரிய விருத்தம்<br>அறுசீர் ஆசிரிய விருத்தம்<br>கலிவிருத்தம் |

| வ. எண் | பதிக எண் | பதிகப் பெயர் | அருளிய இடம் | பாடல்கள் எண்ணிக்கை | உள்ளீட்டுப் பொருள் | பாவகை |
|---|---|---|---|---|---|---|
| | | | | | ஊ. அனுபோகசுத்தி<br>எ. காருணியத்திரங்கல்<br>ஏ. ஆனந்தத்தழுந்தல்<br>ஐ. ஆனந்தப்பரவசம்<br>ஒ. ஆனந்தாதீதம் | அறுசீர் ஆசிரியவிருத்தம்<br>அறுசீர் ஆசிரியவிருத்தம்<br>எழுசீர் ஆசிரியவிருத்தம்<br>கலிநிலைத்துறை<br>எண்சீர் ஆசிரியவிருத்தம் |
| 6. | 6 | நீத்தல் விண்ணப்பம் | உத்தரகோசமங்கை | 50 | பிரபஞ்ச வைராக்கியம் | கட்டளைக் கலித்துறை (அந்தாதி) |
| 7. | 7 | திருவெம்பாவை | திருவண்ணாமலை | 20 | சத்தியை வியந்தது | கொச்சகக் கலிப்பா |
| 8. | 8 | திரு அம்மானை | திருவண்ணாமலை | 20 | ஆனந்தக்களிப்பு | தரவுக் கொச்சகக் கலிப்பா |
| 9. | 9 | திருப்பொற்சுண்ணம் | தில்லை | 20 | ஆனந்த மனோலயம் | அறுசீர் விருத்தம் |
| 10. | 10 | திருக்கோத்தும்பி | தில்லை | 20 | சிவனோடு ஐக்கியம் | நாலடிதரவுக் கொச்சகக் கலிப்பா |
| 11. | 11 | திருத்தெள்ளேணம் | தில்லை | 20 | சிவனோடடைவு | நாலடிதரவுக் கொச்சகக் கலிப்பா |
| 12. | 12 | திருச்சாழல் | தில்லை | 20 | சிவனுடைய காருணியம் | நாலடிதரவுக் கொச்சகக் கலிப்பா |
| 13. | 13 | திருப்பூவல்லி | தில்லை | 20 | மாயா விசயம் நீங்குதல் | நாலடிதரவுக் கொச்சகக் கலிப்பா |
| 14. | 14 | திருஉந்தியார் | தில்லை | 20 | ஞானவெற்றி | கலித்தாழிசை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 15. | 15 | திருத்தோள்நோக்கம் | தில்லை | 14 | பிரபஞ்ச சுத்தி | நாலடிதரவுக் கொச்சகக் கலிப்பா |
| 16. | 16 | திருப்பொன்னூசல் | தில்லை | 9 | அருட்சுத்தி | ஆறடித்தரவுக் கொச்சகக் கலிப்பா |
| 17. | 17 | அன்னைப்பத்து | தில்லை | 10 | ஆத்தும பூரணம் | கலிவிருத்தம் |
| 18. | 18 | குயில்பத்து | தில்லை | 10 | ஆத்தும இரக்கம் | அறுசீர் ஆசிரிய விருத்தம் |
| 19. | 19 | திருத்தசாங்கம் | தில்லை | 10 | அடிமைகொண்ட முறைமை | நேரிசை வெண்பா |
| 20. | 20 | திருப்பள்ளி எழுச்சி | தில்லை | 10 | திரோதான சுத்தி | எண்சீர் ஆசிரிய விருத்தம் |
| 21. | 21 | கோயில் மூத்த திருப்பதிகம் | தில்லை | 10 | அநாதியாகிய சற்காரியம் | அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் (அந்தாதி) |
| 22. | 22 | கோயில் திருப்பதிகம் | தில்லை | 10 | அநுபோக இலக்கணம் | எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 23. | 23 | செத்திலாப்பத்து | திருப்பெருந்துறை | 10 | சிவானந்தம் அளவறுக்கொணாமை | எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 24. | 24 | அடைக்கலப்பத்து | திருப்பெருந்துறை | 10 | பக்குவ நிர்ணயம் | கலவைப் பாட்டு |
| 25. | 25 | ஆசைப்பத்து | திருப்பெருந்துறை | 10 | ஆத்தும இலக்கணம் | அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 26. | 26 | அதிசயப்பத்து | திருப்பெருந்துறை | 10 | முத்தி இலக்கணம் | அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 27. | 27 | புணர்ச்சிப்பத்து | திருப்பெருந்துறை | 10 | அத்துவித இலக்கணம் | ஆசிரிய விருத்தம் |
| 28. | 28 | வாழாப்பத்து | திருப்பெருந்துறை | 10 | முத்தி உபாயம் | எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |

| வ. எண் | பதிக எண் | பதிகப் பெயர் | அருளிய இடம் | பாடல்கள் எண்ணிக்கை | உள்ளீட்டுப் பொருள் | பாவகை |
|---|---|---|---|---|---|---|
| 29. | 29 | அருட்பத்து | திருப்பெருந்துறை | 10 | மகா மாயா சுத்தி | எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 30. | 30 | திருக்கழுக்குன்றப் பதிகம் | திருக்கழுக்குன்றம் | 7 | குரு தரிசனம் | எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 31. | 31 | கண்டபத்து | தில்லை | 10 | நிருத்த தரிசனம் | கொச்சகக் கலிப்பா |
| 32. | 32 | பிரார்த்தனைப் பத்து | திருப்பெருந்துறை | 11 | சதா முத்தி | அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் (அந்தாதி) |
| 33. | 33 | குழைத்த பத்து | திருப்பெருந்துறை | 10 | ஆத்தும நிவேதனம் | அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 34. | 34 | உயிர் உண்ணிப் பத்து | திருப்பெருந்துறை | 10 | சிவானந்தம் மேலிடுதல் | கலிவிருத்தம் |
| 35. | 35 | அச்சப்பத்து | தில்லை | 10 | ஆனந்தமுறுதல் | அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 36. | 36 | திருப்பாண்டிப் பதிகம் | திருப்பெருந்துறை | 10 | சிவானந்த விளைவு | கட்டளைக் கலித்துறை |
| 37. | 37 | பிடித்த பத்து | திருத்தோணிபுரம் | 10 | முத்திக்கலப்பு உரைத்தல் | எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 38. | 38 | திரு ஏசறவு | திருப்பெருந்துறை | 10 | சுட்டறிவு ஒழித்தல் | எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 39. | 39 | திருப்புலம்பல் | திருவாரூர் | 3 | சிவானந்த முதிர்வு | கொச்சகக் கலிப்பா |
| 40. | 40 | குலாப்பத்து | தில்லை | 10 | அனுபவம் இடையீடு படாமை | கொச்சகக் கலிப்பா |
| 41. | 41 | அற்புதப்பத்து | திருப்பெருந்துறை | 10 | அனுபவம் ஆற்றாமை | அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 42. | 42 | சென்னிப்பத்து | திருப்பெருந்துறை | 10 | சிவ விளைவு | ஆசிரிய விருத்தம் |
| 43. | 43 | திருவார்த்தை | திருப்பெருந்துறை | 10 | அறிவித்து அன்புறுதல் | எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 44. | 44 | எண்ணப்பதிகம் | தில்லை | 6 | ஒழியா இன்பத்துவகை | ஆசிரிய விருத்தம் |
| 45. | 45 | யாத்திரைப்பத்து | தில்லை | 10 | அனுபவாதீதம் உரைத்தல் | அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 46. | 46 | திருப்படை எழுச்சி | தில்லை | 2 | பிரபஞ்சப் போர் | கலி விருத்தம் |
| 47. | 47 | திருவெண்பா | திருப்பெருந்துறை | 11 | அணைந்தோர் தன்மை | நேரிசை வெண்பா |
| 48. | 48 | பண்டு ஆய நான்மறை | திருப்பெருந்துறை | 7 | அனுபவத்துக்கு ஐயமின்மை உரைத்தல் | நேரிசை வெண்பா அறுசீர்க் கழிநெடிலடி |
| 49. | 49 | திருப்படை ஆட்சி | தில்லை | 8 | சீவோபாதி ஒழிதல் | பன்னிருசீர் கழிநெடிலடி யாசிரிய விருத்தம் |
| 50. | 50 | ஆனந்த மாலை | தில்லை | 7 | சிவாநுபவ விருப்பம் | ஆசிரிய விருத்தம் |
| 51. | 51 | அச்சோப் பதிகம் | தில்லை | 9 | அநுபவ வழி அறியாமை | கலி விருத்தம் |
| | 51 | | | 658 | | |

| | | |
|---|---|---|
| ஆக பதிகங்கள் | : | **51** |
| பாடல்கள் | : | **658** |
| அடிகள் | : | **3382** |

**<u>திருத்தலங்கள்</u>**

| | |
|---|---|
| திருப்பெருந்துறை | **20** பதிகங்கள் |
| திருத்தில்லை | **25** பதிகங்கள் |
| திருவண்ணாமலை | **2** பதிகங்கள் |
| திருவுத்தர கோச மங்கை | **1** பதிகம் |
| திருக்கழுக்குன்றம் | **1** பதிகம் |
| திருவாரூர் | **1** பதிகம் |
| திருத்தோணிபுரம் | **1** பதிகம் |
| ஆக | **51 பதிகங்கள்** |

உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

# திருவாசகம்

--------

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 1. சிவபுராணம்

--------

***சிவனது அநாதி முறைமையான பழமை***

***கலிவெண்பா***

***திருச்சிற்றம்பலம்***

**1. நமச்சிவாய வாஅழ்க நாதன் தாள் வாழ்க**
**இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க**

---

*1. திருவாசகம் என்ற சொற்றொடர், அழகிய மொழியென்று பொருள்படும். அதாவது, வீடு விரும்புவாரது உள்ளத்தைக் கவரும் பேரழகுடைய அருட்பாடல்களாகிய நூல் என்பதாம். அழகு - கண்டாரால் விரும்பப்படுந் தன்மை.*

*2. திருவாசகம் - வீடளிக்கும் அருண்மொழி நூல், திரு - வீடு. திருவாசகம் - அருணூல் - அனுபவநூல் - பூசைக்குரிய நூல்.*

*சிவபுராணம் - சிவனைப் பற்றிய பழைய வரலாறு. அதாவது, மன்னுயிர்களை உய்வித்தற் பொருட்டுச் சிவபெருமான் அளவில்லாத காலமாக இயற்றி வரும் பழமையான திருவருட் செயல் முறையைக் கூறும் பகுதி என்பதாம்.*

***உரை (1-5):-*** *(தலைவனது பெருமையை யுணர்த்தும் நாமமாகிய) நமச்சிவாய வென்னுந் திருவைந் தெழுத்தானது என்றும் நிலை பெறுக. தலைவனது திருவருட் சக்தியானது என்றும் விளங்குக. கண்ணை மூடி விழிக்கும் நேரமளவுங்கூட அடியேனுடைய உள்ளத்தைவிட்டு அகலாதவனுடைய திருவடிகள் வாழ்வனவாக. திருவாவடுதுறை அல்லது திருப்பெருந் துறையில் எழுந்தருளி (அடியார்க்கு மெய்யுணர்த்தி) ஆட்கொண்டருளிய தலைமையருட் பேராசிரியராகிய முதல்வனின் திருவடிகள் என்றும் விளங்குக. வீட்டுநூல் கூறும் தனிப்பொருளாய் நின்று இனிமை தருவானுடைய திருவடிகள் (உள்ளத்தில்) என்றும் நிலைபெறுக. (தன்னிலையில்) ஒருவனாய்,*

கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க

*(அன்பர் நினைக்கும்) பல வடிவமுடையவனாய் (உலகுயிரெங்குந்) தங்குவானுடைய திருவடிகள் என்றும் பொலிவு பெறுக. முதல் ஆறு அடிகளும் திருவடி வாழ்த்தாக அமைந்தன.*

***குறிப்பு (1-5):-*** *''நமச்சிவாய'' என்னுஞ் சொற்றொடர் வடமொழியில் "வணக்கம் சிவனுக்கு" என்று பொருள்படும். நமஸ் - வணக்கம். சிவாய - சிவனுக்கு. சித்தாந்த நூல் முறைப்படி, "நமசிவாய" என்பதற்கு எழுத்துப்பொருள் கொள்ளுமிடத்து,* ***நகரம்,*** *உயிர்கள், உலகியலிற் செல்லுதற்குத் துணை புரிந்து நிற்குங் கடவுளது மறைப்புச் சக்தியைக் குறிக்கும்.* ***மகரம்,*** *மலமாகிய உலக பாசத்தைக் குறிக்கும்.* ***சிகரம்,*** *சிவமாகிய கடவுளைக் குறிக்கும்.* ***வகரம்,*** *வீடடைதற்குத் துணைபுரியும் அருட்சக்தியைக் குறிக்கும்.* ***யகரம்,*** *உயிரைக் குறிக்கும். ஆணவத்துட் கிடக்கும் உயிரினைப் பிறவிக் கட்டினுட்படுத்தி, உலகியலிற் செலுத்தியும், ஆணவம் நீங்குதற்குரிய பக்குவம் வந்தபோது, கட்டுக்களை யொழித்து அருட்சத்தி வாயிலாகத் தன்பால் வீடு பெறுவித்தும், உயிருக்கு நன்மை புரியுங் கடவுளின் பெருந்தன்மையைத் திருவைந்தெழுத்து விளக்குதலால், ''நாதன் நாமம் நமசிவாய'' வெனப்பட்டது. நாதனை அவன் நாமத்தால் வழுத்தியபின், நாதனது சத்திக்கு வாழ்த்துக் கூறப்பட்டது. "நமசிவாய" என்பதைப் பரிய ஐந்தெழுத்து (தூல பஞ்சாக்கரம்) எனவும், "சிவாயநம" என்பதை நுண்ணிய ஐந்தெழுத்து (சூக்கும பஞ்சாக்கரம்) எனவுங் கூறுப. நாதன், என்பதற்கு நாதத்துவ முதல்வனென்று பொருள் கொள்ளுவதுமுண்டு. தாள் - அருளாற்றல், இமைத்தல் - இயற்கையாகக் கண் மூடி விழித்தல். இமைப்பொழுது, மிகச் சிறிய கால அளவைக் குறிக்கும். கோகழி - பசுத்தன்மை கழிதல். இப்பொருளில் அது திருவாவடுதுறையைக் குறிக்கும். கோ - பெரிய, கழி - துறை. இப்பொருளில் அது திருப்பெருந்துறையைக் குறிக்கும். கோகழி, இத்திருப்பதிக்கே பெருவழக்கான பெயர். திருப்பெருந்துறை யென்ற பொருள், அடிகள் வரலாற்றிற்கு மிகவும் பொருத்தமானது. மணி - மாணிக்கம். அது இரத்தினங்களுட் சிறந்ததாதல் பற்றித் தலைமையையுங் குறிக்கும். ஆகமம் - ஆகமப் பொருள். ஆரியச்சொல். ஆகமம் காமிகம் முதலாகிய இருபத்தெட்டாம். ஆகமம், வீட்டு நூலாதலின் கடவுள், ஆகமப்*

வேகங் கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க.
ஈச னடிபோற்றி எந்தையடி போற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கு மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
ஆராத வின்பம் அருளுமலை போற்றி

*பொருளாயினமை கூறினார். "அண்ணிப்பான்" என்பதற்கு அணுகி நிற்பானென்று பொருள் கொள்வாருமுளர். இறைவன் ''இறு'' என்பதனடியாகப் பிறந்தது, இறு - தங்கு. முழு முதற் கடவுள் ஒன்றே யாதலால் ஏகன். எண்ணிறந்த அருட்கோலங்களை உடையதால் அநேகன்.*

***உரை (6-10):-*** *(உய்தி கூடுதற்கு அருட்குரவனை நாடி யலைந்த மனத்தின்) விரைவைத் தொலைத்துத் (திருவருள் தந்து) ஆட்கொண்ட மன்னனது திருவடிகள் மேம்படுக. பிறவியை வேரறுக்கவல்ல தலைக்கோலப் பெருமானுடைய வீரச் சிலம்பு நிறைந்த திருவடிகள் சிறந்து விளங்குக. (அன்பிற்குப்) புறமாயுள்ளவர்கள் (அணுக வொண்ணாத) தூரத்தி லுள்ளவனுடைய அழகிய மெல்லடிகள் வெற்றியுடன் திகழ்க. கைகூப்பித் தொழுவார் தமது நெஞ்சத்தில் (நினைந்து நினைந்து) களிப்படைதற் கேதுவாகிய அரசனுடைய திருவடிகள் (நிலை பெற்றுச்) சிறக்க; தலை குவித்து வணங்குவாரை மேன்மை யடைவிக்கும் புகழுடையானது திருவடிகள் வெற்றியுடன் மிளிர்க.*

***குறிப்பு (6-10):-*** *வேகம் - வடசொல் - மனவேகம் - விரைவு. பிஞ்ஞகம் - தலைக்கோலம், பிஞ்ஞகம் - பின்னகம் - பின் + நகம் (தலையின்) பிற்பகுதியில் விளங்கும் அணி. இறைவனுக்குப் பிறை அவ்வணியாகு மென்க. "பெய்கழல்" என்பதில், "பெய்" மிகுதியாகச் சாத்தப்படுதலைக் குறிக்கும். இறைவனது ஒப்பற்ற வெற்றிச் செயல்களைக் கண்ட விண்ணவரும் வீர அன்பர்களும் அவன் திருவடிக்கண் கழல்களைச் சாத்தினமை குறிப்பித்தவாறாம். கழல், திருவடிக்கு ஆகுபெயர். உள்-உள்ளம். கரங்குவித்தல் பெரும்பாலும்*

சிவன் அவன்என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் மோய வுரைப்பன்யான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழல்இறைஞ்சி

*நெஞ்சிற்கு நேரே புறத்து நிகழ்தலின், அது அகமகிழ்வின் விளைவாயிற்று. சிரம், உயர்ந்த உறுப்பாகலின், ஓங்குவித்தல், சிரங்குவிதலின் பயனாகக் கூறப்பட்டது. வேகம் கெடுத்தல் - பசுபோதத்தைத் திருநோக்கத்தால் தீட்சித்தல்.*

***உரை (11-16):-*** *ஆண்டவனுடைய திருவடிகள் (நம்மைக்) காப்பனவாக; நமது அப்பனுடைய திருவடிகளுக்கு வணக்கம். ஒளி மேனியனுடைய திருவடிகளுக்கு வணக்கம். மங்கலப் பொருளாகிய சிவபெருமானுடைய செவ்விய பாதங்களுக்கு வணக்கம்; அன்பிலே விளங்கி நின்ற மாசிலாதவன் திருவடிகளுக்கு வணக்கம்; வஞ்சப் பிறவியை வேரறுக்கும் வேந்தன் திருவடிகளுக்கு வணக்கம்; அழகு நிரம்பிய திருப்பெருந்துறையில் வீற்றிருந்த நமது இன்பன்றிருவடிகளுக்கு வணக்கம்; தெவிட்டாத இனிமையை (ஆறாக) நல்கும் மலைபோலும் பெருமான் (நம்மைக்) காக்க. கழல் - ஆகுபெயர் - திருவடி.*

***குறிப்பு (11-16):-*** *ஈசன், ஆளுவோன் என்று பொருள்படும் வினையடி யாய்ப் பிறந்தது. தேசு - ஒளி. நிமலன் - மலமில்லாதவன். மாயம் - வஞ்சனை, நிலையாமை. எடுத்த, பிறவி நிலையாமையானும், வரும் பிறவி யாதென்றறியப் படாமையானும் "மாயப் பிறப்பு" என்றார். தேவன் - தே + அன் - இனிமையன், தேவன் என்னுஞ் சொல் வடமொழியிலே ஒளியுருவினன் என்று பொருள்படுமென்க. ஆராத - உண்டு நிரம்பாத, 'மலை' என்றமையால், உரையுள், இன்பம், ஆறெனப் பட்டது. ஈசன் - ஈசுவரன் என்பதன் திரிபு. போற்று - புகழ், வணங்கு. போற்றி - வணக்கம். இரட்சிப்பதற்காக வணங்கும் துதி.*

***உரைநடை (17-22):-*** *21, 22-வது அடிகளை 17, 18-வது அடிகளின் பின் சேர்த்துக்கொள்க. சிந்தை மகிழ, முந்தை வினை முழுதும் ஓய, யான் சிவபுராணந்தன்னை உரைப்பன்.*

***உரை (17-22):-*** *சிவபெருமானாகிய முழுமுதற் கடவுள் எனது நினைவின் கண் நிலைபெற்றிருந்த காரணத்தால், (என் செயலற்று) அவனது திருவருட்டுணை கொண்டு, அவனது திருவடிகளைத்*

விண்ணிறைந்து(ம்) மண்ணிறைந்து(ம்) மிக்காய் விளங்கொளியாய்
எண்இறந்து எல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்

---

*தொழுது (இயற்றிய நற்றவத்தின் பயனாக), நெற்றிக்கண் முதல்வன் ஆசிரியனாக எழுந்தருளி வந்து தனது அருட்பார்வை நல்கவே (சிவஞானம்) பெற்று, மனத்தாற் கிட்ட வொண்ணாத (மாறிலா) அழகு நிறைந்த அவனது திருவடிகளைப் பணிந்து, எனது நெஞ்சம் மகிழ்ச்சியடையவும், முற்பிறவியிற் செய்த எனது ஊழ்வினை முற்றிலும், ஒழிந்து போகவும், சிவனது பழமையான அருட்செயல் முறையினை யான் சொல்லுவேன். சிவன் - சாந்தம், மங்கலம், இன்பம் என அத்தனை குணங்களையும் ஒருசேர உடையவன் - எல்லார் உள்ளத்திலும் தங்குபவன்.*

***குறிப்பு (17-22):-** "அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்" - அப்பர். "சிவனவன்" என்பதில் "அவன்" என்பது பல்சமயத்தாரும் பொதுவாகக் குறிக்கும் முழுமுதற் கடவுள் என்று பொருள் படுவதாகும். திருவருள் பெற்ற காலையும், எடுத்த உடம்புகொண்டு நுகர்தற்குரிய முன்வினைப்பயன் எஞ்சி நிற்றலின், "முந்தைவினை முழுதும் ஓய" என்றார். சிவஞானம் பெற்ற பெரியோருக்கு அறிவு புறத்தே சென்ற காலை, இறை புகழ்பாடுதல் எண்ணத்திற்கின்பம் பயத்தலின், "சிந்தை மகிழ" என்றார். இறைவனது ஞானத்தைப் பெறுதற்கு முன்னேயே, சரியை, கிரியை, யோகமென்னும் நற்றவ வழியில் நிற்றற்கு அவன் திருவருள் வேண்டற்படுமாதலின் "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றார். ஞானம் பெற்றபின் ஆற்றப்படும் சுட்டிறந்த வணக்கம் எண்ணுதற் கெட்டா'' என்பதாலுணர்த்தப்பட்டது.*

***உரை (23-25):-** (மேலுள்ள) வானுல (கெங்கும்) நிறைந்தும், (கீழுள்ள) மண்ணுல (கெங்கும்) நிறைந்தும், அவற்றிற் கப்பாலுமாய் விளங்குவானே, (எங்கும்) திகழ்கின்ற ஒளிமேனியனே, கணிக்கப்படுஞ் சுட்டுப்பொருளனைத்தையுங் கடந்து நிற்கும் அளவிலாத் தன்மையனே, நினது (ஒப்புயர்வற்ற) பெரிய புகழினை (அறிவு விளக்கத்தைத் தடை செய்யுந்) தீயவினையுடையேன் எடுத்தோதும் வகை யாதுந் தெரியாதேன்.*

வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டுஇன்று வீடுற்றேன்
உய்யஎன் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே

***குறிப்பு (23-25):-*** *பெருஞ்சீர் - மெய்ம்மையான புகழ். "நிறைந்து" என்பது இறைவனது பூரணமான அறிவுஞ் செயலும் விளங்குவதைக் குறிக்கும். அது காற்று, வான் முதலிய சடப்பொருளின் வியாபகம் போன்ற விரிவினைக் குறியாது. இறைவனது வியாபகத்தின் ஒரு பகுதியுள் உலகெலாம் அடங்குதலின் "மிக்காய்" என்றார். "தேசமார் ஒளிகளெல்லாம் சிவனுருத்தேசது" என்ற கருத்துப்பற்றி, "விளங் கொளியாய்" என்றார். தத்துவம், புவனம் முதலியன எல்லாம் நூல்களாற் கணிக்கப்படுவன. அவற்றைக் கடந்த இறை நிலை, "எண்ணிறந்து" என்பதாற் குறிக்கப்பட்டது. "வினையினீங்கி விளங்கிய அறிவின்" என்றமையால் வினை, அறிவு விளக்கத்திற்குத் தடையென உரையுட் கூறப்பட்டது. உயிர் இயற்கையாகவே சிறு தொழில் உடையது. தன் சிறு செயல்கொண்டு இறைவன் பெருஞ் செயலை யளக்கவல்ல தன்றென்பார் "பொல்லா வினையேன்" என்றார்.*

***உரைநடை (26-31):-*** *எம்பெருமான் (பல்) கல்லாய்ப் புல்லாகிப் பூடாய் மரமாகிச் செல்லாஅ நின்ற இத்தாவரத்துள் புழுவாய்ப் பாம்பாய்ப் பறவையாய்ப் பல்விருகமாகி மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய் வல்அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச் செல்லா அநின்ற இச் சங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன். கல் முதற் படைப்பாகும். உயிர்ப்பிறப்புக்கு முன்பே மலை இருந்துள்ளது.*

***உரை (26-31):-*** *(உலகத் தோற்றத்தில்) கற்பாறை யணுக்களில் அடங்கிக் கிடந்து, (பின்) புல்லாகியும் அடர்ந்த புற் செடிகளாகியும், மரங்களாகியும் (படைக்கப்பட்டு) நிகழ்கின்ற (பல்கோடி) நிலையியற் பொருள்களுள்ளும், புழு, பாம்பு முதலிய ஊர்வனவாகியும், பறப்பனவாகியும், விலங்குகளாகியும், மக்களாயும், பேயினங்களாயும், பூதகணங்களாயும், வலிய அசுரராயும், முனிவராயும், விண்ணவராயும் (படைக்கப்பட்டு) இயங்குகின்ற பல்கோடி பிராணிகளுள்ளும் (அடங்கிய) எல்லா வகையான பிறப்பினும் உடலெடுத்திறந்துழன்று*

வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவுஇறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்

---

*அலுத்தேன். தாவரம் - நிலையான பொருள். சங்கமம் - அசையும் பொருள்.*

***குறிப்பு (26-31):-*** *உயிர்த் தோற்ற நூலார் முறைப்படி பிறவிகளைத் தொகுத்துப் பொருள் கூறப்பட்டது. விருகம் - மிருகம் - விலங்கு. "பல்" என்ற அடையை எங்குங் கூட்டலாம். பூடு - பூண்டு.*

***உரைநடை (32-35):-*** *முதலடியை இறுதியடியாகக் கொள்க.*

***உரை (32-35):-*** *(ஆணவ விருளிற் கிடந்த யான்) உடம்பெடுத்துழன்று, பக்குவம் வந்தகாலை உன் திருவடியைக் கூடிப் பிழைக்கும் வண்ணம், எனது நெஞ்சத்துள் (ஐந்தொழிற்குங் காரணமான) ஓம்என்ற முது மொழிவடிவாய் நின்ற உண்மையனே, கட்டிலாதவனே, (அறவுருவாகிய) காளை மேலெழுந்தருள்பவனே, அறிவு நூல்கள் (நின்னுடைய பேரளவினைக் காணமாட்டாது) ஐயனே என்றலற, (அவற்றின் எல்லையைக் கடந்து) உயர்ந்தும் தாழ்ந்தும் விரிந்தும் (விளங்குகின்ற பெருமையனாய் அவற்றாற் காண வொண்ணாத) நுட்பப் பொருளாய் எவற்றினுங் கலந்துள்ளவனே, (பிறவியில் உழலாது) நிலைப்பா யிருத்தற் கேதுவாய உனது அழகிய திருப்பாதங்களை இப்போது காணப்பெற்றுப் பாச நீக்கம் அடைந்தேன். வேதங்கள் பாச ஞானமாதலின் இறைவன் அவற்றிற்கு அகப்படான்.*

***குறிப்பு (32-35):-*** *உயிர்கள் உய்யுமாறு இறைவன் ஐந்தொழிலியற்றுமிடத்து, உயிர்க்குயிராய் நின்று ஓங்காரத்தின் பிரிவாகிய அகரம், உகரம், மகரம், விந்து, நாதமென்பவற்றின் வாயிலாகக் கருவிகளை யியக்குவதாலும், ஓங்காரம், இறைவனது சிறந்த மந்திரவடிவமாதலாலும், "உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற" என்றார். இறைவன் ஐந்தொழிலியற்றினாலும் தனது மெய்யியல்பில் மாற்றமிலானாகலின், "மெய்யா" என்றார். அங்ஙனமிருத்தற்குக்*

நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் றன்னை

---

*காரணம் இயல்பாகவே கட்டிலாமையாகலின், 'விமலா' என்றார். வி-இன்மை, மலம்-கட்டு. இறைவன் நடுநிலையன் என்பார், "விடைப்பாகா" என்றார். அவன் பெரியதிற் பெரியதாய்ச் சிறியதிற் சிறியதாய், எங்கும் கலந்து நிற்கு முறை, நூலுணர்வானறியப் படாமையின், "வேதங்கள் ஐயா என" என்றார். "மெய்யேயுன்" என்பதில், மெய் - நிலைப்பு, ஏய் - பொருந்து; பொன், மாற்றமிலா ஒளி நயமுடையது. வீடு - (பாசத்தினின்று) விடுபடுதல்.*

***உரை (36-40):-*** *வெப்ப முடையவனே, குளிர்ச்சி யுடையவனே, (அத்துவிதக்கலப்பால்) உயிராய் விளங்கும் மாசிலாதவனே (யான் பற்றிய) நன்மையிலாதனவும் நிலையாதனவு மாகியவைகளெல்லாம் என்னைவிட்டு நீங்கியொழியுமாறு குருவாய் வந்து அருள் புரிந்து மெய்யறிவாய் விளங்குகின்ற உண்மையொளியே, எவ்வகையான அறிவும் விளங்கப்பெறாதேனுக்குப் (பேரறிவின் பயனாய்) பேரின்பம் ஈந்தருளும் பெருந்தன்மையனே, (பொய்யை மெய்யென வுணருந்) திரி புணர்ச்சியை நீங்கச் செய்யுந் தூய அறிவானவனே.*

***குறிப்பு (36-40):-*** *"வெய்யோய்" என்றது ஞாயிறுபோல ஆண் தன்மை யுடையனாதல் குறித்தற்கு; "தண்ணியாய்" என்றது திங்கள் போலப் பெண் தன்மையுடையனாதல் குறித்தற்கு. இயமானன் - உயிர். இது வடமொழியில், வேள்வி யியற்றுவானுக்குச் சிறப்புப் பெயராய் உயிர்க்குப் பொதுப் பெயராய் வழங்குவது. உயிர்க்குயிராய்க் கலந்து, உயிர்களை ஆணாகவும் பெண்ணாகவும் பிறப்பித்தற்குரிய சிவமுஞ் சத்தியுமாய் இறைநிலை குறிக்கப்பட்டது. அங்ஙனம் உயிரொடு கலந்து நின்றும், தனது தூய இயல்பு மாறாதவனென்பார், "விமலா" என்றார். பொய் - தீயவற்றையும், நிலையாதவற்றையும் குறிக்கும். பாச நீக்கத்தில் விளங்கும் மெய்யறிவு பதி ஞானமெனப்படும். இறைவன் கதிரவன் போலவும் மெய்ஞ்ஞானம் கதிர்போலவு மிருத்தலின், "மெய்ஞ்ஞான மாகி" என்றார். எவ்வகையறிவு மில்லாநிலை, ஆணவத்தோடு கிடந்த உயிரின் தனிநிலை. அஞ்ஞானமென்பது, நல்லறிவுக்கு மாறாய*

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே

*புல்லறிவு. நல்லறிவு என்பதில் "நல்" என்பது "பெரும் பயன் தரும்" என்ற பொருளுடைத்தென்றலும் ஒன்று. "நற்றாள்" என்பதிற்போல.*

***உரைநடை (41-43):-*** *அழிப்பாய், என்னைப் போக்குவாய், நின்தொழும்பிற் புகுவிப்பாய் அருள் தருவாய். ஆக்கம் - படைப்பு - முதல்வன்.*

***உரை (41-43):-*** *படைக்கப்படுதல், ஒருகால அளவாகிய நிலைநிறுத்தப்படுதல், ஒடுக்கப்படுதல் என்பன இல்லாதவனே, எல்லா உலகங்களையும் நீயே படைப்பாய், நிறுத்துவாய், ஒடுக்குவாய் (மல பரிபாகம் வரும்வரை) என்னைப் பிறவியிற் செலுத்துவாய். (உய்தி கூடுங்காலம் வருங்கால்) நின் திருத் தொண்டாகிய நற்றவத்திற் புகுவிப்பாய். (பின்னர், பிறவியறுதற் கேதுவாய) நின் திருவருளைத் தருவாய். அளவு - ஆகுபெயராகக் காத்தலைக் குறிக்கும்.*

***குறிப்பு (41-43):-*** *தொழும்பு - தொண்டு. இறைவனது ஐந்தொழிலும், அவற்றை யாற்றவல்ல அவனது தனிச்சிறப்பும் இங்கே கூறப்பட்டன.*

***உரை (44-48):-*** *(பூவின்) மணம்போல நுட்பமாயிருப்பவனே, நீ, தூரத்திலிருப்பவனுமாவாய், அருகே யிருப்பவனுமாவாய், (எவ்வாறெனில்) சொல்லையு மனத்தையுங் கடந்து நிற்கின்ற இரகசியப் பொருளாயுள்ளாய், எனினும், நின் மெய்யடியார்கள் உள்ளத்திலே சிறப்பாக விளங்கி (ப் பசுவிலே உடன்) கறந்த புனிதமான பாலோடு சர்க்கரையும் நெய்யுங் கலந்து இனிமை பயந்தாற் போல, இன்பம் ஊற்றெடுக்குமாறு நிலைபெற்றருளி, எடுத்த பிறவியை யொழிக்கும்*

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதா ருள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே.

*எங்கள் பிரானாயுள்ளாய். சுவை குன்றாமையின் மிகுதியை விளக்க 'கறந்த பால்' என்றார்.*

*குறிப்பு (44-48):- கண்ணிற்குத் தோன்றும் பூவிலே அதன் மணமானது தோன்றாது கலந்திருத்தல் போல, உலகுயிர்களிலே இறைவன் தோன்றாது கலந்திருத்தல் குறித்தவாறாம். நேர் -நுட்பம்; ஒப்பு என்றும் பொருள்படும். "மணம் போன்றிருப்பவனே" என்றும் பொருள் கொள்க. தேன் - இன்பத்திற்கு அறிகுறி யென்க. ஊறி - உற. அறிவிற்குப் பாலையும், செயலுக்குக் கன்னலையும், விழைவிற்கு நெய்யையும் உவமை கூறுவதுண்டு. நெய் - தேன்.*

*உரை (49-50):- எமது பிரானே, (பூதங்களைத் திருமேனியாகக் கொண்ட நீர் அவற்றிற்குரிய) ஐந்து நிறங்களையு முடையாய், (அன்பர்க்குப் பூத நிறங்களோடு தோன்றும் நீ) செருக்குடைய வானோர் உன்னைத் துதித்தபோதும், நீ அவர்கட்குத் தோன்றாது ஒளிந்திருந்தனை.*

*குறிப்பு (49-50):- பொன்னிறம், வெண்ணிறம், செந்நிறம், கருநிறம், புகைநிறம் என்பன நிலம், நீர், தீ, கால், வான் என்பவற்றிற்கு முறையே நிறமாகக் கொள்க. இறைவன் ஓர் இயக்கன்போலத் தோன்றி நின்ற காலை, விண்ணவர் அதனை அறிந்திலர் என்ற கதை கேனோபநிடதத்துட் காண்க.*

*உரைநடை (50-61):- விமலா, வல்வினை யேன்றன்னை மறைந்திட மூடிய இருளைமாய, அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டி, புழுவழுக்குப் புறந்தோல் போர்த்து மூடி மலஞ்சோரும் ஒன்பது வாயிற்குடிலை நல்கி மலங்கப் புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய விலங்கு மனத்தால் உனக்குக் கலந்த அன்பாகிக் கசிந்துள்ளுருகும், நலந்தானிலாத சிறியேற்கு நிலந்தன் மேல் வந்தருளி ....... தத்துவனே.*

*உரை (50-61):- குற்றமிலாதோனே! கொடிய வினையேனது*

இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தைபெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே.

---

*(அறிவிச்சை செயல்கள்) மறையும்படி மூடி இருளாகிய ஆணவம் மாயும் வண்ணம், நல்வினை தீவினை யென்னும் காண்டற்கும் கடத்தற்குமரிய இருவகைக் கயிறுகளிலே பிணிப்புற்றுத் தன்னகத் தெங்குமுள்ள புழுக்களும், மாசுகளும், புறத்தேயுள்ள தோலினாற் போர்த்து மூடப் பெற்றுத் தனது நவத்துவாரங்களிலும் அழுக்கு வடியுங் குடிசையை எனக்குக் கொடுத்தருளி, யான் கலங்கும்படி ஐம்பொறியறிவு (தத்தம் வழியில்) என்னை யிழுத்துத் தந்திரமாகக் கேடு செய்தலினாலும், அவற்றின் சார்பாய் நின்று உன்னை யணுகவொட்டாது தடைசெய்யு மனத்தின் இடர்ப்பாட்டினாலும், உன்னோடு கலந்துறவாகி உள்ள முருகி அழுது தொழுதலாகிய நற்செயல் யாதுமில்லாத சிறியனேன் பொருட்டு, இந்நிலவுலகத்தே (அருட்குருவாய்) எழுந்தருளி வந்து உனது புகழ்மிக்க திருவடிகளை எனக்குக் காட்டியருளி நாயினுங் கீழ்ப்பட்டவனாய்க் கிடந்த அடியனேற்குத் தாயினு மேம்பட்ட கருணை வடிவான மெய்யனே. ஆணவச் சேற்றிலிருந்து எடுக்க இறைவன் செய்த உபகாரங்கள் விளக்கப்பட்டன. விலங்கு மனம் - விலக்கும் மனம். இறைவனிடம் செல்லாது தடுக்கும் மனம்.*

***குறிப்பு (50-61):-*** ***“இருளை” என்பதில் ஐ-சாரியை, அதனை வேற்றுமை யுருபாகக் கொள்ளின், “மாய” என்பதைப் பிறவினைப் பொருளில் வந்ததாகக் கொள்க. தான் மலத்தின் வேறாதல் குறிப்பான், ‘‘வல்வினையேன் தன்னை’’ யென்றார். ‘குடிலை’ என்பதில் ஐ இரண்டாம் வேற்றுமை யுருபு. மலங்க - கலங்க. விலங்கு - தடை. கசிந்து - அழுது. நீள் - நீண்ட - புகழாற் சிறந்த. நாய், உடையானைச் சார்ந்தொழுகும்; உடையானைத் தான் சார்ந்தொழுகாமை கருதுதலின், ‘‘நாயிற்கடையாய்’’ என்றார். தாய் - கைம்மாறு கருதாது உதவுமியல்பினள். அவள் என்றும் யாண்டும் உதவ இயலாமையின், என்றும் யாண்டு முதவு மெய்யன் தாயிற் சிறந்தானாதல் காண்க.***

ஆற்றின்ப வெள்ளமே அத்தா மிக்காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே.

---

*ஒன்பது வாயில் - இரு கண்கள், இரு காதுகள், இரு மூக்குத் துவாரங்கள், வாய், கருவாய், எருவாய்.*

***உரை (62-69):-*** *குற்றமில்லாத ஒளியானது, இதழ்களாக மலரப் பெற்ற பூப்போன்ற ஒளிமேனியனே, குரு முதல்வனே, இனிமை நிறைந்த பிறவி மருந்தே, சிவலோகனே, கட்டுப்படுதற் கேதுவாகிய அவாவினை வேரறுத்து அறிவினை விரிவுறச் செய்யு மேலோனே, காதலொடு கூடிய இரக்கம் வைத்து என் மனத்துள்ள களங்கம் ஒழியும்படி (எனது உள்ளத்தை விட்டு) நீங்காது விளங்கிய பேரருள் வடிவாகிய (வற்றாதோடும்) பெரிய ஆறு போன்றவனே, (உண்ண உண்ணத்) தெவிட்டாத இன்னமுதம் போன்றவனே; அளவிலடங்காத பெருமையுடையவனே, ஆய்ந்தறியாதா ருள்ளத்திலிருந்தும் அவர்கட்குப் புலனாகாத சோதியே, எனது கல்மனத்தைக் கரைத்துத் தண்ணீராக உருகும்படி செய்து பிரிவாற்ற வொண்ணாத உயிர்க்குயிராய் நின்றவனே. ஓர்தல் - கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து ஒன்றியிருந்து நினைத்தல்.*

***குறிப்பு (62-69):-*** *இறைவனது திருமேனி ஒளிநயமும் மென்மையு முடைமையால், ஒளியாலாகிய பூவிதழ் போன்ற உறுப்புடைய திருவடிவமென்று குறித்தார். தேசன் - ஆசிரியன். தேன் - இனிமை. அமுது - சாவாமருந்து, பாரிக்கும் - விரிக்கும், வளர்க்கும். ஆரியன் - பூசிக்கத்தக்கவன், மேலோன். நேசம் - தாயன்பு போன்ற விருப்பம். தேசு - ஒளி. நேசம் - அன்பு - காதல்.*

***உரை (70-78):-*** *(உலகுயிர்களினால் வரும்) இன்பமுந் துன்பமுமில்லாதவனே, (அன்பர் பொருட்டு) அவற்றையுடையவனே, கலப்பினால் எப்பொருளுமாய், பொருட்டன்மையால் ஒன்றுமல்லாத வனாயுமிருக்கின்ற அறிவுருவனே, அடர்ந்த இருள் போன்றவனே, தோன்றாத பெருமையை யுடையவனே, (எப்பொருளின் தோற்றத் திற்கும்) மூலகாரணனே, (எவற்றையுமொடுக்கும்) இறுதிக் கடவுளாயும், எப்பொருளினு முள்ளீடாயுமிருந்து, தனக்கொரு முதலு முடிவு நடுவுமில்லாதவனே, என்னைவலிய இழுத்து ஆட்கொண்டருளிய*

வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப
ஆற்றேன்எம் மையா அரனேஓ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்

*எமது அப்பனாகிய பெருந்தன்மையனே, கூரிய மெய்யறிவினாலே கேட்டுச் சிந்தையுட் கொண்டு தெளிந் துணர்வாருடைய உள்ளத்தே சுட்டிறந்தறியப்படும் பொருளே, சுட்டப்படாத அனுபவப் பொருளே, நுகரப்படும் நுட்பப் பொருளே, ஒன்றை நாடிப் போதலும் அதனை யடைதலும், அதன்கணின்று மீளுதலு மில்லாத நன்மையனே, உயிர்களை உய்தி கூட்டுவிக்கும் எமது அரசனே, நீ அங்ஙனஞ் செய்வதை (உயிர்கள் தமதறிவாற்) காணுதற்கரிய பெரிய அறிவே. சோதி - ஒளிப்பிழம்பு. சுடர் - சோதியைத் தாங்கி நிற்கும் விளக்குச்சுடர். சுடர் - ஆதாரம். சோதி - ஆதேயம்.*

***குறிப்பு (70-78):-*** ***இறைவன் தானே இன்பமுடையவன். பிற பொருளால் வரும் இன்பத்தை நாடுபவனல்லன். அவன் துன்பமில்லாதவ னென்பது தெளிவு. தஞ்செயலற்ற அன்பர்க்கு வருமின்ப துன்பங்களைத் தன்னுடையனவாக ஏற்றுக் கொள்ளும் இயல்பு இறைவற்குக் கூறப்படுதலில் "அவையுள்ளானே" என்றார். இதற்குக் காரணத்தை "அன்பருக் கன்பனே" என்பதாற் குறித்தார். சோதி - அறிவு. உலகப்பற்றை விட்டு இறைவனைப் பற்றக் கருதும் பரிபாக முடையார்க்கு அவன் கதிரவனுதயத்திற்கு முன் உளதாங் காரிருள்போல்வா னாதலின், "துன்னிருளே" என்றாரென்பதுமுண்டு. ஐம்புலனால் ஒரு சிறிதும் அறியப்படாமை பற்றித் "துன்னிருளே" என்றாரென்ப. "உன்றனை யெதிரே கண்டும் அம்புயத்தோனுணர்ந் திலன், மால் சொலவுணர்ந்தான்'' என்ற படி இறைவன் வெளிப்படையாகத் தோன்றினாலும், தன்னை உயிர்கட்கு அறிவித்தாலன்றி, உயிர்கள் அவனையறிமாட்டாத இயல்பின வாதலின், "தோன்றாப் பெருமையன்" என்றார். இறைவன் பல அருளுருவமெடுத்துத் தோன்றி மறைதலின், ஆதியுநடுவு மந்தமு முடையானென்பாரு முளர். நடு, என்ற சொல், அந்தரியாமித்துவங்***

சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து. 95

திருச்சிற்றம்பலம்

*குறிக்குமென்பர். இறைவன் எவற்றினுள்ளுமிருத்தலின் அவை காக்கப்படுகின்றன வென்ப. குதிரை வாங்கப் போன அடிகளை வலியத் தன்பால் வருவித்து ஆட்கொண்டமையின் ''ஈர்த்து'' என்றார். வினையிலே கிடந்தேனைப் பக்குவகாலம் வருமுன்னரே ஆட்கொண்டானென அடிகள் பிறவிடங்களிற் கூறுதல் காண்க. தீவிர உணர்ச்சியைக் கூர்ந்த மெய்ஞ்ஞானம் என்றார் போலும். நோக்கு, அறிவையும், உணர்வு, அனுபவத்தையும் குறிக்குமென்ப. "நோக்கு" என்பது இறைவனது அகண்ட வியல்பையும், "நுண்ணுணர்வு" என்பது அவனது அதிநுட்ப வியல்பையுங் குறிக்கு மென்பாருமுளர். "போக்கும் புணர்வும் வரவுமிலா" என உரைநடை கொள்க.*

***உரைநடை (79-83):-* "மாற்றமாம் வையகத்தின்" என்பதை "மிக்காய்" என்பதன் முன்வைக்க. மாற்றம் - வளர்ச்சியும், தேய்வுமாகிய பரிணாமம்.**

***உரை (79-83):-* ஆற்றின் தூய புனல்போலத் துன்பங்கலவாத இன்பப்பெருக்கே, அப்பனே, மாறுபாடடைகின்ற உலகத்திற்கு அப்பாற்பட்டவனாய் நிலைபெற்ற விளக்கமுடைய கதிரொளிப் பிழம்பாய், மொழியாலுணர்த்துதற்கரிய நுட்ப அனுபவமாய், உலகத்தே வெவ்வேறாகக் காணப்பட்டு வந்து முடிவாக அறிவாய்த் தெளியப்படுந் தெள்ளியனே, (கேட்டுச் சிந்தித்துத்) தெளிந்த விடத்தே விளங்குந் தெளிவான பரம்பொருளே, எனது உள்ளத்திலே ஊற்றாகத் ததும்பிய உண்ணத் தெவிட்டாத அமுதமே, (காட்டிலும் வீட்டிலும் என்னை அடிமையாக) உடையவனே. உயிரின் பரிணாமத்துக்குத்தக வேறுவேறு திருவுருவில் வந்து அருள்பவனே!**

***உரை (84-92):-* எமது தலைவனே, வெவ்வேறு திரிபுகளுடைய ஊனுடம்பினுள்ளே கிடத்தலை யான் பொறுக்க மாட்டேன். (அவ்வுடம்பைத் தொலைக்கவல்ல) அரனே, ஓலம் என்று கூவிக் கூவி, வழிபட்டுப் பாடி நினைத்திருந்து நிலையாதவற்றின் பற்றற்று நிலைப்பொருளோ டொன்றுபட்டவர்கள் மீண்டும் இவ்வுலகில் வந்து வினைக்கீடாய பிறப்பினையடை யாமே, வஞ்சராகிய ஐம்புலவேடச்**

*சிறுமனையாய உடம்பை முற்றிலும் தொலைக்குந் திறமையனே, நடுஇரவு போன்ற, முழுது முடிவுற்ற காலத்தே தனது திருக்கூத்தினைப் பழகி(ப்பின் தோற்றக் காலத்தே) பெருநடம் புரியும் முதல்வனே, (நிலவுலகில்) தில்லை மன்றினுளாடுவோனே, தெற்கின்க ணுள்ள பாண்டி நாட்டை யுடையவனே, துயருடைய இப்பிறப்பினை யொழிப்போனே ஓலம் என்று, சொல்லாற் கூற வொண்ணாதானை வழுத்தி. வேற்று உடம்பு - எடுத்த பிறவிகளுக்கேற்ப வேறுபட்ட உடம்பு. விகார உடம்பு - பாலனாய்க் குழைந்து, காளையாய் இறுகி, முதுமையாய் நரைத்து, திரைத்துப் பரிணாமப்படும் உடம்பு. விடக்கு உடம்பு - பூசுவ பூசாமல், கழுவாமல் புலால் நாறும் தசைத்தாதுக்களாலான உடம்பு. குரம்பை - உடல்.*

***குறிப்பு (84-92):-*** ***வேற்று விகாரம், அறிவு நிலைக்கு மாறாயுள்ள திரிபு என்று பொருள் கொள்ளுவாருமுளர். விடக்கு - ஊன். கட்டழித்தல் - முற்றிலு மழித்தல். தென் - இயற்கை யடை. அரன் - பாசத்தை யழிப்பவன். பயிலுதல் போதலின் (பயின்று) என்றார்.***

***உரை (93-95):-*** *அவனது திருவருள் வயமாய் நின்று மொழிந்த இக்கலி வெண்பாட்டின் பயன்தெரிந்து ஓதுபவர்கள் சிவலோகத்தினுள்ளே புகுவார்கள். ஆண்டுச் சிவ முதல்வர் திருவடிக்கீழ் அன்பர் பலரும் வணங்கிப் புகழுமாறு இருப்பார்கள்.*

***குறிப்பு (93-95):-*** ***அடி - அருள். பயன் உணர்ந்தியம்புவார் பயனைப் பெறுதற் குரியராவர். திருவடி என்பது இறைவன் அறிவு செயல்களைக் குறிக்கும். உயிரினறிவு செயல்கள் இறைவனுடைய வற்றின் அடங்கி நிற்றலே திருவடிக் கீழிருத்தலாமென்ப. சிவபுரமென்பது வீட்டினை யுருவகமாகக் குறிப்பதாய், சிவனொடு கலத்தலைக் குறிக்கு மென்ப.***

*தில்லையில் அருளிய*

## உ. கீர்த்தித் திருவகவல்

--------

*சிவனது திருவருட் புகழ்ச்சி முறைமை*

*நிலைமண்டில ஆசிரியப்பா*

*திருச்சிற்றம்பலம்*

2. தில்லைமூதூ ராடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோ ருலகுந்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்
என்னுடைய யிருளை ஏறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்பு மீதூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்

***கீர்த்தித் திருவகவல் - இறைவன் அன்பர்க்கருள் புரிந்த செய்திகளைக் கூறும் வாயிலாக அவன் புகழினை யியம்பும் அகவற்பா. இது தில்லையி லருளிச் செய்யப்பட்டமை, 'தில்லை' யென்று தொடங்கியதால் விளங்கும். கீர்த்தி - சிவனது திருவருட் புகழ்ச்சி. அதனை முறைமையாக அறிவிக்கும் அகவல் கீர்த்தித் திருவகவல்.***

*உரை (1-8):- தில்லையென்னும் பண்டைத் திருப்பதியின் கண்ணே கூத்தியற்றிய பொற்பாதங்கள் பலவகைப்பட்ட உயிர்கள் எல்லாவற்றி னுள்ளும் பொருந்தச் செய்தவனாகி, கணக்கில் அடங்காத தனது பல்கோடி அருட் பண்புகளும் சிறந்து தோன்றுமாறு வெளிப்பட்டு, மண்ணுலகிலும் விண்ணுலகிலும் (அதற்கு மேற்பட்ட) வானவர்கள் உலகிலும் பொருந்திய கலைகளைத் தோற்றுவித்தும் ஒடுக்கியும், என்னை மேற்கொண்ட அறியாமையை முற்றிலும் ஒழித்தும், அடியவர்கள் நெஞ்சத்திலே மெய்யன்பு பொங்கி மேற்படும் பொருட்டு அதனைத் தமதிருக்கையாகக் கொண்ட உறுதியுந் தலைமையும் (உடையனாகியும்). இறைவன் எங்கும் எல்லா உயிர்களிடத்தும் நீக்கமற நிறைந்து அறிவுருவாகக் காட்சி வழங்கியதைத் தெரிவிப்பது.*

*குறிப்பு (1-8):- பயின்றனன் என்பதில், பயிலுதல் பொருந்துதல்.*

மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன ஆகமந் தோற்றுவித் தருளியும்

*ஏற - முற்றிலும், கொள்கை - உறுதி. தில்லையானது ஐம்பூதங்களுள் வானைக் குறிக்குந் திருப்பதி. வான் வெளியிலே பிற பூதங்களடங்குவது போல, அருள் வெளியிலே தத்துவம், புவனம் முதலிய யாவும் அடங்கும். அவ்வருள் வெளியில் நடமாடும் அப்பன், படைப்புக் காலத்தில் உடம்பெடுக்கும் உயிர்களின் நெஞ்சத் தாமரையிலும் பொருந்திக் கூத்தியற்றுங்கால் எவ்வுயிருமியங்குவனவாம். தில்லை உலகிற்கிதய மென்றுங் கூறுப. தில்லை மரங்களடர்ந்த இடமாயிருந்தமை பற்றி அப்பெயர் ஏற்பட்டதென்ப. இறைவனது பல்குணங்கள் நல்லுயிர் கட்கு அங்கங்கே தோன்றுவன. கலைகள் சிறப்பாக அவனையடையும் வழியையுணர்த்துவன. உய்திகூடத் தகுதியுற்ற காலத்தே அவனே அறியாமையை முற்றிலுமொழிப்பன். பின்னர் அன்பர் நெஞ்சிற் குடிகொண்டு அதனை நீங்காது தலைமை பூண்டிருப்பன். இக்கருத்து இப்பகுதியிற்றெரிவிக்கப்பட்டது. இருள் - ஆணவமாகிய மூலமலம். மலநீக்கத்தின் பின் சிவப்பேற்றிற்குரிய அயரா அன்பே, மீதூரும் அன்பாகும். தன்னைப் பற்றிய அன்பரைக் கைவிடாத உறுதியும், ஆட்கொள்ளுந் தலைமையுமுடையா னென்பது கருத்து.*

***உரை (9-10):-*** *(புகழால் என்றும்) நிலைபெற்ற பெருமலையாகிய மகேந்திரமென்னு மிடத்திலே, (உமையம்மையார்க்குக்) கூறிய வீட்டு நூலை (உலகினர் பொருட்டுக்) காட்டியருளியும். இறைவன் அடியார்கள் ஈடேற பிரமாண நூல்களை அருளிய வரலாறு.*

***குறிப்பு (9-10):-*** *மகேந்திரம், பொதியைக்குத் தெற்கேயுள்ளதெனச் சிவதருமோத்தரங் கூறும். 'சொன்ன' என்பதற்கு மேலுலகிற் கூறப்பட்ட எனவும், தோற்றுவித்து என்பதற்கு எழுதுவித்து எனவும் பொருள் கொள்ளுவதுமுண்டு.*

***உரை (11-20):-*** *கல்லாடமென்னும் பதியிலே, இயற்கை நல்லியல் புடைய அம்மை வழிபட்ட திருவடியிற் கலந்து தோன்றி இன்னருள் புரிந்து அவளோடு பேரின்ப நட்புகொண்டு, பஞ்சப்பள்ளியென்னும் ஊரிலே பால்போலத் தூயமொழியுடைய உமையம்மையோடு கலந்திருந்து அடியவர் கட்குக் குறையாது வளரும் இனிய கருணையைப் பெருக்கியும், வேடன் வடிவங் கொண்டு முள்முருக்கம்பூப் போன்ற சிவந்த வாயினையுடைய அருட்சத்தியின் நெருங்கிய நகிலாகிய புனிதப் பொய்கையில் மூழ்கியும், வலைஞர்*

கல்லா டத்துக் கலந்தினி தருளி
நல்லா ளோடு நயப்புறவு எய்தியும்
பஞ்சப் பள்ளியிற் பால்மொழி தன்னொடும்
எஞ்சாது ஈண்டும் இன்னருள் விளைத்தும்
கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்
விராவு கொங்கை நற்றடம் படிந்தும்
கேவேட ராகிக் கெளிறது படுத்தும்
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உற்றஐம் முகங்க ளாற்பணித் தருளியும்

*வேடம் பூண்டு (வலை வீசிக்) கெளிற்றி மீனொன்றினை வலையுள் வீழ்த்தி அதன்பால் இருந்த பெரிய ஏட்டினுளவாகிய அருள் நூலை மீளப்பெற்றும், பின் இருபத்தெட் டாகமங்களாகிய அவைகளை மகேந்திர மலையில் ஐந்து திருமுகங் கொண்டு வீற்றிருந்து அவற்றின் வாயிலாக ஐந்து பெரு முனிவர்க்கு ஓதியருளியும்.*

*குறிப்பு (11-20):- நயப்பு - இன்பம், உறவு - நட்பு, வீட்டினை நல்குவாள் புரியுங்கருணை, குறையாது மிகுமியல்பிற்று. இன்பம், அதன் விளைவாகும். கிராதன் - வேடன். கிஞ்சுகம் - முள் முருக்கு. விராவு - நெருங்கு. தடம் - பொய்கை. படிதல் - மூழ்குதல், தவங்கிடந்த அருச்சுனனுக்கு அருள்புரியச் சென்ற காலை இறைவனும் இறைவியும் வேட்டுவ வடிவங் கொண்டு சென்றமை பாரதத்துட் காண்க. வேட்டையாடுகிறவனுக்கு நீர் வேட்கை மிகுதியுமுளதாகுமாதலின், அதனைத் தீர்த்தற்குரிய பொய்கை இஃதென அடிகள் கவிநயம்பற்றி யோதியருளினர். உய்தி கூட்டும் ஞானந்தருவது முலைப்பால்; ஞானத்துட் காணப்படுவது சிவமாதல்பற்றி, 'கொங்கை நற்றடம் படிந்' தென்றார். கேவேடர் - வலைஞர், மாவேட்டு, என்பதற்குப் பெரிய விருப்பத்தைத் தருவதாகிய என்றும் பொருள் கொள்ளுதலுண்டு. வேட்டு - விருப்பம். 'அவை தம்மை' என்றமையால் ஆகமம் பலவாதல் தெளிவு. முதற்கண், உமையம்மைக்கு ஆகமம் ஓதுவித்தகாலை, அம்மை, நந்தி முதலியோர் செய்த பிழைக்காக, அவர்கள் வெஞ்சொற் பெற்றனரென்றும், கெளிற்று மீனான நந்திப் பெருமான் ஆகம ஏட்டைக் கடற் கண் சுமந்து திரிந்தனரெனவும், இறைவன் வலைஞனாய் ஏட்டை மீளக் கொண்டானெனவுந் திருவிளையாடற்புராணங் கூறுவது காண்க. இரண்டாவது முறை, அகத்தியர் முதலிய ஆதி சைவக் குடி முதல்வராகிய ஐவருக்கும், ஐம்முகங்கள் வாயிலாக ஆகமங் கூறப்பட்டன. ஐவரும், ஐந்து*

நந்தம் பாடியில் நான்மறை யோனாய்
அந்தமி லாரிய னாய்அமர்ந் தருளியும்
வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றாயிர மியல்பன தாகி
ஏறுடை யீசன்இப் புவனியை உய்யக்
கூறுடை மங்கையுந் தானும்வந் தருளிக்

---

திருமுகங்களிலே ஒவ்வொன்றில் இறைவனை வழிபட்டமையால் 'உற்ற ஐம்முகங்களால்' என்றார். ஐம்முனிவராவார் :- அகத்தியர், காசிபர், கௌதமர், பாரத்து வாசர், கௌசிகர். ஐம்முகங்கள் - ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம்.

**உரை (21-22):-** நந்தம்பாடி யென்னுமிடத்திலே நான்மறை யுணர்த்து பவனாகிய ஈறிலாப் பேராசிரியனாய் வீற்றிருந்தருளியும்.

**குறிப்பு (21-22):-** நமது பாடி யென்று பொருள் கொள்ளின், நந்தம்பாடி யென்பது திருவாதவூரைக் குறிக்கலாம். ஆரியன் - ஆசிரியன், நான்மறையாய பொது நூல் வெளிப்படுத்தினவனும் இறைவனென்பது இங்கே குறிக்கப்பட்டது. இறைவன் பொதுச் சிறப்பு நூல்களை வெளிப்படுத்தினமை கூறி, அவனது திருவிளையாடல்களை விதந்தோதுவான் தொடங்குகின்றார்.

**உரைநடை (23-26):-** கடைசி யிரண்டடியை முதலிலும் முதல் இரண்டடியைப் பின்னுங் கொள்க. 'வந்தருளி' யென்பதை 'இயல்பினதாகி' என்பதற்குப் பின்னும் கொள்ளலாம்.

**உரை (23-26):-** (அறமாகிய) காளையை (ஊர்தியாக) உடைய ஆண்டவன் இவ்வுலகினரை உய்வித்தற் பொருட்டுத் தனது திருமேனியிலே ஒரு பகுதி கொண்ட மாதுந்தானும், (அடியாரின் பக்குவ வேறுபாட்டிற்கேற்ப) வெவ்வேறு திருவடிவமும் வெவ்வேறு தன்மைகளும் கோடி முதலிய எத்தனையோ முறைகளாக அமையும்படி எழுந்தருளித் தோன்றி.

**குறிப்பு (23-26):-** 'ஆட்பாலவர்க்கருளும் வண்ணமுமாதி மாண்புங் கேட்பான் புகில் அளவில்லை' என்ற கருத்தே இங்கு வந்தமை காண்க. உய்ய - உய்விக்க. சத்தி இறைவனது திருமேனியாதலின், 'மங்கையுந் தானும்' என்றார். அருட்சக்தி வாயிலாகவே உய்தி கூட்டுமுறை நிகழ்தற்பாலது. நூறு நூறாயிரம் என்பது கோடி என்ற எண்ணைக் குறித்தாலும், 'பலப்பல' என்ற பொருளில் வந்ததாகும். அளவில்லை யென்பதே கருத்து.

குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்
வேலம் புத்தூர் விட்டே றருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையுந்
தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற் கீந்த விளைவும்

***உரைநடை (27-32):-*** *முதலிரண்டடியையு மிறுதியிற் கொள்க.*

***உரை (27-32):-*** *வேலம்புத்தூர் என்னுமிடத்திலே (உக்கிர குமாரனுக்கு வேல்கொடுத்தருளித் தனது திருவடிவச் சிறப்பினைக் காட்டிய (அருட்) செயலும், சாந்தம்புத்தூ ரென்னுமிடத்திலே வில்லினாற் போர் புரியும் வேடன் ஒருவனுக்குக் கண்ணாடியிலே தோன்றி அவன் தவத்தின் பயனாக வாள் முதலியன கொடுத்தருளியதும், குதிரைகளை நடாத்திக் கொண்டு மேலை நாட்டிடத்தே வணிகர் கூட்டத்தினனாய்த் திறமையொடு தானே புறப்பட்டு வந்தருளியும்.*

***குறிப்பு (27-32):-*** *திருப்பெருந்துறைக்கு மேற்கே மதுரைக்குப் போகும் வழியிலுள்ள நாடு குடநாடெனப்பட்டது. (கொடுந்தமிழ் நாட்டில் ஒன்றாகிய 'குட்டநாடு' வேறு. இது திசை நோக்கிக் கூறப்பட்டது). குடக்கு - மேற்றிசை, சதுர் - திறமை, தன்னைப் பிறரறிய வொட்டாத சதுரப்பாடு. பட - பொருந்த. சாத்து - வணிகர் கூட்டம். விட்டேறு - வேல். கொள்கை - செயல். தர்ப்பணம் - கண்ணாடி. 'ஈந்த விளைவும்' என்பதை விளைவு ஈந்தது மென மாற்றுக.*

***உரைநடை (33-41):-*** *'ஆண்டான் எங்கோன்' என்பதை முதலிற் கொள்க.*

***உரை (33-41):-*** *ஆண்டவனாகிய எம் தலைவன் (குதிரை வாயிலே) கொள்ளுப் பையைக் கட்டி யருளுதற் பொருட்டு (இறங்கிய காலை) முற்றிலும் நெருப்புப் போல இலங்குந் தனது திருமேனியை அழகியதாகக் காண்பித்த பண்டை முறையும், திருமாலோடு பிரமனும் அளந்தறிய முடியாதவன் நரிகளைக் குதிரைகளாக்கிய நற்செயலும், பாண்டியனை ஆட் கொண்டருள் வான், அழகு மிக்க தனது திருவடியோடு அவனுக்குக் குதிரைகளை விற்று, அவன் தந்த திரண்ட பொன்னை வாங்கிக்கொள்ள உடன்படாது, அவன் செயலற்றுத் தனது திருவருள் வழி(ச் சிறிது நேரம்) நிற்றற் பொருட்டு அவன் உள்ளத்தை ஊக்கும் அருளொளியைக் காட்டியருளிய பண்டைப் பரிசும். "நரியைக் குதிரை செய்வானும்" அப்பர்.*

மொக்கணி யருளிய முழுத்தழன் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்
அரியொடு பிரமற் களவறி யொண்ணான்
நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டு கொண்டருள அழகுறு திருவடி
பாண்டியன் றனக்குப் பரிமா விற்று
ஈண்டு கனக மிசையப் பெறாஅது
ஆண்டான் எங்கோன் அருள்வழி யிருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்
அந்தண னாகி யாண்டுகொண் டருளி
இந்திர ஞாலங் காட்டிய இயல்பும்
மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்
ஆங்கது தன்னில் அடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்

***குறிப்பு (33-41):-*** *மொக்கணி - குதிரைக்குத் தீனி வைக்கும் சாக்குப்பை. அருளிய - அருளும் பொருட்டு. தூய செம்மேனியென்பார், 'முழுத்தழன்மேனி' என்றார். சொக்கது - அழகுடையது. ஆட்கொள்ளக்கருதிய அடியார்க்குத் தன் அருள் வடிவங்காட்டுதல், இறைவனது வழக்கமான பழைய முறையென்பார். 'தொன்மை' என்றார், முழுத்தழன் மேனி அடிகட்குக் காட்டப்பட்டது. 'தூண்டு சோதி' பாண்டியற்குத் தோற்றுவிக்கப்பட்டது. திருவடி - திருவடிவு (கொண்டு); ஈண்டு கனகம் திரள் பொன், வினைத்தொகை. இறை திருமேனியைக் கண்ட அளவிலே பாண்டியன் தன் செயலற்றுச் சென்னி மேற் கரங் குவித்தனனாதலின், 'அருள்வழி யிருப்ப' என்றார். சொக்கது - உண்மையானது. கனகம் - பொன்.*

*மொக்கணி என்பது குதிரைக்குக் கொள்ளுக்கட்டும் பை. கோட்டூரில் சிவபூசை செய்த பின்னரே உணவுண்பது என்னும் விரதம் பூண்ட வணிகன் ஒருவனிருந்தான். ஒருநாள் அவன் நீராடிச் சிவபூசைக்குவர அவன் மைத்துனனொருவன் அவனைப் பரிகசிப்பதற்காகக் கொள்ளுப்பை நிறைய மணலைச் சொரிந்து நட்டுவைத்து மாலை முதலியன சாத்தி வைத்தான். வணிகன் சிவலிங்கம் என்றே அவ்வுருவை வழிபட்டுப் பின்னர் உண்டனன். மைத்துனன் கொள்ளுப்பைக்குக் கும்பிடுபோட்டீரா? என்று பரிகசித்தான். அப்பையை எடுக்க முயன்றான். பை உண்மையாகவே சிவலிங்கமாக வேரூன்றிவிட்டது.*

உத்தர கோச மங்கையுள் ளிருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும்
பூவண மதனிற் பொலிந்திருந் தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்
வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்
திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியிற் கரந்த கள்ளமும்

*'ஏத்து சிவபத்தி யானொரு செட்டிமு னீசுரனைத்*
*தோய்த்து முழுகித் தொழவெழ வாங்கொரு சூழ்ச்சிகற்றோன்*
*பூத்த வணக்குடக் கோட்டூரில் மொக்கணி யைப்புதைக்க*
*வாய்த்த சிவலிங்க மானது வுங்கொங்கு மண்டலமே'*

*என்பது கொங்குமண்டல சதகச் செய்யுள். கொங்கு நாட்டில் அவினாசி - சேவூருக்கு அருகில் இத்தலம் உள்ளது.*

*சொக்கது - உண்மையானது. சொக்கத்தங்கம் என்பது போல, சொக்கு உண்மை என்னும் பொருளில் வந்தது. அழகு எனினுமாம்.*

*மொக்கணி அருளிய - குதிரைக்குக் கொள்ளுப்பையை உதவிய முழுத்தழல் போலும் மேனியைச் சொக்கலிங்கமாகக் காட்டிய பழைமையும் என்பது பொருளாம்.*

***உரை (42-47):-** அழகிய தண்ணருள் நிறைந்த முனி வடிவின னாகி என்னை யாட்கொண்டருளி, (உடனே மறைந்தமையாகிய) இந்திர ஜாலம் போன்ற திருவிளையாடல் காட்டிய தன்மையும், மதுரையாகிய பெரிய நல்ல சிறந்த திருப்பதியில் வீற்றிருந்து, (சுந்தர சாமந்தன் என்ற) அன்பன் வேண்டுகோளுக்காகக் குதிரை வீரனாகி வெளிப்போந்த அருட்செயலும், அம்மதுரை நகரிற்றானே, தனது மெய்யன்பினள் (செம்மனச் செல்வி யென்னும் பிட்டு வாணிச்சியின்) பொருட்டு உண்மையாய் மண் சுமந்தருளிய பண்பும்.*

***குறிப்பு (42-47):-** இந்திர ஞாலம் - மாய வித்தைகள் - இந்திரன் வலை - இந்திரன் தன்னெதிரிகளை வெல்லச்செய்த சூழ்ச்சிகள். அவை போல்வனவற்றையும் அச்சொற்றொடர் குறிப்பதாயிற்று. சுந்தர சாமந்தன் என்ற பாண்டிய அமைச்சன் அரசன் பொருளை அடியார்க்கமுதளிக்கப் பயன்படுத்தினவன். அவன் கதை திருவிளையாடற் புராணம் மெய்க் காட்டிட்ட படலத்துட் காண்க. திருவாதவூரடிகளுக்குக் கீழ்த்திசை நின்று குதிரை கொணர்ந்தனர்.*

பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்
பாவ நாச மாக்கிய பரிசும்
தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்
விருந்தின னாகி வெண்கா டதனிற்
குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்
பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்
கட்டமா சித்தி யருளிய அதுவும்

---

*சுந்தர சாமந்தனுக்கு மதுரையிலிருந்தே குதிரைப் படை காட்டினர். மண் சுமந்த வரலாறு வெளிப்படை, பாங்கு - உரிமை, பரிசு - தன்மை. அவளினத்தான் போல வந்து அவள் செய்ய வேண்டிய வேலையைச் செய்தமையின் அவ்வாறு கூறினர்.*

***உரை (48-55):-*** *உத்தரகோசமங்கைப் பதியிலே எழுந்தருளிப் போதக ஆசிரிய வடிவங்காட்டிய தன்மையும், திருப்பூவண மென்னுந் திருப்பதியிலே (சித்தராகத்) தோற்றங் கொண்டு (அடியவள் வீட்டில்) வீற்றிருந்தருளித் தூய (பொன்) வண்ணத் திருவடிவங் காண்பித்த பழைய முறையும், (இறைவன் பாண்டியனுக்குக் குதிரை கொண்டு வரும்பொழுது) திருவாதவூர் வழியாக எழுந்தருளி வந்து திருவடியிற்றரித்த சிலம்பின் ஓசையை நன்கு காண்பித்த நயமும், அழகு நிரம்பிய திருப்பெருந்துறையிலே கலை வல்லானாகி (அருள் புரிந்தபின்) பெருமை பொருந்திய ஒளிப்பிழம்பில் மறைந்த தந்திரமும்.*

***குறிப்பு (48-55):-*** *இறைவனே தமக்குக் குருவாய் வந்து ஆகமங் கற்பிக்க வேண்டுமென்று உத்தரகோச மங்கையில் தவங் கிடந்த அடியவர் அறுபத்து நால்வர்பொருட்டு, அவன் அவ்வாறு உபதேசித்தனன் என்ப. வித்தகம் - ஞானம், கல்வி. உத்தர கோசம் - உயர்ந்த நூல் (வெளியான இடம்). மங்கை - நிலமடந்தையின் பொதுப்பெயர் ஊர்க்காயிற்று. திருப்பூவணத்திலே பொன்னனையா ளென்னும் நன்மாது கடவுளிடத்தும் அடியாரிடத்தும் மெய்யன்புடை யளாய் விளங்கினாள். இறைவழிபாடியற்ற ஒரு பொன் திருவுருச் சமைப்பிக்க விரும்பினள். அவள் கைப் பணம் அடியார்க் கமுதளிக்கவே போதியதா யிருந்தமையால், திருவுருவத்திற்குப் பொன்னின்றி வருந்தினள். அப்போது இறைவனே ஒரு சித்த வேடங் கொண்டு அவள் வீட்டிற்குச் சென்று அங்கிருந்த இருப்புச் சாமான்கள் பலவற்றையும் எடுப்பித்து அவற்றைக் குளிகையாற் பொன்னாக்கி விட்டு மறைந்தனர். திருவருள் திறத்தை அடியவள் பெரிதும் வியந்து*

வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னிற் கரந்த கள்ளமும்
மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கா னொருவன் ஆகிய தன்மையும்
ஓரி யூரின் உகந்தினி தருளிப்
பாரிரும் பாலக னாகிய பரிசும்

---

*தான் கருதியபடி பொற்றிருவடிவஞ் சமைப்பித்து வழிபாடியற்றினள். இனிது - நன்கு. சிலம்பு - வீரக்கழல். கரு - பெருமை, மேன்மை. கரு - காரணம், வித்து. உருவப்பொருள் எவற்றிற்குங் காரணமாகிய சோதி யெனவுங் கூறலாம். இறைவனது அருவுருவத் திருமேனி சோதியாதலின், அது உருவங்கட்குக் கருவாயிற்று. செல்வன் - ஞானச் செல்வமுடையான். திருப்பெருந்துறையில் அடிகட்கு அருள்புரிந்த பின், சோதியில் இறைவன் மறைந்தமை வேம்பத்தூரார் திருவிளையாடலிற் காண்க. தூவணமேனி - களிம்பேறாத தூய்மையான நிறம் பொருந்திய பொன்மேனி.*

***உரை (56-63):-* பூவலம் என்னும் திருப்பதியிலே சிறப்பாக விளங்கி யருளி அடியவர் தீவினையைத் தொலைத்த திறனும் (போரிலே பாண்டிய னொருவனுக்கு) வெற்றி கிடைக்கும்படியாக (அவன் படைகளின் விடாய் தீர்த்தற் பொருட்டு) தண்ணீர்ப்பந்தல் அமைத்து அவணிருந்து, நல்ல நீரை வழங்கும் ஆளாகிய பேருபகாரமும், முன்னொரு காலத்திலே திருவெண்காட்டிலே, புதிதாக உண்ண வந்தவனாகிக் குருந்த மரத்தடியின்கீழ் வீற்றிருந்த அருட்செயலும், பட்டமங்கை யென்னும் ஊரின் கண்ணே, உரிமையுடன் வீற்றிருந்து, அவண் (இயக்கிகள் அறுவர்க்கு) எட்டுப் பெருஞ் சித்திகளை அறிவுறுத்தி யருளிய நயமும்.**

***குறிப்பு (56-63):-* இனிது - சிறப்பாக. பொலிந்து - விளங்கி. திருவிளையாடற் புராணம் தண்ணீர்ப்பந்தல் வைத்த படலத்திலே சோழனோடு சேர்ந்து தன்னொடு போர்க்கு வந்த தனது தம்பியை வெல்வதற்கு இராசேந்திர பாண்டியன் கடவுள் துணையை நாட, அவர் தண்ணீர்ப்பந்தல் வைத்ததாகக் கூறினமை காண்க. சயம் - ஜயம், வெற்றி. சேவகன் - வேலையாள், விருந்து - புதிதாக வந்தோன். பட்டமங்கையில் உபதேசம் பெற்ற நங்கையர், முன்னர்க் கயிலையினின்றிழிந்து ஒரு சாபத்தாற் கல்லாய்க் கிடந்து சாபம் நீங்கப்பெற்று இறைவன் உபதேசங் கேட்டனர். முன் தொடர்பிருத்தல் பற்றிப் 'பாங்காய்' என்றார். எட்டுப் பெருஞ்சித்திகளாவன :**

பாண்டூர் தன்னில் ஈண்ட இருந்தும்
தேவூர்த் தென்பால் திகழ்தரு தீவில்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்
தேனமர் சோலைத் திருவா ரூரில்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்
இடைமரு ததனில் ஈண்ட இருந்து
படிமப் பாதம் வைத்த அப்பரிசும்
ஏகம் பத்தின் இயல்பாய் இருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசும்
திருவாஞ் சியத்திற் சீர்பெற இருந்து
மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்

---

*அணுவாதல், மேருவாதல், எளிதாதல், பழுவாதல், எங்குமியங்குதல், விரும்பிய இன்பம் பெறுதல், முத்தொழில் புரியும் முதன்மை, தன் வயப்படுத்தல் என்பனவாம்.*

***உரை (64-67):-*** *(பாண்டியனுக்காகச் சோழனொடு போர் புரிதற் பொருட்டுக் குதிரைமேல்) வேடனாக (அச்சமயத்திற்கு) வேண்டிய திருவடிவமெடுத்து, (அவனால் தொடரப்பெற்று)க் காட்டினகத்தே மறைந்த தந்திரமும், உண்மையைக் காட்டி விடுவதற்கு வேண்டிய வடிவமெடுத்து ஒப்பற்ற நீதிமானாகிய இயல்பும்.*

***குறிப்பு (64-67):-*** *வேடுவன் ஆகி - வேடனாக; இக்கதை திருவிளையாடற் புராணம் 'சோழனை மடுவில் வீழ்த்திய' படலத்திற் காண்க. சோழன் தொடர்ந்து வந்தபோது, தான் காட்டகத்தே உள்ள ஒரு குளத்திலே குதிரையொடு வீழ்ந்து மறையவே, சோழனும் அதனுள் வீழ்ந்திறந்தான். மடு இருந்த இடம் காடு மூடிக் கிடந்தமையால் 'காடது தன்னில்' என்றார். காட்டிட்டு - காட்டிட - காட்டி விட, ஒருவன் - ஒப்பற்றவன், தக்கான் - நீதிமான் - நடுவன். சிவபத்தியிற் சிறந்த வாளாசிரியன் ஒருவனது மனைவியை விழைந்த அவன் மாணவனது உண்மைத் தன்மையை வெளியிட்டு அவனை ஒறுக்கவேண்டி இறைவனே வாளாசிரியனாகத் தோன்றி அம்மாணவனோடு பொருது நீதிசெலுத்திய வரலாறு, திருவிளையாடற்புராணம் 'அங்கம் வெட்டிய படலத்துட்' காண்க. அகவலின் இப்பகுதி மெய்க்காட்டிட்ட படலத்தைக் குறிக்கு மென்பாருமுளர்.*

***உரை (68-69):-*** *ஓரியென்னுந் திருப்பதியின் கண்ணே (அடியவள் ஒருத்தியை ஆட்கொள்ள) விரும்பி அவளுக்கு மகிழ்ச்சி மிகும்படி*

சேவக னாகித் திண்சிலை யேந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும்
கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்
ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்
ஐயா றதனிற் சைவ னாகியும்
துருத்தி தன்னில் அருத்தியோ டிருந்தும்
திருப்பனை யூரில் விருப்பனாகியும்
கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்
கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்
புறம்பயம் அதனில் அறம்பல அருளியும்
குற்றா லத்துக் குறியா யிருந்தும்

---

*அருள் செய்து இவ்வுலகத்திலேயும் (அவள் தாலாட்டக் கூடிய) பிறவாப் பெருமையுடைய குழந்தையாகிய பண்பும்.*

***குறிப்பு (68-69):-*** *திருவிளையாடற் புராணம் 'விருத்த குமார பாலரான' படலத்தில் இக்கதையைக் காண்க. ஒரு சைவ மறையோன் சிவனடியார் பத்தியிற் சிறந்த தனது மகளைத் திருமால் வழிபாடுடைய ஓர் அந்தணனுக்கு மணஞ் செய்வித்தான். அப் பெண்ணின் மாமியார் அவளை ஓர் ஒதுக்கிடத்தே வைத்துக் கொடுமையாய் நடத்தி வந்தாள். ஒருநாள் தனது கணவனும் மாமி முதலியோரும் வீட்டை பூட்டிவிட்டு அயலூருக்குப் போய்விட, ஒரு சிவனடியார் அப்பெண்ணிருந்த ஒதுக்கிடத்திற்கு வந்து உணவு கேட்டனர். மாமி உணவுப் பொருட்களையெல்லாம் வீட்டினுள் வைத்துவிட்டுப் போயினதை அவருக்கு அவள் தெரிவிக்கவும், அவர் அவளை நோக்கி "நீ கதவின் பக்கம் போ, அது திறக்கு" மென்றார். உடனே, அவள் அவ்வாறு போய்க் கதவு திறந்ததைக் கண்டு வியந்து உட்சென்று உணவு சமைத்து அவ்வடியார்க்கிட்டாள். வயது சென்ற அவ்வடியார் உண்டபின், ஓர் இளைஞன் வடிவங்கொண்டார். பெண்மணி அத்திருக்கோலத்தைக் கண்டு வியந்து நடுங்கி நிற்கும்போது வெளியேபோன மாமியார் திரும்பி வந்துவிட்டாள். அப்போது இளைஞராயிருந்தவர், குழந்தையாய் ஒரு தொட்டிலிற் கிடந்தனர். மாமியார் சினங்கொண்டு மருமகளையும் குழந்தையையும் வெளியே தள்ளிவிடவே, குழந்தையாயிருந்த அடியவர் விடைப்பாகராகத் தோன்றி அப்பெண்மணியை உமை வடிவினளாக்கிச் சிவலோகம் புக்கனரெனப் புராணம் பகர்கின்றது. பார் - நிலவுலகம். இரும் - பெருமையுடைய.*

***உரை (70-80):-*** *பாண்டூர் என்னுந் திருப்பதியின்கண்*

அந்தமில் பெருமை அழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்(டு)
இந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத்
தானே யாகிய தயாபரன் எம்மிறை
சந்திர தீபத்துச் சாத்திர னாகி
அந்தரத் திழிந்து வந்(து) அழகமர் பாலையுட்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்

---

*(அடியார்க்கு விளங்குமாறு) நெருங்க வீற்றிருந்தருளியும், தேவூர்க்குத் தென்பக்கத்தில் விளங்குந் தீவின்கண், அரசியற் றன்மை பொருந்திய திருவடிவங் கொண்டெழுந்தருளிய செயலும், வண்டுகள் தங்கும் பொழிலினையுடைய திருவாரூரிலே (முனிவர் பலர்க்கு உயர்ந்த) சிவஞானத்தைக் கொடுத்தருளிய உபகாரமும், திருவிடைமருதூரிலே அடியார்க்கு விளங்க வீற்றிருந்தருளித் தனது தூய திருவடிகளை (அவர் சென்னிமீது) வைத்த (கருணைத்) திறனும், காஞ்சி புரத்திலே தமது இயற்கையான (அருவுருவத்) திருமேனி யோடு வீற்றிருந்து (தம்மை வழிபட்ட உமை) அம்மையைத் தனது இடப்பாகத்தமர்த்தி வைத்துக்கொண்ட சிறப்பும், திருவாஞ்சிய மென்னுந் திருப்பதியில் திருமணச்சீர் பெறுதற்குரிய அழகுடன் வீற்றிருந்து இயற்கை மணமுடைய கூந்தலினளாகிய அம்மையோடு கலந்து மகிழ்ந்த திருவிளையாட்டும்.*

***குறிப்பு (70-80):-** பாண்டூர் தேவூர் என்பன பாண்டி நாட்டிலுள்ளன. தேவூர்க்குத் தெற்கே கடலில் இருப்பது தீவு. ஈண்ட - நெருங்க, விளங்க. கோ - அரசத்தன்மை. தேன் - வண்டு. இங்கே கூறிய ஞானம் வீடு பயக்குமுணர்வாதலின், 'தன்னை'யெனச் சிறப்பித்தார். படிமம் - ஒளிவடிவம், தூய்மை. ஏகம்பநாதர் காஞ்சிப் பதியமர்ந்த சிவபிரான். திருக்கயிலையில் இறைவர் திருக் கண்களைப் பொத்தி உலகிற்கிருளுண்டாக்கிய குற்றம் நீங்க, உமையம்மையார் காஞ்சியில் ஒரு மாமரத்தினடியில் மணலாற் சிவலிங்க வடிவமைத்து வழிபட்ட காலை, வெள்ளம் வரவே சிவ பெருமானைத் தழுவிப் பின்னர் அவரது இடப்பாகங் கொண்டன ரென அறிக. மரு - இயற்கை வாசனை. கற்புடை நங்கை கூந்தலுக்கு இயற்கை மணமுண்மை நக்கீரர் கதையால் விளங்கும். திருவாஞ்சியம், சோழநாட்டிலுள்ளது.*

***உரை (81-91):-** பாண்டியனுக்கு வெற்றி யுண்டாக்குதற் பொருட்டு) வில் வீரர் வடிவங்கொண்டு வலிமிக்க வில்லைக்*

மந்திர மாமலை மகேந்திர வெற்பன் 100
அந்தமில் பெருமை அருளுடை அண்ணல்
எந்தமை யாண்ட பரிசது பகரின்
ஆற்ற லதுவுடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்

*கைக்கொண்டு பலப்பல வகையான இயல்புகளைத் தோற்றுவித்த சிறப்பும், திருக்கடம்பூரிலே கோயில் கொண்டருள வீற்றிருந்தும், ஈங்கோய் மலையிலே அழகுமிக்க (மரகதத்) திருமேனி காண்பித்தும், திருவையாற்றிலே (பூசனை புரியும்) சைவ ஆசாரியன் ஒருவனின் வேடத்தோடு தோன்றியும், திருத்துருத்தியிலே அடியவர்கட்கு அருள்புரியும் ஆசையோடு அமர்ந்திருந்தும், திருப்பனையூரில் (வேண்டுவார் வேண்டுவன ஈயும்) விருப்பத்தினனாய் வீற்றிருந்தும், சீகாழிப் பதியிலே குரு, லிங்க, சங்கம திருக்கோலங் காண்பித்தும், திருக்கழுக் குன்றத்திலே ஞானவடிவத்தோடு தவறாது எழுந்தருளியும், திருப்புறம்பயத்திலே தருமச் செயல்கள் பல ஆற்றியும், திருக்குற்றாலத்திலே (சிவ)லிங்க வடிவாய்த் தோன்றியும்.*

***குறிப்பு (81-91):-** திருவிளையாடற் புராணம், யானை எய்த படலத்துள், சோழன் விடுத்த யானையைக் கொல்லுதற்பொருட்டு, இறைவன் வில் வீரராய்த் தோன்றி யானை எய்தமை கூறப்பட்டது. இடம் - கோயில்; 'எழிலது' என்பதில், அது திருமேனியைக் குறிக்கும். திருவையாற்றிலே இறைவனைப் பூசனை புரியுஞ் சைவாசாரியருள் ஒருவர் காசிக்குப் போய் நெடுநாளாக மீண்டு வராமையால், அவர் மனைவி மக்கட்குரிய பொருளைப் பிறர் கவர்ந்து கொள்ளக் கருதிய காலை, அதனைத் தடுத்தற் பொருட்டு, காசிக்குப் போன சைவரின் வடிவத்தோடு இறைவன் தோன்றி யருளினமை இங்கே குறிக்கப்பட்டது. திருக்கழுமலத்திலே அடிகட்கு இறைவன் காட்சி நல்கினமையும், திருக்கழுக்குன்றிலே கணக்கிலாத் திருக்கோலம் அடிகட்குக் காட்டினமையும் அடிகள் வரலாற்றானறிக. 'வழுக்காது' என்பதற்கு மறவாது என்று பொருள் கொள்ளுதலுமுண்டு. திருக்குற்றாலத்திலே திருமால் வடிவமே அகத்தியர் வேண்டுகோளால் சிவ வடிவமாக மாறினமை திருக்குற்றாலத் தலபுராணத்துட் காண்க. திருக்கடம்பூர், ஈங்கோய்மலை, திருப்பனையூர் முதலியன சோழ நாட்டிலுள்ளவை; திருத்துருத்தி - இப்போது சோழ நாட்டிலே குற்றாலமெனப்படும் இடமென்ப. திருக்குற்றால மென்பது, பாண்டி நாட்டிலே யுள்ளதென்பது வெளிப்படை. திரிகூட பருவதத்தினடியில்***

ஊனந் தன்னை யொருங்குடன் அறுக்கும் 105
ஆனந் தம்மே ஆறா அருளியும்
மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்

*அழகிய அருவியுடன் கூடியது. சேவகன் - வீரன். பாவகம் - தோற்றம். அருத்தி - காதல். வழுக்காது - மறவாது.*

*உரைநடை (92-99):- இறுதியியல் இரண்டடியில், 'அந்தரத் திழிந்து சந்திர தீபத்து வந்து அழகமர் பாலையுட் சாத்திரனாகி' எனக் கொள்க.*

*உரை (92-99):- அளவற்ற பெருமையுடைய சோதி வடிவத்தை எவ்வகையானும் அடியார்கள் தாங்கமாட்டோம் எனத் திருவுள்ளம் கொண்டு மறைத்து அழகிய (பிரணவ வடிவமான) காதணியோடு ஒப்பற்ற (ஞான) முதல்வனாக வடிவங்கொண்டு, இந்திரஜால வித்தை(யிற் பொருள்கள் எதிர்பாராது தோன்றுதல்) போலத் திடீரென எழுந்தருளி வந்து, எவ்வகைப்பட்டவர் இயல்பையும் தன் பாலாக்கித் (தன்னுடைய அருட்செயலே மேலிட்டுத் தோன்ற) தானே எல்லாமாய் விளங்குங் கருணையாளனாகி எம் தலைவன் வான் நின்று இறங்கிச் சந்திர தீபமென்னும் பதியிலே அழகுமிக்க பாலை யென்னுமிடத்தில் கலைவல்ல ஆசிரியனாகி வனப்பு நிறைந்த இயல்போடு வீற்றிருந் தருளியும்.*

*குறிப்பு (92-99):- அழலுருவென்பது இறைவனது தெய்வ வடிவை அல்லது அடிமுடியறியாச் சோதியாய் நின்ற வடிவைக் குறிக்கும். சுந்தர வேடம் - காதணி, வட்டவடிவமாய்ச் சைவ ஆசாரியர்களா லணியப்படுவது. சுந்தரம் 'துதைந்த தன்மையொடு இருந்தருளியும்' என உரை நடை கொள்க. துதைத்தல் - நெருங்குதல், நிறைதல்; பாலை - பாலை நிலத்திற்குரிய மரங்களடர்ந்ததாய் அழகு வாய்ந்ததா யிருக்கலாம். அல்லது, இடத்தின் பெயர் பாலை யாதல் கூடும். ஒரு காலத்துப் பாலையாயிருந்து பின்னர் பொழிலாய பின்னும், அப்பெயர் அதற்கு வழங்குதல் கூடும்.*

*உரை (100-114):- மந்திர நூலாகிய ஆகமம் வெளிப்பட்ட பெருமலையாகிய மகேந்திரத்தின் தலைவ னாகிய எல்லையற்ற ஆற்றலும் அருளும் உடைய பெருமான் (அடியேங்களாகிய) எங்களை ஆட் கொண்டருளிய வகையைச் செப்புமிடத்து, வலிமையுடையதாய், வனப்புப் பொருந்தியதாயுள்ள திருமேனியில் (நெற்றி, மார்பு, புய முதலிய இடங்களில்) திருநீற்று (மூவடையாளமாகிய) கொடியினை,*

நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்
அழுக்கடை யாமல் ஆண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்
மூல மாகிய மும்மலம் அறுக்குந்
தூய மேனிச் சுடர் விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்
அரியொடு பிரமற்கு அளவறி யாதவன்
பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்
மீண்டு வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்
பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்
உத்தர கோச மங்கையூ ராகவும்

---

*(எடுப்பாகத் தோன்றும்படி) இடையிட்டுத் தரித்துக் காட்டியும், பாசமாகிய குற்ற (முழுவதையும்) ஒருசேர, ஒரே காலத்தில் வேரறுத்து (க்களையும்) பேரின்பத்தையே தமது ஆறாகக் கொண்டருளியும், உமையம்மையை ஒரு பாகத்திலுடைய கைமாறற்ற பேரருளாளன், நாததத்துவமாகிய பெரும்பறையானது இடைவிடாது ஒலிப்பக் கொண்டும், வாசனாமலந்தாக்காமல் அன்பர்களைத் தடுத்தாட் கொள்பவன் மூவிலைச் சூலத்தைத் தனது திருக்கைகளிற் கொண்டருளியும், உயிர்களை அநாதியேபற்றிய (இருள், வினை, மருள் என்னும்) மூவகைப் பாசங்களையும் வேரறுக்கவல்ல மாசற்ற திருமேனியுடன் எழுந்தருளி அறிவுக் கதிர்பரப்பும் ஒளியுருவனாகிய முதல்வன் அடியாரிடம் அன்பு பூண்டவனாகி, அடியாருள்ளங்கள் பக்குவ மெய்துதற்குப் பொருத்தமான முறையில் எழுச்சி பெறும் வண்ணம், (அவருள்ளங் கவருஞ்) செங்கழுநீர் மாலையைச் சூடியருளியும்.*

*குறிப்பு (100-114):- கொடியென்பது கோடியென நீண்டது. தசாங்கம் கூறுவதாக அமைகிறது. எல்லாவற்றையும் ஒடுக்கும் ஆற்றலையும், அருளொளியையும் திருநீறானது குறித்தலின் “ஆற்றலது வுடை அழகமர் திருவுரு” என்றார்போலும். நிமிர்ந்து - (முக்குறியாக) இடையிட்டுத் தரித்து, திருமேனியிற் பல பாகங்களில், கொடி யிலங்குவதுபோல நீற்றுக்குறி துலக்கமாய்த் தோன்றியது என்றவாறாம். பேரின்ப வுணர்ச்சியில் உயிர் ஈடுபட்ட விடத்து, வாசனாமலமுந் தொலைதலின், மலம் முழுவதையும், ஒருங்கு அறுக்கும் என்றார்.*

ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெய ராகவும்
இருள்கடிந் தருளிய இன்ப ஊர்தி
அருளிய பெருமை அருண்மலை யாகவும்
எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்
அப்பரி சதனா லாண்டுகொண் டருளி
நாயி னேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை ஈங்கு ஒழித்தருளி

*ஆனந்தமே, என்பது ஆனந்தம்மேயென விரிந்தது. அது ஆனந்த மேலீட்டைக் குறிக்கும் 'மாதின்' என்பதில், இன் - சாரியை. 'மாப்பெரு' என ஈரடை கொடுத்தது. கைமாறின்மையும் அளவின்மையுங் குறித்தற் கென்க. நாத தத்துவத்திலுள்ள சூக்கும வாக்கு என்றும் ஒலித்துக் கொண்டிருப்பதனாலே உலகெலா மியங்குமாதலின், அதனைப் பெரும்பறை என்றார். நவிலுதல் - இடையின்றிப் பயிலுதல், இறைவன், உயிர்கள் மேல் வைத்த கருணையாலே, தூயமாயை நின்று, சிவதத்துவமாகிய நாததத்துவத்தைத் தோற்றுவித்தலின், "கருணையன்" என்பதோடு, நாதப் பெரும்பறை யென்பதை உடன்புணர்த்துக் கூறினர். அழுக்கு நீங்கிய பின்னும், அது அடையாமற் காத்தலின், அழுக்கு, உரையுள், வாசனாமலம் எனப்பட்டது. மலமூன்றாதலின் இறைவன் அதனை நீக்குவதற்கு மூவிலைச் சூலத்தைக் கைக் கொண்டனர் போலும். கழுக்கடை - மூவிலை வேல். ஆணவமுள்ள விடத்தே, வினையு மாயையும் நுட்பமாக உண்மையின், மூன்றையும் மூலமாகியவை என்றார். மலங்காரணமாக வரும் உடம்பு இறைவற்கின்மையின் 'தூய மேனி' என்றார். தூயமேனி யுடையவனே, அழுக்கை நீக்க வல்லவனாவ னென்பது கருத்து. சுடர் - சிவஞானம், தலைவியினுள்ளத்தைத் தனது மாலையாற் கவருந் தலைவன்போல, இறைவன் அன்பருள்ளத்தைத் தமது தூய அடையாள மாலையாற் கவர்வனாதலின், காதலனாகி 'ஏலுடைத்தாக எழில்பெற' என்றார். ஏல் - பொருத்தம். எழில் - எழுச்சி, கிளர்ச்சி.*

***உரை (115-120):-** (செருக்கினாலே) திருமாலும் நான்முகனும் அடி முடி தேடி அளந்தறிய வொண்ணாத பெருமான், (அடியார் பொருட்டுக்) குதிரையாகிய விலங்கின் மீதேறி வந்த திறமும், (வீடுபேற்றிற்குரிய அன்பர்) திரும்பிப் பிறவியில் வராத வகையை அருள்செய்யும் பெருமான், பாண்டி நாட்டினையே தமது பழைய திருநாடாகவும், மெய்யன்பு செய்யும் அடியாரை அபர முத்தி*

அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்
ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்கம் எய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியும்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத வென்றழு தரற்றிப்
பாதம் எய்தினர் பாதம் எய்தவும்
பதஞ்சலிக் கருளிய பரமநாடக என்று
இதம்சலிப் பெய்தநின்று ஏங்கினர் ஏங்கவும்
எழில்பெறும் இமயத் தியல்புடை அம்பொற்

*பரமுத்திகளிற் சேர்ப்பவன் உத்தரகோச மங்கையினைத் தமது நகரமாகவும்.*

***குறிப்பு (115-120):-*** *பாண்டிய நாட்டிலே இறைவன் முதற்கண் தக்க தவத்தினர்க்கு ஞானமும் வீடும் நல்கினமையில், நிலவுலகிலே அதனைப் பழையபதி என்றார். பதி நாட்டையுங் குறிக்கும். உத்தரகோச மங்கையில் அறுபத்து நால்வர்க்கு இறைவன் சிறப்பாக ஆகமம் அறிவுறுத்தினமையின், அதனை, ஊரென்றார்.*

***உரை (121-126):-*** *காரணேசுரர்களாகிய முதல்வர்கட்குத் திருவருள் புரிந்து அதிகாரம் நல்கிய 'மகாதேவன்' என்பதைத் தனது திருநாம மாகவும், அடியார்க்கு ஆணவத்தை நீக்கிப் பேரின்ப வாகனமருளிய தனது அருட்பெருந் தன்மையே, கருணை மலையாகவும் கொண்டு, எவ்வகைப் பட்டவர்களுடையவும் எத்தகைய பேரியல்பையும், பக்குவத்தையும் அறிந்து அவரவர்க் கேற்ற முறையினால் அவ்வவரை ஆட்கொண்டருளியும்.*

***குறிப்பு (121-126):-*** *சதாசிவர், அனந்தர், சீகண்டர், குணிருத்திரர், திருமால், பிரமா முதலானோர் சுத்த அசுத்த, பிரகிருதி மாயைகளில் தெய்வத்தன்மை பெற்றவராய் அந்தந்த தத்துவங்களிலுள்ளோரை யியக்குவதாற் காரணசுரராய் ஆதி மூர்த்திகளெனப் பட்டனர். அவர்கள் தலைவனாகிய சிவபெருமானைத் தேவ தேவனென்பர். பேரின்ப வுணர்ச்சியானது பரமுத்தியடைதற்கு உயிர்களை மேற்கொண்டு சேரலின், அதனை 'ஊர்தி' என்றார். ஈற்றடிகளிலே இறைவனது வரம்பிலாற்றல் கூறப்பட்டது. மேற் போந்த அடிகளில், அரசர்க்குரிய கொடி, ஆறு, பறை, படை, மாலை, ஊர்தி, நாடு, ஊர்,*

பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடம்நவில்
கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்கு
அருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கயிலை யுயர்கிழ வோனே.

---

*பெயர், மலை யென்னப்படும் பத்துறுப்பும் பகரப்பட்டமை காண்க.*

***உரை (127-139):-*** *நாய்போலுங் கடையேனாகிய என்னை, நன்மை மிகுந்த தில்லைப்பதியின்கணுள்ள அழகு நிறைந்த அம்பலத்தின் கண்ணே வந்து (கலப்பாயாக) என்று, என் வினைக்குப் பொருத்தமாக, என்னை இந்நிலவுலகத்தே கழித் தொதுக்கி, என்னை ஆட்கொண்ட அன்றே, வீடு கூடுதற்குரியராய்த் தன்னோடு போந்த அடியார்கள் தங்கள் பக்குவ வளவில் தன்னோடு வந்து சேரச் சேர அவர்களோடு இரண்டறக் கலந்தருளியும், அங்ஙனம் தன்னோடு உடனே கலக்கப் பெறாதவர்களுட் சிலர், நெருப்பில் வீழ்ந்து (தன்னொடு கலக்கவும்), சிலர், வீடெய்தும் ஆசை மயமாகி மயங்கி உயிர் நீத்துத் தன்னையடையவும், சிலர் வீடு உடனே பெறாத வருத்தத்தால், நிலத்தின் மீது வீழ்ந்து புரண்டு, அழுது தன்னை யடையவும், விரைந்து நடந்தோடிக் கடலில் விழுவதற்கு நெருங்கித் தலைவனே, தலைவனே என்று அழுது அலறி உடம்பு நீத்துத் தன் திருவடி யடைந்தனர். அவ்வாறடையவும், பதஞ்சலி முனிவர்க் கருள்புரிந்த மேலான அற்புதக் கூத்தனே யென்று தொழுது உள்ளஞ் சலிப்படைய நின்று ஏக்கமுற்றவர், அவ்வாறேங்கித் (தன்னை யடையவும்).*

***உரைநடை (140-143):-*** *'ஒலிதருகயிலை யுயர்கிழவோனே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை (140-143):-*** *பரநாத ஒலியைத் தருகின்ற மந்திர ஒலிகள் பயிலும் (புகழ்மிக்க) கயிலை மலையின் பெருந்தலைவன், மிக்க எழுச்சிபெற்ற பனிமலை போல் ஓங்கிய தன்மையுடைய அழகிய பொன்னொளி திகழ்கின்ற புலியூராகிய தில்லை யம்பலத்தின் கண்ணே தன்னொடு கூத்துப் பயில்கின்ற இனிமை மிக்க சிவந்த வாயினையுடைய உமையம்மைக்கும் காளியம்மைக்கும் அருள் புரிதற் பொருட்டுத் தனது திரு முகத்தினிட மாகக் கவின் மிகுந்த புன்சிரிப்புக் காட்டும்.*

***குறிப்பு (140-143):-*** *சுத்த தத்துவச் சார்புடையது கயிலையாதலின், அத்தத்துவத்திலெழும் மந்திர ஒலி ஆண்டுப் பயிலுதல் கூறப்பட்டது.*

கயிலையிற் பிற அதிகார மூர்த்திகளுளராயினும், இறைவனே முழு முதலாட்சியுடையனாதலின், 'உயர்கிழவோன்' என்றார். இமயமலை, மிக்க உயர்வுடையது வெளிப்படை, அது பொன்னிறத்த தென்ற கொள்கையுண்டு. 'நடம் நவில்' என்பதை 'இறைவன்' என்பதொடுங் கூட்டலாம். பாணிதந்து உடன் உலவுதலின், உமை நடம் நவில்கின்றா ளென்னலாம். காளி இறைவனொடு வாதாடி நடம் பயின்று ஊன நடனமியற்ற இயலாது தோற்றனளென்ப. அருளிய - 'செய்யிய' என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம், மகிழ்ச்சி பற்றி உமைக்கும், இகழ்ச்சி பற்றிக் காளிக்கும் புன்னகை காட்டினனென்றலு முண்டு.

***உரை (144-146):-*** *எமது அரசனாகிய கடவுள் தம்மை நெருங்கிய அடியவர்களுடன் மெய்ஞ்ஞான விளக்கம் மிக்க சிற்றம்பலத்துட் புகுந்தருளி இன்பம் மிக எனக்குப் பேரருள் புரிந்தனன்.*

***குறிப்பு (144-146):-*** *அம்பல மாதலின், தனியே செல்லாது அடியரோடு சென்றான்போலும். 'மெய்ஞ்ஞானமே' அம்பலமெனப் படுதலின், பொலிதருதல் ஞானத்தாலென்பது குறிக்கப்பட்டது. கயிலை, கலைஞானச் சிறப்பெய்திய புலியூர், பரஞானச் சிறப்பெய்தினமை கூறப்பட்டது. கீர்த்தித் திருவகவலியற்றுவித்தமையும் அருளினமையின் பாற்படும். வீடு, தமக்குத் தில்லையிலருளும் உறுதி பற்றி, 'இனி தருளினன்' என்றாரென்றலுமொன்று, புலி, உபாயத்தாற் பாய்ந்து தன் இரையைப் பற்றுதல் போலப், பேரின்பத்தை உயிர் முயன்று விரைவிற் பற்றுதற்குரிய இடமென்ற கருத்து புலியூர் என்பதிற் புலனாம்.*

***காளிக்கு அருளியது :-*** *தாருகாசுரனைக் கொன்ற காளி, அவன் குருதி சிந்திய விடமெல்லாம் அரக்கர்கள் மீளவுந்தோன்ற அவர்களை அழித்துக் குருதி சிறிதும் சிந்தாமல் குடித்தாள். அதனால் வெறி கொண்ட அவள் உலக முழுமையும் அழிக்கத் தொடங்கியபோது இறைவன் அவள்முன்பு தோன்றிக் கொடுங்கூத்தாட, அவள் வெறி அடங்கி இறைவனை வழிபட்டு உய்ந்தாள். அதுவே இன்று தில்லைக் காளியாக எல்லைக் காவல் தெய்வமாக விளங்குவது.*

*'வென்றிமிகு தாரகன தாருயிர் மடங்கக்*
*கன்றிவரு கோபமிகு காளிகதம் ஓவ*
*நின்றுநடம் ஆடியிட நீடுமலர் மேலால்*
*மன்றல்மலி யும்பொழில்கொள் வண்திருவை யாறே'*

*எனத் திருவையாற்றுத் தேவாரத்திலும் இந்நிகழ்ச்சி குறிப்பிடப் பெறுகின்றது.*

*தில்லையில் அருளிய*

## 3. திருவண்டப் பகுதி

*இது “அண்டப் பகுதியின்” எனத் தொடங்கும் இவ்வகவலின் முதற்குறிப்பால் பெயர் பெற்றது. பல அண்டங்களையும், அவற்றின் பிரிவுகளையும் உணர்த்துகின்றமையால் ‘அண்டப்பகுதி’ எனவாயிற்று எனலுமாம்.*

*பகுதி - மூலப்பகுதி : அண்டப்பகுதி - அண்டங்கள் அனைத்திற்கும் மூலப்பகுதியாகிய சிவபுரம். அதுவே திருவாகிய வீடுடையது. ஆதலால் அது ‘திருவண்டப்பகுதி’ என வழங்கப்படுவதாயிற்று என்பது பழையவுரை.*

*முதல் 28 அடிகள், இயங்குவ நிற்பவான - சித்தும் சடமுமான எல்லாவற்றையும் அவற்றின் இயல்பின்படி இறைவன் நடத்திக் கடந்திருத்தலை உணர்த்துவன.*

*‘முன்னோன்காண்க’ (29) என்பது முதல் ‘அவளுந்தானும் உடனே காண்க’ (65) என்பதுவரை இறைவனுடைய அருட்செயல் இயல்பு ஆகியவற்றை எடுத்துக்கூறி, உலகவர்களை விளித்து, காணுமாறு பணிக்கின்ற காண்க நாற்பது. (37 அடிகளில் 40 முறை “காண்க” எனப் பாடுகிறார்.)*

*‘பரமானந்தப் பழங்கடல்’ (66) என்பது முதல் ‘மேகன் வாழ்க’ (95) என்பது வரை இறைவனை மேகத்திற்கு முற்றுருவகமாக்கிச் சுவைத்தது.*

*அண்டத்தரும் பெறன் (95) என்பது முதல் ‘எய்ப்பினில் வைப்பு வாழ்க’ (105) என்பது வரை இறைவனை வாழ்த்திய வாழ்க பதினொன்று.*

*‘நச்சரவாட்டிய’ (106) என்பது முதல் ‘களிப்போன் போற்றி’ (121) என்பது வரை இறைவனைப் போற்றிக் கூறிய ஆறு போற்றி.*

*‘ஆற்றா இன்பம் அலர்ந்து அலைசெய்யப் போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்’ (122-3) என்ற பகுதி தனது ஆற்றாமை கூறல்.*

*‘மரகதக்குவால்’ (124) என்பது முதல் ‘பற்று முற்றொளித்தும்’ (145) என்பது வரை, பசுபோதமுனைப்பால் தேட முயன்ற தேவர்களுக்கு ஒளித்தமை கூறிய ஒளித்தும் ஒன்பது.*

*‘தன்னேரில்லோன்’ (146) என்பது முதல் இறுதிவரையில் பிரமன் மாலறியாப் பெற்றியோன் அறைகூவி ஆட்கொண்டதும், அதனால் விளைந்த அநுபவங்களும், ஆனந்தமும், ஆனந்தாதீதமும், பரவசமும் முதலியன.*

*இவ்வண்ணம் இவ்வகவல் எட்டுப் பகுதிகளாக நூற்று*

*எண்பத்திரண்டடிகளான் அமைந்தது.*

### *சிவனது தூலசூக்குமத்தை வியந்தது*

***இணைக்குறள் ஆசிரியப்பா***

*திருச்சிற்றம்பலம்*

**3. அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**
**அளப்ப ருந்தன்மை வளப்பெருங் காட்சி**
**ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்**
**நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன**

---

*(அண்டப் பகுதி யென்று தொடங்குந் திரு அகவல்)*

*(சிவபெருமானது வியாபகப் பெருமையும் வியாபக நுட்பமும் பாராட்டியது). அண்டத்தை முதலாகக் கொண்ட அகவலுக்குப் பெயராயிற்று.*

***உரை (1-6):-*** *ஆராயுமிடத்து, அண்டமாகிய பேருலகின் பகுதிகளின் உருண்டை வடிவான விளக்கமும், அவற்றின் எல்லையற்ற இயல்புகளும், பல்வகை வளம் பொருந்திய பெருமைமிக்க தோற்றங்களும், அவை ஒன்றிற்கொன்று மேலாக நின்ற எழுச்சியின் வேறுபாடுகளைக் கூறுங்கால், நூற்றொரு கோடிக்கதிகமாக அளவில்லாமற் பரந்து பெருகியுள்ளன. (அத்தகைய உலகுகளெல்லாம்) வீட்டினுள்ளே (பலகணி வாயிலாகப்) புகுகின்ற பகலவன் கதிர்களிலே நெருக்கமாகக் காணப்படும் அணுக்களை யொப்பச் சிறியனவென்று சொல்லும்படியாகத்தான் பெரியனாய் விளங்கும் முதல்வன்.*

***குறிப்பு (1-6):-*** *தெரியின் என்பதை முதலிற்கொள்க. அண்டம், பல உலகத் தொகுப்பு, கதிரவனைச் சுற்றியுள்ள உலகங்களின் தொகுப்பை ஒரு அண்டமென்னலாம்; உலகங்கள் அண்டத்தின் பகுதிகளாய் உருண்டை வடிவினவா யமைதல் காண்க. 'நூற்றொரு கோடி' என்பது அளவின்மையைப் பெரிதாகக் குறித்து நின்றது. வானிலே முத்துக்கள் போலத் தோன்றும் விண்மீன்கள் வெவ்வேறு உலகங்களாகும். அவை எண்ணிலாதனவாய்ப் பரந்து தோன்றலின் 'அளப்பருந்தன்மை' என்றார். அவை பல்வகை வடிவும், அளவும், தன்மையும் உடையனவாகலின், 'வளப்பெருங்காட்சி'யென்றார். அவற்றின் தூரம் முதலியன அளவிலடங்காமையின், 'நூற்றொரு கோடியின் மேற்பட' என்றார். எல்லா உலகங்களும் இறைவன் திருமுன்*

இல்நுழை கதிரின் துன்அணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன்; தெரியின்
வேதியன் தொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமுஞ் சிறப்பும் ஈற்றொடு புணரிய
மாப்பே ரூழியும் நீக்கமும் நிலையும்
சூக்கமொடு தூலத்துச் சூறைமா ருதத்(து)

*அணுக்கூட்டம் போலுதலின், இறைவன் வியாபகப் பெருமை அளவிடற்பால தன்றென்பது குறித்தவாறாம். பிறக்கம் - பெருக்கம்.*

*ஒன்றனுக்கொன்று மேலாக நின்ற எழுச்சியைச் சொல்லுமிடத்து, நூற்றொரு கோடியினும் மிகுதிப்பட விரிந்தனவாகிய அண்டப்பிரிவுகளின் திரண்ட உருவின் பெருக்கமும், அளத்தற்கரிய அவற்றின் தன்மையும், வளமிக்க பெரிய தோற்றமும், வீட்டில் நுழைகின்ற சூரிய ஒளியின்கண் செறிந்துள்ள அணுக்களையொப்ப, சிறியனவாகப் பெரிதாகத் தோன்றும் சிவபெருமான் என்றவாறு.*

***உண்டைப் பிறக்கம் :*** *ஓர் அண்டத்தின் தொகுதி. பிறக்கம் - குவியல் அல்லது தொகுதி எனலுமாம்.*

*கந்தபுராணத்து, சூரபன்மனுக்கு முன்பு முருகப்பெருமான் விசுவரூபம் கொண்டபோது சூரன் தான் ஆளுகிற ஆயிரத்தெட்டு அண்டங்களும் அம்முருகப்பெருமானுடைய திருவடிக் கமலத்தில் ஒரு மயிர்க்காலில் விளங்குவதையும், பல கோடிக்கணக்கான அண்டங்கள் அவர் திருமேனி முழுதிலும் விளங்குவதையும் கண்டு வியந்தான் என்னும்.*

*அண்டங்கள் ஒன்றைவிட ஒன்று அளப்பருந்தன்மையும் வளத்தாற்பெரிய காட்சியும் உடையனவாக விளங்கின. இப்படிப் பலகோடி அண்டங்கள். இறைவன் திருமேனிப் பெருமையோடு ஒத்து நோக்கும்போது அவை வீட்டிலே ஓட்டுத் தொளைவழியாக வீட்டினுள்விழும் சூரிய ஒளியில் காணப்படும் பரமாணுக்கள் போல்வனவாம் என்றார்.*

*அண்டங்கள் யாவும் உண்டை வடிவின என்பது உணர்த்தப் பெற்றது. பிறக்கம் - பெருக்கம். நின்ற + எழில் என்பது நின்றெழில் என விகாரப்பட்டது. நூற்றொரு கோடியின் என்பது எண்ணற்றன என்னும் குறிப்பே.*

***உரை (7-12):-*** *படைப்புக் கடவுளரின் கூட்டமும், காப்புக்*

எறியது வளியிற்
கொட்கப் பெயர்க்குங் குழகன் முழுவதும் :
படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவுள் திருத்தகும்
அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி

*கடவுளரின் அதிகமான எண்ணிக்கையும், தோன்றுதலும், நிலைத்து வளர்தலும், ஒடுங்குதலும் நிகழ்தற்குரிய காலப்பகுதிகள் தன்னுள் அடங்கப் பெற்ற மிகப்பெரிய ஊழிக்காலங்களின் தொடக்கமும், நிலைபேறும், முடிவும், சிறு சுழற்காற்றுகளாகிய நுண்பகுதி பல தன்னகத்துட்கொண்ட வெளிப்படையான பெரிய சூறாவளியின் வீச்சுக்காற்றுப்போலச் சுழலுமாறு, அவை முழுவதையும் இயக்கும் இளைஞன் (ஆகவும் விளங்கு முதல்வன்).*

***குறிப்பு (7-12):-*** *அண்டங்கள் பலவாதலின், அவை தோறும், அவற்றை படைப்போருங் காப்போருமாய் கடவுளர் பல திறப்பட்டனர். ஒடுங்குவோர் இறைவனோடு ஒற்றித்து ஓதப்பட்டனர். உலகம்யாவுந் தோன்றி யொடுக்கும் பேரூழிக் காலமானது பெரும் புயற்காற்றுப் போலவும், அண்டத்தின் கடவுளரின் காலங்கள் பெரும் புயலிலடங்கிய சிறு சுழற்காற்றுப் போலவும் கருதப்பட்டன. சூக்கம் - சூக்குமம்; நுட்பம். தூலம் - பெருமை. சிறு புயல்கள் நுட்பப் பகுதிகளாகவும் பெரும் புயல், தூலமாகவும் கருதப்படும். சூறை மாருதம் - சுழற்பெருங் காற்று. எறிதல் - வீசுதல். என்றும் ஒரு படித்தாய் முதிர்ச்சியிலனாகலின், இறைவன் இளைஞன் ஆயினன். எல்லாந் தோன்றி முதிர்ந்து ஒடுங்கி யொழியத் தான் ஒருவனே அம்மாறுபாடில்லாதவனென்பது கருத்து, 'முழுவதும்' என்பதைக் 'கொட்க' என்பதனோடு சேர்க்க. கொட்க - சுழல. மாப்பேரூழிக் காலமும், மீண்டு மீண்டும் வருதலின் 'சுழல' என்றார். குழகன் - மென்மையான அழகை உடையவன்.*

***உரை (13-19):-*** *படைப்புக் கடவுளைப் படைக்கும் பழமைப் பெரியோன், படைத்தனவற்றைக் காக்குங் கடவுளைக் காப்பாற்று மேலோன், காக்கப்பட்டவற்றை உரிய காலத்தில் ஒடுக்குபவன் (ஒடுக்கப்பட்டவை இளைப்பாறும் வரை, அவற்றைப் படைத்துக் காக்க) எண்ணாமல் பின்னர் கருதும் திருவுள்ளமுடைய பெருமான், மேதக்கனவாகிய அறுவகைச் சமய நெறியில் நின்று அறுவகைப்பட்ட தவத்தினர்க்கும் முத்திப்பேறளித்தற்குரியராய் நின்ற கடவுளரின்*

கீடம் புரையுங் கிழவோன் நாடொறும்

அருக்கனிற் சோதி யமைத்தோன் திருத்தகு
மதியில் தண்மை வைத்தோன் திண்டிறல்
தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலின் ஊக்கம் கண்டோன் நிழல்திகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணில் திண்மை வைத்தோன் என்றென்று
எனைப்பல கோடி யெனைப்பல பிறவும்

---

*தொகை தன்னை நோக்கப் புழுக்கூட்டம் போலத் தோன்றத் தானே (உயர் முத்தியளிக்கும்) உரிமையுடையோனாய் விளங்குபவன்.*

***குறிப்பு (13-19):-*** *உலகங்களை ஒடுக்கஞ் செய்யும் உருத்திர வர்க்கத்தார் தஞ்செயலற்று இறைவனோடு அத்துவிதக் கலப்புடைய ராதலின், அவர் செயல் இறை செயலாகவே கூறப்பட்டதுணர்க. கருத்து - திருவுள்ளம். அடிகள் காலத்துச் சமயங்கள், மணிமேகலையுட் கூறப்பட்டனவாக இருத்தல் கூடும். அவற்றுட் சில, கடவுட் கொள்கை யில்லாதன. கடவுட் கொள்கையுடைய ஆறு அகச்சமயங்களே 'திருத்தகும்' எனச் சிறப்பிக்கப்பட்டன. உலோகாயதம், பௌத்தம், சாங்கியம், மீமாம்சம், நையாயிகம், வைசேடிகம் முதலிய மதங்கள் ஒருவகையான கடவுட் கொள்கையொடு விளங்கின. அச்சமயங்களின் தெய்வங்கள், அவை முடிவாகக் கூறுந்தத்துவத் தலைவராகிய உயிர்களா யமைதலின், அவைகள் இறைவனை நோக்கப் புழுப்போன்றன. மெய்யான வீடுபேற்றைத் தரத்தக்க கடவுள் சிவன் ஒருவனே யாதலின், அவனைக் 'கிழவோன்' என்றார். கரத்தல் - உயிர் முதலானவற்றைத் தத்தம் வினைப்போக முடிவின்கண் தத்தம் முதற்பொருளில் ஒடுக்கி, அவையனைத்தும் மாயையில் ஒடுங்க, மாயை தனது எல்லையற்ற வியாபகத்துள் ஏகதேசமாய் ஒடுங்க, எல்லாப் பொருள்களுக்கும் ஓய்வளித்தல். இதனை விளக்குவது 'காப்பவை கரப்போன் கரப்பவை கருதாக் கருத்துடைக் கடவுள்' என்ற பகுதி. கீடம் - வடசொல். கண் பார்வைக்குப் புலப்படாத கிருமிகள். பாக்டீரியாக்கள்.*

***உரை (20-28):-*** *ஞாயிற்று மண்டலத்திலே ஒவ்வொரு நாளுந் திகழ்கின்ற ஒளியினை அமைத்தவன். அழகு பொருந்திய திங்கள் மண்டலத்திலே (வெய்யோன் கதிரை குளிர்விக்குங்) குளிர்ச்சியைப் பொருத்தினோன், மிகுந்த ஆற்றலுடைய நெருப்பிற்கு வெப்பத்தை உண்டாக்கினவன். (பூதங்களுள்) நிலையாகவுள்ள வானிலே,*

அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன் அஃதான்று

முன்னோன் காண்க முழுதோன் காண்க
தன்னே ரில்லோன் தானே காண்க
ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க
கானப் புலியுரி அரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறும் நினைதொறும்
ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்
இன்னிசை வீணையி லிசைந்தோன் காண்க
அன்னதொன் றவ்வயின் அறிந்தோன் காண்க
பரமன் காண்க பழையோன் காண்க

*எல்லாவற்றிற்கும் இடங்கொடுத்துக் கலந்து நிற்குமியல்பினை அமைத்தோன், மேலெழுந் தன்மையுடைய காற்றிலே கிளர்ச்சியைப் பொருத்தினோன். பொருள்களின் தோற்றம் விளங்குதற் கேதுவாகிய நீரிலே, இனிய சுவையைப் புலப்படுத்துந் தன்மை யமைத்தோன். தெளிவாக, நிலத்திலே கடினமாகிய திரட்சியை இயற்றினோன். இவ்வாறே எவ்வெக் காலத்திலும், எத்தனையோ பலகோடி பொருள்களிலும் (அவற்றிற்கினமாய) எத்தனையோ பிறவற்றிலும், அவ்வவற்றின் தன்மையை அவ்வவற்றினிடமாகப் பொருத்தினோன்.*

*குறிப்பு (20-28):- கொடிநிலை, வள்ளி, கந்தழி என்றபடி ஞாயிறு, திங்கள், நெருப்பு ஆகிய மூன்றும், முதற்கண் விதிக்கப்பட்டன. அவை முத்தொழிற்குரியன வாதல் காண்க. பொய்தீர் - நிலையாமையற்ற. நீரானது கண்ணாடி போல வடிவங்களின் நிழல் காட்டுதலின், 'நிழல் திகழ்' என்றார். கடினப் பொருள்களின் சுவையைப் புலப்படுத்துவது நீரே. இன்சுவை - நல்ல சுவை. நிகழ்ந்தோன் - நிகழ்வித்தோன்.*

*உரை (29-38):- அஃதன்றியும் (படைப்புப் பொருள் யாவற்றிற்கும்) முன்னேயுள்ளவன் நோக்கியருள்க. (அல்லது முன்னே யுள்ளவ னென்றறிக). எல்லாவற்றையும் உடையவ னென்றறிக. தனக்கு யாரும் நிகரில்லாதவனாய்த் தனக்குத்தானே யொப்பானவன் (என்றறிக). பண்டை (க்காலத்தில் நிலத்தைப் பாதாளத்தினின்றெடுக்கத் தோன்றிய) பன்றியவதார முடையானின் பற்களைப் பிடுங்கி மார்பிலணிந்தவன் (என்றறிக). (தாருகாவனத்து முனிவர் வேள்வி யுடையாக அரையிலணிந்தவன் என்றறிக. திருநீறணிந்த பெருமான் (அவன் அருள்திறத்தை) எண்ணுந் தோறும் எண்ணுந் தோறும், அவனின் பிறிவாற்றாது வருந்துவேன்! (பிரிவு அதிகப்பட்டால்) ஐயோ நான் கெட்டொழிவேன்! இனிய ஓசையானது வீணையின் கண் நுட்பமாய்க்*

பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க.
அற்புதன் காண்க அநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவ னென்னு மொருவன் காண்க
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத்தருந் தன்மையில் ஐயோன் காண்க

*கலந்திருத்தல்போல அவன் உயிரிற் கலந்துள்ளோன் என்றறிக. அத்தகைய இசையொன்றினை (வீணையாகிய) அதனிடத்தில் அறிந்து அருள் புரிந்தன னென்றறிக. எவற்றிற்கும் மேலானவ னென்றறிக. எவற்றிற்கு முற்பட்டவனென்றறிக. அயனும் அரியும் அளந்தறிய வொண்ணாப் பெருமையுடையானென்றறிக.*

*குறிப்பு (29-38):- 'காண்க' என்பதை அசையாகவுங் கொள்ளுப. நோக்கியருள்க வென்றும், நீயறிக என்றும் இருவகையாகப் பொருள் கொள்ளுதலுமுண்டு. ஆதியில்லாதவ னென்பார், 'முன்னோன்' என்றார். ஒரு காலத்திலே நிலத்தைப் பாதாளத்திற் சுருட்டிச் சென்ற இரணியாக்கனைக் கொன்று நிலத்தை மேலெடுத்த போது, பன்றியுருவெடுத்த திருமால் அவன் குருதியைக் குடித்துப் பிறரைத் துன்புறுத்தினமையால், அப்பன்றியின் பல்லைப் பறித்துத் தன் மார்பிற் சிவபிரான் அணிந்த கதை சிவரகசியத்துட் காண்க. தாருகாவனக்கதை வெளிப்படை, எல்லாவற்றையும் ஒடுக்கி, அவற்றின் சாம்பலையணிந் தமையால், 'நீற்றோன்' என்றார். திருப்பெருந் துறையிலே நீறணிந்த பெருமான் பிரிந்த காலமுதல், வீடு பேற்றைத் தலைப்பட அவாக்கொண்ட அடிகள் பிரிவாற்றாமை தெரிவித்தார். வீணையில் இன்னிசை யொப்ப இசைந்தோன் என்றது இறைவன் தோன்றாது சார்பாயிருக்குந் தன்மை குறித்த வாறாம். பயிற்சியினால் வீணையின் இசை தோன்றுவதொப்ப, அன்பினால் அறிவில் இறைவன் விளங்குவ னென்றலு மொன்று. இராவணன் வரலாறு தெளிவு. 'பரமன்' என்றது மேலான முத்தி யருள்பவன் என்று குறித்தற்கு, எக்காலத்தும் வீடருள்பவன் அவனேயாதலின் 'பழையோன்' என்றார். யானென தென்னுஞ் செருக்குள்ளபோது இறைவன் தோன்றானாதலின், 'பிரமன் மால் காணா' என்றார். அன்னது ஒன்று - நாதத்துள் ஒன்றான சாதாரியை. அவ்வயின் - மதுரையில்.*

*உரை (39-41):- வியத்தகு செயல்கள் புரிவோன்; பலவடிவமுடையோன்; புகழ்ப்பதவிகளைக் கடந்த பழமையோன்,*

இணைப்பரும் பெருமையி லீசன் காண்க
அரியதில் அரிய அரியோன் காண்க
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க.
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதுஞ் செல்வதும் ஆனோன் காண்க
கற்பமும் இறுதியுங் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறும் ஈசன் காண்க
தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண் ஆண் அலியெனும் பெற்றியன் காண்க

*அல்லது சொல்லின் தரத்தைக் கடந்த முன்னோன், (சொல்மாத்திரமன்றி) மனமுஞ் சென்று எட்ட வொண்ணாத் தூரத்திலுள்ளவன்.*

***குறிப்பு (39-41):-*** *கடவுள் அருஞ்செயல்களை உயிர்கள் கணக்கிட வல்லனவல்ல; அவை அவற்றிற்கு வியப்பு விளைப்பனவே. சிலர் இயற்கைச் சட்டங்களனைத்தையும் உணர்ந்தாற்போலக் கடவுள் செயல் இயற்கைக்கு மாறாகவெனப் பேசி, அற்புதங்களை மறுப்பார், அது பொருந்தாமை ஈண்டுக் குறிப்பிட்ட தென்னலாம். வழிபடுவார்க்கு அவ்வவர் பொருளாய் நின்றருளுதலின், 'அநேகன்' என்றார். சொல் - புகழ்ச்சி. புகழ்ச்சி மிக்க விண்ணவர் பதவிகளைத் தோற்றுவித்தவனாய் அவற்றிற்கு முற்பட்டவனாய் இறைவன் இருத்தலின், அவனைப் பதவிகளிலுள்ள தெய்வங்களோடொருவனாகக் கணித்தல் தவறென்பார். அவன் பதங்கள் யாவையுங் கடந்தவன் என்றார். பதங்களைக் கடந்து உயிர் பர முத்தியடையினும், அது பழைமை யுடையதாகாது; இறைவனே 'தொல்லோனாவ'னென்பது. பதம், என்பதற்குத் தரம் என்று பொருள் கொண்டு, சொல்லினாலே யுணர்த்தப்படாது. 'சொல்' தோன்றுவதற்கு முன்னேயுள்ளோன் என்றாரென்றலு மொன்று. 'சித்தமும்' என்றமையால், வாக்கிற்குங் காயத்திற்கு மெட்டாதவ னென்பது கூறியவாறாயிற்று. தம்மை மறந்து செய்யும் மெய்யன்பினுள் அகப்படுவனென்றது, ஒன்றிற்கும் எட்டாதவனென்றால், அவனாற் பயன் பெறுதல் இயலாதோ என்ற ஐயத்தை நீக்குதற் பொருட்டென்க. சேட்சி - தூரம்.*

***உரை (42-48):-*** *ஆனால் அன்பாகிய வலையிலகப்படுவோன்;*

**கண்ணால் யானுங் கண்டேன் காண்க.**
**அருள்நனி சுரக்கும் அமுதே காண்க**
**கருணையின் பெருமை கண்டேன் காண்க**
**புவனியிற் சேவடி தீண்டினன் காண்க**
**சிவனென யானுந் தேறினன் காண்க**
**அவனெனை யாட்கொண் டருளினன் காண்க**
**குவளைக் கண்ணி கூறன் காண்க**

*ஒப்பற்றவனென்று சொல்லப்படும் ஒரு கடவுள்; விரிந்த உலகமெங்கணும் பரந்து நின்றோன்; அணுவிற் காணப்படும் நுட்பத் தன்மையிலும் வியக்கத்தக்க நுட்பமானவன்; ஒப்பிடுதற்கரிய பெருமையுடையவற்றுள் தலை நின்றவன். ஆய்ந்தறிதற்கு அல்லது பெறுதற்கு அரிய பலவற்றுள்ளும் அருமையிலருமையுடையோன்; எல்லாப் பொருள்களையும் தழுவி நின்று அவற்றை வளர்த்துக் காப்பவன். இறைவன் கலப்பில்லையேல் பொருள்களுக்கு வளர்ச்சி இல்லை. எனவே "மருவி எப்பொருளும் வளர்ப்போன்" என்றார்.*

***குறிப்பு (42-48):-*** *அன்பர்பால் இறைவன் தானே வந்தருளுதல், மீன் மான் முதலியன வலையுள் தாமே வந்து சிக்குதல் போலுதலின், அவ்வாறு கூறினரென்ப. வலையைப் பரப்பினவர் செயலற்றிருத்தல் போல, அன்பரும் அன்புமாத்திர முடையவராய்ச் செருக்கற்றுச் செயலற்றிருத்தல் குறித்தவாறாம். யானே கருதவர நாடார், 'சும்மாவருவார்' என்றதுமது. வலையிற் சிக்கியவை வெளிப் போகாமைபோல, அன்பிலீடுபட்ட கடவுள் அன்பரை விட்டக லாமையுங் குறித்தவாறாம். பொழில் - உலகம், விரிந்தோன் - இயல்பாகவே வியாபகமுடையோன். ஐயோன் - நுண்மையானவன். மிக நுண்ணியவற்றுள் அண்ணியனாய்ப் பெரியவற்றுட் பெரியனாய் அரியவற்றுள் மிக அரியனாயுள்ளவன், பெருங் கருணையால் எவற்றிற்குஞ் சார்பாய் அவற்றைப் பாதுகாப்பா னென்பது பிற அடிகளிற் குறிக்கப்பட்டது.*

***உரை (49-58):-*** *(பொருள்களை கட்டியறியுங்) கல்வியறிவினாலே நேரே அறியப்படாத நுட்பமுடையோன்; மேலுங் கீழுமாய் எங்கும் நிறைந்தவன்; முடிவும் மூலமுமில்லாதவன்; பிறவிக் கட்டையும், பிறவி நீக்கத்தையும் உண்டாக்குவோன்; இயங்காப்பொருள், இயங்கும்பொருள் எல்லாவற்றினுங் கலந்து அவையேயாய் நின்றவன்; ஊழி நிகழ்ச்சியும் அதன் முடிவும் பார்த்தவன்; (பக்குவம் வந்த காலை) எல்லாரும் தன்னை அடையும்படியாக வந்து ஆட்கொள்ளும்*

அவளுந் தானு முடனே காண்க
பரமா னந்தப் பழங்கடல் அதுவே
கருமா முகிலிற் றோன்றித்
திருவார் பெருந்துறை வரையி லேறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாளரவு இரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப

---

*முதல்வன். ஆனால் (மலம் நீங்கப்பெறாத) எத்தகைய விண்ணவரும் காணவொண்ணாத மங்கலப் பொருளாவான்; பெண்ணாகவும் ஆணாகவும் இருதன்மையு மிலாதாகவுமுள்ள வடிவொடு தோன்றுவதால் அவற்றின் தன்மை யுடையானெனப்படுவோன், அவனை (ஒன்றுக்கும் பற்றாத) அடியேனுங் கண்ணாற் காணப்பெற்று மகிழ்ந்தேன்.*

***குறிப்பு (49-58):-*** வேதசிவாகமங்களைப் படித்த அளவானே இறைவனது இயல்பை அறியமுடியாது. நூலறிவு தூயமாயையிலெழும் நால்வகை வாக்கிற்கப்பாற்பட்டதன்று. அதனால், தூயமாயையுங் கடந்த முதல்வனை அவ்வறிவால் அறிய முடியாதென்றலு மொன்று. மேன்மையுடையார்பாலுந் தாழ்மையுடையார்பாலும் இறைசெயல் காணப்படுதலின், "மேலொடு கீழாய் விரிந்தோன்" என்றாரென்க. கற்பம் - படைப்பு முதல் இறுதிவரையுள்ள பெரும்பொழுது, இறைவன்முன், காலமனைத்தும் ஒருங்கே தோன்றுதலின், 'கற்பமு மிறுதியுங் கண்டோன்' என்றாரென்க. 'தேவர்' என்றது ஞானம் பெற்ற உருத்திர வர்க்கத்தாருக்குக் கீழ்ப்பட்ட வானவரையே குறிக்கும். பெண், ஆண், அலி என்ற மூவகைத் தோற்றங்கட்குங் காரணமாய் பெருமானை, அத்துவிதக் கலப்புப்பற்றி, அத்தன்மைகளையுடையானென்றலு மொன்று, இறைவன் ஆண்மூர்த்தங்களாகவும், சத்திமூர்த்தங்களாகவும், அருவுருவ மூர்த்தமாகவுந் தோன்றுதலின், அவ்வாறு கூறினாரென்பாரு முளர். அடிகட்கு இறைவன் திருவடிவு காட்டினமை தெளிவு. திருவருளை நாடா நிலைமை தன்பாலுளதாக அடிகள் கருதுதலின் 'யானும்' என்றார். தன் சிறுமையும் இறைவன் பெருமையுங் குறித்தவாறாம். நிற்பது - அசரம். மலை, மரம் முதலியன. செல்வது - சரம், புழு முதலியன. கற்பம் - காலம்.

***உரைநடை (59-65):-*** இறுதி இரண்டடிகளையும், 'அவனெனை... காண்க' என்ற அடிக்கு முன் வைத்துப் பொருள் கொள்க.

நீடெழில் தோன்றி வாளொளி மிளிர.
எந்தம் பிறவியிற் கோப மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கி
பூப்புரை யஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா இன்னருள் நுண்டுளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளந் திசைதிசை தெவிட்ட, வரையுறக்
கேதக் குட்டங் கையற வோங்கி
இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்

***உரை (59-65):-*** *அவன் அருளானது மிகுதியாக முகிழ்க்கும் அமுத ஊற்றானவன்; அவனது இரக்கத்தின் பெருமையை யுணர்ந்தேன். (என்னை?) இந்நிலவுலகத்திலே, (என்னை ஆட்கொள்ளவேண்டித்) தனது செவ்விய பாதங்கள் பொருந்த வந்தவன்; பேரின்பமளிக்கும் பரம்பொருளானவன் என்று சிறியேனும் தெளிந்தேன். அவன் குவளை மலர் போன்ற கண்களையுடைய உமையொருபாகன். திருவருட் சத்தியுந் தானு மொருங்கு வந்து என்னைப் பிறவிக் கடலினின்று எடுத்தாட்கொண்டு பேரருள் புரிந்தவனென்றறிக.*

***குறிப்பு (59-65):-*** *மேலே தானுந் தன்தையலும் 'தாழ்சடை யோனாண்டிலனேல்' என்றதுங் காண்க. பாசம் நீங்கிய காலை, திருவருட் சத்தியின் துணைகொண்டு சிவத்தையடைதலின் அம்மையையுடன் கூறினர். குவளை - தண்ணருளைக் குறிக்கும். அது நீலோற்பல மெனப்படும். பாச நீக்கத்திற்கு அவளும் சிவப்பேற்றிற்கு அவனுங் காரணராதலின், இரண்டையும் ஒருங்குபெற்ற அடிகள் தம்மை அவளுந்தானும் உடனே யாட்கொண்டருளினமை கூறினார். கடல் மக்களுக்கு நேரே பயன்படாது. ஆதலால் கடலே முகிலாகத் தோன்றி எனப்பட்டது.*

***உரை (66-72):-*** *மேன்மையான பேரின்பக் கடல் முழுவதுமே, சூல்கொண்ட கரிய பெருமேகம் போல வடிவெடுத்து, அழகு நிறைந்த திருப்பெருந்துறை யென்னும் மலைமேலேறித் தக்க அருளாகிய மின்னல் வெளிச்சமானது ஒவ்வொரு திசையிலும் பரவ, ஐவகை வேட்கைப் பிணிப்பாகிய, வாள்போன்ற கொடிய பாம்புகள் கெட்டோட, (பிறவியின்) கடுந்துன்பமாகிய வேனிலானது தனது விரிந்த தலையை மறைத்துக் கொள்ள, மிகுந்த அழகுடைய தோன்றிச் செடிபோல, ஆட்கொள்ளத் தோன்றிய ஆசிரியரது ஞானவொளி விளங்க.*

அவப்பெருந் தாபம் நீங்கா தசைந்தன
ஆயிடை வானப் பேரியாற் றகவயின்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்(து)
ஊழ்ஊழ் ஓங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்பறித் தெழுந்(து)
உருவ அருள்நீர் ஓட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகில்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேல் மகிழ்தலின் நோக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட உழவர் ஆரத் தந்த

*குறிப்பு (66-72):-* *'அதுவே' என்பது பரமானந்தப் பழங்கடலின் ஒரு பகுதி மாத்திரமின்றி முழுவதுமே என்பதைக் குறித்து நின்றது. கரு - சூல்; நிறைநீர். புலம் - பொறியறிவாலாகிய அவா, பந்தனை - பந்தம்; கட்டு. விடமானது, உடம்பிலுள்ள குருதியைப் பிணித்தாற் போல ஐம்புல அவா உயிரைப் பிணித்து அறிவைத் தொலைத்தலின் அவை பாம்பிற்கு ஒப்பிடப்பட்டன. 'வெந்துயர் என்பதில் வெம்மை, கடுமை குறித்தது. துயர், பலதிறப்பட்டு விரிதலின் அதற்கு 'மாத்தலை' கூறினர். தோன்றி - மழைக் காலத்துச் செடி. தோன்றிய ஆசிரியன் - தோன்றி எனப்பட்டனன். வாள், ஞானத்திற் கறிகுறி.*

***உரை (73-82):-*** *எங்கள் பிறவிகளாகிய தம்பலப் பூச்சிகள் செறிந்து தோன்ற, கடவுளின் பெரிய இரக்கமானது முரசடித்தாற் போல இனிய முழக்கஞ் செய்ய, பூப்போன்றதாயுள்ள (அடியாரது) கூப்பிய கைகள் காந்தள் மலர்போல விளங்க, குறையாத இன்பந்தரும் அருளானது சிறிய துளி வடிவங்கொள்ள, நேர்மையான பேரறிவாகிய வெள்ளம் திக்கெங்கும் திரண்டோங்க, ஒரு வரையறைப்படுமாறு (மக்கள் தத்தஞ் சிற்றறிவிற்கேற்ப) ஏற்படுத்திக் கூறும் கொள்கைகளின் கூட்டமானது எல்லையற்று உயர்ந்து பரந்தமையாலாகிய அறுசமயங்களாகிய கானல் நீரினை நணுகித் தாகந் தீர்க்கப் போந்த நீண்ட கண்களையுடைய மான் கூட்டம் போலக் கதியடையும் விருப்பால் ஆராய்ச்சியுடன் சென்ற சிற்றறிவுயிர்கள், அக்கானல் நீரினைத் தமது அகன்ற பெரிய வாயினாற் பருகியும், நடந்த தளர்ச்சியும், மிகக் கெடுதியான தாகமும் நீங்கப் பெறாது உழன்றன.*

அண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க
கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க
அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க
அச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலும் ஈர்த்தாட் கொள்வோன் வாழ்க
சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க
எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேரமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க் கேதில்எம் இறைவன் வாழ்க

***குறிப்பு (73-82):-*** *பிறவிகள் மழைத் தொடக்கத்திலெழுந்து செத்தொழியும் பூச்சிகட்குவமிக்கப்பட்டன. இடி முழக்கம் இங்கே கருணை முழக்கமாயிற்று. கருணை யிடி, ஐம்புலப் பாம்பு சாதற்கிட மாயிற்று. முரசு, வெற்றி குறிப்பது. 'மாப்பெருஞ் கருணை முரசெறிந்து இன்முழங்கி' என உரைநடை கொள்க. அஞ்சலி - கை கூப்புதல். செங்காந்தள், மழைக்காலத்துத் தோன்று மலர். பூப்புரையஞ்சலி - மலர்க்கை வணக்கம். மலர்ந்த கையை இணைத்து வைத்துள்ள இரட்டைக்கை வர்த்தனைகளுள் ஒன்று. சிவனுக்குப் பூக்களை இடுகிறபோது வைத்துக் கொள்ளப்படுவது. செஞ்சுடர் என்பதில், செம்மை, நேர்மையெனப் பொருள்படும். சுடர் மெய்யறிவைக் குறிக்கும். கேதம் - சங்கேதம், ஏற்பாடு, கொள்கை. குட்டம் - கூட்டமென்பதன் முதற் குறுக்கம். கை- எல்லை. 'கேதம்' என்பதற்குத் துன்பமென்றும், குட்டம் என்பதற்குக் குளமென்றும் பொருள் கொள்ளுதலுமுண்டு. நீர்நசை - அருள்வேட்கை. நெடுங்கண், ஆராய்ச்சி. மான்கணம் - சமயிகளின் கூட்டம். அறுவகைப் புறச் சமயங்களாற் கதி கைகூடாமையின் உயிர்கள் பெருநெறி நோக்கி உழன்றமை குறித்தவாறாம்.*

***உரை (83-95):-*** *செஞ்சுடர் வெள்ளம் தேவ கங்கையில் பெருக, அத் தருணத்திலே அந்த வானப் பேராற்றின் உள்ளிடத்தே புகுந்து கலந்து பேரின்பமாகிய பெரிய சுழலினைச் சுழித்து, (மெய்யாகிய மணிகளை) வாரிக் கொண்டு, எமது பாசக்கட்டாகிய கரைகளை மோதி அசைத்து, உடைத்து, வரிசை வரிசையாக மேன்மேலும் வளர்ந்து சென்ற நல்வினை, தீவினையென்னும் இருவினைகளாகிய பெருமரங்களை வேரோடு பிடுங்கி மிதந்துவந்த அழகு மிக்க அருள் வெள்ளத்தைச் செலுத்தித் தொண்டராகிய பயிர்த்தொழிலோர் கடத்தற்கரிய எல்லையையுடைய சாந்தமென்னும் பெரிய கால்வாயைக்*

காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க
நச்சர வாட்டிய நம்பன் போற்றி
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி
நீற்றொடு தோற்றவல்லோன் போற்றி நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதங் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவின் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்

*கட்டி, வாசனை வீசுகின்ற தேன் மலர் போன்ற இருதயக் குளத்திற்கு உண்மையாகிய நீர்வாயினையமைத்து, பொறியடக்க மென்னுஞ் சிறந்த அகிற்புகை சேரும் வரம்பினையுடைய ஓங்காரமாகிய சங்கொலிக்கும் உள்ளமாகிய குளத்திலே அருள் வெள்ளமானது மேன்மேலும் பெருகுவதை மகிழ்ச்சியோடு பார்த்து, வழிபாடு என்னும் வயலுள் அன்பு என்னும் வித்தை விதைத்துப் பயன் கொண்டு துய்க்க உதவிய உலகெங்கும் பெறுதற்கரிய முகில் போன்றவன் வாழ்க.*

***குறிப்பு (83-95):-*** *தேவ கங்கையிலே இறைவனாகிய மேகம் புகுந்து அருண் மழை பெய்வித்து, அன்பர் பயன் கொண்டு இன்பம் நுகரும்படி செய்வித்தமை கூறப்பட்டது. உருவம் - அழகு, ஓட்டா - ஓட்டி, செலுத்தி, சந்து - பொறை, சாந்தம், சிறை - எல்லை, நிறை - பொறியடக்கம், வண்டு - சங்கு, ஓங்காரத்திற் கறிகுறி, மகிழ்தலின் - மகிழ்ச்சியொடு, அண்டம் - உலகத் தொகுப்பு. தூய்மையாகிய வாசனையும் பற்றுதலாகிய இனிமையுமுடையது. நல்ல உள்ளமென்பது. வெறி - பற்றின்மையைச் சுட்டும். மலர்க்குளவாய் - மலரின் குளவாய்; வாய்மையாகிய என்பது வருவித்துரைக்கப்பட்டது. 'ஓட்டா' என்பது, 'தந்த' என்பதோடு முடிகின்றது. தொண்ட உழவர் கட்டி, கோலி, நோக்கி, இட்டு, ஆர என முடிக்க. ஆர - நுகர. மேகன் - வரையாத வள்ளன்மையால் மேகத்தைப் போன்றவன்.*

***உரை (96-98):-*** *கரிய படத்தையுடைய பாம்பை அரைப் பட்டிகையாக அணிந்த கடவுள் வாழ்க; செயற்கரிய பெருந்தவத்தினர்க்கு அருள் புரியும் முதல்வன் வாழ்க. (பாண்டியன் முதலியோர்க்கு அபாயம் வந்தபோது) பயத்தை நீக்கி யாட்கொண்ட வீரன் வாழ்க. அல்லது எனது பிறவிப்பயத்தை நீக்கியாட் கொண்ட வீரன் வாழ்க.*

ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை யொழியச்செய்த வொண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி 120
ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
ஆற்றா இன்பம் அலர்ந்தலை செய்யப்
போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்

***குறிப்பு (96-98):-*** *பணம் - படம், அதனையுடைய பாம்பிற் காயிற்று. பாம்பு, குண்டலி சக்திக்கு அறிகுறி. உலகியக்குஞ் சத்தியைத் தன்பாற் கொண்டவன் என்பது கருத்து. அது வானில் நுட்பமாகவுள்ளது. வானிறம் புகைநிற மென்பதால், அதற்குக் கருநிறங் கூறப்பட்டதென்பாரு முளர். காணப்படும் உலகிற்கும் காணப்படா வுலகிற்கும் நடுநிகர்த்தாய் உள்ள அச்சத்தி, இரண்டினும் நிறைந்த இறைவனுக்கு அரைநாண் போலாயிற்று. கரும்பாம்பைக் கச்சையாக அணிந்துள்ளமையின் கரும்பணக்கச்சைக் கடவுள் என்றார்.*

***உரை (99-105):-*** *நாடோறும் வினையிற்படாது இழுத்து என்னை ஆண்டருள்பவன் வாழ்க. எதிர்பாராது வந்து கவியும் பெருந் துயரத்தை அறவே யொழிப்பவன் வாழ்க; தன்னை யடைந்தார்க்குக் கிடைத்தற்கரிய அமுதமாகிய பேரின்பத்தைக் கொடுப்போன் வாழ்க. மிகுதிப்பட்ட இருளிலே வளைந்தாடுவோன் வாழ்க. பெரிய மூங்கிலை யொத்த நயப்புடைய, தோளினளாகிய திருவருட்சத்தி கணவன் வாழ்க. (தன்னைச்) சார்தலில்லாதவர்கட்கு இயைபு காட்டாத எமது தலைவன் வாழ்க. அன்பர்க்கு, இளைப்புக் காலத்துப் பயன்படும் ஈட்டிய பொருள்போல்பவன் வாழ்க.*

***குறிப்பு (99-105):-*** *நிச்சல் - நித்தியல் - நித்தியம் - ஒவ்வொரு நாளும், சூழ்தல் - முன்வினைப் பயன் எதிர்பாராது வந்து மூடுதல். உலகம் ஒடுங்கிய காலையும் இறைவன் நுட்பமாய (சூக்கும) ஐந்தொழி லியற்றுதலின், 'கூரிருட் கூத்தொடு குனிப்போன்' என்றார். கூரிருட்கூத்து, சூக்கும ஐந்தொழிலையுங் குனித்தல் தூல ஐந்தொழிலையுங் குறிக்குமென்பு. கூரிருள், என்பதைக் காளிக்கு ஆகுபெயராகக் கொண்டு, அவளொடு நடம்புரிவோன் என்பாருமுளர். மூங்கில், பசியநிறம், மென்மை, ஒளி இவற்றைக் குறிக்கும். கூரிருட் கூத்தில், இறைவனுக்குத் துணையாய் நிற்பவள் சத்தியேயாதல் கூறினவாறாம். கலித்தொகை கடவுள் வாழ்த்துள் அக்கருத்துக் கவினுறத் தெரித்தமை காண்க. இறைவன் நலங் கொடுப்பினும், அதனைத் துய்க்கும் இயைபில்லாதார், ஏதிலராவர். அவர்கட்கு*

மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்
திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்(து)
உற்றவர் வருந்த உறைப்பவர்க் கொளித்தும்
மறைத்திறம் நோக்கி வருந்தினர்க் கொளித்தும்
இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்கு
அத்தந் திரத்தின் அவ்வயின் ஒளித்தும்

இறைவன் பேருதவி தெளிவாகப் பயன் படுமாறில்லை என்பது கருத்து. அடுத்த அடியில் அன்பர்க்கு உற்ற விடத்து உறு பேருதவியா மென்றார். எய்ப்பு - முதுமைநோய் முதலியவற்றால் உளதாகும் இளைப்பு. வைப்பு - சேமித்து வைத்த பொருள்.

உரை (106-114):- திருப்புறம்பயத்தில் பாம்பு தீண்டி இறந்த ஒருவனை உயிர்ப்பித்தற் பொருட்டுக் கொடிய பாம்பொன்றினை ஆட்டி (அதனால் விடந்தீர்ந்து அவனை உயிர்ப்பித்த) நம்பெருமானுக்கு வணக்கம். அவர்தம் திருவடியன்றி வேறு எதிலும் செல்லாது நிலைத்து பித்தம் ஏறச் செய்த பெரியோனுக்கு வணக்கம். அடியரை ஆட்கொள்ளத் திருநீறணிந்த திருமேனியோடு தோன்ற வல்லவனுக்கு வணக்கம். நான்கு திக்கிலுமுள்ள நடப்பனவற்றை நடப்பித்துங் கிடப்பனவற்றைக் கிடப்பித்தும் நிற்பனவற்றை நிற்பித்தும், இன்ன தன்மையனென்று சொல்லும் மொழியின் தரத்தைக் கடந்த பழமையோன், மனங்கொண்டுணருமுணர்ச்சியினாற் பற்றப் படாதவன், கண் முதலிய (ஐந்து) பொறியறிவினாற் காணப்படாதவன், வான் முதலிய பூதங்கள், ஐவகையாகத் தோன்றும்படி அவற்றை வகுத்தவன். சொற்பதங்கடந்த தொல்லோன்.

சொற்பதங்கடந்த தொல்லோன் என்பது வாக்கிற்கு அப்பாற்பட்ட தன்மையையும், உள்ளத்துணர்ச்சியிற்கொள்ளவும் படான் என்பது மனத்திற்கு எட்டாத் தன்மையையும், கண் முதற்புலனால் காட்சியும் இல்லோன் என்றது மெய்க்கு எட்டாத் தன்மையையும் உணர்த்தின. ஒன்றற்கும் எட்டாத கடவுளை நாம் அறிவது எப்படி? என்று மந்தமதியினர் அயராதவாறும் ஆசை மீதூரும்வண்ணமும், அவனால் படைக்கப்பட்டனவே விண்முதல் மண்ணீறான பூதங்களும் பௌதிகங்களும்; அவற்றைக்கொண்டு கருத்தாவுண்மை அறிக எனப் பக்குவாபக்குவஞானிகட்கும், பூவின் நாற்றம்போல எங்கும் பரவிச் செறிந்து இன்பம் தருவோன் எனப்

முனிவற நோக்கி நனிவரக் கௌவி
ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து
வாள்நுதற் பெண்ணென வொளித்தும் சேண்வயின் 135
ஐம்புலன் செலவிடுத்(து) அருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயிர் ஆக்கை
அருந்தவர் காட்சியுள் திருந்த வொளித்தும்

*பக்குவஞானிகளுக்கும் முறையே உண்மை உணர்த்தியவாறாம்.*

***குறிப்பு (106-114):-*** *திருப்புறம்பயத்தில் கணவனையிழந்த காதலியின் பொருட்டு இறைவனே பாம்பாட்டியாக வந்து கணவன் உடம்பிலுள்ள விடத்தை இறக்கி உயிர்ப்பித்தானென்பது குறித்தவாறு. பிச்சு - பித்து - அன்பினாலாகிய பெரு விருப்பம். நீற்று, என்பதற்கு அழித்தல் என்று பொருள் கொண்டு, தோற்றம் என்பதற்கு படைத்தல் என பொருள் கொண்டு அந்தமுமாகியுமாயிருக்க வல்லான் என்று பொருள் கூறுவாருமுளர். எவ்வகைச் செயலும் இறைவன் செய்விக்கவே நிகழ்கின்றதென்பது கருத்து. ஆதலின், நடத்தல், கிடத்தல், நிற்றல் மூன்றையும் விதந்தனர். அப்படித் தொழிற்படுப வற்றிற் கெல்லாம் முற்பட்டவனாதலின், 'பழையோன்' என்றார். மனமொழி மெய்களைக் கடந்தவன் என்பதைப் பிற அடிகளிற் குறித்தார். நிற்பன - அசரங்களாகிய மரம், மலை. நடப்பன - சரம்; மனிதன் முதல் எறும்பு ஈறானவை. கிடப்பன - கிருமி, புழு முதலானவை. அவ்வவ்வினைக்கேற்ப உடலைக் கொடுத்து இயக்குகிறான்.*

***உரை (115-119):-*** *மலரினின்று எழுகின்ற மணம்போல மேம்பட்டு உலகெங்கும் நீக்கமற நிறைந்து (எவற்றிற்குஞ் சார்பாய்ப்) பொருந்திய பெருந்தன்மையை இக்காலத்தே எனக்கு எளிதின் வந்து அறிவுறுத்தி அருளி அழியுந் தன்மையுடைய உடம்பெடுக்கும் பிறவியானது நீங்கும்படிச் செய்த ஞானமுதல் இற்றைநாளிலே என்பால் எளிதாக வந்தமர்ந்தோன்; அவனுக்கு வணக்கம்.*

***குறிப்பு (115-119):-*** *மலர், தோன்றும் பொருள், நாற்றம் நுட்பமாய்த் தோன்றாதுள்ளது. முகர வல்லார்க்குத் தோன்றும். அங்ஙனமே இறைவன் தோன்றாச் சார்பாயிருந்து அன்பர்க்கே புலப்படுவன். பிற பொருட்சார்பும், எளிதினறியப்படுதலுமிலன் என்பார், 'உயர்ந்து' என்றார். திருவாசகத்திற் பிறிதோரிடத்திலும் 'உற்ற வாக்கையினுறு பொருள் நறுமலரெழுதரு நாற்றம் போற் பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்' என்றது காண்க. தனது*

ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயில்தோறும் இன்றே பயில்தொறும்
ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்
ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலில்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும்
தன்னே ரில்லோன் தானேயான தன்மை

*அகண்ட வியாபகப் பெருமையை இறைவன் தமக்கறிவுறுத்தினமை குறித்தார். சிவஞானத்தால் அது உணரப்படுத்தலின் பிறவி யறுதற்கு ஏதுவாயிற்று. தமதுள்ளத்தே வீற்றிருந்தமை கூறுவார் 'எளிவந்து இருந்தனன்' என்றார். போற்றுதல் என்று பொருள்படுந்தொழிற் பெயராகப் போற்றி என்பதைக் கொள்ளின், அது வணக்கமென்று பொருள்படும்.*

*உரை (120-126):-* *உருக்கம் மிக்க உடம்பைத் தந்தவனுக்கு வணக்கம். இன்ப ஊற்றாக உள்ளத்தே அமர்ந்து அதனை மகிழ்விப்போனுக்கு வணக்கம். தாங்க முடியாத பேரின்ப வெள்ளமானது பொங்கிப் பரந்து அலைவீச, அதனைப் பேண இயலாத இவ்வுடம்பை நான் தாங்க விரும்பேன். பச்சை மணிக் குவியலும் சிவந்த பெரிய மாணிக்க ஈட்டமும் காணுகின்ற மின்னலொளியைத் தன்னகத்துட்கொண்ட பொன்னொளி விளங்கினாற் போலச் (சத்தியுஞ் சிவமுமாய்) இறைவன் விளங்கவும், அவனை நான்முகனுந் (திருமாலும்) போய் முயன்று தேடினராக, (அவர்கட்குத் தன் மெய்யியல்பினை) மறைத்தும்.*

*குறிப்பு (120-126):-* *அழிதரும் ஆக்கையை ஒழித்து, அளிதரும் ஆக்கையைச் செய்தான். அளி - அன்பாலாய உருக்கம். அன்பின் மிகுதியின் பயனாக இன்பப் பெருக்கம் எழுகின்றது. அதனை முற்றிலும் நுகர, உடம்பு தடையாதல் கூறியவாறு. இறைவியின் நிறம் பசுமை யாதல் பற்றி, 'மரகதக் குவாஅல்' என்றார். இறைவனுருச் செவ்விய தாகலின், மாமணிப் பிறக்க மென்றார். தூய்மை மின்னொளி யாலும், மாறின்மை, பொன்னொளியாலுங் குறிக்கப்படும். 'தேடினர்' என்ற பன்மையால் திருமாலுங் கொள்க. செருக்குப் பற்றி அயனரிக்கு இறைவன் வெளிப்பட்டிலர். நற்றவத்திற்குரிய வெவ்வேறு படிகளில் நிற்போர்க்கும், இறைவன் வெளிப்படாது, தவம் முற்றிய தாழ் மனத்தோர்க்கே அவன் தன் தன்மையைத் தானே காட்டுவா னென்பதைக் கீழ்ப்போந்த அடிகளில் விளக்கினமை காண்க.*

என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி ஆட்கொண் டருளி
மறையோர் கோலங் காட்டி யருளலும்
உளையா அன்பு என்புருக ஓலமிட்டு
அலைகடல் திரையின் ஆர்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்பவுங்
கடக்களிறு ஏற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றே னாக அவயவஞ் சுவைதரு

***உரை (127-135):-*** *முறையாக நூல் வழியிற் பொருந்தி தன்னைக் காண முயன்றவர்க்குத் தன்னை மறைத்தும், (உலகப் பொருள்களிலீடுபடாமைக்காக) உறவினர் வருந்தவும் (அதனைப் பாராட்டாது) மனவொருமை கொண்டு இறைவனைக் காணும் விருப்பொடு உறுதியாக நின்றவர்க்கு ஒளித்தும், மந்திர முறையாற் கடவுட்காட்சி காண்பான் வருந்தி முயன்றவர்க்குத் தன் மெய்த்தன்மையை மறைத்தும், இந்த உபாயத்தாற் காண்போமென்று முயன்று எதிர்பார்த்திருந்தவர்க்கு அந்த உபாயத்திலேயே அவ்விடத்தில் ஒளித்தும், பரம்பொருளைச் சாந்தமாகப் பார்க்கவும் மிகுதியாகப் பற்றவும் முயன்றவர்க்கு, ஆண் வடிவங்கொண்டு தோன்றியும், ஒளி பொருந்திய நெற்றியுடைய பெண் திருமேனியோடு தோன்றியும், இரண்டுமிலாத வடிவாகத் தோன்றியும் மறைந்து தன்னியல்பினைக் காட்டாமலும்.*

***குறிப்பு (127-135):-*** *முதலிலே நூலிற் சொன்ன ஒழுக்க முறைப்படி நிற்றல் கூறப்பட்டது. மன அடக்கம் அல்லது மனோலயம் அடைதற்கு முயலும்முறை பின் கூறப்பட்டது. மந்திர வகைகளைக் கையாளுவதாலும், வேறு உபாயங்களைக் கையாளுவதாலும் இறைவன் வெளிப்படான். சூழ்ச்சிக்கு மேற்பட்ட சூழ்ச்சியனாதலின், உபாயத்திலேயே ஒளிக்கவல்லா னென்றனர். சாந்தமாக அன்பு செய்தலின் பயனாக, இறைவனது உருவத் திருமேனியின் காட்சி கிடைப்பினும், மெய்யியல்பு புலனாகாமை காண்க. நனிவர - மிகுதியாக அருள் கிடைக்கப்பெற.*

***உரை (136-145):-*** *நெடுந் தூரத்திலே, ஐம்பொறி யறிவினைப் போகும்படி நீக்கி, கடத்தற்கரிய மலைகள்தோறும் போய் நுகர்வனவற்றை வெறுத்தமையால், உயிர் மாத்திரமுள்ள தசையற்ற வெற்றுடம்புடைய செயற்கரிய தவத்தினரது பார்வையுள் விளங்கினும், அவர்கள் திருத்த மெய்தற்பொருட்டு முற்றிலும் தோன்றாதொளித்தும், ஒருபொருள் உண்டோ, இல்லையோ வென்ற உணர்ச்சி யுடையார்க்கு*

கோற்றேன் கொண்டு செய்தனன்

ஏற்றார் மூதூர் எழில்நகை யெரியின்
வீழ்வித் தாங்(கு) அன்று
அருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்
தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி முறையோ
தரியேன் நாயேன் தான்எனைச் செய்தது
தெரியேன் ஆஆ! செத்தேன் அடியேற்

*ஒளித்தும், முன்னாட்களிற் பயிலுந்தோறும் இந்நாளிற் பயிலுந்தோறும் மறைந்து போகின்ற கள்ளனைக் கண்டோம், கூடுங்கள், அன்றலர்ந்த பின்னல் மாலையால் அவனது திருவடியில் விலங்கிடுங்கள், வலம் வாருங்கள், சூழ்ந்து நில்லுங்கள், பின்தொடருங்கள், விடாதேயுங்கள், பிடித்துக் கொள்ளுங்கள் என்றவர்களுடைய பிடிக்கு முழுவது மொளித்தும்.*

*குறிப்பு (136-145):- பற்றற்ற யோகியர்க்கும், சிவஞானம் பெறாத விடத்து இறைவன் முற்றிலும் வெளிப்படான், அவர்கள் திருந்துதலாவது, ஞானம் பெறுதற்குரிய பக்குவம் அடைதல், இறைவனைக் காணப் பெறாவிடத்து உயிரின் சிற்றறிவு முனைத்து, ஐயுறவு தோற்றுவிப்பின், அது ஞானப் பேற்றிற்குப் பெருந்தடையாகும். இறைவன் திருவருட் காட்சி ஒருகாற் பெறினும், செருக்கற்ற நிலையில் நில்லாது, உயிரின் தற்போத முயற்சி மேற்பட்டெழுமாயின், இறைவன் வெளிப்படா னென்பது இறுதியாகக் குறித்தவாறு. துற்றவை - நுகர்ந்தவை.*

*உரை (146-157):- தனக்கு யாரும் ஒப்பில்லாத பெருமான் தானே எல்லாவற்றொடும் அத்துவிதமாய்க் கலந்து அவையாவன தன்மையையும், தன்னில் தானாயுள்ள தனியியல்பையும், என்னைப் போன்றவர்கள் கேட்கும்படி வந்து அறிவுறுத்தியருளி, வலியப் போர்க்கழைத்தாற் போலழைத்து அடிமையாகக் கொண்டருளி அந்தணனாகிய ஆசிரிய வடிவங் காட்டி யருளியதோடு அவ்வாறருளினவுடனே, சலிப்பில்லாத அன்பினாலே எலும்பும் உருகும் படியாக முறையிட்ட, நான் கொந்தளிக்கிற கடலின் அலைபோலக் கூவிக்கூவி யெழுந்து தலைமயங்கிக் கீழேவீழ்ந்து உருண்டு கதறிப் பித்துக்கொண்டவர் போல மால்கொண்டு, வெறிகொண்டார் போலக்களித்து, நாட்டிலே பார்த்தவர்கள்*

கருளிய தறியேன் பருகியும் ஆரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்.

செழுந்தண் பாற்கடல் திரைபுரை வித்து
உவாக்கடல் நள்ளுநீர் உள்ளகந் ததும்ப
**வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறுந்**
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்தழை
குரம்பை தோறும் நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்தேன் பாய்த்து நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
**எற்புத் துளைதொறும் ஏற்றினன்** உருகுவது
உள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்
கள்ளூ றாக்கை யமைத்தனன் ஒள்ளிய
கன்னற் கனிதேர் களிறுஎனக் கடைமுறை
என்னையு மிருப்ப தாக்கினன்; என்னிற்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராஅமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.

*திகிலடையவும், கேட்டவர்கள் அதிசயிக்கவும், தன்மேற் பாகனை ஏறவிடாதபடி மிகுந்த பெருமதங் கொண்ட மதயானைபோல, (மிகுதிப்பட்ட இன்ப அன்பினைத்) தாங்க இயலாதேனாகும்படி, எனது உறுப்புக்களை யெல்லாம் சுவைமிக்க கொம்புத் தேன் போன்ற இன்ப வுணர்ச்சியாற் செய்தமைத்தனன்.*

***குறிப்பு (146-157):-*** ***சிற்றறிவுடைய உயிர்க்குப் பேரறிவும் பேரின்பமும் தலைப்பட்டவுடன், அவற்றின் பாரம் தாங்க இயலாவென்பதும், அவற்றினாலாய மெய்ப்பாடுங் குறித்தவாறாம். அருளலும் என்பதை ஈற்றடியிற் 'செய்தனன்' என்பதோடு முடிக்க, 'உருக' என்பதோடு முடித்தலு முண்டு. அறைகூவல் - எமக்கு ஆளாகிப் பயனுறுவார் அனைவரும் வரலாம் எனக் கூவிக் கூறல். உளையா அன்பு - வருத்தா அன்பு.***

***உரை (158-167):-*** *(திரிபுரத்தினராகிய) எதிர்த்தவர்களது பழைய ஊர்களை அழகுமிக்க புன்னகையிலெழுந்த நெருப்பினாற் சுட்டெரித்து வீழ்த்தியதுபோலத் தனது அருட்பெருந் தீயினால் அடியேங்கள் ஒருத்தரும் தவறாதபடி எங்களுடைய அடிமையுடம்பாகிய குடிசையை ஒடுக்குவித்தான். வளைந்த (உள்ளங்) கையில் நெல்லிக்கனியைப் போலத் தவறிப் போகாத கைகண்ட அமுத மாயினன். எம்பெருமான் வாழ்க. (அவன் எவ்வாறு எனக்குக் கிட்டினானென்பதைப்) பிறர்க்குரைக்க அறியேன். அவன் என்னைச்*

செய்த விதத்தை நாய்போன்ற யான் தாங்கமாட்டேன். அதை அறியு மாற்றலிலேன். ஆ ஆ! செருக்கற்றொழிந்தேன். அடியேனுக்கு நல்கியதை (பேரின்பத்தை) அளந்தறிய வல்லேனல்லேன். அதனைக் குடித்தும் நிறைவெய்தல் பெறேன். மிகுதியாக விழுங்கவும் ஆற்றிலில்லேன்.

**குறிப்பு (158-167):-** ஏற்றார் - எதிர்த்தவர். முப்புர தகனம். மும்மல நீக்கத்தைக் குறிக்குமென்ற திருமந்திரக் கருத்து, இங்கே புலனாதல் காண்க. கையை வளைத்து உள்ளங்கையிலுள்ள பொருள் கீழே விழாதபடி வைத்த காலை, அது தடக்கை யெனப்படும். உருண்டு போகும் நெல்லிக்கனி உள்ளங்கையில் உருளவிடமில்லாதிருப்பதோடு அதன் எப்பகுதியும் காட்சிக்குச் செவ்விதிற் புலனாமென்ப. நெல்லிக்கனி கருநெல்லியைக் குறிப்பதாய்ச் சாவாமருந்தாகிய கற்பமாமென்பர். அது பேரின்பம் ஈயும் இறைவனுக்கு உவமை யாயிற்று. பேரின்ப அவா மேலீட்டினாற் பருகியுமாரேன் என்றார். தனது ஆற்றலுக்கேற்றவாறே. அதனை உட்கொள்ள முடியுமன்றி மிகுதியாக முடியாதென்பார். 'விழுங்கியு மொல்லகில்லேன்' என்றார்.

**உரை (168-177):-** முழு மதிக்காலத்தே கடல் நடுவிற் பொங்கும் நீர்போல, உள்ளத்தினுள்ளே பேரின்பமானது நிறைந்து வளமிக்க பாற்கட லலைபோலத் துளும்பச் செய்து, சொல்லுந் தன்மையைக் கடந்த பேரமுதமானது உரோமத்தி னடிதோறும் நிரம்பத் தங்கும்படி செய்தனன். நாய் போன்ற அடியேனது உடம்பினகத்தே சிறு வீட்டிருக்கை கொண்டருளி தீயேனுடைய புலால் மிகுந்த உடம்பின் குருதிக் குழாய் நரம்பு முதலிய செய் கரைகடோறும் இனிய தேனைப் பாய்ச்சி, அதிசயிக்கத் தக்க நிறைவான அமுத ஒழுங்குகளை எலும்புத் துவாரந்தோறும் பாய்வித்தனன். உருகுந் தன்மையுடைய உள்ளத்தினாலே வடிவமைத்தாற் போல (ஒவ்வொரு பகுதியிலும்) நெருங்கி (அமுதம்) ஊறிக் கசிகின்ற உடம்பைத் தந்தனன்.

**குறிப்பு (168-177):-** பொருள் கொள்ளுமிடத்தே, இரண்டாவது அடியை முதலிற் கொள்க. உயிரினறிவிற் றோன்று மின்பமாதலின் உள்ளகத்தே கடல் நடுநீர் என்றார். முழுமதி - பேரறிவைக் குறிக்கும். உயிரிற் கலந்த பேரறிவினடுவே இன்ப முதிப்பதென்றறிக. பேரறிவுக்கு அறிகுறி - பாற்கடல். குரம்பை யென்பது உடம்பையும் அதன் பகுதியாய நரம்புகளையுங் குறிக்கும். குரம்பு, வரம்பு, கள்ஊறு எனவும், அள்ளூறு எனவும் பிரிப்பர். கள் - தேன். உடம்பு நினைவு வந்தபோதும் உடம்பெங்குங் கலந்துள்ள முதல்வனது பேரின்ப நிறைவே புலனாதலாலும், அதற்குக் காரணமாய அன்பும் மேற்படுதலாலும், உடம்பிலே அமுதம் ஊறுவதென்றார்.

***உரை (178-182):-*** *ஒளிமிக்க கற்கண்டின் இனிமையுடைய கனியைத் தேர்ந்துண்கின்ற (இறுமாப்புடைய) யானை போல, முடிவான முறையாகத் தகுதியற்ற அடியேனையும் இருக்குமாறு செய்தருளினன், அயனரியறியாப் பெருந்தன்மையன். மேலாகிய திருவருள் தேனானது என்னிற் கலக்கும்படி செய்து, அவ்வருளோடு, மிகமேம்பட்ட பேரின்ப அமுதத்தையும் அமைத்து வைத்தருளினன்.*

***குறிப்பு (178-182):-*** *இறுதியடியைக் 'கருணைவான்' என்பதற்கு முன் கொள்க. அருள் விளக்கமுஞ் சிவ விளக்கமுங் கூறியவாறு. ஒண்மை அருளையும், கனி - சிவானுபவத்தையுங் குறிக்கும். இனிமை நிலை பெற்றிருத்தலின், கன்னற்கனி யென்றார். கடை முறை - கடையா முறையெனக் கொண்டு, அருள்பெற அடியருட் கடை நின்ற முறையிலெனப் பொருள் கொள்வாருமுளர். பரா - மேலான. வான்தேன் - தூயதேன்.*

*'வாக்கிறந்தமுதம் மயிர்க்கால்தோறும் தேக்கிடச் செய்தல்', 'எற்புத் துளைதொறும் ஏற்றுவது' - இவையெல்லாம் திருவருளை நுகரும் போது உளதாம். மனம் வாக்குக்கு எட்டாத அனுபவ நிலையைச் சொல்ல மாட்டாமை சொல்லிக் காட்டியது. மற்றையோர் கனவிலும்கூட காணமுடியாத நிலை.*

*தில்லையில் அருளிய*

## 4. போற்றித் திருவகவல்

--------

***நிலை மண்டில ஆசிரியப்பா***
***சகத்தின் உற்பத்தி***
*திருச்சிற்றம்பலம்*

**நான்முகன் முதலா வானவர் தொழுதெழ**
**ஈரடி யாலே மூவுல களந்து**
**நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்**
**போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்(று)**
**அடிமுடி யறியும் ஆதர வதனிற்**
**கடுமுரண் ஏன மாகிமுன் கலந்து**
**ஏழ்தலம் உருவ இடந்துபின் எய்த்து**
**ஊழி முதல்வ சயசய வென்று**
**வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்**
**வழுத்துதற் கெளிதாய் வார்கடல் உலகினில்**

---

*(போற்றித் திருவகவல் - போற்றியென்ற ஈற்றுச் சீருடைய அடிகளின் மிகுதிகொண்ட திருவகவல். போற்றி என்னும் வணக்கத்தை அறிவிக்கும் சொல் மிகுதியாக வருதலின் இப்பெயர் பெற்றது).*

*(சகத்தின் உற்பத்தி - உயிர்களின் தோற்றம்) இஃது இவ்வகவலின் ஒரு பகுதியாக அமைந்துள்ளது. அகவல் முற்றும் அதைப் பற்றியதன்று.*

*உரை (1-10):- படைப்புக் கடவுள் முதலாகவுள்ள தேவர் களெல்லாம் வழிபட்டுச் செல்லவும், வாமனாவதாரத்திலே தனது இரண்டடிகளி னாலே மூவுலகங்களையும் அளந்து, நான்கு திசையிலுமுள்ள முனிவர்களும் தமது ஐம்புலன்களும் மகிழ்ச்சி யடையும்படியாக வணக்கஞ் செய்யப்பெற்ற ஒளிவீசுந் திருமுடி யினையுடைய பெருமை மிக்க திருமால், (இறைவன் அனற்பிழம்பாய் நின்ற) அக்காலத்திலே ஈசன் திருமேனியின் அடியின் முடிவைக்காணும் விருப்ப மிகுதியால், வலிமை மிகுந்த பன்றி வடிவெடுக்க, (அயனுக்கு) முற்பட்டுக் கீழேழுலகினும் புகுந்து, ஊடுருவத் தோண்டிப் பின்னர்க் (கீழ்ச்செல்ல இயலாது) இளைப்படைந்து (எம்பெருமானை நோக்கி) உலக முடிவுக்கு முதல்வனாயுள்ளவனே! உனக்கே வெற்றி*

யானை முதலா எறும்பீ றாய
ஊனமில் யோனியின் உள்வினை பிழைத்தும்
மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்(து)
ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்

*வெற்றியென்று துதித்து வணங்கியுங் காணப்பெறாத திருவடிகள் வழிபடுதற்கு எளிதாக வெளிப்படும் நெடுங்கடல் சூழ்ந்த இந்நிலவுலகிலே.*

***குறிப்பு (1-10):-*** *மூவுலகு - பூவுலகு, வளியுலகு, வானுலகு. மேல், கீழ், நடு என்றுஞ் சொல்வர். இதனுட் தேவருட் சிறந்த திருமால் யானென தென்னுஞ் செருக்கறாமையால், இறைவன் திருவடிகளைக் காணப் பெறாமை கூறினார். அரி, ஒரு குள்ளப் பிராமண வடிவமெடுத்துச் சென்று, மூவடிமண் வேண்டி, ஈரடியாலே உலகனைத்தும் அளந்து மூன்றாவது அடி மண் கிடையாமையால், மாவலி தலையிலடி வைத்த கதை வெளிப்படை. நிலைப்புக் கடவுளாதலின், ஐம்புலனும் தத்தம் நிறைவைப் பெறுமாறு இயற்ற வல்லவனாதலின் 'ஐம்புலன் மலர்' என்றார். திருமாலுக்குக் கீழாக உள்ள கடவுள் அயனாதலின், அவன் முதலாக உள்ள பிற தேவரைக் கூறினார். திருமாலுக்கு மேற்பட்டவர்கள் உருத்திர வர்க்கத்தினர். அவர்கள் இறைஞானம் பெற்றவர்கள். அடிமுடி - அடியின் முடிவு. உடல் வலிமையும் மனவலிமையு முடைமையால், 'கடுமுரண்' என ஈரடை கொடுத்தார். அன்பர்க்கருள இறைவன் புவனியிற்சேவடி தீண்டினனென்பார், 'வழுத்துதற் கெளிதாய்' என்றார். 'எளிதாய' என்பது 'எளிதாய்' எனக் குறைந்து நின்றது. அல்லது 'எளிதாய்' என்பது எளிதாக எனக் கொண்டு எளிதாகவே (அவற்றை வழுத்துதற் பொருட்டு) எனப் பொருள் கோடலுண்டு. ஏழ்தலம் - அதல, விதல, சுதல, நிதல, தராதல, ரசாதல, மகாதலம் என்பன. இடந்து - பிளந்து.*

***உரை (11-14):-*** *(பெரிய) யானை முதற் (சிறிய) எறும்பு வடிவாக உள்ள (பிறவிகளிலே), குற்றம் இலாதாகப் பொருந்திய கருப்பைகளிலே, அவற்றுள் நிகழுஞ் செயல்களின் கெடுதிக்குத் தப்பியும், மனிதப் பிறவியிலே தாய் வயிற்றிலே நிகழும் குறைவில்லாத புழுக்களின் போரிலே (சிதைவு படாது) தப்பியும். ஊனமில்யோனி - வெள்ளம் போல இடையறாது வரும் பிறப்பு. இது முதல் 30 வரிகள் கருப்போப நிடதக் கருத்துக்களை அறிவிப்பன.*

***உரை (15-26):-*** *தாயின் கருப்பையில் ஒரு மாதம் ஆனவுடன்*

ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈர்இரு திங்களிற் பேர்இருள் பிழைத்தும்
அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படுந்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்
ஆண்டுகள் தோறும் அடைந்த அக்காலை

*தான்றிக்காய் அளவு அடைந்த கருவானது, கருப்பையிற் பொருந்தி ஒன்றுபடாது பிளவு படுதலாகிய இருமையினின்று தப்பியும், இரண்டாவது மாதத்திலே, பிற புழுக்களின் இடர்ப்பாட்டு மிகுதியாலே உருவெடாமையினின்று தப்பியும், மூன்றா மாதத்திலே கரு வளர்தற் பொருட்டுக் கருப்பையிற் பெருகுங் கொழுப்பான நீர் மிகுதியினின்று தப்பியும், கரு நீரினாலே கருப்பையிலே நான்காந் திங்களிலே இருள் மிகுந்த காலை, அந்த இருளில் நின்று தப்பியும், ஐந்தாம் மாதத்திலே (கருப்பை நீர் மிகுதியாலும் இருள் மிகுதியாலும்) சாவதினின்று தப்பியும், ஆறாவது மாதத்திலே தினவு மிகுதியா லுண்டாகிய துன்பத்திற்குத் தப்பியும், ஏழாவது மாதத்திலே கருப்பை தாங்காமையாற் பூமியிற் காயாய் விழுவதினின்று தப்பியும், எட்டாவது மாதத்திலே, கருப்பையிலுண்டாகிய வளர்ச்சி நெருக்கத்திற்றப்பியும், ஒன்பதாவது மாதத்திலே வெளிப்பட இயலாது வருந்துன்பத்தில் தப்பியும், பத்தாவது மாதத்திலே தாயும் தானும் வெளிப்படுத்தற் காகப் படும் துயரக் கடலினின்று தப்பியும், (நிலவுலகிற் பிறந்து) வளருங்காலை.*

***குறிப்பு (15-26):-*** ***யானையினும் பெரிய பிராணிகளும் எறும்பினுஞ் சிறிய பிராணிகளுமிருப்பினும், அவற்றையும் இனம் பற்றிக் கொள்ளுக. பெரு வழக்காய்க் கட்புலனாயுள்ளவற்றை விதந்தனர். தக்க தசமதி - வெளி வருவதற்குரிய பத்தாம் மாதம். துக்க சாகரம் - அளவிலடங்காக்கடல் போன்ற துன்பம்.***

***உரை (27-41):-*** *நெருக்கியும் அழுத்தியும் துன்புறுத்தல் முதலிய* ***எத்தனையோ பல இடையூறுகளிற் றப்பியும், காலையில் மலங் கழித்தல், நடுப்பகலில் உண்டாகக்கூடிய கடும்பசி தவிர்த்தல், நள்ளிரவிற் செய்யுந் துயில் என்பவற்றின் சார்பாய துன்பங்களில்***

ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்துங்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுள் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்
தெய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்
தீர்க்கிடை போகா இளமுலை மாதர்தங்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்
பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்துங்
கல்வி யென்னும் பல்கடற் பிழைத்துஞ்
செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பல துறை பிழைத்தும்

*தப்பியும், ஊர்களுக்குப் போக்குவரவு என்பதனால் வரும் இடையூறுகளில் தப்பியும், கருநிறமுடைய கூந்தலினையும், சிவந்த வாயினையும், வெள்ளிய பல்லினையும், கார் காலத்து வளமுடைய மயில் கண்டு அடங்குதற் கேதுவாய மென்மையினையும் ஒன்றை யொன்று நெருக்கி, உள்ளே திரட்சியெய்தி, கச்சு அற்று விழும்படி மேலெழுந்து, ஒளி வீசி, எவ்வங்கத்தினும் அதிகமாக முற்பட்டுப் பருத்துப் பாரந்தாங்காது இடையானது மெலிந்து வருந்தும்படி எழுச்சி பெற்றுப் பக்கத்தில் விரிந்து ஈர்க்கில் கூட இடையிற் போகக் கூடாதபடி விலக்கும் இளமை நயமிக்க நகிலையுடைய பெண்டிர்களுடைய (வேல்போலக்) கூரிய கண்களினாற் கவர்ந்து கொள்ளப்படுதலாகிய கொள்ளைக்குத் தப்பியும், (பொருள், இன்பங்களைத்தேட) மால்கொண்ட உலகத்தினருடைய பெரிய துறைகளையுடைய முயற்சிக் கடலைக் கலக்கும், மதயானை போன்ற ஆசையினின்று தப்பியும், கல்வியென்னப்படும் பலவாகிய கடல்களைத் தப்பியும், செல்வமென்கிற துன்பத்தினின்று தப்பியும், வறுமையென்னும் பழைய நஞ்சினின்று தப்பியும், சிற்றெல்லை களையுடைய பல்வகைப்பட்ட முயற்சிகளிற்றப்பியும்.*

***குறிப்பு (27-41):-* நெருக்குதல், அழுத்துதல் முதலியன. பலவகை யான வசதியின்மைகளால் விளைவன. காலை மலங் கழித்தல் உடற் புனிதத்திற்கும் சுகத்திற்கும் இன்றியமையாதது. பசியின் கடுமை**

தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின 45
ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்.

*வெம்மை மிக்க நண்பகலிற்றான் தோன்றும். "சேமம் புகினும் யாமத் துறங்கு" என்றவாறு நிசிநித்திரை அவசியமானது. அகப்பற்று கடத்தற்கரியது ஆதலின், மாதர் மயலை விரித்துரைத்தார். கண்கவர் வனப்பு, நகிற்குண்மை தெளிவு. ஒருங்குதல் - அடங்குதல். கார்காலம் - மயில் மகிழ்ச்சியுடன் வளமுறுங்காலம். சாயல், மென்மை; கண்ணும் நகிலும் நங்கையரின் சிறந்த அங்கங்களாதலின் அவற்றை விதந்தனர். செல்வமானது, பாதுகாப்புக் கவலை முதலிய பல இன்னல்களை விளைவித்தலின் 'அல்ல'லென்றார். "புல்வரம்பாய பலதுறை" யென்பன. பொழுது போக்காகவும், மிக்க பயனில்லாதன வாயுமுள்ள சிறு முயற்சித் துறைகள். கல்வி பல வகைப்படும். வீடுசேர்க்குங் கல்வியே பயனுடைய கல்வி. பிற கல்விகளிலீடுபட்டால் அவை தவமுயற்சிக் கிடையூறாகும்.*

***உரை (42-47):-*** *கடவுள் ஒருவனுளன் என்ற நினைவு ஏற்பட்டு வெறுப்பற்றதொரு பெரும் பொருளை நாடுதலும் ஆறுகோடியெனக் கணக்கிட்டுக் கூறப்படும் மயக்கஞ் செய்யவல்ல சடவுலக ஆற்றல்கள், தத்தம் பல்வேறு திறப்பட்ட சூழ்ச்சிகளைக் காட்டுவான் தொடங்கிவிட்டன. உண்மையான நண்பர்களும் பக்கத்திலுள்ள பிறரும் கடவுளை நாடாமைக் கேதுவாகிய நாத்திகத்தினைப் பலகால் எடுத்துப் போதித்து, அதனால் நாவில் தழும்பு ஏறப்பெற்றனர்.*

***குறிப்பு (42-47):-*** *ஆறுகோடி மாயாசத்திகள் இன்ன வென்பது*

**"மாமாயை மாயை வைந்தவம் வைகரி
ஓமாயை உள்ளொளி யோராறு கோடியிற்
றாமான மந்திரஞ் சத்திதன் மூர்த்திகள்
ஆமா யலவாந் திரிபுரை யாங்கே" – திருமந்திரம்**

*என்பதால் விளங்கும்.*

*மாமாயை - சுத்தமாயை. மாயை - அசுத்தமாயை. வைந்தவம் - சுத்தமாயையாலாகிய பொருள்கள். ஈண்டு மத்திமையென்று*

சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியருஞ்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்.
மிண்டிய மாயா வாத மென்னுஞ்
சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்து
உலோகா யதனெனு மொண்திறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிட மெய்தி
அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவுந்

---

*கொள்ளலாம். வைகரி - செவிப்புலனாம் வாக்கின் மூலம். ஓமாயை - பைசந்தி. உள்ளொளி - சூக்குமை.*

*பேரின்ப நாட்டத்தையே முனிவிலாத பொருளென்றார். உலகப் பற்றுவிட்டு, மெய்ந்நாட்டத்திற் செல்லுங்கால் உளவாகிய இடையூறு களைத் தொகுத்துரைத்தார். உலகியல் நெறியைத் தவிர்தல் கூடாதென்பதே, பக்குவம் வரப்பெறாத நண்பர், நொதுமலர், உறவினர் முதலியோரின் கருத்தாதலின் அக்கருத்திற்கேற்ற முயற்சியை அவ்வவர் தத்தம் முறையிற் செய்வராயினர். உயர் ஞான நாட்டமில்லாத கிரியாவான்களும், பிறச் சமயத்தாருந் தத்தங் கொள்கை விரித்தல் இயல்பே.*

***உரை (48-53):-** உறவு என்னும் பழமையான பற்றுக் காரணமாகப் பிறவிகளில் தொடர்ந்து வருகிற ஆவினங்கள் பிடித்துக் கூவிப் பதைபதைத்துக் கூட்டமிட்டுக் கடவுளை நாடச் செல்லாது தடுக்கவும்), நோன்பிருத்தலே மேலான சாதனமென்பதை மெய்ப்பித்தற் பொருட்டுக் கிரியை நூலுணர்ந்த வேதியரும் நூற் பிரமாணங் களைக் காட்டினர். வெவ்வேறு சமயநூல் வல்லார் தத்தச் சமயங்களிலே முடிந்த உண்மையானது பொருந்தியிருப்பதாக முழங்கி யெதிர்த்தனர்.*

***குறிப்பு (48-53):-** சுற்றத்தார் - பாசத்தாற் கட்டப்பட்டவராதலின், பசுக்குழாங்களெனவும், பண்டைத் தொடர்புடையராய் வருதலின், 'தொல்' எனவுங் கூறினர். சரதம் - மெய்ம்மை.*

***உரை (54-58):-** திண்ணிய மாயாவாத மதமாகிய, வேகம் மிக்க சுழற்காற்றானது சுழன்று வீசி முழங்கவும், உலகாயதமென்னும்*

தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்
தொழுதுளம் உருகி அழுதுடல் கம்பித்(து)
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையுங் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் இடையறா அன்பிற்
பசுமரத் தாணி அறைந்தாற் போலக்

*மினுக்கங் காட்டும் வலிய பாம்பினுடைய கலை வேறுபாடுகளுடைய கொடிய நஞ்சு வந்து சேர்ந்து, அதிலுள்ள பெருஞ் சூழ்ச்சிகள் எத்தனையோ பல சுற்றித் தொடரவும். மிண்டிய - திட்பமான; செறிந்த.*

***குறிப்பு (54-58):-*** *அடிகள் காலத்திலே பௌத்தமே மாயாவாத மெனப்பட்டதென்ப. பிற்காலத்திலே ஏகான்ம வாதத்துள் ஒரு பகுதி மாயாவாத மெனப்பட்டது. மாயா - மயக்கம். மயல் விளைக்கு மதமென்பது கருத்து. கடவுள் உயிர், தடை முதலியனவெல்லாம் உடன்பாடாகக் கூறி, முடிவில் அவை சூனிய மென்றலின் அது மருட்சி விளைப்பதாயிற்று. உலகாயத மதம், நிலம், நீர், தீ, வளி என்பவற்றையே உண்மைப் பொருளாகக் கொண்டு, கடவுள், உயிர் முதலியவை இல்லை யென்ற கொள்கையுடையது. ஏகான்ம வாதம், ஒரு ஆன்மா தவிர, பிறவெல்லாம் இல்பொருளெனக் கூறும். உலகாயதம் எல்லாஞ் சடப்பொருளே, சித்துப் பொருளில்லை யெனக்கூறும். அதுவும் பூதவாதம், பிராணவாதம், அந்தக்கரணவாதம் எனப் பலதிறப்படுதலின், கலாபேதத்த என்றார். விடம் அறிவைக் கவர்தல் போல, உலகாயதம் அறிவுப் பொருளின்மையை வற்புறுத்தலின் 'சுடுவிடம்' என்றார். விடம், உடம்பிற்குக் கேடுவிளைப்பது. நாத்திகம், உயிர்க்குக் கேடு விளைப்பதாகலின், 'கடுவிடம்' என்றார்.*

***உரை (59-72):-*** *அவற்றால் நெறி நின்று வழுவாது, தாங்கொண்ட கடவுட் கொள்கையை அலுத்து விட்டுவிடாது இறைவனை வழிபட்டு நெருப்பினிற்பட்ட மெழுகுபோல, உள்ளம் உருகிக் குறையுணர்ந்து அழுது உடல் நடுக்கமடைந்து, ஆனந்தக் கூத்தியற்றியும், ஓலமிட்டும், பாடல்களால் வாழ்த்தியும், (உடம்பால்) வணங்கியும், இடுக்கியும் மூடனும் தாம்பிடித்ததை நெகிழ விடாமை போலவே, உறுதிகொண்டு, பயன் கருதாத இடையறாத கடவுட் பத்தியில், பசிய மரத்திலே அறைந்த ஆணி திண்மையாய்ப் பற்றி நிற்பதுபோல, உறைத்து நின்று,*

கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுத லின்றிச்
சதுர் இழந்(து) அறிமால் கொண்டு சாருங்
கதியது பரமா அதிசய மாகக்
கற்றா மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வங் கனவிலும் நினையா(து)
அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை அறியா நிழலது போல
முன்பின் னாகி முனியாது அத்திசை

*உருக்கம் மிகுந்து, கடலலை போல அலைவுற்று, மனம் வாடி அதற்கேற்ப உடல் அசைவுற்று, உலகர் தம்மைப் பேயரென்றிகழ்ந்து சிரிப்பு, வெட்கமென்பதைத் தவிர்த்து, நாட்டிலுள்ளவர்களது குறைச் சொற்களை அணியாக ஏற்று, அவற்றால், மனங்கோணாது, (நம்மால் ஆகும் என்னுந்) திறமை யுணர்ச்சியிழந்து சிவஞானம் பெறும் பேரவா மேலிடப்பெற்று, அடைதற்குரிய வீடு பேற்றினையே மேலான வியப்பாகக் கருதி. சலியா - சலியாது; விடாது. கம்பித்தல் - நடுங்குதல்.*

***குறிப்பு (59-72):-** முதற்கண் உயர்ந்த கொள்கையில் நிலைபேறான உறுதியை வற்புறுத்தினார். உறுதியுற்றபின்தான் அன்பு நிகழும். அன்பின் இன்றியமையாமையையும் இடைவிடா நிகழ்ச்சியையும் வற்புறுத்துவார். மும்முறை அதன் மெய்ப்பாடுகளை இயம்பியருளினார். உறுதியையும், அன்பினையும் பிணைந்து பிணைந்து கூறுவராயினர். சலியாப் பிடிப்பொடு, ஆடி அலறி அன்பு செலுத்தல் சரியையெனவும், பசுமரத்தாணி அறைந்தாற் போல உறுதி கொண்டு அகங்குழைவது கிரியையெனவும், அறிமால்கொண்டு சார்தல் யோகமெனவுங் கூறுப. 'நல்' என்ற அடைமொழி பயன் கருதாமை குறிக்கும். அறிமால் - ஞானப்பித்து.*

***உரை (73-79):-** கன்றினையுடைய பசுவானது, (கன்றினைக் காணாத போது, அலறி) மனம் பதைத்தல்போல, அலறி நடுங்கி, (முழுமுதற் கடவுள் தவிரப்) பிறதெய்வங்களைச் சொப்பனத்திலும்*

என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி நாதஎன்(று) அரற்றி
உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித்து இருதயம் மலரக்
கண்களி கூர நுண்டுளி யரும்பச்
சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி.

*நினையாது, எட்டுதற்கரிய மேலான வீட்டினையுடைய ஒரு பரம்பொருள், குருமூர்த்தியாகி நிலவுலகத்தே தோன்றி ஆட்கொண்டருளிய பெருந்தன்மையை எளிமையாக எண்ணி அசட்டை செய்யாது, குரு முதல்வனின் திருவடிகள் இரண்டையும் உருவை விட்டகலாத நிழல்போல, முன் வணங்கியும் பின் தொடர்ந்தும் பிரிவின்றி நின்று, (இடையூறுகள் வந்தகாலை) வெறுப்புற்றுச் சலியாது, குருபரன் அருளிய திசை நோக்கி வணங்கி.*

*திருவடியிணையைச் சாரவேண்டிய விதிவகைகளை 'பிறிவினை அறியா நிழலதுபோல முன் பின் ஆகி' என்ற பகுதியாற் குறிக்கின்றார்கள். காலையில் மேற்கிலும், மாலையில் கிழக்கிலுமாக ஓடுதலும், எப்போதும் பிரியாதிருத்தலுமாகிய இரண்டு இயல்புகளை உடையது நிழல். வள்ளுவர் பெருந்தகை 'நிழல் தன்னை வீயாது அடியுறைந்தற்று' என்றதும் காண்க. நிழல் பிரியாதவாறு போல நாம் இறைவனைப் பிரியாமல் என்பதாம். அல்லதும், ஆசாரியன் செல்லும் பகலாயின் பின்னும், இரவாயின் முன்னுமாக நிழல்போலத் தொடர்ந்து செல்லுதல் மரபு ஆதலின் இங்ஙனம் கூறினார் எனலுமாம்.*

***குறிப்பு (73-79):-* கன்றைக் காணப்பெறாத விடத்துக் கதறியழைத்தலும், கன்றிற்கு ஏதோ தீது வந்ததோவென்றெண்ணி மனம் பதறுதலும் ஆவிற்கு நேரும். ஆவின் செய்கைகள் அதன் மனத்திற்கேற் பட்டன. அன்பர் இறைவனைக் காணவெண்ணிக் கதறுதலும், காட்சி கிடைக்குமோ கிடையாதோ வென மனம் பதறுதலுமுடையராவர். வீட்டினையே நாடுவர், பிற பயன்களை நாடுதல் கூடாதாகலின், பிற பயனேயன்றி வீடளிக்க இயலாத பிற தெய்வங்களையும் நினைதல் கூடாதென்றார். இறைவன் பொருளைப் பெருமையாகப் பாராட்டாதவிடத்து, மெய்யன்பு நிகழாது. இறைவனது அறிவு செயல்களின் வசம் தமது அறிவு செயல்களை ஒப்பித்து நிற்றலிற் சலித்தல் கூடாதென்பார், 'முன் பின்னாகி முனியாது' என்றார்.*

மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
கூடல் இலங்கு குருமணி போற்றி
தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
மின்ஆர் உருவ விகிர்தா போற்றி
கல்நார் உரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா என்றனக் கருளாய் போற்றி.

---

*முன்னிகம்வது அறிவு; பின்னிகம்வது செயலென வுணர்க. இறைவன் ஆட்கொண்ட செயலை மறத்தல் கூடாதென்பார், 'அத்திசை'யென்றார். கற்றா - கன்றை ஈன்ற பசு.*

***உரை (80-87):-*** ***எலும்பு மெலிவுற்று உருக, மிகக் கனிவுற்று இரங்கி, பத்தி யென்னும் நதியானது நிறைந்து இருகரையும் புரண்டோட, நல்ல ஐம்பொறி யறிவுகள் அடங்கி ஒருமை யுறப் பெற்றுத் தலைவனே யென்று கூவி யழைத்து, வாய் குழறி, மயிர்ப்புளகங் கொண்டு, கைம்மலர் குவித்து, அகத்தாமரையாகிய நெஞ்சம் விரிய, கண்கள் மகிழ்ச்சி மிகுதியாலே, சிறிய நீர்த்துளிகளைத் தோற்றுவிக்க, நிலைதளராத பேரன்பினை ஒவ்வொரு நாளும் வளர்ப்பவர்களுடைய ஒப்பற்ற தாயாகி அவர்களைப் பாதுகாத்தனை, உனக்கு வணக்கம். மொட்டித்து - கூம்பி. தழைப்பவர் - அன்பினை வளர்ப்பவர்.***

***குறிப்பு (80-87):-*** ***'கரையது புரள' வென்றது, அன்பின் நிறைவைக் குறித்தற்கு. ஐம்பொறி யறிவும் இறைவனையே நாடுதல் குறித்தார். மொட்டித்து - மொட்டுப் போலக் குவிந்து, கைகூப்பு, நெஞ்சம் மலர என்று நயமுற உரைத்தமை காண்க. கண்ணீர் இன்ப அன்பைக் குறித்தலின், ஆனந்தவுணர்ச்சியின் விளைவாயிற்று. அன்பினை வளர்ப்பாரை, இறைவன் வளர்க்கின்றான். 'தாய்' என்ற சொல்லிற்கு முற்றிலுந் தகுதிவாய்ந்தவன் இறைவனே யென்பார். 'தாயேயாகி' என்றார். அன்பர்க்கு வரும் எல்லாவற்றையும் இறைவனே என்று கொள்வதறிக.***

படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரசே போற்றி அமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி.

***உரை (88-99):-*** *மெய்யுணர்ச்சி நல்கும் அறிவனாக வடிவு கொண்டெழுந்தருளி வந்து, பண்டைவினையும் வருவினையுமொழிய உதவும் ஆற்றலுடைய தெய்வமே, வணக்கம். மதுரையில் விளங்கும் பொன் வண்ண மன்னனே, வணக்கம். கூடலம்பதி விளங்கக் காரணமான நன்னிற மாணிக்கமே, வணக்கம். அழகிய தில்லையம்பலத்தின்கண் திருநடமாடும் பெருமானே, வணக்கம். இற்றை நாளிலே, எனக்குப் பெறுதற்கரிய அமுதமானவனே, வணக்கம். நான்மறைகளை வெளிப்படுத்திய மூப்பில்லாத தலைவனே, வணக்கம், நந்திவடிவம் பொருந்திய வெற்றிக் கொடியையுடைய சிவனே, வணக்கம். மின்னலொளி பொருந்திய அழகிய உருவங்கள் பல்வேறுடையவனே, வணக்கம். கல்லிலே நார் உரித்தாற்போல, நெஞ்சினைப் பண்படுத்தி அதில் அன்பெழுப்பும், கனிபோல மதுரமானவனே, வணக்கம். பொன் மலைபோன்றவனே, காப்பாற்றுவாயாக. நினக்கு வணக்கம், ஆ! ஐயனே எனக்கு (விரைவில் வீடு) அருள்வாயாக, நினக்கு வணக்கம். சே - இடபம்.*

***குறிப்பு (88-99):-*** *மெய் - மெய்யுணர்ச்சி, சிவஞானம். முற்பிறவிகளிற் செய்த சஞ்சிதமெனப்படும் தொகைவினையும் வரும் பிறவிக்கேதுவாகிய ஆகாமியமெனப்படும் எதிர்வினையும் இறைவன் ஆட்கொண்ட காலை அவன் அருள் நோக்கால் எரிந்தொழிவன. ஆடகம் - பொன். ஆடிடமெனப் பொருள்கொள்ளுவாருமுளர். குருமணி - வேதப் பொருளுரைக்கும் ஆசிரியமாணிக்கமெனக் கொள்க. போகமளிக்கும் ஆடகவரசாகவும், வீடளிக்கும் குருமணியாகவும் இறைவன் ஆலவாயமர்ந்தனன். தென் - அழகிய. 'மூவர்' என்பதை, முதல்வனுக் கடையாக்காது, 'நான்மறை'க்கு அடையாக்கி, என்றும் ஒரு தன்மையான நால்வகை வாக்கெனப் பொருள் கொள்வாருமுளர். உயிரை ஆட்கொள்ளுவதில் முதல்வனே வல்லா னென்பதை நந்திக்கொடி அறிவுறுத்தும். இறைவன் திருவடிவங்கள் ஒளி வண்ண மாதலின் 'மின்ஆர்' என்றார். அவை பலவாதலின் 'விகிர்தா' என்றார். விகிர்தன் - வேறுபாடுடையவன். கார் - அன்பு; கல், நெஞ்சிற்கு அறிகுறி. கனகம் - பொன். என்றும் ஒரு படித்தாய்*

வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
உடையாய் போற்றி உணர்வே போற்றி
கடையேன் அடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி
வானோர்க் கரிய மருந்தே போற்றி
ஏனோர்க் கெளிய இறைவா போற்றி

---

*மாறிலாதவனாதலின், பொற்குன்ற மென்றார். மாற்றமுடைய தன்னைக் காத்தல் மாறிலாதவனுக்கே யியலு மென்பது கருத்து. தாம் சிவஞானம் பெற்றும், வீடு கூடவில்லை யாதலின், 'அருளாய்' என்றார். அடிகள் தமது உடலை நீத்து வீடடைதல் விருப்பமிக்கவ ரென்பது தெளிக.*

*கூடல் - மதுரைக்குள்ள மற்றொரு பெயர். முன்னொரு காலத்து வருணன் ஆலவாய்ச் சொக்கன் ஆற்றலை அறியானாகி, மதுரைமாநகரை அழிப்பதற்காகக் கடலை ஏவினானாக. கடல் நாற்புறமும் கரைபுரண்டு அலை மலைபோலெழும்ப மதுரையை விழுங்க வந்தது. அதுகண்டு மன்னனும் மக்களும் சொக்கலிங்கப் பெருமானிடம் முறையிட்டனர். இறைவன் பொன்னும் மணியும் சொரியும் நான்கு மேகங்களை ஏவி, கடல் நீரை வற்றச் செய்தனர். அவமானம் பொறுக்காத வருணன் செருக்கி, மழையனைத்தையும் ஒருங்கழைத்து "மதுரைமேல் பெய்து அழிக்க" என ஏவினான். மீட்டும் இறைவன் புயல்கள் நான்கினையும் அழைத்து, 'நீங்கள் மாடங்களாகி மதுரையைக் காப்பாற்றுமின்' என்று ஆணை வழங்கினார். புயல்கள் மாடங்களாகி மதுரையையே மூடிக் கவிந்து நின்று, ஒரு துளி நீரும் உள் விழாதவண்ணம் காத்தன. வருணன் தோற்று, வெட்கி இறைவனை வழிபட்டுய்ந்தான். இவ்வண்ணம் நான்கு மேகங்களும் கூடிக் காத்தமையினால் இத்தலம் நான்மாடக் கூடல் என வழங்கப் பெறுவதாயிற்று. இவ்வரலாறு நான்மாடக் கூடலான திருவிளையாடலில் விரிக்கப்பெற்றுள்ளது.*

***உரை (100-105):-* எல்லாம் உண்டாக்குபவனே, நிலை பெறுத்துபவனே, ஒடுக்குபவனே, வணக்கம். துன்பத்தை நீக்கும் எமது**

மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை
ஆழா மேயரு ளரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி
வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர் விறந்த வொருவ போற்றி
விரிகட லுலகின் விளைவே போற்றி
அருமையி லெளிய அழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருள் மலையே போற்றி
என்னையு மொருவ னாக்கி யிருங்கழற்
சென்னியில் வைத்த சேவக போற்றி
தொழுதகை துன்பம் துடைப்பாய் போற்றி
அழிவிலா ஆனந்த வாரி போற்றி
அழிவதும் ஆவதுங் கடந்தாய் போற்றி
முழுவதும் இறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி
வானகத் தமரர் தாயே போற்றி

*தந்தையே வணக்கம், ஆண்டவனே வணக்கம், எங்கும் நிறைந்தவனே வணக்கம், ஒளியுடைய படிகப் பிழம்பே வணக்கம், மன்னனே வணக்கம், சாவா மருந்தே வணக்கம், மணம் பொருந்திய புகலிடமாந் திருவடிகளையுடைய நீதியாளனே, வணக்கம்.*

***குறிப்பு (100-105):-** 'ஈச' என்பது ஆளுதல் என்று பொருள்படும் வினையடியாகப் பிறந்தமையால், ஆண்டவன் என்ற கருத்தை யுணர்த்தும். இறுத்தல் - தங்குதல். இறு என்னும் வினையடியாகப் பிறந்த இறைவன், வியாபகன் என்ற பொருள் குறிப்பது. தேசு - ஒளி. அம், சாரியை. சரணம் - சரணம் புகுதற்குரிய திருவடி. விகிர்தம் - நீதி முறை.*

***உரை (106-117):-** அறிவனே, வணக்கம். குற்றமற்றவனே, வணக்கம். முதல்வா, வணக்கம். ஞானமே, வணக்கம். மீட்டு நெறியே, வணக்கம். பழம் போன்ற இன்பனே, வணக்கம். கங்கை யணிந்த செவ்விய சடையுடைய நம்பெருமானே, வணக்கம். எம்மை உடைமைப்*

பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவ ருள்ளத் தமுதே போற்றி
கனவிலுந் தேவர்க்கு அரியாய் போற்றி
நனவிலும் நாயேற்(கு) அருளினை போற்றி
இடைமரு (து) உறையு மெந்தாய் போற்றி

---

*பொருளாக் கொண்டவனே, வணக்கம். உணர்ச்சி யானவனே, வணக்கம். கீழ்ப்பட்ட என்னையும் நின்னடிய னாக்கினவனே, வணக்கம். ஐயனே, வணக்கம். நுண்ணியனே, வணக்கம். சைவனே, வணக்கம். தலைவனே, வணக்கம். (வணங்கும்) அடையாளமானவனே, வணக்கம். பண்பனே, வணக்கம். நல்வழி யானவனே, வணக்கம். எனது நினைவிற் கலந்துள்ளவனே, வணக்கம். (செருக்குடைய) விண்ணவர் அடைதற்கரிய அமுதனே, வணக்கம். (செருக்கில்லாத) பிற அடியார்க்கு எழுந்தருளும் அரசனே, வணக்கம்.*

***குறிப்பு (106-117):-* *வேதம்-அறிவு. வேதி-அறிவுறுத்துவோன், கதி-வீட்டிற்குச் செல்லும் வழியையும் சென்றடையு மிடத்தையுங் குறிக்கும். அறிவு விழைவுடன் கலந்த காலை, உணர்ச்சியெனப்படும். சைவன், சிவ சம்பந்தமுடையான். சிவம் - மங்கலம். மங்கலத்தைச் செய்வோன், சைவனாவன்.***

***உரை (118-136):-* *இருபத்தொரு தலை முறையில் வருகின்ற சுற்றத்தார், அல்லது மூவழியில் வரும் ஏழு தலைமுறைச் சுற்றத்தார் மாறுபட்ட இயல்பினையுடைய நரகங்களில் அழுந்தி வருந்தாமே, ஆட்கொள்ளும் வேந்தனே, வணக்கம். நண்பனே, வணக்கம். துணைபுரிபவனே, வணக்கம். இன்ப வாழ்க்கை யானவனே, வணக்கம். (ஈட்டி வைத்த) நிதியம் ஆனவனே, வணக்கம். வீடாயவனே, வணக்கம். தம்வயமுடையவனே, வணக்கம். அப்பனே, வணக்கம். பாசத்தை அழிப்பவனே, வணக்கம். மொழியையும், மனவுணர்ச்சியையுங் கடந்த ஒப்பற்றவனே, வணக்கம். விரிந்த கடல் சூழ்ந்த உலக வாழ்வின் பயனே, வணக்கம். அரிய பொருளாயிருந்தும் (அன்பர்க்கு) எளிதின் வந்தருளும் அழகனே, வணக்கம். கார்மேகம் போல அருள்புரிகின்ற கண் போன்றவனே, வணக்கம். நிலைபெற்ற பெருங் கருணை மலையே, வணக்கம். (தகுதியற்ற) அடியேனையும் அன்பருள் ஒருவனாக்கிப்***

சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரூர் அமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறா போற்றி
அண்ணா மலையெம் மண்ணா போற்றி
கண்ணார் அமுதக் கடலே போற்றி
ஏகம் பத்துறை யெந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி
குற்றா லத்தெம் கூத்தா போற்றி.

*பெருமையுடைய திருவடிகளை அடியேன் தலைமீது வைத்தருளிய பாதுகாப்பாளனே வணக்கம். கும்பிட்ட கையினரின் துயர் களைவோனே, வணக்கம். கேடில்லாத இன்பக்கடலே, வணக்கம். ஒடுக்கமுந் தோற்றமு மில்லானே, வணக்கம். எல்லா வற்றையுங் கடந்து அப்பாற்பட்டவனே, வணக்கம். மான் போன்ற பார்வையுடைய உமையம்மை கணவனே, வணக்கம். மேலுலகங்களிலுள்ள அடக்கமுடைய விண்ணவரின் தாயானவனே, போற்றி. கரங்களின் பயனே பூசை செய்வதுதான் என்பதை உணர்ந்தேன், வணக்கம்.*

*குறிப்பு (118-136):- சிவ ஞானிகளின் நல்லியல்பினை இருபத்தொரு தலைமுறைச் சுற்றத்தாருடையராய் நரகம் புகாரென்பது ஒரு கருத்து. தந்தை வழி, தாய் வழி, தன் வழி யென்ற மூவழியிலுள்ள ஏழு தலைமுறையோர் என்பது முண்டு. மூவழிச் சுற்றத்தார்க்கும் அருள்க, அரசனே என்று வேண்டுவதாகப் பொருள் கொள்ளுவாரு முளர். தோழன், ஒத்த வுணர்ச்சி யுடையவன். துணைவன், உடன் உதவி செய்பவன். வைப்பு - சேமித்து வைத்த நிதியம். 'எய்ப்பினில் வைப்பு' என்று வந்தது மோர்க. முத்தா - பாச நீக்க முடையவனே. எவற்றிற்கு முதல்வனாய்த் தனக்கு ஒரு முதல்வனிலான், தம் வயமுடைய னென்றறிக. மனித வாழ்வின் பயன், இறை வழிபாடே. உலகு ஓங்கி வளர்தற்குக் காரணமானவனென்று பொருள் கோடலுமுண்டு. உள்ளங்கவர் வடிவினனாதலின், 'அழகே' என்றார். கருமுகிலின் நீர் மன்னாது. இறைவன் திருவருள், மன்னுந் தன்மையது. அமரர், அடக்கமுடையவர். வாரி - கடல். உயிர்களின் நுகர்ச்சிக்காகவே இறைவனால் உதவப்பட்ட உலகங்களின் அமைப்பை நுகருந்தோறும் இறைவனுடய அருளும் ஆற்றலும் விளங்குதலானும், உலகில் ஒட்டி*

கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
அடைந்தவர்க் கருளு மப்பா போற்றி
இத்தி தன்னின் கீழிரு மூவர்க்
கத்திக் கருளிய வரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கு மிறைவா போற்றி

---

*வாழ்கின்ற காலத்து விளையும் பயனாகவும் அவன் விளங்குதலானும் 'விரிகடல் உலகின் விளைவே' என்றார்.*

*அழகு - நோக்கினாரது கருத்தைக் கவர்வதாய், எல்லாப் பொறிகளாலும் துய்க்கப் பெறுவதாய், இன்னது என்று வரையறுத்துச் சொல்ல ஒண்ணாததாய் இருக்கும் பொருட்பெற்றி. அது அருமையாகக் கிடைப்பது; பல்லாயிரம் பரற்கற்களின் நடுவிலே இடைக்கும் ஒரு வயிரம்போல்வது, அது முயற்சியே இன்றி எளிமையில் கிடைக்குமானால் எத்துணை இன்பம்! அத்தகைய இன்ப அனுபவம் இறைவனைப் பெற்றதால் எண்ணத்தில் உதிக்க, இறைவனை 'அருமையில் எளிய அழகே' என்று அனுபவிக்கின்றார். அருமையில் கிடைத்த என ஒருசொல் வருவிக்க. அருமை இல்லாத எளிய அழகே என்பாரும் உளர். அருமையின்மையே எளிமையாதலின் எதிர்மறைமுகத்தானும் உடன்பாட்டுமுகத்தானும் ஒருசேர உரைத்தமைக்கு ஒரு நயம் இருப்பின் ஆம்.*

***உரை (137-141):-* *நிலமாகிய பூதத்தின்கண் ஐந்து தன்மையனாய் விரிந்தவனே, வணக்கம். நீரின்கண் நான்கு தன்மையனாய் விளங்கியவனே, வணக்கம். நெருப்பின்கண் மூன்று தன்மையனாய்த் தெரிபவனே, வணக்கம். காற்றின்கண் இரண்டு குணமுடையனாய் விரும்பி நின்றவனே, வணக்கம். வானின்கண் ஒரு தன்மையனாய்த் தோன்றியவனே, வணக்கம்.***

***குறிப்பு (137-141):-* *போற்றி, போற்றுதல் என்ற பொருளில் வணக்கத்தைக் குறிக்கும். 'காக்க' என்ற பொருளுடைய வியங்கோளுமாம். ஆதலின், இருவகையாகவும் பொருள் கொள்ளப் பட்டது. நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை என்பன ஐம்பூதத்தின் முறையேயுள்ள தன்மைகள். நிலத்தில், பிறநாற்பூதமுங் கலந்திருத்தலின்,***

ஏனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளு மிறைவா போற்றி
தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி
களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சேல் என்றிங் கருளாய் போற்றி
நஞ்சே யமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி யையா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி.

*ஐந்து தன்மைகள் அதனிடை காணப்படும். அவ்வாறே பிற பூதங்கட்குங்கொள்க.*

*உரை (142-156):- உருகுபவர் உள்ளத்தே அமுதமாயுள்ளவனே, வணக்கம். (உருகாத்) தேவர்களுக்கு அவர்கள் சொப்பனத்திலுங் காண்பதற் கரியவனே, வணக்கம். (சாக்கிரமாகிய) நனவிலும் நாய் போன்ற எனக்கு அருள்புரிந்தவனே, வணக்கம். திருவிடைமருதூரில் வீற்றிருக்கும் எமது அப்பனே, காத்தருள்க. தனது சடையின்கண் கங்கையை ஏற்று அமைத்துக் கொண்டவனே, காத்தருள்க. திருவாரூரில் தங்கியருளிய மன்னனே, காத்தருள்க. செம்மை பொருந்திய திருவையாறுடையானே, காக்க. திருவண்ணா மலையுறையும் எமது மேலோனே, காத்தருள்க. கண்ணில் நிறைந்த இன்பப் பெருங்காட்சிக் கடலனையவனே, காத்தருள்க. திருவேகாம் பரமாகிய காஞ்சிப்பதியில் வீற்றிருக்கும் எமது தந்தையே, காக்க. அவ்விடத்திலே, ஒரு பாகத்திற் பெண் வடிவங் கொண்டவனே, காத்தருள்க. திருப்பராய்த் துறையில் விருப்பமொடு வீற்றிருந்த மேலோனே, காத்தருள்க. திருச்சிராப்பள்ளியிற் பொருந்திய சிவபிரானே, காக்க. உன்னைத் தவிர வேறு ஆதரவு யாது மிலாதேன், என்னைக் காத்தருள்க. திருக்குற்றாலத்திலே நடம் புரியும் எமது கூத்தப்பெருமானே, காத்தருள்க. நாவுக்கும், கண்ணுக்கும் அமுதம் - கண்ணாரமுதக்கடல்.*

*குறிப்பு (142-156):- தேவர் பதவி, போக நோக்குடையதாகலின், இறை நினைவு அரிதாம். அதனால், அவன் கனவிலுந் தோன்றான். நினைவிலுள்ளது, கனவில் தோன்றலாம். நினைவே இல்லாதபோது கனவிலுந் தோற்றமிராது. தனக்கு அருள் புரிந்தமை, வெளிப்படையா*

பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி
உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி.
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி
அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி
இலங்கு சுடர்எம் மீசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலையார் அரிகே சரியாய் போற்றி
திருக்கழுக் குன்றில் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமு மானாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமு மிறந்த சுடரே போற்றி
தெரிவரி தாகிய தெளிவே போற்றி

---

*தலின், 'நனவிலும்' என்றார். அங்ஙனம் இறை அருள் செய்யப் பெறுந் தகுதி தமக்கின்மை தெரிவித்தல் அடிகளியல்பு. திருவிடைமருது முதலியன திருவாசகத்தின் வைப்புத் தலங்களாம். பாண்டி நாட்டிலுள்ள திருக்குற்றாலத்திலே, கூத்தர் கோவிலென்பது சித்திரசபை அடிவாரத்திலுள்ளது. அதன் கண் சிவலிங்க வடிவேயுள்ளது. எந்தை - எம் தந்தை; எம் தலைவன். தரித்தல் - வருத்தமின்றித் தாங்குதல்.*

***உரை (157-159):-*** ***திருவாவடுதுறையில் (அன்பரை ஆட்கொள்ளப்) பொருந்திய அரசே, வணக்கம். ஈங்கோய் மலையிலெழுந்தருளிய எமது அப்பனே, வணக்கம். வனப்பு மிகுந்த திருப்பழனத்திலிருக்கும் அழகனே வணக்கம்.***

***குறிப்பு (157-159):-*** *கோகழி, பெருந்துறையையுங் குறிக்கலாம். ஈங்கோய்மலை, கீர்த்தித் திருவகவலிலுங் கூறப்பட்டது. பாங்கு - அழகு.*

***உரை (160-176):-*** *திருக்கடம்பூரில் விளங்கிய வீரனே, வணக்கம்.*

தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட் கன்பா போற்றி
ஆரா அமுதே அருளே போற்றி
பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி
தாளி அறுகின் தாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி
எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன் றருளினை போற்றி
இரும்புலன் புலர இசைந்தனை போற்றி
படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுஈ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி.

*தன்னை அன்பாற் சார்ந்தார்க்குப் பேரருள் புரியும் தந்தையே, வணக்கம். கல்லால மரத்தின் கீழ் (ப்பட்டமங்கையில்) இயக்கிகள் அறுவர்க்கும். (கடம்பவனத்திலே) வெள்ளானைக்கும் அருள்புரிந்த வேந்தே, வணக்கம். தென்றமிழ் நாட்டினை(த் தனது பழமையான பதியாக) உடைய சிவபெருமானே, வணக்கம். எந்த நாட்டினருக்கும் வழிபடு தெய்வமானவனே, வணக்கம். பன்றிக்குட்டிக்குப் (பாலூட்டி) வளர்த்தருளினவனே, வணக்கம். பெருமை பொருந்திய கயிலை மலையை இடமாகக் கொண்டவனே, வணக்கம். விரைவில் வீடு அருள்புரிந்திட வேண்டுகிறேன். அம்மானே, வணக்கம். (ஆணவ) இருள் வலிகெட்டொழியும்படி (ஞானம் நல்கி) யருளும் கடவுளே, வணக்கம். உனக்கு அடிமைப் பட்டேனாகிய தனியேன் தளர்ச்சியுற்றேன், காத்தருள்க. நிலையான இடத்தைப் பெற எண்ணும்படி அருள்புரிவாய், நினக்கு வணக்கம். இவ்விடத்திலே அஞ்சாதேயென்று ஊக்கங் கொடுத்தருள் வாயாக. (பெருமானே) வணக்கம். விடத்தையே சாவா மருந்தாக விரும்பி யுட்கொண்டாய், காத்திடுக. அப்பனே, வணக்கம். தலைவனே, வணக்கம். என்றுமுள்ளானே, வணக்கம், குற்றமற்றவனே, வணக்கம். அன்பனே,*

ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி.
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்த சொன்மாலை கொண்டருள் போற்றி
புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி.

---

*வணக்கம். எவற்றிற்கும் பிறப்பிடமானவனே, வணக்கம். உடைமை யாவது உரிமையாக உடைமை. களம் - இடம். அடியார்கள் குழுமியுள்ள அவை.*

***குறிப்பு (160-176):-*** *விடங்கன் - வீரன். பிழை செய்தாலும் தன்னை வந்தடையில் பிழையை மன்னித்தருள் புரிபவன் என்பது கருத்து. வெள்ளை யானை சாபந்தீர்ந்த படலம், திருவிளையாடற் புராணத்துட் காண்க. பன்றிக் குட்டிக்குப் பால் கொடுத்ததும் அப்புராணத்துட் காண்க. தென்னாட்டிலே சிவவணக்கத்தோற்றங் குறித்தவாறு. எந்நாட்டில் எத்தெய்வம் வழிபடப்படினும், அத்தெய்வமாய் நிற்போர் சிவனென வறிக. 'பத்தா' என்பதற்குப் பதியே, தலைவனே, என்று பொருள் கோடலும் உண்டு. அத்தி - யானை; அத்தம் - கை. அம்மான் - தாய்மாமன். தமியேன் - தனித்தவனாகிய நான். அத்தன் - தலைவன், தந்தை, உயர்ந்தோன்.*

***உரை (177-182):-*** *எப்பொருளிலும் பெரிய (பிரமமே), வணக்கம். வள்ளலே, வணக்கம். அரியவனே, வணக்கம், பாசமிலானே, வணக்கம். அந்தணர் வடிவொடு வந்த நீதியே வணக்கம். என்னை யாட்கொண்டது நீதியோ, யான் (அதன் சிறப்பைத்) தாங்கமாட்டேன், நீ காத்தருள்க. எனக்குச் சுற்றமானவனே, வணக்கம். என் உயிர்க்குயிரே, வணக்கம். சிறந்த பொருளே, வணக்கம். மங்கலப் பொருளே, வணக்கம்.*

***குறிப்பு (177-182):-*** *நீதியாளனே, முறையாக அருள் பெறுந் தகுதிவரப் பெறாத என்னையும் ஆண்டது முறையோ, அருள்புரிந்த சிறப்பை ஆற்ற வல்லேனல்லேன் என்றார். சிறவு - சிறப்பு; வீடுமாம்.*

பிரான் - தலைவன், வள்ளல். தரித்திருத்தல் - ஓரிடத்தில் இருத்தல்.

**உரை (183-196):-** அழகனே, வணக்கம். மணவாளனே, வணக்கம். பஞ்சுபோல் மெல்லிய அழகிய சிற்றடியுடைய அம்மை பாகனே, வணக்கம். (உடல் ஒழித்த வீடு எப்போதருள்வாய்) என்றெண்ணி ஏக்கமுற்றேன். அடிமையாகிய நாயேன், என்னைக் காத்திடுக. விளக்க மிக்க பெருஞ் சோதியாய எமது ஆண்டவனே வணக்கம். கவைத்தலை யென்னுந் திருப்பதியில் விரும்பியெழுந்தருளிய கண் போன்றவனே, வணக்கம். குவைப்பதி யென்னும் ஊரிலே மகிழ்ந்திருந்த மன்னனே, வணக்கம். மலை நாட்டினையுடைய வேந்தனே, வணக்கம். கல்வி மிகுந்த அரிகேசரி யென்னு மூரினையுடையாய், வணக்கம். திருக்கழுக் குன்றத்தில் மேவிய ஞானச் செல்வனே, வணக்கம். திருப்பூவணத்தில் குன்றிலே அமர்ந்த ஒடுக்கக் கடவுளே, வணக்கம். அரவமாய் நின்றும் உருவத் திருமேனி கொண்டவனே, வணக்கம். அருள் நிறைந்த மலையே, வணக்கம். நான்காம் நிலையுங் கடந்த பேரறிவே, வணக்கம். அறிதற்கரிதாய் (சிவஞானத்தால்) தெளியப்பட்ட பொருளே, வணக்கம்.

**குறிப்பு (183-196):-** பஞ்சு - என்பதற்குச் செம்பஞ்சுக் குழம்பூட்டிய வென்னலாம். குவைப்பதி யென்பதற்குக் குகைகளாகிய இடங்கள் எனப் பொருள் கொள்ளுவாருமுளர். துரியம், மூன்றவத்தைக்கும் அப்பாற்பட்ட நிலை. அதனையே உபநிடத முதலிய நூல்களில் முடிவான நிலையாகக் கூறுவர். அதற்கும் அப்பாற்பட்டவன் முதல்வனென்பது சித்தாந்தக் கருத்து. மஞ்சா - மேகம் போல்பவனே. கவைத்தலை - சூலம். கவை - அறிவு. துரியம் - நனவு, கனவு, உறக்கம் கடந்த நான்காம் நிலை.

**உரை (197-214):-** தொளைக்கப்படாத தூயமுத்தாகிய ஒளியே, வணக்கம். ஆட்பட்டவர்கட்கு ஆதரவானவனே, வணக்கம். தெவிட்டாத அமுதமே, அளவிடப்படாத அருளே வணக்கம். ஆயிரம் பேருடைய அண்ணலே, வணக்கம். தாளிக் கொடியின் தழையும் அறுகம் புல்லுங் கலந்து கட்டியமாலை யணிந்தவனே, வணக்கம். நெடிய சோதியாய கூத்தனே, வணக்கம். சந்தனத் தேய்வையணிந்த அழகனே, வணக்கம். எண்ணுதற் கெட்டாத தூயபொருளே, வணக்கம். மந்திரநூல் வெளிப்பட்ட மகேந்திர மலையில் வீற்றிருந்தவனே, வணக்கம். (அடியேங்களாகிய) எங்களை உய்யும்படி ஆட்கொள்பவனே, வணக்கம். புலியின் முலைப்பாலானது மானிற்குப் பயன்படும்படி அருளினவனே, வணக்கம். அலையுடைய கடலின் மேலிடத்தே நடந்தவனே, வணக்கம். கரிக் குருவிக்குப் பண்டைக் காலத்தே அருள் புரிந்தவனே, வணக்கம். வலிய ஐம்புல வேட்கைகள்

அற்றொழியும்படி உள்ளத்திற் பொருந்தி யருளினாய், நினக்கு வணக்கம். நிலத்தின்கண் பொருந்தப் பழகிய பல்வகைத் தோற்ற முடையவனே, வணக்கம். முதலும் நடுவும் முடிவுமானவனே, வணக்கம். நரகம், விண்ணுலகம், நிலவுலகம் என்ற மூவிடத்தும் புகாதபடி, மேலான வீட்டுலகைப் பாண்டியனுக்கு நல்கியருளினாய், நினக்கு வணக்கம்.

நமது பொறிகள் தத்தமக்குரிய புலன்களை இடைவிடாது நுகர்ந்துகொண்டே இருக்குமாயின் உலக இன்பங்களில் பற்றுக்கொண்டு உயிர்களின் மனம் இறைவனைப் பொருந்தா. ஆகவே புலன்கள் புலர்ந்தால் மடைமாறிவிட்டதுபோல மனம் கடவுளைச் சென்று பற்றும். அம்மனத்தில் பரமன் அன்போடு பொருந்துவராதலின் 'இரும்புலன்புலர இசைந்தனை' என்றார். புலர என்பது காரணப்பொருளில்வந்த செயவென்னெச்சம்.

***குறிப்பு (197-214):-*** *முத்தம் - முதன்மையான மணி என்று பொருள். 'தோளா' - குற்றமற்ற என்ற கருத்தைக் குறிக்கும். 'ஆரா' என்பதை அருளே என்பதோடுஞ் சேர்ப்பதுண்டு. 'ஆயிரம்' என்பதற்குப் பல என்று பொருள் கொள்வாருமுளர். அவர் சாத்திய பச்சிலை யெதுவும் - இறைவர்க்கா மென்பது கருத்து. 'தாளியறுகு' என்பது, அறுகின் ஒருவகை யென்பாருமுளர். நீளொளியாய் நின்று அயனரிகளைக் கூத்தாட்டுவித்தவனாதல்பற்றி, 'நிருத்தா' என்றாரென்பாருமுளர். மகேந்திரத்தை, 'மந்திரமாமலை'யென்று முன், கீர்த்தித் திருவகவலிற் கூறியதுங் காண்க. புலிநிறைந்த காடொன்றிலே, பெண்மானொன்று குட்டியை ஈன்று, ஒரு புதரடியில் விட்டு நீர்பருகச் சென்ற இடத்தே வேடன் அம்பால் இறந்த போது குட்டியை நினைந்து வருந்திற்று. சிவபெருமான், பெண்புலியொன்றையே அக்குட்டிக்குப் பால் கொடுக்குமாறு செய்வித்தனர். மான்குட்டி வளர்ந்து பிழைத்துக் கொண்டது. புல்வாய், ஒரு வகை மான். வலைவீசிக் கெளிற்று மீன் கொண்டகாலை, இறைவன் அலைகடன்மிசை நடந்தனன். கரிக்குருவி ஆலவாயண்ணலைத் தொழுது உபதேசம் பெற்ற கதை, திருவிளையாடற் புராணத்துட் காண்க. 'சாந்து' என்பதற்கு திருநீறு என்று பொருள் கொள்வாருமுண்டு. நீளொளி - பேரொளி, பாவகம் - உரு, படி - பூமி.*

***உரை (215-217):-*** *நீக்கமில்லாமல் எங்கும் நிறைந்த ஒருவனே வணக்கம். செழுமை மிக்க மலர் நிறைந்த சிவபுரத்துத் தலைவனே வணக்கம். செங்கழுநீர் மாலையணிந்த கடவுளே, வணக்கம்.*

*குறிப்பு (215-217):-* சிவபுரம், பார்மேல் உத்தரகோச மங்கையென்றுந் திருப்பெருந் துறையென்றுங் கூறுப. சிவலோக மென்பாருமுளர். இறைவன் ஆசிரியனாய் வந்த போது செங்கழுநீர் மாலை அணிந்தமை, கீர்த்தித் திருவகவலுட் கூறப்பட்டது.

***உரை (218-225):-*** வழிபடுவாரது மயக்கத்தை அறுப்பாய், நினக்கு வணக்கம். தவறு யாது, பொருத்தம் யாதென்றறியா நாயினேன், தொடுத்த மொழித் தொடரை ஏற்றுக் கொண்டருள்வாய், வணக்கம். ஊர்கள் பலவற்றை யழித்த பண்டையோனே, வணக்கம், மேலானவற்றிற்கு மேலான ஒளியுடைய மேலோனே வணக்கம், வணக்கம். பாம்பணிந்த பெரியோனே, பழமையின் காரணனே, வணக்கம், வணக்கம், வணக்கம், வணக்கம், வெற்றி, வெற்றி (மிக்கோனுக்கு) வணக்கம்.

***குறிப்பு (218-225):-*** மையல் - மயக்கம்; அறியாமை. குழைத்தல் - கூட்டுதல், 'புரம்பல' என்பதற்கு முப்புரமெனவும் பொருள் கொள்வதுண்டு. திரிபுர தகனம், பல்லூழிகளிற் பலவா மென்பாருமுளர். 'புரம்பல' உடல் பல என்று கொண்டு, பல் பிறவியையும் 'அருட் பெருந்தீயால்' அழித்தவன் என்றுங் கொள்க. எக்காலத்தும் எவ்வுயிர்க்கும் பிறவியறுப்பவன் சிவனாதலின், அவன் 'புராணன்' எனப்பட்டான். புயங்கம் - பாம்பு, தோளால் நகர்ந்து செல்லுதலால் வந்த காரணப் பெயர். பாம்புகளை அணிந்தவன் - புயங்கன். புஜங்கநடனம் ஆடுவதால் வந்த பெயர். உலகை நடத்தும் பல சடசத்திகட்கும் அது அறிகுறி. காரணேசுரராகிய ஐவர்க்குங் காரணனாய்த் தனக் கொரு காரணமுமில்லாதோனாதலின், 'புராண காரண' என்றார். இறைவன் அருள் வெற்றியே நிலை பெறுதலின், வெற்றி, வெற்றி, போற்றி யென்றருளினர்.

இவ்வண்ணம், இவ்வகவல், பிரமன், மால் முதலிய தேவர்களுக்கரிய பெருமான் அடியார்களுக்கு எளியராய், நிலந்தன் மேல் வந்தருளிய நிகழ்ச்சியையும், அங்ஙனம் அடியார்களை மலபரிபாகத்தின் பொருட்டுக் கருவாய்ப் புகுத்திய கால முதல் பிறக்கும்வரை பாதுகாத்தருளும் பண்பும், பருவ வேறுபாடுகளில் நேரும் துன்பங்களினின்று அவர்களைத் தப்புவிக்கும் தயையும், நல்ல முதுமைப் பருவத்தில் கடவுள் நினைவு தோன்றிய பொழுது பலகோணங்களிலிருந்து பல சமயங்கள் தத்தம் கொள்கைகளே சிறந்தன எனச் சொல்ல அதில் மனம் மாறுபடாமல் தப்பி, தம்மடிசாரத் தாமே ஆசாரியனாக எழுந்தருளி, வந்து தாயைப் போலப் பாதுகாத்த முறைமையைப் பாராட்டி, அவருடைய பல்வேறு புகழ்களைப் பகர்ந்தும் போற்றுவதாக இனிது நிறைவடைகிறது.

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 5. திருச்சதகம்*

--------

***பக்தி வைராக்கிய விசித்திரம்****

### *5(1) மெய்யுணர்தல்*

***கட்டளைக் கலித்துறை***

***திருச்சிற்றம்பலம்***

**5. மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து (உ)ன் விரையார் கழற்கென்**
**கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி உள்ளம்**
**பொய்தான் தவிர்ந்து (உ)ன்னைப் போற்றி சயசய போற்றி யென்னுங்,**
**கைதான் நெகிழவிடேன் உடையாய் என்னைக் கண்டுகொள்ளே. 1**

***உரைநடை :-*** *உடையாய் என்பதை முதலிற் கொள்க. உள்ளம் வெதும்பி யென மாற்றுக.*

***உரை :-*** *(என்னை அடிமையாக) உடையவனே! (நின் பெருங்கருணைத் திறத்தை நினைந்து) உடம்பு தானே மயிர்க் கூச்செறிந்து நடுநடுங்க, உனது வாசனை பொருந்திய திருவடிகளை (வணங்குவான்) எனது கைகள் தாமே தலைமேற் கூப்பப் பெற்றுக் கண்களினின்று (ஆனந்த) வெள்ளம் நிரம்ப, மனமானது, ஆர்வத்தால் வெப்பமுடைத்தாக, நிலையற்ற வற்றின் பற்றுத் தானே நீங்கியொழிய உனக்கு வணக்கம், வெற்றி வெற்றி வணக்கம் என்றியம்பும் ஒழுக்கத்தையே நழுவ விடாது மேற்கொண்டு நிற்பேன். அடியேனைக் கண் பார்த்து ஏற்றுக் கொள்ளுக. மெய்ப்பாடுகளால் பத்தியும், பொய் தவிர்ந்து என்பதால் வைராக்கியமும், கண்டுகொள் என்றதால் விசித்திரமும் பெறப்படுகிறது. வெதும்பி - வெப்பமுற்று; உடல் இளைத்து.*

***குறிப்பு :-*** *தமது பேரன்பினால் இயற்கையா யெழும் மெய்ப் பாட்டினை அடிகள் குறிப்பித்தனர். உடல் நீத்து இரண்டறக் கலத்தலை, உடனே அருள் புரியவேண்டுமென்பார், 'கண்டு கொள்ளே'*

** திருச்சதகம் - நூறு செய்யுட்களாலாகிய திருப்பாடற்றொகை.*
** பக்தி வைராக்கிய விசித்திரம் - அன்பின் உறுதி யழகு.*

என்றார். 'கொள்' என்பதைத் துணை வினையாகவும் ஏற்றுக் கொள்ளென்ற பொருளில் 'முதல் வினையாகவும்' கொள்ளலாம். மெய்ப்பாடு இயற்கையாக நிகழ்தலின், 'தான்' என்பது சேர்க்கப்பட்டது. 'விதிர் விதிர்த்து' முதலிய எச்சங்களைச் செயவெனெச்சத் திரிபாகக் கொள்ளுக. பாசப்பகை கெடுதலின் இறையருளுக்கு வெற்றி வெற்றி யென்றாரென்க, 'உடையாய்' என்பதற்கு 'எல்லாவற்றையு முடையவனே' என்றும் பொருள் கொள்வர். மனம் வெதும்பலும், பொய் தவிர்தலுஞ் செய்ய, உடம்பு மெய்ப்பாடுணர்த்த, வாயானது போற்றி சயசய போற்றி யென்னவே, முக்கரணங்களாலும், வழிபாடாற்றினமை கூறியவாறாம். விரை - மணம். கை - ஒழுக்கம். ததும்பி - எல்லை கடந்து ஒழுகாது இமைகளில் துளும்பி.

**6.** கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல் லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே யிருக்கப் பெறின் இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லா தெங்கள் உத்தமனே. **2**

***உரைநடை :-*** *உத்தமனே, இறைவா, என்பதை முதற் கொள்க.*

***உரை :-*** *எங்கள் (இருள் கடந்த) முதல்வனே, அரசனே, இந்திரன், பிரமன், திருமால் என்போர் பதவிகளை (ஒரு பொருளாகக்) கொள்ள மாட்டேன். எனது வாழ்க்கைக்கு ஈறு வந்தாலும், உன்னுடைய அடியாரோடன்றிப் பிறரோடு நட்புக்கொள்ள மாட்டேன். நரகம் புகுந்தாலும், அங்கே உனது திருவருளுணர்ச்சியோடு இருக்கப் பெற்றால், அதனை இகழமாட்டேன். உன்னை யொழிந்த வேறு கடவுளரை (மனத்தாலும்) நினைக்க மாட்டேன்.*

***குறிப்பு :-*** *புரந்தரன் - இந்திரன். அயன் பிறப்பிலானென்ற பொருளிற் பிரமனுக்கு உபசார வழக்கு. நள் - சிநேகங் கொள்ளல், திருவருளாலே - திருவருளோடு. 'திருவருளாலே யிருக்கப் பெறின்' என்பதை முதற்கண் கொண்டு, 'கொள்ளேன்' முதலியவற்றிற்கும் அதனைச் சாரப்பொருள் கோடலுண்டு. வானவர் வாழ்வு, பந்தத்தையும், அடியாருறவு, வீட்டையும், பயப்பதாகலின் அவ்வாறு கூறினர். குடி - உடம்பு, வாழ்க்கை. உத்தமன் என்பது இருளைக் கடந்தவன், முதலானவன் என்று பொருள்படும் வடசொல். திருவருளுணர்ச்சியோடு நரகிடை யிருத்தல் அரிதாகலின், 'பெறின்' என்றார். திருவருளின் கட்டளையாலே அல்லது திருவருள் என்னை நரகிடை யிருக்குமாறு பணிப்பின், என்றும் பொருள் கொள்ளுப.*

7. உத்தமன் அத்தன் உடையான் அடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மால்இவன் என்ன மனநினைவில்
ஒத்தன ஒத்தன சொல்லிட ஊரூர் திரிந்தெவரும்
தத்த மனத்தன பேசஎஞ் ஞான்றுகொல் சாவதுவே. 3

***உரை :-*** *(தேவருள்) முதன்மையானவனும் எந்தையும் எம்மை உடையானுமாகிய (பெருமானுடைய) திருவடிகளையே எண்ணிக் கசிந்து, மனக்களிப்பு மிக்க பித்தன் இவன் என்று தத்தம் உள்ளக் கருத்திலே பொருத்தமானவையாகத் தோன்றியவற்றை யெல்லாம் ஊரார் கூறிடும்படி, ஊர்தோறுந் திரிந்து, எத்தகையோரும் தங்கள் மனம் போனவாறு நம்மைக் குறை கூறவும், (அவற்றாற் சிறிதும் நலிவுறாது) தற்போதம் அழிந்து, செருக்கற்றுச் செயலற்றிருத்தல் எந்த நாளிலே நிகழ்வதாகும்? **சிவப்பித்துப் பிடித்து அலையும் நிலை.** நினைதல் அன்பாலும், உருகுதல் அதன் முதிர்ச்சியாலும் நிகழும்.*

***குறிப்பு :-*** *மத்தம் - உன் மத்தம், பெருங்களிப்பு . மால் - மயக்கம், பித்து, மாலுடையானுக்கு ஆகுபெயர். உலகர் பேசுவது பலதிறப்படுதலின் 'ஒத்தன ஒத்தன' என்றார். திருப்பதிகள் தோறுஞ் சென்று இறைவனை வணங்குதலையே "ஊரூர் திரிந்து" என்பதாற் கொள்ளுதலுமுண்டு. மனநினைவில், தங்கள் தவறாகிய 'உள்ளக் கருத்தில்' என்பது குறிப்பு. எவரும், பெரியருஞ் சிறியருமாகிய எத்திறத்தாரும். **சாதல் - யான் என்ற முனைப் பொழிதல்**, செயலற்றிருத்தல். ஒத்தன சொல்லுதல், என்பது தம்மூரவர் தன்மை கூறுதலையும், 'மனத்தன பேசுதல்' அயலூரரார், வைதல் முதலிய இகழுரை பகர்தலையும் குறிக்குமென்ப. உலகவர் இகழ்ச்சியும், புகழ்ச்சியும் ஒரு தன்மையாக எண்ணும் தன்முனைப்பு என்று நீங்குமோ அன்றுதான் பேரின்ப வாயில் திறக்கிறது. ஆதலின் "எஞ்ஞான்று கொல் சாவது" என்கிறார்.*

**8. சாவமுன் னாள் தக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சம் அஞ்சி
ஆவஎந் தாய்என்(று) அவிதா இடும்நம் மவர் அவரே
மூவரென்றே எம்பிரா னொடும் எண்ணி, விண் ணாண்டுமண்மேல்
தேவ ரென்றே இறுமாந் தென்னபாவம் திரிதவரே. 4**

***உரை :-*** *முன்னொரு காலத்திலே, தக்கன் இயற்றிய யாகத்திலே கொல்லப்பட்ட ஆட்டின் ஊனைத் தின்று, (பின்னர் வீர பத்திரர் தம்மைத் தண்டிக்க வந்தபோது) சாவதற்குப் பயந்தும், பாற்கடலுள் நஞ்சு எழுந்த காலத்தே சாவதற்கு அஞ்சியும், ஐயோ, எங்கள் அப்பனே*

*(காப்பாற்று) என முறையிடுந் தன்மையுடைய, நம்மினத்தவராய (அயனும் அரியுந்) தாமோ எம்பெருமானோடு மூவராகக் கருதப்பட்டு, விண்ணுலகை யாண்டு தேவரென மண்ணுலகிற் செருக்கடைந்து திரிகின்ற தவமுடையோர்? (இங்ஙனந் தாழ்மைப்பட்டும் இவர் இறுமாந்திருத்தற்குக் காரணம்) என்ன பாவம்?*

***குறிப்பு :-*** *'தக்கன், சாவ' என்று உரைநடை கோடலுமுண்டு. 'அஞ்சி' என்பதைத் தின்று என்பதனோடும் 'நஞ்சம்' என்பதனோடுந் தனித்தனி கூட்டுக. ஆவ - ஆவாவென்பதன் குறுக்கம். அது, இரக்கக் குறிப்பு. அவிதா - ஆபத்தினின்று காப்பாற்ற முறையிடுங்காற் கூறுஞ் சொல். உருத்திரக் கடவுள் இறைவனோடு அத்துவிதக் கலப்புடைமையின், வேறு பிரித்தோதப்பட்டிலர். இறைவனே, யாண்டும் ஒடுக்கக்கடவுள் என்ற கொள்கையுமுண்டு. சகல வர்க்கத்தினராய்ச் சிவஞானம் பெறாத அயனரிமுதலியோர், நம்மைப் போலக் கட்டுநிலையிலுள்ள உயிரினத்தவ ராதலின், 'நம்மவரே' யென்றார். இதனில், ஏகாரம், வினாப்பொருளில் வந்து இழிவு குறித்தது. இறுதியில், திரிதவரே என்ன பாவம்' என மாற்றுக.*

**9.** **தவமே புரிந்திலன் தண்மலர்இட்டு முட்டா(து) இறைஞ்சேன்**
**அவமே பிறந்த அருவினை யேன்உனக் கன்பருள்ளாஞ்**
**சிவமே பெறுந்திரு எய்திற்றி லேன்நின் திருவடிக்காம்**
**பவமே யருளுகண் டாய்அடி யேற்குஎம் பரம்பரனே.** **5**

***உரைநடை :-*** *'எம்பரம்பரனே' என்பதை முதலிற்கொள்க.*

***உரை :-*** *எமது மேலோர்க்கு மேலோனே, (சிவபூசை முதலிய கிரியைகளும், சிவயோகமுமாகிய) தவத்தையே அடியேன் இயற்றுவதில்லை. நின்னைக் குளிர்ந்த மலர்தூவிக் குறைவில்லாத முறையில் வழிபாடு செய்யேன். வீணாகவே இவ்வுலகிற்றோன்றிய கடத்தற்கரிய தீவினையுடையேன். உனக்கு அன்பராயுள்ளார் நடுவிலிருத்தற்கு வேண்டுந் தூய நேர்மையை அடைதற்குரிய நல்வினைப்பயன் பெற்றிலேன், ஆதலின், அடியேனுக்கு நின்னுடைய* ***திருவடிக்கு அடிமையாகின்ற பிறவியையே*** *நீ அருள வேண்டும்.* **8.**

***குறிப்பு :-*** *'சிவம்' என்ற சொல் தூய்மையையும், செம்மையையுங் குறிக்கும்; உயர்வு நன்மை. திரு - சிவஞானம், நல்வினைப் பயன், நல்லூழ் என்றும் பொருள் கூறுப. பவம் - பிறவி. கண்டாய் அசை. பரம்பரனே, என்பதற்கு, மிகவும் மேலானவனே, என்றும் பொருள் கூறுப.*

10. பரந்துபல் ஆய்மல ரிட்டுமுட் டாதடி யேஇறைஞ்சி
இரந்தஎல் லாம்எமக் கேபெற லாம்என்னும் அன்பர்உள்ளம்
கரந்துநில் லாக்கள்வ னேஉன்றன் வார்கழற்(கு) அன்பெனக்கு
நிரந்தர மாய்அரு ளாய்நின்னை யேத்த முழுவதுமே. 6

*__உரைநடை__ :- 'நின்னை முழுவதுமே ஏத்த' என்பதை 'உன்றன்' என்பதற்கு முன் அமைக்க.*

*__உரை__ :- (பலபதிக்குஞ்) சென்று, எச்சில், புழுக்கடி, மலமூத்திரம் எனப்படும் பலவகைப்பட்ட பழுதறத் தெரிந்தெடுத்த நன் மலரைத் தூவிக் குறைபாடில்லாது உன் திருவடியை வணங்கி (நின்பால்) வேண்டியன யாவையும் தங்களுக்கே கிடைக்கும் என்ற உறுதியுடைய அன்பரது நெஞ்சிற்கு ஒளித்து நில்லாது, (பிறர்க்கு, ஒளிக்கும்) மாயமுடையவனே, உன்னையே முற்றிலும் வாழ்த்தி வழிபடற்கு உன்னுடைய பெரிய திருவடிக்கண் செய்யுமன்பினை அடியேனுக்கு எப்போதும் நிலையாக நல்கியருள்க.*

*குறிப்பு :- 'பரந்த' என்பதற்குப் 'பரவி'யெனப் பொருள் கொண்டு, அது துதித்தலைக் குறிக்கு மென்பாருமுளர். முட்டா திறைஞ்சுதலால், எல்லாம் பெறலாம் என்பது கருத்து. உறுதியான சார்புடையார்க்கு இறைவன் வெளிப்பட்டு நிற்ப னென்றார். கள்வன், தந்திரமுடையான். நிரந்தரம், இடையீடின்மை குறிக்கும் வடசொல். அந்தரம் - இடையீடு.*

*அன்பு, உபகாரம் பெற்றபோதுமட்டும் உண்டாவதாய்ப் பின்பு இல்லாமலே ஒழியும் கடையன்பும், தீயைச் சார்ந்தபோதெல்லாம் உருகி விலகியபோது இறுகும் மெழுகுபோல இறைவனையும் அவனைச் சார்ந்த பொருள்களையும் கண்டபோதெல்லாம் கசிகின்ற அன்பாகிய இடையன்பும், எப்போதும் கசிந்து கொண்டு தைலதாரை போன்று ஒழுகும் தலையன்பும் என மூவகைப்படும். இங்குத் தலையன்பே வேண்டப்படுவதென்பார் 'கழற்கு அன்பு எனக்கும் நிரந்தரமாய் அருளாய்' என்றார்.*

*இவ்வண்ணம் வரங்கேட்பதன் நோக்கம் என்னையோ என இறைவன் வினவுவாராக உட்கொண்டு, 'நின்னை முழுவதும் ஏத்த' என்றார். யான் அத்தகைய பேரன்பை விரும்புவதன் பயன் எப்போதும் உன்னை வணங்கிக்கொண்டேயிருத்தலாகிய அவ்வளவே; இதைக் காட்டிலும் இன்பவிளைவு வேறு எதிலும் இல்லை என்பது கருத்து.*

*இப்பாடலில் சாதனம் சிவபத்தியே என்பதை உணர்ந்து சொல்லுதலால் இது மெய்யுணர்தலாயிற்று.*

11. முழுவதுங் கண்ட வனைப்படைத் தான்முடி சாய்த்து முன்னாள்,
செழுமலர் கொண்டெங்குந் தேடஅப் பாலன் இப் பால்எம்பிரான்,
கழுதொடு காட்டிடை நாடகமாடிக் கதியிலியாய், உழுவையின்
தோல்உடுத் து(உ)ன்மத்த மேல் கொண்டு உழிதருமே. 7

***உரைநடை :-*** *'முன்னாள்' என்பதை முதலிற் கொள்க. 'இப்பால்' என்பதை 'கழுதொடு' என்பதோடு கூட்டுக.*

***உரை :-*** *முற்காலத்திலே, எல்லாவற்றையும் படைத்தவ னாகிய அயனைப் பெற்றோனாகிய அரி, தலை வணங்கி, வளமிக்க பூக்களைக் கையிற்கொண்டு திருவடி தொழுவதற்காக. எங்குந் தேடவும், அவனுக்குப் (புலனாகாது) அப்பாற்பட்டவனாகிய எமது வள்ளல், இவ்விடத்தே, பேயோடு சுடுகாட்டின்கண் கூத்தியற்றி, வறியவனாய்ப் புலித் தோலுடுத்து, பித்து மேற்பட அலைந்து திரிவான். (இஃதென்ன வியப்பு).*

***குறிப்பு :-*** *நாடகம் - பொருள் தழுவிய கூத்து. ஐந்தொழில் கூத்து. கதி - ஆதாரமாக அடையப்படுவது. கண்டவன் - படைத்தவன்; அப்பாலன், அப்பாலா னென்பதன் குறுக்கம்; கழுது - பேய், எல்லாம் ஒடுங்கிய இடத்தே தம்பாற் பேரன்புடைய அன்பர்பால்நுட்ப ஐந்தொழிலியற்றுவதையே கழுதொடு காட்டிடை ஆடுதலாகக் குறித்தனர்போலும். கதியிலி - போக்கில்லாதவன். கதியிலி என்பது இறைவன் ஒன்றை நாடிச் செல்லும் அவசியமில்லான், என்பதைக் குறித்தவாறு பூரணப் பொருளாகிய அவனுக்குச் செல்கதியாதுளது? தாருக வனத்து முனிவர் மீமாஞ்சக நெறி நின்று, வேள்வியியற்றி விடுத்த புலியைக் கொன்று அதன் தோலைப் போர்த்தகதை வெளிப்படை. கூத்துக் களிப்பினை, உன்மத்த மென்றாரென்ப. அன்பர்க்கன்பனாதலின், இறைவன் பித்தனெனப்படுதல் தெளிவு. உன்மத்தம் - பயித்தியம். உழிதரல் - திரிதல்.*

*வாழ்வில் மக்களால் துறக்கப்பட்டுத் தனித்தவருக்கு, உரையாடிக் களிக்க ஒருவருமின்மையால் பயித்தியம்பிடித்தல் இயல்பு. இறைவனும் எல்லாவற்றையும் அழித்து, தனித்துப் பித்தேறியுள்ளார் என்ற பழிப்பும், அன்பர்கள் சூட்டிய ஊமத்தமலரைத் தன் சிரத்தில் அணிந்து விளங்குகின்றார் என்ற புகழும் தோன்ற 'உன்மத்தம் மேல் கொண்டு உழிதருமே' என்றார். உழிதரல் - திரிதல்.*

*இறைவன், பிரமன், திருமால் முதலிய அன்பில்லாதார்க்கு அரியனாய் எமக்கு எளியனாதலை, வனப்பேயோடு ஆடிக் கதியற்றுத் திரிகின்றான் என இறையினியல்பை அறிந்து கூறுதலின் இது மெய்யுணர்வு ஆயிற்று.*

12\. உழிதரு காலுங் கனலும் புனலொடு மண்ணும்விண்ணும்
இழிதரு காலம்எக் காலம் வருவது வந்ததற்பின்
உழிதரு கால்அத்த உன்னடி யேன்செய்த வல்வினையைக்
கழிதரு காலமு மாய்அவை காத்தெம்மைக் காப்பவனே. 8

***உரை :-*** *அசையுந் தன்மையுடைய காற்றும், நெருப்பும், நீரும், மண்ணும், வானுமாகிய பூதங்கள், தத்தம் நிலையினீங்கி யொடுங்குங் காலம் எந்தக் காலமாகும்? அக்காலம் வந்த பின்னரும் கூத்தியற்றுகின்ற திருவடியுடைய அப்பனே, நினது அடிமையாகிய யான் செய்த கொடிய வினைகளை யொழிக்கின்ற கால வெல்லையுமாய், நின்று (மேல் தாக்காமல்) அவ்வினைகளைத் தடுத்து, எங்களைக் காப்பாற்றியருள்பவனே!*

***குறிப்பு :-*** *ஐம்பூதங்களாகிய உலகம் ஒடுங்கியபோதும், சூக்கும ஐந்தொழி லியற்றுதலின், 'உழிதருகால்' என்றார். உலக மொடுங்கிய காலை, ஞானிகளின் வினையொடுங்கவே, திருவடியிற் கலத்தல் நிகழும். உழிதர - திரி, அலை. காத்து - தடுத்து.*

*மெய்யுணர்ந்து இறையன்பில் ஊன்றி நிற்பார்களுக்கு ஆகாமியவினை ஏறாது ஆகலான் சஞ்சிதவினை ஒரு பிறவியில் தொலையாததாக இருப்பினும் சர்வசங்கார காலத்திலாவது நீ அவற்றையொழித்துக் காப்பாயாக என்பதாம்.*

**13\. பவன்எம் பிரான்பனி மாமதிக் கண்ணிவிண் ணோர் பெருமான்**
**சிவன்எம் பிரான்என்னை யாண்டுகொண் டான் என் சிறுமைகண்டும்**
**அவன்எம் பிரான்என்ன நான்அடி யேன்என்ன இப்பரிசே**
**புவன்எம் பிரான்தெரியும்பரி சாவதியம்புகவே. 9**

***உரைநடை :-*** *''எம்பிரான்பவன், பனிமாமதிக் கண்ணி விண்ணோர் பெருமான், சிவன், எம்பிரான், என் சிறுமை கண்டும் என்னை ஆண்டுகொண்டான். எம்பிரான்புவன் அவன் எம்பிரான் என்னை நான் அடியேன் என்ன இப்பரிசே தெரியும் பரிசாவது இயம்புகவே". பவன், சிவன் - இறைவன் பெயர்கள். பவாயதேவாய, சிவாயதேவாய, உக்கிராய தேவாய - சிவாகம மந்திரங்கள்.*

***உரை :-*** *"எமது பெருமான், எல்லாம் தோன்றுதற் கிடமானவன். குளிர்ந்த சிறப்புடைய திங்களைத் (தலைமீது) குறுங்கண்ணியாக அணிந்த தேவர் தலைவன், (ஆதலின், எல்லாரையும் காப்பவன்)*

*(எல்லாவற்றையும் ஒடுக்குவானாகிய) தூயோன், (அத்தகையானாகிய) எம்பெருமான், எனது (சிற்றறிவுஞ் சிறுசெயலுமுடைய) சிறிய தன்மையை அறிந்தும், (கருணையினாலே) தடுத்தாட் கொண்டனன். எனது வள்ளலாகிய அவன், தானே தோன்றிய சுயம்பு. அவன் எமது தலைவனாகவும் நான் அவன் அடியவனாகவுமிருக்கின்ற இம்முறையே எனக்குத் தெரியும் வகையாக, யான் சொல்லுவேனாக.*

***குறிப்பு :-*** *பவன் - பிறத்தற்கிடமானவன். பிரான். வள்ளல், உபகாரி; மலரினாலாகிய கண்ணியை முடியில் அணிதல்போலப் பிறையை இறைவன் சடையிலணிந்தமையால், மதிக்கண்ணி என்றார். மா, அங்ஙனம் அணியப்பெற்ற சிறப்பைக் குறிக்கும். பெரியோரால் ஏற்றுக்கொள்ளத் தகாத நிலையை சிறுமை என்றார். அடிகள் தமக்கு இறைவன் ஆண்டவன், தாம் அடிமை யென்பதே தெரியத்தக்கதாய்க் கூறத்தக்கதாயுள்ள கருத்தா மென்றனர். புவன் - சுயம்பானவன், ஒளியுடையவன். சிவன் - தூயோன், ஒடுக்க முதல்வன்.*

**14.** **புகவே தகேன்உனக் கன்பருள் யான்என் பொல்லா மணியே,**
**தகவே யெனையுனக் காட்கொண்ட தன்மையெப் புன்மையரை,**
**மிகவே யுயர்த்தி விண்ணோரைப் பணித்தி அண்ணாஅமுதே**
**நகவே தகும்எம் பிரான்என்னை நீசெய்த நாடகமே.** **10**

***உரைநடை :-*** *என்பொல்லா மணியே, உனக்கன்பருள் யான் புகவே தகேன். உனக்கு எனையாட்கொண்ட தன்மை தகவே.... எம்பிரான்.... நாடகமே நகவேதகும்.*

***உரை :-*** *எனது தொளைபடாத மாணிக்கமே, உனக்கு அன்பராயினார் நடுவே, யான் புகுதற்கே தகுதியில்லாதேன். என்னை உனக்கு ஆளாக்கிக் கொண்ட இயல்பு தகுதியுடைத்தாமோ. எத்தகைய கீழ்ப்பட்டோரையும் மேலாக உயர்வித்து மேலான வானவரை அவருக்குக் கீழ்ப்படுத்துகிறாய். அப்பனே, அமுதனே, எம்பெருமானே, நீ என்பாற் செய்த கூத்து, சிரித்து நகையாடற்கே உரியதாகும்.*

***குறிப்பு :-*** *பொல்லா - பொள்ளா, பொள்ளுதல் - தொளைத்தல். குறைவில்லா முழு மாணிக்கம் போன்ற, பூரண ஆனந்த அறிவேயென்பது கருத்து. தன்னை ஆட்கொண்டதின் வைத்து - கீழோரை உயர்த்துவது மேலோரைத் தாழ்த்துவதுங் கூறினர். அண்ணா - மேலோனே. அமுது - சாவாமருந்து. ஆள் - அடிமை. அடிகளின் கழிபெருந்தாழ் மனத்தை இச்செய்யுளுணர்த்தும்.*

--------

## *5(2) அறிவுறுத்தல்*

### *நாலடித் தரவு கொச்சகக் கலிப்பா*

*மெய்யுணர்ந்த அடிகள், தமது மனத்தை முன்னிலைப்படுத்தி, மனமே! திருவருளைப் பெறவேண்டிய நீ அதற்குரிய சாதனங்களை விட்டு, உலகியலின்பத்தை விரும்பி அதற்குரிய சாதனங்களில் சார்ந்து ஒழுகுகின்றாயே; இது தகாது என்று நயத்தானும் பயத்தானும் அறிவுறுத்துதலின் இப்பெயர் பெற்றது. முதல் எட்டுத் திருப்பாடல்களால் இறைவன் திருமுன் விண்ணப்பிப்பார்போல் நெஞ்சிற்கு அறிவுறுத்தினும் கடைசி இருபாடல்களால் நேரே நெஞ்சை விளித்து இடித்துரைத்து அறிவித்தல் காண்க. சுருங்கக்கூறின் இப்பகுதி மனத்தைப் பரிபாகம்செய்யும் சிவசத்தியனுபவமாதல் காண்க.*

**15.** நாடகத்தால் உன்னடியார் போல்நடித்து நான்நடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே இடையறா அன்புனக்கென்
ஊடகத்தே நின்றுருகத் தந்தருள்எம் முடையானே. 11

***உரைநடை :-*** *'எம்முடையானே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *(எம்மை அடிமையாக) உடையவனே, உனது அன்பர் போல (அன்பில்லாதிருந்தும், அன்புடையான் போல) வஞ்சனையாக நடந்து காட்டி, அன்பர் வீடு செல்வதற்கிடையே, யானும் முத்தியின் கண் போய்ச் சேர்தற்கு மிக அதிகமாகத் துரிதப்படுகின்றேன். பெண்ணின் நலமுடைய மாணிக்க மலைபோலும் ஐயனே, உன் பால் எப்போதும் நிகழும் அன்பினை என் நெஞ்சினூடே நிலைபெறவும், அதனால் நெஞ்சமுருகவும் உதவியருள்வாயாக.*

***குறிப்பு :-*** *நாடகத்தால், என்பதனை 'நாட்டகத்தால்' என்பதன் திரிபாகக் கொண்டு, 'நாட்டகத்தில்', அதாவது 'இவ்வுலகில்' எனப் பொருள் கொள்ளுதல், வலிந்து பொருள் கோடலாகும். 'நாடுகின்ற அகத்தால்', வீடுநாடும் அவாவினால், என்று பொருள் கொள்ளுவதுமுண்டு. அன்பின்மையைப் பிறர் அறியவொண்ணாது நடப்பதே, நாடகத்தால் நடிப்பது. பிறர் அறிய நடப்பது, நடிப்பது மாத்திரையாகும் என்ப. அன்பர் தாம் வீடு செல்லுதற்குரியர். அவர் நடுவே விரைதல் உரிமையின்மையைக் குறிக்கும். அடிகள், உடல் நீத்து இறைவனோடு இரண்டறக் கலத்தலையே பெரிதும் விழைந்தவ*

ரென்பதற்கு இஃதே தெளிவான அகச்சான்று. ஆடகம் மாறின்மையையும், மாணிக்கம், செம்மேனியையுங் குறிக்கும். அரன் கழல் செல்லுதற்குரிய அயரா அன்பினையே அடிகள் வேண்டினர். நின்று - நிற்க.

16. யான்ஏதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக்(கு) என்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்
தேன்ஏயும் மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெருமான்எம்
மானேயுன் னருள்பெறுநாள் என்றென்றே வருந்துவனே. 12

**உரை :-** *அடியேன் பிறத்தற்கு ஒரு சிறிதும் பயப்பட மாட்டேன்; இறத்தலுக்கு யாதும் அஞ்சக்கடவேனல்லேன். விண்ணுலக (முழுதுங் கொடுத்தாலும்) அதனை விரும்பேன். உலகாள்கின்ற அரசனைச் சார்ந்து அவனைப் பேணி யொழுகவும் இருக்கின்றேனில்லை. தேன் பொருந்திய கொன்றை மலரணிந்த மங்கலப் பொருளாவானே, எமது தலைவனே, எமது பெரியோனே, உன்(னோடு இரண்டறக் கலத்தற் கேதுவாய) திருவருளை எய்துங் காலம் எப்போது எப்போதென்று எண்ணி மனம் உளைகின்றேன். கொன்றை இறைவனுக்கு அடையாளப் பூவாகும். தனது வேண்டுதலையும், வேண்டாமையையும் இறைவனுக்கு விண்ணப்பித்தல் வாயிலாக தன் நெஞ்சிற்கு அறிவுறுத்தலின் இது அறிவுறுத்தலுக்கு இயல்புடையதாயிற்று.*

**குறிப்பு :-** *பிறப்புக்கும் இறப்புக்கும் அஞ்சாமையே குறித்தார். இறப்பிற்கு யாது செய்யக்கடவேன், என்று அஞ்சியதாகக் கூறுதல் தவறு. தேன் போன்ற இன்பம் நல்கும் மங்களமுடையானைச் சார்ந்த போது, பிறப்பின்மையும், இறைவனைத் தலைவனாகப் பெற்றபோது, தாம் விண்ணவர் தலைவனாதலை விரும்பாமையும், இறைவனைப் பெரியனாகக் கொண்டவிடத்தே, மன்னனை மதித்து வாழாமையும் ஏற்படுமென்பது குறிப்பு. எம்மவன், எம்மா னென்றாயதென்பாருமுளர். மான் என்பதற்கு மகான், என்று பொருள்கொள்ளுவர்.*

17. வருந்துவன்நின் மலர்ப்பாதம் அவைகாண்பான் நாயடியேன்
இருந்துநல மலர்புனையேன் ஏத்தேன்நாத் தழும்பேறப்
பொருந்தியபொற் சிலைகுனித்தாய் அருளமுதம் புரியாயேல்
வருந்துவன்நத் தமியேன்மற் றென்னேநான் ஆமாறே. 13

**உரைநடை :-** *நாயடியேன் நின்மலர்ப்பாதம் அவை காண்பான் வருந்துவன்... ஆமாறே.*

***உரை :-*** *நாய்த் தன்மையுடைய அடியேன், நின்னுடைய பெருமைமிக்க திருவடிக் கமலங்களைக் காண்பதற்காக, மிகவும் கவலைப்படுகின்றேன். (உலகத்தே உடலுறுப்புக்களோடு) வாழ்ந்திருந்தும்,உனக்கு நல்ல பூமாலை தொடுத்துச் சாத்தேன்; நாவிலே தழும்புண்டாகும்படியாக உன்னை வாழ்த்தமாட்டேன், பொன் பொருந்திய மேருமலையை வளைத்தவனே, நினது அருளோடு கூடிய பேரின்ப அமுதத்தை எனக்கு நீ கொடுக்கமாட்டாயாயின், ஆதரவின்றித் தனிமையிற் கடைப்பட்ட யான் துன்புறுவேன்; துன்புறாது நான் உய்யுமாறு வேறு எது செய்யவல்லேன். (ஒன்றுஞ் செய்யுந் திறமையிலேன்). நலமலர் - பூச்சிக்கடி, வண்டெச்சில் இல்லாத மணம் நிரம்பிய அழகிய பூக்கள்.*

***குறிப்பு :- மலையை வளைத்த நீ, என் மனத்தை வளைத்தல் அரிதில்லையே,*** *என்றவாறு, ந, மிகுதி குறிக்கும். தனிமை மிகுதி கூறினார். நாத்தழும்பு - சிவபெருமானுடைய துதிப்பாடல்களைச் சொல்லிச் சொல்லி நாவில் வடு உண்டாதல்.*

**18. ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்**
**பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்**
**கோமான்நின் திருக்கோயில் தூகேன்மெழுகேன் கூத்தாடேன்**
**சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே. 14**

***உரைநடை :-*** *புத்தேளிர் கோமான், சதுராலே சார்வானே என்ற விளிகளை முதலிற் கொள்க.*

***உரை :-*** *தேவர் பிரானே, திறமையான பணிக்கு ஆதரவளிப்பவனே, நான் (உன் திருவடிப் பேற்றிற்குத் தகுதியுடையேன் ஆகும் வண்ணம்) உன் திருவடியின் கண்ணேயே மனம் நெகிழப் பெறேன். அன்பினாலே உருகமாட்டேன். மலர்மாலை தொடுத்துச் சாத்தி வழிபடமாட்டேன். உன் புகழ்களை யெடுத்துப் பேசமாட்டேன். உனது திருக்கோயிலை அலகிட மாட்டேன். சாணம் பூசிச் சுத்தப்படுத்த மாட்டேன். ஆனந்தக் கூத்தாடேன். (நற்செயலற்று வீணே) உயிர் விடுதற்கே துரிதப்படுகின்றேன். கடமையைச் செய்யாது உரிமையை வேண்டுதல் ஆக்கத்திற்குரிய வழியன்று. சாதலுக்கு உரிய நெறி - சாமாறு.*

***குறிப்பு :-*** *சதுர் - திறமை. பணியைக் குறிக்கும். சதுர் - அறிவு. அறிவிலே மன்னுபவனே, என்பதே 'சதுராலே சார்வானே' என்பதின்*

*பொருளெனக் கொள்ளுதலுமுண்டு. குழைதல் - இளகுதல், நெகிழ்தல். முக்கரணங்களாலும் வழிபடாமை கூறினார். 'சாதல்' பயன்பெறாது போதல் என்றுங் கூறுப.*

**19.** வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான்என தென்(று) அவர் அவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே. **15**

***உரை :-*** *விண்ணாகிய பூதம், மண்ணாகிய பூதம், காற்று, ஒளியையுடைய நெருப்பு, உடம்பு, உடம்பிலுள்ள உயிர் முதலிய எல்லாவற்றோடுங் கலந்து அவையே யாகியும், (மெய்யர்க்கு) மெய்ப்பொருளாகியும் (பொய்யர்க்குப்) பொய்ப் பொருளாகியும், அல்லது தோன்றும் பொருளும் தோன்றாப் பொருளுமாகியும், (அப்பொருள்களின் வசப்படாது தம் வயமுடைய) முதல்வனாகியும், பல்வகைப்பட்ட உயிர்களையும், யான் செய்தேன், என்னுடையது என்று புல்லறிவால் மயங்கிக் கூத்தாடும்படி, அவ்வவற்றை இயக்கியும், நின்ற நின்னை யான் யாது சொல்லிப் புகழமுடியும்? உன்னைத் துதிக்கும் முறை எதுவென்று அறிகிலேன்.*

***குறிப்பு :-*** *'முற்றுநீ புகழ்ந்து முன் உரைப்பதென்' என்ற தேவாரமுங் காண்க. இன்மையாதல், தோன்றாமையே 'அவரவர்' என்று உயர்திணையாற் கூறினும், அஃறிணை யுயிர்களையு முடன் கொள்க. 'யான் எனது' என்னுமுணர்ச்சி, சிறப்பாக மக்களிடைக் காணப்படுதலின், உயர்திணையாற் கூறினர். உயிர்கட்குக் கூத்தாட்டாவது 'போக்கும் உணர்வும் வரவுமே'. பிற்காலத்தோருள் குமரகுருபரர் 'கூத்தாட்டு' என்பதை அக்கருத்தில் வழங்கியுள்ளார்.*

**20. வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம்நின் பால்,
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டிச்,
சூழ்த்தமது கரம்முரலுந் தாரோயை நாயடியேன்,
பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானும் உன்னைப் பரவுவனே. 16**

***உரைநடை :-*** *சூழ்த்துமது கரமுரலுந் தாரோயை என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *வண்டுகள் சூழ்ந்து ரீங்காரஞ்செய்யு மாலையணிந்த நின்னை, வானவர்கள் (பல்லாண்டு கூறி) வாழ்த்துதலும், தாங்கள்*

*(நீடூழி குறைவின்றி) வாழ்தற் பொருட்டே. உன்னிடத்தே உள்ளத்தைப் பணிவிப்பதும், தாங்கள் மேன்மையடைந்து தங்களைப் பிறர்எல்லாரும் வழிபட விரும்பியே. நாய் போன்ற அடியேனுடைய பயனற்ற பிறப்பினை யொழித்திடுவதற்காக, யானும் உன்னைத் துதிப்பேன்.*

***குறிப்பு :-*** *வானவர்கள், ஆயுள், அதிகார முதலிய பயன் கருதி இறைவனை வழிபடுகிறார்களென்பதும், அடிகள் போன்ற ஞானிகள், பிறவி நீக்கத்திற்காக இறைவனை வழுத்துகின்றார்களென்பதும் அறியற் பாலன. வண்டுகள் மலரிலுள்ள தேன்பொருட்டு ரீங்காரஞ் செய்து மாலையைச் சூழ்தல்போல, இனிய பயனைக் கருதி இறைவனை விண்ணவர் முதலியவர்கள் அடுத்து வழிபடுகின்றார்கள் என்பது கருத்து. மதுகரம் - வண்டு. பாழ்த்த பிறப்பு - பயனற்றுப் பாழான பிறவி.*

**21. பரவுவார் இமையோர்கள் பாடுவன நால்வேதம்**
**குரவுவார் குழல்மடவாள் கூறுடையாள் ஒருபாகம்**
**விரவுவார் மெய்யன்பின் அடியார்கள் மேன்மேலுன்**
**அரவுவார் கழலிணைகள் காண்பாரோ அறியானே. 17**

***உரை :-*** *தேவர்கள் உன்னை வாழ்த்துகின்றார்கள். அறிவுக்கு முதலாகிய (நால்வகை வாக்காகிய) நான்மறையும், உன்புகழையே ஒலிக்கின்றன. நறுமணம் பொருந்திய நீண்ட கூந்தலையுடைய இளம் பெண்ணாகிய உமையம்மை, உன்னுடைய ஒரு பகுதியாகிய (இடப்பாகத்தைப்) பெற்றிருக்கின்றாள். உண்மைப் பத்தியுடைய அடியார்கள் தொகுப்புத் தொகுப்பாக, உன்னை வழிபடக் கூடுகின்றார்கள். யாரும் அரிதற்கரியவனே, அராவிய பெரிய கழல் களணிந்த நினது இரு திருவடிகளையுங் காண்பது யாரோ? (நின்னை வழிபடுகின்ற இவர்கள் அனைவருந்) திருவடியைக் காண்பார்களோ, என்ற வினாவாக இறுதியடிக்குப் பொருள் கொள்ளுதலுமுண்டு.*

***குறிப்பு :-*** *தேவர்களும், மறையும் இறையடி காணாமை கூறப்பட்டன. உமையம்மை, சிவத்தின் பகுதியாவளாதலின், அடியிணை காணுங் கடப்பாடுடைய ளல்லள். மெய்யடியார் காண்பர், என்பது கருத்து என்ப. குரவு - குரவமலரையும், மணத்தையுங் குறிக்கும். விரவுதல், கலத்தல், கூடுதல். அரவு என்பது, அராவு என்பதன் நடுக்குறையாகக் கொள்ளப்படும். அழுத்தல் என்ற பொருளில், கழல்கள் அழுந்திய திருவடியெனக் கூறுவர். விண்ணவர் முடிபட்டு*

*அழுத்தமுற்ற திருவடிகளென்பது முண்டு. அரவு, ஒலியெனப் பொருள்படுமென்று கொண்டு, ஒலிக்கின்ற கழல்களணிந்த திருவடிகள் என்றுங் கொள்க. காண்பு - காண்டல் என்பது. தேவர்கள் இறைவனை முன்னிலைப்படுத்தி வாழ்த்துவார் ஆதலின் அது வாழ்த்து - உரை. வேதங்கள் படர்க்கைப் பரவலாகப் புகழ்தலின் நால்வேதம் பாடுவன எனக் கூறினர் - பாட்டு.*

22. அரியானே யாவர்க்கும் அம்பரவா அம்பலத்தெம்
பெரியானே சிறியேனை ஆட்கொண்ட பெய்கழற்கீழ்
விரையார்ந்த மலர்தூவேன் வியந்தலறேன் நயந்துருகேன்
தரியேன்நான் ஆமா(று)என் சாவேன்நான் சாவேனே. 18

***உரை :-** எத்தகையாருக்கும் அறிதற்கரியனே, அருள்வானினை உடையவனே, தில்லையம்பலத்திலே நடமாடும் எமது பெருமானே, சிறுமைமிக்க அடியேனை ஆளாக்கிக் கொண்ட, செறித்த கழலினையுடைய திருவடிக் கண்ணே, மணம் நிறைந்த மலர்களை இட்டு வழிபடேன், புகழ்ந்து பாடித் துதியேன், உள்ளம் விரும்பி யுருக மாட்டேன். நான் இவ்வாறு (முக்கரணங்களாலும்) வழிபடா திருத்தலைப் பொறுக்கமாட்டேன். நான் உய்தற்குத் தகுதியாகும் வகை யாது? நான் இறப்பேனிறப்பேன் (இறந்துபடவே துணிந்தேன்) என்றவாறு.*

***குறிப்பு :-** மிகப்பெரியனாகிய கடவுள் மிகச் சிறியனாகிய என்னை ஆட்கொண்டும், அவனை வழிபடுகின்றேனில்லை. வழிபடாது உயிர் வாழ்வு முடியவில்லை. இறப்பதே நலமென்பது கருத்தாக அடிகள் கொண்டார். அடிகளின் தீவிர பக்குவத்தையே இத்திருப்பாடலுணர்த்தும். மலர்த்தூவல், அலறுதல், உருகுதல் முறையே உடம்பு, மொழி, மனம் என்பவற்றின் செயலாதல் காண்க.*

*மனம் ஒன்றில் பற்றுக்கொண்டு உறைத்து நிற்குமானால், அதனையே எண்ணி உருகும். இறைவனை அங்ஙனம் நயந்து உருகேன் என்கின்றார். இவ்வண்ணம் கடமையில் தவறிய நான் உயிர் தரித்திருக்கமாட்டேன்; எனக்கு ஆக்கத்திற்கு உரிய வழி எது எனச் சாவேன் சாவேன் என அரற்றுகின்றார். இதற்குக் கடமை தவறிய நான் உயிர் வாழ்வதினும் சாதலே நன்று என்று சாவேன் என்றமைக்கு வரும் பிறவியாவது கடவுள் மாட்டு அன்பு நீங்காததாக அமையும் என்ற எதிர்நோக்கு. அதுவும் இப்படியே அமையுமாயின் அடிமறவா பிறப்புக் கிடைக்கும் வரையில் பிறப்பேன் இறப்பேன் என்பார்.*

'சாவேன் நான் சாவேனே' என்று இருமுறை கூறினர்.

திருவடிக்கு அன்பும் தொண்டும் செய்யாத பிறவியைக் காட்டிலும் இறத்தலே நல்லது என்று விண்ணப்பிப்பது போல நெஞ்சிற்கு அறிவுறுத்தியவாறு அறிக.

23. வேனில்வேள் மலர்க்கணைக்கும் வெண்ணகைச்செவ் வாய்க்கரிய
பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்சே
ஊன்எலாம் நின்றுருகப் புகுந்தாண்டான் இன்றுபோய்
வான்உளான் காணாய்நீ மாளாவாழ் கின்றாயே. 19

***உரை :-*** *இளவேனிலாகிய வசந்த காலத்திலே மன்மதன் விடுகின்ற பூ வகைகளாகிய அம்பிற்கும், வெள்ளிய ஒளியுடைய பல்லினையும், சிவந்த வாயினையும், கருநிறமுடைய குவளை போன்ற கண்களையும் உடைய மகளிர்க்கும் ஈடுபட்டுத் துடித்து நெகிழ்கின்ற பயனற்ற மனமே, நமது உடம்பெல்லாம் (கனிந்து அமுதூறி) உருகும்படியாக, எழுந்தருளி வந்து உள்ளகத்தே நிலைபெற்று ஆட்கொண்டருளிய பெருமான், இப்போது சென்று ஞான ஆகாயத்தின்கண் இருக்கின்றான். அவனை நீ காண முயலமாட்டாய். நீ இறந்தொழியாது, இன்னும் ஏன் நிலைத்திருக்கின்றாய்?*

*குறிப்பு :- மூன்றாம் அடியில், 'உருகப்புகுந்து நின்று' எனக் கொண்டு கூட்டுக. வாசனாமலத்தால், உலகப்பற்றில் ஈடுபடக் கூடாதென நெஞ்சிற் கறிவுறுத்துவார், இங்ஙனம் புகன்றனர் போலும். இளவேனிற்காலம், காமனுக்குகந்த பெரும்பொழுது, காம எண்ணத்தையே, மதன் அம்பிற் கீடுபடுவதாகச் செப்பினர். பானல் - நீலோற்பலம் - குவளை, கரியபானல் - கருங்குவளை. புகுந்து என்பது உடலுள்ளும், உள்ளத்துள்ளும், உயிருள்ளும் புகுந்து எனவும், நிலவுலகிற் புகுந்து எனவு மிருவகையாகப் பொருள்படும். மாளா - மாளாது, வான் - சிதாகாசம், தில்லைக்குத் தம்மை வரப் பணித்தமையால், சிதம்பரமாகிய சிதாகாசத்தைக் குறித்தன ரென்பாருமுளர். வேள் - மன்மதன். வேனில்வேள் - வேனிற் காலத்துக்குரியவனான மன்மதன். நேராக நெஞ்சிற்கு அறிவுறுத்துகிறார்.*

**24. வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்(டு)
ஆழ்கின்றாய் ஆழாமற் காப்பானை ஏத்தாதே**

சூழ்கின்றாய் கேடு(உ)னக்குச் சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீ அவலக் கடலாய வெள்ளத்தே. 20

***உரை :-*** *(பேரின்ப வாழ்க்கையைப் பெற்று) வாழக் கருதாத மனமே, நீ வீணாக உலகிலே நிலைத்திருக்கின்றாய். இதனால் கொடிய வினையிலகப்பட்டு (துயரத்தில்) அழுந்துகின்றாய். அங்ஙனம் அழுந்தாமற் காக்கின்ற கடவுளை வழிபடாமல், உனக்குக் கெடுதியையே உண்டாக்கிக்கொள்ள எண்ணுகின்றாய். நல்ல மாட்டுக்கு ஒரு சூடு. நற்பெண்டிர்க்கு ஒரு சொல் என்பது போல், ஒருமுறை, இருமுறை சொல்லியும் உனக்குத் தெரியாமையால் பலமுறையும் உனக்கு அறிவுரை இயம்புகின்றேன். நீ அதனைக் கேளாது துன்பக் கடலிலெழுந்த பெருவெள்ளத்தே வீழ்ந் தொழிகின்றாய். என் செய்வது?*

***குறிப்பு :-*** *தமது அறிவு இறைவன்பாலீர்ப்பு, மனமானது உலகை அவாவி நிற்பதாகக் கருதி அதனைத் தடுத்து அறிவுரை பகர்தல் இச்செய்யுளின் நோக்கம்.*

---

## *5(3) சுட்டறுத்தல்*

#### *எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

*திருச்சதகமாகிய பதிற்றுப்பத்து அந்தாதியில் முதற்பத்தில் தேகத்தில் காணப்படும் பரிபாகச் சின்னங்களைச் செலுத்தும் சிவசக்தியின் பெருமையாக மெய்யுணர்ந்து இரண்டாம்பத்தில் அதற்கு ஒத்துவராத மனத்தை இடித்துரைத்த அடிகள், இப்பத்தில் மனம் கருதியும் கருவிகரணங்களால் சுட்டியும் அறியமுயற்சிக்க, அதற்குச் சுட்டறிவு பயன்படாது என்று உணர்த்துதலின் இது சுட்டறுத்தல் என்னும் பெயர்த்தாயிற்று. சுட்டறுத்தலாவது இது குடம், இது படம் என்பனபோலக் கருவிகரணங்களைத் துணைக்கொண்டு அறிவினால் அறிதல். அவையனைத்தும் மாயையின் காரியமாகிய அழியும் பொருளைப் பற்றிய அறிவாதலின் அவ்வறிவால் இறைவன் அறிய முடியாதவன் என்பதை மனத்திற்கு உணர்த்துதலின் இப்பத்தும் சுட்டறுத்தலாயிற்று. இதனை அன்பைப் புலப்படுத்தும் சிவசக்தி வினியோகம் என்ற பழையவுரை விளக்கும்.*

*(இப்பதிகத்திலும், இறுதிச்செய்யுள் அகண்ட வழிபாட்டைக்*

*குறிப்பதுபற்றி, (இத்தலைப்பு ஏற்பட்டது போலும்) சுட்டியறியு மறிவை ஒழித்தலென்பது பொருள்).*

25. வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே எனக்கேட்டு வேட்டநெஞ்சாய்ப்
பள்ளந்தாழ் உறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகும் அவர்நிற்க என்னை யாண்டாய்க்(கு)
உள்ளந்தாள் நின்று உச்சி யளவும் நெஞ்சாய்
உருகாதால் உடம்பெல்லாம் கண்ணாய்அண்ணா
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சம் கல்லாங்
கண்ணிணையும் மரமாம் தீவினையி னேற்கே. 21

***உரை :-*** *(வான்நின்று இறங்கிய கங்கை) வெள்ளமானது விழுந்து தங்குதற்கேற்ற விரிந்த சடையினையுடையாய், காளையை ஊர்தியாக உடையாய், தேவர் தலைவனே என்று அன்பர்சொல்லக் கேட்டவுடனே ஆர்வமிகுந்த மனத்தினராய், (மேட்டினின்று) பள்ளத்திலே விழுகின்ற மிகுந்த நீர் போல, மேல்கீழாக விழுந்து வணங்கி நெஞ்சந் துடி துடித்து உருக்கங் கொள்ளும் சிறந்த அடியார் (உன் அருளை எதிர்பார்த்து நிற்க அவர்க்கதைக் கொடாது) தகுதியற்ற என்னைப் (பெருங்கருணையால்) ஆண்டுகொண்டவுனக்கு, என் உள்ளங்கால் முதல் உச்சி வரையுள்ள உடம்பின் பகுதிகளனைத்தும் மனத்தினியல்புடையதாய் (உருக வேண்டும். அப்படி) உருகவில்லை. மேலோனே! உடம்பு முழுவதுங் கண்ணின் இயல்புடையதாய் நீர் பெருக்க, அதன் வெள்ளம் (பாய வேண்டும், அப்படிப்) பாயவில்லை. ஆதலின், கொடிய வினையுடையேனுக்கு நெஞ்சானது கல்லினாலமைந்ததேயாம். இருகண்களும் மரத்தினாலாயவையேயாம்.*

***குறிப்பு :-*** *அடிகளது ஆர்வமிகுதியை இச்செய்யுள் குறிக்கும். இறைவன் பெருங் கருணையை நோக்கத் தமக்கு அன்பின்மையும், அதற்குக் காரணம் தனது தீவினையுமென அடிகள் அறிவுறுத்தியவாறாம். சடை, இறைவனது பேராற்றலைக் குறிக்கும். பகீரதன் கங்கை கொண்டுவந்த கதை வெளிப்படை. பெருவெள்ளம், ஒரு நீர்த்துளியாகச் சடையிற்றங்கிய தென்ப. விடை, நீதியை யுணர்த்தும். வேட்ட - ஆசைப்பட்ட. அண்ணா என்பதற்கு அண்ட முடியாத என்றும் பொருள் கொண்டு, வெள்ளந்தான் என்பதற்கு அதனை அடையாக்குவர் ஒரு சாரார்.*

*ஒருவருக்கு ஒருவர்மேல் விருப்பம் உண்டாதற்கு ஆற்றலும், நேர்மையும், தலைமையுமே காரணம். ஆதலால் இறைவனிடம் செருக்கடக்கும் ஆற்றலும் அறத்தை நடத்தும் நீதியும் தேவதேவனாகிய தலைமையும் உடைமையால் அதைக்கேட்டு அடியார் மனம் விரும்பியது என்பார் 'விரிசடையாய் விடையாய் விண்ணோர் பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்' என்றார். வேட்ட - விரும்பிய.*

*அவரடியவர்களுக்கு முறுகி வளர்ந்த அந்த விருப்பத்தின் விரைவையும் விளைவையும் 'பள்ளந்தாழ் உறுபுனலில் கீழ்மேலாகப் பதைத்துருகும் அவர்' எனக்குறிப்பித்தார்.*

*மலையுச்சியிலிருந்து நீர் விழும்போது விரைவாக விழுதலையும் கீழ்நீர் மேல்நீராதலையும் காண்கிறோம். அதுபோல ஆசை வெள்ளம் இறைவன்மாட்டுப் பாய்கின்றபோது கீழான பொருளும் மேலானதாக அதனால் அவர்கள் பதைபதைத்து உருகி நின்றார்கள் என்பதும் உணர்த்தப்பெற்றன. கனிந்த மனத்து அடியவரை விரைவில் ஆட்கொள்ள வேண்டியிருக்க அவர்களை ஒருபுறம் ஒதுக்கிவிட்டு என்னை ஆட்கொண்ட உன் பெருமையை நினைந்து எனக்கு விளைய வேண்டிய அனுபவங்கள் விளைந்தில என்பார், 'உள்ளந்தாள்நின்று உச்சியளவும் நெஞ்சாய் உருகாதால் உடம்பெல்லாம் கண்ணாய் வெள்ளந்தான் பாயாதால்' என்றார்.*

*இதற்குக் காரணம் அடியேன் செய்த தீவினையே என்றார். உச்சி முதல் உள்ளங்கால் வரையிலும் மனமாகாவிட்டாலும் உடம்பெல்லாம் கண்ணாகாவிட்டாலும் இருக்கிற ஒரு நெஞ்சமும் இரு கண்களுமாவது கசிய வேண்டுமே அதுவுமில்லை என்பார் 'நெஞ்சம் கல்லாம் கண் இணையும் மரமாம்' என்றார்.*

*உருகிய மனமும் பெருகிய கண்ணீரும் உண்டான காலத்திற்றான் கடவுட்காட்சி கருத்துக்குப் புலனாமென்பதுணர்த்தினமையால் இது சுட்டறுத்தலாயிற்று.*

**26.** வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய் போல
இனையன்நான் என்று (உ)ன்னை அறிவித்தென்னை
ஆட்கொண்டெம் பிரான் ஆனாய்க்(கு) இரும்பின்பாவை
அனையநான் பாடேன்நின் றாடேன் அந்தோ
அலறிடேன் உலறிடேன் ஆவிசோரேன்

முனைவனே முறையோநான் ஆனவாறு
முடிவறியேன் முதலந்தம் ஆயி னானே. 22

***உரைநடை :-*** *'முதலந்தமாயினானே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *தோற்றத்திற்கும் முடிவுக்குங் காரணமானவனே! வினைப்பாசத்திலே அகப்பட்டுக் கிடந்த என்னுள் புகுந்து வலிய எதிர்ப்பட்டு வந்து நின்று, நீ, வா, நான் வினையை யொழிக்க வல்லேன், நான் இத்தன்மையன் என்ற உன்னியல்பை எனக்கு அறிவுறுத்தியருளி என்னை அடிமையாக்கி என் தலைவனான உன்பால், இரும்பினாற் செய்த பதுமை போன்ற யான், நின் புகழினைப் பாடமாட்டேன், நிலைபெற்று ஆனந்தக் கூத்தாட மாட்டேன், ஐயோ, கதறமாட்டேன், பதறி வற்றமாட்டேன், உயிர் தளரமாட்டேன், முதல்வனே, நான் இவ்வாறாய முறை நியாயமாமோ? எனக்கு என்ன கதிவருமோ அறிகிலேன். அலறுதல் - அச்சத்தில் கத்துதல். உலறுதல் - நாவும், கண்ணும், காதும் உலர்ந்து தன்மை கெடுதல். பின் உடலும் வற்றும். ஆவி சோர்தல் - மூர்ச்சித்தல்.*

***குறிப்பு :-*** *புகுந்து என்பது உள்ளத்திற் புகுந்து, உலகில் வடிவொடு புகுந்து, என இரு பொருள்படும். போது - வா, வினை வழிநின்று வெளியேபோ, அதாவது என்னிடைவா, என்று விரிபொருள் கொள்க. ஆசிரியனது பிரிவாற்றாமையால், 'அலறிடேன் உலறிடேன்; ஆவிசோரேன்' என்றார். தனது கட்டுப்பாட்டுக் குறையால், உய்தி கூடாதுபோமோ என்ற ஐயப்பாட்டினால், 'முடிவறியேன்' என்றார். இறைவன் கருணைச் சிறப்பை அறிவுறுத்தியவாறு. கற்பாவை, மரப்பாவைகளைக் கூறாது இரும்பின் பாவையெனக் கூறியது, காந்தம் கண்டவிடத்து இரும்பின் பாவை இயங்குவது போல திருவருட்காந்தம் என்பது செலுத்தப்படும் போது அதன் வழியே இயங்குவேன் என்றபடி.*

**27.** ஆயநான் மறையவனும்(ம்) நீயே ஆதல்
அறிந்துயான் யாவரினுங் கடையன் ஆய
நாயினேன் ஆதலையும் நோக்கிக்கண்டு
நாதனே நான்உனக்கோர் அன்பன் என்பேன்
ஆயினேன் ஆதலால் ஆண்டு கொண்டாய்
அடியார்தாம் இல்லையே அன்றி மற்றோர்
பேயனேன் இதுதான்நின் பெருமை அன்றே
எம்பெருமான் என்சொல்லிப் பேசு கேனே. 23

***உரைநடை*** *:- நாதனே என்பதை முதலிற் கொள்க. நான் மறைஆய அவனும் நீயே என மாற்றுக.*

***உரை*** *:- தலைவனே! நான்குவேதப் பொருளானவனும் நீயே. அங்ஙனம் நீ யிருத்தலையறிந்து, அடியேன் எல்லாரினும் கீழ்ப்பட்ட நாயியல்புடையேன் என்பதையும் ஆராய்ந்துபார்த்து உனக்கு ஒரு வகையான அன்பன் என்று சொல்லிக்கொள்ளுவேன் ஆயினன். அக்காரணம்பற்றி நீ என்னை ஆட்கொண்டருளினாய் போலும், (பேயாய்ப் பிறவாவிடினும் மனித வடிவங்கொண்ட) வேறொரு பேயென்று சொல்லத் தக்கவனாகிய என்னையன்றி உனக்கு ஆட்கொள்ளத்தக்க அடியார்கள்தாம் வேறில்லையோ? (தகுதியில்லா என்னை ஆட்கொண்ட) இச்செய்கைதானே உனது பேராற்றலை யுணர்த்தும் அல்லவா? எம்பெருமானே! நான் (உன் கருணைத் திறத்தை) யாது சொல்லிப் பாராட்டவல்லேன்?*

***குறிப்பு*** *:- 'ஆயநான் மறையவனும் நீயேயாத லறிந்து' - என்னை ஆட்கொள்ள உருவெடுத்து வரலான நான்மறை வல்லான் பரம்பொருளாகிய நீயே யென்பதறிந்து, என்று கோடலுமுண்டு. கணந்தோறும் மாறுபடும் தீயகுணமுடைய பேயனே யன்றி மற்று அடியார்தாம் இல்லையே யென்று கொள்க. பேய் அன்னேன் பேய் போன்றேன் என்று, பேயனேன் என்பதைப் பிரித்துப் பொருள் கோடலு முண்டு. சொல்லிப் பேசுதல் - பாராட்டுதல்.*

**28.** பேசில்தாம் ஈசனே எந்தாய் எந்தை
பெருமானே என்(று) என்றே பேசிப் பேசிப்
பூசில்தாம் திருநீறே நிறையப் பூசிப்
போற்றியெம் பெருமானே யென்று பின்றா
நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை
ஆண்டானே, அவாவெள்ளக் கள்வனேனை
மாசற்ற மணிக்குன்றே எந்தாய் அந்தோ
என்னைநீ ஆட்கொண்ட வண்ணந்தானே. **24**

***உரைநடை*** *:- மாசற்ற மணிக்குன்றே, 'எந்தாய்' என்பதை முதலிற் கொள்க.*

***உரை*** *:- குற்றமற்ற மாணிக்க மலையே, எமது அப்பனே, தாம் பேசுவதானால், ஆண்டவனே, அப்பனே, எமது அப்பனுக்குத் தலைவனே யென்றே எப்போதும் நின்னைத் துதித்துப்*

*பேசுவார்களாய், ஏதாவது பூசுவதானால், தாம் திருநீற்றினையே நிரம்ப (உடலெங்கும்) பூசி, எம்பெருமானே காத்தருள்க என்று எதற்கும் மொழிந்து பின்னிடாத பேரன்பால், பிறவியையும் சாவையுங் கடக்குந் தகுதியடைந்தாரை ஆட்கொண்டவனே, உலக ஆசைவெள்ளத்தில் அகப்பட்டு (உன்னடியார்போல் நடிக்கும்) வஞ்சனேனாகிய என்னை, ஐயோ, நீ ஆட்கொண்ட வகைதான் என்னே? எனக்குள்ள அவாவும், கள்ளத்தனமும் எல்லையற்றன.*

***குறிப்பு :-*** *மெய்யடியார், பேசுவதானால் ஈசன் புகழே பேசுவர். பூசுவதானால், திருநீறே பூசுவர் என்பது குறிப்பிக்கப்பட்டது. பின்றா- பின்னிடாத. கடந்தார் - கடக்குந் தகுதியடைந்தார். இறைவன் ஆட்கொண்ட பின்னரே, மெய்யாகப் பிறப்பிறப்பைக் கடந்தவராவர். உறுதிபற்றிக் கடப்பாரைக் கடந்தா ரென்றாரென்க. வாசனாமலந் தோன்றுதல் பற்றிப் போலும், தம்மை அடிகள் 'அவா வெள்ளக்கள்வ' னென்றார். பின்னுதல் - பிற்படுதல்; பிறழுதுல். உறைத்த மனத்தடியர் என்பதையும் காணலாம். எண்ணெய் ஒழுக்குப் போல இடையீடுபடாத அன்பினால் பிறப்பிறப்பைக் கடந்தவர்கள்.*

**29.** **வண்ணந்தான் சேயதன்று வெளிதே யன்(று)**
**அநேகன் ஏகன் அணுஅணுவி லிறந்தாய் என்(று) அங்(கு)**
**எண்ணந்தான் தடுமாறி இமையோர் கூட்டம்**
**எய்துமா(று) அறியாத எந்தா யுன்றன்**
**வண்ணந்தான் அதுகாட்டி வடிவு காட்டி**
**மலர்க்கழல்கள் அவைகாட்டி வழியற் றேனைத்**
**திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்**
**எம்பெருமான் என்சொல்லிச் சிந்திக் கேனே. 25**

***உரைநடை :-*** *'இமையோர் கூட்டம்' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *வானவர் தொகுதி, உனது நிறந்தான் சிவப்பன்று, வெள்ளையன்று, நீ பலவாயிருப்பவன், ஒருவன், அணுவாயிருப்பவன், அணுவினையுங் கடந்த அதிநுட்ப முடையோன், என்று பேசி அவ்வாறே தமது நினைவுதானுந் தடுமாறப்பெற்று, உன்னை யடையுமாறு அறியாது நிற்றற்கேதுவாய எந்தையே, உனது மெய்யியல்பாகிய நுட்பத்தைத் தானுமறிவுறுத்தி, நீ ஆட்கொள்ள வந்த திருமேனியுங் காட்டி, பூப்போன்ற திருவடிகளானவற்றையுங் காட்டி, கதியின்றி நின்ற என்னை உறுதியாகவே பிறவாதிருக்கும்படி*

*தடுத்தாட்கொண்டருளினை, எந்தலைவனே, உன் கருணையை யாது கூறி மனத்தால் நினைய வல்லேன்?*

***குறிப்பு :-*** *விண்ணோர் இறைவனது வெளிப்படையான பல்வகைக் காட்சிகளை நினைந்து மெய்யியல்பறியாது மயங்கினமை கூறியவாறு வண்ணந்தான் 'அது' என்பது மெய்யியல்பைச் சுட்டி நின்றது. 'மலர்க்கழல்கள் அவை' என்பதில், 'அவை' என்பது திருவடிகளாகிய அருட்சத்திகளைக் குறிக்கும். காத்து - தடுத்து.*

**30. சிந்தனைநின் தனக்காக்கி நாயி னேன்தன்**
**கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி**
**வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்**
**மணிவார்த்தைக் காக்கி ஐம்புலன்கள் ஆர**
**வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை**
**மாலமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்**
**தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்**
**தனிச்சுடரே இரண்டுமிலித் தனிய னேற்கே. 26**

***உரை :-*** *நாய் போன்ற எனது எண்ணத்தை உன்னையே நினைக்கும்படி செய்து, எனது இரு கண்களையும், உன் திருவடி மலரிற் சாத்து மலராக ஆக்கி, அதாவது உன் திருவடியிணையையே பார்த்து இன்புறும்படி செய்து, எனது வணக்கமும், அத்திருவடிக் கமலங்கட்கே உரியதாகச் செய்து, எனது சொல்லினை உன் சிறந்த புகழ் பேசுதற்கே உரியதாகச் செய்து என்னுடைய ஐம்பொறி யறிவும் உன்னையே துய்க்கும்படி எழுந்தருளி வந்து என்னை ஆளாகக் கொண்டு, எனதுள்ளத்தின் கண்ணே புகுந்த அருஞ் செயலையுடைய அன்பு மயமாகிய ஞானப்பெருங்கடலே, சத்தாகிய மலையே, சிவந்த தாமரைக் காடு போன்ற திருமேனியையுடைய ஒப்பற்ற ஒளியுருவனே, கேடும் ஆக்கமும், அல்லது இருவினையுங் கெட்ட தனிமையேனாகிய எனக்கு நின்னை நீ கொடுத்தருளினை, (உன் பெருமையிருந்தவாறென்னே!) **தனிச்சுடரே உன்னைத் தந்தனை**.*

*இறைவன் தன்னைத் தந்தாலன்றி உயிர்கள் இறைவனை அனுபவிக்கும் சுதந்திரமும் ஞானமும் இல்லாதன ஆகலின் 'உன்னைத் தந்தனை' என்றார். போர்க்களத்தில் விசுவரூபங்காட்டிய முருகப்பெருமான், சூரபன்மன் அறிந்து உய்யத் தன்னொளியையும் உருவையும் அடக்கி அவன் கண்ணும் கருத்தும் கொள்ளக் காட்டித்தந்த உடனே அவன் அறிந்தான் என்ற கந்தபுராண வரலாறும்*

*ஈண்டு எண்ணற்குரியது. அங்ஙனம் என்னறிவினளவாக உன்னைத் தந்தனை என்பார் 'தனிச்சுடரே உன்னைத் தந்தனை' என்றார்.*

***குறிப்பு :-** மணி - அழகிய, சிறந்த; வார்த்தை - புகழ்; கண் மலர், திருவடி மலரிலே பொருந்து மியைவுடையது, மலர்மலரோடு இனம்பற்றிச் சேர்தலால், நீயே சிந்தனை மயமாகவும், திருவடிமலர், கண் மலராகவும், புகழ்ச் சொல்லே வாக்காகவும், அமைத்தனை யென்பது மொருபொருள். சிந்தனை, வந்தனை, வார்த்தை - முக்கரண வழிபாடு. இனி ஐம்புலன்களுக்கும் இறைவன் மாட்டே உரியன கிடைக்கப் பெற்றேன் என்பது கருத்து. அவையாவன:- திருமேனி காண்டல், திருவடி மலர்த்தேன் பருகல், புகழ் கேட்டல், தெய்வ வாசனை முகரல், திருவடி சென்னிமேல் தீண்டப்பெறுதல். இரண்டு மிலி - இருவினையுமில்லாதவன், இகபரம் பயனற்றவன். மூன்றாம் அடியில், வந்தனை - வந்து, விச்சை - வித்தை, வியத்தகு செயல், மால் - அன்பு, இறைவன் செம்மேனியனாதலின் செந்தாமரைக் காடனைய மேனி. எல்லா ஒளிகட்கும் தோற்றமாய்ச் சிறத்தலின் 'தனிச்சுடர்' என்றார். 'இரண்டுமிலித் தனியனேற்கே, என்பதை 'உன்னை' என்பதன் முன் வைக்க. விச்சை - வித்தை - விந்தை. கடலும், மலையுமாகிய பருப்பொருள்கள் அணுவிலும் சிறிய என் மனத்துட் புகுந்தது பெரிய விந்தையே என்பார்.*

**31.** **தனியனேன் பெரும்பிறவிப் பௌவத்(து) எவ்வத்**
**தடந்திரையால் எற்றுண்டு பற்(று)ஒன் றின்றிக்**
**கனியைநேர் துவர்வாயார் என்னுங் காலாற்**
**கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்(டு)**
**இனியென்னே உய்யுமா றென்றென் றெண்ணி**
**அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை**
**முனைவனே முதலந்த மில்லா மல்லற்**
**கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே.** **27**

***உரைநடை :-** 'மூர்க்கனேற்கே' என்பதை 'கிடக்கின்றேனை' என்பதோடியைக்க.*

***உரை :-** (கேவலாவத்தையிலே) தனிமையாய்க் கிடந்த யான் பிறவியாகிய பெருங்கடலிலே விழுந்து, (இரு வினையாகிய) துன்பப் பேரலைகளால் தாக்கப்பட்டு ஆதரவு யாதொன்று மில்லாமல், சுவையாற் பழத்தை யொக்கும் பவளவாய் மாதரென்று சொல்லப்படும் புயற்காற்றால் (அலைக்கப்பட்டு) மனக் குழப்பமுற்று ஆசை யென்கிற*

பெரிய சுறாமீன் வாயிலே அகப்பட்டு, இனி உய்வதற்கு வழியாதோ என்று இடைவிடாது எண்ணிக் கவலைப்பட்டுத் திருவைந் தெழுத்தாகிய தெப்பத்தைப் பிடித்துக் கொண்டு (அதனை மேற்செலுத்திக் கரைசேர வியலாது) கிடந்த, (வேறு நற்குணமில்லாத) முரண் குணமுடையேனுக்கு, முதல்வனே, தொடக்கமுமிறுதியுமில்லாத வளம்பொருந்திய முத்திக்கரையைக் காண்பித்து ஆட் கொண்டருளினாய். (உன் கருணை யிருந்தவாறென்னே!) சுறாமீன் உயிரைப் போக்கி உடலை மட்டும் உண்ணும். <u>காமம் உடலோடு உயிரையும் உண்ணும்</u>. வருகின்ற பிறவிகளிலும் உயிரைத் துன்புறுத்தும். ஆதலால் காமத்தை வான் சுறவு என்றார்.

***குறிப்பு :-*** *'தனியனேன்' என்பது உடம்பெடாத தனிநிலையைக் குறிக்கும் பிறவிக் கடலிற் பொருந்திய நிலை - சகல நிலையாகும். எவ்வம் - துன்பம். எற்று - மொத்து, தாக்கு. பற்று - ஆதரவு. 'கனி' கொவ்வைக் கனியைக் குறிக்குமென்ப. துவர் - என்று பவள மென்னும் பொருளில், சிவப்பைக் குறித்தலால், 'கனி' சுவைக்கு உவமையாக எடுத்துக் கொள்ளப்பட்டது. புணை - தெப்பம், மிதவைக்கட்டை யென்றுங் கொள்ளலாம். மூர்க்கன் - கோபமுடையவன், கீழ்ப்பட்டவன். பிடிவாதமுடையோன். அஞ்செழுத்தின் சிறப்பையும், அதன்கண் தமக்குள்ள உறுதியையும் அடிகள் குறிப்பித்தனர். வீட்டிற்கு முதலீறின்மை தெளிவு. மல்லல் - வளம். முனைவன் - இயல்பாகவே பாசங்களிலிருந்து நீங்கியவன்.*

**32. கேட்டாரும் அறியாதான் கேடொன் றில்லான்**
**கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்**
**நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள்ளே**
**நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே**
**காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்**
**கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை**
**மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்**
**எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே. 28**

***உரைநடை :-*** *'கேட்டாரும்' என்பதை 'யாருங்கேட்டு' என மாற்றுக.*

***உரை :-*** *யாவராலும் கேள்வியால் அறியப்படாதவன். யாதொரு அழிவுமில்லாதவன். உறவினரில்லாதவன். கருவிகளினுதவியின்றியே, கேட்பனவற்றை யெல்லாங் கேட்டவன். உலகத்தார் பார்த்திருப்பவும், உலகின் கண்ணே (புகுந்து) நாயேனுக்கு இருக்கை யளித்துச்*

*சிறியனாகிய எனக்குக்கூடக் காட்டக் கூடாதனவற்றை யெல்லாங் காண்பித்து, மேலும் கேட்கக் கூடாதவற்றையெல்லாம் அறிவுறுத்தி என்னை மீண்டும் பிறவாதபடி தடுத்து ஆட்கொண்டருளினன் எம்பெருமான், அவன் இயற்றிவிட்ட மாயவித்தைதான் இது.*

***குறிப்பு :-*** *இறைவனே குருவாக வந்து நேரில் அறிவு நல்கப் பெற்று அறியுந் தரத்தனேயன்றிப் பிறர்பாற்கேட்டு அறியப்படாதா னென்பார், 'கேட்டாரு மறியாதான்' என்றார். உபதேசம் பெற்றாராலுங்கூட முற்றிலு மறியப்படாதான் என்றுங் கூறுப. தந்தை தாய் முதலிய உறவினரில்லாதான் தம் வயமும் பற்றின்மையுமுடைய னாதலினென்க. கேளாதே என்பதற்குப் பிறர் வாயிலாகக் கேட்டறியாதே என்றும் பொருள் கொள்வர். உயிர்கள் கூறும் எல்லாவற்றையுந் தானே கேட்டருள்புரிபவன் - என்பதுங்கொள்க. யாரும் அறியத் தெளிவாகவே, பக்குவம் வந்த காலை இறைவன் திருப்பெருந்துறையில் ஆண்டனன். அந்நுட்பத்தை உலகில் நாட்டினர்கள் விழித்திருந்தும் அறிந்திலரென்பது, தவிசு - ஆசனம், இருக்கை. இறையாசான், தன்பக்கம் அடிகளை இருக்கும்படி செய்து மெய்யறிவு நல்கினன். இருக்குமிடம் கொடுத்ததையே 'தவிசிட்டு' என்றார். ஞானிகள் இறையறிவாற் காண்பன, கேட்பன, பிறராலறியப் படாமையின், அவ்வாறு கூறினர். விந்தை - வியத்தகு அற்புதச்செயல்.*

*இறைவன் திருக்கயிலையில் உமையம்மையாருக்குச் சிவாகமங்களை உபதேசிக்க, அவர்கள் அவற்றைக் கூர்ந்து கேளாது இருந்தாராக, இறைவன் வலைமகளாகப் பிறக்க எனச் சபித்தார் எனத் திருவிளையாடலில் கேட்கப்படுவதால், கேட்டல் உயிரே செய்ய வேண்டிய கருமம் என்பார். 'கேளாதன' எனத் தன் வினையாகக் கூறி, கேட்டதால் விளைந்த பரிபாகத்தால் ஆசாரியன் காட்டுகின்றவற்றை உயிர்கள் அயராது காணும் என்ற துணிபால் 'காட்டாதன' என இறைவன் செயலாகக் கூறினார் என்ற நயமும் தெரிக. இதனால் கேட்டற்குரிய தகுதியினும் காண்டற்குரிய தகுதி சிறந்ததாதல் காண்க. இது வாதவூரடிகளுக்கு இறைவன் குருநாதனாக எழுந்தருளிச் சிவஞானபோதப் பொருளைக் கேட்பித்து, திருவைந்தெழுத்தில் நிற்கும் முறையைக் காட்டி, சிவம் வெளிப்படுதலையும் காட்டி, அதில் திருவருள் மயமாக உயிர் ஒன்றி விளங்குதலையும் உணர்த்தினாரென்பதைப் பின்னரும் 'காட்டாதனவெல்லாம் காட்டிச் சிவம் காட்டித் தாட்டாமரை காட்டித் தன் கருணைத் தேன் காட்டி' என்று சிவானுபவம்வரை கூறுதல் காண்க. கேட்பித்தல் - உபதேசம். காட்டுதல் - அனுபவத்தில் நிற்கப் பண்ணுதல். கேட்ட பின்னரே*

*தெளிதலும் நிட்டை கூடுதலாகிய அனுபவமும் விளைதலின் காரண காரிய முறைப்படி கேட்பித்தலை முன்னும் காட்டுதலைப் பின்னுமாகக் கூறினர் என்க.*

**33.** விச்சைதான் இது ஒப்பது (உ)ண்டோ கேட்கின்
**மிகுகாதல் அடியார்தம் அடிய னாக்கி**
அச்சந்தீர்த் தாட்கொண்டான் அமுதம் ஊறி
**அகம்நெகவே புகுந்தாண்டான்** அன்பு கூர
அச்சன் ஆண் பெண்அலி ஆகாச மாகி
ஆரழலாய் அந்தமாய் அப்பால் நின்ற
செச்சைமா மலர்புரையும் மேனி யெங்கள்
சிவபெருமான் எம்பெருமான் தேவர் கோவே. **29**

***உரைநடை :-*** *'கேட்கின்' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *ஆய்ந்து வினவினால், மாயவித்தைகள் இதைப் போன்ற துண்டோ, தம்பால் மிகுந்த அன்புடைய அடியார்கட்கு என்னை அடியானாக்கி, பிறப்பிறப்புப் பயத்தை நீக்கி யென்னை ஆட்கொண் டருளினன். பேரின்ப அமுதம் ஊற்றெடுத்து நெஞ்சங்கரைந்து அன்பு மிகுதிப்படும் வண்ணம், என் உள்ளத்தே புகுந்து ஆண்டருளினன். அவன் யாரெனில், (எல்லார்க்கும்) அப்பன், ஆண், பெண், அலி என்பவையாய், எல்லாவற்றிற்கும் இடங்கொடுக்கும் வானாகிக் கடத்தற்கரிய சோதிவடிவான தூய மாயையாகிய, முடிவாகி, அப்பாற்பட்டு நின்ற, வெட்சியின் சிறந்த பூப்போலச் செம்மேனி படைத்த எங்கள் சிவபரம் பொருள், எமது தலைவன் அவனே விண்ணவர்க்கரசன் என்றவாறு.*

***குறிப்பு :-*** *அடியார்க்கடியனாதல், அயராவன்பினை வளர்த்தற்குக் கருவியாம். அச்சன் - அப்பன். நுண்ணிய வடிவனென்று பொருள் கொள்வாருமுளர். ஆரழல் - கடத்தற்கரிய நெருப்பு அல்லது ஒளி. ஆகாசமென்பதை மூலப்பகுதி யெனவும், ஆரழல் என்பதை ஒளிமயமான நாதகலையுடைய சுத்தமாயை யெனவுங் கூறுப. இறைவன் அப்பாற்பட்டவனாயினும், அடியார்க்குச் செம்மேனியனாய் வெளிப் பட்டருளுதலின், 'செச்சை மேனி' என்றார். செச்சை - வெட்சி. செம்மை - மா - சிறந்த.*

*அண்டத்துப்பேரொளி அடியேனை அடியார்க்கடியனாக்கியும் தனக்கு அடியனாக்கியும், என்னுள்ளத்து அமுதம் ஊற அகம் குழைய*

*அச்சம் தீர்த்து ஆட்கொண்டான்; அவன்செய்த இவ்வித்தையைப் போன்றது ஒன்று உண்டோ என்பது கருத்து.*

*அச்சன் - தந்தை. குடநாட்டு வழக்கு. திசைச்சொல். தந்தையாகி என்றது இறைவனே உலகிற்கு நிமித்தகாரணனாகிய யுண்மை உணர்த்தியதாம். உலகம், அவன் அவள் அது என்னும் மூவினைமையின் 'ஆண் பெண் அலியாகி' என்றார். உலகம் இம்மூன்று பகுப்பையுடையது. அலி எந்தப் பாலுள்ளும் அடங்காதது ஆதலின் அதனைச் சிவஞானபோதம் அது என்று குறிப்பித்தது.*

*இவ்வண்ணம் உலகாயும் அதன் அவயவமாயும் இருக்கும் இறைவனது உண்மையுரு உரைப்பார் ஆகாசமாகி என்றார். ஆகாசம் என்றது அண்டத்துள் எல்லா அண்டங்களையும் தம்முள் அடக்கி நிற்கும் சிதாகாசமாகிய பராகாசத்தையும் பிண்டத்துள் இதயத்தாமரையுள் விளங்கும் சிதாகாசமாகிய தகராகாசத்தையும் குறிக்கும். பராகாசம் அவன் வியாபகத்தையும், தகராகாசம் அவன் ஆன்மாக்களின் அநுபவத்திற்கு உபகாரப்படும் நிலையையும் அறிவிப்பன. இவ்விரண்டுமாய் விளங்குபவன் இறைவன் என்பார் 'ஆகாசம் ஆகி' என்றார்.*

*அழல் - ஒளிப்பிழம்பு. பூதகாரியமான தீயன்று. இதுவும் அண்டத்துப் பேரொளியாயும் பிண்டத்துத் தகராகாசத்துள் விளங்கும் கட்டை விரற்பருமனுள்ள அறிவொளியாயும் விளங்குகிறான் என்பது சிவாகமத் துணிவு. ஆதலின் சிவயோகியரும் சிவஞானியரும் அல்லாதாரால் அறிதற்கரிய ஒளியாகி என்பார் 'ஆரழலாய்' என்றார். புராண வரலாற்றைக் கொண்டு நெருங்குதற்கரிய அழலாய் எனினுமாம். இறைவர்க்கு அடியானாதலைக் காட்டிலும் பேரின்பம் பயப்பது இறைவன் அடியார்க்கு அடியார் ஆதலாகும். மலவாசனை தாக்காதவாறும், வினைகள் மிகாதவாறும், சிவ பரம்பொருளை மனத்துள் நிறுத்தி எப்போதும் உடனிருந்து காப்பவர்கள் அடியார்கள் ஆதலின் உள்ள வினை கழியுமேயன்றி வினை ஏறாது. வினை ஏறாதொழியவே வரும் பிறவிக்கு அஞ்ச வேண்டியதில்லை. அதனால் "அச்சந்தீர்த்து ஆட்கொண்டான்" என்றார்.*

**34.** தேவர்கோ அறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை

யாவர்கோன் என்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவன் அடியார் அடியா ரோடு
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே. 30

***உரை :-*** *விண்ணவர்க்கரசனாகிய இந்திரன் உணராத மகாதேவன் வளவிய உலகங்களைப் படைத்துக் காத்து ஒடுக்குகின்ற ஏனை மூவராகிய அயன், அரி, அரன் என்பார்க்குத் தலைவனாய் நின்ற ஈசன் எல்லாந் தமது வடிவாகக் கொண்டவன். எல்லார்க்கும் பாட்டன். உமை வீற்றிருக்குமொரு பகுதியுடைய எமது அப்பன். யாவர்க்கும் அரசன். கடைப்பட்ட என்னையும் தானே வந்து ஆட் கொண்டருளினன். ஆதலால், அடியேங்களாகிய யாங்கள், அவனொழிந்த பிறர் எவர்க்கும் அடிமையாக மாட்டோம். எதற்கும் பயப்பட மாட்டோம். அவனுடைய அடியார்க்கடியராயிருப்பாரோடு பொருந்தியுள்ளோம். அவனது ஆனந்தக் கடலிலே, மேலுமேலும் மூழ்கித் திளைத்துக் கூத்தாடுவோமே.*

***குறிப்பு :-*** *இந்திரன், அயன், அரி, அரன் இவர்க்கு அப்பாற் பட்டவன். அவர்க்குமேல் அப்பெயருடைய காரணேசுரர் உளரெனின், அவர்க்கு மிறைவன் தந்தையாதலின், இவர்கட்கு அவன் பாட்டனாயினன். யார்க்கும் முற்பட்ட தகப்பன் என்று மூதாதை யென்பதற்கும் பொருள் கொள்வாருமுளர். சிவஞ் சத்தியாய் யாவற்றையு மேற்கொண்டு நிற்பானென்பார். 'மாதொரு பாகத்தெந்தை' யென்றார். அப்பர் சுவாமிகள் நாமார்க்குங் குடியல்லோமென்பதையும்,*

*"எங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோம்*
*யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்*
*திங்கண்முடி யாரடியா ரடியோ மென்று*
*திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே"*

*என்ற சித்தியார் திருவிருத்தத்தையும் இது நினைவுறுத்துகின்றது. 'அஞ்சுவதி யாதொன்று மில்லை' என்றதுங் காண்க. இறுமாந்திருப்போமென்பது போல, 'குடைந்தாடி யாடுவோ' மென்றார். பேரின்ப நுகர்ச்சி எப்போதுந் தொடர்தலின், அதற்கு எல்லையின்மை குறித்தவாறு.*

--------

## *5(4) ஆத்துமசுத்தி*

*ஆத்துமசுத்தி - உயிரின் தூய்மை. உயிரின் தூய்மை எனவே உயிர் தூய்மையற்றிருந்த நிலையும் ஒன்றிருந்தது என்பதறியப்படும். அந்நிலை, உயிர் யான் எனது என்னும் அகப்பற்று புறப்பற்றுக்களுக்கு ஏதுவாகிய அவிச்சையால் தொடக்குண்டிருக்கும் போது தூய்மையற்றிருக்கும். அந்நிலையினை ஆசாரியன் துணைக் கொண்டு இடைவிடாத இறைபணி, அடியார் நேசம், மெய்யுணர்வு இவற்றால் போக்கிக் கொண்டபோது மாசு கழுவிய மணிபோல உயிர் தூய்மையுறும். இதுவே ஆத்துமசுத்தியெனப்படுவது.*

*அடிகள், முதல் ஐந்து பாடல்களால் மனத்தை முன்னிலைப்படுத்தி, ஏனைய கரணங்கள் தவறிழைத்தற்கும் இதனையே காரணமாகக் கொண்டு கடிந்துரையாகத் தூய்மைக்குரிய பணிகளையும், பின்னுள்ள ஐந்து பாடல்களால் பாசச்சேர்க்கையால் இறைத்தொடர்பிற்கு நெகிழ்ச்சியுண்டாக அதனால் விளைந்த ஆற்றாமையினையும் அறிவிக்கின்றார்கள்.*

*திருவடியைப் பழவினைத் தொடர்பால் மறந்த காலத்து, இரங்கி, மறவாவண்ணம் நெஞ்சுக்கு அறிவிப்பதாகிய, மறக்கும் மறதியைத் தரிசிப்பிக்கும் சிவசத்தியின் அநுபூதி என்று பழையவுரை கூறும்.*

***அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்***
*(நெஞ்சறிவுறுத்தலினாலே உயிரைத் தூயதாக்குதல்).*

**35.** ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை என்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன்றறியேனே. **31**

***உரைநடை :-*** *'துணையிலி பிணநெஞ்சே' என்பதை முதலிற் கொள்க. 'ஆடுகின்றிலை' என்பதை 'அன்பிலை' என்பதற்குப்பின் கொள்க.*

***உரை :-*** *யாதொரு துணையுமில்லாத சவம்போன்ற மனமே; நினது கூத்தாட்டினை இயற்றுவிக்கும் முதல்வனது திருவடிக்கண் அன்பில்லாதிருக்கிறாய். அவன் பால் ஆனந்தக் கூத்தியற்ற மாட்டாய். எலும்புருகப் பாடுவதுஞ் செய்கின்றாயில்லை. அஞ்சி நடுங்குவது மில்லை. தாழ்ந்து வணங்குவதுமில்லை. அவனது திருவடிக் கமலங் களைச் சென்னிமேல் அணிந்து கொள்ளுகின்றாயில்லை. திருவடிகட்கு*

*மலர்மாலை சாத்துவதுஞ் செய்யமாட்டாய். அவன் திருவடியிணை களைத் தேடி நாடுவதுமில்லை. தெருவுதோறும் அலைந்து தேடிக் காணாத விடத்துக் கதறுவதுமில்லை. நீ இவ்வாறு பிணம்போற் பயனற்றுக் கிடப்பின், உய்திகூடச் செய்யத்தக்கதொன்றும் யான் அறிய மாட்டேன்.*

***குறிப்பு :-*** *நெஞ்சு, அறிவினைக் குறித்து நின்றது. அறிவின் துணைகொண்டே நற்செயல்கள் நிகழப் பெற்று, அவற்றிற்கு அது தூண்டித் துணை செய்யாவிடத்துப் பயனிலை யென்றவாறு, அறிவு, இறைவனையே நாடி நிற்றலை வற்புறுத்தினார். உலகியற் பற்றற்ற விடத்தே, அறிவு இறைவனைச் சென்று பற்றாது, பிணம்போற்கிடத்தல் தவறென்பது கருத்து.*

**36.** அறிவி லாதவெனைப்புகுந் தாண்டுகொண் டறிவதை
யருளிமேல், நெறியெ லாம்புல மாக்கிய எந்தையைப் பந்தனை
யறுப்பானைப், பிரிவி லாதஇன் னருள்கள்பெற் றிருந்தும் மாறாடுதி
பிணநெஞ்சே, கிறியெ லாம்மிகக் கீழ்ப்படுத் தாய் கெடுத் தாயென்னைக்
கெடுமாறே. **32**

***உரை:-*** *(இறைவனை அறியும்) ஞானம் இல்லாத என்னை, வலிய வந்தாட் கொண்டு, தன்னை யறியும் ஞானத்தைக் கொடுத்தருளி அதனாற் பெறும் மேலாகிய வீடு வழி முழுவதும் அறிவித்த எமது அப்பனைப், பிறவித் தளையைத் தொலைப்பவனைப் பிரியாதிருத்தற் கேதுவான இனிய அருட் செயல்கள் (எம் பொருட்டுச் செய்யப்) பெற்றிருந்தும், அவனைப் பிரியாமைக்கு மாறாக இயங்குகின்றாயே, சவம்போற் பயனற்ற மனமே (உன் மாறாட்டத்தாலே) பொய்களெல்லாம் மிகுதிப்பட, என்னைத் தாழ்த்தினாய், யான் கெட்டுப்போம் வழியாகக் கெடுதி செய்தனை.*

***குறிப்பு :-*** *மெய்ந்நெறி நில்லாது, பொய்வழி புகின், பாசத் தொடர்பு மீளும். அதனால் உய்தி கூடாமையாகிய கேடு இழிவு முளவாமென்பது குறித்தவாறு. கிறி - பொய், மாறாடுதி - தடுமாறுகிறாய். கெடுத்தாய் - காரியக்கேடு விளைத்தாய்.*

**37.** மாறி நின்றெனைக் கெடக்கிடந் தனையைஎம் மதியிலி மடநெஞ்சே,
தேறுகின்றிலம் இனியுனைச் சிக்கெனச் சிவனவன்திரள் தோள்மேல்,
நீறுகின்றது கண்டனை யாயினு(ம்) நெக்கிலை இக்காயம்,
கீறு கின்றிலை கெடுவதுன் பரிசிது கேட்கவும் கில்லேனே. **33**

***உரைநடை :-*** *'எம்மதியிலி மடநெஞ்சே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *எம் அறிவில்லாத மூடமனமே, என்னைப் பகைத்து நின்று யான் கெடும்படியாகக் கிடந்தாலொத்தாய். இனிமேல் திட்டமாக உன்னை நம்பமாட்டோம். (உருவெடுத்து வந்த) தூய முதல்வனது திரட்சிமிக்க தோள்களின் மேலே (உலக நிலையாமையுந் திருவருளொளியும் விளக்கும்) திருநீற்றுக்குறி நிலையாக இருந்ததை நீ பார்த்த போதும் உணர்ந்து கனிவடைந்து உருகவில்லை. (அவனைப் பிரிந்த போது) இவ்வுடம்பை வகிர்ந்தாயில்லை. கெட்டொழிவதே உன் தன்மை, இதனை நான் கேட்கவும் பொறுக்க மாட்டேன்.*

***குறிப்பு :-*** *யான் கூறும் அறிவுரையை ஏற்கமாட்டாய், ஆதலால், எம்மதியிலி, இயற்கையன்பும், அறிவுமில்லாததாய், ஆதலால், 'மட நெஞ்சே' என்றாரென்க. கெட - கெடுக்க. கிடந்தா லனையை, கிடந்தனையை எனத் தொக்கு நின்றது. தேறுகின்றிலம் - தெளிகின்றிலம் - நம்புகின்றிலம், சிக்கென - உறுதியாக, திட்டமாக, கீறுதல் - கிழித்தல், வகிர்தல், பரிசு - தன்மை. கில், ஆற்றலுணர்த்துஞ் சொல்.*

**38.** கிற்ற வாமன மேகெடு வாய்உடை யான்அடி நாயேனை
விற்றெ லாமிக ஆள்வதற் குரியவன் விரைமலர்த் திருப்பாத
முற்றி லாஇளந் தளிர்பிரிந் திருந்துநீ உண்டன வெல்லாமுன்
அற்ற வாறும்நின் னறிவும்நின் பெருமையும் அளவறுக் கில்லேனே. **34**

***உரைநடை :-*** *உடையான் விரைமலர்த்திருப்பாத முற்றிலா இளந்தளிர் பிரிந்திருந்தும் அடிநாயேனை விற்றெலாமிக ஆள்வதற் குரியவன், கிற்றவாமனமே, கெடுவாய் நீ உண்டன.... கில்லேனே.*

***உரை :-*** *என்னையுடையானது மணம் பொருந்திய திருவடிக் கமலங்களாகிய முதிரா இளந்தளிர்களை அடிமையாகிய நாய் போன்ற யான் பிரிந்திருந்தாலும், (என் உடல், பொருள், ஆவி மூன்றுங் கொண்டமையால்) என்னை முழுவதும் விலைப்படுத்தியாவது சிறப்பாக ஆட்கொள்ளும் உரிமையுடையவன். ஆயினும் (உலக பாசங்களிற் செல்வதில்) ஆற்றல்கெடாத நெஞ்சமே, நாசமாய்ப் போவாய்; நீ முன் நுகர்ந்தவை யெல்லாம் கெட்டொழிந்த விதத்தையும் உன் அற்ப அறிவையும் உன்போலிப் பெருமையையும் அளந்தறியு மாற்றலில்லாதேன் யான்.*

*குறிப்பு :- இறைவன், தன் பெருங்கருணையால், என்னை எவ்வாறாயினும் ஆட்கொள்வன். ஆனால் நீ, அருள்பெற்ற போதே, உலகப் பற்றொழிந்தனை யென வெண்ணுதற் கிடமில்லாமையின், உன் பற்று அற்றதா, இல்லையா யென்பதையும், என் செருக்குச் செயலையும் அளந்தறியக் கூடவில்லை. ஏனெனில், நீ இன்னும் உலகப் பற்றிற் செல்லும் ஆற்றல் கெடாதிருக்கின்றாய் என்றவாறாம். கில் - ஆற்றல். தவா - கெடா, பற்றியதை விடாது பற்றுமன வியல்பு குறித்தவாறாம்.*

**39. அளவ றுப்பதற் கரியவன் இமையவர்க்கு(அ) டியவர்க் கெளியான்நம்**
**களவு (அ) றுத்துநின் றாண்டமை கருத்தினுட் கசிந்துணர்ந் திருந்தேயும்**
**உளகறுத்துனை நினைந்துளம் பெருங்களன் செய்தது மிலைநெஞ்சே**
**பளகு(அ)றுத்துடை யான்கழல் பணிந்திலை பரகதி புகுவானே. 35**

***உரைநடை :-*** *நாலாமடியின் முதலில், 'பரபதி புகுவானே' என்பதைக் கொள்க.*

***உரை :-*** *விண்ணோர்க்கு அளந்து முடிவு செய்தற்கரிய பெருமையை யுடையவன், அடியவர்க்கு எளிதின் அருள்பவன். நம்முடைய வஞ்சப்பிறவியை ஒழித்து உள்ளத்தே நிலைபெற்று ஆட்கொண்ட தன்மையை எண்ணத்திலே உருகி யுணர்ந்திருந்த போதும், உள்ளவற்றை யெல்லாம் வெறுத்தும், மனமே, உன்னை நினைந்திருக்கின்றேம். ஆனால் நீயோ, என்னோடு பெருநட்புச் செய்ததுமில்லை. மேலான வீட்டு நெறியடைதற் பொருட்டு, குற்றமறுத்த முதல்வனுடைய திருவடிகளை வணங்கினதுமில்லை.*

*மனம், காமம் - கோபம் - மோகம் - மதம் - மாற்சரியம் முதலான காடுகள் நிறைந்தது. அதனைச் சதாசிவமூர்த்தி எழுந்தருளி இருக்கக்கூடிய பெரிய இடமாகச் செய்வதனால் அங்குள்ள காமக்குரோதாதிகளாகிய தூறுகளைக் களைந்து தீக்கொளுவிச் சுட்டெரித்துத் திருத்தவேண்டும் என்பார். 'உனை நினைந்து, உள கறுத்து, உளம் பெருங்களன் செய்ததுமிலை' என்றார்.*

*இறைவன் திருவடி மிகமிகத் தூய்மையானது. தூய்மையான இடத்திற்குச் செல்கின்றவர்கள் தாமும் உடல் தூய்மையும், உடைத் தூய்மையும் பெற்றாலன்றி அங்கு அணுகுதற்கும் ஆகார். ஆதலால் இறைவன் திருவடி அநாதியே தூய்மையானது. நெஞ்சு எல்லாக் குற்றங்களும் நிரம்பி வழிவது. அத்தகைய மனம் எப்படி இறைவன் கழலைப் பணிய இயலும்? ஆதலால் நீ உனக்கு உள்ள குற்றங்களை*

*நீக்கிக் கொண்டு இறைவன்கழலை ஏத்த வேண்டுமென வற்புறுத்துவார். 'பளகு அறுத்து உடையான் கழல் பணிந்திலை' என்றார்.*

***குறிப்பு :-*** *களவு வஞ்சம் 'பிறவிக்கு ஆகுபெயர்'. உள - உள்ள பற்றுக்கள். கறுத்து - கோபித்து, வெறுத்து; களன் - நட்பு, பளகு - குற்றம். பிறபற்றொழித்தும், தன்னறிவினைக் கருதினமையால், நெஞ்சே, 'உனைநினைந்துளம்' என்றார். ஈற்றேகாரம் அசை.*

**40. புகுவ தாவதும் போதர வில்லதும் பொன்னகர் புகப் போதற்(கு)**
**உகுவ தாவதும் எந்தைஎம் பிரான்என்னை யாண்டவன் கழற்கன்பு**
**நெகுவ தாவதும் நித்தலும் அமுதொடு தேனொடு பால்கட்டி**
**மிகுவ தாவதும் இன்றெனின் மற்றிதற் கென்செய்கேன் வினையேனே.**
**36**

***உரை :-*** *சென்று அடைதற்குரியதும், (அடைந்தார்) மீளுத லில்லாததும் பொன்னகரமாகிய (வீடாகும்). அதனுட் செல்லுவதற்குப் பற்றுக்கழல்வதும், எமது அப்பனுந் தலைவனுமா யென்னை யாட்கொண்டவனுடைய திருவடிக்கு அன்பினால் நெஞ்ச முருகுதலும், நாடொறும், அமுதம், தேன், பால், கற்கண்டு இவற்றினுமிகுந்ததாய பேரின்ப உணர்ச்சி சிறப்பதும் இல்லையாயின், தீவினையுடையேன் இவ்விடையூற்றை நீக்க யாது செயவல்லேன்.*

***குறிப்பு :-*** *பொன்னகர் மாறுபாடில்லாத வீட்டிற்கு உருவகம். உகுதல் - கழலுதல். நெகுதல் - உருகுதல். கட்டியினுமிகுவது - பேரின்பம், ஆவதும் - உணர்ச்சி சிறப்பதும், நாள்தோறும் என்றது நாளுக்கு நாள் பக்குவ மிகவேண்டுமென்று குறித்தவாறாம்.*

**41. வினையென் போல்உடை யார்பிறர் யார்உடை யான்அடி நாயேனைத்**
**தினையின் பாகமும் பிரிவது திருக்குறிப்பன்றுமற் றதனாலே**
**முனைவன் பாதநன் மலர்பிரிந் திருந்து(ம்)நான் முட்டிலேன்**
**தலைகீறேன்**
**இனையன் பாவனை யிரும்புகல் மனம்செவி இன்னதென் றறியேனே.**
**37**

***உரை :-*** *என்னைப் போலத் தீவினைப் பயனுகர்ச்சியுடையார் வேறு யாவர்? எனது முதல்வன் அடிமையாகிய நாய்போன்ற என்னைத் தினையளவு கூடப் பிரிதல், அவனது திருவுள்ளக் குறிப்பன்று. ஆதலால் (பிரிந்திருத்தல் என் தவறே), முன்னோனுடைய நற்றிருத் தாள்களைப்*

*பிரிந்திருந்தும், நான் தலையை மோதமாட்டேன், பிளக்கவு மாட்டேன். இத்தகை யேனது எண்ணம் இரும்பாலானது, மனம் கல்லாலானது, செவி இன்னதனா லாயிற்றென்றறிய மாட்டேன்.*

***குறிப்பு :-*** *உயிர்விடாது, உடம்பொடு நிலைத்திருத்தல், பிராரத்த வினைப்பயன் என்று குறிப்பித்தனர். இறைவன் தகுதியிருப்பின், உடனே வீடளிக்க விருப்பமுடையன் என்ற கருத்துப் பற்றிப் 'பிரிவது திருக்குறிப்பன்று' என்றார். பாவனை, புத்தியின் பகுதி. மனம், அதனின்வேறு, எண்ணம். முத்தியை நாட வேண்டும். மனம், உலகப் பற்றொழித்தல் வேண்டும். செவி, இறைவன் அறிவுரையையே பற்றி நெஞ்சத்தை ஊக்க வேண்டும். அவற்றை அவை செய்யாமையின், பழிப்புக்குரியவாயின போலும்.*

**42.** **ஏனை யாவரும் எய்திட லுற்றுமற் றின்னதென் றறியாத,**
**தேனை ஆன்நெயைக் கரும்பினின் தேறலைச் சிவனை யென் சிவலோகக்**
**கோனை மான்அன நோக்கிதன் கூறனைக் குறுகிலேன் நெடுங்காலம்,**
**ஊனை யானிருந் தோம்புகின் றேன்கெடு வேன்உயி ரோயாதே. 38**

***உரை :-*** *(அன்பரல்லாத) பிறர் யாவரும் அடைந்திட முயன்றும் இத்தன்மையனென் றறியப்படாத தேன் போல்வானைப், பசு நெய் போல்வானைக், கருப்பஞ்சாற்றின் தெளிவு போல்வானைத், தூயோனை, எனது சிவலோகமன்னனை, மானின் பார்வையொத்த நோக்கமுடைய அம்மையை யொருபாக முடையானை, நீண்ட காலமாக நான் அடைந்திலேன். யான் (இவ்வுலகில்) தங்கியிருந்து, தசையாலாகிய உடம்பினைப் பாதுகாத்துக் கொண்டிருக்கின்றேன். கெட்டொழிகின்றேன். பிராணன் ஒடுங்காதோ!*

***குறிப்பு :-*** *சிவஞானம் பெறாது, முதல்வனை யறியக் கூடாமையின், 'இன்னதென்றறியாத' என்றார். விழைவிற்கு இன்பந் தருவதால் தேன், அறிவிற்கு இன்பந் தருவதால் ஆன் நெய், செயலுக்கு இன்பந் தருவதால் 'கரும்பின் தெளிவு' என்றார். உயிர் - பிராணன். அன - அன்னவென்பதன் குறுக்கம்.*

**43.** **ஒய்வி லாதன உவமனி லிறந்தன ஒண்மலர்த் தாள் தந்து,**
**நாயி லாகிய குலத்தினுங் கடைப்படும் என்னைநன்னெறி காட்டித்,**
**தாயி லாகிய இன்னருள் புரிந்தஎன் தலைவனை நனிகாணேன்,**
**தீயில் வீழ்கிலேன் திண்வரை யுருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே. 39**

***உரை :-*** *அழிவில்லாதனவாய், உவமிக்கப்படும் பொருள் யாவற்றையுங் கடந்தனவாய் உள்ள ஒளிமிக்க திருவடிக் கமலங்களைக் காட்டியருளி நாயென்னும் படைப்பு வகையினுங் கீழ்ப்பட்ட எனக்கு நல்ல முத்திநெறியைக் காண்பித்துத் தாயிடமுண்டாகிய இரக்கத்தை யொத்த இனிய பேரருள் புரிந்த எனது நாதனை நன்கு காணப்பெற்றேன். (காணப் பெறாது வைத்தும்) நெருப்பில் வீழ்ந்திறக்க மாட்டேன்; திண்ணிய மலையினின்று உருண்டு உயிர் விடேன்; வளமிக்க கடலிற் பாய்வேனோ. (அதுவுஞ் செய்யேன்).*

***குறிப்பு :-*** *ஓய்வு; அழிவு. உவமன் - உவமை. குலம் - படைப்பு விசேடம். விசுவாசத்தில் நாயினுங் கீழெனக் குறிப்பார். நாயினுங் கடைப்படுமென்றார். ஆட்கொண்ட போது கண்டு, பின் காணாமையால், 'நனிகாணேன்' என்றார்.*

**44.** **வேனில் வேள்கணை கிழித்திட மதிசுடும் அதுதனை நினையாதே,**
**மானி லாவிய நோக்கியர் படிறிடை மத்திடு தயிராகித்,**
**தேனி லாவிய திருவருள் புரிந்துஎன் சிவன்நகர் புகப்போகேன்,**
**ஊனில் ஆவியை ஓம்புதற் பொருட்டினும் உண்டுடுத் திருந்தேனே.**
**40**

***உரைநடை :-*** *மூன்றாம் அடியை முதலிலும், இரண்டாமடியைப் பின்னும், முதலடியை அதன் பின்னும், நாலாம் அடியை இறுதியிலும் வைத்துப் பொருள் கொள்ளுக. தயிராகி - தயிராக.*

***உரை :-*** *தேன் போன்ற இனிமை நிலை பெற்ற திருவருள் நல்கிய எனது இன்பனுடைய வீட்டு நகரத்தினை அடைவதற்குச் செல்ல மாட்டேன். (உலகிலிருப்பின்) மான்போன்ற பார்வையுடைய மாதர் வஞ்சனையிடை, மத்தினிக்கப்பட்ட தயிர்போலக் கலங்குமாறு, இளவேனிற்குரிய காமனது அம்பு நெஞ்சைப் பிளந்திட, திங்களானது உடம்பைச் சுடும். அக்கெடுதியை நினையாதே, உடம்பில் உயிரை வைத்துப் பாதுகாத்தலாகிய (சிறிய) செயலின் பொருட்டாகவே உணவுண்டு உடையுடுத்து வாழ்ந்திருந்தேனே! ஈதென்ன அறியாமை!*

--------

## *5(5) கைம்மாறு கொடுத்தல்*

**கலிவிருத்தம்**

*(இப்பதிகம் பதில் உபகாரம் அளிக்க இயலாமை குறிக்கும் போலும்)*
*என்னையே கொடுத்தபின் கொடுப்பதற்கு என்ன இருக்கிறது?*

**45. இருகை யானையை ஒத்திருந் தென்உளக்**
**கருவை யான்கண்டி லேன்கண்ட(து) எவ்வமே**
**வருக வென்று பணித்தனை வானுளோர்க்**
**கொருவ னேகிற்றி லேன்கிற்பன் உண்ணவே. 41**

***உரைநடை :-*** *வானுளோர்க் கொருவனே என்பதை முதலிற் கொள்க. ஈற்றடியில் உண்ணவேகிற்றிலேன், கிற்பன் என மாறுக.*

***உரை :-*** *விண்ணவர்க்கெல்லாந் தலைவனாகிய ஒருவனே! இரண்டு துதிக்கையுடைய யானையைப் போன்றிருந்து என்னுடைய உள்ளத்தின் மூலத்தை அடியேன் காணாதிருந்தேன். யான் கண்டனு பவித்ததெல்லாம் துன்பமே. (அங்ஙனமாயினும்) நீ என்னை 'வா' வென்று கட்டளையிட்டருளினை. நீ தரும் இன்பத்தை நுகர வல்லேனல்லேன். (துன்பத்தையே) நுகர வல்லேன்.*

***குறிப்பு :-*** *இருகை என்பது அறிவு, செயல் என்ற இரண்டையுங் குறிக்கும். இருகை - இருங்கை - பெரியதுதிக்கை என்று பொருள் கொள்வாருமுளர். யானை, மதத்தால், தன்னையும் பிறரையுமறியாமை போலச் செருக்கினால், என்னை மாத்திரமன்றி உன்னையும் அறியாதிருந்தேன். 'உள்ளக்கரு' என்பதற்கு உயிர்க்குயிரெனவும் பொருள் கொள்ளலாம். உயிர்த்தோற்றத்திற்குக் காரணமாய முதல்வன் என்பது கருத்து. மனம் முதலிய கருவிகள் தோன்றுதற்குக் காரணமானவனும் அவனே. கருவென்பதற்குக் காரணம் என்றும், நடு என்றும் பொருள் உண்டு. நடு என்பது அந்தரியாமித்துவங் குறிக்குமெனக் கொண்டு, 'உளக்கருவை' என்பதற்கு உள்ளத்திற்குள்ளீடாய்க் கலந்திருப்பதை என்று பொருள் கொள்ளுவது முண்டு. துதிக்கையால் தடவி யறிதல், யானையின் தொழில் போலும். இறைவன் தன்மை, அறிவிலுஞ் செயலிலும் புலனாவது. அதனைக் காணாமைக்குக் காரணம் செருக்கே யென்பது கருத்து. நீ தரும் இன்பத்தை உண்ணவே கிற்றிலேன். (எவ்வத்தை) உண்ணவே கிற்பேன். என்று பிரித்துக் கூட்டுக. அல்லது, வருக கிற்றிலேன், உலகத்துன்பத்தை உண்ணவே கிற்பேன் என்று உரைநடை கோடலு முண்டு. கிற்றிலேன் - இதில் 'கில்' என்பது 'ஆற்றல்' என்ற*

*பொருளைத் தரும் இடைச்சொல். ஆணையின்படி அணுகுவதற்கும் இட்ட பணியை இயற்றுவதற்கும் ஆற்றலற்ற யான். உண்ணகிற்பன் - உண்ணும் ஆற்றல் உடையேன்.*

46. உண்டோ ரொண்பொருள் என்றுணர் வார்க்கெலாம்
பெண்டிர் ஆண் அலி என்றறி யொண்கிலை
தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றினாய்
கண்டுங் கண்டிலேன் என்னகண் மாயமே. 42

***உரை :-*** *(உலகிற்கு முதல்வனாகிய) ஒரு அறிவொளிப் பெரும் பொருள் உண்டென்று அறிந்து உன்னை நாடுவார்களுக்கெல்லாம், நீ பெண்ணோ, ஆணோ, அலியோ, என்று உறுதியாக அறியக்கூடாமலிருக்கின்றனை. ஆனால், அடியேனுக்கு நீ உண்மையாக இருக்கின்றவாறேதானே வந்து காட்சி கொடுத்தாய் உன் திருவருட் காட்சி பெற்று உன்னை அனுபவிக்கப் பெற்றிலேன். இது என்ன கண் மயக்கமாக இருக்கின்றது?*

***குறிப்பு :-*** *இறைவன் தானே வந்து தன்னியல்புணர்த்தும் வரை, அவன் மெய்த்தன்மை உயிர்கள் தாமே அறியுந் தரத்தன வல்லவென்றனர். அருளாசிரியனாய் வந்த இறைவனோடு உடன் செல்லாமை பற்றி 'கண்டிலேன்' என்றார். மாயம் - தந்திரம், வியப்பு, மயக்கம். உள்ளவா - உள்ளமுறை.*

***கண்டும் கண்டிலேன் :-*** *இறைவி, ஒருவன் படும் ஏழைமைத் துன்பத்திற்கு இரங்கி இவனுக்குப் பெருஞ்செல்வம் உண்டாகத் திருவருள் பாலித்தாலென்ன என்று இறைவனை வேண்டிக் கொண்டார். இறைவன் அவனுக்குச் செல்வனாதற்கு உரிய நல்லூழ் இல்லாமையை அம்மைக்குணர்த்தத் திருவுளங்கொண்டு அவனெதிரில் பொற்கிழி ஒன்றைப் போட்டுவைத்தார். ஏதோ கற்பனை செய்து கொண்டே செல்கின்ற அவன், குருடன் எவ்வாறு வழிநடப்பான் எனக் கற்பித்துக்கொண்டு தன் கண்களை இறுக மூடிக் கொண்டே பொற்கிழியைக் கடந்து நெடுந்தூரம் சென்று விட்டான். இறைவன் அம்மையைப் பார்த்து அவன் ஊழ்வினை இருந்தபடியைப் பார்; நம் அருளிருந்தும் அதனைப் பெற்று உய்யாமல் கண்மூடிக் குருடனாகச் செல்கின்றான் என்றாராம். அதுபோல இறைவன் குருநாதனாக வந்து தோன்றியும் தான் அவரைத் தரிசித்தும் இப்போது கண்ட சுவடும் கருத்திலின்றி மறைந்தமையால் 'கண்டும் கண்டிலேன்' என்றார். கண்ணிலான் பெற்றிழந்தான் எனக் கருணைக்கடலாகிய இறைவனைக் கண்டும் அவன் கரத்தலால் வந்த துன்பம் மேலிட "எனது தலைவனை*

*நனிகாணேன் தீயில் வீழ்கிலேன் திண்வரை உருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே" என்று வருந்துகின்றவர் ஈண்டும் அந்நிலை அனைத்தையும் கண்டும் கண்டிலேன் என்பதால் குறிப்பித்தார்.*

**47.** மேலை வானவ ரும்அறி யாததோர்
கோல மேயெனை ஆட்கொண்ட கூத்தனே
ஞால மேவிசும் பேஇவை வந்துபோங்
கால மேஉனை என்றுகொல் காண்பதே. **43**

***உரை :-*** *மேலாகிய பதவிகளிலுள்ள கடவுளரும் அறியக்கூடாத ஒப்பற்ற திருவுருவனே! அடியேனை ஆளாகக் கொண்ட வியத்தகு செயலுடையானே, நிலவுல கானவனே, வானானவனே, (மண்ணும் விண்ணுமாய) இவைகள் தோன்றி யொடுங்கு தலை வரையறுத்து நிற்குங் கால தத்துவமானவனே. உன்னை, எந்த நாள் (இனி) நான் காணுதல் கூடும்.*

***குறிப்பு :-*** *மேலை - மேலாகிய இடத்திலுள்ள. இறைவன் ஆசிரிய வடிவங் கொண்டு நல்கானாயின், வானவர் அவன் மெய்த்தன்மை யறியார். ஆதலிற் 'கோலமே' என்றார். தன்னை ஆட்கொண்டது ஒரு வினோதமென்பார் 'கூத்தனே' என்றார். 'ஞாலமே விசும்பே' என்பதில் படைப்புப் பொருளனைத்து மடங்கும். கால முதலிய தத்துவங்கள் இறைவன் திருமேனியாதலின், அவையாய் அவன் இருப்பதாகக் குறிப்பித்தார்.*

**48. காண லாம்பர மேகட்(கு) இறந்ததோர்
வாள்நி லாப்பொரு ளேஇங்கோர் பார்ப்பெனப்
பாழ்ந னேன்படிற் றாக்கையை விட்டுனைப்
பூணு மாறறி யேன்புலன் போற்றியே. 44**

***உரைநடை :-*** *'புலன் போற்றியே' என்பதைப் 'படிற்றாக் கையை' என்பதன் முன் அமைக்க.*

***உரை :-*** *(அடியார்க்குக்) காணும்படியாக (திருவுருவங் காட்டும்) மேலான தன்மையனே, கண்ணைக் கடந்ததொரு சோதி நிலவும் (பெரும்) பொருளே, இந்நிலவுலகத்தே, (கூட்டை விட்டு வெளிப்பட அறியாத) ஒரு பறவைக் குஞ்சுபோல வீணனாகிய யான், ஐம்புலன்களைத் தாக்காது தடுத்து, வஞ்சவுடம்பை நீத்து, (மேற்சென்று) உன்னைப் பொருந்தும் வழியைத் தெரியாதே னாயினேன். பாணன் - பாழ்நன் என்பதன் மரூஉ. பயன்படாது*

*பாழாய்ப் போனவன் என்பதாம்.*

***குறிப்பு :-*** *படிறு - பொய், வஞ்சனை. பரம் - மேன்மை. வாள் - ஒளி, அறிவு. பார்ப்பு - குஞ்சு - குட்டியெனப் பொருள் கொண்டு, குரங்குக்குட்டி தன் தாயைப் பற்றுவதுபோல உன்னை விடாதுபற்ற அறியேனென்றாரென்பாரு முளர். 'புலன் போற்றியே' என்பதற்கு ஐம்புலா அவா வினை மேற்கொண்டு, எனவுங் கொள்ளலாம். பாணன் - பாழ்நன், வாழ்நன், வாணனென்றாயினாற் போல.*

*'பார்ப்பென ஆக்கையை விட்டு' எனக் கூட்டுக. ஆக்கை, யாக்கை என்பதன் மரூஉ. யாக்கை எழுவகைத் தாதுக்களால் கட்டப்பட்டது என்னும் பொருளது. நாரும் நரம்பும் குச்சியும் கோலுமாகிய இவற்றால் கட்டப்பட்ட கூடுபோன்றது. அதனுள் வாழும் உயிர் கூட்டுள் வாழும் குஞ்சு போன்றது. குஞ்சு இறகு முளைத்துத் தானே பிழைக்கும் ஆற்றல் வரும்வரை கூட்டில் வாழ்ந்து, பின்பு பூதாகாயத்தைத் தனக்கு வாழுமிடமாகக் கொள்வதுபோல உயிரும் உடலை இடமாகக் கொண்டு, உண்மையையுணர்ந்து, வினைப்போகக் கழிவின்கண் பராகாசவடிவினனாகிய இறைவனைச் சார்ந்து தாடலைபோல ஒன்றிவாழும் ஆதலால் 'பார்ப்பென ஆக்கையை விட்டு' என்றார். இப்பகுதி 'குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே' என்ற திருக்குறளை நினைவூட்டுதல் காண்க.*

**49.** போற்றி யென்றும் புரண்டும் புகழ்ந்தும்நின்(று)
ஆற்றல் மிக்கஅன் பால்அழைக் கின்றிலேன்
ஏற்று வந்தெதிர் தாமரைத் தாள்உறுங்
**கூற்ற மன்னதொர் கொள்கையென் கொள்கையே. 45**

***உரை :-*** *காத்தருள்கவென்று நினைத்தும், நிலத்தே புரண்டு வலம் வந்தும், நின்புகழ் பாடியுஞ் செய்யக்கடவனவாகிய திருத்தொண்டிலே நிலைபெற்று, திண்மை மிகுந்த பேரன்பால், உன்னைக் கூவுகின்றே னில்லை. மாறேற்று வந்து உன்னுடைய திருவடியினை அடையும் யமன் தன்மைபோன்ற ஒரு (முரண்) குணமே எனது கோட்பாடாகும்.*

***குறிப்பு :-*** *எதிர் - மாறு, பகை, நீயேவந்து யமனை உதைத்துத் திருத்திக் கொண்டதுபோலத் திருத்தப்பெறுவதே என்னியல்புக்கு ஒத்ததாம். அயராவன்பு செலுத்தகில்லேன் என்றார். போற்றி - "என்னைப் பாதுகாக்க" என்று வேண்டிக் கொள்ளும் வியங்கோள் வினைமுற்று.*

மேல், அன்பால் அடையமுயலாத யான், வன்பாலடைய எண்ணுகிறேன் என அறிவிக்கின்றார். கூற்றுவன், மார்க்கண்டேய ருயிரைப் பிரிப்பது வியாசமாகக் கொண்டு இறைவனையும் பாசத்தால் பிணித்திழுத்து அவர் திருவடி தீண்டப்பெற்று உய்ந்தமைபோல, அடியேனும் முயல்வேன் என்பார். 'கூற்றம் அன்னதோர் கொள்கை என் கொள்கையே' என்றார். 'கூற்றம் அன்னதோர் கொள்கை என்றாரேனும், ஓர் கூற்றத்தின் கொள்கையன்னது என் கொள்கை எனப் பிரித்துக்கூட்டிப் பொருள் கொள்க'.

எதிரேற்று வந்து தாமரைத்தாள் உறும் கூற்றம் என்க. கூற்றம் அறியாமையால் செருக்கி, இறைவனுக்கு யாம் எவ்வாற்றானும் எதிராகோம் என்பதை உணராது எதிர்த்து, விட்டில் வலிய வந்து விளக்கில் மடிவதுபோல, வெற்றி விருப்பில் தாமே வலியவந்தான் என்பார் இங்ஙனம் கூறினார்.

மருந்தை அறியாது உண்டாலும் அதன் பயன் நலமாதல் போல, கூற்றுவன் அறியாது வரினும் அவனுக்கு அறிந்து உண்டார் எய்தும் பயனைவிட மிகவிரைவில் இன்பம் கிடைத்தது என்பார். 'தாமரைத் தாள் உறு கூற்றம்' என்றார். மென்மையும், தண்மையும், மணமும், நிறமும் உடையதாய் எல்லாக் கருவி கரணங்களுக்கும் இன்பந்தந்தது என்பார் 'தாமரைத்தாள்' என்றும், தாள் திருவருட்சத்தி வடிவாதலின் தாமே வந்து கூற்றத்தின் மீதுற்றது என்பார் 'தாள் உறும் கூற்றம்' என்றும் கூறினார்.

பரிசவேதி பட்டவுடனே இரும்பு பொன்னானாற்போலத் திருவடி தீண்டிய மாத்திரத்தில் அவனுடைய ஆணவம் வலிகுன்றியதால் அவன், இடைவிடாத காட்சியும் அருளும் பயனால் பெற்று உய்ந்ததுபோல அடியேனும் உய்வேன் என்பது உணர்த்தியவாறு.

அறியாமையால் வந்த கூற்றுவற்கு அடியார்க்கருளும் திருவடி தீட்சையைச் செய்த அருளுபகாரத்தைக் கண்டுகொண்டு (குற்றமே செய்யினும் குணமெனக் கருதும் கொள்கை கண்டு) வந்தேன் என்றார் என்று பழைய உரை கூறும்.

'அன்பால் அழைக்கின்றிலேன்' எனத் தன் குறையை உணர்ந்து, தாமரைத்தாளுறும் விருப்பை விண்ணப்பித்தலால் இச்செய்யுள் கைம்மாறு கொடுத்தல் என்னும் பதிகப்பொருளுக்கு இயைபுடைத்தாதல் காண்க.

50. கொள்ளுங் கில்எனை அன்பரிற் கூய்ப்பணி
கள்ளும் வண்டும் அறாமலர்க் கொன்றையான்
நள்ளுங் கீழுளு மேலுளும் யாவுளும்
எள்ளும் எண்ணெயும் போல்நின்ற எந்தையே. 46

***உரைநடை :-*** *முதலடியை ஈற்றிலமைக்க. 'எனை அன்பரிற் கூய்ப்பணி கொள்ளுங்கில்' என மாறுக.*

***உரை :-*** *தேனும் வண்டும் நீங்காத கொன்றைப் பூவினை யுடையான் எப்பொருளினுள்ளும் நடுவிலும் கீழும் மேலுமாய எப்பக்கத்தும், எள்ளிலெண்ணெய்போல வியாபித்து நின்றவனாகிய எமது அப்பன், அவனது மெய்யன்பர்போல என்னையும் வலிய அழைத்துப் பணிகொள்ளு மாற்றலுடையன். தேனோடு கூடிய கொன்றையை வண்டு நீங்காதது போல.*

***குறிப்பு :-*** *பேரின்பமும் இன்பத்தை நாடும் உயிரும் தன்னை விட்டகலாத ஞாலமுதல்வன், எங்கும் நிறைந்து எல்லாம் வல்லவ னாதலாலே, தகுதியற்ற என்னையும் பணிகொள்ள வல்லவன் என்றவாறு. கொள்ளுங்கில் - கொள்ள வல்லவன்.*

51. எந்தை ஆய்எம்பி ரான்மற்றும் யாவர்க்குந்
தந்தை தாய்தம்பி ரான்தனக் கஃதிலான்
முந்தி யென்னுள் புகுந்தனன் யாவருஞ்
சிந்தை யாலும் அறிவருஞ் செல்வனே. 47

***உரைநடை :-*** *'முந்தியென்னுள் புகுந்தனன்' என்பதை ஈற்றில் அமைக்க.*

***உரை :-*** *எனது அப்பனாயும், அன்னையாயுமிருக்கும் எமது தலைவன் பிற எல்லார்க்குமே தாயுந் தந்தையுமாவன். தலைவனுமாவன், தனக்குத் தாய்தந்தையு மேலோனு மில்லாதவன், சொல்லாலன்றி மனத்தாலும் யாவரும் அறிதற்கரிய முத்திப் பெருஞ்செல்வனாகிய (கடவுள்) (எனக்குப் பக்குவ காலம் வரு) முன்னே என் உள்ளத்தே (பெருங் கருணையாற்) புகுந்தருளினன்.*

***குறிப்பு :-*** *ஆய் - தாய். பிரான் - எஜமானன் - தலைவன். 'முந்தி' யென்றதுபோலத் திருக்கோவையாரிலும் 'என்னை முன்னாள் ஆள் உடையான்' என்றது காண்க.*

52. செல்வ(ம்) நல்குர வின்றிவிண் ணோர்புழுப்
புல்வ ரம்பின்றி யார்க்கும் அரும்பொருள்
எல்லை யில்கழல் கண்டும் பிரிந்தனன்
கல்வ கைமனத் தேன்பட்ட கட்டமே. 48

***உரை :-*** *செல்வம், வறுமையென்ற வேறுபாடில்லாமல், தேவர், புழு, புல் என்ற வரையறையில்லாமல் (செல்வர்க்கும் வறியர்க்கும் தேவராய்ப் பிறந்தார்க்கும் புழு புல் முதலியவற்றிக்கும்) எல்லார்க்கும் அறிதற்கரிய பரம்பொருளினுடைய அளவற்ற திருவடிகளைக் காணப் பெற்றும் அவற்றைப் பிரிந்திருப்பேனாயினேன். கல்லின் இனத்தினைச் சார்ந்த மனத்தினை யுடையேன், நுகரக் கிடந்த துன்பம் (எத்தன்மையது பாருங்கள்)*

***குறிப்பு :-*** *எப்பிறவி யெடுப்பினும், எந்நலமெய்திடினும், இறைவனை அடைவது மாத்திரம் தனியே வேறாக உள்ளது. எளிதிற் கிட்டத்தக்கதல்ல. இறைவனது அகண்ட அறிவுஞ் செயலுமே, 'எல்லையில் கழல்' என்னப்பட்டன. மனத்தைப் புறத்தே தோன்றுங் கல்லின், வேறாய ஒருவகைக் கல்லினாலாய தென்பார் 'கல்வகை மனத்தேன்' என்றார்.*

**53. கட்ட றுத்தெனை யாண்டுகண் ணாரநீ(று)**
**இட்ட அன்பரோ டியாவருங் காணவே**
**பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை**
**எட்டி னோடிரண் டும்அறி யேனையே. 49**

***உரைநடை :-*** *ஆணவமலக் கட்டறுத்து ஆட்கொண்டு அடியார் கூட்டத்துள் சேர்ந்த அருமையினையும் அதற்குரிய தகுதி தனக்கு இன்மையையும் விண்ணப்பிக்கின்றார்.*

***உரை :-*** *பாசங்களை ஒழித்து என்னை ஆட்கொண்டு கண்கள் பார்த்து மகிழும்படியாகத் திருநீறிட்ட பேரன்பரோடு எல்லாரும் பார்க்கும்படியாகவே, நாயனைய என்னை (உனது திருவோலக்க) மண்டபத்தில் ஏற்றுவித்தாய், அகர உகரமாகிய சிவஞ்சத்தி யியல் பறியா தேனாகிய பரந்த கல்வியும், நிரம்பிய அறிவும், நுண்ணுணர்வும் இல்லாத என்னை ஏற்றுவித்தாய் (இது நீதியோ).*

***குறிப்பு :-*** *பட்டி - நாய். 'நாய் சிவிகை யேற்றுவித்த' என்றதுங் காண்க. திருக்கோத்தும்பி (8). பட்டி - கள்வன் என்பாருமுளர். எட்டு- அ. இரண்டு-உ. சிலர், அ+உ = ய அதாவது ஆன்மா, ஆன்ம நிலை*

*யறியாதேனை என்றாரென்ப. இரண்டாவது ஏற்றினை - ஏறூர்ந்தவனே, ஏற்றினையுடையவனே என்பாருமுண்டு. பட்டிமண்டபம் - ஆராயும் வாதசபை.*

54. அறிவ னேஅமு தேஅடி நாயினேன்
அறிவ னாகக்கொண் டேஎனை யாண்டது
அறிவி லாமையன் றேகண்ட(து) ஆண்டநாள்
அறிவ னேஅல்ல னோஅருள் ஈசனே. 50

***உரை :-*** *எல்லாம் அறியும் முற்றறிவினனே, சாவாமருந்தே, அடிமையாகிய நாயனையேன் (நினதுரையை) அறிய வல்லவனென்று கருதியோ, என்னை ஆட்கொண்டது? ஆண்டநாள் அறிவில்லாமை யல்லவா என்பால் நீ கண்டது. (இனி யுண்மைகள்) அறிவேனோ, அறியேனோ, ஆண்டவனே அருள் செய்யவேண்டும். நாய் ஒருநாள் ஒரு கைப்பிடி சோறிட்டார் நைய ஒறுப்பாராயினும் அவரடியைச் சுற்றி வந்து பிரியாதது போல ஆட்கொண்ட நீ என்னை வெறுத்து ஒதுக்கினும் விலகேன் என்பதாம்.*

***குறிப்பு :-*** *தனது அறிவின்மையைப் பொறுக்க வேண்டுமென் பார் இவ்வாறு கூறினர். ஈசன் - எல்லாவற்றையும் உடையவன்.*

--------

## *5(6) அனுபோக சுத்தி*

### *அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

*அநுபவம் அநுபோகம் என்பன இருவகையான சொல்லாட்சிகள். அநுபவம் - நுகர்ச்சி. அநுபோகம் - நுகர்ச்சியால் விளைந்த இன்பம். அநு என்பது ஒத்த, பின் என்னும் பொருளைத் தரக்கூடிய துணைச்சொல். இதனை உபசர்க்கம் என்பர் வடநூலார். அநுபவத்தால் விளைந்த இன்பம் அநுபோகம். தன்னோடு ஒத்தார் பெற்ற இன்பப் பேற்றினைக்கண்டு அப்பேற்றிற்குத் தான் தகுதியின்மை உணர்ந்து இரங்குதல்வாயிலாக அநுபோகத்திற்குரிய சுத்தியை உண்டாக்கிக்கோடலின் இது அநுபோகசுத்தியாயிற்று.*

*திருவாசக உள்ளக்கிடை 'சுகமேலீடு' என்றும் சொல்லும். அநுபோகம் - சுகம். அதனை மேலிட்டுக்கொள்ளுதற்கான சுத்தியே மேலீடு. ஆதலால் அநுபோகசுத்திக்குச் சுகமேலீட்டுக்காகத் தன்னைத் தூய்மையாக்கிக் கொள்ளுதலே பொருளாதல் காண்க.*

*(இப்பதிகம் சிவானுபவத்தின் பொருட்டு ஆன்ம சுத்தி செய்தலைக் குறிக்கின்றது).*

55. ஈச னேயென் னெம்மானே எந்தை பெருமான் என்பிறவி
நாச னேநான் யாதுமொன் றல்லாப் பொல்லா நாயான
நீச னேனை யாண்டாய்க்கு நினைக்க மாட்டேன் கண்டாயே
தேச னேஅம் பலவனே செய்வ தொன்று மறியேனே. **51**

***உரை :-*** *அரசனே, எனது தலைவனே, எமது அப்பனாகிய பெரியோனே, எனது பிறப்பினை யொழிப்பவனே, யான் யாதானுமொரு சிறு பொருளுக்கு மீடாகாது தீய நாய்த் தன்மையுடைய இழிதகைமையுடையேனை ஆட்கொண்டருளிய உன்னை, (நன்றியுணர்ச்சியோடு) எண்ணித் துதிக்கமாட்டேன். அது நீ அறிந்தாயன்றே, ஒளிமேனியனே, மன்றிலாடுவானே, செய்யத்தக்க வொன்றையும் அறிகிலேன்.*

***குறிப்பு :-*** *எம்மான் - தலைவன், ஒவ்வோருயிருந் தனிவே றியல்புடைமையிற் பிரிதொன்றாகாதென்ற உண்மை கருதற்பாலது. பொல்லா - திருத்தமடையமாட்டாத; அருள்பெற்ற நிலைக்கேற்றவாறு நடவாது கீழ்ப்பட்டமை கருதி, 'நீசனேன்' என்றார். நீயே அறிவொளி கொடுத்து வியத்தகு செயல் செய்து என்னை நல்வழியியக்கி உய்யக்கொள்ள வேண்டுமென்பார். 'தேசனே யம்பலவனே' என்றார்.*

*உடைமைகள் யாவும் சடமும் சடம்போல்வதும் ஆதலின் கேவல நிலையில் சடம்போலக் கிடந்த தான் இறைவனால் தனு கரணங்களோடு கூட்டப்பெற்றுக் கலாதத்துவம் காரியப்படச் சிறிது அறிவு விளக்கம்பெற்ற நிலையில் தம்மை, உணர்த்த உணரும் சித்தாக அறிந்து, உணர்த்தியவன் தலைவன் என்பதையும் உணர்ந்தநிலையில் தன்னை அடிமையாகவும் இறைவனைத் தலைவனாகவும் அனுபவிக்கின்ற அடிகள் 'என் எம்மானே' என்று அருளிச் செய்தார்கள்.*

*ஆண்டான் முன்னிலையில் ஓர் அடிமை நடந்துகொள்ள வேண்டிய அடக்கமும் ஒடுக்கமும் நினைவிற்குவர, அக்குணங்கள் தம்மாட்டு இல்லாமையைத் தெரிந்து வருந்தி, பெருமான் பெருமானாக மட்டுமல்லாமல் என் தந்தையாயும் இருக்கின்றான் அதனால் யான் செய்யும் பிழைகளைப் பொறுப்பான் என எண்ணி 'எந்தை பெருமான்' என்றார். இதற்குத் தம்மை ஆட்கொண்டு பேரின்பப் பெருஞ்செல்வம் அளிக்கும் தலைவனாகவும் தந்தையாகவும் உள்ளவன் சிவபெருமானே*

*என்று நயம் உரைத்தலும் உண்டு.*

*பிறவி - இடையறாது வெள்ளம்போலத் தொடர்ந்து, வருவது; சக்கரம்போல மேலும் கீழுமாக மாறி வருவது. இப்பிறவி அழிய வேண்டுமாயின் மல மாயா கன்மங்கள் உயிரைச் சாராதவாறும் வலி குன்றுமாறும் அருள்பாலித்தல் வேண்டும். அங்ஙனம் செய்து ஆட்கொண்டான் என்பார் 'என் பிறவி நாசனே' என்றார்.*

*குணத்தால் பொல்லா நாயானேன். பொல்லா நாயாயினும், அதனிடம் நன்றி மறவாமையுண்டு. அதுவும் என்னிடம் இல்லையாதலின் நீசனானேன். அத்தகைய என்னையும் ஆண்டுகொண்ட நின்பெருமையையும், உதவியும் எத்துணைப் பெரியன என்று வியப்பார் 'யாதும் ஒன்றல்லாப் பொல்லா நாயான நீசனேனை ஆண்டாய்க்கு' என்றார். நாய் வெறிபிடித்ததாயின் தம்மவர் பிறர் என்று பாராமல் கடித்துத் துன்புறுத்தும். அது பொல்லாநாய். இத்துணைப் பெரிய உபகாரம் புரிந்திருந்தும் அதனை நினைக்கவும் செய்யாத நிலையை உடைமையால் பொல்லா நாயான நீசனேன் என்றார். நீசன் - ஒழுக்கந்தவறிய கீழ்மகன். சைவனாகப் பிறந்திருந்தும் புலச்சார்புபெற்று உடலோம்புதலே தொழிலாகப் பெற்றமையால் 'நீசனேன்' என்றார்.*

*ஆண்டாய்க்கு என்பதில் நான்கனுருபை இரண்டன் உருபாக்கி ஆண்டாயை எனப் பொருள்கொள்க. திருவருள் பெற்று, சிவனடிப் பேறாகிய பேரின்பமெய்த உதவிய உடலாகிய கருவியைக் கருவியென நினையாது அதனை ஓம்புதலையே குறிக்கோளாகக்கொண்டு உன்னை நினையாதவனானேன் என்பார் 'நான் நினைக்கமாட்டேன்' என்றார். நினைத்தல் - இடைவிடாது என்னுதல்.*

**56.** செய்வ தறியாச் சிறுநாயேன் செம்பொற் பாத மலர் காணாப்,
பொய்யர் பெறும்பே(று) அத்தனையும் பெறுதற்குரியேன் பொய்யிலா,
மெய்யர் வெறியார் மலர்ப்பாதம் மேவக் கண்டுங் கேட்டிருந்தும்,
பொய்ய னேன்நான் உண்டுடுத்(து) இங்கிருப்ப தானேன் போரேறே. **52**

***உரைநடை :-*** ***'போரேறே' என்பதை முதலிற் கொள்க. 'செய்வதறியா… பெறுதற்குரியேன்' என்பதை ஈற்றிற்கொள்க.***

***உரை :-*** ***போரில் ஆண் சிங்கத்தை யொப்பவனே, நிலையாதன வற்றிற் பற்றில்லாத உண்மையடியார் தேன் பொருந்திய பூப்போன்ற உனது திருவடிகளைப் பொருந்தினமையைப் பார்த்தும் கேட்டிருந்தும், பொய்த்தன்மையி லீடுபட்ட யான், இந்நிலவுலகத்தே (வயிறார) உணவு***

கொண்டு உடையுடுத்தி (வாளா) வாழ்ந்திருப்பேனாயினேன். (ஆதலிற்) செய்யத்தக்கன வொன்றுமறியாத கீழ்ப்பட்ட நாயனையேன், நினது செவ்விய பொன்னடிக் கமலங்களைக் காணப்பெறாத பொய் வழி நிற்பார். அடையக்கூடிய துன்பப்பேறு முழுவதையும் அடைதற் குரியேன். நாய் "இவன் தன் தலைவன்; இவன் தன் தலைவனல்லன்" என்பதைப் பாகுபடுத்தி அறிந்து தலைவன் தாளையே சாரும். அக்குணமும் தமக்கின்மையால் "சிறுநாயேன்" என்றார்.

*குறிப்பு :- அருளாசானோடு வந்த அடியார் அவனடி சேர்ந்தமையைக் குறிப்பித்தார். பாசப்பகையைத் தொலைக்கும் போரில், ஒப்பற்ற கடவுளாதலின், 'போரேறே' என்றார்.*

**57. போரே றேநின் பொன்னகர்வாய் நீபோந் தருளி யிருள்நீக்கி**
**வாரேறிளமென் முலையாளோ டுடன்வந்தருள அருள்பெற்ற**
**சீரே றடியார் நின்பாதஞ் சேரக் கண்டுங் கண்கெட்ட**
**ஊரேறாயிங்குழல்வேனோ கொடியேன்உயிர் தான் உலவாதே. 53**

*உரைநடை :- 'இருள்நீக்கி' என்பதை 'அருள்' என்பதனோடு கூட்டுக.*

*உரை :- அடிகள் தம்முடன் உறைந்த அடியார்கள் அம்மையப்பரைக் கண்டு பேரானந்தம் பெற்றிருக்கவும் தான் மட்டும் கண் கெட்ட காளையாய் உழல்கின்றேன் என்று விண்ணப்பிக்கிறார்கள். போரில் ஏறு போன்ற பெருமானே, நீ (வீடாகிய) உனது அழகிய ஊரினின்று புறப்பட்டருளிக் கச்சை மிஞ்சிய இளமையும் மென்மையுமுடைய நகிலினளாகிய திருவருட் சத்தியோடு ஒருங்கு எழுந்தருளி, அடியர் ஆணவவிருளை யொழித்தருள, உன் திருவருள் பெற்ற சிறப்பு மிகுந்த அன்பர் நினது திருவடியை யடைதலை நேரே பார்த்திருந்தும், பார்வையற்ற ஊர்ப்பன்றிபோல, இவ்வுலகிலே திரிவேனோ, தீவினையேனது ஆயுள் முற்றி ஒழியாதோ? என்றவாறு.*

*குறிப்பு :- திருவருட் சத்தியின் துணைகொண்டே பாசநீக்கம் நிகழுதலின், அம்மையோடு எழுந்தருளினமை கூறினர். உலப்பிலாத கருணையமுதம் உயிர்களுக்கீவான் முற்படும் அருளன்னை யாதலின் 'வாரேறிள மென்முலையாள்' என்றார். அகண்ட நிலை நின்று அன்பர்க்கருள் செய்ய உருக்கோடலின் 'பொன்னகர்வாய் போந்தருளி' என்றார். 'உயிர்' என்பது உயிர் உடலில் நிற்கும் பொழுதைச் சுட்டியது. ஈற்றடியில், ஏறு - பன்றி.*

58. உலவாக் காலந் தவமெய்தி உறுப்பும் வெறுத்திங் குனைக் காண்பான்
பலமா முனிவர் நனிவாடப் பாவியேனைப் பணிகொண்டாய்
மலமாக் குரம்பை யிதுமாய்க்க மாட்டேன் மணியே யுனைக்காண்பான்
அலவா நிற்கும் அன்பிலேன் என்கொண் டெழுகேன் எம்மானே. 54

***உரைநடை*** *:- 'எம்மானே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை*** *:- எமது தலைவனே, அளவில்லாத காலம் நற்றவங் கிடந்து உடம்பை ஒரு பொருளாகப் போற்றாது, எடுத்த இப் பிறவியிலே உன்னைக் காணும்பொருட்டுப் பல பெரிய முனிவர்கள் மிகவும் கவலையுற்றுத் தளர, (அவர்க்குப் போய் அருள்புரியாது) தீவினையேனை ஆட்கொண்டருளினை, அழுக்கு மிகுந்த இவ்வுடலை அழித்தொழிக்க மாட்டேன். மாணிக்கமே உன்னைக் காண்பதற்குக் கவலையுற்று ஆசைப்படும் அன்பில்லாதேன்; இனி (அன்பொழிந்த) பிற எதனைக் கருவியாகக் கொண்டு மேற்செல்லவல்லேன்?*

***குறிப்பு*** *:- குரம்பை - உடல், கூடு. அலவா நிற்றல் - கவலை யுற்று ஆசைப்படுதல், அங்கலாய்த்தல், எழுகேன் - உயர்வேன். அயராவன்பே, அரன்கழல் சேர்ப்பிக்கும் என்பது குறிப்பிக்கப்பட்டது.*

59. மானேர் நோக்கி உமையாள் பங்கா வந்திங் காட்கொண்ட
தேனே அமுதே கரும்பின் தெளிவே சிவனே தென்தில்லைக்
கோனே உன்தன் திருக்குறிப்பைக் கூடு வார்நின் கழல்கூட
ஊனார் புழுக்கூ டிதுகாத்திங் கிருப்பாதானேன் உடையானே. 55

***உரைநடை*** *:- உடையானே என்பதைக் கோனே என்பதன் பின் சேர்க்க.*

***உரை*** *:- மான்போன்ற விழியுடைய உமைநங்கையை (இடப்) பாகங் கொண்டவனே, (மேல் நின்று இழிந்து) இந்நிலவுலகிலே வந்து ஆட்கொண்டருளிய தேன்போன்ற கெடாத இன்பமளிப்பவனே, சாவாமருந்தே, கருப்பஞ்சாறுபோலத் தித்திப்பவனே, மங்கலப் பெருமானே, அழகிய தில்லையதிபதியே, முதல்வனே, (உன்னுடைய திருவுளப்பாங்கிற் கேற்றவாறு நடந்து) வீடளிக்கும் உன் திருவுளக் குறிப்பிற் சார்ந்தவர்கள் உன் திருவடியைக் கூடவும், யான் தசை பொருந்திய புழு நிறைந்த கூடாகிய இவ்வுடம்பை இவ்வுலகத்தே வீணே காத்திருத்தலை யுடையனானேன்.*

60. உடையா னேநின் றனையுள்கி யுள்ளம் உருகும் பெருங் காதல்,
உடையா ருடையாய் நின்பாதஞ் சேரக் கண்டிங்(கு) ஊர்நாயிற்,
கடையா னேன்நெஞ் சுருகாதேன் கல்லா மனத்தேன் கசியாதேன்,
முடையார் புழுக்கூ டிதுகாத்திங் கிருப்பதாக முடித்தாயே. 56

***உரை :-*** *முதல்வனே, உன்னை முழுவதும் நினைந்து உயிர் கனியத்தக்க பேரன்புடைய அடியார்களைச் சிறப்பாக உடையவனே, அவர்கள் உன் திருவடி கூடப் பார்த்திருந்தும், ஊரில் (ஆதரவின்றி) அலைகின்ற நாயினுங் கீழ்ப்பட்டேன், மனமுருக வல்லேனல்லேன். உன்னை யடையும் நெறியை யறியாமனத்தினேன். அல்லது கல்லின் தன்மை யடைகின்ற நெஞ்சினேன், (அதனால் வருந்தி) அழமாட்டேன். ஆதலால், நாற்றம் நிறைந்த புழுக்கூடாய இவ்வுடம்பை நான் காத்திருப்பதே பொருத்த மெனக்கருதி அவ்வாறு முடிவு செய்து விட்டனையே.*

***குறிப்பு :-*** *ஊர்நாய், திரிந்து அற்பப் பயனாவது கொள்ளும். அதுவுமின்றி வறிதே திரிதலின், அதனினுங் கடையன் என்றார். நாய்க்குள்ள நற்குணங்களும் தனக்கில்லாமை கருதி இவ்வாறு கூறுகிறார்.*

61. முடித்த வாறும் என்றனக்கே தக்க தேமுன் னடியாரைப்,
பிடித்த வாறுஞ் சோராமற் சோர னேனிங் கொருத்தி வாய்,
துடித்த வாறுந் துகிலிறையே சோர்ந்த வாறும் முகங் குறுவேர்,
பொடித்த வாறு மிவையுணர்ந்து கேடென் றனக்கே சூழ்ந்தேனே. 57

***உரைநடை :-*** *முதலிரண்டடியில், முன் அடியாரைச் சேராமற் பிடித்தவாறும் என்றனக்கே முடித்தவாறும் தக்கதே, என அமைக்க.*

***உரை :-*** *உன்னை நாடிய மெய்யடியாரை வினைகள் நீங்கி விட்டபடியால் நீ தளரவிடாமற் பற்றிக் கொண்டதும் வினைப்போகம் எஞ்சியிருத்தலால் (கள்வனேனாகிய) என்னை இங்கே (உடல் காத்திருக்க) முடிவு செய்ததும் தக்கனவே, (உலகப்பற்றிலீடுபட்ட) வஞ்சனேன் இங்கே மாயா சத்தியாகிய பெண்ணின் இதழ்த்துடிப்பும், ஒரு சிறிது நேர்ந்த ஆடை நெகிழ்வும், முகச்சிறு வியர்வை அரும்புதலும் நிகழ்ந்த முறையில் அவற்றி லீடுபட்டு உலகவுணர்ச்சியெய்தி எனக்கே தீங்கு இழைக்கக் கருதிக்கொண்டேன். சோர்தல் - பிரிவால் வருந்துதல்.*

*குறிப்பு :- முன் - நாடிய; முன் அடியார் - வினைத்தொகை. இறை - மிகச் சிறிய அளவு. பொடித்தல் - தோன்றுதல். துகில் - ஆடை. வாய்த்துடியாற் சொல்லும், ஆடைக் கலைவால் உடம்பும் உள்ளத்தின் நிலைகாட்டும், முக வியர்வையால், மனமும் உலக நிகழ்ச்சிகளிலழுந்தி ஈடுபட்டதெனக் குறித்தவாறாம். இறை பற்றுடையார்க்கு வீடும், உலகப் பற்றுடையார்க்கு உடம்பில் நிலைப்பும் அருவியது பொருத்தமென்றார். உலக வாதனை, உயிரறிவைக் கவர்தல் கூடுமாதலின், பெண்ணின் மயல்விளை செய்கைகளின் வைத்து அதனை விளக்குவாராயினர். இவ்வாறு கொள்ளாது, ஒரு பெண்ணினைக் கண்டு அடிகள் மோகமுற்றா ரென்பது, அத்துணை பொருந்தாமையறிக. பெண்டிரைக் கூறுமிடத்துப் பன்மையாகக் கூறினமையும், இங்கே 'ஒருத்தி' என்றதும் உற்று நோக்குக. அவள் செயல்களை உணர்ந்தமையே கேடென்றாரே யொழிய, உணர்ந்து, பின்வேறு செயலாகிய கேடு சூழ்ந்தனரென்னக் கருதற்க. கடவுள் ஒரு புறமும், உடம்புபற்றி நிகழும் பிராரத்த வாதனை யொருபுறமும் இழுப்பப், பின்னதை விட்டு முன்னதைப் பற்றாமையே அடிகள் தன்குற்றமென்றாரென உய்த்துணர்க.*

*இதழ் துடித்தல், துகில் சோர்தல், குறுவியர் தோன்றலாகிய இம்மூன்று அவத்தைகளையும் உண்மையென எண்ணி, எனக்குக் கேடு நானே தேடிக்கொண்டேன் எனக் குறிப்பாகக் காம வயப்பட்டமையை உணர்த்துவார் 'இவை உணர்ந்து கேடு என்றனக்கே சூழ்ந்தேனே' என்றார்.*

*இவ்வண்ணம் அடிகளார் தம் செயலாகக் கூறினும் உலகர் நிலையைத் தம்மேலிட்டுக் கூறி உலகை உய்விக்கச் சொன்னதேயன்றித் தம் அநுபவம் கூறியதாகக் கோடல் பொருந்தாது. இங்ஙனமே ஏனைய அடியார்களும் மக்கள் நிலையைத் தம்மேல் ஏறிட்டுக்கூறி உலகைத் திருத்துதல் காண்க.*

*தன்குறையுணர்ந்து இரங்குதலால், காமவயப்படுதலாகிய தீமையே சிவபோகத்திற்குத் தடையாக இருக்கின்றது என்று உணர்த்தி, அதனின் நீங்குதலாகிய தூய்மையை விரும்புதலால் இப்பாடல் அநுபோக சுத்தியாயிற்று.*

**62. தேனைப் பாலைக் கன்னலின் தெளிவை யொளியைத் தெளிந்தார்தம்,**
**ஊனை யுருக்கு முடையானை உம்பர்ஆனை வம்பனேன்,**
**நானின் னடியேன் நீயென்னை யாண்டா யென்றால் அடியேற்குத்,**
**தானுஞ் சிரித்தே யருளலாந் தன்மையாம் என் றன்மையே. 58**

***உரை :-*** *தேன்போன்ற இனிமையும் பால்போன்ற தூய்மையும் கரும்பின்சாறு போன்ற அருட்செயலும் உடைய சோதியை அறிவின் கண் தெளிந்த அடியார்களுடைய உள்ளமே யன்றி உடம்பையும் உருகுவிக்கும், முதல்வனை (வேண்டிய தெல்லாம் எளிதின் ஈயும் விண்பசுவாகிய) காமதேனு வொப்பானை நோக்கி, வீணனேனாகிய நான் உன் அடியேன், நீ என்னை ஆட்கொண்டாயென்று செப்பினால் அடியேனைப் பார்த்து, அப்படியா, நல்லது என்று அவன் இகழ்ந்து நகையாடி யருளுதற்குரிய இயல்பே என்னியல்பாயிற்று.*

***குறிப்பு :-*** *தன்னை மெய்யடியனாக இறைவன் ஏற்றுக் கொள்ளத் தகுதியில்லை எனினும், அவன் நகையாடுவதும் தமக்கு ஒரு ஆறுதல் என்று குறிப்பித்தவாறு காண்க. உம்பரானை - மேலாய தேவனை என்றுமாம்.*

*இத்திருப்பாட்டில் அடிகளார், தம் தன்மை தனக்கே நகைவிளைப்பதாக இருக்கிறது என விண்ணப்பித்துத் தூய்மையை விரும்புகின்றார்.*

*அதிதீவிர பக்குவிகளாகிய தீவிரதரருக்குத் தேன்போல உடன் மிக இனிப்பவனாயும், தீவிர பக்குவிகளுக்குப் பால்போல உண்ட போது இனிப்பவனாயும், மந்த பக்குவிகளுக்குக் கரும்பின் தெளிவாய்ச் சக்கையும் கோதும் நீக்கி நுகரப்படும்போது இனிப்பவனாயும் உள்ளான் என ஆன்மாக்களின் மூவகை நிலைகளையும் அவர்களுக்கு இறைவன் நுகரப்படுபொருளாய் விளங்கும் நிலைவேறுபாட்டினையும் விளக்கியவாறு.*

*இறைவன் இனிமை பயக்கும் பொருள் அனைத்துமாக விளங்குவதைத் 'தேனைப் பாலைக் கன்னலின் தெளியை' என்பதால் உணர்த்தினார்.*

**63.** தன்மை பிறரா லறியாத தலைவா பொல்லா நாயான
புன்மை யேனை ஆண்(டு) ஐயா புறமே போக விடுவாயோ
என்னை நோக்கு வார்யாரே என்நான் செய்கேன்எம்பெருமான்
பொன்னே திகழுந் திருமேனி யெந்தாய் எங்குப் புகுவேனே. **59**

***உரை :-*** *(அன்பரன்றி) மற்றையோரா லறியப்படாத இயல்புடைய தலைவனே, தீயநாய்போன்ற சிறியேனை ஆட்கொண்டு, ஐயனே, உன் அருளுக்குப் புறம்பாகச் செல்ல விட்டுவிடுவையோ, அங்ஙனமாயின், அடியேனைக் கண்பார்ப்பார் வேறு யாவர்? எமது பெரியோனே, நான் என்னசெய்ய மாட்டுவேன்? (மாறிலாத)*

*பொன்போல் விளங்கும் அழகிய திருவுருவ முடையவனே, எந்தையே, நான் எங்கே அடைக்கலம் புகுவேன்?*

***குறிப்பு :-** தலைவனே, உனக்கே மீளாவடிமை. தூய அருளொளி யுடையானே பிழைபொறுப்பதுன் கடன். பெரியோனே, நீயே கண்பார்க்க வேண்டும், உனக்கே அடைக்கலம் என்று அடிகள் செப்பியவை, உருக்கத்தின் தலைநின்றவை.*

*தலைவன், குடிகளுடைய நலம் தீங்கு இரண்டுக்கும் உதவியாக இருந்து அவர்களைக் காப்பவன். உலகியலில் தலைவன் என்பது அரசனையும், உயிரநுபவத்தில் தலைவன் என்பது இறைவனையும் உணர்த்தும்.*

*உலகியல் தலைவர்கள் அனைவராலும் உணரப்பட்டவர்களாய், குணமும் செயலும் இத்தகையதென வரையறுத்து அறியப் பெற்றவர்களாய், தாம் அனைவரையும் அங்ஙனம் அறியும் ஆற்றல் இல்லாதவராய் இருப்பர். உயிர்த் தலைவனாகிய இறைவனோ இப்படியன் இவ்வண்ணத்தன் என யாரானும் அறியப்பெறாதவனாகி, எல்லாரையும் எல்லாவற்றையும் இருந்த நிலையில் ஒருசேர அறியும் பேராற்றலுடையவனாகி விளங்குபவன் ஆதலின் 'பிறரால் தன்மை அறியாத தலைவர்' என்றார். ஒருவரானும் அறியப்பெறாதவன் இறைவன் எனின், அவனால் உலகிற்குப் பயனின்மையைத் திருவுளத்தடைத்துப் பிறரால் அறியப்பெறாதான் எனவே தமரால் அறியப்பெறுபவன் எனக்கொள்ளவும் வைத்தமை காண்க. தமர் - சிவாநுபூதிமான்களாகிய மெய்யன்பர்கள். அவர்கள் ஞானானுபவமாக இறைவனை அறிவர் என்பதாம்.*

*பொல்லா நாயான புன்மையேன் - பிறப்பினாலே இழிந்த நாயான தன்மையோடு அதனிடமுள்ள நன்றியறிதல் குணமும் இல்லாத இழிதகையேன்.*

*புறம்போக விடுதல் - அகம்படிமைத் தொண்டருள் ஒருவனாகச் சேர்த்து எப்போதும் ஆனந்தத்தில் அழுத்தாது வினைக்கீடான உடலோடு கூட்டி அலையச் செய்தல்.*

*தேவரீருடைய திருவருணோக்கில் விலகி, புறம் போகின்ற போது என் விருப்பின்படி எங்கும் போவேன்; எனக்குத் தீமைகளே மிக விளையும்; அப்போது அடித்துத் திருத்தி நன்னெறியிற் செலுத்துவார் யார் என்றிரங்குவார் 'என்னை நோக்குவார் யாரே' என்றார். அன்றியும் யான் உன் அடிமை என்ற உரிமையுள்ளவரையில்*

*என்னை இவன் ஒரு சிவனடியான் என்று நோக்கிப் போற்றுவார்கள்; நீ ஒதுக்கிவிட்டால் பின்பு என்னைப் போற்றுவார் யார் என்றார் எனலுமாம்.*

*அங்ஙனம் ஒதுக்கியகாலத்து என்னை நானே காத்துக் கொள்ளும் ஆற்றலாவது எனக்கு உண்டோ? எனக்குச் செய்வது இன்னது என்றுதான் தெரியுமோ? என்பார். 'நான் என் செய்கேன்' என்றார். இது செயலறவு தோன்ற நின்றது.*

*மேலும், நீ எனக்குப் பெருமானும், தாயும் போன்றவன்; அதனால் விடலாகாது என விண்ணப்பிப்போர் 'எம் பெருமான்! எந்தாய்! எங்குப் புகுவேன்' என்றார்.*

*இங்ஙனம் தன் குறையை உணர்ந்து, தனக்குச் சார்பற்ற தன்மையை விண்ணப்பித்தல் வாயிலாகத் தூய்மையை வேண்டுதலின் இது அனுபோகசுத்தியாயிற்று.*

**64.** புகுவேன் எனதே நின்பாதம் போற்றும் அடியா ருள்நின்று
நகுவேன் பண்டு தோள்நோக்கி நாண மில்லா நாயினேன்
நெகுமன் பில்லை நினைக்காண நீயாண் டருள அடியேனுந்
தகுவ னேயென் தன்மையே எந்தாய் அந்தோ தரியேனே. **60**

***உரைநடை :-*** *பண்டு, போற்றும் அடியாருள் நின்று நாண மில்லா நாயினேன் நகுவேன். நினைக்காண நெகுமன்பில்லை நீ ஆண்டருள அடியேனுந் தகுவனோ. எந்தாய், என்றன்மையோ அந்தோ! தரியேன். நின்பாதம் எனதே புகுவேன்.*

***உரை :-*** *நீ காட்சி கொடுத்த முன்னாளிலே, உன்னை வணங்கும் அன்பர் நடுவே நின்று வெட்கமில்லாத நாய்போன்ற யான், நினது திருத்தோள்களை நோக்கி நகையாட லொன்றுமே யுடையனா யிருந்தேன். உன் திருவருட் காட்சி பெறுதற்குரிய உள்ளம் உருக்கும் அன்பு என்னிடமிருந்ததில்லை. அங்ஙனமாயின், நீ ஆட்கொண்டருளுந் தகுதியுடையேன் ஆயினேனா; எந்தையே, என்னியல்பு இருந்தவா றென்னே! ஐயா, அன்பற்ற என்னியல்பை நான் பொறுக்கமாட்டேன். நீ ஆண்டமையால், நின்பாதம், எனக்கு உரியதே. நான் அதன்கண் அடைக்கலம் புகுவேன். தன் தோளழகைத் தாமே பார்த்து நகையாடுதல், நாணமில்லா நாயேனாக அலைதல், இறைவனைக் காண நெகும் அன்பில்லை என்று மூன்று குற்றங்கள் உடைய தாமும் ஆண்டருளத் தகுதி உள்ளவனா என்று வினவுகிறார்.*

--------

## *5(7) காருண்யத் திரங்கல்*

### *அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

*(இப்பதிகம் கருணையாலே இரங்கும்படி இறைவனை வேண்டுவதைக் குறிப்பது).*

*காருணியம் - கருணையின் விளைவு. கருணை சிவபெருமானுடைய பிரிப்பிலாற்றல். முன் பதிகத்தில் பாசநீக்கமாகிய உயிர்த்தூய்மையை வேண்டிப்பெற்று, அனுபோகத் தூய்மையை யடைந்த அடிகளார்க்குச் சிவகருணை 'பூவினில் கந்தம் பொருந்தியவாறு' போலப் பொருந்த, அதனால் தன் ஆற்றாமையை விளக்கி இந்தப் பதிகத்தில் இறைவனுக்குப் போற்றி கூறுகின்றார்.*

*காருணியத்திரங்கல் என்பதற்குக் கருணையைக் குறித்து இரங்குதலென்றும் பொருள் உரைப்பார் சிலர். பழைய உரை அருள் வழியாகச் செலுத்தும் சிவசத்தி அனுபூதி என்னும். அஃதாவது, அகக்கரணங்களும் புறக்கரணங்களும் தம் விருப்பப்படிப் புறத்தே செல்ல, அவற்றைத் தடுத்து, சிவசத்தி அருள்வழியாகச் செலுத்துவதே காருணியமாதலின் அதனை அறிந்து, தன் தகுதியின்மையை உணர்ந்து இரங்கி விண்ணப்பித்தலாம்.*

**65.** தரிக்கிலேன் காய வாழ்க்கை சங்கரா போற்றி வான
விருத்தனே போற்றி எங்கள் விடலையே போற்றி யொப்பில்
ஒருத்தனே போற்றி உம்பர் தம்பிரான் போற்றி தில்லை
நிருத்தனே போற்றி எங்கள் நின்மலா போற்றி போற்றி. **61**

***உரைநடை*** *:- காயவாழ்க்கை தரிக்கிலேன், எனமாற்றுக.*

***உரை*** *:- இவ்வுடம்போடு வாழ்ந்திருத்தலைப் பொறுக்க முடியவில்லை. சுகத்தைக் கொடுப்பவனே, காத்தருள்க. சிதாகாயத்தில் உறையும் பழையோனே, காத்தருள்க. அடியேங்களுடைய அண்ணலே, காத்தருள்க. ஒப்பற்ற ஒருவனே, காத்தருள்க. வானவர் மூலவனே, காத்தருள்க. தில்லைமன்றில் நடமாடுவானே, காக்க. எங்கள் தூயோனே, காக்க; காக்க. வணக்கம்; வணக்கம்.*

***குறிப்பு*** *:- போற்றி யென்பதற்கு வணக்கமெனவும், காக்கவெனவும் பொருள் கொள்ளலாம். காயம் - உடல். விடலை - 16 வயது முதல் 30 வயது வரை உள்ள ஆண் மகன்.*

*ஒருத்தன் - ஒப்பற்றவன். இரண்டாவதாக ஒருங்குவைத்து எண்ணத்தகாதவன். அங்ஙனமாகவும் ஒப்பில் ஒருவன் என்றது உயிர்களுக்கு இருவினை ஒப்பும் மலபரிபாகமும் அரும்பின போதுதான் சிவன் ஒருவனே முதல்வன், அவனே தியானிக்கத்தக்கவன் என்ற உறுதி பிறக்கும். ஆதலால் அடியேனது வினையொப்பில் அறியப்படும் ஒருத்தனே என்பார் 'ஒப்பில் ஒருத்தனே' என்றார்.*

*காயவாழ்க்கையாகிய மலமாயைகளின் கூட்டுறவை விலக்கி ஆட்கொள்ளும் தகுதியும் தலைமையும் இயல்பாகவே பாசங்களி னீங்கிய இறைவனுக்கே உண்டு என்பார் 'நின்மலா போற்றி போற்றி' என்றார்.*

*இத்திருப்பாட்டில் சங்கரன், வானவிருத்தன் முதலிய திருப்பெயர்களால் இறைவனை ஏழு முறை விளித்து எட்டுமுறை போற்றிக் கூறுவது கருணையைத் துணைக்கொண்டு ஆனந்தத் தழுந்துதலிலுள்ள விரைவுபற்றி என்க. இப்பதிகம் நுதலிய பொருளும் இதனானே விளங்கும்.*

**66.** போற்றி யோம்)நமச் சிவாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றி யோம்)நமச் சிவாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றி யோம்)நமச் சிவாய புறமெனைப் போக்கல்கண்டாய்
போற்றி யோம்)நமச் சிவாய சயசய போற்றி போற்றி. **62**

***உரை :-*** *ஓம் நமச்சிவாய. (அதாவது ஓம், சிவனுக்கு வணக்கம்). பாம்பணிந்தவனே, அடியேன் திகைப்புறுகின்றேன். காத்தருள்க. ஓம் நமச்சிவாய. அடியேனுக்கு நின்னையொழியத் தஞ்சமான இடம் வேறியாதுமில்லை. காத்தருள்க. ஓம் நமச்சிவாய, அடியேனைப் புறம்பே போகவிடாதே காத்திடுக, ஓம் நமச்சிவாய, காத்தருள்க. நின் வெற்றி ஓங்குக. வணக்கம், வணக்கம்.*

***குறிப்பு :-*** *இதில் ஓம் நமச்சிவாய என்ற பிரணவ பஞ்சாக்கரம் நான்கு முறை வந்திருத்தல் காண்க. ஓம் என்பது அகார உகார மகார நாத விந்துக்களாகிய ஐந்தொலியின் கூட்டமாய் விளங்கும். பிரணவம் திருவைந்தெழுத்தின் தொகையாகும். நமச்சிவாய என்பது திருவைந்தெழுத்தின் தூல வடிவாகும். இதற்குப் பிரணவத்தின் வேறாகாத திருவைந்தெழுத்தின் சொற்பொருளாக விளங்குபவனே என்பது பொருளாம். இந்நூல் தோத்திரமாதலின், பரிபாகமுறாத சமயிகளும் உரைத்து ஈடேற, தூல பஞ்சாக்கரமாய இதனை ஓதினார். பின்னர், சூக்கும பஞ்சாக்கரத்தையும், மற்றோரிடத்தில் காரண*

*பஞ்சாக்கரத்தையும் உரைப்பர். அவை ஆங்காங்கு மக்களின் பரிபாகம் கருதியே பகரப்பட்டவை. திருவைந்தெழுத்து ஓதுமுறை நிற்கும் முறைகளையும், இவை இரண்டும் சுத்தாத்துவைத சைவநெறியின் ஒன்றேயாதலையும் சிவஞானபோத மாபாடியத்துச் சிவஞான முனிவர் திருவாக்கால் உணர்க.*

*புயங்கம் - பாம்பு. புயங்கன் - பாம்பை அணிந்தவன். தேவரீரைக் கொல்ல வந்த நச்சுப்பாம்பையும் அணியாக ஏற்று அவற்றை வாழவைத்த நீர் என்னை ஏன் இன்னும் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதை எண்ணி மயங்குகின்றேன் என்பார் 'புயங்கனே மயங்குகின்றேன்' என்றார்.*

*மீட்டும் திருவைந்தெழுத்து ஓதச் சிறிது தெளிவு பிறந்தது; அப்போது தனக்குப் புகலிடம் வேறில்லாததை உணர்ந்து 'புகலிடம் பிறிதொன்றில்லை' என்கின்றார். ஆன்மாக்களுக்கு நம்மைப் பாதுகாக்கும் இடம் இது அது என்ற வேற்றுமை உணர்ச்சி உள்ளவரை இன்பம் சித்தியாது என்பதனைத் திருவுளம்கொண்ட அடிகளார் தன் உறுதியைத் தெரிவித்துக் கொண்டவாறு.*

*அங்ஙனம் உறுதிபூண்டமையால் என்னைப் புறம்போக்கற்க என்று விண்ணப்பிக்கின்றவர் 'புறமெனைப் போக்கல் கண்டாய்' என்கின்றார்.*

*அடியேனது விருப்பப்படி என்னை ஏற்றுக்கொண்டால் எனக்கு வெற்றிமேல் வெற்றி என்று விண்ணப்பிப்பார் சய சய போற்றி போற்றி என இருமுறை விண்ணப்பிக்கின்றார்.*

*இத்திருப்பாட்டில் மயங்குகின்றேன், புகலிடமில்லை, புறம் எனைப் போக்கல் என இறைவனை வேண்டிக் கூறலின் இது காருணியத்திரங்கலாயிற்று. பேய் முதலியவற்றால் மால்கொண்டார்க்கு மந்திரம் ஓத மயக்கம் நீங்குதல்போலத் திருவைந்தெழுத்தை இவ்வாறு ஓதினேன்; திகைப்பு அற்றேன்; திருவடி அடையப்பெற்று வெற்றி அடைவேன் என்பது கருத்து.*

**67.** போற்றியென்போலும் பொய்யர்தம்மை ஆட்கொள்ளும்வள்ளல்
போற்றிநின் பாதம் போற்றி நாதனே போற்றி போற்றி
போற்றிநின் கருணை வெள்ளப் புதுமதுப் புவனம்நீர்தீக்
காற்றிய மானன் வான மிருசுடர்க் கடவு ளானே. **63**

***உரை :-** என்னைப்போலும் நிலையாதவற்றிற் பற்றுடையவர் களையும் ஆட்கொண்டருளும் ஈகை மிக்க பெருந்தகையே உனக்கு*

வணக்கம். உனது திருவடிக்கு வணக்கம். தலைவனே வணக்கம். வணக்கம். நிலம், நீர், நெருப்பு, காற்று, வான், உயிர், ஞாயிறு, திங்கள் என்ற இரு சுடராகிய எட்டினையும் வடிவாகக் கொண்டு அவையாகிய கடவுட்டன்மை யுடையவனே. உனது அருள் வெள்ளமாகிய புதிய தேனின் பொருட்டு உனக்கு வணக்கம். (உனது அருள் வெள்ளமாகிய - புதிய தேன் எம்மைக் காக்க) என்றவாறு.

***குறிப்பு :-*** *இயமானன் - உயிர். புவனம் - பிருதுவி. வள்ளல் - வரையாது கொடுப்போன். கூறிய எட்டையும், அட்ட மூர்த்தமென்ப. பொய்யர்க்கும் மெய்யர்க்கும் அருள் வழங்குதலால் 'வள்ளல்' என்றார். 'நின் கருணை வெள்ளப் புதுமது போற்றி' என்பதை இறுதியிற் கொள்க.*

**68.** கடவுளே போற்றி யென்னைக் கண்டுகொண்டருளுபோற்றி
விடவுளே உருக்கி யென்னை ஆண்டிட வேண்டும் போற்றி
உடலிது களைந்திட் டொல்லை யும்பர்தந் தருளு போற்றி
சடையுளே கங்கை வைத்த சங்கரா போற்றி போற்றி. **64**

***உரை :-*** *மனம் மொழி மெய்களைக் கடந்த பெருமானே வணக்கம். அடியேனைக் கண்பார்த்து இரங்குக, வணக்கம். (உலகப் பற்றை) விடுதற்கு, என் உள்ளத்தை அன்பால் உருகுவித்து என்னை அடிமைகொண்டிட வேண்டுகிறேன், வணக்கம். இந்த உடலினை நீக்கி விரைவாக வீட்டினைக் கொடுத்தருள்க. வணக்கம். (உலகர்க்கிரங்கிக் கங்கையானது உலகை அழிக்கவொட்டாமல்) சடையின் கண்ணே கங்கையை ஏற்றமைத்துக் கொண்ட இன்ப வள்ளலே, வணக்கம், வணக்கம்.*

***குறிப்பு :-*** *'கடவுளே' என்பதற்கு, காணப்பட்ட எல்லாவற்றையுங் கடந்த பொருளேயென்றுங் கூறலாம். புறக்கணியாது போற்ற வேண்டுமென்பார். 'கண்டு கொண்டருளு' என்றார். ஒல்லை - விரைவாக உம்பர் - மேலிடம் - முத்தி. மிடுக்காக வந்த கங்கையின் துடுக்கு அடக்கிச் சடையுள் மறைத்து வைத்த நீ என் செருக்குகளை அடக்குதலும் எனக்கு இனிமையைச் செய்தலும் எளிய செயலாம் என்பார். "சடையுளே கங்கை வைத்த சங்கரா" என்கின்றனர்.*

**69.** சங்கரா போற்றி மற்றோர் சரணிலேன் போற்றி கோலப்
பொங்கரா அல்குற்செவ்வாய் வெண்ணகைக் கரியவாட்கண்
மங்கையோர் பங்க போற்றி மால்விடை யூர்தி போற்றி
இங்கிவ்வாழ்வாற்ற கில்லேன் எம்பிரான் இழித்திட்டேனே. **65**

***உரை :-*** *சுகங் கொடுப்பவனே வணக்கம். (நின்னைத் தவிர) வேறு புகழ் இல்லாதேன், வணக்கம். சீற்றங் கொண்ட பாம்பின் அழகிய படத்தை யொத்த நிதம்பத்தையும், சிவந்த இதழையும், வெள்ளிய பல்லினையும், ஒளியுடைய கருங்கண்ணையும் உடைய மங்கைப் பருவத்தினளாய உமையைப் பாகராக உடையவனே, வணக்கம். அரியைக் காளை வாகனமாக உடையவனே, வணக்கம். இவ்வுலகிலே இல்வாழ்க்கையை நான் பொறுக்க இயலாதேன், எம்பெருமானே (இதனை) அருவருத்து விட்டேன். மால்விடையூர்தி - மெய்யன்பர்கள் எப்போது மனமொன்றி அழைத்தாலும், காலந்தாழ்த்தாது உடனே செல்ல வேண்டும் என்பதற்காகக் கருணை உள்ளத்தால், விடையின் மேலேயே அமர்ந்து கொண்டிருக்கிறாய் என்று தெரிவிக்கிறார்.*

***குறிப்பு :-*** *சரண் - புகலிடம். சீற்றங் கொண்ட காலையே, பாம்பு படமெடுத்தலின், 'பொங்கரா' என்றார் படத்தையே அல்குலுக்கு உவமையாகக் கொண்டார். அல்குலென்பது, மறை விடத்துக்கு மேற்பட்ட உடற்பகுதி. 'வாட்கண்' என்பதற்கு வாள் போன்ற கண் என்பாருமுளர். பொங்குஅரா - வெகுளும் பாம்பு.*

70. இழித்தனன் என்னை யானே எம்பிரான் போற்றி போற்றி
பழித்திலேன் உன்னை என்னை யாளுடைப் பாதம் போற்றி
பிழைத்தவை பொறுக்கையெல்லாம் பெரியவர் கடமை போற்றி
ஒழித்திடிவ் வாழ்வு போற்றி உம்பர்நாட் டெம்பி ரானே. 66

***உரை :-*** *யானே என்னை (மிகவும்) வெறுத்துவிட்டேன், அல்லது கீழ்ப்படுத்திவிட்டேன், எமது வள்ளலே, வணக்கம், வணக்கம். உன்னை யான் குறை கூறேன். அடியேனை அடிமையாகவுடைய திருவடிக்கு வணக்கம். இயற்றிய தவறுகளையெல்லாம் மன்னித்தல், பெரியவர்கள் கடப்பாடாகும். (ஆதலால், பெரிய நீ சிறிய என் பிழையெல்லாம் பொறுத்தருள்க). காத்தருள்க. வீட்டுலகின் எமது தலைவனே, இந்த வாழ்க்கையை (விரைவில்) தொலைத்தருள்க. வணக்கம்.*

***குறிப்பு :-*** *உம்பர் - தேவர்களுக்கு மேலான வானுலகம்.*

71. எம்பிரான் போற்றி வானத் தவரவ ரேறு போற்றி
கொம்பர் ஆர்மருங்குல் மங்கை கூறவெண் ணீற போற்றி
செம்பிரான் போற்றி தில்லைத் திருச்சிற்றம் பலவ போற்றி
உம்பரா போற்றி யென்னை யாளுடை யொருவ போற்றி. 67

***உரை :-*** *எமது வள்ளலே, வணக்கம். வானுலகிலுள்ள பல தேவர்களுள் அவ்வவர்க்குத் தக்கவாறு அருளுஞ் சிங்கமே, வணக்கம்.*

*கொடிபோன்ற இடையுடைய மாதினை ஒருபாகமுடையவனே, திருவெண்ணீறுடையாய், வணக்கம். செம்மேனியுடைய பெருமானே, வணக்கம். அழகிய தில்லைஞானப் பொதுவினையுடையாய், வணக்கம். வீடுடையானே வணக்கம். என்னை அடிமையாகவுடைய ஒப்பற்றவனே, வணக்கம்.*

72. ஒருவனே போற்றி ஒப்பில் அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி எங்கள் கோமளக் கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால் வாங்கிட வேண்டும் போற்றி
தருகநின் பாதம் போற்றி தமியனேன் தனிமை தீர்த்தே. **68**

***உரை :-*** *(கடவுளாகிய) ஒருத்தனே வணக்கம். தனக்கு யாரும் நிகரில்லாத தந்தையே வணக்கம், தேவரீருடைய பரமாசாரியனே, வணக்கம். அடியேங்களையுடைய இளமைச் செவ்வி நிறைந்த சோதியே வணக்கம். 'இங்கே வா' என்று அடியேனை உன்னிடம் நீ அழைத்து ஏற்றுக் கொள்ளவேண்டும். (ஐயா) வணக்கம். (ஆதரவு யாதுமின்றித்) தனிப்பட்ட எனது துறையின்மையை யொழித்து உன்னுடைய திருவடி (த்துணை)யைக் கொடுத்தருள்க. வணக்கம்.*

***குறிப்பு :-*** *தேவர் குருவாதல், திருமால், இந்திரன், பிரமன், உபமனியன், தபனன், நந்தி செவ்வேளாதித் தருமமுதுகுரவருக்குந் தனதருளாலாசிரியத் தலைமை நல்கி, என்றமையாலறிக. என்றும் மாறாத எழிலுடைமைபற்றி 'கோமளக் கொழுந்தே' என்றார். கோமளம் - மென்மை. கொழுந்து - இளந்தளிர். இறைவன் சிவக்கொழுந்து என்னுந்திருநாமமும் உடையனாதல் காண்க. இறைவன் என்றும் இளமை குன்றாது வளரும் தகைமையான கொழுந்தாகவே அடியார்களுக்கு இன்பமூட்டுகின்றானாதலின் 'எங்கள் கோமளக் கொழுந்தே' என்றார். இங்ஙனமன்றி அடியார்களும் அன்பர்களும் பூஞ்செடியும் பூங்கொடியும் போல்வர்; செடி கொடிகளின் வேர்க்குள்ள தீங்கைக் கொழுந்து வாடி முன்னால் அறிவிக்கும்; அது தெரிந்து பொழில் காப்பான் கொத்தி வெட்டி எருவிட்டு மருந்திட்டுத் தீங்குநீக்கிச் செடியைக் காக்க உதவும். அதுபோல அடியார்களுக்கு வாசனையால் விளைந்த கேடுகளை முன்னறியச் செய்பவனாதலின் இறைவனைக் கொழுந்தென்றார் என்பாரும் உளர். விடாமையும் மாறாமையும் அடியார் தீங்குகளைத் தாமே திருவுளங்கொண்டு காக்கும் இழுக்கு இவ்வுவமையால் நேராதாயின் இந்நயம் கொள்க. பெரிய வெள்ளத்தில் சிக்கிச் சுழியிடைப்பட்டான் ஒருவனைக் கைகொடுத்து வருக என்று கூவித் தூக்குவது போன்று பிறவி*

*வெள்ளத்தில் துன்பச்சூழலில் அறியாமை யாகிய முதலை கவ்வ வருந்தும் அடியேனை 'வருக என்று நின்பால் வாங்கிட வேண்டும்' என வேண்டுகிறார்.*

*என்னைத் தூக்கி எடுத்தால்மட்டும் போதாது; இன்பமயமான திருவடியையும் தந்தருளவேண்டும்; நான் சுற்றமும் பற்றும் விட்ட தனியனாயினேன்; என் தனிமையைத் தீர்த்துத் திருவடிச்சார்பு அருள வேண்டுமென்பார் 'தமியனேன் தனிமை தீர்த்து நின் பாதம் தருக' என வேண்டிக் கொள்கின்றார்.*

*அடியேனை வருக என்று அழைத்து நின்பால் வாங்கிட வேண்டும். பாதம் வேண்டும் என வேண்டுதலால் இறைவன் காருணியமும், தமியேன் தனிமை தீர்த்து என்பதால் இரக்கமும் குறிக்கப் பெறுதலின் இது காருணியத்திரங்கலாயிற்று.*

73. தீர்ந்த அன்பாய அன்பர்க் கவரினும் அன்ப போற்றி
பேர்ந்துமென் பொய்ம்மை யாட்கொண்டருளிடும் பெருமை போற்றி
வார்ந்தநஞ் சயின்று வானோர்க் கமுதம்ஈ வள்ளல் போற்றி
ஆர்ந்தநின் பாதம் நாயேற் கருளிட வேண்டும் போற்றி. 69

***உரை :-*** ***முடிந்த அன்புருவமாய அடியாரிடத்தே அவரைப் பார்க்கிலும் மிகுந்த அன்புடையவனே, வணக்கம். எனது பொய்ம்மையை நீக்கியும் என்னை அடிமையாகக் கொண்டருள் செய்யும் பெருந்தன்மையனே, வணக்கம். (பாற்கடலில்) பெருகிய விடத்தை உண்டு, விண்ணவர்க்கு அமுதத்தைக் கொடுத்த பேருதவியாளனே, வணக்கம். எங்கும் நிறைந்த நினது திருவடிகளை நாயனைய எனக்கு ஈந்திட வேண்டுகிறேன், (ஐய) வணக்கம்.***

***குறிப்பு :-*** ***தீர்ந்த, என்றது மிக மேலாகிய, சத்திநிபாதத் துத்தமர்களுடைய உயர்ந்த, பயன் கருதாத, பேரன்பை, அன்பர்க்கு அன்பே முடிந்த கருவியும், பயனுமாம். இரண்டாம் அடியில், என் பொய்ம்மையைப் பேர்ந்தும், என உரைநடை கொள்க. பெயர்த்தும் - பெயர்ந்தும். வார்ந்த - நீண்ட, பெருகிய. அயின்று - உண்டு. ஈவள்ளல்- ஈந்த வள்ளல் - வினைத்தொகை. ஆர்ந்த - நிறைந்த.***

***அன்புடைமையை அன்பர்கள் குறிப்பறிந்து பணி செய்வதானும், துன்பம் வந்த காலத்து இரக்கம் காட்டுதலானும் உதவி செய்தலானும் வெளிப்படுத்துவர். அதுபோல, இறைவனும் சுந்தரருக்குத் தூது நடந்தும், சம்பந்தப்பெருமானுக்கு அம்பொனாயிரம் கொடுத்தும், வந்திக்கு மண் சுமந்தும், மாணிக்கவாசகருக்கு***

*வையையைப் பெருக்கியும், தருமிக்காகப் புலவனாக வந்து அருள் செய்தமையும் காண்க.*

*நாடகத்தாலுன் அடியார்போல நடிக்கும் பொய்ம்மையைக் கண்டும், இவன் தீயன் கடியன் என்று ஒதுக்கிவிடாது மீட்டும் ஆட் கொண்டருளிய பெருமை பெருமானுடைய எல்லையில் கருணைக்கு எடுத்துக்காட்டென வியப்பாராய், 'என் பொய்மை (கண்டும்) பேர்ந்தும் ஆட்கொண்டு அருளிடும் பெருமை போற்றி' என்றருளினார். இங்ஙன மன்றிப் பொய்மை பேர்ந்தும் ஆட்கொண்டும் அருளிடும் பெருமை போற்றி எனக்கூட்டிப் பொருள் காண்டலும் ஆம். வார்ந்த நஞ்சு - பாற்கடல் கடைந்த காலத்து வாசுகியாகிய கடைகயிற்றின் வாயினின்று ஒழுகிய நஞ்சு. இறைவன் நஞ்சு உண்டு தேவர்களைக் காத்தாராதலின் இங்ஙனம் கூறினார்.*

*ஆர்ந்த நின் பாதம் - எல்லா அருட்குணங்களும் அதன் பயனாக ஆன்மாக்கள் நுகரும் இன்பமும் நிறைந்த நின் திருவடி ஆகாத நஞ்சையுண்டு, ஆக்கமளிக்கும் அமுதத்தை அமரர்க்கு ஈந்த வள்ளலாதலின், என் குற்றங்களைக் கடிந்து திருவடியின்பைத் தந்தருள வேண்டினர் என்க. இந்நன்றியை என்றும் மறவாது போற்றுவே னாயினும் பிறப்பிலிழிந்த நாயை ஒப்பேன் என்றார். 'நாயேற்கு' என்றார்.*

**74.** போற்றியிப் புவனம் நீர்தீக் காலொடு வான மானாய்
போற்றியெவ்வுயிர்க்கும் தோற்றம்ஆகிநீ தோற்றம் இல்லாய்
போற்றியெல் லாவுயிர்க்கும் ஈறாயீ றின்மையானாய்
போற்றிஐம்புலன்கள்நின்னைப் புணர்கிலாப் புணர்க்கையானே. **70**

***உரை :-*** ***இந்த நிலம், நீர், தீ, காற்று, வானம் என்னும் ஐம்பூதத் தினுங்கலந்து அவையானவனே, வணக்கம். எல்லா உயிர்களும் பிறத்தற்குக் காரணமாகி, நீ பிறப்பில்லாதாய், உனக்கு வணக்கம். எல்லா உயிர்களும் ஒடுங்கு முடிவிடமாய், நீ முடிவில்லாதாய் உனக்கு வணக்கம். ஐம்புல ஆசை உன்னை (இயல்பாகவே) அடையாத மாயமுடையவனே, உனக்கு வணக்கம்.***

***குறிப்பு :-*** ***வான், பிற பூதங்களினும் நுட்பமாய், அவற்றிற்கு இடங்கொடுத்தலின், அதனை 'ஓடு' என்பது கொடுத்து வேறு பிரித்தனர். பிறப்புக்குக் காரணமாய உடல், அகக்கருவிகள், உலகம், நுகர்பொருள் என்பன தோற்றுதற்கிடமாய மாயையோடு அத்துவிதமாய்ச் சிவ சக்தி கலந்து எல்லாவற்றையுந் தோற்றுவித்தலின் 'தோற்றம் ஆகி' என்றார். ஒடுக்கஞ் செய்வானை 'ஈறு' என்றார்.***

*சிவஞானபோத முதற்சூத்திரத்துள் சங்காரக் கடவுளை ‘அந்தம்’ என்றதுபோல. புணர்க்கை - மாயம், சேர்க்கை. ‘புணர்க்கையானே’ என்பதற்குக் கலப்பு என்ற பொருளில், ‘தொடர்க்குறாது எல்லா வற்றிலுங் கலந்திருப்பவனே’ என்றும் பொருள் கொள்ளலாம்.*

--------

## *5(8) ஆனந்தத் தழுந்தல்*

### *எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

*ஆனந்தம் - இன்ப நுகர்ச்சியால் விளையும் களிப்பு. இது அநுபவம் ஒன்றற்கே உரியதாய், உரையாலும் குறிப்பாலும் உணர்த்த ஒண்ணாததாயிருப்பது . தேனுண்ட வண்டு மயங்கிக்கிடத்தல் போல ஆனந்தத்தழுந்திய உயிர் செயலற்று, களிப்பே கருத்தாய் வேறு உணர்வும் செயலுமின்றிக் கிடக்கும். அந்நிலையை இறைவனிடம் அடிகளார் வேண்டுதலின் இப்பதிகம் ஆனந்தத்தழுந்தலாயிற்று. இதனைப் பின்வரும் ‘அங்கணாள புங்கமானபோகமே புணர்ப்பதாக’. ‘ஆகம் விண்டு, கம்பம் வந்து, குஞ்சியஞ்சலிக்கணே என் கை ஆக, கண்கள் தாரையாறது ஆக’ என வேண்டுவதால் தெளிக.*

*ஆகவே, ஆனந்தம் என்பது மெய்யுணர்வாகிய உணர்வரிய மெய்ஞ்ஞானத்தைத் துணைக்கொண்டு, உரை மனம் கடந்த நிலையில் உயிர் சிவத்தொடு ஒன்றி நுகரும் உலப்பிலா ஆனந்தமென்பதும், அழுந்தல் என்பது ஈண்டு அதிலழுந்தியிருக்கும் சிவபோகத்தை அடிகளார் இறைவனிடம் வேண்டுகிறார் என்றும் கருத்துக்கோடல் வேண்டும்.*

*ஆத்துமசுத்திபெற்ற உயிர் சிவகருணைக்காக இரங்கிப்பெற்று, அதன் மேனிலையாகிய ஆனந்தத்து அழுந்துதலை வேண்டுதலே சோபானக்கிரமமும் ஆதல் தெளிக.*

*பழையவுரையும் ‘பெற்றோர் பயன்போலப் பெறக் கிடைத்த தில்லையெனப் பேரின்ப அவாக்கேட்கும் சிவசத்தி யனுபூதி’ என உரைத்தலும் இக்கருத்தையே வலியுறுத்தல் காண்க.*

**75.** புணர்ப்ப தொக்க எந்தை யென்னை யாண்டுபூண நோக்கினாய்
புணர்ப்ப தன்றி தென்றபோது நின்னொ டென்னொ டென்னி தாம்
புணர்ப்ப தாகஅன்றி தாகஅன்பு நின்க ழற்கணே
புணர்ப்ப தாக அங்கணாள புங்கமான போகமே. **71**

***உரைநடை*** *:- அங்கணாள, புணர்ப்பது, ஒக்க எந்தை என்னை ஆண்டு பூண நோக்கினாய். நின்னொடு என்னொடு இது புணர்ப்பதன்று என்றபோது இது என்னாம், இது அன்றாக, அன்பு நின் கழற்கணே புணர்ப்பதாக, புங்கமான போகமே (நின்னொடு) புணர்ப்பதாக.*

***உரை*** *:- அழகிய கண்ணாளனே, நீ ஞானாசாரியனா யெழுந்தருளி வந்து அருள் புரிதற்குரிய பக்குவம்ஒத்துவர என் அப்பனே, என்னை ஆட்கொண்டு, (நான் உன்னை) அடையும்படி திருவருட் பார்வை நல்கினாய். நின்னோடு என்னை இவ்வுடம்பானது இணைக்குவதன்று என்றறிந்தபோது, இதனால் என்ன பயன்? இது ஒழிவதாக, நின் திருவடிக் கண்ணே, அன்பானது என்னைச் சேர்ப்பதாக, உயர்ந்த சிவானந்த போகமானது, என்னை நின்னொடு பொருத்துவதாக.*

*குறிப்பு :- கண்ணாளன் - கணவன், தோழன். பூண - அடைய. புங்கம் - உயர்வு. என்னொடு - என்னை - உருபுமயக்கம்.*

*இத்திருப்பாட்டில் அடிகளார், அடியேனை ஆட்கொண்ட நீ திருவடியின்கண் சேர்த்தருளக் காலம் தாழ்க்குமாயின் இடையறாப் பேரன்பேனும் தந்தருளுக என வேண்டுகின்றார்.*

*நின் திருவடியும், திருவடிக்கண் பெறக்கடவதாகிய பேரின்பச் செல்வமும் மகன் முறையில் எனக்கே உரியது என்பார் இறைவனை 'எந்தை' என விளித்தார்.*

*ஒக்க - சமமாக. வினை ஒத்தலாவது நல்வினையின் அளவும் தீவினையின் அளவும் ஏறிக்குறையாது தம்முள் ஒத்திருத்தல் அன்று. நல்லதின் நலனாகிய இன்பத்தை நுகருங்காலும், தீயதின் தீமையாகிய துன்பத்தை நுகருங்காலும் விருப்பு வெறுப்பின்றிச் சமபுத்திபுரிதல், அப்பர்சுவாமிகள் "நஞ்சும் அமுதாம்" என்றது போலவும், நீற்றறை மூசு வண்டறை பொய்கையாயிருந்தது போலவும் கண்டு நுகர்தல். இறைவன் இருவினையொப்பும் மலபரிபாகமும் பெற்ற ஆன்மாக்களையே ஆட்கொள்வானாதலின் 'ஒக்க ஆண்டு' எனக் காரண காரிய முறைபற்றி அமைத்தார்.*

**76.** போகம் வேண்டி வேண்டி லேன்பு ரந்த ராதி யின்பமும்
ஏக நின்க ழலிணை யலாதி லேனென் எம்பிரான்
ஆகம் விண்டு கம்பம் வந்து குஞ்சி அஞ்ச லிக்கணே
ஆக என்கை கண்கள் தாரை ஆற தாக ஐயனே. **72**

***உரைநடை :-*** *'புரந்தராதியின்பமும் வேண்டிலேன்' என மாற்றுக. 'ஐயனே' என்பதை 'ஆகம் விண்டு' என்பதன் முன் கொள்க. 'என் கை' என்பதைக் 'குஞ்சி' என்பதன் முன் கொள்க.*

***உரை :-*** *சிவபோகத்தை விரும்பி இந்திரன் முதலிய இறையவர் பதவிக்குரிய இன்பங்களை விரும்பிற்றிலேன். ஒருவனே, எனது தலைவனே, உன் திருவடி யிரண்டுமன்றி வேறு யாதுந் துணை யில்லேன். அப்பனே, உடம்பு (புளியம்பழத்து ஓடுபோல) என்னின் வேறாகப்பெற்று, நடுநடுங்க, எனது கைகள் சிரமீது கும்பிடுந் தொழிற்கண்ணே பொருந்துக. கண்களின் நின்று விழும் நீரொழுங்கு ஆறாகப் பெருகுவதாக.*

*முன்னர் உண்மையன்பை உதவுமாறு வேண்டிய வாதவூரண்ணல், இப்பாட்டில் அன்பையும் அதனால் எய்தும் மெய்ப்பாடுகளையும் எய்தவேண்டும் என்கின்றார்கள்.*

*உலக இன்பம் ஒன்றையே விரும்புபவனாயின் இந்திரன் மால் பிரமன் எழிலார் மிகு தேவர்களின் பதவியை விரும்பியிருப்பேன்; நான் வேண்டியது திருவடிக்கு அன்பு ஒன்றே என்பார் 'போகம் வேண்டிப் புரந்தராதி இன்பமும் வேண்டிலேன்' என்றார். இதன் கருத்து அடியேன் செய்த வினைக்கீடாக வினைக்கழிவிற்காக அப்பதவிகள் கிடைப்பின் யான் செய்யக் கடவது என்ன இருக்கிறது? நோய் நீக்கத்திற்காக மருந்துண்பார்போலப் பதவி பெற்று வினைப்போகங்களை உண்டு கழிப்பேன் என்றருளியது. இருவினையொப்புள் <u>நல்வினையின் பலனாகிய இன்பத்தையும் வினைக்கழிவு என்று நுகரும் சமபுத்தி தெரிவித்தவாறாம்</u>.*

***குறிப்பு :-*** *'போகம் வேண்டி' என்பதற்கு உலக போகங்களை விரும்பி என்றும் பொருள் கொள்வர். ஏக என்பதற்கு, செல்வதற்கு எனவும் பொருள் கொண்டு, நின்கழலினையன்றிச் செல்வதற்கு வேறிட மில்லேன் என்றுமுரைப்பர். விண்டு - வேறுபட்டு. கம்பர் - நடுக்கம். வந்து - வர, குஞ்சி - ஆண் தலைமயிர், தாரை - ஒழுங்கு. ஆகம் - உள்ளம்.*

**77.** **ஐய நின்ன தல்ல தில்லை மற்றொர் பற்று வஞ்சனேன்**
**பொய்க லந்த தல்ல தில்லை பொய்ம்மை யேன்என் எம்பிரான்**
**மைக லந்த கண்ணி பங்க வந்து நின்க ழற்கணே**
**மெய்க லந்த அன்ப ரன்பெ னக்கு மாக வேண்டுமே. 73**

***உரைநடை*** *:- 'அன்பரன்பு பொய்மையேன் எனக்கும் வந்து ஆகவேண்டுமே' என உரைநடை கொள்க.*

***உரை*** *:- ஐயனே, உன்னுடைய ஆதரவன்றி வேறொரு ஆதரவு இல்லை. அப்படியிருந்தும் கள்வனேன் பொய்யினைச் சேர்ந்திருப்ப தன்றிப் பிறிதில்லை. என் தலைவனே, மைதீட்டிய கண்ணையுடைய அம்மைபாகனே, நின் திருவடிக் கண்ணே மெய்யைச் சார்ந்த அன்பர்களுடைய அன்பு பொய்மையுடையேனாகிய எனக்கும் வந்து அமைதலை வேண்டுகின்றேன்.*

**78.** வேண்டும்நின்க ழற்கண் அன்புபொய்மை தீர்த்துமெய்மையே
ஆண்டு கொண்டு நாயி னேனை ஆவ என்ற ருளுநீ
பூண்டு கொண்டடிய னேனும் போற்றி போற்றி யென்றுமென்றும்
மாண்டு மாண்டு வந்து வந்து மன்ன நின்வ ணங்கவே. **74**

***உரைநடை*** *:- 'மன்ன' என்பதை முதலிலும், 'அன்பு நின்கழற் கண் வேண்டும்' என்பதையிறுதியிலுங் கொள்க.*

*இப்பாட்டில் அன்புவேண்டியதன் காரணத்தை விளக்கியருளுகின்றார்.*

*மெய்யன்பின் இன்றியமையாமை தம் மனத்து விரைதலால் முதன்முதல் 'வேண்டும் நின் கழற்கண் அன்பு' என விண்ணப்பிக்கின்றார். பின், அவ்வேண்டுகோளை இறைவன் நிறைவேற்றற்கு இடையூறாகத் தம்மிடமுள்ள குறை பொய்ம்மையே என உணருகிறார். 'பொய்ம்மை தீர்த்து' என அதனையும் நீக்கி அருள வேண்டுகிறார். ஆட்கொண்ட பிறகு இரக்க உள்ளத்தோடு அருள வேண்டும் என்கின்றார்.*

*அடியேனும் உம்முடைய கருணைக்குத்தக நீ கொடுத்த அடிமைத்தன்மையை ஓராபரணம்போலப் பூண்டு போற்றி போற்றி என்று எத்தனைதரம் பிறந்திறந்து வந்தாலும் நின்னை வணங்குவதற்காக மெய்யன்பு உதவுக என்று வேண்டுகிறார். இவ்வண்ணம் அன்பர் உள்ள வளர்ச்சியும் விழைவும் இப்பாட்டில் சித்தரிக்கப்படுகின்றன. இதனால் இது சதகக்கருத்தை விளக்குவதாகின்றது.*

*மெய்ம்மை அன்பே வேண்டும் எனப் பிரித்துக் கூட்டுக. ஆவ - இரக்கக் குறிப்பு இடைச்சொல். மாண்டு மாண்டு வந்து வந்து - இறந்து இறந்து பிறந்து பிறந்து எனப் பலமுறை மாறிப் பிறத்தலையும்*

*இறத்தலையும் உணர்த்தியது. மாறிமாறிப் பிறந்திறக்குங்கால் வினைக் கூட்டம் ஏறியும் குறைந்தும் வருமாதலின் அவ்வினை ஏறாமைப் பொருட்டு 'போற்றி போற்றி' என்று வணங்க அன்பை விழைகின்ற அடிகளின் நோக்கு அறிந்து இன்புறற்பாலது ஒன்றாம்.*

***உரை :-** அரசனே, பொய்யினை நீக்கி உண்மையாகவே ஆட் கொண்டருளி நாயனையேனுக்கு ஐயோ என்றிரங்கியருளுக. உன் திருவடிகளைச் சென்னி மேற்கொண்டு, கடையேனாகிய யானும் வணக்கம் வணக்கம் என்று எப்போதுஞ் சொல்லிப் (பிறவிவரினும்) இறந்திருந்து மீட்டும் மீட்டும் உன்னையே வணங்குவதற்கு உன் திருவடிக் கண் (அயரா) அன்பினை வேண்டுகின்றேன்.*

***குறிப்பு :-** ஆவ, இரக்கக் குறிப்பு. ஐயோ என்றிரங்கியருளுகின்ற என்றும் கொள்ளலாம்.*

**79.** **வணக்கம் நின்னை மண்ணும் விண்ணும் வேதம்நான்கும் ஓலமிட்**
**டுணங்கு நின்னை எய்த லுற்று மற்றொருண்மை யின்மையின்**
**வணங்கி யாம்வி டேங்க ளென்ன வந்து நின்ற ருளுதற்**
**கிணங்கு கொங்கை மங்கை பங்க என்கொலோ நினைப்பதே. 75**

***உரைநடை :-** 'மங்கைபங்க' 'மற்றொருண்மையின்மையின்' என்பவற்றை முதலிற்கொள்க. நின்னை எய்தலுற்று உணங்கும் என மாற்றுக.*

***உரை :-** இத்திருப்பாடல், யாம் விடாது பற்றி நின்று வணங்கத் தேவரீர் அருள்வழங்க வேண்டுவதுதானே! என்ன எண்ணுகிறீர் என அடிமையின் உரிமை தோன்ற வினவுகின்ற அன்பின் மிகுதியை உணர்த்துவது.*

*மண்ணும், விண்ணும், வேதம் நான்கும் சிவமே முழுமுதல் என உணராமையான், காமியப்பயனைக் கருதி வணங்கின. யாம் உம்மையன்றி ஒரு முதலில்லை என உண்மை உணர்ந்து உறுதியையும் உடையேமாய் விடேங்கள் என்றனம். வேதங்களையும் விண்ணையும் மண்ணையும் அருளாமைக்கு ஏதுண்டு. எம்மை அங்ஙனம் ஏமாற்ற முடியாது. அருள வேண்டியது தானே! அதற்குத் தடையாக என்ன எண்ணுகிறீர்? என்று உண்மையான அடிமை கடமையைச் சரிவர நிறைவேற்றிய பிறகு காலம் தாழ்த்தும் முதலாளியை நோக்கி, கூலி கொடுக்க என்ன தடை என்று உரிமையிற்கேட்பதுபோல வினவுகிறார்.*

*மண் விண் என்பன இட ஆகுபெயராக மக்களையும்*

தேவர்களையும் உணர்த்தின. உலகம் மூன்றனுள் இரண்டையே கூறியது பாதலத்துள்ளார் பாவமே நுகர்பவர்களாகப் பல பிறவி எடுக்க வேண்டியவர்கள் ஆதலின் அவர்களுக்கு இறைவனை வணங்க வேண்டும் என்ற எண்ணம் துன்பப்படுகின்ற போது சிறிது உண்டாம் ஆயினும், பக்தி ஞான பரிபாகம் உண்டாகாமையின் வணங்கமாட்டார்கள். ஆதலின் அவர்களை ஒழித்து இருவரையே கூறினார். மண்ணவர்கள் புண்ணிய பாவக் கலப்புடையவர்களாக இன்பத் துன்பப்பயனைக் கன்ம பூமியாகிய இங்கிருந்து நுகரும்போது இறைவனை வணங்க வேண்டிய இன்றியமையாமையை எப்போதும் உணர்ந்து ஈடேறுகின்றார்கள் ஆதலின் அவர்களை முற்கூறினார். விண்ணவர்கள் புண்ணியப் பயனாகிய போகத்தை அனுபவித்துத் தொலைக்கும் வரையில் ஞானமின்றிப் போகமே தானாய் அதனுள் அழுந்திப் புண்ணியம் தொலைந்ததும் அசுரர்களால் துன்பமோ பதவியிழப்போ வந்தபோது இறைவனை வணங்கும் சிறப்பில் குணம் பெற்றவர்களாதலின் அவர்களைப் பின்னும் கூறினார்.

வேதம் நான்கும் - இருக்கு, யசுர், சாமம், அதர்வம் என்ற வேதங்கள் நான்கும். வேதங்கள் பல கடவுளரைப் பல காரணங்களுக்காகத் துதித்து உண்மை உணராது வருந்தி, ஒவ்வொரு தேவராலுமெய்தும் பயன் எல்லையிறுவதாக இருத்தலைக் கண்டு, எல்லையில்லா இன்பவடிவினன் சிவபரம்பொருளாகிய நீ ஒருவனே என்பதை இறுதியில் உணர்ந்து, தன்னறிவு பாசஞானமாக இருத்தலின் உன்னை அடையமாட்டாது ஓலமிட்டு உணங்கின என்பதாம்.

யாங்கள் கன்மபூமியில், மிக்க புண்ணியத்தானாகும் தரையினில் பெருந் தவஞ்செய் சாதியினில் வந்து பரசமயங்களிற் செல்லாப் பாக்கியம் பண்ணியிருக்கின்றோம் ஆகையால் உம்மையன்றி உண்மைப் பொருள் வேறு இல்லை என்பதை உணர்ந்துள்ளோம்; உம்மைக் கண்டோம்; விடேங்கள் எனப் பற்றியுள்ளோம்; அத்தகைய எமக்கு மேலும் அருளுதற்கு என்ன நினைக்கின்றிர் என வினவுகின்றார்.

***குறிப்பு :-* ‘இணங்கு’ என்பதைக் கொங்கை என்பதோடு கூட்டுதல் ஒரு முறை. ‘அருளுதற்கு’ என்பதோடு கூட்டிப் பொருளுரைப்பதுண்டு. மற்றொருண்மையின்மையின் என்கொலோ நினைப்பதே’ என இயைத்து, வேறு மெய்ப்பொருளின்மையின், நின்னைத் தவிர எதனை நாங்கள் நினைப்பது, என்றுங் கூறுப.**

**80.** **நினைப்ப தாக சிந்தை செல்லு மெல்லை யேய வாக்கினால்**
**தினைத்தனையு மாவ தில்லை சொல்ல லாவ கேட்பவே**

அனைத்துலகு மாய நின்னை ஐம்பு லன்கள் காண்கிலா
எனைத்தெனைத்த தெப்பு றத்த தெந்தை பாத மெய்தவே. 76

***உரை :-*** *இத்திருப்பாட்டில் ஐம்புலன்களாலும் காணவியலாத நின் பாதங்களின் தன்மைகள் யாவை? எங்குள்ளது? அவற்றை நான் எய்தவேண்டும்; உரைத்தருள்க என வினவுகிறார்.*

*என் மனமும் வாக்கும் உன்னைப்பற்றி நினைக்க, சொல்ல, கடைசிவரை செல்லுகின்றன. ஆனால், அவற்றால் தினைத்துணையும் ஆகப்போவது ஒன்றுமில்லை; என் சிந்தையும் என் வாக்குமாக இருப்பினும் அவை நான் சொல்லலாவனவற்றைக் கேட்பனவா? இல்லவே இல்லை; அந்தக்கரணங்கள் பாடு இப்படிப் போகட்டும். ஐம்புலன்களோ எல்லா உலகுமாய் இருக்கின்ற உன்னைக் காண்கிலா; நானோ பாதம் எய்தவேண்டும். விரைகின்றேன்; அப்பாதம் எனைத் தெனைத்து எப்புறத்தது அருளிச் செய்யவேண்டும் என்று வேண்டிக் கொள்கின்றார்.*

*எல்லையேய வாக்கு - கற்பனையாகக் கடைசிவரை கண்டது போலக் கூறும் வாக்கு. பேச்சினால் தினையளவும் பயனில்லை என்பது. இவை இரண்டையும் நோக்கி, யான், மனமே! நீ ஒரு கருவி; உணருந் தன்மையற்ற சடம். சிவ - சித்து. நீ உயிர் இயக்க இயங்குகின்றவன். உன்னை இயக்கும் உயிராகிய நானோ உணர்த்த உணரும் சித்து. என்னால் இயங்கிப் பொறிகளைக் கொண்டு அறிந்ததைச் சிந்திக்கின்ற உன்னால் பரம்பொருளின் எல்லையற்ற குணங்களை எங்ஙனம் நினைக்க முடியும்? எண்ணிப்பார். உன் கதியே இப்படியிருக்க, நீ நினைத்ததைச் சொல்லும் வாக்கு. கடைசிவரை எவ்வளவு முயன்றாலென்ன? தினையளவும் ஆகப்போவதில்லை என்று என்னால் சொல்லக் கூடிய அளவு சொல்லியும், அவை ஆணவத்தோடு கலந்து அறியாமை வயப்பட்டிருப்பதனால் கேட்கின்றனவா என்றார்கள்.*

*கருவி கரணங்களால் இறைவன் உணர முடியாதவன் என்பார் 'அனைத்து உலகும் ஆய நின்னை' என்றார். கருவி கரணங்கள் இவ்வுலகில் சுட்டியறியப்படும் பொருள்களையே ஏகதேசம் அறிவன; நீயோ எல்லாவுலகுமானவன்; உன்னைப் புலன்கள் அறிவது எப்படி என்றார் என்பதாம்.*

*எந்தையே என்றது நீ எம் தந்தையாக இருந்தும் நின் பாதத்தை யான் அறிந்திலேன்; எத்துணைத்து என்பதை நீ உணர்த்தினாலன்றி, எனக்கு உணரும் ஆற்றல் இல்லை; எங்கு உள்ளது என்றும் அறியேன்*

என்று ஆன்மாவின் சிற்றறிவுடைமை விளக்க விண்ணப்பித்தவாறு.

***குறிப்பு :-*** *தினை - சிற்றளவிற்கு அறிகுறி. உலகினில் இறைவன் கலந்திருந்தாலும், அவன் தன்னைக் காட்டினாலொழிய அறியக் கூடாமையின், 'ஐம்புலன்கள் காண்கிலா' என்றார். அசுத்த மாயையும் சுத்தமாயையுங் கடந்து நின்றமையால், 'எனைத் தெனைத்து' என்றார் போலும்.*

**81.** **எய்த லாவ தென்று நின்னை எம்பி ரானிவ் வஞ்சனேற்(கு)**
**உய்த லாவ துன்கண் அன்றி மற்றொ ருண்மை யின்மையின்**
**பைத லாவ தென்று பாது காத்தி ரங்கு பாவியேற்(கு)**
**ஈத லாது நின்கண் ஒன்றும் வண்ண மில்லை ஈசனே.** **77**

***உரைநடை :-*** *'ஈசனே' என்பதை மூன்றாம் அடியின் தொடக்கத்திற் கொண்டு பொருள் கூறுக.*

***உரை :-*** *எம்பெருமானே, உன்னை அடைதலாதல் எப்போது? இக்கள்வன் ஆகிய எனக்கு உன்னிடமன்றி உய்யும் வழிக்கு வேறொரு மெய்ம்மை இல்லாமையால், ஆண்டவனே சிறுவனென்று கருதிப் பாவியேனைக் காப்பாற்றி எனக்கு இரங்கியருள்க. (நீ இரங்கியருள்கின்ற) இச்செயலன்றி, உன்பால் வந்து ஒன்றாகும் வழி வேறில்லை. அடியேற்கு உன் திருவடியை அடைதற்கு வேறோர் உபாயமின்மையில், நீயே அதனையும் உணர்த்துதல் வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறார்.*

***குறிப்பு :-*** *பைதல் - குழந்தை, சிறுவன். ஒன்றும் வண்ணம் - ஒன்று சேரும் விதம். எய்தலாவது - அடைவது.*

**82.** **ஈச னேநீ அல்ல தில்லை இங்கும் அங்கும் என்பதும்**
**பேசி னேன்ஓர் பேத மின்மை பேதை யேன்என் எம்பிரான்**
**நீச னேனை ஆண்டு கொண்ட நின்ம லாவொர் நின்னலால்**
**தேச னேயொர் தேவ ருண்மை சிந்தி யாது சிந்தையே.** **78**

***உரைநடை :-*** *'எம்பிரான்' என்பதை முதலிற் கொள்க. 'பேதமின்மை, பேதையேன்' என்பதை இரண்டாம் அடியின் முதற்கண் கொள்க.*

***உரை :-*** *எமது தலைவனே, ஆண்டவனே, இகத்திலும் பரத்திலும் உன்னையன்றி யாதும் இல்லையென்பதும், நீ வேறுபாடின்றி யாண்டுங் கலந்துள்ளாய் என்பதும், அறிவில்லாத யான் எடுத்துரைத்தேன்.*

*(உரைத்தலாற்) பயன் என்ன? புலையனேனை ஆட்கொண்ட மாசற்றவனே, ஒளியானவனே, ஒப்பற்ற உன்னை யல்லாமல், பிரிதொரு கடவுள் உண்டென்பதை எனது மனம் நினைக்க மாட்டாது. ஈசன் - செல்வங்கள் நிறைந்தவன். நீசன் - இழிமகன். நின்மலன் - இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவன்.*

**83.** சிந்தை செய்கை கேள்வி வாக்குச் சீரில் ஐம்பு லன்களான்
முந்தை யான காலம் நின்னை எய்தி டாத மூர்க்கனேன்
வெந்(து) ஐயா விழுந்திலேன் என்உள்ளம்பொங்கி விண்டிலேன்
எந்தை யாய நின்னை யின்னம் எய்தலுற் றிருப்பனே. **79**

***உரைநடை :-*** *'முந்தையான காலம்' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *(நீ என்னை ஆட்கொண்ட) முன்னாகிய காலத்திலே, மனம், வாக்கு, செயல், உலகக் கேள்வி, நயமில்லாத ஐம்புலன்கள் முதலிய தடைகளினாலே உன்னை அடைந்திடாத மூடனேன் அக்காலத்திலேயே உடல் தீயிற் பொருந்தப் பெற்று இறந்து வீழ்ந்தேனில்லை. மனம் நாணி, (நாணமிகுதியால்) இறந்தேனில்லை. எமது அப்பனாகிய உன்னை இன்னுங்கூட வந்தடையாது, அடையக் கருதி இங்கிருப்பேனாயினேன். (இது எவ்வளவு பரிதாபம்?)*

***குறிப்பு :-*** *இறைவனையே எண்ணியும், அவன் பணிகளைச் செய்தும், அவன் புகழைச் சொல்லியும், பிறர் சொல்லக் கேட்டும், ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள இறைவனுடன் ஒன்றியும் அடைதலே உயிரின் இயல்பும், கடமையுமாகும்.*

**84.** இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை ஆண்டு கொண்ட நின்னதாட்
கருப்பு மட்டு வாய்ம டுத்தெ னைக்க லந்து போகவும்
நெருப்பு முண்டு யானு முண்டி ருந்த துண்டதாயினும்
விருப்புமுண்டு நின்கண் என்பதென் னவிச்சையே. **80**

***உரை :-*** *இரும்புபோலக் கடுமையான மனமுடைய கள்வனேனை ஆட்கொண்டருளிய நின்னுடைய திருவடியிலெழுங் கரும்புத்தேன் என்னை விழுங்கி உடன் கலந்து செல்லவும் (உடனே உடல் விடுதற்கு) நெருப்பிருந்தது, அடியேனும் உணவு கொண்டு உலகிலிருந்ததுண்டு எனினும், (நெருப்பில் உடலை நீத்து உன்னை அடையாத நான்) என்னிடத்தில் உன்பால் அன்பு முண்டென்று கூறுதல் என் அறியாமையே. இத்திருப்பாட்டில் சிவானந்தானுபவம் கிடைத்து*

நழுவிய பிறகும் உயிரைத் துறவாது இன்னும் உயிர் வாழ்கின்றேன். ஆனால் உன்மாட்டு அன்பு என்னிடமிருக்கிறது என்பது வியத்தகு செயல்களில் ஒன்றாகும்.

***குறிப்பு :-*** *உடம்பு நிலைத்தற்குக் காரணமாய உலகப் பற்றிருப்பதாகக் கருதித் தம்மை 'வஞ்சனேன்' என்றார். கருப்பு மட்டு - கருப்பஞ்சாறு.*

--------

## *5(9) ஆனந்த பரவசம்*

*நுகர்வானும் நுகர்பொருளும் நுகர்ச்சியுமாக இருந்து நுகர்கின்ற பொழுது ஆனந்தம் என்று அனுபவித்த ஒரு நிலை முதிர்ந்து நுகர்பவன் தன் வசமழிந்து நுகர்ச்சிப்பயனே தானாய் இருக்கும் நிலை ஆனந்த பரவசமாகும். ஆனந்தத்தில் அழுந்திய உயிர் ஆனந்தமாகிய வியாபகத்துள் வியாப்பியமாய், தன் முனைப்பற்று, அதுவே தானாய் அமர்ந்துள்ள நிலையை வேண்டுதலின் பதிக இயைபு நன்கு விளங்கும்.*

***கலி நிலைத்துறை***

**85.** விச்சுக் கேடுபொய்க் காகா தென்றிங் கெனைவைத்தாய்
இச்சைக் கானா ரெல்லாரும் வந்துன் தாள் சேர்ந்தார்
அச்சத் தாலே ஆழ்ந்திடு கின்றேன் ஆரூர்எம்
பிச்சைத் தேவா என்நான் செய்கேன் பேசாயே. **81**

***உரைநடை :-*** *'பொய்க்கு, விச்சுக்கேடு ஆகா' என மாற்றுக. 'ஆரூர் எம் பிச்சைத் தேவா' என்பதை மூன்றாம் அடியின் முதலிற் கொள்க.*

***உரை :-*** *பொய்யானது (உலகத்திலே நிலை பெறுவதற்கில்லாது) அதன் வித்துக் கெட்டொழிதல் கூடாதென்பதற்காகப் (பொய்யனேனாகிய) என்னை இவ்வுலகத்தே இருத்தினாய். உன் விருப்பத்திற்கு ஒத்தவர்க ளெல்லாரும்போய் உன் திருவடியை அடைந்தார்கள். திருவாரூரில் வீற்றிருக்கும் எமது ஐயங் கொள் பிரானே, நான் பயத்தாலே அழுந்துகின்றேன். நான் (உய்வதற்கு) யாது செய்வேன், கூறியருள்வாயாக.*

*இத்திருப்பாட்டில் இறைவன் தன்னைத் தனிக்கவைத்துப் பிரிந்ததும் ஏதோ ஒரு திருவருட்குறிப்பாகும் என்று எண்ணுகிறார்.*

*உன் அன்புக்குரிய அடியார் அத்தனைபேரும் உன்னோடு திருவருட்சோதியில் மறைய, பொய்ம்மைக்கு விதை வேண்டுமென நினைத்து என்னை வைத்துச் சென்றாய்; நான் என்ன செய்வேன் என்பது கருத்து.*

*விச்சு, வித்து என்பதன் போலிமொழி. அச்சம், மீளவும் இப்பொய் வாழ்வு இடையறாது பற்றுமோ என்னும் அச்சம். ஆரூரில் பெருமான் தியாகராசர் என்ற பெயருடன் கொடை வள்ளலாக விளங்க இவர் 'ஆரூர் எம் பிச்சைத்தேவா' என்றது அடியார்கள் இடுகின்ற அன்புப் பிச்சையை ஏற்கும் அருட்டிறத்தை நோக்கி.*

***குறிப்பு :-*** *ஆரூராகிய இதயத்திலுறையும் பிச்சைத் தேவா, எனக்கு அருட்பிச்சைபோடு என்று குறிப்பித்தவாறு காண்க. விச்சு - வித்து. பொய்க்கு - பொய்யின் - உருபு மயக்கம்.*

**86.** **பேசப் பட்டேன் நின்னடி யாரில் திருநீறே**
**பூசப் பட்டேன் பூதல ரால்உன் அடியானென்(று)**
**ஏசப் பட்டேன் இனிப்படு கின்ற தமையாதால்**
**ஆசைப் பட்டேன் ஆட்பட் டேன்உன் அடியேனே. 82**

***உரை :-*** *உனது அடியாருள் ஒருவனாகப் பெரியோரால் எடுத்துரைக்கப்பட்டேன். (அருட்பேற்றிற்கு அறிகுறியாகிய) திருநீறே பூசுதலைப் பொருந்தினேன். உலகரால், (என் அமைச்சு நிலைமாறி) உனது அடியானாயினேனென்று இகழப்பட்டேன். இனி இவ்வுலகிற் பொருந்தியிருத்தல், பொருந்தாது. (வீடடைய) ஆசைப்பட்டேன். உனக்கடிமையானேன். இனி, (உன்னடியானா யிருப்ப தன்றிப் பிறர்க்குரியனாகேன்) ஆதலால், எப்படியும் உன்னடியேனே, (காத்திட வேண்டும்) என்றவாறு.*

***குறிப்பு :-*** *பெரியோர் பேச, உலகர் ஏசினமை கூறினர். படுகின்றது - (உலகிற் பொருந்துகின்றது). அமையாது - பொருந்தாது. ஆல் - அசை.*

**87.** **அடியேன் அல்லேன் கொல்லோ தான்எனை ஆட்கொண்டிலை**
**அடியாரானா ரெல்லாரும் வந்துன் தாள்சேர்ந்தார் (கொல்லோ**
**செடிசேர் உடலம் இதுநீக்க மாட்டேன் எங்கள் சிவலோகா**
**கடியேன் உன்னைக் கண்ணாரக் காணுமாறு காணேனே. 83**

***உரை :-*** *நான் உன்னுடைய அடியான் அல்லனோ? நீதானே*

என்னைவந்து ஆட்கொள்ள வில்லையோ? அப்படியானால் அடியாராகிய பிறரெல்லோரும் போய் உன் திருவடியைச் சேர்ந்து விட்டார்களே. எங்களது சிவலோக முதல்வனே, தீவினை பொருந்தும் உடம்பாகிய இதனை ஒழிக்கமாட்டேனாகிய, கடினமான நெஞ்சுடையேன் உன்னை நேரே கண்குளிரப் பார்க்கும் வழியை அறியேனே.

இத்திருப்பாட்டில், அடியார்களெல்லாம் உன் திருவடியை அடையவும் நான் மட்டும் அடையாமலும் இப்பிறவியை நீக்காமலும் உன்னைக் கண்ணாரக் காணாமலும் வருந்துகின்றேனே; நான் உண்மையான அடியவன் அல்லேனோ? அல்லது நீர் என்னை ஆட் கொள்ளவில்லையா? என்று இரங்குகின்றார்.

அடியாரானார் எல்லாரும் சாமுசித்தராக இயற்கையிலேயே மலத்துடன் சாராத அடியார்களும், சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலர் எனப் பரிபாகத்தால் மல நீக்கம்பெற்ற அடியார்களுமென இருவகையர். அவர்களுள் மலநீக்கம் பெற்றவர்களையே ‘அடியாரானார் எல்லாரும்’ என்னும் இத்தொடர் குறிக்கின்றது, ஆக்கச்சொல் இயற்கையோடு பொருந்தாமையின். வந்து - திருவடிக்கு அணுக்கராக வந்து. தாள் சேர்ந்தார் - திருவடிப் பேறாகிய முத்தியை அடைந்தார்கள்.

செடி சேர் உடலம். செடி - முடை நாற்றம். பூசுவ பூசிக் காலந்தோறும் கழுவப்படாதாயின் புழுவழுக்கு மூடி நாறுதலின் செடிசேருடலம் என்றார். “செடியாய உடல் தீர்ப்பான்” எனும் புள்ளிருக்கும் வேளூர்த் தேவாரம்கொண்டு தெளிக. செடி - துன்பம் எனினும் ஆம். உடலம் நீக்கமாட்டேன் என்றது, உயிர் உடலோடு கூடியிருத்தற்கு ஏதுவாகிய வினைகள் ஒழியாமையின்.

கடியேன் : நீக்கத்தகும் யான். இப்பொருட்டாதலைக் ‘கடியென் கிளவி’ என்னும் உரிச்சொல் சூத்திரம்கொண்டு தெளிக. கடுமையான இயல்புடையவன் எனினும் ஆம். பரிபாகக்குறைவால் எப்பொழுதும் காணப்பெறாமல் மின்போலத் தோன்றி மறையும் அளவே என் புண்ணியம் இருத்தலின் ‘கண்ணாரக் காணுமாறு காணேன்’ என்றார். காணுமாறு காணல் - உன் திருவருள் நோக்கம் என்மீது விழுமாறு யான் தரிசித்தல் எனினும் ஆம்.

உனக்கு அடியனாதற்கு உள்ள தகுதி இல்லாமையாலும் நீ ஆட்கொண்டதை அறிந்து ஈடேறும் பெற்றிமை, வாசனையால் அவ்வப்போது உண்டாதலாலும், அது தன் ஆன்ம அறிவால் அறிய

*முடியாமையானும் 'அடியேன் அல்லேன் கொல்லோ' என வினவினார். ஆட்கொண்டிருந்தால் மற்றைய அடியார்களைப் போலத் திருவடிநீழலை அடைந்திருப்பேன்; இவ்வுடலம் நீங்கியிருப்பேன்; உன்னை என்றும் கண்டுகொண்டே இருப்பேன்; அவை இன்மையால் 'என்னை நீ ஆட்கொண்டனை கொல்லோ' என்றார்.*

***குறிப்பு :-*** *பிற அடியாரடைந்த வீட்டினைத் தலைப்படாமை யால் அடிகள், தம்மை அவன் ஆண்டமையும், தாம் அடிமையானது மில்லையோவென் றையுறுவார் போன்றனர். காணும் ஆறு - காணும் வழி*

**88. காணுமாறு காணேன் உன்னை அந்நாட் கண்டேனும்**
**பாணே பேசி என் தன்னைப் படுத்த தென்ன பரஞ்சோதி**
**ஆணே பெண்ணே ஆரமுதே அத்தாசெத்தே போயினேன்**
**ஏண்நாணில்லாநாயினேன் என்கொண்டெழுகேன் எம்மானே. 84**

***உரைநடை :-*** *'எம்மானே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *எமது பெரியோனே, அறியும் வழியாக உன்னை அறிய மாட்டேன். உன்னை நீ ஆட்கொண்ட அந்நாளிலே காணப் பெற்றும், பாழானவற்றைப் பேச என்னைக் கீழ்ப்படுத்தியது யாதோ, மேலான ஒளிப்பிழம்பே, ஆணாயவனே, பெண்ணாயவனே, தெவிட்டாத அமுதமே, அப்பனே, நான் பயனற்றொழிந்தேன். வலியுமானமுமில்லா நாயனையேன், எதனைத் துணையாகக் கொண்டு மேற்செல்வேன்?*

*சோதி - எங்கும் நிறைந்து தன்னையும் பொருளையும் காட்டுவது. அதுபோல் பூதச்சோதியாகாமல் கருவி கரணங்களைக் கடந்து நின்ற ஒளியாய், தானன்றி அறியப்படும் பொருள் வேறின்மையாய், தன்னையே உணர்த்தி நிற்கும் இறைவனைப் பரஞ்சோதி என்றார். ஒரே திருமேனியில் இரண்டும் ஒன்றாயும் அம்மையும் அப்பனுமாக வேறுவேறாயும் இருத்தலின் 'ஆணே பெண்ணே' என்றார்.*

***குறிப்பு :-*** *பாண் - பாழ். பேசி - பேச, பேசி யொழிய. ஏண் - வலி, ஆற்றல். நாண் - வெட்கம்.*

**89. மானேர்நோக்கியுமையாள்பங்கா மறையீறறியா மறையோனே**
**தேனே அமுதே சிந்தைக்கரியாய்சிறியேன் பிழைபொறுக்குங்**
**கோனே சிறிதே கொடுமை பறைந்தேன் சிவமா நகர்குறுகப்**
**போனா ரடியார் யானும் பொய்யும் புறமே போந்தோமே. 85**

***உரை :-*** *மான் போன்ற விழியுடைய எம்மை உடையாளாகிய அருட்சக்தி பாகனே! வேதமுடிவும் அறிய வொண்ணா இரகசியப் பொருளாவானே, தேன்போலினியவனே, அமுதுபோற் சாவா மருந்தே, மனத்தாற் கிட்டுதற்கரியவனே, சிறுமையுடையேனது குற்றத்தைப் (பெருமையாற்) பொறுத்தருளும் அரசனே, அடியேன் ஒரு சிறிது கொடியவற்றைக் கூறியேன். அடியார் சிவ பெரும்புவனமடையச் சென்றனர், அடியேனும் பொய்யும் அவர்க்குப் புறம்பாக உலகிற் போயினோம்.*

*இத்திருப்பாட்டில், தான் இதுவரை திருவருட்குறிப்பை அறியாது கூறியதற்காக வருந்திப் பிழைபொறுத்து அருள வேண்டுகின்றார்.*

*மானின்விழி கண்டாரைக் கவர்வதாய், பிறருக்குத் தீங்கு செய்யாதது. அதுபோல உமாதேவியின் திருக்கண்ணும் மெய்யடியாரைக் கவர்வதாய், கருணையைப் பயப்பதாதலின் 'மான் நேர் நோக்கி' என்றார். உடையாள் என்றது என்னை என்றென்றும் ஆளாக உடையவள் என்றது. உடைமையாக உடையது எனினும் ஆம். மறையீறு: மறையும் ஈறும் என உம்மைத்தொகை. தேனும் அமுதும் இனிப்பால் ஒன்றாயினும் உடலுக்கு உறுதி அளிப்பது தேன்; உயிருக்கு உறுதி அளிப்பது அமுது. பயனால் வேறுபாடு உடையதென்க.*

*அதனை இறைவற்கு உவமையாக்கியது ஆன்மாக்களின் பரிபாக நிலைக்கேற்ப அனுபவிக்கப் பெறுதலான் என்க. பறைந்தேன் - சொன்னேன்.*

***குறிப்பு :-*** *அடிகள் 'சிறிது கொடுமை பறைந்த' தியாதெனத் தெரியவில்லை. அடியார் பலரும் சிவபுரம் புகுதலை விரும்ப, தாம் உலகிற் சின்னாளிருக்க இசைந்தமையை அவ்வாறு கூறியிருத்தல் கூடும். 'ஏலத்தன்னை ஈங்கொழித் தருளித்' தில்லைக்கு வரும்படி இறைவன் பணித்ததை யொப்புக் கொண்டது, உடனே சிவபுரஞ் சேர இயலாமைக் கேதுவாயிற்று. நேர்மைக்கு மாறு, கொடுமை. நேரே சிவபுரம் போதற்கு மாறாய் உலகிலிருத்தல் கொடுமையாயிற்றுப் போலும்.*

**90.** புறமே போந்தோம் பொய்யும் யானும் மெய்யன்பு
பெறவே வல்லேன் அல்லா வண்ணம் பெற்றேன்யான்
அறவே நின்னைச் சார்ந்த அடியார் மற்றொன் றறியாதார்
சிறவே செய்து வழிவந்து சிவனே நின்தாள் சேர்ந்தாரே. **86**

***உரை*** *:- நிலையா உடம்பும் யானும் நினக்குப்புறம்பே போயினோம். உண்மையன்பு பெறுதற்கே உரியனல்லா முறைமையை யான் அடைந்தேன். முற்றிலும் உன்னை யடைந்த அன்பர், உன்னைத் தவிர, வேறொன்றையு மறியாதாராய்ச் சிறப்பாக வீட்டிற்குரியதே செய்து செந்நெறியிற் சென்று சிவபெருமானே உன்னடியடைந்தனர்.*

*வழிவந்து - ஆற்றின்வழி மிதவைபோல அருள் வெள்ளத்தின் வழியே வந்து என்றது. தற்போத முனைப்பற்று என்றவாறாம். இதனால் தனக்கென்று ஒரு சிறிதும் தலைமையும் உரிமையும் பாராட்டாது, தன்னை முழுவதும் இறைவனிடம் ஒப்பித்து, இறைவனையன்றி வேறொன்றையும் அறியாத அடியார்கள் சிறந்த சிவஞானத்தால் சிவனை அறிதல்செய்து தன் வசமற்று நிற்பார்களாயின் சிவன்தாளில் சேர்வரெனத் திருவடி அடையும் உபாயம் உரைக்கப்பெற்றமை காண்க.*

*சிறவு என்பதற்குச் சரியை முதலிய தவங்களென்றும், சிவஞானநெறியும் அன்புநெறியும் என்றும் உரைப்பாருமுளர். சிறவு - சிறப்பு.*

*கடலுள் அமிழ்ந்தார்க்குக் கடல் அறியப்படாதவாறுபோல ஆனந்தத்தில் பரவசமாயினார்களுக்கு ஆனந்தம் தோன்றாது.*

***குறிப்பு*** *:- உடலிலிருத்தலைக் கருதாத அன்பர் வீட்டிற்குரிய வாறே செய்வன செய்து அதனைப்பெற்றா ரென்பது குறிப்பு. உடலையுங் கடவுளையுங் கருதாது, கடவுளையே கருதி மற்றவற்றை யொழித்தன ரென்பார், 'அறவே நின்னைச் சார்ந்த' என்றார். சிறவு - சிறப்பு.*

**91.** **தாராய் உடையாய் அடியேற் குன்தா ளிணையன்பு**
**பேரா வுலகம் புக்காரடியார் புறமே போந்தேன்யான்**
**ஊரா மிலைக்கக் குருட்டா மிலைத்திங் குன்தா ளிணையன்புக்**
**காராய் அடியேன் அயலே மயல்கொண் டழுகேனே.** **87**

***உரை*** *:- என்னை உடையவனே, அடியேனுக்கு உனது இரண்டு திருவடிகளிலே செய்யவேண்டிய அன்பினைத் தருவாயாக. மீளாத உலகமாகிய வீட்டினுள் உன் மெய்யடியார் போய்ப் புகுந்தனர். யான் வெளியேபோ யொழிந்தேன். ஊரிலுள்ள நல்ல பசு (நற்புலங்களிலே புல்) மேய்ந்திட, அதனோடு சென்ற குருட்டுப் பசுவும், மேய்ந்தது என்றாற்போல, உன்னுடைய இணையடிகளில் அன்பு பெறுதற்கு எத்தன்மையனாய் அடியேன், மெய்யடியார் பாங்கே விருப்பங்*

*கொண்டு முயலுதல் கூடும், கூறியருள்க. உயிர்கள் என்றும் உடைமைப் பொருள்கள். அவற்றை உடையவனை "உடையாய்" என்றார்.*

***குறிப்பு :-*** *ஊர்ப் பசுவோடு சென்ற குருட்டுப்பசு மேய்ந்தது. உன் மெய்யடியாரோ, வீடு சென்றனர். அன்புக் கண் இலனாகிய நான் அவரோடு சேர்ந்து போதற்கிடமில்லை. இனி யார்பக்கமாக, எப்படி நான் சென்று பயனடைதல் கூடும் என்றார். மிலைத்தல் - மேற்கொள்ளுதல் - ஈண்டுப் புல்லினை மேற்கொண்டு தின்றலாம். 'போரா' என்ற பாடமுமுண்டு. அதனைப் போதா என்பதன் மருஉவாகக் கொள்வர். பேரா உலகம் - புக்கவர் மீண்டு வாரா உலகம் - வீட்டுலகம். மிலைத்தல் - கனைத்தல் என்றும் பொருள் கொள்ளலாம்.*

**92.** அழுகேன் நின்பால் அன்பாம் மனமாய் அழல்சேர்ந்த
மெழுகே அன்னார் மின்னார் பொன்னார் கழல்கண்டு
தொழுதே யுன்னைத் தொடர்ந்தா ரோடுந் தொடராதே
பழுதே பிறந்தேன் என்கொண் டுன்னைப் பணிகேனே. **88**

***உரை :-*** *உன்னிடத்தே அன்பு மயமான உள்ளத்தோடு அழுது தொழமாட்டேன். தீயிடைப்பட்ட மெழுகுபோன்ற உள்ளத்தாராய அடியார், மின்னொளி பொருந்திய அழகிய நினது திருவடிகளைக் கண்டு வணங்கி உன்னைப் பின்தொடர்ந்திட்டனர். அவரோடு தொடர்ந்து செல்லாது, வீணே பிறவியெடுத்தேனாகிய யான் எத்துணை கொண்டு உன்னை வணங்குவேன்?*

**93.** பணிவார் பிணிதீர்த் தருளிப் பழைய அடியார்க்குன்
அணியார் பாதங் கொடுத்தி அதுவும் அரிதென்றால்
திணியார் மூங்கி லனையேன் வினையைப் பொடியாக்கித்
தணியார் பாதம் வந்தொல்லை தாராய் பொய்தீர் மெய்யானே. **89**

***உரை :-*** *பொய்ப்பற்றை ஒழிக்கின்ற மெய்ப்பொருளானவனே, வழிபடுவாரது நோயை அகற்றியருளிப் பழமைமிக்க அடியார்கட்கு, உனது அழகு நிறைந்த திருவடிகளை, அளித்தருள்வாய். எனக்கு அது செய்தல் அரியதாயின், வன்மைமிக்க மூங்கிலைப் போல உருக்க மற்ற என்னுடைய வினையை நாசமாக்கிய பின்னாவது, நினது தண்ணருட் பாதங்களை விரைவாக நீயே வலியவந்து தரவேண்டும்.*

*அணியார் பாதம் - அழகு நிறைந்த திருவடி. கொடுத்தி : முன்னிலை வினைமுற்று. அது அரிதன்றாலும் என உம்மையைப்*

*பிரித்துக் கூட்டுக. திணியார் மூங்கிலைத் தனக்குவமை கூறிக் கொண்டது, கல்மூங்கில் உள் ஓட்டையும் புறக்கசிவும் இல்லாதது போல தமக்கும் அகக்கனிவும் புறக்கசிவுமில்லை என்பதை உணர்த்தற்காகவும், மூங்கில் தன் இனத்தையே பெருக்குவது போலத் தாமும் வினைகளையேபெருக்கி வினைவயத்தால் பிறந்த மக்களையே துணையாகக்கொண்டு வாழ்ந்துவருவேனென்பதை உணர்த்தவும் கூறியவாறாம்.*

*தணி - தண்மை. தணியார் பாதம் - குளிர்ந்த திருவடி. "நனைந்தனைய திருவடி" என்று சிவானுபவச் செல்வர் அப்பர் சுவாமிகள் அறிவித்தலும் காண்க. 'பொய் தீர் மெய்யான்' - சிவனின் சிறப்பியல்பு.*

***குறிப்பு :-*** *பன்னாட் பயின்று அன்பு செலுத்துதலிற் றேர்ந்தவ ரென்பார், 'பழைய அடியார்' என்றார். திணி - திண்மையுடையது. தணி - தண்மையுடையது. உருக்க மின்மையின், 'திணி' என்றார். பிறவி வெப்பத்திற்கு நிழலாதலின், 'தணி' என்றார். ஒல்லை - விரைவு. 'பொய்தீர்' என்பதற்கு இயற்கையாகவே, பொய்யிற்றீர்ந்த என்றும் பொருள் கொள்ளலாம். மனக்கோட்டமும் உருக்க மின்மையுங் குறிப்பார். 'மூங்கில்' என்றார். பொடி - சாம்பல். மூங்கில், உருகாது சாம்பலேயாகும்.*

**94.** யானே பொய்என் நெஞ்சும் பொய்என் அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே
**தேனே அமுதே கரும்பின் தெளிவே** தித்திக்கும்
மானே அருளாய் அடியேன் உனைவந் துறுமாறே. **90**

***உரை :-*** *அடியார்களுள், யான் ஒருவனே பொய்மயமானவன், என் மனமும் வஞ்சமுடையதே, என் அன்பும் களங்கமற்றதன்று. ஆனால் தீவினையுடையேன், (பிழையுணர்ந்து வருந்தி) அழுவே னாயின் உன்னை அடையலாமே, தேனே, அமுதே, கருப்பஞ்சாறே, இவைபோல இனிமை பயக்கும் பெரியோனே, அடியேன் உன்னை வந்து கலக்குமாறு அருள்புரிவாயாக.*

*தேன் மலரில் தோன்றி, வண்டொன்றினாலேயே எடுக்கப் படுவதாய், இனியதாய், உண்டார்க்கு அறிவையும் ஆற்றலையும் அளிப்பதாயுள்ளது. அதுபோல இறைவனும் அன்பர் அகத்தாமரையில் ஊறும் தேனாய், அன்பர்களாகிய வண்டுகளால் நுகரப்படுவதாய், பேரின்பம் தந்து நிற்றலின் இறைவனைத் 'தேன்' என்றார்.*

அரிதில் முயன்று மத்தும் கடைகயிறும் அணைதடியும் கடைவாரும் கூட்டி வாங்கிக் கடைய வெளிப்படும் அமுதம்; அது போல அன்பர் மனமாகிய கடலில் உறுதி என்னும் மத்தையிட்டு, அன்பு நாணால், அடியார்கள் ஆலயம் அரனுரு என்ற அணைதடிகளைச் சார்த்தி, முறுக வாங்கிக் கடைய முன்னிற்கும் இறைவனுக்கு அமுது ஒப்பாயிற்று.

''கண் தகர நூறி இடித்துக்கொள்ள'' வெளிப்படுவது கருப்பஞ்சாறு. அதுபோல இறைவன் பரிபாகமில்லாத மக்கள் சரியை யாதி தவங்களில் முறையே நின்று முயல, அதனால் நல்லறிவு சற்றே நக வெளிப்படுவனாதலின் 'கரும்பின் தெளிவே' எனறார்.

உயிர்களாகிய நாங்கள் உணர்த்த உணருவோமேயன்றித் தாமாக உணர்ந்து உய்யும் ஆற்றலும் அறிவும் சுதந்திரமும் இலேம் ஆதலின் உன்னை வந்தடைதற்குரிய உபாயங்களையும் நீரே தெரிவித்தருள வேண்டும் என்று வேண்டிக்கொண்டவாறாம் 'உறுமாறு அருளாய்' என்றது.

**குறிப்பு :-** *மான் - மகான் - பெரியோன்; தேன், அமுது, கருப்பஞ்சாறு, இச்சை அறிவு செயலுக்கு இன்பந் தருவதென்ற குறிப்பு.*

--------

## 5(10) ஆனந்தாதீதம் - பேரின்ப மேலீடு

***ஆனந்த அதீதம் - களிப்பின் கடந்தநிலை. ஆனந்தத்தின் வரைவிலக்கணம் ஆனந்தத்தழுந்தல் என்னும் பதிகத்தொடக்கத்து விரித்துரைக்கப்பெற்றது. ஆனந்த பரவசமாய் உயிர் அப்பேரின்ப நுகர்ச்சியில் விளையும் இன்பமே வடிவாய்த் தன் தன்மை கெட்டுக் கடந்தநிலை எய்தும். அந்நிலையில் உயிரே தான் என்னும் உணர்வும் மடங்கியிருக்கும். அதாவது 'நீயும் நானுமாய் ஏக போகமாய்' இருக்கும். அதனை மெய்யடியார்கள் பெற்றதுபோல அடியேனும் பெறத் திருவருள் சுரக்கவேண்டுமென வேண்டுதலின் இப்பெயர்த்தாயிற்று. கடந்த நிலையைக் கூறுகிறது இப்பகுதி என்பாருமுளர்.***

***மெய்யன்பர் பேறும், தனக்கு இறைவன் செய்த உபகாரமும், திருவருள் இருந்தும் அதீதத்தைப்போய்த் தான் அண்ண முடியாமையும், அதனை உபகரிக்கவேண்டும் என்னும் பிரார்த்தனையு மாக இப்பதிகப் பொருள் அமைதலின் ஆனந்தாதீதத்தை வேண்டுதலே***

*யன்றி, ஓங்கு சிவானந்த வெள்ளம் திளைத்து அதுவாய் மேவுதலாகிய அதீதமே கூறுவதாகாது.*

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

**95.** மாறி லாதமாக் கருணை வெள்ளமே
வந்து முந்திநின் மலர்கொள் தாளிணை
வேறி லாப்பதப் பரிசு பெற்றநின்
மெய்மை அன்பருன் மெய்மை மேவினார்
ஈறி லாதநீ எளியை யாகிவந்
தொளிசெய் மானுடமாக நோக்கியுங்
கீறி லாதநெஞ் சுடைய நாயினேன்
கடையன் ஆயினேன் பட்ட கீழ்மையே. **91**

***உரை :-*** *(என்றும் மாற்றமில்லாத பேரருட்கடலே) எனக்கு முன்பாகவே நின்பாற்சென்று பூவின் தன்மையைக் கொண்ட நினது திருவடி யிரண்டையும்விட்டு நீங்காத நிலையாகிய சிறப்பைப் பெற்ற நினது உண்மை யன்பர்கள் உனது மெய்த்தன்மையை அடைந்தார்கள். முடிவில்லாத (பெருந்தகையாய) நீ எளிவந்தருளி அருளொளிகளாலும் மனித வடிவத்தொடு திருக்கண் பார்வை நல்கியும், பிளவுபட்டுருகாத (திண்ணிய) மனமுடையேனானேன். கீழ்ப்பட்டவனாகிய நான் பட்ட இழிவை என்னென்பது.*

*இத்திருப்பாட்டில் மெய்யடியார் வீடடையக் கண்டும், நீ கண்ணுதலும் கண்டக்கறையும் மறைத்து மானுடமேனி தாங்கி, குருவாக எழுந்தருளி ஞானோபதேசம் செய்தும் கடையனாகினேன் என்று இரங்கிக் கூறுகிறார்.*

*பெருக்கு, அளவொடுவரின் பயிருக்குப் பயன்பட்டு ஆக்கம் பெருக்கும்; கரை கடந்தும் வேகம் மிக்கும் வரின் பயிரை அழிக்கும். முன்னது மாறிலாத வெள்ளம். பின்னது மாறுபட்ட வெள்ளம். இறைவன் எந்தவகையிலும் எவ்வகைப்பட்ட உயிரும் உணர்ந்து ஈடே வேண்டுமென்ற திருவருட்குறிப்பு நிரம்பிய வெள்ளம் போல்பவர் ஆதலின் இங்ஙனம் கூறினார் என்றலும் ஒன்று.*

*பெரிய நிலையிலிருப்பார் தன் பெருமை நோக்காது, பிறர் நிலை கருதி அந்நிலைக்கு இறங்கி வருதலே எளியவாதலாம். அங்ஙனமே எல்லையிலாக் கருணை வெள்ளமான இறைவன் என்னிலை நோக்கி இகழாது, என்னை ஆட்கொள்ளவேண்டி, என்போலவே கை கால்*

*தலை முதலிய உறுப்புகளுடையனாக உபதேச குருமூர்த்தியாக வந்தான் என்பதை 'எளியையாகி வந்து' என்பதாற்றெளிய வைத்தார்கள்.*

*வந்தவன், மானுடமாக மல மாயை கன்மங்களோடு கூடியிருந்த என்னைச் சிவஞானம்பெற்ற மானுடமாக நோக்கிச் சட்சுதீட்சை செய்தருளினான் என்பார் 'ஒளி செய் மானுடமாக நோக்கி' என்றார். நடந்த வழியில் தேய்வும், படிக்க பகுதியில் தோய்வும், அண்ட பாத்திரத்தில் கீறும் இருக்கும் என்பது பழமொழி. இறைவன் குருவாக எழுந்தருளி வந்து ஞானம்பெற்ற ஆன்மாவாகச் செய்த திருக்கண்ணோக்கருளியும் என் மனத்தில் ஒரு கீறும் விழுந்திலதென்பார் 'கீறிலாத நெஞ்சுடைய நாயினேன்' என்றார். கீறு - அடையாளம்.*

*அவன் செய்த அருளுபதேசத்தைத் துணையாகக் கொண்டு ஈடேற மாட்டேனாயினும், உபகாரத்தை மறவேன் என்பார் 'நாயினேன்' என்றார். உடனிருந்த மெய்யடியார்கள் வீடு பெறுகின்றவகையில் முந்திக்கொள்ள நான் மட்டும் கடைசியாயினேன் என்பார் 'கடையன் ஆயினேன்' என்றார். அன்றிக் கீழ்ப்பட்டவனாயினேனெனத் தகுதி பற்றி உரை கூறுதலுமாம்.*

*மெய்யன்பர் பெற்ற அதீதநிலையைக் கூறித் தான் பிற்பட்டமைக்கு இரங்குதலின் இது ஆனந்தாதீதமாயிற்று. அன்பர்க்கு அதீனமான ஆனந்தம் எனக்கு அதீதமாயிற்று என்றிரங்கினார் எனலுமாம். அதீனம் - உடைமை. அதீதம் - கடத்தல்.*

***குறிப்பு :- பிற கடல்கள் ஊழி முடிவில் வற்றினாலும், இறையருள், மாற்றமிலாதது. 'மாறு' என்பதற்குக் கைம்மாறெனப் பொருள் கொண்டு 'பயன் கருதாத' என்று பொருளுரைப்பினுமமையும். மலர் - மலர்த்தன்மை அல்லது பூக்கள். பரிசு - சிறப்பு, மெய்ம்மை - நிலையான தன்மை, பேராவியற்கை. இறைவன் குருவாய் வந்ததையே 'மானுடமாக' என்றார்.***

**96.** **மையி லங்குநற் கண்ணி பங்கனே**
**வந்தெ னைப்பணி கொண்ட பின்மழக்**
**கையி லங்குபொற் கிண்ண மென்றலால்**
**அரியை யென்றுனைக் கருது கின்றிலேன்**
**மெய்யி லங்குவெண் நீற்று மேனியாய்**
**மெய்ம்மை அன்பர்உன் மெய்ம்மை மேவினார்**
**பொய்யி லங்கெனைப் புகுத விட்டுநீ**

போவதோ சொலாய் பொருத்த மாவதே. 92

***உரை :-*** *தீட்டிய மை விளங்குகின்ற அழகிய கண்ணையுடையாள் பாகனே! நீ குருவாய் எழுந்தருளிவந்து என்னைத் தொண்டனாக்கிய பின், மெல்லிய கையிலே விளங்கும் பொன்னாலாகிய வள்ளம் அல்லது வட்டில்போல உன்னை எளியாய் என்று கருதியதல்லாமல், எய்துதற் கருமை யுடையாயென் றெண்ணவில்லை. திருமேனியில் விளங்குகின்ற வெள்ளிய திருநீற்றின் ஒளியுடையாய், உனது மெய்யன்பர்கள் உண்மை நிலையை அடைந்தனர். பொய் விளங்கு மியல்புடைய என்னை இந்நிலவுலகிலே கைவிட்டுப் போதல் பொருத்தமாவென்று சொல்லி யருள்க.*

*மை இலங்கு கண் என்பதற்கு மையானது விளங்குதல் காரணமான கண் என்றும், மையினால் விளங்குகின்ற கண் என்றும் பொருள் கொள்ளலாம். உலக மாதர்க்காயின் கண், மை முதலிய ஒப்பனைகள் செய்யப்பெறுதலான் அழகுபெறுவது. பராசத்தியின் கண்களால் மை முதலிய அழகு சாதனங்கள் அழகைப் பெறுவன ஆதலால் மை விளங்குதற்குக் காரணமான கண்கள் என்று உரை கூறப் பெற்றது.*

*மழ - குழந்தை. குழந்தை தனது கையில் உள்ள பொற் கிண்ணத்தின் பெருமையை அறியாது எறியும்; தட்டும்; நசுக்கும்; எல்லாம் செய்யும். அதுபோல நீ குருநாதனாக எனக்குக் கிடைத்தும் உன் பெருமையை உணராதவனாயினேன் என்பார் 'மழக்கை இலங்கு பொற்கிண்ணம்' என்றலால் உனை அரியை என்று கருதுகின்றிலேன் என்றார்.*

*தாய் தன் குழந்தைமீதுள்ள அளவுகடந்த பாசத்தால் பொற்கிண்ணத்தையும் கொடுத்துவிட்டு, அது கிண்ணத்தின் பெருமை அறியாமல் எங்கே எறியுமோ நசுக்குமோ என்று அஞ்சி அஞ்சி உடன் போய்க்கொண்டே இருப்பதுபோல நீயும் என்னுடன் வந்து ஞானோபதேசத்தை வாசனாமலவயப்பட்டு இழந்து போவேனோ என்று கவனித்துக் காப்பாற்றவேண்டிய நீ பொய்யில் புகவிடலாமா என்றார் எனலுமாம்.*

***குறிப்பு :-*** *உன்னைத் தொடர்ந்து பற்றாது மெத்தனமாய் இருந்தேனென்பார் 'எளியை என்றெண்ணினே'னென்றார். இறைவன் பொன்மேனி யுடையனாய் அருளமுதக்காட்சி நல்கினமையின், இனிய பால் உணவுவைத்த பொன் வண்ணத்திற்கு அவனை உவமித்தார்.*

*இறுகப்பிடிக்க இயலாமையின் 'மழக்கை' என்றார். ஆட்கொண்டபின் பொய்யைத் தீர்த்துச் சேர்த்துக் கொள்ளுதல் பொருத்தமா மன்றித் தள்ளிவிடுதல் தக்கதன்றெனக் குறிப்பித்தனர்.*

**97.** பொருத்த மின்மையேன் பொய்ம்மை யுண்மையேன்
போதஎன்(று) எனைப் புரிந்து நோக்கவும்
வருத்த மின்மையேன் வஞ்ச முண்மையேன்
மாண்டிலேன் மலர்க் கமல பாதனே
அரத்த மேனியாய் அருள்செய் அன்பரும்
நீயும் அங்கெழுந் தருளி இங்கெனை
இருத்தி னாய்முறை யோஎன் எம்பிரான்
வம்ப னேன்வினைக் கிறுதி யில்லையே. **93**

***உரை :-*** *உன் திருவருளைப் பெறுதற்குத் தகுதியில்லாதேன் நிலையாதவற்றின் பற்றுடையேன். அத்தகைய என்னை வருகவென்றழைத்து விருப்பத்துடன் திருவருட்பார்வை நல்கவும், உன்னொடு செல்லுதற்குரிய கவலையில்லாதேன், (உலகிலிருக்குங்) கள்ள எண்ணமுடையேன், உன்னை யடையும்பொருட்டு இறந்தேனில்லை. தாமரை மலர்போன்ற திருவடியாய், சிவந்த திருவடிவ முடையாய், அருள் செய்யப் பெற்ற (அல்லது அருள்வழி நிற்கும்) உனது அடியாரும் நீயும் அவ்வுலகிற் கெழுந்தருளி, இவ்வுலகத்தில் என்னை அமர்த்திவிட்டாய். இது நியாயமோ? எனது தலைவனே, வீண் தன்மையுடைய எனது ஊழ்வினை நுகர்ச்சிக்கு முடிவு காணேனே.*

***குறிப்பு :-*** *போத - வருக. புரிந்து - விரும்பி. அரத்தம் - இரத்தம், சிவப்பு, செவ்வரத்தமலர்; அருள்செய் என்பதற்கு அருள்வழி யொழுகும், என்னலாம். வினைப்போகம் முற்றினால், உடல் நழுவுமாதலின், அங்ஙனம் கூறினார்.*

**98. இல்லை நின்கழற் கன்ப தென்கணே**
**ஏலம் ஏலுநற் குழலி பங்கனே**
**கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்**
**டென்னை நின்கழற் கன்ப னாக்கினாய்**
**எல்லை யில்லைநின் கருணை எம்பிரான்**
**ஏது கொண்டுநான் ஏதுசெய்யினும்**
**வல்லை யேஎனக் கின்னும் உன்கழல்**
**காட்டி மீட்கவும் மறுவில் வானனே. 94**

***உரைநடை :-*** *'மறுவில்வானனே, ஏலம் ஏலும் நற்குழலி பங்கனே' என்பதை முதலிற் கொண்டு பொருள் கூறுக:- 'வல்லையே' என்பதை 'மீட்கவும்' என்பதன் பின் வைக்க.*

***உரை :-*** *குற்றமற்ற சிதாகாசத்திலுள்ளவனே; மயிர்ச் சாந்தணிந்த அழகிய கூந்தலாள் கூறனே; உன்னுடைய திருவடிக்குச் சிறப்பாய அன்பு என்னிடம் இல்லை. கல்லை மெல்லிய பழமாக்கும் வித்தையைக் கைக்கொண்டு, (எனது கல்நெஞ்சத்தை நெகிழ்வித்து) உன்னுடைய திருவடிக்கு என்னை அன்பனாகச் செய்தனை, எமது பெருமானே, நினது திருவருளுக்கு ஓர் அளவு இல்லை. நான் எதனைக் கருவியாகக் கொண்டு எத்தீய செயலைச் செய்தாலும், மீட்டும், உன்னுடைய திருவடிகளை எனக்குக் காட்டி மீள ஆட்கொள்ளவும் ஆற்றலுடையா யல்லவா?*

*இத்திருப்பாட்டில் அடியேற்குத் தகுதி இல்லை ஆயினும் அளவற்ற கருணையால் நின் திருவடிக்கண் அன்பனாக்கினாய்; யான் எதுசெய்யினும் மீண்டும் உன் திருவடியைக்காட்டி, அடியேனைப் பிறவித்துன்பத்தினின்று மீட்டருள வேண்டும் என்று வேண்டிக் கொள்ளுகின்றார்.*

*கல்லை மென் கனியாக்கும் விச்சை : காய் கனியாதல் காலஞ் செல்லத் தானே இயைவதொன்றாம்; கனியாதற்கேற்ற உட்கூற்றுக்கள் காயினிடம் நிரம்பிக் காலத்தை எதிர்நோக்கி முதிர்கின்றன. கல்லிடம் அத்தன்மையில்லாமை மட்டுமன்றிப் பொருளே வேறு. அங்ஙனமிருந்தும் தன் தன்மை கெடுத்தலோடுமட்டுமன்றி, இனிப்பும் மென்மையும் நிறமும் மணமுமாகிய தன்மைகளையும் ஒருசேர உண்டாக்கிக் கனியாக்குகின்ற வித்தை. அதனைக் கொண்டு அன்பனாக்கினாய் என்றார். என்னிடம் உண்மையன்பு விளைதற்கேற்ற பண்படி சிறிதேனும் இல்லையாகவும் கல்லைப் பிசைந்து கனியாக்கும் வித்தையைக் கொண்டு அன்பனாக்கினாய் என்றார். "தெவ்வரை மெய்யெரி காய்சிலை யாண்டு என்னை ஆண்டுகொண்ட, செவ்வரை, மேனியன்" என்ற கோவை திருவாசகப் பகுதியையும், அதற்குப் பேராசிரியர் வலியனவற்றை வயமாக்கிப் பயின்று பின் என்னையாண்டான் என்று உரை எழுதியமையும் ஈண்டு இணைத்து எண்ணற்கு உரியன.*

***குறிப்பு :-*** *குற்றமற்ற வானம், சிதாகாசம். வானம், என்பதற்கு வானன் போலி. அன்பது - சிறப்பாய அன்பு. ஏலம் - மயிர்ச்சாந்து*

*போகப்பொருளாகிய மாலை, சந்தனம் முதலியவற்றுள் ஒன்று. ஏலும் - பொருந்தும். விச்சை - வித்தை. ஏது கொண்டு - இவ்வுடல் கொண்டு, ஏது செய்யினும், உலகப் பற்றிலீடுபட்டு யாது செய்தாலும்.*

**99.** வான நாடரும் அறியொ ணாதநீ
மறையி லீறும்முன் தொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
என்னை யின்னிதாய் ஆண்டு கொண்டவா
ஊனை நாடகம் ஆடு வித்தவா
உருகி நான்உனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடு வித்தவா
நைய வையகத் துடைய இச்சையே. **95**

***உரைநடை :-*** *'வையகத்துடைய இச்சையே நைய' என்பதை 'ஞானம்' என்பதற்கு முன்வைக்க.*

***உரை :-*** *விண்ணுலகிலுள்ளாரும் அறியக்கூடாதவன் நீயே, மந்திரங்களில் முடிவான முதுமொழியும், முன்னே தொடர்ந்து பற்றமுடியாத (வன்) நீயே. விண்ணொழிந்த பிறபுவனங்களிலுள்ளாரும் அறியமுடியாத(வன்) நீயே. அடியேனை எளிதாக வந்து ஆட்கொண்டவாறும், உடம்பைப் புளகங்கொண்டு கூத்தாடச் செய்த வகையும், நான் உள்ளம் உருகி உன்னை நுகரும்படி ஏற்படுத்திய வாறும், உலகப்பற்று சிதைந்தொழிய ஞானக் கூத்தியற்றுவித்தவாறும் நீயே (அறிவாய்).*

*ஒருவன் செய்த உபகாரத்தை ஒருவன் எண்ணும்போது அவன்பால் எல்லைகடந்த அன்பு பெருக மனம் நெக்கு நெக்கு உருகும். அப்போது அன்புசெய்யப்பட்ட பொருளைக் குடிக்கலாமா விழுங்கலாமா என்று எண்ணுவான். அதுபோல அடிகளார்க்கு ஆண்டவன் பரமாயதோர் ஆனந்தமாயினான். அப்போது பருகலாம் என்ற எண்ணம் உண்டாயிற்று. அதுவும் அவன் செய்த விச்சையே என்பார் 'நான் உருகி உன்னைப் பருக வைத்தவாறும்' என்றார்.*

***குறிப்பு :-*** *'மறையிலீறு' என்பதற்கு வேதாந்தம் என்றும் கூறுப. ஆடுவித்தவா - ஆடுவித்தவாறு என்று அதிசயக் குறிப்பாகக் கூறுதல். இச்சை - ஆசை, பற்று. நைய - உள்ளம் நைய.*

**100. விச்ச தின்றியே விளைவு செய்குவாய்**
**விண்ணும் மண்ணகம் முழுதும் யாவையும்**

வைச்சு வாங்குவாய் வஞ்ச கப்பெரும்
புலைய னேனையுன் கோயில் வாயிலிற்
பிச்ச னாக்கினாய் பெரிய அன்பருக்(கு)
உரிய னாக்கினாய் தாம்வ ளர்த்ததோர்
நச்சு மாமர மாயி னுங்கொலார்
நானும் அங்ஙனே உடைய நாதனே. 96

***உரைநடை*** *:- 'விச்ச.... செய்குவாய்' என்பதை 'யாவையும்' என்பதற்குப் பின் அமைக்க.*

***உரை*** *:- வானுலகத்தையும் நிலவுலகத்தையும் பிற எல்லா வற்றையும் வித்தில்லாமலே தோற்றுவிப்பாய். அவற்றைக் காத்து ஒடுக்குவாய்; களங்கமுடைய மிகுதியுங் கீழ்ப்பட்ட தன்மை யுடையேனை உனது திருக்கோயிலின் வாசலிலே இருக்கும் பித்துடைய னாக்கினை; பேரன்பர்க் கடியனாக்கினை, மக்கள் தாம் நட்டு வளர்த்த மரம் நஞ்சுத் தன்மையுடைய ஒரு (எட்டி) மரமானாலும், அதனை வெட்டமாட்டார்கள். அவ்வாறே யானும் ஆவேன். என்னை அடிமை கொண்ட தலைவனே. (ஆதலால் என்னை அகற்றி விடாதே) என்றவாறு.*

***குறிப்பு*** *:- மாயையினின்று உலகந் தோன்றினும், உலகின் வடிவிற் கேதுவாய அடிப்படை யெல்லாம் இறைவனே கோலி, நிலத்தினின்று வித்தில்லாமற் பயிர் உண்டாக்கினாற்போல உலகங்களையும் பொருள்களையுந் தோற்றுவித்தலின், 'விச்சதின்றியே' என்றார். வைத்தல், காத்தல், வாங்குதல், ஒடுக்குதல். பிச்சன் - பித்தன். 'உடைய நாதனே நானும் அங்ஙனமே' என மாற்றுக.*

**101. உடைய நாதனே போற்றி நின்னலால்**
**பற்று மற்றெனக் காவ தொன்றினி**
**உடைய னோபணி போற்றி உம்பரார்**
**தம்ப ராபரா போற்றி யாரினுங்**
**கடைய னாயினேன் போற்றி யென்பெருங்**
**கருணை யாளனே போற்றி என்னைநின்**
**அடிய னாக்கினாய் போற்றி ஆதியும்**
**அந்த மாயினாய் போற்றி யப்பனே.** 97

***உரை*** *:- என்னை அடிமையாக வுடைய தலைவனே, வணக்கம். உன்னையல்லால் இனி வேறு ஆதரவு எனக்காகக் கூடிய தொன்றை*

உடையேனோ, உத்தரவாகுக. வானவர்களுடைய மேலோர்க்கு மேலோனே வணக்கம். எல்லாரினுங் கீழ்ப்பட்டவனாயினேன் காத்திடுக. எனது பேரருளாளனே, காத்திடுக. முதலும் முடிவுமானவனே, அப்பனே, என்னை நினது அடியானாக்கினாய். காத்திடுக.

இத்திருப்பாட்டில், இறைவனை அன்றித் தனக்கு வேறோர் பற்றுக்கோடின்மையை விளக்குகின்றார்.

தேவர்கள் தமக்குத்தாமே பரம் என்றிருப்பார்கள். அவர்களனை வருக்கும் பரமானவர்கள், இந்திரன் மால் பிரமன் முதலானவர்கள். அவர்களுக்கும் மேலானவர் என்பார் 'உம்பரார் தம் பராபரா' என்றார். இவ்வண்ணம் இறைவன் உயர்வை எண்ணிக்கொண்டே போகும்போது அறிதோறும் அறியாமை கண்டாற்போல, தன் இழிவு தனக்குப் புலனாக 'யாரினும் கடையனாயினேன்' என்றருளினார். அந்தமும் ஆயினாய் என்ற உம்மை விகாரத்தால் தொக்கது. எல்லாம் இறுதியை எய்த, தான் அனைத்திற்கும் இறுதியாய் இருப்பவன் இறைவன் ஆதலின் 'அந்தம் ஆயினாய்' என்றார்.

உன்னுடைய திருவருளைப் பெறுவதற்கு முழுதும் தனக்கு உரிமையுண்மையை உணர்த்த 'அப்பனே' என்று விளிக்கின்றார். தந்தையின் சொத்து மகனுக்கு உரிமையாதல் உலகியல் ஆதலின்,

***குறிப்பு :*** *- உம்பர் - மேலிடம். உம்பரார் - வானவர். பராபரன் - மேலானவன். பணி - சொல்லு. 'என்னை நின் அடியனாக்கினாய் போற்றி' என்பதை ஈற்றிற் கொள்க.*

**102. அப்பனே யெனக் கமுத னேஆ**
**னந்த னேஅகம் நெகஅள் ளூறுதேன்**
**ஒப்பனே உனக்குரிய அன்பரில்**
**உரிய னாயுனைப் பருக நின்றதோர்**
**துப்பனே சுடர்முடிய னேதுணை**
**யாளனே தொழும்பாள ரெய்ப்பினில்**
**வைப்பனே யெனை வைப்ப தோசொலாய்**
**நைய வையகத் தெங்கள் மன்னனே. 98**

***உரை :- என் தந்தையே, எனக்குச் சாவா மருந்தானவனே, இன்பனே, உள்ளம் உருகும்படியாக நெருங்கிச் சுரக்கின்ற தேன் போல்பவனே, உனக்கு உரிமையுடைய அடியாருள் யானும் உரிமை யுடையேனாய் உன்னை நுகரும்படியாக அருள் செய்து நின்றதொரு***

*வல்லாளனே, சோதி மகுடத்தனே, உதவியாளனே, தொண்டர்களுக்கு இளைப்பிடத்துப் பயன்படும் வைப்புநிதி போன்றவனே, எங்கள் வேந்தனே, உலகத்திலே துன்பப்படும்படி என்னை வைப்பது நீதியோ சொல்லியருள்க.*

*உயிர்களைத் தீநெறிச் செல்லாது ஆளும்போது அரசன் போல அடக்கி ஆளுதலும், தோழன்போலக் குற்றநற்றங்களுக்கெல்லாம் உடனாக இருந்து ஆளுதலும், மனைவிபோல ஒன்றாய் நின்று ஆளுதலும் எனப் பலவகை. அவற்றுள் தனக்கு இறைவன் துணையாயிருந்து ஆளுவதை அறிவிப்பார் 'துணை ஆளனே' என்றார்.*

*அடிமைகளுக்குச் செயலற்ற காலத்தில் பயன்படுவது சேமநிதி. அதுபோலச் சிவனடித் தொழும்பாளர்கள் மல மாயா கன்மங்கள் நீங்கப்பெற்று, தனித்து இளைத்தகாலத்து இறைவன் வைத்த மாநிதியாய் இருந்து பாதுகாக்கின்றானாதலின் 'தொழும்பாளர் எய்ப்பினில் வைப்பனே' என்றார். அரசனால் ஆகாத செயல் உலகில் ஒன்றுமில்லை ஆதலானும், அரசன் ஒருவருக்கு உரிமை உடையனாயின் அவனுக்கு எவ்வகைத் துன்பமுமில்லை ஆதலானும், 'எங்கள் மன்னனே! என்னை நையவைப்பதோ சொலாய்' என்று வினவுகின்றார்.*

***குறிப்பு :-** அள், நெருக்கத்தைக் குறிப்பது, 'வள்' என்று பிரித்து, 'மிகுதியாக' என்றும் பொருள் கொள்ளுவர். துப்பு - வலிமை. 'வையகத்து நைய வைப்பதோ சொலாய்' என மாற்றுக.*

**103.** **மன்ன எம்பிரான் வருக என்எனை**
**மாலும் நான்முகத் தொருவன் யாரினும்**
**முன்ன எம்பிரான் வருக என்எனை**
**முழுதும் யாவையும் இறுதி யுற்றநாள்**
**பின்ன எம்பிரான் வருக என் எனைப்**
**பெய்க ழற்கண் அன்பாயென் நாவினாற்**
**பன்ன எம்பிரான் வருக என்எனைப்**
**பாவ நாசநின் சீர்கள் பாடவே.** **99**

***உரை :-** அரசனாகிய எமது தலைவனே, என்னை வருகவென் றழைப்பாயாக. அரியும் அயனும் ஆகிய தேவர் முதலிய எல்லாரினும் முற்பட்டவனே, என்னை வருகவென்றழைத்தருள்க. எல்லாம் அறவே ஒடுங்கிய காலத்தில் ஒடுங்காது பிற்பட்டவனே, என்னை வருகவென் றழைத்திடுக. உன்னுடைய செறித்த கழலுடைய திருவடியின் கண்*

அன்பாய் எனது நாவினால் துதிக்கப் படுபவனே, பாவத்தை நாசஞ் செய்பவனே, நின்புகழ்களை நான் பாடும் பொருட்டு, என்னை வருகவென் றழைத்திடுக.

இத்திருப்பாட்டில், அடிகள் தன்னை வருக என ஆணை வழங்க வேண்டுகின்றார்.

தன்னைத் திருப்பெருந்துறையில் விட்டுப் பிரிந்த துன்பம் மிகமிக உள்ளத்தை வருத்த, என்னை வருக என் என்று பலமுறை வேண்டிக்கொள்கின்றார். தன்னை ஆண்டவன் வரவேற்க வேண்டுமென்ற குறிப்பு அன்று; 'தில்லைக்கு வா; அதுவரை உலகத்து இரு' என்று ஆணையிட்ட முதல்வன், வா என ஆணை தந்தாலல்லது அடிமைக்கு உடன் செல்லலாகாமையின் வருக என்று சொல்லு என்னும் ஆணைவிருப்பே குறிப்பு.

மன்ன எம்பிரான் என்றது எல்லாருக்கும் தலைவனாயிருக்கும் தன்மையையும், முன்ன எம்பிரான் என்றது எல்லாருக்கும் முன்னே தோன்றி முளைத்த தொன்மையையும், பின்ன எம்பிரான் என்றது எல்லாம் தத்தம் காரணத்துள் ஒடுங்கக் காரணங்கள் பரம காரணமாகிய தன்னிடம் ஒடுங்கவும் தான் அழிவின்றி நிற்கும் அநாதிநித்தியத் தன்மையையும் அறிவிப்பன. அடியேன் வருக என்று அழைக்க வேண்டும் என்று விரும்புவன்; நோக்கம் உன் புகழ்களைப் பாடவும் நின் திருவடிக்கண் நீங்கா அன்போடு நாவினால் பன்னி ஆதரித்து ஏத்தவுமேயாம். திருமால் நான்முகன் முதலாயினாரும் குறித்தகால எல்லைக்குள் தோன்றி மறித்தும் இறந்து பிறப்பவர். அவர்கள் அங்ஙனம் தோன்றி அழிய முதற்பொருளாய் இருந்து இயக்குபவன் இறைவனே என்பார் "மாலும் நான்முகத்து ஒருவன் யாரினும் முன்ன" என்றார். யாவையும் - முழுதும். இறுதியுற்ற நாள் - பேரூழிக்காலம்; அதற்குப் பின்னோனாவது எல்லாம் அழியத் தான் அழியாமை ஒன்றானே அமையும் ஆதலின் இறைவனைப் 'பின்ன' என்றார். பன்னுதல் - ஒன்றையே பலகால் சொல்லல். நீ பாவநாசனாக இருப்பதால் நின் சீர்கள்பாட என் பாவங்கள் பறையுமாதலால் எனை வருக என வேண்டிக் கொள்கிறார்.

மக்கள் புண்ணியம் பாவம் என்ற இரண்டனையும் ஒக்கச் செய்திருக்க இறைவன் பாவத்தைமட்டும் அழிப்பன் என்பது எங்ஙனம் பொருந்துமெனின், புண்ணியமும் பாவமும் பாலும் நீரும் போல்வன ஆகலின் காய்ச்ச நீர் முன் உலர்ந்த பால் இறுகி நெய்யாய் மாறுதல் போல, சிவச்சோதியைச் சார்ந்து பாவம் உலர, புண்ணியம் பதி புண்ணியமாய் மாறி வீட்டின்பத்தை அளிக்கும். 'பண்ணிய தழல்காய்

*பாலளாம் நீர்போல் பாவமுன் பறைந்து பால் அனைய, புண்ணியம் பின்சென்று அறிவினுக்கரிய' என்னும் திருவிசைப்பா இக்கருத்தை நன்கு விளக்கும்.*

***குறிப்பு :- 'வருக என் எனை'*** *- எனை வருகவென்று சொல். முன்ன - முற்பட்டவனே, பின்ன - பிற்பட்டவனே. பன்ன - பன்னு தலையுடையவனே.*

104. பாட வேண்டும் நான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்(கு)
ஆட வேண்டும் நான் போற்றி அம்பலத்
தாடும் நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டும் நான் போற்றி யிப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீடவேண்டும் நான் போற்றி வீடுதந்
தருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே. 100

***உரைநடை :-*** *'மெய்யர் மெய்யனே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *உன்னுடைய மெய்யன்பர்க்கு மெய்யானவனே நின்னையே நான் வணங்கிப் பாட வேண்டும். பாடி மனம் வருந்திக் கசிந்து கனிந்து கனிந்து ஆனந்தக் கூத்தாட வேண்டும். நான் வணங்கி நீ தில்லைச் சிற்றம்பலத்தே ஆடியருளும்போது, உன்னுடைய பாதக் கமலங்களை நான் அடைய வேண்டும். இந்தப் புழுக்கூடாகிய உடம்பினை நீ எனக்குத் தொலைத்திட வேண்டும். உனக்கு வணக்கம். நான் பொய்யெல்லாவற்றையும் கைவிட்டொழியும்படி செய்யவேண்டும். உனக்கு வணக்கம். வீட்டின்பத்தைக் கொடுத்தருளிட வேண்டும். வணக்கம்.*

*இத்திருப்பாட்டில், முடிந்தமுடிபாக வினைக்கு ஈடாகிய இவ்வுடலை ஒழித்து எஞ்சிய வினைகளைப் போக்கி வீடு தந்தருள வேண்டுகிறார்.*

*இப்பாட்டில் போற்றி போற்றி என ஆறுமுறை அறிவிக்கின்றார். கருத்தறிந்து முடிப்பானாகிய கடவுளிடம் தன் வினையைப் போக்கு; வீட்டை அருளு என்று வேண்டிக்கொள்ளுகிறார்.*

*இறைவனைப் பாடுதல் மனம் நைந்து உருக வாயிலாதலாலும், நைந்தவிடத்துப் பரவசமாய் ஆடுதலும் திருவடிப் போதுகளையே*

*சாரவேண்டும் என்ற உறுதி பிறத்தலும் அதற்குத் தடையான இவ்வுடலை நீக்க விரும்புதலும் வினைகளாகிற பொய்யைப் போக்க விரும்புதலும் முறைமுறையே நிகழ்வனவாதலாலும் இவ்வண்ணம் முறையாகப் பகர்ந்தார்.*

*நாயினேன் என்று தன்னைக் கூறிக்கொண்டது உணவிட்ட தலைவன் தன்னை நையப் புடைத்தாலும் அவன் காலடியேயன்றிப் பிறிதொன்றையும் சாராத நாய்போல என்னை இங்கு இருத்திப் பிரிந்தாலும் இன்னல் பல வந்தாலும் உன்னுடைய திருவடியே கூடுவேன் என்னும் இயைபுபற்றி.*

*இதனால் பேறாகிய வீடுபெறச் சாதனங்களைத்தந்து, அதன் விளைவாகிய வீட்டின்பத்தையும் நீயே அருளவேண்டுமென்று வேண்டிக் கொள்கிறார். முக்கரணங்களாலும் இறைவனுக்குப் பணி செய்யின் வீடுபெறலாமென்பது நூன்முடிபாதல் தெளிக.*

*இவ்வண்ணம் இப்பாடல்கள் நூறும் ஒரே கருத்துடையனவாக அந்தாதியாய் அமைந்திருத்தல் உணர்ந்து இன்புறத்தக்கது.*

***குறிப்பு :- போற்றி - வணக்கம், எனவும், வணங்கி எனவும் பொருள் கொள்ளுக. வீட - தொலைக்க. விட என்பது முதல் நீண்ட தென்றுங் கூறலாம். எனை - எனக்கு.***

***திருச்சிற்றம்பலம்.***

உத்தரகோசமங்கையில் அருளிய

## 6. நீத்தல் விண்ணப்பம்*

*அடிகளார் திருச்சதகத்தைத் திருப்பெருந்துறையில் அருளிச் செய்து தனித்திருந்தபோது, பெருமான் தமக்கு அன்று அருளிச் செய்த ஆணையை அகத்துக்கொண்டார். உத்தரகோசமங்கையை அடைந்து திருக்கோயிலுட் புகுந்தார்; அங்கே தன்னை அடிமைகொண்ட ஆண்டவனைக் காணாது மயங்கினார்; அடியேன் பெற்ற பேறு இவ்வளவு தானோ என்று பெருமூச்சு விட்டார்; என்னை விட்டுவிடு கின்றாயோ என இறைவனை நோக்கி நைந்தார்; நீத்தல் விண்ணப்பமாகிய இந்தப் பதிகத்தைப் பாடியருளுகின்றார். அப்போது இறைவன் கருப்பஞ்சாற்றையும் தேவாமிர்தத்தையும் பாலையும் ஒத்து என்றும் இனிப்பு அறாத தம் திருமேனியைக் காட்டியருளினார். கண்டு மகிழ்ந்த அடிகள் அத்தலத்திலேயே சிலநாள் எழுந்தருளியிருந்தனர்.*

*நீத்தல் விண்ணப்பம் என்பது இறைவன் திருப்பெருந்துறையில் தன்னை இவ்வையகத்தில் இருக்க எனப் பணித்து நீத்தமையால் வருந்திய அடிகளார் 'அடியேனைமட்டும் இவ்வண்ணம் நீத்தல் தகுமா?' என்று விண்ணப்பித்தருளுகின்றார். அதனால் இது இப்பெயர்த்தாயிற்று என்பர் சிலர். மற்றும் சிலர் உலகப்பற்றை நீத்தற்கு இறைவனை வேண்டிக்கொண்டது என்பர். என்னை நீக்கி விடாதே என்று விண்ணப்பித்தலாம் என்பர் சிலர். இவற்றுள் இறைவன் தன்னை நீத்தமைக்காக விண்ணப்பித்தமை இதன் கருத்தாயின் பிரபஞ்ச வைராக்கியமென்னும் பழையகுறிப்புடன் பொருந்துவதாகாது. திருவாதவூரடிகள் புராணம்செய்த கடவுள் மாமுனிகள் 'விடுதிகொல் என்னை என்று நீத்தல் விண்ணப்பமென்னும் தொடை கெழு பாடல் ஓதிக் காட்டினார்' என்று இப்பகுதி தோன்றுவதற்குக் காரணத்தையும் காட்டினார். இவை அனைத்தையும் ஒற்றித்து ஊன்றி நோக்கும் போது பிரபஞ்ச வைராக்கியமென்னும் குறிப்பே மிகச் சிறந்ததாகிறது.*

** உலகப்பற்று விடுதற்கு இறைவனை வேண்டல். 'என்னை நீக்கி விடாதே' என்று இறைவனை வேண்டும் பகுதியாகவும் இதனைக் கருதலாம். விடுதி யென்பதற்கு நீக்குதி யெனவும், கைவிடாதே யெனவும் பொருள் கொள்ளப்பட்டது. பொருள்கொள்ளுமிடத்து, விளித்தொடர்கள் முதலிற் கொள்ளப்படும்.*

*பிரபஞ்ச வைராக்கியமாவது மாயா காரியமான இப்பிரபஞ்சம் நிலையற்றதென எண்ணி அதனிடம் தனக்கு அறியாமையால் அகலாதிருக்கின்ற பற்றினை நீக்கியருளவேண்டுமென்று வைராக்கியம் தோன்றக்கூறுதலால் 'பற்றறத் துறத்தலை விண்ணப்பித்தல்' என்னும் பொருளே சிறந்ததாம். அன்றியும் திருச்சதகத்தால் பொதுவகையான பத்தி வைராக்கிய விசித்திரத்தை விண்ணப்பித்த வாதவூர் அண்ணல், சிறப்பு வகையானும் உலகப்பற்றை ஒழிக்க விண்ணப்பிக்கின்றார். இதனால் முன் சதகத்திற்கும் இதற்கும் பொருளியல்பு உண்மையும் ஊன்றி உணர்தற்குரியது.*

*இறைவன் அடிகளாரை இன்னும் சிலநாள் இங்கிருக்க எனப்பணித்தது, அவருக்குப் பிரபஞ்ச வைராக்கியம் உண்டாகாமை காரணமன்று; சிவானுபவத்திறத்தை அவர் வாயிலாக என்றென்றும் உலகமறிந்து உய்யட்டும் என்ற திருவருட்குறிப்பேயாம்.*

--------

***பிரபஞ்ச வைராக்கியம்***

***கட்டளைக் கலித்துறை***

*திருச்சிற்றம்பலம்*

**105. கடையவ னேனைக் கருணையி னாற்கலந் தாண்டுகொண்ட**
**விடையவனே விட்டிடுதிகண்டாய்விறல் வேங்கையின் தோல்**
**உடையவ னேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**சடையவனே தளர்ந்தேன் எம்பிரான் என்னைத் தாங்கிக் கொள்ளே. 1**

***உரை :-*** *(பக்குவத்திற்) கீழ்ப்பட்டேனாகிய என்னை, உனது இரக்கத்தால் வந்தடைந்து அடிமைப்படுத்திக் கொண்ட காளையூர்தியானே, என்னைப் பாசத்தினின்று நீக்கி யருள்க. வலியுடைய புலியினைக் கொன்று அதன் தோலை ஆடையாக உடையவனே, (புகழால்) நிலைபெற்ற உத்தரகோச மங்கைப்பதி மன்னனே, சடையுடையாய், தளர்வடைந்தேன், எமது தலைவனே என்னைக் காப்பாற்றிக் கொள்ளுவாயாக.*

***குறிப்பு :-*** *கருணையாற் கலந்தாண்டதுபோலக் கருணையாலே தாங்கிக் கொள்ளவும் வேண்டும். என் தகுதியின்மையைக் கருதுதல் கூடாதென்றவாறு. விட்டிடுதி யென்பதற்குக் கைவிட்டிடுவையோ*

*என்று வினாப்பொருளுரைப்பதுண்டு. கண்டாய் - அசை. புலியின் உடம்பை நீக்கினவனுக்கு எனது உடலை நீக்கி வீடளிப்பது கடினமல்ல வென்றவாறு. சடையவன், என்பது இறைவனது வரம்பிலாற்றலைக் குறிக்கும்.*

**106.** கொள்ஏர்(பி) இள(வு)அக லாத்தடங் கொங்கையர் கொவ்வைச் செவ்வாய்
விள்ளேன் எனினும் விடுதிகண் டாய்நின் விழுத்தொழும் பின்
உள்ளேன் புறமல்லேன் உத்தர கோசமங் கைக்கரசே
கள்ளேன் ஒழியவுங் கண்டு கொண் டாண்டதெக் காரணமே. 2

***உரைநடை :-*** *விள்ளேன் எனினும் உள்ளேன், புறமல்லேன் விடுதிகண்டாய் என அமைக்க.*

***உரை :-*** *உத்தரகோசமங்கைப் பதிமன்னனே! எழுச்சி கொண்ட இளஞ் செவ்வி நீங்காத பெரு நகிலுடைய பெண்டிரது கொவ்வைப் பழம்போன்ற சிவந்த வாயினை நீங்கேனெனினும், உனது உயர்ந்த தொண்டினுக்குள்ளானவனாயினேன்; புறம்பாக நிற்பேனல்லேன், என்னைப் பாசத்தினீக்குவாயாக. வஞ்சனேன் உன்னை நீங்கி நிற்பவும், வலியவந்து கண்பார்த்து ஆட்கொண்டதற்குக் காரணம் என்னை? அவ்வாறு ஆட்கொண்டபின் நீ விடுதல் ஆகாது என உரிமைக்கு வழக்குரைத்ததுமாம்.*

***குறிப்பு :-*** *விடுதி என்பதற்கு உடலை நீக்குக என்று பொருள் கோடலுண்டு. ஏர்புகொள், என மாற்றுக. ஏர்பு - எழுச்சி. இளவு - இளந்தன்மை. சிலர், ஏர் கொள்பிளவு எனப் பிரித்து, அழகிய, காணத்தின் கூறளவுகூட அகலாது நெருங்கியுள்ள என்று பொருள் கொள்ளுவர். விள்ளல் - விடுதல். கடவுளைத் தாம் நாடாது, கடவுள் தம்மைநாடி வந்தருளினதை இறுதியடியிற் குறித்தார். கள்ளேன் - திருடேன்; வஞ்சமுடையன் அல்லேன். சிவஞானத்து உச்சியை அடைந்த அடிகளார் உலகவர் நிலையை உற்று நோக்கி அதனை தன் மேலிட்டுக் கொண்டு வருந்துகின்றனர்.*

**107.** காருறு கண்ணியர் ஐம்புலன் ஆற்றங் கரைமரமாய்
வேருறு வேனை விடுதிகண் டாய்விளங் குந்திருவா
ரூருறை வாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க என்னை வளர்ப்பவனே. 3

***உரைநடை :-*** *'விளங்கும்' என்பது முதல் இறுதி வரையுள்ள பகுதியை முதலிற் கொண்டு பொருள் கொள்ளுக.*

*__உரை :-__ புகழால் திகழும் திருவாரூரில் வீற்றிருப்பவனே, நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கரசே, கச்சினைப் பொருந்திய அணிகளணிந்த நகிலுடைய மாதின் ஒரு பாகனே, என்னை வளர்ப்பவனே, அழகுமிகுந்த கண்ணையுடைய மாதரது ஐம்புல வின்பங்களாகிய ஆற்றின் கரையிலே வளர்கின்ற மரமாய் வேரூன்றுவேனை அவற்றின் நீக்குக.*

*காருறு கண்ணியர் என்றது மங்கையர் கண்களே நோயும் மருந்துமாக இருந்து, வற்றாத கலைக்கடலையும் வற்றச்செய்து வசப்படுத்துதலின் கண்ணியர் எனக் கண்ணை முன்னிட்டுக் கூறுகின்றார். __ஐம்புலன் - கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலன்கள்.__ இவ்வைம்புலன்களும் எல்லையின்றி ஆசைநீரைப் பெருக்குதலின் ஆற்று நீருக்கு உவமையாயின. அதன் கரையிலேயுள்ள மரம் ஆணிவேர்வரையில் மணல் அரித்துப்போக எந்த நேரத்திலும் சாய்ந்துவிடும் நிலையில் இருக்கும். அதுபோல யான் நிலை தளர்ந்திருக்கிறேன்; என்னை விட்டுவிடுதலாகாது என்று வேண்டுகின்றார். வேர் உறுவேனை என்றது வேரை ஒத்த என்னை என்பதுதான் பொருள். உறுவேன் - ஒப்பேன்.*

*__குறிப்பு :-__ கார் - கருமை அழகு, கருங்கண்ணியர் என்றும் பொருள் கொள்ளலாம். ஐம்புலன் - ஐம்புல வின்பம். 'கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணேயுள' என்றது காண்க. விடுதி - நீக்குதி. வார் - கச்சு. குற்றமுடையேனாயினும், என்னை வளர்ப்பவனாதலின், விட்டுவிடுதல் கூடாதென்று குறித்தார். தாயொடுங் கூடியே வளர்த்தல் கூடுமென்று குறிப்பித்தமை காண்க. நான் ஐம்புல வின்ப நீரால் வளர்ந்து, வெள்ளம் வந்தபோது பிடுங்கி யெறியப்பெற்றுத் துன்பக் கடலில் வீழ்வேன். நீ என்னை அருளில் வளர்ப்பவன் ஆதலால், என்னை அங்கே வேரூன்ற விடாதே.*

**108.** **வளர்கின்ற நின்கரு ணைக்கையில் வாங்கவும் நீங்கியிப் பால்,**
**மிளிர்கின்ற என்னை விடுதிகண்டாய் வெண்மதிக் கொழுந்தொன்(று)**
**ஒளிர்கின்ற நீள்முடி உத்தர கோசமங்கைக்கரசே,**
**தெளிகின்ற பொன்னுமின் னும்அன்ன தோற்றச் செழுஞ்சுடரே.** **4**

*__உரை :-__ வெள்ளிய இளம்பிறை யொன்று விளங்குகின்ற நீண்ட சடைமுடி தரித்த உத்தரகோச மங்கைப்பதி மன்னனே, (தெளிவான) தூயபொன்னினொளியும் - மின்னலொளியும் போன்ற காட்சியை யளிக்குஞ் சோதிப்பிழம்பே, அருளில் நான் வளர்தற் கேதுவாய உனது*

*அருட்கரத்தால் என்னை நீ வளைத்துப் பிடிக்கவும், அப்பிடியில் நீங்கி இவ்வுலகப் பற்றிலே விருத்தியடைகின்ற என்னை அப்பற்றினின்று நீக்கியருள்க.*

***குறிப்பு :-*** *வளர்க்கின்ற என்பது 'வளர்கின்ற' என்றாயது என்னலாம்; வாங்குதல் - வளைத்தல், ஏற்றல். மிளிர்தல் - ஒளிர்தல், பருத்தல். பொன் திருமேனிக்கும், மின்சடைக்கும் உவமையாவன.*

**109.** **செழிகின்ற தீப்புகு விட்டிலிற் சின்மொழி யாரிற்பன்னாள்**
**விழுகின்ற என்னை விடுதிகண் டாய்வெறி வாயறுகால்**
**உழுகின்ற பூமுடி உத்தர கோசமங் கைக்கரசே**
**வழிநின்று நின்னரு ளாரமு தூட்ட மறுத்தனனே.** 5

***உரை :-*** *தேன்தேரும் வாயினையுடைய வண்டானது கிண்டுகின்ற மலரினைத்தரித்த முடியையுடைய உத்தரகோச மங்கை மன்னனே. என் வழி வந்து உனது திருவருளாகிய கிடைத்தற்கரிய அமுதத்தை உண்பிக்கவும், அதை வேண்டாமென்று மறுத்தேனே, (அதனை மறுத்து) வளர்கின்ற தீயில் விழுந்திறக்கின்ற விட்டிற் பறவை போல நிரம்பாத மழலைச் சொல்லுடைய மங்கையர்பால் பலநாளும் விருப்பம் வைக்கின்ற என்னை, (அவ்வபாயத்தினின்று) நீக்கிருயள்க.*

*இத்திருப்பாட்டில், அடிகளார், வழியில் நின்று இறைவன் அமுது ஊட்டவும், அதை மறுத்துவிட்டேனே என்று கழிந்ததற்கு இரங்குகின்றார்.*

*வெறி - தேன். தேன் உண்டாருக்குக் களிப்பை ஊட்டுதல் போல முதனிலைத் தொழிலாகுபெயராய் வெறி என்பது தேனுக்குப் பெயராயிற்று. அறுகால் - வண்டு; பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.*

*உண்ண மறுக்கும் குழந்தையைத் தாய் அது விளையாடப் போகின்ற வழியிலே நின்று மறைத்துப் பாலூட்டுதல் போல இறைவன் நான் போகின்ற வழிகளிலெல்லாம் நின்று கருணையாகிற அமுதத்தை ஊட்டினான்; யானும், அதன் அருமையும் இன்றியமையாமையும் அறியாதபடி மறுத்தேன் என்றதாம்.*

*செழிகின்ற தீப்புகு விட்டில் : செழிக்கின்ற என்பது ஈண்டு எதுகை நோக்கிச் செழிகின்ற எனவாயிற்று. விட்டிற்பூச்சி தீயைக் கனியெனக் கருதி, அதில் தானே வலிய விழுந்து அது சுடுமாயினும் திரும்பி மீளவும் விழுந்து சாதல்போலத் தாமும் மங்கையர்தம்*

*மையலில் விழுந்து காமத்தீயினால் பலகாலும் சூடுண்டு மீளாது மடிவேனாயினேன் என்றார்.*

*குழந்தை அறியாது படுகுழியில் விழப்போகும் சமயத்தில் தாய் 'குறும்புக்காரன் தொலையட்டும்' என்று இருப்பாளா? ஓடோடியும் வந்து தடுத்து எடுத்து அணைப்பாள். அதுபோலத் தாயாய் முலையைத் தருவானாகிய நீ விடுதல் ஆகாது என்றார். விழுகின்ற - விரும்பி உறைகின்ற. "தாம் வீழ்வார்" என்புழிப்போல விழுதல் விரும்புதல் என்னும் பொருளது. கீழே விழுகின்ற எனவும் சொல்நயம் தோன்றல் காண்க.*

***குறிப்பு :- சின்மொழி - சில்மொழி; ஆரவார மொழி என்பாருமுளர். வண்டு, ஆறுகாலுடையது. 'விழுகின்ற' என்பதற்கு நேர்பொருள் கொள்ளுவதுமுண்டு. விருப்பத்தையே அவ்வாறு கூறினாரெனக் கருதுக.***

**110. மறுத்தனன்யானுன் அருளறி யாமையில் என்மணியே**
**வெறுத்தெனை நீவிட் டிடுதிகண் டாய்வினை யின்தொகுதி**
**ஒறுத்தெனை ஆண்டுகொள் உத்தர கோசமங் கைக்கரசே**
**பொறுப்பரன்றேபெரியோர் சிறுநாய்கள் தம் பொய்யினையே. 6**

***உரை :-*** *என் மாணிக்கமே, உத்தரகோசமங்கைக்கரசே, சிறிய நாய் போல்வாரது பொய்ச் செயல்களைப் பெருந்தகையோர் மன்னிப்ப ரல்லவா? அடியேன் உன் திருவருளின் பெருமையறியாமையால் அதனை வேண்டாமென்று நீக்கினேன். அதற்காக நீ என்னை வெறுத்துக் கைவிட்டிடுவையோ? என் வினை யனைத்தையும் கடிந் தொதுக்கி என்னை யாண்டு கொண்டருள்க.*

***குறிப்பு :- 'அறியாமையிலழுந்திக்கிடந்த யான் உன் திருவருளை மறுத்தன' னென்னலாம். ஒறுத்தல் - கடிதல், குறைத்தல்.***

**111. பொய்யவனேனைப் பொருளென ஆண்டொன்றுபொத்திக்கொண்ட**
**மெய்யவனே விட்டிடுதி கண்டாய்விடம்உண் மிடற்று**
**மையவ னேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**செய்யவ னேசிவ னேசிறி யேன்பவந் தீர்ப்பவனே. 7**

***உரை :-*** *நஞ்சுண்ட கண்டத்திலே (அதன் அடையாளமான) கருமையுடையவனே, நிலைபெற்ற உத்தரகோசமங்கை மன்னனே, செம்மேனியனே, மங்களப் பொருளாவானே, சிறுமையேனுடைய பாவத்தை யொழிப்பவனே, பொய்யினேனாகிய என்னையும் ஒரு*

*பொருளாக மதித்து அடிமையாக்கிக்கொண்டு, முத்தியாகிய ஒன்றினை மறைத்துக் கொண்ட உண்மைப் பொருளே, என்னைப் பாசத்தினின்று நீக்குக.*

***குறிப்பு :-*** *பொய்யனுக்கு வீடு உடனே கொடுக்காமையின், 'மெய்யவனே' என்றார். ஒன்று - வீடு. பொத்தல் - மறைத்தல். கீழே வருகின்ற செய்யுள்களில் உத்தரகோச மங்கைக்கரசே யென்பது முதல் இறுதி வரையுள்ள பகுதிக்கு முதலிற் பொருள் கொள்ளப்படும்.*

**112.** **தீர்க்கின்ற வாறென் பிழையைநின் சீரருள் என்கொலென்று**
**வேர்க்கின்ற என்னை விடுதிகண் டாய்விர வார்வெருவ**
**ஆர்க்கின்ற தார்விடை உத்தர கோசமங் கைக்கரசே**
**ஈர்க்கின்ற அஞ்சொடச் சம்வினை யேனை இருதலையே.** **8**

***உரை :-*** *பகைவர் பயப்படும்படி ஒலிக்கின்ற, கிண்கிணி மாலையணிந்த காளையை உடைய உத்தரகோச மங்கைக்கரசே, ஐம்புல ஆசை ஒரு பக்கமும், அதற்கு மாறாகிய பயம் ஒரு பக்கமுமாகத் தீவினையேனை இருபுற மிழுக்கின்றன. உனது சிறப்பாகிய திருவருள் என் பிழையை எப்பொழுது தீர்த்தாட்கொள்ளுமோவென்று கவலையுற்று உள்ளம் புழுங்குகின்ற என்னைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *வேர்த்தல் - மனம் புழுங்குதல். தார் - கிண்கிணி மாலை. அஞ்சு - ஐம்புலவோசை. தலை - பக்கம்; இடம். விடுதியோ என்பதில் விட்டிடாதே என்ற கருத்து போந்தமை காண்க.*

**113.** **இருதலைக் கொள்ளியின் உள்ளெறும் பொத்து நினைப்பிரிந்த**
**விரிதலை யேனை விடுதிகண் டாய்வியன் மூவுலகுக்**
**கொருதலை வாமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**பொருதலை மூவிலை வேல்வலன் ஏந்திப் பொலிபவனே.** **9**

***உரை :-*** *(மேல், கீழ், நடு என்னும் மூவிடத்துமுள்ள) பெரிய மூன்று வகை உலகங்களுக்கும் ஒப்பற்ற தலைவனே, நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கரசே, போரிடும் நுனியையுடைய மூன்று இலை வடிவான வேலாகிய சூலத்தை வலப்பக்கம் ஏந்தி விளங்குபவனே, இருபுறமும் எரிகின்ற கொள்ளிக் கட்டையின் உள்ளிடத்தே அகப்பட்டுக் கொண்ட எறும்பு போலத் துயருற்று, உன்னைப் பிரிந்த விரிந்த தலையாகிய அலங்கோல முடையேனைக் கைவிடாதே. மூவுலகு - மண், விண், பாதலம் ஆகிய மூவுலகங்கள்.*

*குறிப்பு :- இருபுறமுந் தீப்பற்றி எரிகிற ஒரு கட்டையின் உள்ளிடத்தே அகப்பட்டுக்கொண்ட எறும்பானது, ஒரு பக்கமும், வெளிவர முடியாமைபோல, உலக பாசத்திற்கும், நின்னை அடைய முடியாமைக்குமாகிய இரு துன்பத்திற்கும் நடுவே இடர் உறுவேன் என்றார். விரிதலை, இழவு முதலியவற்றாலாய துக்கத்திற்கு அறிகுறி. புலன்களாகிய தீ ஒரு பக்கம். அச்சம் ஒரு பக்கம். ஒருதலை இவ்வுலக வாழ்க்கையின் வெறுப்பிற்கும், மற்றொரு தலை ஆண்டவனின் பிரிவுக்குமாக வருந்துகிறார்.*

**114.** பொலிகின்ற நின்தாள் புகுதப்பெற் றாக்கையைப் போக்கப்பெற்று
மெலிகின்ற என்னை விடுதிகண் டாய்அளி தேர்விளரி
ஒலிநின்ற பூம்பொழில் உத்தர கோசமங் கைக்கரசே
வலிநின்ற திண்சிலை யாலெரித் தாய்புரம் மாறுபட்டே. **10**

***உரைநடை*** *:- இறுதி யடியில், 'புரமாறுபட்டே' என்பதை முதலாக வைத்துப் பொருள் கொள்ளப்பட்டது.*

***உரை*** *:- வண்டுகள் பழகித் தேர்ந்து பாடுகின்ற விளரியிசையின் ஓசையானது நிலைபெற்ற அழகிய சோலையுடைய உத்தரகோச மங்கைக்கரசே, முப்புரத்தைப் பகைத்து வலிமை பொருந்திய திண்ணமுடைய வில்லாகிய மேருவினை வளைத்து எரித்தொழித்தாய், விளங்குகின்ற நினது திருவடிகளிற் சரண்புகப்பெற்றும் உன்னை யடையாமல் வாழ்நாளை வீணாகக் கழிக்கபெற்று வருந்தி யிளைக்கின்ற என்னைக் கைவிட்டிடாதே.*

*குறிப்பு :- ஆக்கை - உடல், உடல் கொண்டு வாழும் வாழ் நாளிற்கு ஆகுபெயர். போக்க - (வீணே) கழிய. அளி - வண்டு. விளரி- எழுவகை இசையில் ஒன்று. மாறுபட்டு - பகைத்து. புரமெரித்தது போல, எனதுடலையு மொடுக்கி வீடருள்க என்பது கருத்து. வலி நின்ற திண் சிலை - மேரு மலையாகிற வில்.*

**115.** மாறுபட் டஞ்சென்னை வஞ்சிப்ப யான்உன் மணிமலர்த்தாள்
வேறுபட் டேனை விடுதிகண் டாய்வினை யேன்மனத்தே
ஊறும்மட் டேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
நீறுபட் டேயொளி காட்டும்பொன் மேனி நெடுந்தகையே. **11**

***உரை:-*** *பெருந்தன்மையனே, தீவினையேன் உள்ளத்தே ஊறுகின்ற தேனே, நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கரசே, திருநீற்றினைப் பொருந்தி விளங்குகின்ற ஒளியினைக் காட்டும் அழகிய*

*திருமேனியுடைய பெருந்தன்மையனே, ஐம்புலனும் என்னைப் பகைத்து வஞ்சனை செய்ய, அடியேன் உன் அழகிய திருவடித் தாமரையில் நீங்கினேனைக் கைவிட்டிடாதே. அடியேன் அடிசேராது மாறுபட்டிருப்பது என் பிழையன்று. புலன்களின் வஞ்சனை ஆதலால் விடுதலாகாது என்று விண்ணப்பிக்கிறார்.*

***குறிப்பு :-*** *வேறுபட்டேனை - நீங்கினேனை. மட்டு - தேன். நீறு பட்டு ஏய் ஒளி - நீறு பொருந்தி அதனாலுளதாயவொளி.*

**116.** **நெடுந்தகை நீயென்னை ஆட்கொள்ள யான்ஐம் புலன்கள்**
**கொண்டு, விடுந்தகை யேனை விடுதிகண் டாய்விர வார் வெருவ,**
**அடுந்தகை வேல்வல்ல உத்தர கோசமங் கைக் கரசே,**
**கடுந்தகை யேன்உண்ணுந் தெண்ணீர் அமுதப் பெருங்கடலே. 12**

***உரை:-*** *பகைவர் அஞ்சும்படி கொல்லுந் தன்மையுடைய வேற் போரில் திறமையுடைய உத்தரகோச மங்கைக்கரசே, கொடுந்தன்மை விடாயுடையேனாகிய நான் பருகுதற்குரிய தெள்ளிய தூய புனல் போன்ற அமுதப் பெருங்கடலே, பெருந்தன்மையனே, நீ அடியேனை ஆண்டுகொண்டருளவும், அடியேன் ஐம்புல அவாவைப் பற்றி, உன்னருளைக் கைவிடுந்தகையேனாயினும் என்னைக் கைவிடாதே, துன்பத்தினின்று நீக்கிக் காத்தருள்.*

*இறைவன் கருணை எத்தனையாயிரம் அடியார்கள் முகந்து கொள்ளினும் குறைவுபடாது ஒருபடித்தாக இருத்தலேயன்றி, ஒருகாலைக்கொருகால் பெருகியும் தோன்றுதலானும் அப்பெருக்கம் இவ்வளவிற்று என்று யாரானும் அளவிட்டறியப்படாமையானும் 'அமுதப் பெருங்கடலே' என்றார்.*

*இறைவனுடைய பல்வேறு குணங்களை அடுக்கிச் சொல்லியும் அது தம் உரையுள் அடங்காமை கண்டு, எல்லாக் குணங்களும் தோன்ற 'நெடுந்தகை நீ' என்றார். நெடுந்தகை - பெரிய குணங்கள் பல படைத்தவன்.*

*நினது கைம்மாறில்லாக் கருணை, என்குறையும் சிறுமையுங் கண்டும் அவற்றைப் பொருட்படுத்தாது ஆட்கொண்டது; அதன் அருமையும் பெருமையும் அறியாது அடியேன் ஐம்புலச் சார்புகொண்டு விடும் தகுதியுடையேன் ஆயினேன் என்றார்.*

*ஐம்புலன்களுக்கும் இவருக்கும் நடக்கும் மனப்போரில் புலன்கள் வெல்லும்போது நின் திருவடிச் சார்பைவிட்டு அகல்கிறேன்.*

*பின் புலன்கள் ஓய்ந்து மடங்கும்போதும், புலனின்பம் சிற்றின்பம் ஆதலின் அதன்கண் உவர்ப்புத் தலைக்காட்டும் போதும் நின் திருவடியைச் சார்கின்றேன். இவ்வண்ணம் நின் திருவடிச்சார்பை முற்றும் விட்டேன் அல்லேன் என்பார் 'விட்டேனை' என்னாது 'விடுந்தகையேனை' என்றார். அதனால் நீ என்னை விடுதலாகாது என்று விண்ணப்பிக்கின்றார்.*

***குறிப்பு :-*** *வேல் வல்ல - வேற்போரில் வல்ல. தகை - தாகம், தன்மை. ஐம்புலன் - ஐம்புல அவா.*

**117. கடலினுள் நாய்நக்கி யாங்குன் கருணைக் கடலினுள்ளம்
விடலரி யேனை விடுதிகண் டாய்விட லில்லடியார்
உடல்இல மேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
மடலின்மட் டேமணி யேஅமு தேஎன் மதுவெள்ளமே. 13**

***உரை:-*** *உன்னை விடுதல் இல்லாது பற்றும் அன்பர் உடம்பாகிய வீட்டிலே நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கரசே, பூவிதழ்த்தேன் போலினியவனே, மாணிக்கமே, அமுதமே, எனது பால் வெள்ளமே, கடலிலே நாய் நீர் குடிப்பதானால் சிறிது சிறிதாக நக்கித்தான் குடிப்பதுபோல, உனது கருணைக் கடலினுள்ளே உள்ளத்தைச் செலுத்தி (நன்கு பருக) இயலாத என்னைக் கைவிட்டிடாதே. மடல் - இதழ். மட்டு - தேன். மடலின் மட்டே - வண்டு தீண்டி எச்சிலாக்காத இனிய தூய்மையான தேனே!*

*'கடலில் எவ்வளவு நீர் இருந்தாலும் நாய் நக்கித்தானே குடிக்கும்' என்பது ஒரு முதுவழக்கு. அதில் வாய்வைத்து வயிறார உண்ணும் ஆற்றல் நாய்க்கு இல்லை என்பது கருத்து. கடலில் நீர்போல் உன்னிடத்துக் கருணை வெள்ளமாக இருக்கிறது. அதில் ஆழ்ந்து அள்ளிக் குடிக்க வேண்டும். அத்தகைய ஆற்றல் அடியேனுக்கு இல்லை; ஆயினும் விடமுடியாதவனாக உள்ளேன்; இந்த ஈடுபாட்டைத் திருவுளத்தெண்ணியேனும் நீ விடலாகாது என்று விண்ணப்பிக்கிறார்.*

**118. வெள்ளத்துள் நாவற் றியாங்குன் அருள்பெற்றுத் துன்பத்தி (நி)ன்றும்
விள்ளக்கி லேனை விடுதிகண் டாய் விரும்பும் அடியார்
உள்ளத்துள் ளாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
கள்ளத்து ளேற்கரு ளாய்களி யாத களியெனக்கே. 14**

***உரை:-*** *நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கரசே நீர்ப் பெருக்கின் நடுவேயிருந்தும் நீர்பருகாது தாகத்தால் நாவானது உலர்ந்துபோனாற்*

*போல, உன் அருள் (வெள்ளத்தைப்) பெற்றும், துயரத்தினின்றும் நீங்குதற்கு ஆற்றலில்லாத என்னைக் கைவிட்டிடாதே. உன்னைக் காதலிக்கும் அன்பரின் உள்ளத்தில் நிலைத்திருப்பவனே, அல்லது உயிர்க்குயிரானவனே, (ஐம்புல) வஞ்சனையிலுள்ள எனக்கு, இதுவரை நான் பெற்று மகிழாத பேரின்பத்தை ஈந்தருள்க.*

***குறிப்பு :-*** *விள்ளக்கில் என்பதில், கில் ஆற்ற லுணர்த்துவது. விள்ளக்கில் இலேனை - என்பது விள்ளக்கிலேனை யென்று குறுகியது.*

**119.** **களிவந்த சிந்தையொ டுன்கழல் கண்டுங் கலந்தருள**
**வெளிவந்தி லேனை விடுதிகண் டாய்மெய்ச் சுடருக்கெல்லாம்**
**ஒளிவந்த பூங்கழல் உத்தர கோசமங் கைக்கரசே**
**எளிவந்த எந்தைபிரான் என்னை ஆளுடை என்னப்பனே. 15**

***உரை:-*** *உண்மையான சோதிப் பொருள்களுக்கெல்லாம் ஒளி வருவதற்கேதுவாய அழகிய திருவடியுடைய உத்தரகோச மங்கைப் பதி மன்னனே, எனக்கு எளிதில் வந்தருள்செய்த எந்தை யாகிய பெருமானே, என்னை அடிமையாகவுடைய எனது அப்பனே, மகிழ்ச்சி மிகுந்த மனத்தோடு உன் திருவடிகளைக் காணப் பெற்றும், நீ என்னோடு கலந்து அருள்செய்யுமாறு, பற்றொழித்து, அருள் வெளியிற் புகாதேனைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *ஒளிவந்த, என்பது ஒளியைத்தந்த என்ற கருத்தினை யுடையது. மெய்ச்சுடர், என்பது சூரியன் போன்ற எல்லாவற்றுக்கும் ஒளியைத் தரும் பரம்பொருளைக் குறித்தது. எந்தைபிரான் எமது தந்தையின் தலைவன். படைப்போன் - தந்தையாயின், அவன் தலைவன் இறைவனென்க. வெளிவந்திலேனை, என்பதில், வெளி - அருள் வெளி.*

**120.** **என்னைஅப் பாஅஞ்சல் என்பவர் இன்றிநின் றெய்த் தலைந்தேன்,**
**மின்னையொப் பாய்விட் டிடுதிகண் டாயுவ மிக்கின் மெய்யே,**
**உன்னையொப் பாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே,**
**அன்னையொப் பாய்எனக் கத்தனொப் பாய்என் அரும்பொருளே. 16**

***உரை:-*** *ஒத்துப் பார்ப்பின், உண்மையாக உன்னை நீயே ஒத்தவனாயிருக்கிறாய், மின் போன்ற ஒளியுடையவனே, நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கரசே, எனக்குத் தாய்போல்வாய், தகப்பன் ஒப்பாய், கிடைத்தற்கரிய பொருளே, என்னை நோக்கி ஐயா! பயப்படாதே என்று சொல்லுவாரில்லாமல், நின்று வருந்தி இளைத்து*

*அடைக்கலம் அளிப்பவர்கள் யாருமின்மையால் அலைந்தேன் என்னைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *அருள் பெறுதற்கு முன்னுள்ள சத்திநிபாத நிலையை முதலடி குறிக்குமென்ப. எல்லாக் குணங்களும் ஒருங்கு நிறைந்துள்ள இறைவனுக்கு உவமையாகக் கூற வேறு பொருளின்மையின் உன்னை ஒப்பாய் என்றார்.*

**121. பொருளே தமியேன் புகலிட மேநின் புகழிகழ்வார்**
**வெருளே யெனைவிட் டிடுதிகண்டாய் மெய்ம்மையார் விழுங்கும்**
**அருளே அணிபொழில் உத்தர கோசமங் கைக்கரசே**
**இருளே வெளியே இகபர மாகி யிருந்தவனே. 17**

***உரைநடை :-*** *'மெய்ம்மையார்' முதல் இறுதி முடிய முதலிற் பொருள் கொள்ளப்பட்டது.*

***உரை :-*** *உண்மை அன்பர் முற்றிலும் அனுபவிக்கும் அருளமுதே, அழகிய சோலை சூழ்ந்த உத்தரகோசமங்கைப் பதிக்கு மன்னனே, மறையாயும் வெளியாயும் இம்மையாயும் மறுமையாயும் இருந்தவனே, (என்றும் மாற்றமில்லாத) மெய்ப்பொருளே, தனியேனாகிய யான் சரண்புகுமிடமே, உனது பெருமையை நிந்திப்பார்க்கு அச்சமானவனே, அடியேனைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *என்றும் நிலைத்த பொருளையே பொருள் என்றார். 'பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும்', என்ற குறள் அடியுங் காண்க. வெருள் - அச்சம். அச்சத்திற்கு ஏதுவானவனை அச்சமென்ப. 'புறச்சமயத்தவர்க்கு இருளாய்' என்றபடி இறைவன் தன்னையடையா தார்க்கு மறை பொருளாயிருத்தலின் அவனை 'இருள்' என்றார். அடைந்தார்க்கு அவன் வெளிப்படையாகத் தோன்றுதலின், 'வெளி' என்றார். இம்மை மறுமைக்குக் காரணமாதலின் இகபரமாகி யென்றார். அடிகள் புறச்சமயத்தில் நின்ற காலை இருளாயும் அகச்சமயத்துற்ற காலை வெளியாயும் வீடுபேற்றிற்குரிய திருவருள் பெறுமுன் இம்மை மறுமைக்குக் காரணமாகியும் இருந்த பெருமான் அருள்பெற்றபின் நன்கு விளங்கும் மெய்ப்பொருளாகியும் போய் அடைதற்குரிய வீடாகியும், வீடடைதற்கு முன் உடலோடு இருந்தகாலை அச்சத்திற்கு ஏதுவாகியும் இருந்தமை குறிக்கப்பட்டது. விழுங்கும் அருள் என்றமையால் அருளமுதம் என்று உரையில் குறிக்கப்பட்டிருக்கிறது. அருள் - கனி யென்பாரும் உளர்.*

122. இருந்தென்னை ஆண்டுகொள் விற்றுக்கொள் ஒற்றிவை என்னினல்லால்,
விருந்தின னேனை விடுதிகண் டாய்மிக்க நஞ்சமுதா,
அருந்தின னேமன்னும் உத்தர கோசமங் கைக் கரசே,
மருந்தின னேபிற விப்பிணிப் பட்டு மடங்கினர்க்கே. 18

***உரை :-*** *(பாற்கடலிலெழுந்த) கொடிய பெருவிடத்தை அமுதமாக உண்டவனே, நிலைபெற்ற உத்தரகோசமங்கைக்கு மன்னனே, பிறவி நோய்ப்பட்டு முடக்க முற்றவர்களுக்கு நல்ல மருந்தானவனே, அடியேன் முன் எழுந்தருளியிருந்து ஆட்கொள்ள வேண்டும் (வேண்டுமாயின்) விற்றுக்கொள்ளுக அல்லது ஒற்றி வைப்பாய் என்று கூறுவதல்லாமல் வேறொன்று மறியாத (உன் திருவருட்குப்) புதிதாய் உரியனான என்னை நீக்கிவிடாதே.*

*குறிப்பு :- மடங்குதல் - தாழ்தல், முடங்குதல், அருள் ஆசானோடு வந்த அடியார்கள் தனக்கு முன்னே அருள் பெற்றுவிட்ட படியால் தன்னை 'விருந்தினன்' என்றார். பிற விடங்களில் அவர்களைப் பழவடியார் என்பதும் காண்க. இருந்து என்பதற்கு உள்ளத்தே இருந்து என்றும் பொருள் கொள்வர். உடல், பொருள், ஆவி மூன்றையும் இறைவனிடத் தொப்புவித்தமையால், அவனுக்கு விற்பனை முதலிய செய்தற்குரிய எல்லாச் சுதந்திரங்களும் உண்டென்று குறிப்பித்தார். சுதந்திரமுடைய அவன் யாது செய்யினும் அதனைப் பற்றி வினவத் தனக்கு உரிமை இல்லை என்றும் குறித்தார். விற்றுக் கொள்ளுதலாவது உலக பாசத்திற்குத் தன்னை ஒப்புவித்து முடிவாகத் தன்பாற் கொள்ளுதல், ஒற்றிவைத்தல் சில காலங்கழித்து மீட்பித்தலைக் குறிக்கும். நீ என்னை என்ன வேண்டுமானாலும் செய்து கொள்; கை விடல் மட்டும் ஆகாது என விண்ணப்பிக்கின்றார்.*

**123. மடங்கஎன் வல்வினைக் காட்டைநின் மன்அருள்தீக்கொளுவும்
விடங்கஎன் தன்னை விடுதிகண் டாய்என் பிறவியைவே
ரொடுங்களைந் தாண்டுகொள் உத்தர கோசமங் கைக்கரசே
கொடுங்கரிக்குன்றுரித்தஞ்சு வித்தாய் வஞ்சிக் கொம்பினையே. 19**

***உரை :-*** *எனது பிறவி மாமரத்தை வேரொடும் வெட்டி யெறிந்து என்னை ஆட்கொண்டருளும் உத்தரகோசமங்கைக் கரசே, மலைபோன்ற கொடுமை மிக்க யானை வடிவுடைய கயாசுரனைக் கொன்று தோலுரித்துப் போர்த்து வஞ்சிக்கொடி போன்ற உமை யம்மையினை அஞ்சு வித்தனை, எனது கொடிய வினைகளின் தொகுதியாய காட்டினை முற்றிலும் அழிக்க உனது நிலைபெற்ற*

*அருட் பெருந் தீயினை மூட்டிக் கொளுத்தும் வீரனே அடியேனைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *நின் மன் அருள் - நினது நிலைபெற்ற அருள். விடங்கம் - ஆண்மை. மடங்க - அடங்கி யொழிய; முனிவர்க்குத் தீங்கிழைத்த கயாசுரனைக் கொன்று அவனது தோலைப் போர்த்தகாலை இறைவனது தோற்றம் யானையின் தோற்றம் போன்றமையின் அது மென்மை மிக்க அருளன்னைக்கு அச்சத்திற் கேதுவாயிற்று. இறைவன் தனது வீரச் செயலாலே தமது உடலை ஒழித்துவிட வேண்டுமென்பதே அடிகள் கருத்து. தமது தீவிரம்பற்றி அவ்வாறு கூறினர். வஞ்சி - ஒரு வகைக்கொடி. பிறவிக்கு வேர் வினை. வினைக்கு வேர் அவா. இதுவே மூலகன்மம் எனப்படும். களைதல் நோய் நீக்கம் போல்வது.*

**124. கொம்பரில் லாக்கொடி போல்அல மந்தனன் கோமளமே**
**வெம்புகின் றேனை விடுதிகண் டாய்விண்ணர் நண்ணுகில்லா**
**உம்பருள் ளாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**அம்பர மேநில னேஅனல் காலொடப் பானவனே. 20**

***உரை :-*** *வானவரும் அடையக்கூடாத மேலிடத் திருப்பவனே, நிலைபெற்ற உத்தரகோசமங்கை மன்னனே, வான், காற்று, நெருப்பு, நீர், நிலம் என்னும் ஐம்பூதங்களையும் வடிவமாகக் கொண்டு அவை யானவனே, (என்றும் மாறாத) இளமைச் செவ்வியுடையோனே, படர்தற்கு கொழு கொம்பிலாத கொடிபோலத் திரிந்து சுழன்றேன்; வீடடைதற்குத் தவிக்கின்ற என்னை விட்டுவிடாதே.*

***குறிப்பு :-*** *கொடிபோல் அமைந்தனன் என்றது அருள் பெறுதற்கு முன்னிருந்த சத்திநி பாதநிலையைக் குறிக்கும் என்ப. கோமளமென்பது இளமையையும் அழகையும் குறிக்கும். வெம்புதல் - தவித்தல். உம்பர் என்றது சிதாகாயத்தை. அம்பரம் - வான். அப்பு - நீர். கால் - காற்று.*

**125. ஆனைவெம் போரிற் குறுந்தூ றெனப்புல னால்அலைப்புண்**
**டேனையெந் தாய்விட் டிடுதிகாண் டாய்வினை யேன்மனத்துத்**
**தேனையும் பாலையுங் கன்னலை யும்அமு தத்தையும்ஒத்**
**தூனையும் என்பினை யும்உருக் காநின்ற ஒண்மையனே. 21**

***உரை :-*** *(உடலோடு இருக்கும்) தீவினையேனது உள்ளத்தின் கண்ணே தேனும் பாலும் கருப்பஞ்சாறும் இனிய அமுதமும் போன்று*

*(தித்தித்து) எனது தசையினையும் எலும்பினையும் உருக்குவிக்கின்ற ஒளி வண்ணனே, கடுமையான ஆனைச் சண்டையிலகப்பட்ட சிறு செடி போல ஐம்புல ஆசைப்போரில் அகப்பட்டுத் திரிவுற்றுத் துயருறும் என்னை எனது அப்பனே கைவிட்டிடாதே. நோய் தணிய மருந்தைத் தேனில் குழைத்து உண்பார்கள். தேன் பித்தந் தணிக்கும் மருந்தாகும். ஆதலால் அதனை முதலிற் கூறினார்.*

***குறிப்பு :-*** *ஆனைகள் செய்யும் சண்டையில் அவற்றின் காலில் அகப்பட்ட சிறு செடியானது மிதிபட்டு அங்குமிங்கும் அலைபட்டுக் களையப்படாது கிடக்கும். அதுபோல ஐம்புலனாசையிலகப்பட்டுத் துயருற்றும் உடல் நீங்காமை குறிப்பித்தவாறு. வினைப்போகத்தால் உடல் நீங்காமையின் அடிகள் தம்மை 'வினையேன்' என்றார். கன்னல் - கரும்பு. இங்கு அதன் சாற்றினைக் குறிக்கும். சர்க்கரை என்பாரும் உளர். அமுதம், மருந்தையும் தேவருணவையும் குறிக்கும். சர்க்கரைப் பொங்கல் முதலிய இனிய உணவுகளையும் அமுதம் என்பாரும் உளர். அமுது என்ற சொல், சோற்றினைக் குறித்தல் காண்க. தூறு - சிறு செடி, குறு என்ற சொல் மிகச் சிறுமையைக் குறிக்கும். ஒண்மை - ஒளி, அழகு.*

**126.** ஒண்மைய னேதிரு நீற்றைஉத் தூளித் தொளிமிளிரும்
வெண்மை யனேவிட் டிடுதிகண் டாய்மெய் யடியவர்கட்
கண்மைய னேயென்றுஞ் சேயாய் பிறர்க்கறி தற்கரி தாம்
பெண்மைய னேதொன்மை ஆண்மையனே அலிப்பெற்றியனே. **22**

***உரை :-*** *உண்மை அன்பர்களுக்கு அணித்தாயுள்ளவனே, ஏனையோர்க்கு எப்பொழுதும் தூரமாயிருப்பவனே, இன்ன வடிவம்தான் என்று அறியவொண்ணாதபடி, பெண் வடிவனாயும் பழைய ஆண் வடிவனாயும் அலிவடிவனாயுமிருக்குந் தன்மையனே, அழகனே, திரு நீற்றை உடம்பு முழுதும் பூசி அதன் ஒளி விளங்குவதனாலாகிய வெண்ணிறமுடையவனே, என்னைக் கை விட்டிடாதே.*

***குறிப்பு :-*** *ஒண்மை - அழகு; ஒளித்தன்மை என்றும் கூறலாம். உத்தூளித்து - நீர் கலவாத பொடியைப் பூசி, தொன்மை என்பதைப் பெண்மை, அலி என்றவற்றிற்குங் கூட்டலாம். உயிர்கள் நினைந்த வடிவின்படி அவர்களுக்குத் தோன்றுதலின் மூவகையுங் கூறினர். அது அநாதியே நிகழ்தலின் தொன்மை என்றார். பெற்றி - தன்மை. மூன்றாம் அடியில், 'பிறர்க்கு, என்றுஞ் சேயாய்' என மாற்றுக.*

127. பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச் சுருக்குமன்பின்
வெற்றடி யேனை விடுதிகண் டாய்விடி லோகெடுவேன்
மற்றடி யேன்தன்னைத் தாங்குநர் இல்லையென் வாழ்முதலே
உற்றடி யேன்மிகத் தேறிநின் றேன்எனக் குள்ளவனே. 23

***உரைநடை :-*** *'என் வாழ் முதலே...... ளவனே, பெற்றது.... கண்டாய், விடிலோ மற்றடியேன்.... இல்லை, கெடுவேன்' என அமைக்க.*

***உரை :-*** *எனது வாழ்க்கைக்குக் காரணமான முதற்பொருளே; (உன்னையடைந்து) அடியேன் அதிகமாகத் தெளிவெய்தி நின்றேன். எனது உள்ளத்தினனாயிருப்பவனே, அடியேனுக்குக் கிடைத்த இவ்வுடம்பைக் கொண்டு தவறுகளையே வளர்த்துச் சுருங்கிய அன்புடைய பயனற்ற அடியேனைக் கைவிட்டிடாதே. நீ கைவிடின் அடியேனை வேறு தாங்குகின்றவர்களில்லை. அதனாற் கெட்டொழிவேன்.*

***குறிப்பு :-*** *பெற்றது - பெற்றவுடம்பு. உற்று - திருவடியடைந்து. தேறி - தெளிந்து, நம்பி. உள்ளவன் - உள்ளத்தவன், உள்ளீடானவன். ஆதாரமாயிப்பவன், உயிர்க்குயிராயிருப்பவன் என்றலுமொன்று.*

128. உள்ளன வேறிற்க இல்லன செய்யு மையல்துழனி
வெள்ளன் அலேனை விடுதிகண் டாய்வியன் மாத்தடக்கைப்
பொள்ளல்நல் வேழத் துரியாய் புலன்நின்கட் போதலொட்டா
மெள்ளனவே மொய்க்கும் நெய்க்குடந் தன்னை எறும்பெனவே. 24

***உரை :-*** *அகன்ற பெரிய நீண்ட துதிக்கையின்கண் பொந்தினை யுடைய அழகிய யானையின் தோலையுடையவனே, ஐம்புலன்களும் என்னை நெய்க்குடத்தை எறும்பு மொய்ப்பதுபோல பையப்பைய உன்பாற் செல்லவொட்டாமல் தடுப்பதற்காக நெருங்கிச் சூழ்கின்றன. அதனால் உண்மையானவை செய்வன விடுத்து பொய்யனவற்றையே செய்யும் மயக்க ஆரவாரப் பெருக்கினேன். தீயனாகிய என்னைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *இல்லன - என்பது நிலையாதனவற்றைக் குறிக்கும். துழனி - ஆரவாரம். வெள்ளன் - வெள்ளத்தையுடையவன். பெருக்கினன். அலேனை - அல்லாதவனை, அல் ஏனை எனப் பிரித்து இருள் உடையேனை என்பாரும் உளர். அல் - இருள். வியன் - அகன்ற, மா - பெரிய. தடக்கை - நீண்ட கை. புலன் - ஐம்புல அவா. ஆசைகள் ஒவ்வொன்றாக ஏற்பட்டு மிகப் பெருந்துன்பம் விளைத்தலின்,*

*'மெள்ளனவே மொய்க்கு' மென்றார். பற்றி விடமுடியாத உணவாகின்ற காரணத்தால் 'நெய்க்குட' மென்றார். சிறிதாயிருப்பினும் கடுப்புமிக விளைத்தலால் 'எறும்', பென்றார். வியன், மா, தட இம்மூன்றும் பெருமை என்னும் பொருளைத் தரும் உரிச்சொற்களாம். ஒரு பொருட் பன்மொழி.*

**129.** எறும்பிடை நாங்கூ ழெனப்புல னாலரிப் புண்டலந்த
வெறுந்தமி யேனை விடுதிகண் டாய்வெய்ய கூற்றொடுங்க
உறுங்கடிப் போதவை யேயுணர்வுற்றவர் உம்பரும்பர்
பெறும்பத மேயடி யார்பெய ராத பெருமையனே. **25**

***உரை :-*** *கொடிய கூற்றுவன் அடங்கும்படியாக அவன் மேற் பொருந்தும் மணமலர் போன்ற திருவடிகளையே அழுந்தி அறிந்தவர்களுக்கும் வானவர்களுக்கும் மேலானதாகப் பெறும் சாயுச்சிய பதவிகளை அளிப்பவனே, அடியார்கள் தன்னைவிட்டு நீங்காத பெருமை யுடையவனே, எறும்புகள் பலவற்றினிடையே அகப்பட்ட நாகப்பூச்சி போல, ஐம்புலனால் அரித்துத் தின்னப்பட்டுத் துன்புற்ற பயனில்லாத தனியேனைக் கைவிட்டு விடாதே.*

***குறிப்பு :-*** *நாங்கூழ் - நாகப்பூச்சி; பூநாகம் என்றுங் கூறுப. இது எலும்பு இல்லாத மெல்லிய தசைத்திரளாலான உடலுடையது. இது எறும்புகளின் நடுவில் அகப்பட்டால் எறும்புகள் இதனைச் சல்லடைக் கண்ணாக அரித்துத் தின்றுவிடும். அலந்த-வருந்தின. கடிப்போது என்பதற்கு, கடிதலையுடைய திருவடிமலர் என்றும் பொருள் கொள்வர். கடி என்பது மணத்தை உணர்த்தும். உம்பர், உம்பர் - மேலிடத்திற்கு மேலான. பதம் - நிலை, பதவி.*

**130. பெருநீ ரறச்சிறு மீன்துவண் டாங்கு நினைப்பிரிந்த
வெருநீர்மை யேனை விடுதிகண் டாய்வியன் கங்கைபொங்கி
வருநீர் மடுவுள் மலைச்சிறு தோணி வடிவின் வெள்ளைக்
குருநீர் மதிபொதி யுஞ்சடை வானக் கொழுமணியே. 26**

***உரை :-*** *பெரிய கங்கை வெள்ளமானது பொங்கிவந்த மருங்குளத்துள் எதிர்த்து நிற்கும் சிறு தோணியின் தோற்றத்தை யுடைய வெள்ளை நிறத் தண்திங்கள் தவழும் சடையினையணிந்த பரமாகாசத்தில் இயங்கும் வளம் பொருந்திய மாணிக்கமே. மிகுதியான நீர்வற்றி வடிய, குறைந்த நீரில் சிறு மீனானது வாடிக் கிடந்தாற் போல, உன்னைப் பிரிந்த விடத்தே அச்சுற்று வாடிநிற்குந் தன்மையேனைக் கைவிட்டுவிடாதே.*

*குறிப்பு :-* *துவண்டாங்கு - துவளுதல் போல. துவளுதல் - அசைதல், வாடுதல். வெரு நீர்மை - வெருவும் நீர்மை. வெருவுதல் - அஞ்சுதல். மிகப்பெரிதாகப் பொங்கிவந்த கங்கையானது இறைவனது சடாபாரத்துள் அசைவின்றி அடங்கினமையின் சடையிலுள்ள கங்கையை நீர்மடுவுக்கு உவமித்தார். மலை - மலைதல். எதிர்த்தல், வெள்ளம் வரும்பொழுது அங்குமிங்கும் அலைதலையே, மலைதல் என்றார். குரு - நிறம். நீர் - தண்மை.*

**131.** **கொழுமணி யேர்நகை யார்கொங்கைக் குன்றிடைச் சென்றுகுன்றி,**
**விழுமடி யேனை விடுதிகண் டாய்மெய்ம் முழுதுங்கம்பித்,**
**தழுமடி யாரிடை யார்த்துவைத் தாட் கொண்டருளி யென்னைக்,**
**கழுமணி யேஇன்னுங் காட்டு கண்டாய்நின் புலன்கழலே. 27**

***உரை :-*** *உடல் முழுவதும் புளகங் கொண்டு நடுநடுங்கி அழு தொழும் அடியார் நடுவே என்னைப் பொருத்தி வைத்து ஆட்கொண்டருளி இன்னுமொருமுறை என்னைத் தூய்மைப் படுத்துகின்ற மாணிக்கமே! இன்னுமொரு முறை உன்னுடைய அறிவு மயமாகிய திருவடியைக் காட்டியருள்க. முத்தின் அழகையுடைய பல்லினராகிய மாதரது நகிலென்னும் மலைமிசை அறிவு குறைந்து போய் விழுகின்ற அடியேனை கைவிட்டிடாதே. மாதர் கூட்டத்தினின்றும் பிரித்தது முதல் உபகாரம். அடியார் கூட்டத்திருத்தியது இரண்டாம் உபகாரம். ஆட்கொண்டருளியது மூன்றாம் உபகாரம்.*

*குறிப்பு :-* *கொழுமணி - முத்து. நகைக்கு உவமித்தமையால் மணி என்ற பொதுச் சொல்முத்தைக் குறித்தது. கொழு - செழிப்பான. ஏர் - அழகு. குன்றி - குறைந்து. அறிவு வியாபகங் குறையுற்று; கம்பித்து - நடுங்கி. ஆர்த்து - பொருத்தி. கழு - கழுவு; புலன் - அறிவு.*

**132.** **புலன்கள் திகைப்பிக்க யானுந் திகைத்திங்கொர் பொய்ந் நெறிக்கே,**
**விலங்குகின் றேனைவிடு திகண்டாய் விண்ணும் மண்ணுமெல்லாங்,**
**கலங்கமுந் நீர்நஞ் சமுதுசெய் தாய்கருணாகரனே,**
**துலங்குகின் றேன்அடி யேன்உடை யாயென் தொழுகுலமே. 28**

***உரை :-*** *விண்ணுலகமும் மண்ணுலகமும் முழுவதும் அஞ்சிக் கலக்கமுற்றபோது கடலிலெழுந்த விடத்தை அமுதாக உண்டவனே, அருட்கடலே (பாசத்திற்கு அஞ்சி) நடுங்குவேனாகிய அடியேனை*

அடிமையாக உடையவனே, யான் வணங்கும் இனத்தவனாய் வந்தவனே, ஐம்புலன்கள் என்னைத் திகிலடையும்படி செய்ய, யானும் திகிலடைந்து இவ்விடத்து ஒரு நிலையற்ற வழியின் கண்ணே விலகிச் செல்வேனைக் கைவிட்டிடாதே.

**குறிப்பு :-** முந்நீர் - கடல், ஆற்றுநீர், மழைநீர், ஊற்றுநீர் என்ற மூன்றும் உடைமையான் முந்நீர் என்ப. அது படைத்தல், காத்தல் அழித்தல் இம்மூன்றினையும் செய்யவல்லதென்ப. துலங்குகின்றேன் - துளங்குகின்றேன். துலங்குதல் - அசைதல். தொழுகுலம் - வணங்கத் தக்க இனம். இறைவன் வேதியனாக ஆட்கொள்ள வந்தமையால் வேதியனே என்றும் அச்சொற்றொடர்க்குப் பொருள் கொள்ப. இறைவன் வழிபடப்படும் இனத்தவனாயும் உயிர்கள் வழிபடும் இனத்தவராயும் இருப்பதைக் காண்க. குலம் - கோயில் என்பாருமுளர். தேவர் கலக்கத்தை நஞ்சுண்டு நீக்கியதைப் போலத் தம்முடைய கலக்கத்தையும் பாசநஞ்சினைப் போக்கி, நீக்கி அருளல் வேண்டும் என்று இதனுட் குறிப்பித்தார். கருணாகரன் - கருணைக்கு நிலைய மானவன்; சுரங்கம்; தொழுகுலம் - தெய்வம். ஆகரம் - கடல்.

**133.** **குலங்களைந் தாய்களைந்தாய் என்னைக் குற்றங்கொற்றச்சிலை யாம்,**
**விலங்கல்எந்தாய் விட்டிடுதிகண்டாய் பொன்னின் மின்னு கொன்றை,**
**அலங்கலந் தாமரை மேனியப் பாவொப் பிலாதவனே,**
**மலங்கள்ஐந் தாற்சுழல் வன் தயி ரிற்பொரு மத்துறவே. 29**

**உரை :-** பொன்போல மின்னுகின்ற கொன்றை மாலையணிந்த அழகிய செந்தாமரை மேனியையுடைய அப்பனே, யாருந் தனக்கு நிகரில்லாதவனே, கடைகின்ற மத்துப் பொருந்தினவுடன் சுழல்கின்ற தயிர் போல, என்னைப் பற்றிய ஐந்து பாசங்களாலும் அலைவுற்று வருந்துவேனாகிய என்னுடைய குற்றக் கூட்டங்களை யொழித்தவனே, எனது பசுபோதத்தையும் நீக்கினாய், வெற்றி வில்லாக மேருவையுடைய எந்தையே கைவிட்டிடாதே.

**குறிப்பு :-** 'சுழல்வன்' என்பதை 'குற்றம்' என்பதனோடு முடிக்க. குலம் - கூட்டம். 'குற்றம்' என்பதைக் குலம் என்பதனோடு சேர்க்க. சாதியென்று பொருள் கொண்டு சாதிப்பற்று முதலியவற்றைக் களைந்தாய் என்றும் பொருள் கொள்ளலாம். குற்றம் களைந்தாய், என்று வேறு பிரித்தும் பொருள் கொள்ளுப. ஐந்து மலங்களாவன; ஆணவம், கன்மம், மாயை, வைந்தவம் அல்லது மாயேயம், திரோதாயி.

| | | |
|---|---|---|
| ஆணவம் | - | உயிரின் வியாபகத்தை மறைக்கும் மூல மலம். |
| கன்மம் | - | புண்ணிய பாவங்களாக நிகழ்ந்து இன்ப துன்பங்களை விளைவிப்பது. |
| மாயை | - | வினைகளுக்கீடாக உயிருக்கு உடல், உலகு முதலியவற்றை உதவுவது. |
| மாயேயம் | - | மாயையின் காரியமான உடல், உலகு. |
| திரோதாயி | - | உயிரோடு ஒன்றி நின்று மலங்களைத் தொழிற்படுத்தும் மறைப்புச் சத்தி. |

**134.** மத்துறு தண்தயி ரிற்புலன் தீக்கது வக்கலங்கி
வித்துறு வேனை விடுதிகண் டாய்வெண் டலைமிலைச்சிக்
கொத்துறு போது மிலைந்து குடர்நெடு மாலைசுற்றித்
தத்துறு நீறுட னாரச்செஞ் சாந்தணி சச்சையனே. 30

***உரை :-*** *வெள்ளிய தலையை யணிந்து திரட்சியுடைய கொன்றைப் போதினைச் சூடி குடராகிய நீண்ட தோள் மாலையைக் கழுத்தினைச் சுற்றி அணிந்து, பரந்து விளங்குகின்ற திருநீற்றுடன் சந்தனத்தின் சிவந்த குழம்பினையணிந்த இளமையுடைய தலைவனே மத்துப் பொருந்திய குளிர்ந்த கட்டித்தயிர் உடைதல்போல, ஐம்புலனாகிய தீப்பற்ற அதனாற்கலங்கி (அக்கலக்கத்தில் வேரூன்று கின்ற) வித்தின் தன்மை அடைவேனைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *வித்து - விதை. விதையின் தன்மை. கொத்து - திரட்சி. குடர் - ஒடுங்கிய தேவர்களது குடர். அல்லது குடர் போன்ற நெடிய மாலை. மிலைச்சி - தலையில் சூடி. தத்து - தத்துதல்; பரந்து விளங்குதல். ஆரம் - சந்தனம். சச்சையன் - சச்சு + ஐயன். சச்சு, நுட்பம், இளமை. சச்சு என்பது சத்து என்பதன் போலியாகக் கொண்டு, மெய்ப்பொருளாகிய ஐயனே என்பதுமுண்டு. சங்காரக் கடவுளாதலின், 'குடர்நெடுமாலை சுற்றி' என்றார். வெண்டலை, தாருகவன முனிவரால் விடுக்கப்பட்டது.*

**135.** **சச்சைய னேமிக்க தண்புனல் விண்கால் நிலம்நெருப்பாம்**
**விச்சைய னேவிட் டிடுதிகண் டாய்வொளி யாய்கரியாய்**
**பச்சைய னேசெய்ய மேனிய னேயொண் படஅரவக்**
**கச்சைய னேகடந் தாய்தடந் தாள அடற்கரியே.** **31**

***உரைநடை :-*** *இறுதியடியில் தடந்தாள அடற்கரியே கடந்தாய் என மாறுக.*

***உரை :-*** *வெண்ணிறமுடையாய், கருநிறமுடையாய், பச்சை நிறமுடையாய், சிவந்த திருமேனியாய், ஒளி விளங்கும் படத்தை யுடைய பாம்பினை அரைக்கச்சாக அணிந்தவனே, அகன்ற அடியை யுடைய வலிமைமிக்க யானை வடிவுடைய கயாசுரனை வென்றவனே, மிக நுட்பமான மெய்ப்பொருளாய தலைவனே, மிக்க குளிர்ச்சியுடைய நீர்; வான், காற்று, நிலம், நெருப்பு என்பவற்றோடு கலந்து அவையாய வியப்புச் செயலுடையவனே, கைவிட்டிடாதே. மிக்க தண்புனல் - காணப்படும் உலகில் 3/4 பங்கு நீர். 1/4 பங்கு உலகம்.*

***குறிப்பு :-*** *மிக்க - வெளிப்படையாய; அறிவு நுண்பொருள் அத்துவிதமாய்ப் பூதப்பொருளிற் கலந்து அவையாய்த் தோன்றல் வியத்தகு செயல் என்பார், 'விச்சையனே' என்றார். புகை நிறம், 'கரியாய்' என்பதனு ளடங்குதலின், நிறங்களைந்துங் கூறியவாறாம். 'நிறங்களோரைந் துடையாய்' என்றதுங் காண்க. கயாசுரன் கதை முற்கூறப்பட்டது. கச்சை - சர்ச்சை; ஆராய்ச்சி - தத்துவ தரிசனத்தால் துணிந்து தெளிதல். விச்சை - ஒருவனே எல்லாமாக விளங்கும் அற்புதம்.*

**136.** அடற்கரி போல்ஐம் புலன்களுக் கஞ்சி அழிந்தஎன்னை
விடற்கரி யாய்விட் டிடுதிகண் டாய்விழுத் தொண்டர்க்கல்லால்
தொடற்கரி யாய்சுடர் மாமணி யேசுடு தீச்சுழலக்
கடற்கரி தாயெழு நஞ்சமு தாக்குங் கறைக்கண்டனே. **32**

***உரை :-*** *மேன்மையான அடியார்களுக்கல்லது ஏனையோர்க்குப் பற்றுதற்கரியவனே, ஒளிகாலும் பெரிய மாணிக்கமே, கடல் சுடுந்தீயாகிய வடவையும் நிலை கலங்க, திருப்பாற்கடலிலே எதிர் பாராதபடி அருமையா யெழுந்த விடத்தை அமுதமாக்கிய நீல கண்டப் பெருமானே, தவிர்தற்குக் கூடாதவனே, வலிய யானை போன்ற ஐம்பொறிப் பற்றுக்குப் பயந்து உள்ளமொடுங்கிய என்னைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *அழிந்த - மனம் தளர்ந்த. விடற்கரியாய் - பற்றி விடக்கூடாத அருமையுடையவனே. சுடுதீ - வடவை. வடவைத்தீ, கடலில் நீர் மிகாது வற்றுதலை நிகழ்த்தலின் 'சுடுதீ' என்றார். கடற்கு - கடலிலே. கறைக்கண்டனே என்பதற்குப் பின் 'விடற் கரியாய்' என்பதற்குக் கருமை நிறமுடைய என்று பொருள் கொள்ளுக.*

**137.** கண்டது செய்து கருணைமட் டுப்பரு கிக்களித்து
மிண்டுகின் றேனை விடுதிகண் டாய்நின் விரைமலர்த்தாள்

பண்டுதந் தாற்போற் பணித்துப் பணிசெயக் கூவித்தென்னைக்
கொண்டெடென்ளந் தாய்களை யாய்களை யாய குதுகுதுப்பே. 33

***உரைநடை :-*** *'எந்தாய்' என்பதை முதலிற் கொள்க. முதலடியில் 'கருணைக்களித்து, கண்டது செய்து' என மாறுக.*

***உரை :-*** *எனது தந்தையே! நினது அருளாகிய மதுவைக் குடித்து (நிகழ்வினை யறியாது) செருக்கி (மனதிற்குத்) தோன்றியதைச் செய்து மதமிஞ்சிப் போகின்ற என்னைக் கைவிட்டிடாதே. உனது மணநிறைந்த திருவடிக்கமலங்களை முன் கொடுத்தருளியதுபோல (க்கொடுத்து) என்னைத் தாழ்மையனாக்கி உன் திருத்தொண்டினை இயற்றுமாறு அழைப்பித்து என்னை ஏற்றுக்கொண்டு வீடுபேற்றிற்கு இடுக்கணாயுள்ள ஆசையை வேரறக் களைந்தருள்க. அவாவை அகற்றித் திருவடிமலரைத் தந்தருளுக.*

***குறிப்பு :-*** *மட்டு - தேன், மது. 'ஒருவனை மதியா துறாமைகள் பேசி' என வன்தொண்டர் கூறிய கருத்தை ஒத்து நோக்குக. மிண்டுதல் - மதத்தாற் பொருதல். பணித்து - பணிவித்து. கூவுவித்து என்பது, 'கூவித்து' என மருவிற்று. களை - இடுக்கண். பிராரத்தமாகிய நிகழ்வினைக் கஞ்சி, இறைபணி நில்லாமையாலுளதாந் தற்போதத்தைக் களைந்தருள்க என்றார். குதுகுதுப்பு - ஆசை மிகுதியால் மனம் ஒருநிலைப்படாதும் செய்வதறியாதும் பரபரத்தல். இது இந்நிலையை விளக்கும் ஆசைக்கே வழங்குவதாயிற்று.*

**138.** குதுகுதுப் பின்றிநின்(று) என்குறிப் பேசெய்து நின்குறிப்பில்
விதுவிதுப் பேனை விடுதிகண் டாய்விரை யார்ந்தினிய
மதுமதுப் போன்றென்னை வாழைப் பழத்தின் மனங்கனிவித்
தெதிர்வதெப் போது பயில்விக் கயிலைப் பரம்பரனே. **34**

***உரைநடை :-*** *பயில்வி கயிலை... பரனே, குதுகுது.... கண்டாய். வாழை..... கனிவித்த. விரை..... போன்று எப்போது எதிர்வது என அமைக்க.*

***உரை :-*** *மலர்பொருந்துங் கயிலையில் வீற்றிருக்கும் மேலோர்க்கு மேலோனே, எனது எண்ணத்தையே நிறைவேற்றி, அதனால் மகிழ்ச்சியின்றி நின்று, உனது திருவுள்ளக் குறிப்பை நாடி அதனை அறிய விரைகின்றேனை நீ கைவிட்டிடாதே. நீ வாழைக் கனியைப் பழுக்கவைத்தாற் போல என்னை உருக்க முடையனாய்ச் செய்து (நல்ல) மணம்பொருந்திய இனிய தேனொழுக்குப் போல எப்போது நீ எனக்கு காட்சி எதிர்ப்படுதல் நிகழற்பாலது.*

***குறிப்பு :-*** *'குறிப்பில்' என்பதற்குக் 'குறிப்பினை இல்லாத' என்றும் பொருள் கொள்ளலாம். விதுவிதுப்பு - விரைதல், ஆசைப்படுதல், பரபரத்தல். மது - மது, என்பது தேனொழுக்கினைக் குறித்தது. வாசனையுடையதேன், அஃதில்லாத தேனிற் கலந்தாற் போல. இயக்குங் கடவுள் இயங்குமுயிரிடைக் கலத்தல் கூறப்பட்ட தென்றலு மொன்று. இரண்டுஞ் சித்துப் பொருளாதல் பற்றித் தேனென்றா ரென்ப. வாழைக் கனியானது, தானாக மெதுவாகக் கனிதலும், புகை மூட்டத்திற் கனிதலும் உண்டு. தன்னைப் பழுக்கச் செய்ய வேண்டுமென மனம் அங்ஙனம் பக்குவப்படுதலைக் குறித்தனர். பயில்வி - பயிற்று; வீபயில் - மலர் பொருந்து. பயில்விக் கயிலை - வி பயில் கயிலை எனக் கூட்டி விண்ணிற் பயிலுகின்ற கயிலை என்பாரும் உளர்.*

**139.** பரம்பர னேநின் பழஅடி யாரொடும் என்படிறு
விரும்(பு)அர னேவிட்டிடுதிகண் டாய்மென் முயற்கறையின்
அரும்(பு)அர நேர்வைத் தணிந்தாய் பிறவி ஐவாயரவம்
பொரும்பெரு மான்வினை யேன்மனம் அஞ்சிப் பொதும்புறவே. **35**

***உரைநடை :-*** *'பிறவி' என்பதற்குமுன் 'வினையேன்.... புறவே' என்பதை அமைக்க. பரம்பரனே..... கண்டாய்.*

***உரை :-*** *மெல்லிய, முயல் போன்ற களங்கத்தையுடைய இளம் பிறையையும் பாம்பையும் சமமாகச் சடையிலமர்த்தி அவற்றைத் தலைக்கணியாகக் கொண்டவனே, தீவினையுடையேன் உள்ளம் நடுங்கி ஒரு மறைவிடத்தை அடையும்படியாகப் பிறவிக் கேதுவாகிய ஐம்புலனாகிய ஐந்து வாயையுடைய பாம்பானது மலைகின்றது. பெருந்தகையானே, மேலோர்க்கும் மேலோனே, உனது பழ வடியாரோடு வஞ்சனையுடைய என்னையும் ஆட்கொள்ள விரும்பிய பாசநீக்க முதல்வனே, என்னைக் கைவிட்டிடாதே. நான் நெறி தவறி நடக்கக் காரணம் புலன்களாகிய 5 தசைகளையுடைய பிறவியாகிய பாம்பு பொருதலேயாம். என் பிழை அன்று.*

***குறிப்பு :-*** *என்படிறு, 'படிறுஎன்' என மாறி, 'படிறுடைய என்னை' என்று பொருள் கொள்ளுக. என் - என்னை என்பதன் கடைக்குறை. 'என்படிறு' என்பதற்கு எனது வஞ்சனை, என்று பொருள் கோடலுமுண்டு. அரன் - பாசத்தை யழிப்பவன். கறை - களங்கம், சந்திரனிலுள்ள கறுப்பு, முயல்போலுதலின், அது 'முயற்கறை' என்னப்பட்டது. அரும்பு - தோற்ற நிலை, இங்கே அது பிறையை யுணர்த்திற்று. அர - அரவு - பாம்பு. நேர் - சமமாக, பொரும் -*

*சண்டையிடும். பொதும்பு - மரச்செறிவு, பொந்து, 'புகலிடம்' என்றும் பொருள் கொள்ளலாம். பகைத்தன்மை நீக்கி பாம்பையும் ஆட்கொள்ளும் தங்களுக்கு என் வஞ்சம் போக்கி ஆட்கொள்ளுதல் இயலாத ஒரு காரியமன்று எனக் குறிப்பித்தவாறாம்.*

140. பொதும்புறு தீப்போற் புகைந்தெரி யப்புலன் தீக்கதுவ
வெதும்புறு வேனை விடுதிகண் டாய்விரை யார்நறவந்
ததும்பும் மந்தாரத்தில் தாரம் பயின்றுமந் தம்முரல்வண்(டு)
அதும்புங் கொழுந்தேன் அவிர்சடை வானத்தடலரைசே. 36

***உரைநடை :-*** *வாசனை பொருந்திய தேன் நிறைந்த மந்தார மலரிலே (ஏழிசையில்) தாரமாகிய வல்லிசையைப் பழகிப் பின் மெல்லோசையை ஒலிக்கின்ற வண்டானது ஒதுங்கித்திளைக்கும், வளம் மிக்க தேன் பொழிகின்ற மின்னுஞ் சடையினையுடைய, சிதாகாய நாட்டின் வலிமிக்க வேந்தனே! மரச்செறிவிற் பொருந்திய நெருப்புப் போலப் புகைவீசி எரியும் ஐம்புலனாகிய தீ என்னைப் பற்றவே, அதனால் (உள்ளத்துயராகிய) வெப்பமுறுகின்ற என்னை விட்டிடாதே. மந்தாரம் - தேவதருக்கள் ஐந்தனுள் ஒன்று. இங்கு ஆகுபெயராக அதன் மலரை உணர்த்திற்று. இத்திருப்பாட்டில் ஐம்புலத்தீ கொளுத்தும் கொடுமையை விண்ணப்பிக்கின்றார்.*

***குறிப்பு :-*** *மந்தார மலரைத் திறப்பதற்கு வல்லோசை வேண்டும். பொழிகின்ற தேனைப் பருகுவதற்கு மெல்லோசை போதும். முதலில் சடையிலுள்ள மந்தாரை முகையைத் திறந்து தேன் பொழிவித்து, அத்தேனைத் தேருங்கால், மந்தவோசையை ஒலிக்குமென்று கருதுக. முரலுதல் - ஒலித்தல். அதும்புதல் - ஒதுங்குதல், அழுந்துதல். உடலிலுள்ள ஐம்புலன்கள், மரச்செறிவிலுள்ள தீப்போலும். தீ முதலிற் புகைந்து, பின் மிளிர்வது, மெள்ள மெள்ள ஐம்புலன்கள் மனதையு முயிரையும் பற்றுதற்குவமையாம். வானம் - பரமாகாசம். அதற்கு முதல்வன் கடவுளே யாதலின், அம்முதன்மை யுடையானை 'அடலரசே' என்றார். பொதும்பு - மரப்பொந்து. கொழுந்தேன் - செழுமையான தேன் என்னும் வண்டுகள்.*

**141. அரைசே அறியாச்சிறியேன் பிழைக்கஞ்ச லென்னின் அல்லால்,
விரைசேர் முடியாய் விடுதிகண் டாய்வெண் நகைக்கருங்கண்,
திரைசேர் மடந்தை மணந்த திருப்பொற் பதப்புயங்கா,
வரைசேர்ந் தடர்ந்தென்ன வல்வினை தான்வந் தடர்வனவே. 37**

***உரை:-*** *வெள்ளிய பல்லினையும் கரிய கண்ணையும் உடைய*

*கடல்கெழு செல்வியாகிய திருமகள் வணங்கிப் பொருந்திய அழகிய திருப்பாதங்களையுடைய பாம்பணிந்த பெருமானே, மலைகள் ஒன்று சேர்ந்து தாக்கினாற்போல கொடிய வினைப் பயன்கள் வந்து தாக்குகின்றன. அரசனே, அறிவில்லாத சிறியேன் குற்றத்தைப் பொறுத்து 'அஞ்சாதே' யென்று நீ அருள் செய்தாலன்றி (உய்யேன்) மணங் கலந்த சடைமுடியாய், என்னைக் கைவிட்டிடாதே. துன்பங்கள் மலைபோல் ஒருங்கு திரண்டு வருகின்றன என்பது பிரபஞ்ச வைராக்கியம்.*

***குறிப்பு :-*** *திரு - ஞானம். பொன் - செல்வம். திரை - கடல். கண்ணாகிய கடலெனக் கொண்டு, 'உமாதேவி மணந்த அழகிய பொன்மேனியுடைய' என்று பொருள் கொள்ளுவது முண்டு. முத்தித்திரு - பாதத்தில் வீற்றிருப்பதை இங்குக் குறித்ததாகவுங் கருதலாம். 'உய்யேன்' தொக்கு நின்றது. அம்மை திருவடியில் வழிபட்டதாகவுங் கூறலாம். புயங்கன் - பாம்பணியும் பரமன். இறைவன் திருவடி போக மோட்சங்களைத் தருதலால் "திருப்பொற் பதப்புயங்கா" என்கிறார்.*

**142.** **அடர்புல னால்நிற் பிரிந்தஞ்சி அஞ்சொல்நல் லார்அவர்தம்**
**விடர்விட லேனை விடுதிகண் டாய்விரிந் தேயெரியுஞ்**
**சுடரனை யாய்சுடு காட்டர சேதொழும் பர்க்கமுதே**
**தொடர்வரி யாய்தமி யேன்தனி நீக்குந் தனித்துணையே.** **38**

***உரை:-*** *பெருக்கமாய் விளங்குகின்ற சோதிப்பிழம்பைப் போன்றவனே! சுடுகாடாகிய சங்கார முடிவின் முதலே, அடியார்க் கமுத மானவனே, உயிர் தனது வலியாற் றொடர்ந்து பற்றுதற்கருமை யானவனே, அடியேனுடைய தனிமையை நீக்கும் ஒப்பற்ற துணைவனே, என்னைத் தாக்குகின்ற ஐம்புல வேட்கையால், உன்னைப் பிரிந்து, பயந்து அழகிய மொழியுடைய பெண்டிர் குழுவாகிய காட்டினைக் கடந்து வருவதற்கியலாத என்னைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *விடர், காடு, மலைப்பிளவு; இங்கு - காமுகர்; தூர்த்தர் என்றும் பொருள் கொள்ளலாம். எங்கும் அறிவு மயமாய்ச் செறிதலின் 'விரிந்தே யுரியுஞ்சுடர்' என்றார். சுடுகாடென்பது எல்லாம் ஒடுங்கிய இடம். தனி - தனிமை. அஞ்சொல் - கேட்டற்கு இனிதாய், பயனால் தீதாயிருக்கும் அழகிய சொல். பேய்க்குப் பயந்தவன் புலிக் குகைக்குள் நுழைந்தது போல ஐம்புலன்களுக்கு அஞ்சிய யான் ஐம்புலன்கள் ஆரத்துய்க்கும் ஒரு பொருளாய மாதர் விடரைச் சேர்ந்தேன்.*

**143.** **தனித்துணை நீநிற்க யான்தருக் கித்தலை யால்நடந்த**
**வினைத்துணை யேனை விடுதிகண் டாய்வினை யேனுடைய**

மனத்துணையேஎன் தன்வாழ்முதலே எனக்கெய்ப்பில்வைப்பே
தினைத்துணை யேனும்பொறேன் துயராக்கையின் திண்வலையே. 39

***உரை:-*** *தீவினையேனுடைய உள்ளத்திற்குறுதி கொடுக்குந் துணையானவனே, எனது வாழ்விற்கு அடிப்படையான முதற் பொருளே, எனக்கு இளைத்த காலத்திற் பயன்படும் சேம நிதி போல்வானே, ஒப்பற்ற துணைவனாக நீ நிலைப்பாயிருக்குங் காலத்தே தற்போது உணர்ச்சியுற்று முறை மாறாக வொழுகின இரு வினையேனைக் கைவிட்டிடாதே. துயரத்தைத் தரும் உடம்பென்னுந் திண்ணிய வலையிற் கிடப்பதைத் தினையளவு நேரங்கூடப் பொறுக்க மாட்டேன். உடல் ஒரு வலை. வலையுள் அகப்பட்ட உயிர் சுதந்திரம் இழந்து வேடன் கையதாய் வருந்தும். உடலுள் அகப்பட்ட உயிர் வினைவயப்பட்டு உழலும். இந்த நிலையைத் தன்னால் பொறுக்க முடியாது என்கிறார்.*

***குறிப்பு :-*** *தருக்கி - செருக்குற்று. காலால் நடப்பதற்குத் தலையால் நடப்பது முறை மாறிய செய்கையாம். வினைத்துணை - வினையிரண்டு. 'தினைத்துணை' என்பதில், துணை - அளவு. யாக்கை எளிதிற் கழியாமையின், 'திண்' என்றார். தாம் முயன்று அதனைக் கடக்க இயலாமையின் 'வலை' என்றார். இறுதியடிக்கு இறுதியிற் பொருள் கொள்ளுக. வலையுள் அகப்பட்ட உயிர் வலி மிக்கதாயின் வலையை அறுத்துக் கொண்டு தப்பும். ஆனால் இவ்வுடலில் அகப்பட்ட உயிர் வினைக்கயிறு தானாக அறுந்தாலன்றி தப்ப இயலாதென்பதை "திண்வலையே" என்றதால் குறிப்பித்தார்.*

144. வலைத்தலை மான் அன்ன நோக்கியர் நோக்கின் வலையிற்பட்டு
மிலைத்தலைந் தேனை விடுதிகண் டாய்வெண் மதியின் <u>ஒற்றைக்</u>
<u>கலைத்தலை யாய்</u>கரு ணாகர னேகயி லாயமென்னும்
மலைத்தலை வாமலை யாள்மண வாளஎன் வாழ்முதலே. 40

***உரை:-*** *வெள்ளிய திங்களின் ஒரு கலையுடைய பிறையைத் தலையிலுடையாய், கருணைக் கிருப்பிடமானவனே, கயிலாயமென்னு மலையுச்சியிலிருக்கும் தலைவனே, இமயமலையுடைய உமையம்மை கணவ, எனது வாழ்க்கைக் காரணனே, வலையிடையகப்பட்ட மான்போன்ற மருட்சிப் பார்வையுடைய பெண்டிர் கண்வலையிற் சிக்கி (அவர் வழியை) மேற்கொண்டு திரிந்தேனைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *மிலைத்து - மயங்கி. தலை - இடம். ஆகரம் - இருப்பிடம். கருணாகரன் - கருணைக்கு இருப்பிடம். இறைவனை*

*ஒற்றைக்கலைத் தலையா என்றது இறைவன் அஞ்சி அடி அடைந்தாரைத் தலைமேல் தாங்கிக் காப்பவன் என்னும் கருணைத் திறத்தைக் காட்டுவது.*

**145.** முதலைச்செவ் வாய்ச்சியர் வேட்கைவெந் நீரிற் கடிப்பமூழ்கி
விதலைச்செய் வேனை விடுதிகண் டாய்விடக் கூன்மிடைந்த
சிதலைச் செய்கா யம்பொறேன்சிவ னேமுறையோ முறையோ
திதலைச்செய் பூண்முலை மங்கைபங் காளன் <u>சிவகதியே</u>. 41

***உரைநடை:-** திதலை... கதியே, சிவனே, முறையோ முறையோ, சிதலை...... பொறேன், வேட்கை வெந்நீரின் முதலை..... கடிப்ப மூழ்கி..... கண்டாய்.*

***உரை:-** தேமல் விளங்கும் நகையணிந்த நகிலுடைய அம்மை பாகனே, எனது இன்ப நெறியே, சிவபெருமானே, ஐயோ, ஐயோ! புலால் நாற்றமுடைய தசை நிறைந்த நோய்க் கிடனாய் உடம்பைத் தாங்கமாட்டேன். ஆசையாகிய வெப்பமுடைய நீர் நிலையில், சிவந்த வாயினையுடைய மாதராகிய முதலைகள் கடிக்கும் படியாக முழுகித் துன்பப்படுவேனைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-** வெந்நீர் - வெப்பமுடைய நீர்; விரும்பத்தக்க நீர்; விதலை - துன்பம், நடுக்கம். விடக்கு - புலால் நாற்றம். சிதலை - நோய். திதலை - தேமல். சிவகதி - வீடுபேறு. சமணரும் வீடுபேற்றைச் சிவகதி என்றே அழைப்பர்.*

**146.** கதியடி யேற்குன் கழல்தந் தருளவும் ஊன்கழியா
விதியடி யேனை விடுதிகண் டாய்வெண் தலைமுழையிற்
பதியுடை வாளரப் பார்த்திறை பைத்துச் சுருங்கஅஞ்சி
மதிநெடு நீரிற் குளித்தொளிக் குஞ்சடை மன்னவனே. 42

***உரை :-** வெண்டலையாகிய குகையினை யிருப்பிடமாகவுடைய ஒளி பொருந்திய பாம்பு, சந்திரனைப் பார்த்துச் சற்றுப் பட மெடுத்து அதனைச் சுருக்கிக் கொள்ளவும், பிறை அதனைப் பார்த்துப் பயந்து கங்கையாகிய நீர் நிலையில் மூழ்கி மறைந்து கொள்ளுஞ் சடையுடையவனே, அடியேனுக்கு உயர்ஞான நெறியை உன் திருவடிகள் கொடுத்தருளவும், உடல் நீங்கப்பெறா ஊழ்வினையுடைய என்னைக் கைவிட்டிடாதே. "வெண்டலை முழையிற் பதியுடை வாள் அர" - ஊன் கழிந்த பிரமனுடைய மண்டையோடு அதனை இறைவன் சடையில் தரித்துள்ளார். அதன்கண், காது, மூக்குத் துளைகளில் பாம்பு பதிவிருக்கிறது. முழை - துளை. கிடைத்தற்கரிய தேவாமுதம்*

*கிடைத்தும் வாயருகில் கொண்டு வந்தவுடன் குமட்டும் பித்த நோயாளி போல, திருவடி கிடைக்கப்பெற்றும், அதனை அனுபவிக்க விடாமல் என் பிராரத்தம் வாசனாமலமாக இருந்து தடை செய்கின்றது.*

***குறிப்பு :-*** *கதி - வீடு என்றுங் கூறுப. விதி - பிராரத்தவினை அல்லது நிகழ்வினை. முழை - குகை. இற்பதி - வீட்டிடம், தங்குமிடம். இறை - சிறிது. நெடுநீர் - கங்கை. பைத்து - படமெடுத்து. இறை பார்த்துச் சுருங்க, எனக்கொண்டு இறைவனைப் பார்த்துப் பயந்து சுருக்கிக் கொள்ளு மென்பாருமுளர்.*

**147.** **மன்னவ னேயொன்று மா(று)அறி யாச்சிறியேன்மகிழ்ச்சி**
**மின்னவ னேவிட் டிடுதிகண் டாய்மிக்க வேதமெய்ந்நூல்**
**சொன்னவ னேசொற் கழிந்தவ னேகழி யாத்தொழும்பர்**
**முன்னவ னேபின்னும் ஆனவ னேயிம் முழுதையுமே. 43**

***உரை :-*** *மேலாகிய வேதமாகிய உண்மை நூலினைப் பக்குவர்க்கு உணர்த்தியவனே, சொல்லினுக்கப்பாற் பட்டவனே, நீங்காத தொண்டர்க்கு முன்னிற்பவனே, அவர்கட்குப் பின்னின்று ஆதாரமானவனே, இப்படைப்பு முழுதும் ஆனவனே, அரசனே, உன்னை வந்து கலக்கும் விதத்தை அறியாத சிறியேனுக்குக் களிப்பு விளைக்குஞ் சோதியனே, என்னைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *கழியாத தொழும்பர் - நீங்காத அடியார். 'நீலாங்க மேனி நேரிழை யாளொடு மொழிந்த சீலாங்க வேதம்' என்று திருமூலர் செப்பியவாறே, இப்போது வழங்கும் வேதத்தின் மேலான தொன்றையே அடிகள் இங்கே குறிப்பித்ததோர்க, 'மாறு' என்பதற்குக் கைம்மாறு எனப் பொருள் கொண்டு, ஒரு 'கைம்மாறும் அறியாத' என்றும் பொருளுரைக்கலாம். பொது வேதமும் மிக்க (சிறப்பாகிய) மெய்ந் நூலாகிய ஆகமமு மெனப் பொருள் கொள்ளுவாருமுளர். 'ஆனவனே' என்பதைப் 'பின்னும்', 'முழுதையும்' என்பவற்றோடு தனித்தனி யியைக்க. வேத ஆகமங்களாகிய விதிகளைச் செய்தது மட்டுமின்றி அவைகளில் கூறிய வண்ணம் உயிர்கள் நடக்க மன்னவனாகவும் இருந்து தன் ஆணையின் வண்ணம் நடத்துகின்றான். எனவே மன்னவன்.*

**148.** **முழுதயில் வேற்கண் ணியரென்னும் மூரித் தழல்முழுகும்**
**விழுதனை யேனை விடுதிகண் டாய்நின் வெறிமலர்த்தாள்**
**தொழுது செல்வான்நற் றொழும்பரிற் கூட்டிடு சோத்தெம்பிரான்**
**பழுதுசெய் வேனை விடேலுடை யாய்உன்னைப் பாடுவனே. 44**

***உரை :-*** *கூரிய வேல்போன்ற கண்ணையுடையாரென்னப்படும் வலிமையுடைய தீயிலே முற்றிலும் விழுந்து உருகி யொழியும் வெண்ணெய் போன்ற என்னைக் கைவிட்டிடாதே. உனது தேன் ததும்புந் திருவடியை அடைதற்கு வணங்கிச் செல்லுஞ் சிதாகாயத் தொண்டரோடு என்னைச் சேர்த்துவிடு. இழிந்தேன் தலைவனே உனக்கு வணக்கம். குறையை முழுதும் உணர்ந்து வருந்துமென்னைக் கைவிடாதே.*

***குறிப்பு :-*** *'முழுது' என்பதை, முழுகும் என்பதனோடு சேர்க்க. அயில் - கூர்மை. 'எம்பிரான் சோத்து' என மாற்றுக. சோத்து - சோத்தம். இழிந்தோர் உயர்ந்தோர்க்குச் செய்யும் அஞ்சலி, மூரி - வலிமை. மகளிர் கண்ணிற்கு வேலை உவமை கூறுதல் இலக்கிய மரபு. விழுது - நெய். வெண்ணெயின் திரட்சி.*

**149.** பாடிற்றி லேன்பணியேன் மணிநீயொளித்தாய்க் குப்பச்சூன்
வீடிற்றி லேனை விடுதிகண் டாய்வியந் தாங்கலறித்
தேடிற்றிலேன் சிவனெவ்விடத் தான்எவர் கண்டனரென்(று)
ஓடிற்றி லேன்கிடந் துள்ளுரு கேன்நின் றுழைத்தனனே. **45**

***உரை :-*** *மாணிக்கமே, நின்புகழைப் பாடமாட்டேன், நின்னை வணங்கேன், எனக்கு ஒளித்துக் கொண்ட உன்பொருட்டு பசிய ஊனுடம்பைத் தொலைத்திடாத என்னைக் கைவிட்டிடாதே. அதிசய முற்றுக் கதறித் துதித்து, ஒளித்த சிவபெருமான் எவ்விடத்திலுள்ளான் யார் அவனைக் கண்டார்க ளென்று தேடமாட்டேன், நாடி ஓட மாட்டேன். வாடிச் செயலற்று உள்ளங் கசிந்து அன்புசெய்யேன். வீணேநின்று மனம் வருந்தினேன். இத்திருப்பாட்டில், இறைவனைப் பிரிந்ததால் உண்டான ஆற்றாமையைப் பலவகையால் சொல்லி இரங்குகிறார்.*

***குறிப்பு :-*** *மணி - மாணிக்கம். பச்சூன், பசிய ஊனென்றது நெருப்பிலே வேகாமல், விடப்படும் உடம்பை. வீடுதல் - அழித்தல், நீக்கல். உழைத்தல் - வருந்தல்.*

**150.** உழைதரு நோக்கியர் கொங்கைப் பலாப்பழத்(து) ஈயினொப்பாய்
விழைதரு வேனை விடுதிகண் டாய்விடின் வேலைநஞ்சுண்
மழைதரு கண்டன் குணமிலி மானிடன் தேய்மதியன்
பழைதரு மாபரன் என்றென் றறைவன் பழிப்பினையே. **46**

***உரை :-*** *மான்போன்ற பார்வையுடைய பெண்டிரது நகிலின் கண், பலாப்பழத்திலே மொய்க்கும் ஈயைபோல, ஆசைப்படுவேனைக்*

*கைவிட்டிடாதே. நீ கைவிடிலோ, விடத்தை உண்கின்ற மேகம் போன்ற கரிய கழுத்தையுடையவன், குணமில்லாதவன், மனிதன், குறைந்த அறிவுடையன், பண்டைப் பெரிய ஆண்டி, என்று அடிக்கடி உன் இகழ்ச்சியை எடுத்துரைப்பேன்.*

***குறிப்பு :-*** *உழை - மான்; பக்கம். முக்குணங்களையுங் கடந்தவன் இறைவன் ஆதலின், 'குணமிலி' என்றார். மானை இடக்கையில் தரித்தவனாதலின் - 'மானிடன்' என்றார். கலை குறைந்த பிறை மதியைத் தலையிலுடைமையால் 'தேய்மதி'யன்; பழமையான பெரிய மேலோன்- 'பழைதரு' மாபரன்; பரன் - 'அந்நியன்' பரதேசி என்றும் பொருள் கொள்ளலாம். பெரிய பரம்பொருள் என்றும் உரைப்பர். இவை நிந்தையாகவும், துதியாகவும் இருத்தலைக் காணலாம்.*

**151.பழிப்பில்நின் பாதப் பழந்தொழும் பெய்தி விழப்பழித்து**
**விழித்திருந் தேனை விடுதிகண் டாய்வெண் மணிப்பணிலங்**
**கொழித்துமந் தாரமந் தாகினி நுந்தும்பந் தப்பெருமை**
**தழிச்சிறை நீரிற் பிறைக்கலஞ் சேர்தரு தாரவனே. 47**

***உரை :-*** *வெள்ளிய மணியாகிய முத்தினையுஞ் சங்கினையுங் கொழித்துக் கொண்டு, மந்தார மலரைத் தள்ளிக் கொண்டு அழகும் பெருமையுந் தழுவிவரும், (சடையை) இடமாகக் கொண்ட வான் கங்கை நீரில் மதியாகிய பிறைத்தோணி சேர்கின்ற, வெற்றியுடையவனே, இகழ்ச்சிக் கிடமில்லாத நினது பழவடியார் கீழே விழுந்து வணங்க அவர்களைப் பழித்த என்னைக் கைவிட்டிடாதே. முத்து, நீரில் சிப்பியினின்றும், சங்கினின்றும், மீன் தலையினின்றும் பிறக்கும். அவற்றுள் சங்கின் முத்தே சிறந்தது. எனவே "முத்துப் பணிலம் கொழிக்கும் நீர்" என்றார்.*

***குறிப்பு :-*** *விழ - நழுவ. வெண்மணி - முத்து. பணிலம் - சங்கு. மந்தாகினி - ஆகாயகங்கை. அசையுந்தன்மை உடையதென கங்கைக்குப் பெயர். பழந்தொழும்பு - பழவடிமை. நுந்தும் - தள்ளும். பந்தம் - அழகு, தழி- தழீஇ-தழுவி. சிறை - இடம். கலம் - மரக்கலம். தார் - வெற்றிக்கறிகுறி; மாலை.*

**152. தாரகை போலும் தலைத்தலை மாலைத் தழலரப்பூண்**
**வீரஎன் தன்னை விடுதிகண் டாய்விடி லென்னைமிக்கார்**
**ஆரடி யான்என்னின் உத்தர கோசமங் கைக்கரசின்**
**சீரடி யார்அடி யானென்று நின்னைச் சிரிப்பிப்பனே. 48**

***உரை :-*** *விண் மீனாகிய நட்சத்திரம் போலும் வெண்டலை மாலையையும், தீயையும், பாம்பையும், தலையிற் பூண்ட வீரனே, என்னைக் கைவிட்டிடாதே. என்னைக் கைவிட்டால், பெரியோர், நீ யாருடைய அடிமை யென்று என்னைக் கேட்பின் உத்தரகோச மங்கை மன்னனின் சிறந்த அடியார்க் கடிமையே னென்று விடை கூறி உன்னை அவர்கள் சிரிக்கும்படி செய்வேன். தலை மாலை வெண்மையாக நட்சத்திரங்கள் போல ஒளிவிடுகின்றன என்பார் "தலை தாரகை போலும் தலை மாலை" என்றார்.*

***குறிப்பு :-*** *தீயினை இறைவன் அணிந்திருப்பதாகக் கூறாது, தீப் போன்ற கெடுதியைச் செய்யும் விடத்தையுடைய பாம்பென்று கூறுதலு முண்டு. மிருத்தியுஞ்சயதேவ தியானத்தில் நெருப்பினை இறைவன் சென்னியிற் றரித்திருப்பது கூறியுள்ளது. அப்படியே கபாலி வடிவத்தில் வெண்டலை மாலை அணிந்தமை கூறப்பட்டது. இச்செய்யுளுள் தகுதியற்றவன் அடியானா யிருப்பினும், கைவிடும்படியான அடிமையை யுடைமை இறைவனுக்கு நகையாடத்தக்க இழுக்கென்றார்.*

**153.** சிரிப்பிப்பன் சீறும்பிழைப்பைத் தொழும்பையும் ஈசற் கென்று,
விரிப்பிப்பன் என்னை விடுதிகண் டாய்விடின் வெங்கரியின்,
உரிப்பிச்சன் தோலுடைப் பிச்சன்நஞ் சூண்பிச்சன் ஊர்ச்சுடுகாட்,
டெரிப்பிச்சன் என்னையும் ஆளுடைப்பிச்சன் என் றேசுவனே. 49

***உரை :-*** *சினந்து தள்ளத் தக்க எனது வாழ்க்கையைப் பெரியர் நகையாடும்படி செய்வேன், எனது தொண்டும் இறைவனுக்கே என்று யார்க்குங்கூறி அதனை யாருமறியும்படி பரவச் செய்வேன். என்னைக் கைவிட்டிடாதே, விட்டால், கொடிய யானையின்றோலைப் பூண்ட பித்தன், புலித்தோலாடை யணிந்த பித்தன், விடத்தை யுண்கின்ற பித்தன், ஊர்க்குப் பொதுவாய மயானத்திலுறையும் பித்தன், தழலில் நிற்கும் பித்தன், தகாத என்னையும் அடிமைகொண்ட பித்தன் என்று உன்னை வைவேன்.*

***குறிப்பு :-*** *பித்தர் செயல், தோலைப் பூணல், தகாதன உண்ணல், மயானத்திற் புரளுதல் முதலியன ஆகலின், இவ்வாறு கூறினர். இகழ்வார் போற் புகழுதலாகிய அணி நிந்தாத்துதி என்பர் வட நூலார்.*

**154.** ஏசினும் யான்உன்னை ஏத்தினும் என்பிழைக் கேகுழைந்து
வேசறு வேனை விடுதிகண் டாய்செம் பவளவெற்பின்

தேசுடை யாய்என்னை ஆளுடை யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்
காய்சின ஆலமுண் டாய்அமு துண்ணக் கடையவனே. 50

***உரை :-*** *செந்நிறமுடைய பவளமலை போன்ற ஒளியுடைய திருமேனியனே, என்னை அடிமையாக உடையவனே, சிறிய அறிவுந் தொழிலுமுடைய (வானவர் முதலிய) உயிர்களுக்கு இரங்கி, பாற்கடல் கடைந்தவனாகிய திருமால் அமுதத்தை உண்ண, கொல்லும் வேகத்தோ டெழுந்த ஆலகால விடத்தை உண்டவனே, யான் உன்னை வைதாலும், வாழ்த்தினாலும் எனது தவறுக்கே மனம் வாடித் துக்கப்படுவேனைக் கைவிட்டிடாதே.*

***குறிப்பு :-*** *குழைதல், இளகுதல் என்னும் பொருள்படும். வேசாறுதல், வேசறுதல் என்றாயிற்று. வேசறுதல் - வருந்துதல். கடையவனே என்று தொடங்கியபடி அந்தாதியாக முடித்தமை காண்க. கடையவன் - கடைந்த அவன் - திருமால்; வினைத்தொகை. கடையவன் அமுதுண்ண என மாற்றுக.*

***திருச்சிற்றம்பலம்***

*திருவண்ணாமலையில் அருளிய*

## 7. திருவெம்பாவை★

*திரு எம்பாவை என்பது, மார்கழி மாதத்திலே, கன்னிமை கழியாத பெண்கள் ஒருவரையொருவர் துயிலெழுப்பி அனைவரும் ஒருங்குசேர்ந்து குளத்திற்குச் சென்று நீராடும் வரலாற்றினைக் கூறும் பகுதி. நீராடச் செல்லும் போது கன்னியர் தாம் வழிபட்டு வந்த தேவியின் திருவுருவாகிய பாவையை உள்ளத்து எண்ணி, அதனை விளித்து, தம் இயல்புகளை அறிவித்து, மற்றவர்களையும் எழுப்புவதால் இப்பகுதி 'திரு எம்பாவை' எனப்பட்டது.*

*'எம்பாவாய்' என்னும் தொடர்மொழி இப்பகுதியின் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் வருவதால், அதுவே இதற்குப் பெயராக அமைந்தது. இங்ஙனமே திருவாசகத்தில் மகளிர் விளையாட்டாக வரும் பெரும்பாலான பகுதிகள், அதனதன் இறுதித் தொடராலேயே பெயர் பெற்றுள்ளதை ஆங்காங்கு அறியலாம்.*

*திரு என்பது மங்கலமொழியாக இருப்பதால், சிவத் தொடர்புடைய இப்பகுதிக்கு முதலில் அடைமொழியாகச் சேர்க்கப் பெற்றுத் திருவெம்பாவை என வழங்கப்படுவதாயிற்று. ஆகவே, தெய்வத் தன்மையுடைய எம்பாவை என்னும் பொருள்படும்.*

*திரு என்பது ஞானம் என்னும் பொருளதாதலை, "போகமும் திருவும் புணர்ப்பானை" என்னும் திருமறையில் தெரிகின்றேமாதலின் ஞானமயமான எம்பாவை எனவும் பொருள்படும்.*

*திரு என்பதற்குக் கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கமெனப் பேராசிரியர் திருக்கோவையாருரையில் கூறுவதால் மழையையும் கணவனையும் அடைதலாகிய போகமும், பரமுத்தியாகிய மோக்கமும் ஆகிய இவ்விருபயனையும் வேண்டுவார் வேண்டியபடி எய்துவதால் கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கமுடைய எம்பாவை எனப் பொருள்பட்டு இப்பெயர் பெற்றது எனலுமாம். அழகிய எம்பாவை எனலுமாம்.*

---

*★ 'எம்பாவாய்' என்று முடியுந் திருப்பாட்டுக்களாலாய பகுதி என்பது கருத்து. பொருள் கொள்ளுமிடத்து, விளித்தொடர்களை முதலிற் கொள்வது காண்க.*

இறைவனது தொன்மையையும், புகழையும், அவர் அண்டமாயும் அதனுள் அனைத்துமாயும் இருக்கின்ற நிலைமையினையும் அறிந்த ஆன்மா அவனே முழுமுதற்கடவுள் எனத் தெளிந்து போற்றற்குரியது. அங்ஙனம் போற்றுதற்கு மெய்யுணர்வு முதலியன இன்றியமையாதன. ஆதலின், அவற்றைச் சோபானக் கிரமமாகச் சிந்தித்து ஆனந்தத்து அழுந்தி அதீதநிலையை அண்மிக்களித்திருக்கும் காலத்தில் ஒரொருக்கால் வாசனாமலம் தாக்கப் பிரிவு நிகழ்ந்துழி அதனையும் பொறுக்கலாற்றாது 'விடுதிகண்டாய்' என இரங்கும். இதுவரையில் உபகாரமாக இருந்து உண்மையை விளக்கிய திருவருட்சத்தியை வியக்கும். அதனால் சத்தியின் நிபாதம் அதாவது வீழ்ச்சி பதியும். அதனால் தானும் தனது உண்மை அறிந்து சத்தியாய், மகளிரைப் போல நீராடுதல் அம்மானையாடுதல் பூக்கொய்தல் முதலிய விளையாட்டை மேற்கொண்டு, அங்கெல்லாம் இறைவனாகிய உயிர்க்காதலனை உற்று உணர்ச்சிவசத்ததாக விளங்கும். இதில் முதற்கண்ணதாகிய சத்திநிபாத அநுபவமே திருவெம்பாவை. அதனாலேயே சத்தியை வியந்தது என்று பழைய குறிப்புக் கூறுகின்றது.

ஆகவே திருவெம்பாவையின் அடிப்படைக் கருத்து இளமகளிர் நீராடுதலே. பதினோராம் பாடல் முதல் இருபதாம் பாடல் வரை நீராடுதல் கூறப்பெறுகின்றது. முதல் பத்துப் பாடல்கள் மகளிர் ஒருவரை ஒருவர் எழுப்பிக்கொண்டு எல்லாருமாகச் சேர்ந்து இறைவன் புகழைப் பாடிக்கொண்டு நீராடச் செல்லுதலைக் குறிப்பனவாகும்.

நீத்தல் விண்ணப்பத்தில் இறைவன் பிரிந்தமையால் விளைந்த துன்பம் ஆற்றாமல், அடிகள் விட்டிடுதி கண்டாய் விடிலோ சிரிப்பிப்பன் ஏசுவன் என்றெல்லாம் நயந்தும் இடித்தும் இரந்தும் விண்ணப்பித்து, பிரிவுத்துன்பம் விஞ்சவே எடுத்த உடலைப் பற்றியதான ஆண் என்ற உணர்ச்சியும் மடங்கிப்போக, காதல் சிறந்த ஒரு தலைவியின் நிலையை அடைந்து நீராடுதலும் பூக்கொய்தலும் தோணோக்கமாடுதலும் உந்திபறத்தலும் சுண்ணமிடித்தலுமாதியாய செயல்களையமைத்த பாடல்களை அருளுகின்றார். இவ்வண்ணம் சிவானுபவம் முதிர்ந்தநிலையில் முதற்கண் எழுந்த நீராடலே திருவெம்பாவை.

--------

***சத்தியை வியந்தது***

***வெண்டளையால் வந்த எட்டடித்தரவுக்*** *கொச்சகக்கலிப்பா*

*திருச்சிற்றம்பலம்*

**155.** **ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்**
**சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள் தடங்கண்**
**மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்**
**மாதேவன் வார்கழல்கள் வாழ்த்தியவாழ்த் தொலிபோய்**
**வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து**
**போதார் அமளியின்மேல் நின்றும் புரண்(டும்) இங்ஙன்**
**ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே என்னே**
**ஈதே எந்தோழி பரிசேலோர் எம்பாவாய்.** **1**

***உரைநடை :-*** *'வாள்தடங்கண் மாதே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *ஒளி பொருந்திய நீண்ட கண்ணையுடைய பெண்ணே, முதலும் முடிவு மில்லாத, காண்டற்கரிய பெருமையுடைய ஒளி யானவனை நாங்கள் பாடுதலைக் கேட்டும், நீ (இன்னும்) துயில் கின்றனையோ? உன் செவிதான், சொல்லுவதைக் கேளாத வலிய செவியோ? பெரிய கடவுளது நெடிய சிலம்பணிந்த திருவடிகளை நாங்கள் வாழ்த்திய வாழ்த்தின் ஓசையானது தெருவின்கட் கேட்ட அளவிலேயே, ஒருத்தி பொருமியழுது, உடம்பு மறந்து, மலர் நிறைந்த படுக்கைமேலிருந்து கீழே விழுந்து புரண்டு இந்நிலத்தே ஒன்றிற்கு மாகாதவள் போல் (மூர்ச்சித்துக்) கிடக்கலாயினள். இது என்ன நிலை பார். அவள் செயல் அவ்வாறிருக்க, எங்கள் தோழியாகிய உன் தண்மை (விழித்தெழாதிருக்கும்) இந்நிலையோ? அது என்ன! எமது கண் பாவை போன்றவளே! சொல்லுவதை யேற்பாயாக; ஆய்வாயாக.*

***குறிப்பு :-*** *தம்முள் நட்புடைய பல பெண்டிர், தங்கள் தோழி யாகிய ஒருத்தியைத் துயிலுணர்த்தற் பொருட்டுக் கூறிய பாட்டாக தோன்றுகின்றது. திருவண்ணாமலையில், மார்கழி மாதத்திலே, இது விடியற்காலை குளத்தில் முழுகச் செல்லும் பெண்டிர், தம் தோழியரை யழைப்பதாகவும், தம்முட் பேசிக் கொள்ளுவதாகவும் இப்பதிக மியற்றப்பட்டதாகக் கூறுப. தத்துவ வுணர்ச்சி சான்ற ஒருசாரார், மனோன்மணி, சர்வ பூததமனி, பலப்பிரமதனி, பலவிகரணி, கலவிகரணி, காளி ரௌத்திரி, சேட்டை, வாமை வானும் ஒன்பது*

*சத்திகளுள், முன்னின்றவர் பின்னின்றவரைத் துயிலெழுப்புவதாகவும், எல்லாருங் கூடி இறைவனை வழுத்தும் பொருட்டுத் தம்முட் பாடுவதாகவும், இயம்பிய பாடல்களின் தொகுதி திருவெம்பாவையாகுமென்ப. சத்திகளின் இயக்கத்தால், அனந்தர் வாயிலாக அசுத்தமாயைக்குக் கீழ்ப்பட்டவற்றின் படைப்பு நிகழுமென்ப. வளருதியோ - கண்வளருதியோ - தூங்குகின்றாயோ, ஏல் ஓர் என்பதை அசையாகவுங் கொள்வர். இப்பாட்டு மனோன்மணி, சர்வ பூததமனியைத் துயிலெழுப்பி இயக்குவதை யுணர்த்துமென்ப.*

**156.** பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல்நாம்
பேசும்போ தெப்போ(து)இப் போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
சீசீஇவையுஞ் சிலவோ விளையாடி
ஏசு மிடம்ஈதோ விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசும் மலர்ப்பாதந் தந்தருள வந்தருளுந்
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்யாம் ஆரேலோர் எம்பாவாய். 2

***உரைநடை :-*** *'நேரிழையாய்' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *செவ்விய அணிகளை யணிந்தவளே! மேலாகிய ஒளியான பெருமான்பாற் பிணிப்பாகிய அன்பு வைத்து, நாம் எலும்பு வடிவமாகும்படி இரவும் பகலும் அவனது சீரைப் பேசுதற்குரிய காலம் எக்காலம்? இந்த மலர் நிறைந்த, படுக்கையின் கண்ணேயே நீ விருப்பம் வைத்தனை போலும் (என்று எழுப்பும் பெண்டிர் கூற, துயில் நீங்காத மாது கூறுவாள்:) நங்கையர்களே! சீ, சீ, (நீங்கள் பேசும் நகைமொழி களுள்) இம்மொழிகளுஞ் சிலவாகும் போலும். நீங்கள் விளையாடி வைவதற்கு இதுவோ சமயம்? (என்றாள்). (பிற மாதர்கள் கூறுவார்கள்:) எமது கண்பார்வை போன்ற தோழி! (இப்படி தூக்கத்திற் குழறாதே), விண்ணோர்கள் வழிபட, அவர்களுக்குத் தோன்றாத திருவடிகளை நமக்குத் தந்தருள வந்தருளுங் குருவாகிய சிவலோக நாதன், தில்லை ஞான சபையாண்டவன் ஆகிய பெருமானுக்கு நம் அன்பு எவ்வாறிருக்க வேண்டும்? நாம் யார்? அடிமைகளல்லவோ! சிந்தி; சொல்வதைக் கேள்.*

***குறிப்பு :-*** *பெண்டிருள் உரையாடலாக இப்பாட்டு இயற்றப்*

*பட்டமை காண்க. சர்வ பூததமனி, பலப்பிரமதனியை எழுப்பு முறையென்ப. பாசம் - அன்பு, 'ஆய்' என்பதைப் பாசம் என்பதனோடுங் கூட்டுக. உணவு முதலியன கொள்ளாது அன்பு செய்தலே கைக்கொள்ள வேண்டுமென்பார், 'என்பாய்' என்றார். கூசுதல் - தோன்றாது மறைதல், 'அன்புயார்' என்பதில் 'யார்' - எது - எத்தன்மையது? திணைவழுவமைதி. ஓர் - சிந்தி. ஏல் - சொல்லை ஏற்றுக்கொள்.*

157. முத்தன்ன வெண்நகையாய் முன்வந் தெதிரெழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீர் ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ
எத்தோநின் அன்புடைமை எல்லோம் அறியோமோ
சித்தம் அழகியார் பாடாரோ நஞ்சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய். 3

***உரை :-*** *முத்துப் போன்ற வெள்ளிய பற்களை யுடையவனே! முன்னே யெல்லாம், எங்களுக்கெதிராக எழுந்து வந்து, எனது தந்தையே, இன்பனே, அமுதம் போன்றவனே யென்று இறைவனை வாழ்த்தி, மிகவும் அதிகமாக வாயூறி இனிமைபயக்கும்படியாக அவன் புகழைப் பேசுகின்ற தன்மையுடையாய், (இன்று நாங்கள் அழைத்தும்) நீ எழுந்து வந்து உன் வாயிற்கதவைத் திறவா திருக்கின்றாய். (என்று பலமாதர் தங்கள் தோழி யொருத்தியைத் துயிலுணர்த்தத்) தோழி கூறுவாள் :- இறைவன்பால் மிகுந்த பற்றுள்ளவர்கள் நீங்கள். ஆண்டவனுடைய பழைய தொண்டர்கள், மிகுந்த உரிமை யுடையவர்கள், புதிதாக வந்த அடியேங்களது சிறுமையை ஒழித்து நீங்கள் எங்களை ஆட்கொண்டால், அது கெடுதியா? என்ற அளவில், (எழுப்பிய மாதர்கள் கூறுவார்கள்:) நீ அன்புடையா யென்பது ஏமாற்றமா? ஏன் தன்மையெல்லாம் நாங்கள் தெரியாதவர்களா? மனந்தூயதாகப் பெற்றவர், நமது பெருமானைப் பாடமாட்டார்களா? எங்களுக்கு வேண்டியது (நீ பாட வேண்டும் என்னும்) இவ்வளவுதானே! எமது பாவை போல்வாய்! நீ இதைச்சிந்தி; சொல்வதைக் கேள்.*

***குறிப்பு :-*** *அள்ளூறல் - நாவில் எச்சில் ஊறுதல். சுவையான*

*தின்பண்டங்களைக் காணும் போது நாவில் நீர் ஊறுதல் போல, இறைவன் பெயர்களாகிய அத்தன், ஆனந்தன், அமுதன் என்றவற்றைச் சொல்லும் போது சொல் நிறைந்த பொருளுணர்ச்சி அனுபவத்திற்கு வர அதனால் கேட்பவர்களுக்கும் நாவில் எச்சில் ஊறித் தித்திக்கப் பேசுவாயென்றாள். இது பலப்பிரமதனியும், அவளைச்சார்ந்தாரும் பல விகரணி யென்னுஞ் சத்தியைத் துயிலுணர்த்திய தென்ப. பத்து - பற்று என்பதன் மரூஉ. இனி, அடியாரிலக்கணம் பத்து முடையீர் என்றும் பொருள் கொள்ளலாம். பத்துக் குணங்களாவன : விபூதி உருத்திராக்கம் தரித்தல், குரு வழிபாடு, அன்புடன் சிவதோத்திரம் செய்தல், மந்திர செபம், இறைவழிபாடு செய்தல், பதிபுண்ணியங்களைச் செய்தல், சிவபுராணம் கேட்டல், சிவாலய பரிபாலனம். சிவனடியாரிடத்து உண்டல், அடியார்க்கு அடியனாதல் என்பன. இப்பத்துக் குணங்களும் உடையவர்களே பழவடியராதற்கு உரியராதலால் பத்துடையீர் என்பதனை அடுத்துப் பழவடியீர் என்றாள். பாங்கு - உரிமை, ஒழுக்கம். ஏத்து - ஏமாற்று. அழகியார் - தூயார். இத்தனை - இவ்வளவு; தனை - அளவு, உம், தான் என்ற பொருளில் வந்தது. பொல்லாததோ, என்பது 'பொல்லாதோ' எனக் குறைந்தது.*

**158.** ஒள்நித் திலநகையாய் இன்னம் புலர்ந்தின்றோ
வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ
எண்ணிக்கொடுள்ளவா சொல்லுகோம் அவ்வளவுங்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்
உள்நெக்கு நின்றுருக யாம்மாட்டோம் நீயேவந்
தெண்ணிக் குறையில் துயிலேலோர் எம்பாவாய். 4

***உரை :-** ஒளியுடைய முத்துப்போன்ற பல்லினை யுடையாய்! இன்னும் உனக்குப் பொழுது விடியவில்லையோ? (என்று பல மாதர் ஒருத்தியை எழுப்புவாள் வினவ,) அவள் அழகிய கிளி போன்ற சொல்லினர் எல்லாரும் வந்துவிட்டார்களா? (என்று கேட்கப் பிறர் கூறுவார்கள்:) வந்தவர்களைக் கணக்கிட்டுக் கொண்டு, உள்ளபடி சொல்லுகிறோம். அதுவரையும், கண்ணினைத் துயிலச் செய்து, வீணாக நேரத்தைக் கழித்துவிடாதே. விண்ணினவர் யாவருக்கும் ஒப்பற்ற அமுதமாய் உள்ளவனை, ஞானநூல் கூறும் மேலான பொருளானவனை நமது கண்களுக்கு இனிய காட்சி தருவானை நாம்*

*பாடி அழுது மனம் முழுதும் கனியும்படி உருகுவோமாக. நாங்கள் வந்திருக்கிறவர்களை எண்ண முடியாது. நீயே எழுந்துவந்து அவர்களை எண்ணிப் பார்த்து, எண்ணம் குறையுமானால் (மீண்டும் போய்த்) தூங்குக. "உற்றவன், தீர்ப்பான், மருந்து, உழைச்செல்வான் இவை நான்கும் மருந்தெனற்குரியன'' ஆதலின் பிறவி நோய் தீர்ப்பவனாகிய இறைவன் மருந்தெனப்பட்டான் என்க.*

***குறிப்பு :-*** *நித்திலம் - முத்து. வண்ணம் - அழகு, நிறம். கொடு - கொண்டு. உள்ளவா - உள்ளவாறு. துயின்று - துயில் வித்து. கசிந்து - அழுது. நெக்கு - கனிந்து. வேதம் - ஞானநூல். இது பலவிகரணி, கலவிகரணியைத் துயிலுணர்த்துவதாகக் கூறுப.*

**159.** **மாலறியா நான்முகனுங் காணா மலையினை நாம்**
**போலறிவோம் என்றுள்ள பொக்கங்க ளேபேசும்**
**பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்**
**ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்**
**கோலமும் நம்மைஆட் கொண்டருளிக் கோதாட்டுஞ்**
**சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்(று)**
**ஓலம் இடினும் உணராய் உணராய்காண்**
**ஏலக் குழலி பரிசேலோர் எம்பாவாய். 5**

***உரைநடை :-*** *'ஏலக் குழலி' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *மயிர்ச் சாந்தணிந்த கூந்தலுடையாய்! அரி அடியை அறிய முடியாத, அயன் முடியைக் காணக் கூடாத, மலை போன்ற நெடு மேனியனை நாம் அறியக்கூடும் என்று நினைக்கும்படியாக, (வேடிக்கையாகப்) பொய்களையே பேசுகின்ற, பாலுந் தேனும் ஊறினாற்போன்ற இதழையுடைய தந்திரக்காரியே, இவ்வுலகினரும் வானுலகினரும் பிற உலகினரும் அறிவதற்கு அரியவனுடைய திருவடிவத்தையும் சிறியோமை அடிமையாகக்கொண்டு குற்றம் பொறுத்துச் சீர்செய்யும் பெருங்குணத்தையும் வியந்துபாடி சிவ பெருமானே, சிவபெருமானே எனச் சரணடையும் குரல் எழுப்பியும் அதைக் கேட்டுணராது துயில் நீங்கா திருக்கின்றாய், எம்பாவாய் இதுவோ உன் தன்மை, நாங்கள் சொல்லுவதை ஏற்றுச் சிந்திப்பாயாக.*

*ஞாலம் இருவினை நுகர்ச்சிக்கும் இருவினைகளை இயற்றிக் கோடற்கும் இடனாகிய கன்மபூமி, விண் - பசுபுண்ணியப் பயனை நுகர்தல் ஒன்றற்கேயுரிய போகபூமி. பிற - தீவினைப் பயனைப்*

*பலவேறு உருவங்களிலிருந்து துய்த்தற்குரிய நரக பூமி. நரக முதலான இடங்களில் உள்ளார் துன்புற்று அதனால் சித்தவிருத்தி இழந்திருத்தலின், ஞானவாய்ப்பு ஒருபோதும் கூடாமையான் அறியார் ஆயினர். விண்ணிலுள்ளார் பொன்விலங்கு பூண்டவர்கள் போல இன்பநோக்கே உடையவர்களாய், பதவிமோகத்தில் கட்டுண்டு இறைவனை அறியாராயினர். மண்ணுலகில் உள்ளார் குருவருள் பெற்றுப் பரிபாகம் எய்துகின்ற வரையில் அருமையும், பரிபாகம் பெற்றபின் அறிதலும் உடையராதலின் ஞாலத்திற்கு அறிவும் அருமையும் உடையான் ஆயினர் என்க. விண்ணிற்கும் பிறவற்றிற்கும் கூறும்போது அறிவரியான் என்பதனை ஒருதொடராகக் கொண்டு அறிதற்கு அரியான் எனவும், ஞாலத்திற்குக் கூறும்போது அறிவும் அருமையும் உடையான் என உம்மைத்தொகையாகவும் கொள்க.*

***குறிப்பு :-** 'மலையினை' என்பதற்கு, மலைவு விளைக்கும் ஒன்றை என்று பொருள் கொள்ளுவாரு முளர். உள்ள - நினைக்க, படிறு - வஞ்சனை. இறைவனை அறியமுடியாமை தான் உணர்ந்தும், பிறர் மாறாக எண்ணும்படி விளையாட்டாகப் பேசுவது, கபடமாயிற்று. கோதாட்டுதல் - சீராட்டுதல். கோது - குற்றம், அதனைப் பாராட்டாமை, முதல், 'உணராய்' - அறியாய்; என்னும் பொருட்டு; இரண்டாவது, 'உணராய்' - (துயிலை) நீங்காய். ஞாலமே, விண்ணே, பிறவே என்பதில் 'ஏ' எண்ணிடைச்சொல். போல் - அசை. இது, கலவிகரணி, காளியைத் துயிலுணர்த்தியதாகக் கூறியதென்ப.*

**160.** **மானேநீ நென்னலை நாளைவந் துங்களை**
**நானே யெழுப்புவன் என்றலும் நாணாமே**
**போன திசைபகராய் இன்னம் புலர்ந்தின்றோ**
**வானே நிலனே பிறவே அறிவரியான்**
**தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்**
**வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்**
**ஊனே உருகாய் உனக்கே உறும்எமக்கும்**
**ஏனோர்க்குந் தங்கோனைப் பாடேலோர் எம்பாவாய்.** **6**

***உரை :-** (மான் போன்ற விழியுடைய) பெண்ணே! நீ நேற்று "உங்களை நாளையன்று நானே வந்து துயிலுணர்த்துவேன்" என்று கூறியும், இன்று (நாங்கள் உன்னை எழுப்பவந்த பின்னும் நீ தூங்கிக் கொண்டிருக்கிறாய்; நீ சொன்னசொல்) போயின திக்கினைச் சொல்ல மாட்டாயா? இன்னும் (பொழுது) விடியவில்லையோ? வானுலகும்*

*மண்ணுலகும் ஏனையவும் அறியக்கூடாத பெருமான், தானாகவே வலிய எழுந்தருளிவந்து நமக்கு முதற்கருணை காட்டி ஆண்டருளும் பெருமை மிக்க நெடிய கழலணிந்த திருவடிகளைப் பாடி வந்தவர் களாகிய (எங்களுக்கு) நீ உன் வாய்திறந்து ஒன்றும் பேசாது தூங்குகிறாய். பாடி உடலு முருகப் பெறாய். உனக்கே இது பொருந்தும். நமக்கும் பிறர்க்கும் தலைவனாகியவனை நீ பாடுவாயாக. இது, காளி, ரௌத்திரியைத் துயிலெழுப்புவதாகக் கூறியதென்ப.*

***குறிப்பு :-*** *இத்திருப்பாட்டு, மன மொழி மெய்களால் வழிபடும் மெய்யடியார்க்கு இறைவன் பள்ளமடை நோக்கிப் பாயும் புனல் போல்வான்; ஆதலால் துயில் எழுந்து திருவடியைப் பாடி உன் மனத்தைப் பள்ளமடையாக்கிக்கொள் என்று உணர்த்துகிறது.*

**161.** **அன்னே யிவையுஞ் சிலவோ பலஅமரர்**
**உன்னற் கரியான் ஒருவன் இருஞ்சீரான்**
**சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்**
**தென்னாஎன் னாமுன்னந் தீசேர் மெழுகொப்பாய்**
**என்னானை என்னரையன் இன்னமுதென் றெல்லோமுஞ்**
**சொன்னோங்கேள் வெவ்வேறாய் இன்னந் துயிலுதியோ**
**வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்**
**என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய்.** **7**

***உரை :-*** *தாயே, (உனது விளையாடல்களுள்) இவைகளுஞ் சிலபோலும்! தேவர்கள் பலரும் எண்ணி யடைதற் கரியவனாகிய ஒப்பற்றவன், பெரும்புக முடையானாகிய பெருமானது சங்கு முதலியவற்றின் ஒலிகள் கேட்கவும், 'சிவா' என்று வாயைத் திறப்பாய். 'தென்னவனே' என்று சொல்லு முன்னம் தழலிடைப்பட்ட மெழுகு போல உருகுவாய். (ஆனால் இப்போது) எனது இனிய தலைவன், எனது வேந்தன், இன்னமு தானவன் என்று நாங்களெல்லாரும் தனித்தனியே இயம்பினோம். இன்னமும் தூங்கு கின்றாயோ? அன்பில்லாத திண்ணிய மனமுடைய அறிவிலார் போலச் சும்மா படுத்திருக்கின்றாயே! துயிலின் சிறப்புத்தான் என்னென் றுரைப்பது!*

***குறிப்பு :-*** *சின்னங்கள், அடையாளமாகிய சங்கு முதலிய இசைக் கருவிகள். தென்னா - தென்னவனே. அழகா. ஆனு + ஐ - ஆன் + ஐ - ஆனை. ஆனு - இனிமை, நன்மை; ஐ - தலைவன். இது ரௌத்திரி, சேட்டையைத் துயிலெழுப்பினதென்ப.*

162. கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்
ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்கெங்குங்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையோ
வாழியீ தென்ன உறக்கமோ வாய்திறவாய்
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழைபங் காளனையே பாடேலோர் எம்பாவாய். 8

***உரை :-*** *கோழி - சேவல். "கோழி கூவப் பொழுது புலர்ந்தது" இலக்கண நூல். கோழி கூவவும், பிற பறவைகள் எங்கும் ஓசை யெழுப்புகின்றன. திருப்பள்ளி யெழுச்சியை உணர்த்த, வெண் சங்கானது எவ்விடத்தும் முழங்குகின்றது. ஒப்பற்ற மேலான ஒளியானவனும், ஒப்பற்ற மேலான அருளுடையவனுமாகிய பெருமானுடைய நிகரில்லாத உயர்ந்த புகழ்களை நாங்கள் பாடினோம். அவற்றை நீ கேட்கவில்லையா? நீ நன்றாக வாழ்வாய், இது எத்தகையான தூக்கமோ, தெரியவில்லை! வாய்திறக்கமாட்டேன் என்கிறாயே! நமது அரசன்பால் அன்புடைமையாகும் திறமும் இம்முறையாமோ! கற்பகாலங்களுக் கெல்லையாய தலைவனாய் விளங்கிய ஒருத்தனாகிய, உமை பாகனையே பாடுக. பொருள் - இறைமைக் குணங்கள் முற்றவும் உடைய இறைவன் புகழ் - பரிமேலழகர்.*

***குறிப்பு :-*** *'குருகு' என்பது பறவைகட்குப் பொதுவான பெயர். நாரை, அன்னம் முதலியவற்றிற்கும் பெயராம். எங்கு மென்றதால், பறவைப் பொதுவெனக் கோடலே பொருத்தம். ஏழில் - நாதசுரம். ஏழுசுரங்களுக்கும் இருப்பிடமானது பற்றி வந்த காரணப் பெயர். குழற்கருவி. எழுதல், எழுச்சி, இறைவனது திருக்கோயில்களில் திருப்பள்ளி எழுச்சிக் காலத்தே, வெண்சங்கம் ஊதுதல் மரபு. 'விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்' என்ற தேவாரமுங் காண்க. பல கோயில்களிலும் சங்கொலிப்பதால், 'எங்கும்' என்றார். மக்கள் எழவேண்டு மென்பதையும், சங்கொலி குறிப்பானுணர்த்தியவாறு, கேழ் - உவமை. வாழி - புகழ்ச்சிபோலிகழ்ச்சி. ஆழியான் - வஞ்சகன்; கள்வன். ஆழி - சக்கரம், அரசன் - 'ஆழி' என்பதற்கு 'அம்பு' என்று பொருள் கொள்ளில், திரிபுரம் எரிக்க அம்பு விட்டான், என்று*

*பொருள்படும். இப்பாட்டு, சேட்டை வாமையை எழுப்பக் கூறியதென்ப. ஏழை - பெண். இங்கே அம்மையைக் குறித்தது.*

**163.** முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் போர்த்தும்அப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எங்கணவ ராவார் அவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே யெமக்கெங்கோன் நல்குதியேல்
என்ன குறையு மிலோமேலோர் எம்பாவாய். **9**

***உரை :-*** *முற்பட்டவனாகிய பண்டைப் பொருள்கள் யாவற்றிற்கும் பழமையான மெய்ப்பொருளே, பிற்பட்ட புதுமை யின்பத்திற்கும் பழமையானவாறே மீண்டும் புதுமை நலந்தரும் தன்மையனே, உன்னை ஆண்டவனாகப் பெற்ற சிறப்புடைய உன்னடிமைகளாகிய யாங்கள் உன் தொண்டர்களது திருவடிகளை வணங்குவோம். அவ்வாறே அவர்களுக்கே (உறவினர் போல) உரிமை யராய் ஒழுகுவோம். அவர்களே எங்கள் கணவராவார்கள். அவர்கள் விரும்பிக் கட்டளையிட்ட முறையே அவர்கட்கு அடிமையராய்க் குற்றேவல் செய்வோம். இந்த முறையே எங்களுக்குக் கிடைக்குமாறு எம்பெருமானே அருள் புரிவையாயின், எவ்வகையான குறைபாடும் (தேவையும்) இல்லாதவர்களாயிருப்போம்.*

***குறிப்பு :-*** *கன்னிப்பெண்டிர் பாடிய பாட்டு இது என்று தோன்றுகிறது. பேர்த்தும் - மீட்டும், பழமையாயிருந்ததுபோலவே புதுமையாயும் என்பது கருத்து. அப்பெற்றி - அந்தத் தன்மை, அதாவது புதுமை, பாங்கு, உறவு, உரிமை, நட்பு, துணை. நவசக்திகள் ஒருங்கு இறைவனை வழுத்திய பாட்டாகவுங் கூறுப.*

**164.** பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே
பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்
வேதமுதல் விண்ணோரும் மண்ணுந் துதித்தாலும்
ஓத உலவா ஒருதோழன் தொண்டருளன்
கோதில் குலத்தரன்றன் கோயிற் பிணாப்பிள்ளைகாள்

ஏதவனூர் ஏதவன்பேர் ஆருற்றார் ஆரயலாற்
ஏதவனை பாடும் பரிசேலோ ரெம்பாவாய். 10

***உரை :-*** *அதல, விதல, சுதல, தராதல, ரசாதல, மகாதல, பாதாளம் எனப்படும் கீழுலகம் ஏழினுக்குங் கீழாய்ச் சொல்லி னளவைக் கடந்ததாய் உள்ளது திருவடிக் கமலங்கள். மலர் நிறைந்து அழகு செய்யுந் திருமுடியும் எல்லாப் பொருள்களின் முடிவாயுள்ளது. அவன் திருமேனியில் ஒரு பகுதியில் அம்மை இருப்பள். ஒரு திருவடிவ முடையனல்லன்; ஞான நூல்கள் முதலாக, வானுலகினரும் மண்ணுல கினரும் ஆகிய எல்லாரும் புகழ்ந்தாலும், புகழ்ச்சி முற்றுப்பெறாத ஒப்பற்ற உயிர்த்துணைவன்; அடியார் உள்ளத்தினன்; குற்றமற்ற சங்காரப் பெருமானது கோயிலின்கண் உள்ள குற்றமற்ற உயர்ந்த இனத்தினராகிய பெண் குழந்தைகளே! அவன் ஊர்யாது? அவன் பேர் யாது? அவனுக்கு யார் உறவினர்? யார் பக்கத்திலுள்ளவர்கள்? அவனைப் பாடும் வகை யாது? சொல்லுவீராக.*

*'சொற்கழிவு பாதமலர்' என்றவள் 'பொருள் முடிவு முடி' என்றது ஆழ்ந்து அனுபவித்தற்குரியது'. பொருள் சொல்லை நிலைக்களனாகக் கொண்டு இயங்குவது. பாதமலர் சொல்லளவையைக் கடந்தபொழுது அதனை நிலைக்களனாகக் கொண்ட திருமுடி பொருளின் அளவைக் கடந்ததாதலே பொருத்தமாதலால் அங்ஙனம் கூறினார். போதுகள் நிறைந்து புனையப்பட்ட உருவுடையதாகக் திகழினும் அது எல்லாப் பொருள்களுக்கும் அப்பாற்பட்டதேயாம். இதனாலேயே வேதமாகிய சொற்பிரபஞ்சத்திலேயே எஞ்ஞான்றும் ஓதி உழலும் பிரமன், சொற்கழிவாகிய பாதமலரைத் தேடாமல் பொருள்முடிவாகிய முடியைத் தேடிச் சென்று தோற்றான். பொருட்பிரபஞ்சத்தின் தலைவனாய திருமால் சொற்பிரபஞ்சத்தின் முடிவான திருவடியைத் தேடிச் சென்று உலைவுற்றான். அன்றியும், அவர்களறியும் சொல்லும் பொருளுமாகிய எல்லையில் அடிமுடிகள் இல்லை; கடந்துள்ளன என்று குறிப்பித்தவாறு.*

***குறிப்பு :-*** *'வேத முதல்' என்பதைத் தனி முடியாக்கொண்டு அவன் அறிவு நூல் போற்றுவித்த மூலகாரணன் என்ப. 'பேதையை ஒரு பாலிலுடைய திருமேனிகள் பல' என்பாருமுளர். ஓதல் - பேசுதல். உலவா - வற்றாத, முடியாத. உளன் - உளத்திருப்பவன். உளத்தை (க் கோயிலாக) உடையவன், என்றலுமொன்று. 'குலம்' என்பதை 'அரன்'*

*என்பதோடு சேர்த்து உருத்திரருட் சிறந்த 'மகா ருத்திரன்' என்றலு மொன்று. குலம் என்பதை, 'பிணாப்பிள்ளை' என்பதனோடு கூட்டுக. பிணா - பெண். 'ஏலோரெம்பாவாய்' என்றது அசையளவில் நின்றது.*

**165.** மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்காண் ஆரழல்போல்
செய்யாவெண் நீறாடி செல்வா சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயாநீ ஆட்கொண் டருளும் விளையாட்டின்
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்
எய்யாமற் காப்பாய் எமையேலோர் எம்பாவாய். **11**

***உரைநடை :-*** *'செய்யா, ஐயா' என்ற விளிகளை முதலிற் கொள்க.*

***உரை :-*** *நிறைந்த நெருப்புப்போல முழுதுஞ் செம்மை நிறமுடைய திருமேனியனே, வெள்ளிய திருநீற்றுப் பொடியில் மூழ்கினவனே, ஒப்பற்ற வீட்டுச் செல்வனே, நுண்ணிய இடையும் மை பொருந்திய நெடிய கண்ணுமுடைய உமையம்மை கணவனே, தலைவனே, வண்டுகள் நிரம்பிய அகன்ற தடாகத்திற் புகுந்து 'முகேர்' என்ற ஒலியெழும்படியாக நீரினைக் கையாலிறைத்து முழுகி உன் திருவடிகளைப்பாடி, உனது பரம்பரை யடிமைகளாக நாங்கள் வாழ்ந்தோம். (நீ பக்குவத்திற்கேற்பப் படிப்படியாக) அழகாக ஆட்கொண்டருளும் திருவிளையாட்டினாலே, உய்தி கூடுகின்றவர்கள் பிழைத்துக் கதிசேரும் வகைகளிலெல்லாம் யாங்களும் படிப்படியாக உய்தி கூடி முடித்தோம். இனி, நாங்கள் இளைத்துப்போகாமல் எங்களை நீ காப்பாற்றுவாயாக.*

***குறிப்பு :-*** *மொய் - வண்டு. 'முகேர்' தண்ணீர் எறிவதா லுளதாமொலி. குடைதல் - நீராடுதல். துளைத்தல். வழி - பரம்பரை. ஐ - அழகு. ஐயா - ஐயாக - அழகாக. உய்யும்வகை - படிப்படியாய் கதிக்கண் மேற்செல்லுமுறை.*

**166.** ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடுந்
தீர்த்தன்நற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடுங்
கூத்தன்இவ் வானுங் குவலயமும் எல்லோமுங்
காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி

வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய அணிகுழல்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம்
ஏத்தி இருஞ்சுனைநீ ராடேலோர் எம்பாவாய். 12

***உரை :-*** *(நம்மைப்) பிணித்த பிறவித் துன்பம் ஒழியும்படி நாம் மகிழ்ந்து முழுகும்புனித நீருடையான், அழகிய தில்லை ஞான சபையின்கண், அனல் ஏந்தி நடம் புரிகின்ற கூத்துவல்லான் இந்த ஞாலத்தையும் வானுலகத்தையும் நாம் எல்லாரையும் தோற்றுவித்தும் நிலைபெறுத்தியும் ஒடுக்கியும் விளையாடுபவன், (ஆகிய பெருமானுடைய) புகழ்ச் சொற்களையுமுரைத்து, (சங்கினாகிய) வளையல்கள் ஒலிக்கவும் நீண்ட (மேகலைகளாகிய) அணிகலன்கள் அசைந்து ஓசையெழுப்பவும் அழகிய கூந்தலின்மீது வண்டுகள் ரீங்காரஞ் செய்யவும், மலர்கள் விளங்குகின்ற பொய்கையில் ஆடி, நம்மை உடைய பெருமானது பொலங் கழல்களை வணங்கித் துதித்துப் பெரிய (மலைச்) சுனைநீரிலே ஆடுவோமாக. நீராடும்போதும் இறைவன் புகழைப் பாடியே ஆடவேண்டுமென்பது கருத்து.*

***குறிப்பு*** *:- ஆர் - கட்டு. 'தீர்த்தன்' என்பதற்குத் தூயகுணமுடையான், ஆசான் என்ற பொருள்களுமுள. நல் - அழகிய. 'தீயாடும்' என்பதற்குச் 'சோதியாக நின்றாடும்' என்பாருமுளர். விளையாடி - விளையாடுபவன். நடமாடி என்றாற்போல. நீராடுவதுடன், வாயால் வாழ்த்தியும் என்பார், 'வார்த்தையும்பேசி' என்றார். ஆர்ப்பரவம் - இறைச்சல்; புனித நீர்நிலைகள், இருவகையாக இருத்தல் கூடும். 'இருஞ்சுனை' யென்பது உருவகமாகப் பேரின்பமாகிய சுனையைக் குறிக்குமென்பாரு முளர். ஆடு - ஆடுக வென்பதன் கடைக்குறை.*

**167.** பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தாற் பின்னும் அரவத்தால்
தங்கள் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய். 13

***உரை :-*** *நீர்மிகுந்த பொய்கையானது பசிய கருங்குவளை மலர் களையுடைமையானும், எமது பெருமாட்டியாகிய உமையம்மை, கருங்குவளை நிறமுடைமையானும், பொய்கையானது செந்தாமரைப் புதுமலருடைமையானும், எமது பெருமான் செந்தாமரை நிறமுடைய திருமேனிய னாதலானும், பொய்கையானது அழகிய (குருகின மென்னப்படும்) நீர்ப்பறவைக ளுடைமையானும், பெருமான் திருமேனியின்கண் குருகினமாய குருக்கத்தின மலர்த்தொடையலும் பெருமாட்டி, தனது உறுப்பின் கண் சங்க வளையல் தொகுதியு முடைமையானும், பொய்கையானது ஒலியுடைமையானும், பெருமானும் பெருமாட்டியும் பின்னிக் கிடக்கும் பாம்பினை யணிந்தமையானும், பொய்கையினகத்தே உடல் அழுக்கைக் கழுவுதற் பொருட்டு மூழ்குவார் சார்தலானும், பெருமான் பிராட்டி, என்பார் தம்மிடத்தே மும்மல நீக்கமுறுவார் வந்து அடைதலானும், இறைவனையும் இறைவியையு மொத்த பொய்கையில் இறங்கி, நமது சங்கம் நீர்பாயப்பெற்று ஒலிக்கவும், அதனோடு நமது காற்சிலம்புகளும் நீர்பாயப்பெற்றுக் கலந்தொலிக்கவும், நகில்கள் மகிழ்ச்சியாற் பூரிக்கவும், முழுகுகின்ற நீர் மேலெழவும், தாமரை படர்ந்த அழகிய நீருட்பாய்ந்து ஆடுவோமாக.*

***குறிப்பு :-*** *அங்கம் - அழகு, உறுப்பு. குருகு - நீர்ப்பறவை, வளை, - குருக்கத்தி. பின்னும் - மேலும், பின்னிக்கிடக்கும். அரவம் - பாம்பு, ஓசை. மலம் - அழுக்கு, ஆணவம். பாய்ந்து என்பது, நீர், சங்கு ஆடை முதலியவற்றிற் பாய்தலைக் குறிக்கும். இறைவி யுதவியால் இறைவன் பாற்பெறும் பேரின்பக் கடலுள் மூழ்குவதற்கு இப் பொய்கை யாடல் அறிகுறி யாயிற்றுப் போலும்.*

**168.** காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை தன்
பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய். **14**

***உரை :-*** *காதிற்பிணித்த தோடு ஆடும்படியாகவும், உடம்பி லணியப்பட்ட பசிய (பொன்னினாகிய) அணிகள் ஆடவும், கூந்தல்*

மாலை யாடவும், மாலையைச் சுற்றும் வண்டுக்கூட்டம் சுழலவும், குளிர்ந்த நீருள்மூழ்கி, தில்லைச்சிற்றம்பலத்தைப் புகழ்ந்துபாடி, அறிவுநூற் பொருளினைப் பாடி, இறைவன் அப்பொருளாய் நிற்கும் முறையையும்பாடி, ஒளியுருவனின் ஆற்றலைப்பாடி, அவன் சென்னியிற் சூடப்பெற்றுச் சூழ்ந்துள்ள கொன்றை மாலையையும் பாடி, அவன் ஆதியான முறையையும்பாடி, அந்தமான முறையையும் பாடி, (பிறரில் நின்று நம்மை) வேறுபடுத்திச் சிறப்பாக வளர்த்துக் காத்த வளையல் நிறைந்த கையுடைய அம்மையின் திருவடிச் சிறப்பினைப் பாடி நீராடுவோமாக.

சோதி - ஒளி. ஒளியுள் மாயேயமான பௌதிகச்சோதியும், தற்சோதியும் என இருவகையுண்டு. பௌதிகச்சோதி - சூரியன் சந்திரன் அக்கினி முதலியன. தற்சோதி - சிவம். ஆகையால் ஈண்டுச் சோதி என்றது எல்லா ஒளிப் பொருள்களுக்கும் ஒளி தருவதாய், புறவிருளையும் அகவிருளாய ஆணவத்தையும் அகற்றவல்லதான ஞான சொரூப சிவச்சோதியையாம். அதன் திறமாவது ஆன்மாக்களின் அகவிருளைப் போக்கி அறிவு விளக்கத்தைச் செய்யும் உபகாரம். அதனைப் பாராட்டிப் பாடி என்க.

அருவுருவான பேரொளிப் பிழம்பின் திறம் பாடி என உரைப்பர் சிலர். சோதியுருவையும் காண முடியாத உயிர்களுக்கு உருத்தாங்கி மாலை முதலியன புனைந்து தோன்றுவன் என்பார் அவன் அடையாள மாலையாகிய 'சூழ் கொன்றைத்தார் பாடி' என்றார். ஆகவே, 'வேதப் பொருள் பாடி' என இறைவனது ஞானமேயான அருவநிலையும், 'சோதி' என அருவுருவநிலையும், 'கொன்றைத்தார் பாடி' என உருவ நிலையும் முறையே உணர்த்தப்பெற்றமை காண்க.

தாய், தன் மகனைக் குற்றங்கண்டவிடத்து அடித்துச் சினந்து திருத்தியும், குணங்கண்டவிடத்துக் கொடுத்தும் எடுத்தும் பாராட்டி இன்புறுத்தியும் வளர்ப்பள். அதுபோலச் சிவசத்தியாகிய தாயும், உயிர்கள் பரிபாகம் எய்துதற்பொருட்டு அவைகளைப் பந்தித்து நின்ற மலத்திற்கு அனுகூலமாய் நின்று வினைப்போகங்களை அழுந்தி அனுபவிக்கச்செய்து, உயிர்கள் பரிபாகம் எய்திய காலத்து, அருட் சத்தியாய் இன்பமூட்டுபவள் என்பதைப் 'பேதித்து நம்மை எடுத்த பெய்வளை' என்றதால் குறிப்பித்தார்.

நம்மைப் பேதித்தலாவது மறைப்புச் சத்தியாய் வினைப்போகத்துள் அழுத்துதல். வளர்த்தலாவது வினைக்கீடாக இன்பத் துன்பங்களை நுகரச் செய்தல். எடுத்தலாவது வினைச்சுழலில்

*ஆழ்ந்து போகாதவாறு கைகொடுத்துத் தூக்குதல். இவ்வண்ணம் காக்கும் சக்தியின் திருவருளாகிய பாதங்கள் நம்மை ஆட்கொள்ளுந் திறத்தைப் பாடி என்க.*

*இறைவன் திறத்தையே பாடி வந்தவர், அங்ஙனம் பாடச் செய்யும் திருவருட்சத்தியின் திருவருட்டிறமும் தம் நினைவில் தோன்ற இவ்வண்ணம் இறைவனை ஐந்தொழிலியற்றச் செய்து எம்மை வளர்த்தெடுக்க பராசத்தியின் பாதத்திறம் பாடியாடுக என்கின்றார். பெய் வளை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய் உமாதேவியாரை உணர்த்தியது.*

***குறிப்பு :-*** *குழை, மகளிர் காதணி 'பூண்பைங்கலன்' என மாற்றுக. கோதையுடைய கூந்தல் ஆடவெனவும், கோதை போன்ற கூந்தலாட வெனவுங் கொள்வதுண்டு.*

**169.** **ஒரொருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்**
**சீரொருகால் வாயோவாள் சித்தங் களிகூர**
**நீரொருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்**
**பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணியாள்**
**பேரரையற் கிங்ஙனே பித்தொருவர் ஆமாறும்**
**ஆரொருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்**
**வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி**
**ஏருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய். 15**

***உரைநடை :-*** *'வாருருவப் பூண்முலையீர்' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *கச்சணிந்த அழகிய அணியுடன் கூடிய நகிலுடைய நங்கையீர்! ஒருத்தி ஒவ்வொரு சமயத்திலே எம்பெருமான் என்று சொல்லிச் சொல்லியே, நமது தலைவனுடைய புகழினை ஒருதரத்தோடு நிறுத்தாது வாய் ஓயாது பேசுவாள். மனமகிழ்ச்சி மீக்கூர்தலினால், ஒருகாலும் நீர்வற்றாது நீண்ட அருவிகளைக் கண்கள் இடைவிடாது பெய்ய, நிலத்தின் மிசை ஒரே முறையாக எழாது வணங்குதலை யுடையாள், வானவர்களை ஒருகாலும் வணங்க மாட்டாள். பெரிய மன்னனாகிய இறைவனுக்கு இவ்வாறு அன்பால் மாலுடையள் ஆகும் விதத்தையும் இவ்வாறு ஆண்டுகொள்ள வல்ல அறிஞராகிய ஒப்பற்ற பெருமான் யாரோ, அவரது திருவடிகளையும் நாம் பாடி, அழகிய தோற்றமுடைய புதுப்புனல் நிறைந்த பொய்கையில் வீழ்ந்து ஆடுவோமாக.*

*குறிப்பு :-* *இடைவிடாது நிட்டை புரிவாள் செயல் ஒவ்வொரு சமயத்திலே வெளிப்பட, அதன் தன்மைகள் இன்னவாறு என்று குறிப்பித்தமை காண்க. பெண்கள் கூட்டத்தில் தலைமையானவள், தம்மொடு சேராத ஒரு பெண்மணியின் உயர் தன்மையினை எடுத்துக் காட்டித் தாமும் அத்தகையராதல் வேண்டுமென அறிவுறுத்தியவாறு. பனித்தல் - துளித்தல், இடைவிடாது பெய்தல்.*

**170.** முன்இக் கடலைச் சுருக்கி யெழுந்து(உ) டையாள்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தெம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மறையேலோர் எம்பாவாய். **16**

***உரை :-*** *மேகமே, கார்காலத்திற்கு முன்னே, இந்தக் கடலைக் குடித்து அதனை நீர் குறையச் செய்து, மேல்வானில் எழுந்து எம்மையுடையாளாகிய உமையம்மை திருமேனி போல நீல நிறத்தோடு விளங்கி, அவளது சிற்றிடைபோல மின்னல் விடுத்து விளங்கி எங்கள் பெருமாட்டி திருப்பாதங்களின் மேலுள்ள அழகிய பொன் சிலம்பு போல முழங்கி, அவளது திருப்புருவம் போல வானவில் வீசி, அம்மையை விட்டு நீங்கப்பெறாத எமது வேந்தனாகிய சிவபெருமான் பிறரினு முற்பட்டும், அவனடியவர்களுக்கும் அம்மை (அவள் அடியாராகிய) நமக்கும், முந்திப் பொழிகின்ற இனிய அருள்போல நீரினைப் பெய்வாயாக.*

*இத்திருப்பாட்டில் இறைவி ஐந்து முறையாகக் குறிக்கப் பெற்றிருக்கிறார். கிரியாசத்தியாக இருந்து உயிர்களை இருவினைக்கு ஏற்ப உடலோடு கூட்டிச் செயற்படுத்துதலால் உடையாளென்றும், உடலோடு கூடி இவ்வுலகத்து இன்பமெனத் துய்க்கும் சிறுநிலையைக் காட்டிலும் பேரின்பத்தைப் பெறுதலே சிறந்ததென்ற உணர்ச்சியை ஞானசத்தியாயிருந்து உதவுதலை உணர்ந்தநிலையில் எம்மை ஆளுடையாள் என்றும், ஞானத்தில் தலைப்பட்ட உயிர்களாகிய*

*நம்மை இச்சாசத்தியாய் இருந்து ஈர்த்து ஆட்கொள்ளுதலின் எம்பிராட்டி என்றும், இம்மூவகை வடிவாயும் கலந்து நின்று திரோதான சத்தியாய்ப் பரிபாகம் வருவிக்கும் ஆதிசத்தியை 'நந்தம்மை ஆளுடையாள்' என்றும், இருவினை ஒப்பு முதலாயின பெற்றுப் பரிபாகமடைந்தபோது சிவானுபவத்தில் திளைக்கச் செய்யும் பரையை அடைமொழியின்றி அவள் என்றும் கூறியமை காண்க என்பர்.*

*இவை அனைத்தும் பரிபாகம் பெற்ற ஆன்மாவின் கூற்றாகவே அடுக்கிக் கூறப்படுதலின் ஒரே கருத்துடையனவாக இருத்தலை எண்ணி, உடையாள் அவள் என்றபோது ஒன்றிய நிலையிலும், ஆளுடையாள் எம்பிராட்டி என்றபோது அனுபவ நிலையிலும், ஒன்றாயும் வேறாயுமிருந்து திருவருளைத் துய்க்கின்ற முறை கூறியது எனலும் ஆம்.*

*மழை இன்னருளே என்னப் பொழி என உலகியல்நோக்கிக் கூறினும் பேரின்பநிலையில் மழை என்ன இன்னருளைப் பொழி என உமாதேவியாரை வேண்டிக்கொள்வதால் இத்திருப்பாடல் சத்தியை வியந்ததாயினமை அறிக.*

***குறிப்பு :-** முன் - காலத்திற்குமுன். முன்னி - முந்தி, முற்பட்டு, விரும்பி யென்றும் பொருள் கொள்வர். 'இட்டிடை' என்பதில் இட்டு - சிறுமை, நுண்மை, 'ஆகா றளவிட்டிதாயினும்', என்றதிற் போல.*

**171. செங்க ணவன்பால், திசைமுகன்பால், தேவர்கள்பால்,**
**எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்**
**கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி**
**இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்**
**செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை**
**அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை**
**நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்**
**பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய். 17**

***உரைநடை :-** 'கொங்குண் கருங்குழலி' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-** வாசனையை (இயற்கையாகக்) கொண்ட கரிய கூந்தலை யுடையாளே, சிவந்த கண்ணையுடைய திருமாலிடத்தும், நான்முக னிடத்தும், பிற விண்ணவர்களிடத்தும் வேறெவ்விடத்தும் இல்லாத*

ஒப்பற்ற பேரின்பம் நம்மைச் சாரும்படியாகச் சிறியோங்களாகிய நம்மைப் பாராட்டி, இவ்வுலகிலே நமது வீடுகள் தோறும் எழுந்தருளி வந்து தனது செந்தாமரை மலர்போன்ற அழகிய திருவடிகளைக் காட்டியருளும் அண்ணலை, அழகிய கருணை நோக்குடைய மன்னனை, அடிமைகளாகிய நமக்குக் கிடைத்தற்கரிய அமுதத்தை, நமது தலைவனை நாம் பாடி, அழகு மிகுந்து விளங்கும்படியாகத் தாமரைத் தடாகத்தின் புதுப்புனலில் வீழ்ந்து முழுகுவோமாக.

***குறிப்பு :-*** *பெண்டிருள் ஒரு பெண்ணை விளித்து மற்றொரு பெண் கூறுவதாக இயற்றப்பட்டது. கொங்கு - மணம். உத்தமப் பெண்டிர் கூந்தலுக்கு இயற்கை மணமுண்டென்ப. சேவகன் - வீரன், அண்ணல். நலம் - அழகு.*

**172.** **அண்ணா மலையான் அடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்**
**விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றார்போல்**
**கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்**
**தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாமகலப்**
**பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்**
**விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்**
**கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்**
**பெண்ணேஇப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்.** **18**

***உரைநடை :-*** *'பெண்ணே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *மாதே! அண்ணாமலை யுறையும் அண்ணலின் திருவடித் தாமரைகளின்பாற்போய் வணங்கும் வானவர் மகுடங்களி லுள்ள இரத்தினங்களின் தொகுதி, (இறைவன் பேரொளி முன்) சிறப்பு விளக்கமிழந்தாற்போல, (வான்) இடம் நிறையுங் கதிரவனது கதிர்கள் தோன்ற, இருளானது மறைய, நட்சத்திரங்கள் குளிர்ச்சி பொருந்திய தமது ஒளிமங்கி யொழிய, அப்போழ்திலே, ஆணாகிப் பெண்ணாகி அலியாய் விளக்க மிக்க ஒளி பொருந்திய வானுலகமாகி மண்ணுலக மாகி, இவ்வளவிற்கும் வேறாய பொருளாகி, அன்பர்க்குப் பெருமை மிக்க அமுதமுமாய் நின்ற பெருமானது திருவடிகளைப் பாடி இப்புதுப்புனலில் வீழ்ந்து மூழ்குவோமாக.*

*குறிப்பு :- கண்ஆர்இரவி - உயிர்களின் கண்ணுள் நிறைந்து பொருள்களைப் புலப்படுத்தும் சூரியன். முன்பாட்டுப்போல, இதுவும் ஒருத்தி மற்றொருத்திக்குக் கூறியது. அண்ணாமலையில் இப்பதிகஞ் செய்யப்பட்டதற்கு, 'அண்ணாமலையான்' என்றது ஒரு குறிப்பு. தில்லையும் சில செய்யுட்களில் பேசப்படுதல் காண்க. வீறு - தனிச்சிறப்பு; கண்ணார் இரவி என்பதிற் கண் - இடம். 'கண்ணாரமுத' என்பதிற் கண் - பெருமை. சூரியன், சந்திரன், தாரகைகள் முதலிய ஒளியுருவினராய விண்ணவர் வாழும் விண் - 'பிறங்கொளி சேர்' என விசேடிக்கப்பட்டது. கழல் - திருவடிக்கு இலக்கணைப் பெயர். தாரகைகள் - கோள்களும், விண்மீன்களும்.*

**173.** **உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்(று)**
**அங்(கு)அப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்**
**எங்கள் பெருமான் உனக் கொன் றுரைப்போங்கேள்**
**எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க**
**எங்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க**
**கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க**
**இங்(கு)இப் பரிசே எமக்கெங்கோன் நல்குதியேல்**
**எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோர் எம்பாவாய். 19**

***உரை*** *:- எங்கள் தலைவனே, 'உன் கையிலுள்ள பிள்ளை உனக்கே சரண்' என்னும் பழமொழியைப் புதுப்பிக்கின்றோ மென்று நீ சொல்லக்கூடியதை அஞ்சி, உனக்கு ஒரு விண்ணப்பஞ் செய்கின்றோம், நீ கேட்டருள்வாயாக. எமது நகில்கள், நினது அன்பரல்லாதார் புயங்களைத் தழுவாதொழிக. எங்கள் கைகள் உனக்கன்றி (வேறு தேவர்க்கு) எவ்வகையான தொண்டுஞ் செய்யாதொழிக. இரவும் பகலும் எங்கள் கண்கள் நின்னைத் தவிர வேறொன்றையுங் காணா தொழிக. இந்நிலவுலகில் இம்முறையே எங்களுக்கு ஐயனே நீ அருள் புரிவையாயின், பகலவன், எத்திசையில் உதித்தால் எங்களுக்கு என்ன? (எது எப்படியானாலுங் கவலை யாதுமில்லை).*

*குறிப்பு :- பெண்கள் பலரும் இறைவனை வேண்டிப் பாடல். தாயே தன் பிள்ளையைக் காத்துக் கொள்ளுவளாதலின், அவள் பிள்ளை அவளுக்கு அடைக்கலமென்று பிறர் சொல்லுதல் மிகை யாகும். அதுபோல, இறைவனிடம் வேண்டுகோள் செய்தல்*

*மிகையென்ற அச்சம் இருப்பினும், ஆசைபற்றி வேண்டுகோள் செய்வ மென்பார், இப்பழமொழியை எடுத்தியம்பினர். உரிமைப் பொருளைக் காட்டிலும் அடைக்கலமாகக் கொடுத்த பொருளைப் பாதுகாக்க வேண்டியது இன்றியமையாதது. 'அப் பழஞ் சொல்' என்பதில், அகரம், பண்டறிசுட்டு. அங்கு - அசை. அதுவும் பழமை குறிப்பதே. அன்பரிற் காணப்படுபவனும் இறையாதலின் அவரைக் காண்பதை வேறாக வேண்டிற்றிலர். அன்பர் பணி அரன் பணியாதலுங் கொள்க. மாதர் பலராதலின், அவர்கள் கணவரும் பன்மையிற் கூறப்பட்டனர்; ஒவ்வொருவர்க்கே ஒவ்வொரு கணவன், என்ற கருத்திற்கு ஈண்டு மாறு யாது மில்லை.*

174. போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுகநின் அந்தமாஞ் செந்தளிர்கள்
போற்றியெல் லாவுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்
போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றியெல் லாவுயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்யஆட் கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியா மார்கழிநீ ராடேலோர் எம்பாவாய். 20

***உரை :-*** *எங்களைக் காப்பாற்றும் பெருமானே! எப்பொருட்கும் முதலாயுள்ள உனது திருவடிக் கமலங்களை எங்களுக்குக் கொடுத்தருள்க. எவற்றிற்கு முடிவாயுள்ள செவ்விய இளங் குழை போன்ற மெல்லிய திருவடிகளை எங்களுக்குக் கொடுத்தருள்க. எல்லா உயிர்களும் தோன்றுதற் கேதுவாகிய திருவடிகளுக்கு வணக்கம். எல்லா உயிர்களும் நிலைபெறுதற்குரிய பாதுகாப்பாகிய அழகிய கழலணிந்த திருவடிகளுக்கு வணக்கம். எல்லா உயிர்களும் முடிவெய்துதற் கேதுவாகிய திருவடிக ளிரண்டிற்கும் வணக்கம். திருமாலும் பிரமனும் (செருக்கினாற்) காணவொண்ணாத தாமரை மலர்களுக்கு வணக்கம். நாங்கள், உய்தி கூடும்படி, அடிமையாக்கி ஆண்டருளும் பொற்பூம் பாதங்களுக்கு வணக்கம். (அவ்வாறு) வணங்கி நாம், நீர் நிறைந்த துறையின்கண் முழுகுவோமாக. (அல்லது நாம் ஆடும்) மார்கழி நீர்க்கு வணக்கம்.*

***குறிப்பு :-*** *முதலடியிற் போற்றி என்பதற்கு ஆடி என்பதற்குப் போல பொருள் கொண்டு, 'காப்பாற்றுபவனே' என்று பொருள்*

*கொள்ளப்பட்டது. 'போற்றி' என்பதற்குக் காக்க வெனவும்பொருள் கொள்ளலாம். போகம் - பாதுகாப்பு. சடவுலகிற்கும் சித்துலகிற்கும் ஆதியும் அந்தமுமாய் இறைவன் நிற்பதை அடிகள் கூறியருளினர். உயிர்கள் முத்தொழிற் படுவதைப் பின் மூன்றடிகளிற் கூறினர். யான் எனதென்னுஞ் செருக்கில் உயிர் ஆழ்ந்து மறைப்புத் தொழிற்படுவதை அரிஅயனில் வைத்துரைத்தார். அருளலை ஈற்றயலடியிற் குறித்தார். எனவே இறைவனது ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருள லென்னும் ஐந்தொழிலும் இங்குக் கூறப்பட்டமை காண்க. பேரின்பக் கடலுக்கு அறிகுறியாக, ஆர்கழி நீரைக் கூறினர். 'மார்கழி'யெனவும், ஆர்கழியெனவும் பிரிக்கலாம்.*

*இத்திருப்பாட்டில், இறைவன் திருவடிகளே எல்லாமாகவும் இன்ப நிலைக்களனாகவும், ஐந்து தொழில்களை இயற்றும் அருள் நிலையமாகவும், முத்தித் தானமாகவும் இருத்தலைச் சொல்லிப் போற்றுகிறார்.*

*இவ்வண்ணம் மார்கழி நீராடி அதன் பயனாகக் கன்னியர் அனைவரும் ஒருங்குசேர்ந்து இம்மை மறுமைப் பயன்களை ஒரு சேர உதவிய இறைவன் திருவடிகளைத் தளிராகவும் பொற்பூக்களாகவும் அனுபவித்துப் போற்றித் தம்மைக் காத்தருளுக என்று வேண்டிக் கொள்கிறார்கள்.*

***திருச்சிற்றம்பலம்***

*திருவண்ணாமலையில் அருளிய*

## 8. திரு அம்மானை

*அடிகளார் திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்குங் காலத்து, ஒருநாள் கன்னிப்பெண்கள் தெரு முற்றத்தில் இருந்து அம்மானை பாடுதலைக் கண்டார். அவர்கள் கூற்றாக அண்ணாமலையார் புகழை அமைத்துத் திருவம்மானை என்ற இதனை அருளிச்செய்தார்.*

*சிவத்தைத் தரிசித்துச் சிவபோகத்தழுந்திய நிலையில் தற்போதம் அழியப் பெண்மை தலைசிறக்க, ஆன்மநாதன் புகழ் அமைய அம்மானைப் பாட்டாக அருளிச்செய்தமையால் இது ஆனந்தக் களிப்பாயிற்று.*

*திருவம்மானை - இது மகளிர் ஆடும் விளையாடலில் ஒன்று. இசை தழுவிய பாட்டாக, மகளிர் மூவர் ஒருங்கிருந்து பாட்டுடைத் தலைவனது புகழையும் அழகையும் ஆற்றலையும் வியந்து ஒருத்தி வினாவாகப் பாட, மற்றவள் அதனை ஒட்டியும் வெட்டியும் உரைக்க, மற்றவள் (மூன்றாமவள்) அமைதி கூறுமுறையாகப் பாடப்பெறுவது ஏனைய அம்மானைப் பாட்டினிலக்கணம்.*

*இதன்கண் இறைவனுடைய கழலையும் மேனியையும் மாலையையும் சிறப்புக்களையும் அவனால் அடையத்தக்க ஆனந்தத்தையும் வியந்து, ஒருத்தி அம்மானாய்! எனத் தன் தோழியை அழைத்துப் பாடுதும் எனக் கூறியிருத்தல் காண்க.*

*பழைய உரை 'தேனுந்தும் சொல் திருவம்மானை ஆனந்த யோகக் களிப்பதுவாகும்' என்று அறிவிக்கிறது. அம்மானை ஆடும் போது கண்ணும் கருத்தும் புறம்செல்லாது தலைக்குமேற் சென்று கைக்கு மீளும் காளையே நோக்கியிருத்தல்போல, துவாதசாந்தம் வரையில் சென்று மூலாதாரம் வரையில்வந்து ஒடுங்கும் சிவசத்திகளையே நோக்கியிருத்தல் ஆன்மாவின் இயல்பாகும் என்பதனை விளக்க ஆனந்தயோகக் களிப்பாகிய திருவம்மானையை அடிகள் அருளிச்செய்தார் என்க.*

--------

### ஆனந்தக்களிப்பு

**வெண்டளையான் வந்த ஆறடித்தரவு கொச்சகக் கலிப்பா**

*திருச்சிற்றம்பலம்*

175. செங்கண் நெடுமாலும் சென்றிடந்துங் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொண்டு
தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறையான்
அங்கணன் அந்தணனாய் அறைகூறி வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 1

***உரைநடை :-*** *'அம்மானாய்' என்பதை முதலிற் கொள்க. 'அறைகூவி வீடருளும்' என்பதை 'ஆட்கொண்டு' என்பதன் பின் அமைக்க.*

***உரை :-*** *அம்மனை யாடும் அம்மையே! சிவந்த கண்ணையுடைய நெடிய திருமாலும் (பன்றியாய் மண்ணைத்) தோண்டிப் போயுங் காணமுடியாத ஒளிவிளங்குந் தாமரைபோலுந் திருவடிகளோடு நிலவுலகத்தே புகுந்தருளி, நம்முடைய பிறப்பைத் தொலைத்து, எம்போலியரையும் அடிமையாக் கொண்டு, வலிய அழைத்து, வீட்டினை நல்கும், தென்னை மரங்கள் செறிந்த பொழிலையுடைய அழகிய நல்ல திருப்பெருந்துறை யுடையானாகியும், அழகிய திருநோக்கினனாகியும் சிறந்த பேரருளாளனாகியு மிருப்பவனது அருளழகு ததும்பு நெடிய கழலணிந்த திருவடிகளையே நாம் பாடுவோமாக.*

***குறிப்பு :-*** *நெடுமா லென்றது, தேவருட் சிறந்தமையோடு, திருப்பாற்கடலில், நெடிய உருவொடு பள்ளிகொண்டமை கருதி யென்ப. செவ்வரி படர்ந்திருத்தலாற் கண்கள் சிவந்தன. அது உத்தம விலக்கணமென்ப. உம்மை உயர் வுணர்த்திற்று. இடந்து சென்றும் என மாற்றுக. எந்தரம் - எமது தரம் - எமது பக்குவநிலை. உம்மை. இழிவுணர்த்திற்று. பாதம் - பாதத்தோடு, பாதங்களையுடைய பெருமானெனவும் கொள்ளுவர். தென்னன் - தென் + நன் - அழகிய நல்ல. 'பாண்டியன்' எனவும் பொருள்கொள்ளுப. அறை கூவுதல் - போர்க்கு வலிய அழைத்தல். தலைநாள் தண்ணீரளித்த உதவியைத் தெங்கு பலநாளும் தலையாலே தருதலைப்போல், சிவஞானமுதிர்ச்சிக் கண் ஒரொரு கால உயிர்கள் செய்கின்ற சிவத்தொண்டை வாயிலாக வைத்து என்றும் பெருங்கருணை புரிபவன் இறைவன் என்பதனை*

விளக்கத் 'தெங்கு திரள்' சோலைத் தென்னன் பெருந்துறையான்' என்றார்.

அம்கண்ணன் - அழகிய கண்களையுடையான். கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம் ஆதலின் இறைவனுடைய மூன்று கண்களும், மூன்று வகைக் கருணையாகிய அழகையுடையன. இறைவற்கு முச்சுடரும் மூன்று கண்களாதலின் முதற்சுடராகிய ஞாயிறு உயிர்களுக்கு வளர்ச்சியையும், இரண்டாம் சுடராகிய திங்கள் உள்ளீடாகிய பயனையும், மூன்றாவது சுடராகிய தீ சங்கரித்து வீடுபேற்றையும் அளிக்கும் அழகுடைமையின் 'அங்கணன்' என்றார்.

அந்தணன் - அழகிய தட்பத்தினை உடையான். கோடை வெயிலில் சென்றார்க்குக் குளிர்ந்த நிழல் தட்பம் தருதல் போல, பிறவி வெம்மையில் வெதும்பினார்க்குக் குருநாதனுடைய திருவடி குளிர்ச்சியாக அனுபவிக்கப் பெறுதலின் 'அந்தணனாய்' என்றார்.

வெப்பமானி கொண்டு தட்பத்தை அளக்க முற்படுவார் போலச் சிவஞானத்தான் அறியவேண்டிய சிவனடியைப் பசுஞானத்தான் பார்க்க முற்பட்டமையின் அடிகள் திருமாலுக்குக் காண்பரியவாயின.

இந்தப்பூமி பிரகிருதிமாயா காரியமாயிருந்தும் உயிர்கள் மாட்டு வைத்த பெருங்கருணையால் வலிய தாமே எழுந்தருளினன் என்பார் 'பூதலத்தே போந்தருளி' என்றார்.

அங்ஙனம் எழுந்தருளியதோடு அமையாது இன்ப உலகு சேர எல்லாரும் வாருங்கள் என்று வலிய அழைத்தான் என்பார் 'அறைகூவி' என்றார்.

எந்தரமும் ஆட்கொண்டு - எமது தன்மையாலும் அடிமை கொண்டு. இறைவனால் ஆட்கொள்வதற்குரிய பரிபாகச்சிறப்பு எமக்கு இல்லையாயினும் எம்நிலையில் இரங்கி வந்து, எம்மைப் போலவே மானிடச்சட்டையும் தாங்கி, கண்டும் காட்டியும் தொட்டும் ஆட்கொண்டான் என்பதாம்.

**176.** பாரார் விசும்புள்ளார் பாதாளத் தார்புறத்தார்
ஆராலுங் காண்டற் கரியான் எமக்கெளிய
பேராளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றி
வாரா வழியருளி வந்தென் உளம்புகுந்த

ஆரா அமுதாய் அலைகடல்வாய் மீன்விசிறும்
பேராசை வாரியனைப் பாடுதுங்காண் அம்மானாய். 2

***உரை :-*** *நில வுலகிலுள்ளாரும் வானுலகிலுள்ளாரும் கீழுலகிலுள்ளாரும், இவற்றிக்குப் புறமாய வேறுலகிலுள்ளாரும், ஆகிய யாவராலும் (தமது முயற்சியாலே) காணவொண்ணாத பெருமான், நமக்கு எளிவந்தருளிய பெருமையுடையவன், பாண்டிப் பெருமான், பெருந்துறையில் வீற்றிருப்பவனாய், வந்து எனக்குப் பித்து மிகும்படி செய்து (பிறவிக்கு) மீளாத நெறிதந்து, என்னுடைய உள்ளத்தே கோயில்கொண்ட, தெவிட்டாத அருமருந்தாய், (முன்னொரு காலத்திலே பரதவர் தலைவன் பொருட்டு) கொந்தளிக்குங் கடலிலே மீனைப்பிடிக்க வலைவீசிய, (அன்பர்க்குப்) பெருவிருப்பாய் கடல் போல்வானை, நாம் பாடுவோமாக.*

***குறிப்பு :-*** *அடிகள் அம்மானையாடும் மகளிரைப் பாடக் கூவுவதாகவே இப்பகுதிப் பாடல்கள் அமைந்துள்ளன. 'பேராளன்' என்பதிற் 'பேர்' - பெருமை. பிச்சு - பித்து. விசிறும் - (வலை) வீசும். வார் - கடல். 'வந்து' என்பதைப் 'பிச்சேற்றி' என்பதற்குமுன் அமைக்க.*

**177. இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும்
அந்தரமே நிற்கச் சிவனவனி வந்தருளி
எந்தரமும் ஆட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்ச்
சிந்தனையை வந்துருக்குஞ் சீரார் பெருந்துறையான்
பந்தம் பரியப் பரிமேற்கொண் டான்தந்த
அந்தமிலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய். 3**

***உரை :-*** *இந்திரனும் பிரமனும் திருமாலும், (அதிகார வகையினராகிய) பிற தேவரும், (பொதுவான) விண்ணவரும், வானுலகிலே (இறையருளை நாடி) ஏமாந்து நிற்கவும், (அவர்களைக்) கடந்து சிவபெருமான் இந்நிலவுலகிலே எழுந்தருளி, திருத்தோளிலணியப்பட்ட திருநீறுடை யானாய் (பக்குவம் போதாத) எம்போலியரையும் ஆண்டு கொண்டருளி, எமதுள்ளத்துட் புகுந்து அதனை (அன்பால்) உருகுவிக்குஞ் சிறப்புப் பொருந்திய திருப்பெருந்துறைப் பெருமான், (பாண்டியன் முதலோர்) பாசத்தளை அறுப்பட்டொழியக் குதிரைமேலெழுந்தருளினன். அவன் எமக்குக் கொடுத்தருளிய எல்லையற்ற பேரின்பத்தை வியந்து பாடுவோமாக.*

***குறிப்பு :-*** *'ஏனோர்' என்பதற்கு வானவரொழிந்த முனிவர்*

*முதலிய பிறர் என்பாருமுளர். 'அந்தரம்' என்றமையால், 'ஏனோரும்' என்றது மேலுலகிலுள்ள விண்ணவர் வகையினரையே. வானிற் செல்லும் முனிவர், வானவருள் அடங்குதல் கூடும். 'அந்தரம்' என்பதற்கு 'நடு' வென்று பொருள். 'இறைவன் சிவலோகம் நின்று வரும் வழியில் இடையிலே' என்று பொருள் கொள்ளுவாருமுளர். 'தோட்கொண்ட நீற்றனாய் எந்தரமும் ஆட்கொண்டு' என மாற்றுக. உள்ளத்தை உருகுவிப்பவனும் அவனே யாதலின், 'வந்துருக்கும்' என்றார். பரிய - அற, ஒழிய; 'பறிய'வென்று பாடங்கொண்டு, 'நழுவ' என்று பொருள் கொள்ளுவது முண்டு.*

178. வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனுங்
கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய
தான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்
டுன்வந்து ரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து
தேன்வந் தமுதின் தெளிவின் ஒளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 4

***உரை :-*** *வானுலகஞ் சேர்ந்துள்ள விண்ணவரும், திருமால், பிரமன், இந்திரன் என்பாரும், (தவம் புரிவான்) காட்டிலே நின்று (யாதும் உட்கொள்ளாது) உடம்புலரப் பெற்றும், உடல்மீது புற்றானது வளரப்பெற்றும், காணப்பெறாத கடவுள் தானே (ஆசானாக) எழுந்தருளி வந்து நாய்போலும் எனக்குத் தாயைப்போல முதற்றரமான கருணை எழுந்தருளி, புறத்தே, உடம்பு மயிர் சிலிர்த்து உள்ளே மூச்செழுத்து மகிழ்ச்சியடைதற் கேதுவாகிய, தேன் தன்மை யுடையதாய், அமுதத் தெளிவுபோல்வதாய், ஒளி பொருந்தியதாய், இருதயாகாசத்திற் றோன்றிய பெருமைமிக்க திருவடியை நாம் பாடுவோமாக. இறைவன் தேனாய் மயிர்த்தொளைதோறும் கசிந்து இனிக்க அனுபவமாயினான்.*

***குறிப்பு :-*** *முதலடியில் 'வான்' - பூத ஆகாயம். இறுதியடியில் - இருதய ஆகாசம். கான் - கானம் என்பதன் கடைக்குறை. தான் - இறைவன். ஊன் (கண்) உரோம (புளகம்) வந்து, என மாற்றுக. உயிர்ப்பு - மூச்சு, உயிர் தளிர்த்தலாய மகிழ்ச்சி.*

**179. கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை**
**வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்**
**கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை**

வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலமன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்காண் அம்மானாய். 5

***உரை :-*** *தனது தன்மையைக் கற்றறியாத உள்ளத்தையுடைய கீழ்ப்பட்ட நாய்போன்ற என்னை அருட் பித்தேற்றுவித்து, வல்லமை யுடையானாய் அழகிய நல்ல பெருந்துறை வீற்றிருப்பவனாய் (எனது நெஞ்சமாகிய) கல்லினைக் குழைத்துப் பழத்தின் தன்மையதாகச் செய்து, தனது பேரருள் வெள்ளத்திலே ஆழ்வித்து, எனது இருவினை களைத் தொலைத்த அந்தணனை, தில்லைப்பதி புகுந்து ஞான அம்பலத்திலே நிலைபெற்று விளங்கும் விரைவுடைய காளையூர்தி யுடையானை நாம் பாடுவோமாக.*

***குறிப்பு :-*** *கல் ஆம் மனம் எனப் பிரித்து, கல் போல வலிய கசிவுறாத மனம் எனக் கொள்க. இதுவும் ஒரு பெண்ணை நோக்கிக் கூறியதே போலும். 'பிச்சேற்றி' என்பதை 'நாயேனை' என்பதற்குப் பின் அமைக்க. பிச்சு ஏற்றுதல் - என்றும் அவனைப் பற்றியே பிதற்றச் செய்தலும், காண்பன யாவும் அவனாகக் காணச் செய்தலும் ஆகிய செயல்களை உயிரினிடமாக நிகழச் செய்தல். ஒல்லை - விரைவு.*

**180.** கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்
தாள்தா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாம்மேலை வீடெய்த
ஆள்தான் கொண்டாண்டவா பாடுதுங்காண் அம்மானாய். 6

***உரை :-*** *பாங்கியே! ஒருத்தன் என்பொருட்டுச் செய்த உய்தி நெறியைக் கேட்டனையா? தீட்டிய சுதை பொருந்திய மதில்கள் பக்கத்திலே சூழப்பெற்ற அழகிய நல்ல திருப்பெருந்துறைப் பெருமான் எனக்குக் காட்டத்தக்க அரிய உண்மைகளெல்லாங் காட்டித் தனது திருவடித் தாமரைகளைக் காண்பித்துத் தன் அருளாகிய தேனைக் காண்பித்து, சிவபரம் பொருளைக் காண்பித்து, உலகினர் நம்மை இகழ்ந்து சிரிக்கவும், நாம் மேலாகிய வீட்டின்பத்தை அடையவும், என்னைத்தான் அடிமைகொண்ட விதத்தை நாம் பாடுவோமாக.*

*நிகழ்தற்கேலாத செய்தியொன்று நிகழ்ந்தக்கால் மகளிர் கேட்டாயோ செய்தியை என்று சொல்வதை இன்றும் காண்கிறோம்.*

*அதுபோல அடிகள் கேட்டாயோ தோழி என்று தோழியின் கவனத்தைக் கவர்கின்றார்.*

*கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் புலன்வழிச் செல்கின்ற என்னை மயக்கித் தன்வயமாக்கினான் என்பார் 'ஒருவன் கிறிசெய்தவாறு' என்றார். கிறி - மாயம். ஒருவன் என்றது தனி முதல்வன் என்னும் பொருளில் வந்தது.*

*தீட்டார் மதில். சுதை தீட்டப்பட்டதும் பகைவர் கடத்தற்கு அரியதுமாகிய மதில். புடைசூழ் பெருந்துறை எனக்கூட்டுக.*

*மலமாயாகன்மங்களால் கட்டுண்டு பிறவிச்சூழலில் அகப்பட்டு வருந்துகின்ற சகலான்மாவாகிய எனக்கு இருவினை ஒப்பும் மலபரிபாகமும் வருவித்துத் தத்துவரூபம் முதல் சிவரூபம் வரையில் காட்டினான் என்பார் 'காட்டாதன எல்லாம் காட்டிச் சிவங்காட்டி' என்றார்.*

*இருளில் அழுந்திய ஒருவன் ஒளியை உற்றவிடத்து இருளின் தன்மையையும் இதுவரை தான் அதில் அழுந்தி அனுபவித்த துன்பங்களையும் அறிந்து அவற்றினின்றும் நீங்கி ஒளியிலேயே இருக்க விரும்புவதுபோல, மலத்துள் அழுந்தி வினையாற்கட்டுண்டு தனு கரண புவன போகங்களில் அழுந்தியிருந்த என்னை எடுத்துத் தத்துவ தாத்வீகங்களை உணர்த்திச் சிவதரிசனம் வரையில் சித்திக்கச் செய்ததைக் குறிப்பித்தவாறு.*

***குறிப்பு :-** தீட்டு - தீட்டிய சுதை. 'காட்டாதன வெல்லாங் காட்டித் தாள்தாமரை காட்டித் தன் கருணைத் தேன் காட்டி, சிவங்காட்டி' என உரைநடை கொள்க.*

**181.** **ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானைச்**
**சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையின்**
**மேயானை வேதியனை மாதிருக்கும் பாதியனை**
**நாயான நந்தம்மை ஆட்கொண்ட நாயகனைத்**
**தாயான தத்துவனைத் தானே உலகேழும்**
**ஆயானை ஆள்வானைப் பாடுதுங்காண் அம்மானாய். 7**

***உரை :-** இடையறாது நினைவார் நெஞ்சில் வீற்றிருக்கும் உள்ளீடானவனை (அங்ஙனம் நினையாதார்க்குத்) தூரத்தே யுள்ளவனை, வீரனை, அழகிய நல்ல திருப்பெருந் துறையிலே*

*வீற்றிருந்தவனை, அந்தணனை, மங்கையை ஒரு பாதியிற் கொண்டவனை, நாய்த்தன்மை யுடையேமாகிய நம்மை அடிமையாக ஆண்டு கொண்ட தலைவனை, (நமக்குத்) தாயாகிய மெய்யனை, தானாகவே (மூவிடத்துள்ள) ஏழுலகத்திலுங் கலந்து அவையாய் நிற்பானை, அரசனை நாம் பாடுவோமாக.*

*இறைவனை எண்ணுகிற முறையில், நீர் சொட்டுவதுபோல இடையிட்டு எண்ணுதலும் எண்ணெயொழுக்கம் தேனொழுக்கும் போல இடைவிடாது எண்ணுதலும் என இருவகையுண்டு. அவற்றுள் இடைவிடாது நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் தியானிப்பவர்கள் உள்ளத்தில் என்றும் நீங்காமல் நித்தியப்பொருளாய் விளங்குகின்றான் என்பார் 'ஓயாதே உள்குவார் உள்ளிருக்கு முள்ளானை' என்றார். "நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டவன்" ''மனத்தகத்தான்'' முதலிய அருமறைகளும் ஈண்டு இணைத்து எண்ணுதற்குரியன. உள்ளான் - நித்தியன்.*

***குறிப்பு :-** 'உள்ளான்' என்பதற்கு வடமொழியில், 'அந்தரி யாமி' என்று பொருள் கூறுவர். ஆள்வான் - அரசன். தத்துவம் - மெய். இறைவன் ஒருவனே எல்லாவற்றிலுங் கலந்து அவையாய் நிற்க வல்லானென்பார் 'தானே' என்றார். நாய் அதன் முதலாளியைப் பின்பற்றுதல் போல, இறைவனைப் பின்பற்றுங் கட்டுப்பாடுடைய உயிர்களை 'நாயான' என்றார்.*

**182.** **பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்**
**பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்**
**விண்சுமந்த கீர்த்தி வியன்மண்ட லத்தீசன்**
**கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை**
**மண்சுமந்து கூலிகொண் டக்கோவால் மொத்துண்டு**
**புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய். 8**

***உரை :-** பண்களைக் கொண்ட பாடலைப் பாடும் பண்பினை உண்டாக்கியருளிய, மாதுதங்கிய பாகமுடையான், விரும்பத் தக்கான், திருப்பெருந் துறை யுடையான், விண்ணுலகில் நிலைநிறுத்திய புகழுடையான், அகன்ற பூமியின்கண் ஆண்டவனாய் விளங்குபவன், கண் அமைந்த நெற்றியினையுடைய எல்லாம் கடந்த முதல்வன், முழக்க மிக்க மதுரைமாநகரிலே, (பிட்டுவாணிச்சிக்காக) மண்சுமந்து, (உதிர்ந்த பிட்டாகிய) கூலி வாங்கி, மதுரை மன்னனால் அடிபட்டு,*

*அதனாலேற்பட்ட புண்ணையுடைய அவனது அழகிய திருமேனியை நாம் பாடுவோமாக.*

***குறிப்பு*** *:- 'பரிசு' என்பதற்குப் 'பரிசில்' என்று பொருள் கொள்ளுவாருமுளர். பண் சுமந்த பாடலுக்குப் பரிசு தந்தருளும் எனவுரைப்ப. 'பெம்மான்' பெருமானின் மரூஉ என்றுங் கொள்ளலாம். 'கீர்த்தி' கீர்த்தியுடையானுக்கு ஆகுபெயர். மண்டலம் - மண் தலம். கலி - ஒலி, முழக்கம், ஆரவாரம். 'அ' வென்ற சுட்டு, மதுரையைக் குறித்தது.*

**183.** **துண்டப் பிறையான் மறையான் பெருந்துறையான்**
**கொண்ட புரிநூலான் கோலமா ஊர்தியான்**
**கண்டம் கரியான்செம் மேனியான் வெண்ணீற்றான்**
**அண்டமுத லாயினான் அந்தமிலா ஆனந்தம்**
**பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்**
**அண்டம் வியப்புறும்ஆ பாடுதுங்காண் அம்மானாய். 9**

***உரை*** *:- மதியின் ஒரு கலையாகிய பிறையணிந்தவன், மறை களையுடையான், பெருந்துறைப் பெருமான், முப்புரிகொண்ட நூல் அணிந்தவன், அழகிய காளைவாகனத்தன், நீலகண்டமுடையான், சிவந்த திருமேனியான், வெள்ளிய திருநீறணிந்தவன், உலகத் தொகுதி கட்கு முதல்வன் ஆனவன் ஆயபெருமான், எல்லையற்ற பேரின்பத்தை (அநாதியேயுள்ள) பழைய முறையிலேயே, பழைய அடியார்களுக்கு, உலகினர் அதிசயிக்குமாறு நல்கியருளும் விதத்தை நாம் பாடுவோமாக.*

***குறிப்பு*** *:- துண்டம் - துண்டு, இங்கே கலையை யுணர்த்திற்று. பழஅடியார் - நெடுநாள் தவம் ஆற்றி ஞானம்பெற்று அனுபூதியிற் றோ்ந்த அன்பர். 'ஆ' ஆறு என்பதன் கடைக்குறை. அதனை, ஈற்றடியில், 'அண்டம் வியப்புறு' என்பதனோடும், 'ஈந்தருளும்' என்பதனோடுங் கூட்டுக.*

**184.** **விண்ணாளுந் தேவர்க்கும் மேலாய வேதியனை**
**மண்ணாளும் மன்னவர்க்கும் மாண்பாகி நின்றானைத்**
**தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானைப்**
**பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையிற்**
**கண்ணார் கழல்காட்டி நாயேனை ஆட்கொண்ட**
**அண்ணா மலையானைப் பாடுதுங்காண் அம்மானாய். 10**

***உரை :-*** *விண்ணுலகங்களை அரசாளும் இறைவர்கட்கு மேலான அறிவு நூலாசானை, மண்ணுலகில் ஆட்சிபுரியும் வேந்தர்க்கு மேன்மை தரும் பொருளாகி நின்றவனை, குளிர்ச்சி பொருந்திய தமிழ்மொழியினைப் பாதுகாக்குங் கருணைமிகுந்த பாண்டியனை, உமை நங்கை தங்கிய பகுதியானை, (யாம்) விரும்புகின்ற திருப்பெருந் துறையிலே பெருமை மிக்க திருவடிகளைக் காண்பித்தருளி நாயனைய என்னை அடிமையாகக் கொண்ட திருவண்ணாமலை யண்ணலை நாம் பாடுவோமாக. தண்ணார்தமிழ் - தண்மை நிறைந்த தமிழ். தண்மை - கேட்பதற்கு இனிமையாதலும், சொல்லுதற்கு இனிமையாதலும், ஆழ்ந்து நுகர்தற்கு உரித்தாதலுமாம்.*

***குறிப்பு :-*** *வேதியன் - வேதமோதுபவன், ஓதுவிப்பவன். வேதம் - அறிவு நூல். மாண்பு - மேன்மை. மூன்றாவது அடியில், இரண்டாவது 'தண்' நாட்டானை என்பதனோடு முடிவது. கருணையைக் குறிப்பது. பெண்ணாளும் பாகன் என்பதற்குப் பெண்ணை ஆளும் பாகன் எனவும், பெண்ணானவள் ஆளும் பாகன் எனவும் இருவகையானும் பொருள் கொள்ளலாம்.*

**185.** செப்பார் முலைபங்கன் தென்னன் பெருந்துறையான்
தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்குந் தன்மையினால்
அப்பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த
அப்(பு)ஆர் சடையப்பன் ஆனந்த வார்கழலே
ஒப்பாக வொப்புவித்த உள்ளத்தார் உள்ளிருக்கும்
அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண் அம்மானாய். **11**

***உரை :-*** *செப்பினையொத்த தனங்களையுடைய அம்மைபாகன், அழகிய நல்ல திருப்பெருந்துறையுடையான், (தன்) திருவடியை அடைந்தவர்கள் உள்ளத்தைத் தவறாதே உருகுவிக்கும் இயல்பினன், அந்தப் பாண்டி நாட்டைச் சிவலோகமாகச் செய்த கங்கை பொருந்திய சடையுடைய எந்தை, (தனது) இன்பம் மிக்க மாணடிகட்கே ஈடாகக் கொடுக்கப்பட்ட உள்ளத்தை யுடையவர்களது அகத்தே குடி கொண்டிருக்கும் எல்லாவற்றிற்கும் அப்பாலாகிய சுத்த புவனங்கட்கும் அப்பாலாக உள்ள தலைவனை நாம் பாடுவோமாக.*

***குறிப்பு :-*** *ஆர்-இணை. 'அப்பாண்டி' என்பதிற் சுட்டானது பழமையையும் பெருமையையு முணர்த்தும். நாலாவது அடியில், அப்பு - நீர் - கங்கை. ஒப்பு - ஈடு. அதாவது, உள்ளத்தை அடகுவைத்து*

*அவன் கழலைப் பெறுதல். கழல் - அடி; உள், என்பது உயிரறிவின் கண் என்று பொருள்படுதல் கூடும். முதல் 'அப்பாலை' அப்பாலுள்ள இடம். 'ஐ' சாரியை; இரண்டாவது, 'அப்பாலை' - அப்பாலுள்ள தலைவன். 'ஐ' - தலைவன். 'பிரகிருதிக்கு அப்பாலுள்ளவன்' என்று பொருள் கொள்ளுவாரு முளர்.*

**186.** மைப்பொலியுங் கண்ணிகேள் மாலயனோ டிந்திரனும்
எப்பிறவி யுந்தேட என்னையுந்தன் இன்னருளால்
இப்பிறவி ஆட்கொண் டினிப்பிறவா மேகாத்து
மெய்ப்பொருட்கண் தோற்றமாய் மெய்யே நிலைபேறாய்
எப்பொருட்குந் தானேயாய் யாவைக்கும் வீடாகும்
அப்பொருளாம் நஞ்சிவனைப் பாடுதுங்காண் அம்மானாய். 12

***உரை :-*** *மை விளங்குகின்ற கண்ணையுடைய பெண்ணே! (நான் சொல்வதைக்) கேட்பாயாக. திருமாலும் பிரமனும் இந்திரனும், எல்லாப் பிறவிகளிலும் தன்னைத் தேடவும், (அவர்கட்குத் தோன்றாது), தகுதியற்ற எனக்குத் தோன்றி, என்னைத் தனது இனிய அருளினாலே, இந்தப் பிறவியிலே குருவாய் வந்து ஆண்டுகொண்டு, மேற்பிறவி எழாத வண்ணம் காப்பாற்றி மெய்யான பொருளின்கண் விளங்குபவனாய் மெய்யே நிலையான இடமாக வுடையவனாய், எல்லாப் பொருள்களுக்குஞ் சார்பாய், எல்லாம் முடியுமிடமாயுள்ள, அத்தகைய பரம்பொருளாகிய நமது சிவபெருமானை நாம் பாடுவோமாக. நோய் தீருமளவும் மருத்துவமனையிலிருக்கும் பிணியாளனைப் போலப் பிராரத்தம் தொலையுமளவும் உலகில் உடம்பில் இருந்து உழலும் உயிர்கள் அனைத்திற்கும் பரிபாக காலத்து வீடுபேறாய் இருந்து இறைவன் இன்புறுத்துகின்றான் என்பதனை "யாவைக்கும் வீடாகும் சிவன்" என்பதனால் உணரவைத்தார்.*

***குறிப்பு :-*** *'எப்பிறவியுந்தேட' என்பது பல பிறவிகளிலுந் தவஞ் செய்து நாடுதலைக் குறித்தது. மெய்யான பொருளின்கண் இறைவனது விளக்கம் கூறப்பட்டது. மெய்யான நிலையிலுள்ள உயிரின்கண்ணும், சடசத்தாகிய தூய மாயையின் கண்ணும் இறைவனது விளக்கங் குறிக்கப்பட்டது. சத்துத் தன்மையே இறைவனியல்பாதலின், அதுவே அவனுக்கு நிலைத்த இடமென்றார். அத்தன்மையிலுள்ள சடத்திலும் சித்திலும் அவன் விளங்குதலை அவன் தோற்றமென்றார். ஆனால் நிலைப்பொருள், நிலையாப் பொருளாய எல்லாம் அவனையே ஆதாரமாகக் கொண்டு நிற்றலின், 'எப்பொருட்குந் தானேயாய்' என்றார். 'தானேயாய்' என்பதைத் 'தான் ஏய் ஆய்' எனப் பிரித்துத்*

'தான் ஏயும் பொருளாய்' என்று பொருள் கொள்ளுவாருமுளர். ஏய்தல் - சார்பாதல். தோன்றாது சார்பாயிருத்தலின், ஒடுக்கநிலை குறித்தவாறாம். இறைவன் தோன்றுதலும் நிலைபெறுதலும் ஒடுங்கி நிற்றலும் ஒருவாறு ஈண்டுக் கூறப்பட்ட தென்பாருமுளர். வீடு - முடிவாய இடம். விடு, வீடென நீண்டது. விடுதல் - தங்குதல். உயிருள் பொருளுக்கும் உயிரில் பொருளுக்கும் முடிவாய இடம் ஒருவகையால் இறைவனேயாவன். உயிர் பக்குவப்பட்டு இறைவனோ டிரண்டறக் கலக்கும். உயிரல்லன, மாயையிலொடுங்க, மாயை சிவசக்தியைச் சார்ந்து நிற்கும். 'நஞ்சிவன்' என்றது உரிமை பற்றி. அப்பொருள் - அந்த ஒரு பொருள்.

187. கையார் வளைசிலம்பக் காதார் குழையாட
மையார் குழல்புரளத் தேன்பாய வண்டொலிப்பச்
செய்யானை வெண்ணீ றணிந்தானைச் சேர்ந்தறியாக்
கையானை எங்குஞ் செறிந்தானை யன்பர்க்கு
மெய்யானை யல்லாதார்க் கல்லாத வேதியனை
ஐயா றமர்ந்தானைப் பாடுதுங்காண் அம்மானாய். 13

***உரை :-*** *நமது கைகளிலேயுள்ள வளையல்கள் ஒலிப்ப, காதிற் பொருந்திய தோடுகள் ஆட, சாந்தணிந்த கூந்தல் அவிழ்ந் தசைய (அதன் கண் உள்ள மலர் விரிதலால்) தேன் ஒழுக, (அதனை யுண்ண) வண்டுகள் ரீங்காரஞ் செய்ய, சிவந்த மேனியானை, வெள்ளிய திருநீறு தரித்தவனை உயிர் தாமாகப் போய் அறிய முடியாத இடத்தை யுடையவனை, எவ்விடத்தும் நிறைந்தவனை, அன்பர்க்கு உண்மையாய் விளங்குவானை, அன்பிலார்க்கு விளங்காத அறிவனை, திருவையாற்றில் வீற்றிருந்த பெருமானை நாம் பாடுவோமாக. சேர்ந்தறியாக் கையான் - யாரையும் குவித்து வணங்கி அறியாத கைகளை உடையவன். நாமனைவரும் சிவனைக் கண்டால் கையைக் குவித்து அஞ்சலி செய்வோம். ஆனால் அவர் யாரையும் அஞ்சலி செய்தறியார் என்பதைக் கைமேல் ஏற்றிச் "சேர்ந்தறியாக் கையானை" என்றார்.*

***குறிப்பு :-*** *குழை, குண்டலமுமாய், 'மையார்' என்பதற்கு மேகம் போலக் கரிய, அல்லது 'அஞ்சனம் போலக் கருநிறமுடைய' என்பாருமுளர். 'கையானை' என்பதற்கு, 'ஒழுக்கத்தானை' என்று பொருள் கொள்ளுவாருமுளர். கை - இடம், ஒழுக்கம். 'அறிந்து சேரா' என்று மாற்றிப் பொருள் கொள்ளுவது முண்டு.*

188. ஆனையாய்க் கீடமாய் மானுடராய்த் தேவராய்
ஏனைப் பிறவாய்ப் பிறந்திறந் தெய்த்தேனை
ஊனையும் நின் றுருக்கி என்வினையை ஓட்டுகந்து
தேனையும் பாலையுங் கன்னலையும் ஒத்தினிய
கோனவன்போல் வந்தென்னைத் தன்தொழும்பிற் கொண்டருளும்
வானவன் பூங்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 14

***உரை :-*** *ஆனையாயும் புழுவாயும் மனிதராயும் வானவராயும் பிற பிறவிகளை யுடையனவாயும் பிறந்தும் இறந்தும் இளைப்புற்றேனை (ஆட்கொண்டு உள்ளத்தை மாத்திரமில்லாமல்) எனது உடம்பையும், உளம்நின்று உருகுவித்து, எனது இருவினையை ஓட்டுதலை விரும்பி தேனும் பாலும் சர்க்கரையும் போலத் தித்திப்பானாயுள்ள தலைவனைப்போல ஆசானா யெழுந்தருளி என்னைத் தனது தொண்டிலே ஏற்றுக்கொண்டருளிய சிதாகாயத்தனது அழகிய திருவடிகளையே நாம் பாடுவோமாக.*

*சுற்றித்திரியும் மாணவனுக்கு வீட்டுவேலை கொடுத்துப் படிப்பிலேயே பதியவைக்கும் ஆசிரியன்போல எனக்கு அடிமையைத் தந்து என்மனம் புறஞ்செல்லாது பாதுகாத்தான் என்பதனை 'என்னைத் தன் தொழும்பிற் கொண்டருளும் வானவன்' என்பதால் உணர்த்தினார். இத்தகைய பேருபகாரியின் திருவடியே எனக்குப் பொலிவான துணையாவன; அதனால் அவற்றையே பாடுவோம் என்றவாறு.*

*தேன் பல நிறமும் பல குணமும் பல மணமும் உடைய பல பூக்களில் வியாபித்துநின்ற இனிமையின் சேர்க்கை. அதுபோல இறைவன் பரிபாகத்தால் வேறுபட்ட பல உயிர்களிடத்தும் அவரவர்கள் தகுதிக்கேற்பக் கலந்திருந்தும், அதனை உணர்கின்ற சிவஞானியாகிய வண்டால் முழுதும் இனிமையான ஒரு பொருளாகவே உணரப்படும் தன்மையனாதலின் 'தேனை ஒத்தினிய கோன்' என்றது.*

*பால் தன் இனிமையால் உடலை வளர்ப்பதுபோல இறைவன் சிவபோகத்திற்கு உரியதாக உயிரை வளர்த்தலின் பால் ஒத்து இனிய கோன் என்றது.*

*கன்னல் - கருப்பஞ்சாறு காய்ச்சிய கட்டி. இது நாவாகிய பொறி வழியே புகுந்து இனிமை தருவதுபோல இறைவனும் காட்சி முதலிய பொறியுணர்விற்கும் இனியனாய்ச் சுவையைத் தருதலின் கூறியதாம்.*

*குறிப்பு :- பிறவாய் - பிறவியாய் என்பதன் குறுக்கம், "ஏனை" என்றமையால் பிற உயிர்களாய் என்று பொருள் கொள்ளுதல் மிகை. அறிவிச்சை செயல் மூன்றுக்கும் இன்பமளித்தலின் மூன்றுவமை கூறினார் போலும். கோன் - (காதலனாகிய) தலைவன். தொழும்பு - தொழும்பன் என்று பொருள் கொள்ளுவாருமுளர். 'வானவன்' என்பதற்குத் 'தேவன்' என்று பொருள் கோடலு முண்டு. தொழும்பன் - அடியவன்.*

**189.** சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன் தன் வேள்வியினில்
இந்திரனைத் தோள்நெரித்திட் டெச்சன் தலையரிந்
தந்தரமே செல்லும் அலர்கதிரோன் பல்தகர்த்துச்
சிந்தித் திசைதிசையே தேவர்களை ஓட்டுகந்த
செந்தாா்ப் பொழில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங்காண் அம்மானாய். **15**

***உரை*** *:- தக்கன் செய்த யாகத்திலே, சந்திரனை மெலிவித்து இந்திரனது புயங்களை நெரியும்படி தாக்கி, யாகத் தலைவனின் தலையைக் கொய்தொழித்து, வானிலே செல்லும் விளக்கமுடைய பகலவனது பற்களை உடைத்து, விண்ணவர்களைத் திக்குத் தோறுஞ் சிதறியோடும்படி செய்தலை விரும்பிய, சிவந்த மாலை யணிந்த, சோலை பக்கமெங்குஞ் சூழ்ந்துள்ள, அழகிய நல்ல திருப்பெருந் துறை யுடையானது மந்தாரப் பூமாலையை வியந்து நாம் பாடுவோமாக.*

*குறிப்பு :- தக்கன் வேள்விக்கதை வெளிப்படை. எச்சன் - யாகத் தலைவன், செந்தார் - செங்கழுநீர் மாலையாயிருத்தல் கூடும். மந்தாரம் - விண்ணுலகிலுள்ள ஐவகை மரப்பூக்களிலொன்று. அது, செம்பரத்தை யென்பாரு முளர்.*

**190.** ஊனாய் உயிராய் உணர்வாய்என் னுட்கலந்து
தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளுந்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்லுயிர்க்குங்
கோனாகி நின்றவா கூறுதுங்காண் அம்மானாய். **16**

***உரை*** *:- உடம்பாகவும், அறிவாகவும், உயிராகவும், என் கண்ணே கலந்து நின்றருளித் தேனும் அமுதமும் இனிய வெல்லமும் ஆக இனிமை தந்து, விண்ணவர் அறிதற்கரிய வீட்டு நெறியை எங்களுக்குக் காட்டியருளும், வண்டுகள் பொருந்திய கொன்றை மலரணிந்த*

*அண்ணலாய், நிரம்பிய சிறந்த விளக்கமுடைய நீங்காத பேரறிவுரு வினனாய் எல்லை கடந்த, பலகோடி உயிர்களுக்குந் தலைவனாய் நின்ற முறையை நாம் பாடுவோமாக.*

***குறிப்பு :-*** *'உயிராய்' என்பதற்கு முன் 'உணர்வாய்' என்பதை வைத்துப் பொருள் கொள்ளுக. அவ்வாறன்றி, நின்ற முறையே வைத்து 'உயிராய் என்பதற்குப் பிராணனாய், என்று பொருள் கொள்ளுவாருமுளர். உடம்பு, உள்ளம், உயிரென்பன, ஒன்றினொன்று நுட்பமாயுள்ளன. 'அமுதம்' என்பதற்குப் 'பால்' என்று பொருள் கொள்ளுவாருமுளர். உயிரறிவு போலாது, எப்போதும் விளங்கும் அறிவு இறைவனது ஆதலின் 'சீரொளிசேர்' என்றார். சீர் இயற்கையைக் குறித்தல் கூடும். அறிவுருவாய் எக்காலத்தும் உயிருலகிற் செறிதலின், 'ஆனா' என்றார். உயிர்கள் எண்ணில வாதலின், 'அளவிறந்த' என்றார். கோனொருவனே யாதலின், உம்மை கொடுத்தார். முற்றும்மையுமாம்.*

**191.** **சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்திரள்தோள்**
**கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்(று)**
**ஊடுவேன் செவ்வாய்க் குருகுவேன் உள்ளுருகித்**
**தேடுவேன் தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்**
**வாடுவேன் பேர்த்தும் மலர்வேன் அனலேந்தி**
**ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானாய்** **17**

***உரை :-*** *அழகிய கொன்றை மாலையை (த் தலையில்) அணிவேன். அணிந்து சிவபிரானது எழுச்சிமிக்க தோள்களைச் சேர்வேன். சேர்ந்து, அவனைப் புணர்ந்து, அதிலுள்ள களிப்பால் அறிவு மயங்கிப் புலவி யெய்துவேன், பின்னர், புலவி நீங்கி, அவனது சிவந்த இதழைப் பெற உருகி நிற்பேன். நெஞ்சம் உருகி அவனைத் தேடுவேன். தேடி அவனது திருவடியையே நினைந்திருப்பேன். அவனருளைப் பெறாது மெலிவேன், அதனைப் பெற்று மீண்டும் மகிழ்வேன். தழலைக் கையிலேந்தி ஆடுகின்ற கூத்தனுடைய செய்ய (கமல) பாதங்களையே நாம் பாடுவோமாக.*

***குறிப்பு :-*** *இறைவனைத் தலைவனாகவும், தன்னைத் தலைவியாகவும் அடிகள் இதனுட் குறித்தார். தலைவன் தாரை யணிதல், மாலையிட்டமை குறிக்கும். ஞான யோகத்தாற் சார்தல், கூடுதலாகும். ஞானத்தாற் கலத்தல் முயங்குதலாகும். பின்னர், உடலோடுள்ள காரணத்தாற் பிரிவு ஏற்பட, ஊடுதல் நிகழும். மீண்டும்*

*தலைவனைப் பிரிவாற்றாமை காரணமாக நாடுதலின், தேடுதலும் சிந்தித்தலும் மெலிதலும் நிகழ்வன. உறுதியாக வீடடைதல், மீண்டு மகிழ்தற்குக் காரணம். எல்லாம் இறைவன் கூத்து. ஆதலின் அவன் சேவடியைப் பாடுவோமென்றார்.*

**192.** கிளிவந்த மென்மொழியாள் கேழ் கிளரும் பாதியனை
வெளிவந்த மாலயனுங் காண்பரிய வித்தகனைத்
தெளிவந்த தேறலைச் சீரார் பெருந்துறையில்
எளிவந் திருந்திரங்கி எண்ணரிய இன்னருளால்
ஒளிவந்தென் உள்ளத்தின் உள்ளே ஒளிதிகழ
அளிவந்த அந்தணனைப் பாடுதுங்காண் அம்மானாய். **18**

***உரை :-*** *கிளியின் குரல்போல மெல்லிய சொல்லினையுடைய அம்மையின் ஒளி விளங்கும் பாகத்தானை, உள்ளத்தில் தேடாமல் வெளிப்போந்து முயன்ற திருமாலும் பிரமனும் காண்டற் கரிய அறிவனை, தெளிவு தரும் ஞானத்தேனை, சிறப்புப் பொருந்திய திருப்பெருந் துறையிலே எளியனாய் எழுந்தருளி நினைத்தற்கரிய (எதிர்பாராத) இனிய கருணையாலே, ஒளியுருவனாய்த் தோன்றி நெஞ்சினுள்ளே உயிரறிவின் கண்ணே அருட்பேரொளி விளங்குமாறு அருள்புரிந்த அழகிய பேரருளானை நாம் பாடுவோமாக.*

*உமையொருபாதியனாய்க் கயிலையிலும் மாலயனுக்கு அரியனாய் அண்ணாமலையிலும் தெளிவந்த தேறலாய்ச் சிவனடியார் சிந்தையிலும் உருவாயும் அருவுருவாயும் அருவாயும் வீற்றிருக்கும் நிலையினின்று இரங்கித் திருப்பெருந்துறையில் என்மீது வைத்த எளிவந்த கருணையால் குருமேனி தாங்கிக் குருந்தமரத்தடியில் குடிகொண்டிருந்தான் என்பார் 'சீரார் பெருந்துறையில் எளிவந்து இரங்கி' என்றார்.*

***குறிப்பு :-*** *'வந்த' என்பது முதல் வினையாயும், துணை வினையாயும் வந்தது. கிளி - அதன் குரலுக்காக நின்றது. கேழ் - ஒளி. தேறல் - தேன். உள்ளத்தினுள்ளே, என்பதற்கு நெஞ்சிற்கப்பால் உயிரின் கண்ணே யென்று பொருள் கொள்ளுக. அளிவந்த - அருள் தந்த. வருதல் துணை வினையாயின், அளிவந்த - அளித்த, கருணை செய்த. தெளிவந்த - தெளிந்த. எளிவந்து - எளிதின் வந்து, அல்லது எளிதாய். ஒளிவந்து - ஒளியாய்.*

193.முன்னானை மூவர்க்கும் முற்றுமாய் முற்றுக்கும்
பின்னானைப் பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையின்
மன்னானை வானவனை மாதியலும் பாதியனைத்
தென்னானைக் காவானைத் தென்பாண்டி நாட்டானை
என்னானை என்னப்பன் என்பார்கட் கின்னமுதை
அன்னானை அம்மானைப் பாடுதுங்காண் அம்மானாய். 19

*உரை :- மும்மூர்த்திகளுக்கு முற்பட்டவனை, எல்லாப் பொருளுமாய், அவற்றிற்கு முற்பட்டவனாயும் பிற்பட்டவனாயு முள்ளானை, சடை, பிறை முதலிய தலைக்கோல முடையானை, விரும்பத்தக்க திருப்பெருந் துறையிலே மன்னியவனை, சிதாகாயத்தனை, மங்கை பொருந்தியபங்கனை, அழகிய திருவானைக் காவி லுறைவானை, தெற்கிலுள்ள பாண்டிநாடுடையானை, எனக்கு இனியவனை, என் அப்பனே யென்று அன்பாலழைப்பவர்கட்கு இனிய அமுதத்தை ஒப்பானை, எந்தையை நாம் பாடுவோமாக.*

*குறிப்பு :- மூவர் - அயன், அரி, அரன். 'முற்றுக்கும்' என்பதை 'முன்னானை' என்பதனோடும் 'பின்னானை' என்பதனோடுங் கூட்டுக. பிஞ்ஞகம் - பின்னலையுடைய சடை யென்பாருமுளர். 'மன்னானை' என்பதற்கு 'மன்னவனை' என்று பொருள் கோடலுமுண்டு. வானவனை - தேவனை யென்றும் பொருள்படும். தென் + ஆனைக்கா - தென்னானைக்கா. 'என்னானை' யென்பதில் ஆனுவென்பது இனிமை யென்னும் பொருட்டாய ஒரு சொல். அது 'ஆண்' என நின்று ஐயுறு பேற்றது. அன்னானை - ஒப்பானை. அம்மான் - தந்தை.*

194. பெற்றி பிறர்க்கரிய பெம்மான் பெருந்துறையான்
கொற்றக் குதிரையின் மேல் வந்தருளித் தன்னடியார்
குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிச்
சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் தொல்புகழே
பற்றியிப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான்
பற்றியபே ரானந்தம் பாடுதுங்காண் அம்மானாய். 20

*உரை :- (அன்பரல்லாத) ஏனையோர்க்கு இன்ன தன்மைய னென்று அறியக்கூடாத பெருமான், திருப்பெருந்துறையுடையான், வெற்றிதருங் குதிரைமேல் எழுந்தருளி வந்து தன்னடியா ராகிய (அடிகள், பாண்டியன் என்பாரது) மும்மலங்களையொழித்து, அன்புப் பண்பினை யேற்றுச் சீராட்டி, (பல பிறவிகளிலே) உயிரைச் சூழ்ந்து கிடந்த குடும்பப் பாசத்தைத் தொலைப்பானுடைய பண்டைப்*

புகழினைப் பொருளாக் கொண்டு இந்த வினைக்கட்டு அறவே யொழிதலை நாம் அடையும் பொருட்டு, நம்மை விடாது பிடித்த பேரின்பத்தை நாம் பாடுவோமாக.

***குறிப்பு :-*** *பெற்றி - தன்மை. தொல்புகழைப் பற்றி - தொல் புகழைப் பாடற்பொருளாகக் கொண்டு. பற்றறவு, என்பது 'பற்றற' என நின்றது. கடைசியடியில், 'பற்றிய' என்பதற்கு நாம், அல்லது 'நம்மை' என்பதைச் சேர்த்துப் பொருள் கொள்ளுக.*

***திருச்சிற்றம்பலம்***

*தில்லையில் அருளிய*

## 9. திருப்பொற் சுண்ணம்*

--------

### ஆனந்த மனோலயம்✤

***அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**195.** முத்துநல் தாமம்பூ மாலைதூக்கி
முளைக்குடந் தூபம்நல்தீபம் வைம்மின்
சத்தியுஞ் சோமியும் பார்மகளும்
நாமக ளோடுபல் லாண்டிசைமின்
சித்தியுங் கௌரியும் பார்ப்பதியுங்
கங்கையும் வந்து கவரிகொண்மின்
அத்தன் ஐயாறன்அம் மானைப்பாடி
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 1

***உரை :-*** *நல்ல முத்துக்களினாலாகிய மாலையையும் மலர்மாலையையும் தொங்கவிட்டு, பயிர்முளைகளிட்ட குடம், நறும் புகைக் கலசம், நல்ல விளக்கு என்பவற்றை (அவ்வவற்றினிடத்தில்) வைப்பீர்களாக. உருத்திர சக்தியும் (ரௌத்திரியும்), திருமகளும், நிலமகளும், கலைமகளும் பல்லூழிவாழ வெனப்பாடும் பல்லாண்டு பாடுவீராக. கணபதிசத்தியும் காளியும் உமையும் கங்கைமாதும் எழுந்து வந்து இறைவனுக்கு வீசுதற்குக் (கவரி மயிரினாலாகிய) சாமரத்தைக் கைப்பிடிப்பீராக. ஆசிரியனும் திருவையாறமர்ந்தானும் அப்பனுமாகியவனைப் பாடி அவனுக்குத் திருமுழுக்காட்ட அழகிய வாசனைப் பொடியை நாம் இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *தாமம் - மாலை. நவதானியங்களின் விதைகளை இட்டு நீர்விட்டுப் பயிர் வளர்க்கப்பட்ட குடம், முளைக்குடம். அது மங்கலப் பொருள்களில் ஒன்று. சோமி என்பது சௌமி என்பதன் திரிபு. சோமி - திருமகள். இலக்குமியையும் நாமகளையுங் கூறவே, 'சத்தி' உருத்திர*

---

* *அழகிய வாசனைப்பொடி இடிக்குங்காற் பாடுந் திருப்பாட்டுப் பகுதி. பொற்சுண்ணம் - பொன்போலும் பொடி; இது வண்ண உவமை. அரிதாரம் முதலிய மணப் பொருள்கள் பலவற்றை உரலிலிட்டு இடித்த நறுமணப் பொடியே பொற்சுண்ணம். இதனை பல மகளிர் குழுமி இடிப்பர்.*

✤ *இன்பத்தால் மனம் ஒருமைப்படுதல்.*

*சத்தியெனப் பொருள் கொள்ளப்பட்டது. சித்தி, என்பது கணபதி சத்திகளிலொன்று. உன்மனை முதலிய கலைகளி லொன்றாகவுங் கூறுவர். கௌரி என்பது, காளிக்கும் பெயர். மற்றொரு பொருள், கன்னியாய நங்கை. அண்டந்தோறும் உள்ள மும்மூர்த்திகளின் சத்திகள், முதலிற் கூறப்பட்டனர். பிரகிருதி முடிவிலுள்ள ஸ்ரீ கண்டபுவன சத்திகள் பிற் கூறப்பட்டன.*

**196.** பூவியல் வார்சடை எம்பிராற்குப்
பொற்றிருச் சுண்ணம் இடிக்கவேண்டும்
மாவின் வடுவகி ரன்ன கண்ணீர்
வம்மின்கள் வந்துடன் பாடுமின்கள்
கூவுமின் தொண்டர் புறம்நிலாமே
குனிமின் தொழுமினெங் கோனெங்கூத்தன்
தேவியும் தானும்வந் தெம்மையாளச்
செம்பொன்செய் சுண்ணம் இடித்துநாமே. 2

***உரை :-*** *(கொன்றை) மலர் பொருந்திய நீண்ட சடையையுடைய எம்பெருமானுக்கு அழகிய திருச்சுண்ணம் சித்தப்படுத்த வேண்டும். மாங்காய் வடுவின் பிளவு போன்ற கண்ணுடைய நங்கையீரே, வாருங்கள், வந்து விரைவிற் பாடுங்கள். அடியாராயினார் வெளியே நில்லாதபடி அவர்களை அழையுங்கள், ஆடுங்கள், வணக்கஞ் செய்யுங்கள். எமது தலைவனும் நாடகமாடியுமான கடவுள் தனது சத்தியும் தானுமாக வந்து எம்மை ஆண்டருளும்படி, செவ்விய பொன் போலொளி செய்யும் வாசனைப் பொடியை நாம் இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *'பூ' என்பதற்கு அழகு என்றும் பொருள் கொள்ளலாம். குனிமின், என்பதற்கு 'வளைமின்' என்று பொருள் கோடலுமுண்டு. பொற்பொடி கலந்த சுண்ண மென்பாரு முளர்.*

**197.** சுந்தர நீறணிந் தும்மெழுகித்
தூயபொன் சிந்தி நிதிபரப்பி
இந்திரன் கற்பகம் நாட்டி யெங்கும்
எழிற்சுடர் வைத்துக் கொடியெடுமின்
அந்தரர் கோன் அயன் தன்பெருமான்
ஆழியான் நாதன்நல் வேலன் தாதை

எந்தரம் ஆள்உமை யாள்கொழுநற்
கேய்ந்த பொற்சுண்ணம் இடித்துநாமே. 3

***உரை :-*** *இத்திருப்பாடலில் இடத்தைத் தூய்மை செய்து அணிசெய்யச் சொல்கிறார். (சாந்து, திலக முதலியவற்றோடு) அழகிய திருநீறு தரித்து, சுண்ணம் இடிக்கும் இடத்தைச் சாணத்தால் மெழுகி, தனிப்பொன் பொடியைத் தூவி நவமணிகளாகிய நிதிகளைப் பல விடங்களில் வைத்து, இந்திரனுக்குரிய கற்பகத் தோகை நட்டு, எவ்விடங்களிலும் அழகிய தீபங்கள் வைத்துக் கொடிகளை எடுப்பித்துக் கட்டுங்கள். விண்ணவர் தலைவனாய், அயனுக்கு முதல்வனாய், சக்கராயுத முடையானாகிய திருமாலுக்கு நாயகனாய், சிறந்த முருகனார் தந்தையாய், இருக்கும் எம்போலியரையும் ஆட் கொள்ளும், உமை கணவனுக்குத்தக்க அழகிய வாசனைப்பொடியை நாம் இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *அணியும் எல்லாவற்றினும் அழகு மிக்கது - திருநீறு, ஆதலின் 'சுந்தரநீறு' என்றார். நிதி - நவமணி. அவையாவன :- முத்து, வைரம், பவளம், மாணிக்கம், மரகதம், கோமேதகம், வைடூரியம், நீலம், புட்பராகம், ஆழி - சக்கரம். திருமாலை இறைவன் மனைவியாகக் கொண்டு சாத்தரைப் பயந்தமை காண்க. தரம் - நிலை, வகை. கோன் - தலைவன். பெருமான் - பெருமையை உடையவன். நாதன் - காதலன்.*

**198.** **காசணி மின்கள் உலக்கை யெல்லாங்
காம்பணி மின்கள் கறையுரலை
நேச முடைய அடியவர்கள்
நின்று நிலாவுக என்று வாழ்த்தித்
தேசமெல் லாம்புகழ்ந் தாடுங்கச்சித்
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடிப்
பாச வினையைப் பறித்து நின்று
பாடிப் பொற்சுண்ணம் இடித்துநாமே. 4**

***உரை :-*** *இத்திருப்பாட்டில் சுண்ணமிடித்தற்குரிய உரல், உலக்கைகளை அணி செய்யும் முறைமை உணர்த்துகிறார். உலக்கைகளுக்கெல்லாம், பொன் அல்லது மணி வடங் கட்டுங்கள், நிறமுடைய உரல்களுக்குப் பட்டுச் சீலையைச் சுற்றுங்கள். இறைவன்பாற் காதலுடைய அடியார்கள் எப்போதும் நிலைத்து வாழ்கவென்று வாழ்த்துப் பாடலியம்பி நாடெல்லாம் வியந்து*

*கொண்டாடுகின்ற காஞ்சிமா நகரிலுள்ள திருவேகாம்பர நாதரது செம் பொன்னினாலாகிய திருக்கோயிலைப் பாடி இருவினையாய அல்லது நிகழ்வினையாகிய கட்டினை நீக்கி நின்றுபாடி அழகிய சுண்ணம் இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *காசு - பொன், மணி. காம்பு - பட்டுத்துணி; கறை - நிறம். 'கறை' என்பதற்கே உரல் என்ற பொருளுமுண்டு. கறையுரல் என்பாருமுளர். பாசவினை - வினைப்பாசமென மாற்றுக. 'பறித்து' என்பதற்குப் பறிக்கவென்றும் பொருள் கொள்ளலாம்.*

**199.** **அறுகெடுப் பார்அய னும்அரியும்**
**அன்றிமற் றிந்திர னோடமரர்**
**நறுமுறு தேவர் கணங்களெல்லாம்**
**நம்மிற்பின் பல்ல தெடுக்கவொட்டோம்**
**செறிவுடை மும்மதில் எய்தவில்லி**
**திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடி**
**முறுவற்செவ் வாயினீர் முக்கணப்பற்**
**காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.** **5**

***உரை :-*** *அழகிய புன்சிரிப்புடைய சிவந்த இதழுடைய தோழியரே, திருமாலும் நான்முகனும் குடவிளக்கேந்துவர். அவர்களைத் தவிர, ஏனையோராகிய இந்திரன் முதலிய வானுலகத் தலைவர்கள், (தம்முட் பொருது) முறுமுறுக்கின்ற வானவர் கூட்டங்கள் ஆகிய எல்லாரும், நமக்குப் பின் அல்லாமல், முன்னாக இறைவன் விருதுகளை யெடுக்க இடங்கொடுக்க மாட்டோம். ஒருங்கு செல்லுதலையுடைய முப்புரத்தை எய்தெரித்த வில்லுடையனாகிய திருவேகம்பனது செம்பொன்னினாலியன்ற திருக்கோயிற் சிறப்பைப் பாடி, முக்கண்ணுடைய தந்தை திருமுழுக் காடுதற்கு, அழகிய வாசனைப்பொடி இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *செறிவு - திண்மை. அனைத்துலகையும் அழிக்கவல்ல ஆற்றல்கொண்ட திரிபுரங்கள். அறுகு - மங்கள விளக்கு. சிங்கம் முதலிய எழுதிய கொடி யென்றுங் கூறுப. அறுகம்புல் லென்னின், அதுவும் ஒரு மங்கலப் பொருளாக எடுக்கப்படுதல் வேண்டும். நறுமுறு - முறுமுறு. முப்புரமுஞ் சேர்ந்தே சென்றனவென்று கேட்கப்படுதலின், 'செறிவுடைய' என்றார். முறுவல், நகை, பல். ஆட - முழுக.*

200. உலக்கை பலஒச்சு வார்பெரியர்
 உலகமெ லாம்உரல் போதாதென்றே
கலக்க அடியவர் வந்து நின்றார்
 காண உலகங்கள் போதாதென்றே
நலக்க அடியோமை ஆண்டுகொண்டு
 நாண்மலர்ப் பாதங்கள் சூடத்தந்த
மலைக்கு மருகனைப் பாடிப்பாடி
 மகிழ்ந்து பொற்சுண்ணம் இடித்துநாமே. 6

***உரை :-*** *உலகம் எல்லாம் உரலாக, இருக்கின்ற உலக்கைகள் பல போதா, இன்னும் வேண்டுமென்று பெரியோர் தூண்டு கின்றார்கள்; காண்பதற்கு உலகங்கள், போதமாட்டாவென்று சொல்லும்படியாக, உலக்கை யோச்சுவாரொடு கலந்து கொள்வதற்கு அடியார்கள் வந்து நிற்கின்றார்கள். நன்மையுண்டாகும் பொருட்டு நம்மையாட் கொண்டருளி தனது அன்றலர்ந்த புதுமலர் போன்ற திருவடிகளை நமது சென்னிமேற் சூடும் பொருட்டுக் கொடுத்த பனி மலையரசன் மருமகனாகிய பெருமானை இடைவிடாது பாடி மகிழ்ந்து அழகிய வாசனைப் பொடியை இடிப்போமாக.*

*குறிப்பு :- ஒச்சுதல் - தூண்டுதல். நலக்க - நன்மையுண்டாக. இமயமலை யரசன் புதல்வியை இறைவன் மணந்தமையால், 'மலைக்கு மருகன்' என்றார். 'மலை' மலையரசனுக்கு ஆகு பெயர்.*

**201. சூடகந் தோள்வளை ஆர்ப்பஆர்ப்பத்**
 **தொண்டர் குழாமெழுந் தார்ப்பஆர்ப்ப**
**நாடவர் நந்தம்மை ஆர்ப்பஆர்ப்ப**
 **நாமும் அவர்தம்மை ஆர்ப்பஆர்ப்ப**
**பாடகம் மெல்லடி ஆர்க்கும்மங்கை**
 **பங்கினன் எங்கள் பராபரனுக்**
**காடக மாமலை அன்னகோவுக்**
 **காடப் பொற்சுண்ணம் இடித்துநாமே. 7**

***உரை :-*** *ஆர்ப்ப, ஆர்ப்ப என்ற அடுக்குகள் மகிழ்ச்சிக் களிப்பால் விளைந்தவை. கைவளையுந் தோள்வளையும் அசைந்தசைத் தொலிப்ப, அடியார் கூட்டம் புறப்பட்டு (அரகரவென்று) விடாது முழங்க, உலகினர் (அருள்பெற்ற) நம்மை இகழ்ந்து உரை செய்ய, நாமும்*

*அவர்கள் (இயல்பினை) யெண்ணி நகையாட, தனது மென்மையாகிய திருவடியிலணிந்த பாடகமானது ஒலித்தலையுடைய அம்மை பாகனாகிய நமது மேலாகிய மேலோனுக்கு, பொன்மலையாய மேருவைப் போன்ற மன்னனுக்குத் திருமுழுக்குக்காக, அழகிய சுண்ணத்தை இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *சூடகம் - கைவளை, தோள்வளை - புயவளை, ஆர்த்தல் - ஒலித்தல், ஆரவாரஞ் செய்தல், பேசி நகையாடல், பாடகம் - காலணி வகையிலொன்று. பராபரன் - மேலான கடவுள். பரம், அபரம் என்னு மிரண்டிற்கு முதல்வனென்றலு மொன்று. பொன் மேனியனாதலின், 'ஆடகமாமலையன்ன' என்றார்.*

**202. வாள்தடங் கண்மட மங்கைநல்லீர்**
**வரிவளை ஆர்ப்பவண் கொங்கைபொங்கத்**
**தோள்திரு முண்டந் துதைந்திலங்கச்**
**சோத்தெம்பி ரானென்று சொல்லிச் சொல்லி**
**நாட்கொண்ட நாண்மலர்ப் பாதங்காட்டி**
**நாயிற் கடைப்பட்ட நம்மையிம்மை**
**ஆட்கொண்ட வண்ணங்கள் பாடிப்பாடி**
**ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 8**

***உரை :-*** *ஒளிபொருந்திய நீண்ட கண்களையுடைய அழகிய இளமாதர்களே, வரிகளையுடைய உங்கள் கைவளையல்கள் ஒலிப்ப, வளவிய நகில்கள் மேலெழுந்து விளங்க, புயமும் நெற்றியும் (நீற்றினால்) ஒருங்குசேர்ந்து மிளிர, எமது பெருமானே, வணக்கம், வணக்கம் என்று இடைவிடாதியம்பி, புதிதாய்ப் பூத்த மலர்கள் நாணும்படியான திருவடிகளை, நாயினுங் கீழ்ப்பட்ட நமக்குக் காட்டி இப்பிறவியிலே நம்மை ஆண்டுகொண்டருளிய சிறப்புக்களை ஓயாது பாடி, அவன் முழுகத் திருப்பொற் சுண்ணம் இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *வாள் - ஒளி, வாள்போலும் என்று பொருள் கோடலு முண்டு. முண்டம் - நெற்றி. சோத்து - சோத்தம். இழிந்தோர் செய்யும் அஞ்சலி. நாள் - புதுமை. 'மலர் நாண் பாதம்' என மாற்றுக. அல்லது, புதிதாய் உண்டான கொடியில் 'அன்றலர்ந்த மலர்' என்றும் பொருள் கொள்ளுக. வண்ணங்கள் - வகைகள், சிறப்புக்கள்.*

**203. வையகம் எல்லாம் உரலதாக**
**மாமேரு என்னும் உலக்கைநாட்டி**

மெய்யெனும் மஞ்சள் நிறையஅட்டி
　　மேதகு தென்னன் பெருந்துறையான்
செய்ய திருவடி பாடிப்பாடிச்
　　செம்பொன் உலக்கை வலக்கைபற்றி
ஐயன் அணிதில்லை வாணனுக்கே
　　ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 9

***உரை :-*** *நிலவுலகம் முழுவதும் உரலாகவும் (மலையுட்) பெரிய மேருவாகிய உலக்கையை உரல் நடுவில் நாட்டி உண்மை யென்னும் மஞ்சளை உரல் நிரம்பப் போட்டு, மேன்மை மிக்க அழகனாகிய திருப்பெருந்துறையானது செவ்விய திருப்பாதங்களை இடைவிடாது பாடி, நேர்மையான பொன்னினாலாகிய உலக்கை வலது கையிற் கொண்டு, தலைவனாகிய அழகிய தில்லை நாதனுக்குத் திருமுழுக்கிட, பொற்சுண்ணம் இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *அட்டி - போட்டு, இட்டு. அட்டுதல் - வளர்த்தல், இடுதல். மேருவாகிய உலக்கையை நடுவிலும், செம்பொனுலக்கையைப் பக்கத்திலும் காட்டி இடித்தல் கூறப்பட்டது. மங்கலமான பொருள், மெய்யே யென்பதும், அஃதே இறைவனுக்குகந்த திருமஞ்சனப் பொருளென்பதுங் குறிப்பிக்கப்பட்டது.*

**204.** **முத்தணி கொங்கைகள் ஆடஆட**
　　**மொய்குழல் வண்டினம் ஆடஆடச்**
**சித்தஞ் சிவனொடும் ஆடஆடச்**
　　**செங்கயற் கண்பனி ஆடஆடப்**
**பித்தெம் பிரானொடும் ஆடஆட**
　　**பிறவி பிறரொடும் ஆடஆட**
**அத்தன் கருணையொ டாடஆட**
　　**ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.** **10**

***உரை :-*** *முத்துமாலை அணியப்பட்ட தனங்கள் அசைந்தாடவும், வண்டுக் கூட்டங்கள்நெருங்கியச் சூழுங் கூந்தலானது அசைந்தாடவும், மனமானது சிவபெருமான்பால் இடைவிடாது பயிலவும் (மன உருக்கத்தினால்) செவ்விய கயல் மீன்களின் கண்போன்ற கண்களில் (ஆனந்தக்) கண்ணீரானது அசைந்திலங்க, நமது காதலாலாகிய மாலானது எமது தலைவன்பால் இடைவிடாது பற்ற, பிறவிகள் (நமக்கன்றி) ஏனையோர்பால் நிலவியொழிய, எந்தை திருவருளின் வழி நாம் என்றும் பழகப்பழக, இறைவன் முழுக்கியற்ற, பொற்சுண்ணம் இடிப்போமாக.*

*குறிப்பு :-* *'ஆட, ஆட' என்பது, தொடர்ந்த செயலைக் குறிக்கப் பல பொருளில் வந்தது.*

**205.** மாடு நகைவாள் நிலாவெறிப்ப
வாய்திறந் தம்பவ ளந்துடிப்பப்
பாடுமின் நந்தெம்மை ஆண்டவாறும்
பணிகொண்ட வண்ணமும் பாடிப்பாடித்
தேடுமின் எம்பெரு மானைத்தேடிச்
சித்தங் களிப்பத் திகைத்துத்தேறி
ஆடுமின் அம்பலத் தாடினானுக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. **11**

***உரை :-*** *(நங்கையரே), உங்கள் வாயைத் திறந்து பல்லின் நிலவொளியானது பக்கத்திலே கதிர்வீச, அழகிய பவளம்போன்ற உதடுகள் துடிப்ப, நம்மை இறைவன் ஆண்ட விதத்தைப் பாடுங்கள். நம்மைத் தொண்டராகக் கொண்டருளிய விதத்தையும் இடைவிடாது பாடி, எமது பிரானைத் தேடுமின்கள். அங்ஙனம் தேடி, காணாவிடின் திகிலடைந்து, பின் தெளிந்து, மனமகிழ ஆடுங்கள். ஆடி (த்தில்லை) யம்பலத்திலே நடமாடிய பெருமான் திருமுழுக்கிடப் பொற்சுண்ணம் இடிப்போமாக.*

*குறிப்பு :-* *நகை - பல். வாள்நிலா - நிலாப்போலும் வெள்ளொளி. மாடு - மருங்கு, பக்கம். பவளம், இதழுக்கு ஆகுபெயர், 'தேடித் திகைத்துத் தேறிச் சித்தங் களிப்ப ஆடுமின்' என உரைநடை கொள்க. ஈண்டுக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், ஒருவாறு சுட்டப்பட்டன. அம்பவளம் - அழகிய பவளம் போலும் உதடு.*

**206.** மையமர் கண்டனை வானநாடர்
மருந்தினை மாணிக்கக் கூத்தன் தன்னை
ஐயனை ஐயர்பி ரானைநம்மை
அகப்படுத் தாட்கொண் டருமைகாட்டும்
பொய்யர்தம் பொய்யனை மெய்யர்மெய்யைப்
போதரிக் கண்ணினைப் பொற்றொடித்தோள்
பையர வல்குல் மடந்தைநல்லீர்
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே. **12**

***உரை :-*** *செந்தாமரைப் பூப்போன்ற, செவ்வரி படர்ந்த இரு கண்களையும், பொன்னாலாகிய கங்கணமணிந்த தோள்களையும்,*

பாம்பின் படம் போன்ற அரை முன்பக்கமு முடைய அழகிய மாதர்களே, (நஞ்சின்) கருநிறம் பொருந்திய திருக்கழுத்துடையானை, வானுலகினர்க்கு அமுதமானானை, மாணிக்கம் போலுஞ் செம்மேனியொடு நடிக்குந் திருக்கூத்துடையானை, தலைவனை, தலைவர்க்கு வள்ளலை, நம்மைத் தன்வயப்படுத்தி ஆண்டு கொண்டருளி, தனது அரிய தன்மையைக் காண்பிக்கும் பொய்யர்க்குப் பொய்யனாய், உண்மையாளரது மெய்ப்பொருளா யுள்ளவனைப் பாடித் திருப்பொற் சுண்ணம் இடிப்போமாக.

***குறிப்பு :-*** *ஐயர் - தலைவர். ஐயர்பிரான் - தலைவர் தலைவன். மை - கறுப்பு, இருள். மாணிக்கக்கூத்தனை - மாணிக்கம்போலுங் கூத்தனை. அகம் - தன்னுள், அரி - செவ்விய ரேகை. அது உத்தமப் பெண்டிரிலக்கணம். இணை - இரண்டு, ஒன்றிற்கொன்று ஒப்பான, என்றும் பொருள்கொள்ளலாம். தொடி - தோள்வளை. 'பையரவு' அரவுப்பை என மாற்றுக. பை - படம்.*

**207.** **மின்னிடைச் செந்துவர் வாய்க்கருங்கண்**
**வெண்நகைப் பண்அமர் மென்மொழியீர்**
**என்னுடை ஆரமு தெங்களப்பன்**
**எம்பெரு மான்இம வான்மகட்குத்**
**தன்னுடைக் கேள்வன் மகன்தகப்பன்**
**தமையன்எம் ஐயன் தாள்கள்பாடிப்**
**பொன்னுடைப் பூண்முலை மங்கைநல்லீர்**
**பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே.** **13**

***உரை :-*** *மின்னல் போலொளிரும் இடையினையும் செவ்விய பவளவாயினையும் கரிய கண்ணினையும், வெள்ளிய பல்லினையும் இசை தங்கிய மெல்லிய சொல்லினையும் உடைய மங்கையரே, என்னை உடையவனாகிய, கிடைத்தற்கரிய அமுதம்போன்ற நமது தந்தையாகிய எமது பிரான், பனிமலை யரசன் மகளாகிய உமையம்மைக்கு, தன்னை உடைய கணவனுமாவன், மகனுமாவன், தகப்பனுமாவன், தமையனுமாவன். (அத்தகைய) எமது தலைவனது திருவடிகளைப் பாடி, பொன்னினாலாகிய அணியணிந்த நகிலுடைய பெண்டிரே, நாம் திருப்பொற் சுண்ணம் இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *ஆணும் பெண்ணுமாக உயிர்களைப் படைத்தற் பொருட்டு, இறைவன் சிவமுஞ்சத்தியு மாயகாலை, சத்திக்குச் சிவன், கணவனாவன். சத்திநின்றே சதாசிவதத்துவம் தோன்றிய காரணம் பற்றி,*

*- சதாசிவமூர்த்தி, சத்தியின் மகனானவன், சிவத்தினின்று சத்தி பிறந்ததனால், சிவன், சத்திக்குத் தகப்பனாவன், சிவதத்துவமும், சத்தி தத்துவமும், சுத்த மாயையினின்று, முறையே இறைவனது ஞான சத்தி அதிட்டித்தலாலும், கிரியா சத்தி அதிட்டித்தலாலும் முன் பின்னாக உளதாகிய காலை, சத்திக்குச் சிவம் தமையனென்று கூற இடமுண்டாதல் காண்க.*

**208.** சங்கம் அரற்றச் சிலம்பொலிப்பத்
 தாழ்குழல் சூழ்தரு மாலையாடச்
செங்கனி வாயித ழுந்துடிப்பச்
 சேயிழை யீர்சிவ லோகம்பாடிக்
கங்கை இரைப்ப அராஇரைக்கும்
 கற்றைச் சடைமுடி யான்கழற்கே
பொங்கிய காதலிற் கொங்கைபொங்கப்
 பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே. 14

***உரை :-*** *செவ்விய நகையணிந்த பெண்களே, சங்கினாலாகிய கை வளையல் ஒலிப்ப, காற்சதங்கை ஓசையிடப் (பின்னே நீண்டு தாழ்கின்ற) கூந்தலிற் சுற்றிய மாலை சுழல, செவ்விய (கொவ்வைக்) கனிபோன்ற வாயும் உதடுந் துடிப்ப, சிவலோகச் சிறப்பைப் பாடிக், கங்கை இரைச்சலிடுவதைக் கேட்டுப் பாம்பு இரைச்சலிடும், தொகுதியாய சடைமுடியுடையான் திருவடிக்கே, மிகுந்த அன்பினாலே, நகில்கள் பால் சுரக்க, திருப்பொற்சுண்ணம் இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *சங்கம், வளைக்கு ஆகுபெயர். கங்கை யொலியை, இடிமுழக்கமென்றஞ்சிப் பாம்பு இரைகின்றதென்பது கருத்து. கற்றை- தொகுதி. காதல் மிகுந்த காலை கொங்கையிற் பால் சுரத்தல் 'சுரந்த திருமுலைக்கே' என்ற பாட்டால் விளங்கும்.*

**209.** ஞானக் கரும்பின் தெளிவைப்பாகை
 நாடற் கரிய நலத்தை நந்தாத்
தேனைப் பழச்சுவை ஆயினானைச்
 சித்தம் புகுந்துதித் திக்கவல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டுகொண்ட
 கூத்தனை நாத்தழும் பேறவாழ்த்திப்

பானல் தடங்கண் மடந்தைநல்லீர்
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 15

***உரை*** *:- அகன்ற குவளை போன்ற கண்ணுடைய அழகிய மாதரீர், சிவஞானமாகிய கரும்பின் சாரத்தை, சர்க்கரைப்பாகை, எய்துதற்கெட்டாத நன்மையை, என்றுங் கெடாத தேனை, முக்கனியின் சுவையானவனை, உள்ளத்திற் புகுந்து இனிமை தரவல்ல தலைவனை, (நமது) பிறவியைத் தொலைத்தாட்கொண்டருளி திருநடப் பெருமானை, நாவிலே தழும்பேறும்படியாக இடைவிடாது வாழ்த்தித் திருப்பொற் சுண்ணம் இடிப்போமாக. கரும்பு, தேன் போன்றவற்றின் சுவை தொண்டைக்கு மேற்செல்வதில்லை. ஆனால் இறைச்சுவை சித்தம் புகுந்து தித்திக்கும்.*

*குறிப்பு :- சிவஞானம் இறைவனது அறிவு. அவனறிவைப் பெறுதலின் பயன் அவனே யாதலின், அவனை, ஞானமாகிய கரும்பின் பயனாகிய தெளிவு என்றார். ஞானத்தின் ஞானமே தெளிவென்ப. அத்தெளிவானுகரப்படும் இன்பமும் அவனே யாதலின் 'பாகை' என்றார். சடப்பொருளாய தேன் நாளடைவிற் கெடுதல் அடையும். ஒரு நாளுங்கெடாத மெய்ப்பொருளாகிய இறைவனை 'நந்தாத்தேன்' என்றார். மடந்தை - இளமை நலம் குன்றாதவள்.*

**210.** ஆவகை நாமும்வந் தன்பர்தம்மோ
டாட்செயும் வண்ணங்கள் பாடிவிண்மேல்
தேவர் கனாவிலுங் கண்டறியாச்
செம்மலர்ப் பாதங்கள் காட்டுஞ்செல்வச்
சேவகம் ஏந்திய வெல்கொடியான்
சிவபெரு மான்புரம் செற்றகொற்றச்
சேவகன் நாமங்கள் பாடிப்பாடிச்
செம்பொன்செய் சுண்ணம் இடித்துநாமே. 16

***உரை*** *:- நாமும் அன்பர்களோடு போய் உய்திக்குரியராகும் வகையாக நம்மை ஆண்டு கொண்ட வகைகளைப் பாடி வானுலகத் துள்ள இமையவர்கள் சொப்பனத்திலுங் காணமுடியாத செவ்விய திருவடிக் கமலங்களை நமக்குக் காட்டும், சிறப்புடைய காளை யுருவைத் தன்பாலே கொண்ட வெற்றிக் கொடியுடையானாகிய சிவபெருமானாகிய திரிபுரமெரித்த வெற்றி வீரனது திருப்பெயர்களை, இடைவிடாது பாடிச் செம்பொன் போல ஒளி செய்யுந் திருப்பொற் சுண்ணத்தை இடிப்போமாக.*

*கனா, இடைவிடாது பயிலுகின்ற தியான பாவனையால் விளைவதும், பின்வரும் துன்ப இன்பங்களைக் குறிக்கும் உற்பாதமாய் உண்டாவதும், பண்டைய வினைகளில் மெல்வினையாய் நனவில் பயன்தர வல்லன அல்லவாய்க் கனவிலே பயன்தந்து கழிவதும் என முத்திறப்படும். அவற்றுள் விண்மேல் தேவர்கள் இறைவன் திருவடியை எண்ணி அறியாது என்றும் போகியாய் இருப்பவர்கள் ஆதலின் 'விண்மேல் தேவர்கள் கனவிலும் கண்டறியாச் செம்மலர்ப் பாதங்கள்' என்றார். விண்மேல் தேவர்கள் அறியார்கள் எனவே மண்மேல் வந்து ஆண்டவனை அருச்சித்து நேர்முகக்காட்சியான் அனுபவிக்கப் பெறும் பேறு உடையர் என்பதும் குறிப்பாற்கொள்ள நிற்றல் காண்க. விண்ணவர் மண்மேல்வந்து அருச்சித்தலை, சிவஞானசித்தியார் "வானிடத்தவரும் மண்மேல் வந்தரன்றனை அர்ச்சிப்பர் ஊனெடுத் துழலுமூமர் ஒன்றையும் உணரார் அந்தோ" எனக் கூறுதல்கொண்டும் காண்க.*

***குறிப்பு :-** ஆவகை - ஆகும் வகை. சே - காளை; செல்வம், இறைவன் ஊர்தியாகிய சிறப்பு. சே, அகம் ஏந்திய வெல்கொடி யெனப் பிரிக்க.*

**211.** **தேனக மாமலர்க் கொன்றைபாடிச்**
**சிவபுரம் பாடித் திருச்சடைமேல்**
**வானக மாமதிப் பிள்ளைபாடி**
**மால்விடை பாடி வலக்கையேந்தும்**
**ஊனக மாமழுச் சூலம்பாடி**
**உம்பரும் இம்பரும் உய்ய அன்று**
**போனக மாகநஞ் சுண்டல்பாடிப்**
**பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே.** **17**

***உரை :-** தன்னுள்ளே தேனையடக்கிய, பெருமை பொருந்திய கொன்றை மாலையைப்பாடி, சிவனது திருநகரைப் பாடி, அழகிய சடைமேல் வைக்கப்பட்ட, வான்கண் விளங்குகின்ற சிறந்த இளம் பிறையைப்பாடி, திருமாலாகிய காளை யூர்தியைப் பாடி, இறைவன் வலக்கரத்திற் கொண்டுள்ள, பகைவர் தசைகொண்ட மழுவையும் முத்தலை வேலையும் பாடி, மேலுலகினரும் இவ்வுலகினரும் பிழைக்கும்படியாக, அந்தக் காலத்திலே, தனதுணவாக நஞ்சினை இறைவன் உண்டதைப் பாடித் திருப்பொற்சுண்ண மிடிப்போமாக. இறைவன் கரத்துள்ள மழுவும், சூலமும் யாரையும் கொன்றது இல்லை.*

*சிரித்தும், நகைத்தும், உதைத்தும் பகையை அழித்ததால் ஊனக மாமழுச் சூலம்.*

***குறிப்பு :-*** *'மால்விடை' என்பதற்குப் பெரிய காளையென்று பொருள் கூறுவாருமுளர். போனகம் - உணவு. அன்று பழமை குறிக்குஞ் சொல். உம்பர் - தேவர்; இம்பர் - மக்கள்.*

**212.** **அயன்தலை கொண்டுசெண் டாடல்பாடி**
**அருக்கன் எயிறு பறித்தல்பாடிக்**
**கயந்தனைக் கொன்றுரி போர்த்தல்பாடிக்**
**காலனைக் காலால் உதைத்தல்பாடி**
**இயைந்தன முப்புரம் எய்தல்பாடி**
**ஏழை அடியோமை ஆண்டுகொண்ட**
**நயந்தனைப் பாடிநின் றாடி யாடி**
**நாதற்குச் சுண்ணம் இடித்துநாமே.** **18**

***உரை :-*** *பிரமனுடைய தலையைக் கிள்ளிப் பந்தாடியதைப் பாடி, தக்கன் வேள்வியில், பகலவன் பல்லைப் பிடுங்கினமையைப் பாடி, கயாசுரனைக் கொன்று அவன் தோலைப் போர்த்துக் கொண்டமை பாடி, யமனைத் திருவடியால் உதைத்தமையைப் பாடி, ஒருங்கு சேர்ந்துலவிய திரிபுரத்தை அம்பாலெய் தொழித்தமை பாடி, சிற்றறிவுடைய அடியேங்களை ஆட்கொண்டருளிய நன்மையைப் பாடி, பாடலுக்கேற்பத் தொடர்ந்து ஆடி, நம்முடைய தலைவர்க்குத் திருப்பொற் சுண்ணம் இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *செண்டு - பந்து, கையில்வைத்தெறியும் பந்து போலப் பிரமகபாலத்தைக் கையிற்கொண்டு ஐயம் புகுந்தமையின் அதைச் 'செண்டாடல்' என்றார். கயம் - கயாசுரனுக்கு ஆகுபெயர்.*

**213.** **வட்ட மலர்க்கொன்றை மாலைபாடி**
**மத்தமும் பாடி மதியும்பாடிச்**
**சிட்டர்கள் வாழுந்தென் தில்லைபாடிச்**
**சிற்றம் பலத்தெங்கள் செல்வம்பாடிக்**
**கட்டிய மாசுணக் கச்சைபாடிக்**
**கங்கணம் பாடிக் கவித்தகைம்மேல்**
**இட்டுநின் றாடும் அரவம்பாடி**
**ஈசற்குச் சுண்ணம் இடித்துநாமே.** **19**

***உரை :-*** *வட்டமா (கிய இண்டையா) யமைந்துள்ள கொன்றைப் பூ மாலையைப்பாடி, (இறைவன் சூடும்) ஊமத்தை மலரைப் பாடி, பிறையைப் பாடித் தெய்வத் தொண்டர்கள் வதியும் அழகிய தில்லைநகரைப் பாடி, அங்குள்ள ஞானசபையில் நடமாடும் நமது (பெருஞ்) செல்வமாகிய பெருமானைப் பாடி, அவன் அரையிற் கட்டிய பெரும்பாம்பாகிய அரைநாண் கச்சையைப் பாடி, கையில் கட்டிய (பாம்பாகிய) காப்பினைப் பாடி, மூடிய கையின்மேல் விட்டு ஆட்டிய பாம்பினைப் பாடி, ஆண்டவனுக்குத் திருப்பொற் சுண்ணம் இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *'வட்டம்' என்பதை மலரோடு சேர்த்து, கொன்றையின் வட்ட மலர்மாலையென்பாருமுளர். மத்தம் - ஊமத்தம்பூ. சிட்டர் - நல்லோர். மாசுணம் - பெரும்பாம்பு. கவித்த - மூடிய. திருப்புறம்பயத்தில், விடந்தீண்டியவொருவனை, அவன் மனைவியின் பொருட்டு, உயிர்ப்பித்தற்காக, இறைவன் பாம்பாட்டியாகச் சென்று விடம் நீக்கிய கதை கேட்கப்படுகின்றது. பாம்பாட்டிகள் மூடிய கையின்மேல் அரவமாட்டுதல் மரபுபோலும். நச்சரவாட்டிய நம்பன் போற்றி யென்பதுங் காண்க.*

**214.** வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்குச்
சோதியு மாய்இருள் ஆயினார்க்குத்
துன்பமு மாய்இன்பம் ஆயினார்க்குப்
பாதியு மாய்முற்றும் ஆயினார்க்குப்
பந்தமு மாய்வீடும் ஆயினாருக்
காதியும் அந்தமும் ஆயினாருக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. **20**

***உரை :-*** *வேதநூலும் அதனுட் கூறப்படும் வேள்விகளும் தோன்றி நிகழ்தற்குக் காரணமானவர்க்கு, (மெய்யர்க்கு) மெய்யாயும் (பொய்யர்க்குப்) பொய்யாயும் இருப்பவர்க்கு, ஒளியும் இருளும் ஆனவர்க்குத், துன்பமும் இன்பமுமானவர்க்கு, பாதியாய பெண்ணுரு வல்லது ஆணுருவாகியும், இருமையுங் கலந்த முழுவடிவாயும் ஆனவர்க்கு, உயிர்களது கட்டிற்கும் வீட்டிற்குங் காரணமானவர்க்கு உலகிற்கு முதலுமுடிவும் ஆனவர்க்குத் திருமுழுக்கிடத் திருப்பொற் சுண்ணம் இடிப்போமாக.*

***குறிப்பு :-*** *வேதமும் வேள்வியும் என்பதற்கு அறிவு நூலும், அவற்றுட் கூறப்படும் கொடை முதலிய அறமும் என்றும் பொருள் கொள்ளலாம். ஞான நூலும், வேள்வி கூறுங்கிரியை நூலும் எனப் பொருள் கொள்வதுமுண்டு. 'வேள்வி' என்பது ஊன்பயில் வேள்வி. அல்லது ஐவகை வேள்வியாக இருக்கலாம். எல்லாம் நிகழ இறைவனே காரணன். வேதநூல்வழி பிரமயாகம், தேவயாகம், பிதிர்யாகம், மானுடயாகம், பூதயாகம் என வேள்வி ஐவகைப்படும். ஆகமத்தின்படி, செபயாகம், கன்மயாகம், தவயாகம், தியானயாகம், ஞானயாகம் என வேள்வி ஐவகை. நெருப்பில் இறைவனை வழிபடுதலே, 'வேள்வி' யெனவும், வேதத்தின் முக்கிய கிரியை அக்கினி காரியமாமெனவும் கொண்டு, வேதநூற் சாரமும் வேள்வி வழிபாடும் ஆனவனென்பது முண்டு. அன்பர்க்கு ஒளியாயும் அல்லார்க்கு இருளாயும் இறைவனிருப்பன். நாம் அடையும் துன்பத்திற்கும் இன்பத்திற்கும் இறைவனே காரணனென்றது, அவனே இருவினைப்பயன் ஊட்டும் முதல்வனாகலின், பாதியாதல் - உமையாதல் அல்லது ஆண் மூர்த்தமாய்த் தோன்றல். 'பொய்யர் தம்பொய்யை மெய்யர் மெய்யை' என்றது காண்க. பொய்யர்க்குப் பொய்யாத் தோன்றி, முடிவில் அவர் திருத்தமுற்ற காலை மெய்யாய் விளங்குவ ரென்பது கருத்து.*

***திருச்சிற்றம்பலம்***

*தில்லையில் அருளிய*

## 10. திருக்கோத்தும்பி*

*அடிகளார் திருத்தில்லையில் எழுந்தருளியிருந்தபோது அருளியது. தண்பொழிலில் மலர்களில் மொய்க்கின்ற வண்டுகளில் அரச வண்டைப் பார்த்து, 'நீ இறைவன் திருவடிக்கண் சென்று ஊதுக' என்று அதனைத் தூதனுப்பு முறையில் கூறுகின்றார். தும்பி என்பது வண்டு, சுரும்பு, தேன், ஞிமிறு என்ற நான்கு வகையான தேனீக்களில் ஒன்று. நான்கு வகையுள் வண்டும் தேனும் நறுநாற்றத்தில் செல்வன; ஏனைய இரண்டும் எல்லா நாற்றத்திலும் செல்வன. ஆதலின் ஈண்டு கோத்தும்பி என்பது நறுநாற்றத்தில் செல்லும் வண்டினை என்க. அவற்றுள் சிறந்தது அரச வண்டாகிய கோத்தும்பி.*

*பிரிவாற்றாத தலைவி தலைவனிடம் சென்று தன் நிலையைக் கூறிவரும்வண்ணம் வண்டைத் தூதனுப்பும் குறிப்புத்தோன்றப் பாடப்படுவது. இப்பதிகம் முழுவதும் கோத்தும்பி என்று முடிதலின் 'திருக்கோத்தும்பி' என வழங்குவதாயிற்று.*

*மணிவாசகப் பெருந்தகை, ஆன்மநாயகனும் குருந்தினடியில் குருநாதனுமான தலைவன் விட்டுப் பிரிந்த நாள்முதல் ஒவ்வொரு கணமும் பிரிவுத்துன்பம் பெரிதாகத்தோன்ற அதனால் குருந்தமரத்தடியில் தீண்டியும் பேசியும் காட்டியும் அருளிய பேரின்ப நிலையாகிய ஆனந்தத்தில் மனோலயப்பட்டு, மனனுணர்வால் (அறிவுக் காட்சியால்) அவனோடு ஐக்கியமாய்ப் புறத்தாலும் பொருந்தவேண்டிய இன்றியமையாமையை எண்ணி, வண்டினைத் தூது அனுப்புகின்றார். இதனாலேயே இதனுட்கிடை சிவனோடு ஐக்கியம் எனப் பழைய குறிப்பொன்று தெரிவிக்கிறது. சிவனுடன் இடையறாது நிற்றல் என இதற்கு உரைகாண்பர் முன்னையோர்.*

*பழைய உரை, வண்டு பறப்பதுபோல மங்கையர் பறந்து சென்று விளையாடுகின்ற ஒருவகை ஆனந்த விளையாட்டு தும்பியாடுதல்; அதிலே பாடப்படுகின்ற பாட்டு கோத்தும்பி என்று கூறும். இதனைச் "சட சித்து*

---

* *கோத்தும்பி யெனமுடியுந் திருப்பாட்டுப் பகுதி. கோத்தும்பி - அரச வண்டு. அதனை விளித்து இறைவன் திருவடிக் கமலங்களில் ஊதும்படி ஏவுகின்றதாக ஒவ்வொரு திருப்பாடலும் இப்பகுதியுள் இயற்றப்பட்டுள்ளது.*

எங்கணும் தாமே நிறைந்த சிவானுபவ சுவானுபூதிகம் விளைந்த அடியார்கள் 'அவ்விளக்கம் எனக்குக் கிடைத்தது உனக்குக் கிடைத்தது' என்று ஒருவர்க்கொருவர் மடிபிடித்துக்கொண்டு வண்டு சுழலுகிறது போலச் சுழலும் ஆனந்த விளையாட்டில் சொல்லுகிற பாடல்" என்றும் விளக்கந்தரும்.

இப்பகுதியில் திருவடிப் பெருமையும், அது உயிர்களால் முற்றும் உணர்தற்கருமையும், மனமொழி மெய்களுக்கு இனிதாதலும், அகப்பற்று புறப்பற்று நீங்கிய அனுபவமும், அது இது என ஐயப்படாத பெருமையும், மனவிகாரம் அகற்றியுயர்தலும், 'நினைக்க அரிதாதல், ஒன்றாயிருந்து எங்கும் வியாபித்திருத்தல், தாய்போற் கருணைசெய்தல், திருவருளும் தானுமாகவே காட்சியளித்தல்' முதலியனவும் கூறப்பெறுதல் காண்க.

--------

**சிவனோ டைக்கியம்**

**நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா**

**திருச்சிற்றம்பலம்**

**215.** பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த
நாவேறு செல்வியும் நாரணனும் நான்மறையும்
மாவேறு சோதியும் வானவருந் தாமறியாச்
சேவேறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 1

***உரை :-*** கோத்தும்பி என்னும் அரசவண்டே! தாமரை மலர்மேல் ஏறித்தங்கும் நான்முகக் கடவுளும், இந்திரனும், அழகு பொருந்திய நாவிற் றங்கும் கலைமகளும், திருமாலும், மறைவாயுள்ள நான்கு வாக்குக்களும் ஆட்டின் (மா-விலங்கு) மேலேறிவரும் ஒளியுருவனாகிய அக்கினியும், தேவர்களும் ஆகிய யாவரும் அறியாத விடைப்பாகனது செவ்விய திருவடி மலரையே அடைந்து, நீ (உனது வாயார) ரீங்காரஞ் செய்வாயாக.

***குறிப்பு :-*** சுத்த மாயையிலுள்ளனவாய்ச் சுட்டறிவுக்குக் காரணமாய நான்கு வாக்குக்களும் நான்மறை யெனப்படும். 'மாவேறு சோதி', என்பதற்குப் பெருமைபொருந்திய சோதிகளாகிய ஞாயிறு, திங்கள், நெருப்பு என்று பொருள் கொள்வாருமுளர். புரந்தரன் - உலகத்தைத் தரிப்பவன் - இந்திரன். பொற்பு - அழகு. நாரணன் -

*கடலைப் படுக்கையாய் உடையவன். மாஏறு சோதி - அக்கினி. சே - இடபம். மா - இங்கு ஆட்டை உணர்த்திற்று.*

216. நானார்என் உள்ளமார் ஞானங்க ளார்என்னை யாரறிவார்
வானோர் பிரான்என்னை ஆண்டிலனேல் மதிமயங்கி
ஊனார் உடைதலையில் உண்பலிதேர் அம்பலவன்
தேனார் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ. 2

***உரை :-*** *அரச வண்டே! தேவர் பெருமானாகிய கடவுள் என்னை ஆட்கொள்ளாவிடின், நான் எத்தன்மையனாயிருப்பேனோ? எனது மனம் எத்தகையதாயிருக்குமோ? என் அறிவு என்னாமோ? என்னை உலகில் யார் (ஞானியென) அறிவார்கள்? அறிவு மயங்கினாற்போல நடித்துத் தசைகலந்த உடைந்த கபாலத்தில் உண்ணும் உணவை (ஆய்ந்து) கொள்ளும் சபாநாயகனின் இன்பத்தேன் பொருந்திய திருவடிக் கமலங்களையே அடைந்து ஊதுவாயாக.*

***குறிப்பு :-*** *முதலடியில் 'ஆர்' என்பது வழுவமைதி. 'மதி மயங்கி' இகழ்ச்சிபோற் புகழ்ச்சி. 'மயங்கி' என்பதை மயங்க வெனக்கொண்டு, அறிவு மயங்கினமையால், உடைபெற்றதலை, என்று பொருள் கொள்ளுவாருமுளர். பிரமன், இறைவனைப் போலத் தனக்கும் ஐந்தலை யிருப்பதாகக் கருதி நடுத்தலையால் இறைவனைப் பார்த்துச் சிரித்தகாலை, அவன் செருக்கொடுங்கும் வண்ணம், அந் நடுத்தலையைக் கிள்ளினார் வைரவமூர்த்தி யென்பது கதை. பலி - உணவு, பிச்சை. தேர் - ஆய்ந்து கொள்ளல், பிச்சை புகினும், தக்காரிடம் ஆய்ந்து ஐயமேற்றல் குறிப்பிக்கப்பட்டது.*

217. தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறுங் காண்தொறும் பேசுந்தொறும்எப்போதும்
அனைத்தெலும் புள்நெக ஆனந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 3

***உரை :-*** *அரசவண்டே! தினையளவு இருக்கின்ற ஒரு மலரிலுள்ள தேனைப் பருகாமல், எண்ணுந்தோறும், காணுந்தோறும், பேசுந்தோறும், பிற எல்லா பொழுதினும், எல்லா எலும்புகளும் உள்ளே இளகும்படி, பேரின்பத்தேனைப் பொழியுந் திருநட முடையான் திருவடிமலரினையே அடைந்து ஊதுவாயாக.*

***குறிப்பு :-*** *தனை - அளவு. நெக - நெகிழ, குனிப்பு - கூத்து.*

சிற்றின்பத்திற்கும் பேரின்பத்திற்கு முள்ள வேறுபாடு இதனுட் கூறப்பட்டது.

இத்திருப்பாடல், இறைவன் திருநடனத்தின் இனிமையை யுணர்த்துகிறது.

பூக்களிலுள்ள தேன் அணு அணுவாக மிகக் குறைவாக இருக்கும். நீ ஆசைதீர உண்ணவும், திரட்டவும் பல பூக்களிற் சென்று அலையவேண்டியிருக்கும். அதனால் தேனின் சுவையும் மணமும் பூக்களுக்குத்தக மாறுபட்டிருக்கும். அதனால் நீ நல்லதையே உண்ண முடியாது. அன்றியும், போதாயிருக்கும் போது தேன் சுரக்கும். மலராயின் வற்றும். யான் அறிவிக்கும் பூவோ நீ நினைக்கும்போதெல்லாம் ஊறும்; காணும்பொதெல்லாம் ஊறும்; அப்பூவைப் பற்றிப் பேசும்போதெல்லாம் தேனூறும்; எப்போதும் ஊறிக் கொண்டேயிருக்கும்; அதனை உண்ணுதலால் அடையும் பயனோ மிகப்பெரிது; வளையாத இளகாத எலும்புகள் அனைத்தும் உள்ளே இளக்கங்கண்டு நெகும்; அதனை உண்பதற்காகக் கூத்தப் பெருமானிடம் நீ சென்று ஊதுக என்றார்.

முன்னைத் திருப்பாடல்களில் 'சேவடிக்கே சென்றூதாய்', 'தேனார் கமலமே சென்றூதாய்' என்றவர் இப்பாடலில் 'குனிப்புடையானுக்கே சென்று ஊதாய்' என்றமை மிக நயந்தருவ தொன்றாம். திருவடியே தேன்சுரக்கும் மலராகக்கண்ட அடிகளாரின் அநுபவமுதிர்ச்சி இறைவனையே தேனடையாக அநுபவிக்கச் செய்கிறது என்பதாம்.

பூவுலகில் காணப்பெறும் இன்பங்கள் யாவும் சிற்றின்பம்; அவற்றையுண்டு வீணே காலங்கழிக்காதே! மனம் மொழி மெய்களால் நுகரத்தக்கதும் நுகர்ந்தாரது ஊனினையுருக்கி உள்ளொளி பெருக்க வல்லதும் ஆன ஆனந்தத்தேனைச் சொரியும் தேனடை ஒன்றுண்டு; அதுதான் ஆனந்தக்கூத்தன் திருவுரு; நீ அங்கேசென்று பண்ணொன்றப் பலபாடல்களை ஓது என வண்டைப் பார்த்துச் சிவபோகம் துய்க்குநெறியை உணர்த்தினார் என உயர்பொருளும் கொள்ளக் கிடத்தல் காண்க.

சிவஞானியர்கள் மகளிர் விளையாட்டிலும், மக்கள் விளையாட்டிலுங்கூட மகேசன் சிந்தனையை மறக்கமாட்டார்கள்; அவற்றை அடிப்படையாகக்கொண்டு உலகிற்கு மிக உயர்ந்த அநுபவத்தை அள்ளி வழங்குவார்கள் என்பதை மனங்கொண்டுய்க.

*'குனிப்புடையானுக்கே சென்று ஊதுக' எனப் பணித்தலின் சிவனோடு ஐக்கியமாதல் காண்க.*

218. கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும் ஆட்கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 4

***உரை :-*** *யாதும் உவமையாகக் கூறப்படாத எந்தை, கண்ணப்ப நாயனாரது பேரன்பிற்கீடான அன்பு பிறர்பால் இல்லாமையைக் கண்டபின், (அன்பிலாத) என்னையும் அடிமையாகக் கொண்டருளி நற்பண்புடையனாம் வண்ணம் என்னைச் செய்து (தில்லைக்கு) வாவென்றருளிச் செய்த பெருங் கருணையும் அழகிய திரு நீறாகிய பொடியுமுடைய பெருமான் திருவடி மலர்க்கே போய் ஊதுவாயாக.*

***குறிப்பு :-*** *கண்ணப்பன், அன்புருவனாதலின், 'கண்ணப்பன்' என்ற அளவே கூறினார். 'என் ஒப்பில் என்னப்பன்' என மாற்றுக. வண்ணம் - குணம். வண்ண - குணமுடையனாக. பணித்து - கட்டளையிட்டு, செய்து. 'கோலமார்தரு பொதுவினில் வருக' என முற்கூறியது காண்க. சுண்ணம் - (இடித்த) பொடி. பொன் - அழகிய.*

**219. அத்தேவர் தேவர் அவர்தேவர் என்றிங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பத்தேதும் இல்லாதென் பற்றறநான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. 5**

***உரை :-*** *(பல சமயிகள்) அந்த வானவர் முழுமுதற் கடவுள் அவர்க்கும் பெரிய வானவராயிருப்பவர் (இவர்) என்று இவ்வாறு உண்மையாகக் கடவுள் இல்லாத தெய்வங்களைக் கடவுள் என்று கூறி (வீணாக)ப் பிதற்றுகின்ற இந்நிலவுலகத்தே, பிற ஆதரவு யாதுமில்லாமல், எனது உலகப் பற்று நீங்கும்படி, நான் (சார்ந்து) கைப்பற்றி நின்ற உண்மையான தேவ தேவனுடைய (திருவடிக்கே) போய் நீ ரீங்காரஞ் செய்க.*

***குறிப்பு :-*** *பத்து - பற்றுக்கோடு, ஆதரவு. பத்து - பற்று, அன்பு என்று கொள்வாரும் உளர். 'மெய்' என்பதை நாலாவதடியில் இரண்டாவது 'தேவர்' என்பதோடு முடிக்க.*

220. வைத்த நிதிபெண்டீர் மக்கள் குலங்கல்வி என்னும்
பித்த உலகிற் பிறப்போ டிறப்பென்னுஞ்
சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த
வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. 6

***உரை :-*** *பித்தம் கொண்டு தடுமாறும் உலகிலே தேடி வைத்த செல்வம், மனைவி, மக்கள், குலம், கல்வி, பிறப்பு, இறப்பு என்னுமிவை காரணமாக அல்லது இவற்றிற்குக் காரணமாக உளதாம், மரபுத் திரிபு, மனக் குழப்பம் முதலியவற்றைத் தொலைத்து, (அறிவின்) தெளிவைத் தந்த அறிவாசானாகிய கடவுளுடைய திருவடிக் கமலங்களையே அடைந்து நீ ரீங்காரஞ் செய்க.*

*குறிப்பு :- 'என்னும்' என்பது நிமித்தத்தை யுணர்த்துஞ் சொல்லாய் நின்றது. விகாரம், திரிவையும், கலக்கம், ஐயத்தால், வருஞ் சஞ்சலத்தையும் குறிக்கும். வித்தகம் - ஞானம்.*

**221. சட்டோ நினைக்க மனத்தமுதாஞ் சங்கரனைக்
கெட்டேன் மறப்பேனோ கேடுபடாத் திருவடியை
ஒட்டாத பாவித் தொழும்பரைநாம் உருவறியோம்
சிட்டாய சிட்டற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 7**

***உரை :-*** *சங்கரனை உள்ளத்தே சற்றே நினைப்பின், அமுதம் ஊறும். அவனது கெடுதலில்லாத திருப்பாதங்களைத் தீயேன் மறந்து விடுவேனோ? (மறவேன்). அவன் திருவடியைப் பொருந்தாத பாவஞ் செய்த அடிமைகளது வடிவத்தை நாம் பார்க்ககில்லேம். நுண்ணிய னாகிய நல்லோன் திருவடிக்கே நீ போய் ரீங்காரஞ் செய்வாயாக.*

*குறிப்பு :- சட்டோ - விரைவாக. 'சட்டோ' என்பது சற்றே என்பதின் திரிபு. ஆயிற்று என்பது 'ஆயிட்டு' என்றாற்போல, ஏ, ஓ வாயிற்று. 'சட்டோ' என்பதற்குக் கெடுதியோ, என்று பொருள்கொண்டு, சங்கரனை நினைத்தல் கெடுதியோ, எனப் பொருளுரைப்பாருமுளர். 'மறந்தாற் கெட்டொழிவேன்' என்பதை விரைவுபற்றி இறந்த காலத்தாற் கூறினாரென்றலுமொன்று. 'திருவடியை' என்பது மறப்பேனோ என்பதற்கும் 'ஒட்டாத' என்பதற்கும் நடுவே நின்றது. சிட்டாய - சிற்றாய - நுட்பமாய.*

222. ஒன்றாய் முளைத்தெழுந் தெத்தனையோ கவடுவிட்டு
நன்றாக வைத்தென்னை நாய்சிவிகை ஏற்றுவித்த
என்தாதை தாதைக்கும் எம்மனைக்குந் தம்பெருமான்
குன்றாத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 8

***உரை :-*** *ஒரு பொருளாய்த் தோன்றி, விரிந்து எத்தனையோ கிளைகள் போக்கி, என்னைக் கருவி கரணங்களோடு செவ்வையாக நிலவும்படி ஏற்படுத்தி, நாய்போலும் என்னைச் சிவிகை ஏற்றினாற் போல உன்னடியாரோடு உயர்ந்த இருக்கையில் இருத்தி வைத்த, எனது தந்தைக்கும் அவன் தந்தைக்கும் எமது தாய்க்கும் முதல்வனாகிய குறைவில்லாத செல்வமுடையானிடமே போய் நீ ரீங்காரஞ் செய்க.*

***குறிப்பு :-*** *சிவதத்துவ முதலிற்றோன்றிப் பின் கலைகளும் தத்துவங்களும் புவனங்களும் பிறவும் விரிந்து, உயிர் சகலாவத்தை யுறுதற்குரிய கருவி கரணங்களெல்லாம் தோன்றுதலின், 'எத்தனையோ கவடுவிட்டு' என்றார். சிவிகை, உயர்ந்த இடத்திற்கு அறிகுறி. என்தாதை என்பது படைத்த அயனையும், அவன் தாதை யென்பது அரியையும், 'எம்மனை' என்பது உமையையுங் குறிக்கு மென்பாரு முளர். எம் + அன்னை - எம்மன்னை; எம்மனை.*

223. கரணங்கள் எல்லாம் கடந்துநின்ற கறைமிடற்றன்
சரணங்க ளேசென்று சார்தலுமே தான்எனக்கு
மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 9

***உரை :-*** *எனது அகக்கருவி, புறக்கருவிகள் ஆகிய எல்லா வற்றிற்கும் அப்பாற்பட்ட நீலகண்டனது திருவடிகளைப் போய்ச் சேர்தலுமே, எனக்கு இறப்புப் பிறப்பென்னு மிரண்டால் வரக்கூடிய மயக்கத்தைத் தொலைத்த அருட்கடல் போல்வான் திருவடிகளையே சென்றடைந்து ரீங்காரஞ் செய்க.*

***கரணங்கள்*** *- மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய புறக் கரணங்களும்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய உட்கரணங்களும் ஆம். இக்கரணங்கள் அந்தந்த உயிர்களின் பரிபாக நிலைக்கேற்பக் காண்பித்த அளவிலன்றி, பெருக்கியும் சுருக்கியும் உணரும் தன்மையவல்ல ஆதலின் எஞ்ஞான்றும் ஒருபடித்தாகிய ஆன்ம அறிவைக் கலந்து நிற்கின்ற இறைவனையும் அறியமாட்டா*

என்பார் 'கரணங்களெல்லாம் கடந்துநின்ற கடைமிடற்றன்' என்றார். கறை மிடறு - நீலகண்டம்.

கறை மிடறு அணியலும் அணிந்தன்று எனச் செம்பவளத் திருமேனியில் நீலப்புள்ளியாக விளங்கியும் காணுங்கண் அவ்வழகில் ஈடுபட்டுக் கண்டிலது என்பதனைக் 'கடந்து நின்ற கறை மிடற்றன்' என்பதால் குறிப்பித்தார்.

தேவர்கள் நஞ்சால் விளையும் சாக்காட்டிற்கு அஞ்சியே சரணம் புக்கனர். அடியேனோ சரணங்களைச் சார்தலே நாம் எய்தலாகும் இறுதிப் பயன் எனச் சார்ந்தேன். தேவர்களுக்கு அப்போது நேர இருந்த மரணம் தவிர்ந்தது. எனக்கோ பிறப்பு இறப்பிற்குக் காரணமான அறியாமையாகிய மயக்கம் அகன்றது. ஓலமிட்ட தேவர்களுக்கு உறுபயனை உதவி, ஒன்றையும் குறியாதே அடைந்த எனக்குப் பேரின்பம் அருளியது அவனுடைய அளவற்ற கருணைத்திறமே என்பார் 'கருணைக் கடலுக்கே' என்றார்.

***குறிப்பு :-*** *கரணம் - கருவி. கறை - களங்கம். மிடறு - கழுத்து. சரணம் - புகலிடமாகிய திருவடி. 'இரண்டின் மயக்கு' என்பதற்கு, இரண்டின் கலப்பு என்று பொருள் கொள்வாருமுளர்.*

**224.** **நோயுற்று மூத்துநான் நுந்துகன்றா யிங்கிருந்து**
**நாயுற்ற செல்வம் நயந்தறியா வண்ணமெல்லாந்**
**தாயுற்று வந்தென்னை ஆண்டுகொண்ட தன்கருணைத்**
**தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ.** **10**

***உரை :-*** ***அரச வண்டே! பிணிவாய்ப்பட்டு, முதிர்வடைந்து (தாயினால்) தள்ளப்பட்ட பயனற்ற கன்றுபோல; நாய்போன்ற யான்பெற்ற பெருஞ்செல்வ மெல்லாவற்றையும் விரும்பி நுகர்ந்தறியா வகை இவ்வுலகி லிருப்ப, தாய்த்தன்மை மேற்கொண் டெழுந்தருளி என்னை ஆட்கொண்ட பேரருளொளி பொருந்திய பெருமானுக்கே நீ போய் ரீங்காரஞ் செய்க. செல்வத்தை நாய் உற்றாலும், தானும் துய்க்காது, பிறரையும் துய்க்க விடாது.***

***குறிப்பு :- இதனுள் இறைவன் ஆசானாய் வந்த போது தன்னை உடன் அழைத்துக் கொண்டு போகாமை குறித்தனர். நுந்து - தள்ளு - இருந்து - இருப்ப. தாய் - தாயியல்பு. தேய் - தேசு, ஒளி.***

225. வன்னெஞ்சக் கள்வன் மனவலியன் என்னாதே
கல்நெஞ் சுருக்கிக் கருணையினால் ஆண்டு கொண்ட
அன்னம் திளைக்கும் அணிதில்லை அம்பலவன்
பொன்னங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 11

***உரை :-*** *அரச வண்டே! (என்னை) உருகாத திண்ணிய மனமுடைய வஞ்சகன், குரங்குபோன்ற மனத்தன் என்றெண்ணி அகற்றிவிடாமல், எனது கற்போற் கடியநெஞ்சினை உருகுவித்து அருள் மிகுதியினால் ஆட்கொண்ட, அன்னப் பறவைகள் மிகுந்த, அழகிய தில்லை நகரிலுள்ள சபைக்கு நாயகனது பொற்கழலணிந்த அழகிய திருவடிக்கே போய் ஊதுவாயாக.*

*கள்ளம், உள்ளதை வெளிப்படுத்தாத உறுதிப்பாடு ஒன்றாலே விளைவது. ஆதலின் மனவுறுதியால் கள்வனானேன்; பின்னர்க் கள்ளத்தால் மனம் இன்னும் வலிதாயிற்று என்பார் 'வன் நெஞ்சக் கள்வன் மனவலியன்' என்றார். கள்ளத்தை மறைக்க ஒருபொய் சொல்ல மனவுறுதி வேண்டும். பின்னர்ப் பொய் கூறியும் களவு பல செய்தும்வர அதனால் மனம் மேலும் வலிதாம் என்பது கருத்து.*

***குறிப்பு :-*** *இறைவன்பால் அன்பின்மையைக் குறிப்பார், 'வல் நெஞ்ச' மென்றார். உலகப் பொருள்களிற் பற்றுண்மை குறிப்பார். 'மனவலியன்' என்றார். 'மன' என்பதை 'மன்ன' என்பதன் திரிபாகக் கொண்டு, திருந்தாமல் நிலைபெற்ற என்று பொருள் கூறுவாருமுளர். வலி - குரங்கு. 'வலியன்' என்பதற்குக் கொடியனென்று பொருள் கூறுவதுமுண்டு. 'அணி' என்பதை 'மணி'யென வைத்துப் பொருளுரைத்தலும் உண்டு. மணி - மாணிக்கம் - மணியம்பலவன் எனக் கொள்க. திளைத்தல் - நிறைதல், பெருகுதல், நெருங்குதல்.*

226. நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனைப்
பேயேன துள்ளப் பிழைபொறுக்கும் பெருமையனைச்
சீயேதும் இல்லாதென் செய்பணிகள் கொண்டருளுந்
தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 12

***உரை :-*** *நாய்போன்ற என்னைத் தன்னுடைய திருவடிகளைப் பாடும்படி செய்த தலைவனை, பேய்த்தன்மை யுடையேனது மனக் குற்றங்களை மன்னித்தருளும் பெருந்தன்மை யுடையானை, இகழ்ச்சி சிறிதுமில்லாமல் யான் செய்யுந்தொண்டுகளை ஏற்றுக் கொண்டருளு கின்ற எனக்குத் தாயான ஆண்டவனிடமே போய் ரீங்காரஞ் செய்க.*

*குறிப்பு :- அலையும் பேய்போல, மனம் சஞ்சலப்படுதலிற், பேயேன் என்றார். சீ - இகழ்ச்சிக் குறிப்பு. பாடுதல், எண்ணுதல், பணி செய்தல் ஆகிய முக்கரண வழிபாடுங் குறிக்கப்பட்டது.*

**227.** நான்தனக் கன்பின்மை நானுந்தா னும்அறிவோம்
தான்என்னை ஆட்கொண்ட தெல்லாருந் தாமறிவார்
ஆனகருணையும் அங்குற்றே தானவனே
கோனென்னைக் கூடக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ. 13

***உரை :-*** *இறைவன் பால் யான் அன்பில்லாதிருத்தலை, அவனும் நானும் தெரிவோம். (பிறர் அறியார்). அவன் என்னை அடிமையாகக் கொண்டதை (உலகினர்) எல்லாருமே தெரிவார்கள். எனக்கு உண்டான திருவருளும் அவன்பாலேற்பட்டதே. (அன்பில்லாத போது, திருவருளை அவனிடத்திருந்தே எனக்குக் கிடைத்ததுபோல இப்போதும்) தலைவனாகிய அவனே, தானாக என்னை வந்து கூடும்படி, மெல்லிய முறையாக ரீங்காரஞ் செய்க.*

*குறிப்பு :- உற்றே, உற்றதே என்பதன் குறுக்கம். தலைவன் அவனாதலின், தலைவிபாற் சேறலும் அவன் கடனேயாதலால், அவனே வலிய வந்து என்னைக் கூடவேண்டும். அன்பில்லாமையால், யான் போய்க் கூடும் ஆற்றலினேன் என்றவாறு.*

**228.** கருவாய் உலகினுக் கப்புறமாய் இப்புறத்தே
மருவார் மலர்க்குழல் மாதினொடும் வந்தருளி
அருவாய் மறைபயில் அந்தணனாய் ஆண்டுகொண்ட
திருவான தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. 14

***உரை :-*** *உலகிற்கு மூலமாய வித்தாய், உலகிற்கப்பாற்பட்டவனாய், இப்பாலுலகிலே இயற்கை வாசனை பொருந்திய பூவினையுடைய குழலினையுடைய உமையம்மையோடு போந்தருளியும், இரகசியப் பொருளைப் பயிற்றுவிக்கும் அருட்பேராசிரியனாக உருவெடுத்துப் புறத்தே தோன்றியும், உள்ளத்தினுள்ளே அருவாய் நிலவியும், ஆட்கொண்டருளிய, வீட்டிற்குக் காரணமான கடவுளிடமே போய் ரீங்காரஞ் செய்க.*

*குறிப்பு :- 'உலகினுக்கு' என்பது 'கருவாய்', 'அப்புறமாய்' என்ற இரண்டினோடுஞ் சென்றியையும், அருளுஞ் சிவமுமாதல், முற்கூறினார். மக்கள் வடிவொடு ஆசானாய் வருதல் வெளியேயும், தோன்றாது உயிரறிவின்கண் மன்னுதல் உள்ளும் நிகழற் பாலன. திரு-*

*வீட்டுச்செல்வம், 'திருவான' என்பதற்கு (வீடாகிய) பெருஞ் செல்வமான என்றுங் கூறலாம்.*

229. நானும்என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்
தானுந்தன் தையலுந் தாழ்சடையோன் ஆண்டிலனேல்
வானுந் திசைகளும் மாகடலும் ஆயபிரான்
தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 15

***உரை :-*** *நீண்ட சடைமுடியுடைய பெருமான் சிவமுஞ் சத்தியு மாக வந்து என்னை ஆட்கொள்ளவில்லையாயின், நானும் எனதுள்ளமும், தலைவனாகிய அவனுக்கு எத்துணை தூரமாய இடத்தி லுள்ளோமோ? வானுலகமும் பத்துத் திசைகளும் பெருங்கடல்களும் ஆகிய பெருமானது தேன்துளிக்குஞ் செய்ய திருப்பாத மலர்களிடமே போய் ரீங்காரஞ் செய்க.*

*சடை, வணங்கிய சந்திரன் போன்றவர்களுக்கு அரணாயும், கங்கையின் செருக்கடக்கி ஆண்ட அருள் நிலையமாயும் விளங்குவ தாகலின் அதனைச் சுட்டி, நலிந்த தன்னை அறியாமை போக்கி ஆட்கொண்டான் என்ற நயம் தோன்றத் 'தாழ்சடையோன்' என்ற பெயரால் விளிக்கின்றார்.*

*அடியார்களை ஆட்கொள்ள இறைவன் உமையொருபாகனாக எழுந்தருளுதலே இயல்பு என்பதனை "மாதொருபாகனார் தாம் வருவர்" என்பன போன்ற விதி நூல்களும் விளக்கும். தையல் - அழகு; பண்பாகுபெயராக உமாதேவியாரை உணர்த்திற்று. 'ஆண்டிலனேல் எவ்விடத்தோம்' எனத் தமது பழைய நிலையையும், இன்றுள்ள சிவஞானப்பேற்றால் விளைந்த பெருமையையும் எண்ணிக் கூறுகின்றார்.*

***குறிப்பு :-*** *தன்னை இறைவனும் சிந்தையைத் திருவருளும் உய்வித்தமை கூறியவாறென்ப. ஆட்கொள்ளாவிடத்து, அவனருளுக்குச் சேய்மையிலிருத்தல் குறிப்பிக்கப்பட்டது. திசைகள் கூறவே, நிலவுலகமும் பிறவுலகமுங் கூறியவாறாம். உந்துதல் - எறிதல், வீசுதல், துணித்தல்.*

230. உள்ளப் படாத திருவுருவை உள்ளுதலும்
கள்ளப் படாத களிவந்த வான்கருணை

வெள்ளப் பிரான்எம் பிரான்என்னை வேறேஆட்
கொள்ளப் பிரானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 16

***உரை :-*** *மனத்தினால் நினைக்க ஒண்ணாத இறைவனது தூய இயல்பைச் சிவஞானத்தாற் காணுதலும், ஒளிப்பின்றித் தெளிவாக மகிழ்ச்சி தரவந்த பேரருள் வெள்ளத் தலைவனாகிய எம்பெருமான் எனக்குத் தனியாக வீடருளும்படி, அவனிடமே போய் ரீங்காரஞ் செய்க.*

***குறிப்பு :-*** *'கரணங்களெல்லாங் கடந்த முதல்வன்' ஆதலின், கரணங்களால் நினைக்கப்படாதவன் என்பார், 'உள்ளப்படாத' என்றார். 'திருவுரு' என்றது இறைவனது சொரூப இலக்கணத்தை. கள்ளப்படாத - மறைதலில்லாத. களி - பெருமகிழ்ச்சி. அம் மகிழ்ச்சி, இறைவனருளாற் கிடைத்தலின், 'களிவந்தவான் கருணை' யென்றார். அடியார்களைத் தொகுப்பாக, முன்னமே திருப்பெருந்துறையில் ஆட்கொண்டமையால், தில்லையில் தன்னைத் தனியே ஏற்று அத்துவிதமுத்தி கொடுத்தல் விரும்புவார் - 'வேறே ஆட்கொள்ள' என்றார்.*

231. பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாள்தோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனை ஆட்கொண்ட
ஐயாஎன் ஆருயிரே அம்பலவா என்றவன்றன்
செய்யார் மலரடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 17

***உரை :-*** *நிலையில்லாத பொருள்களை அடைந்து அதன்கண் தினந்தோறும் அனுபவத்தால் ஆழ்ந்து, அவற்றையே நிலையென எண்ணிப் பயனற்றுக்கிடந்த என்னை ஆண்டுகொண்டருளிய தலைவனே, எனது அருமையாய உயிருக்குயிரே, திருச்சிற்றம்பலத் தாடுவானே, என்பன போன்றவற்றை இயம்பி, அவனது செம்மை பொருந்திய தாமரையடிகளிடமே போய் ரீங்காரஞ் செய்க.*

***குறிப்பு :-*** *இதனுள் அடிகள் அருள்பெறுதற்கு முன்னுள்ள தந்நிலை குறிப்பித்தார். ஆருயிர் - உயிர்க்குயிரென்பதைக் குறிக்கும். செய் - செம்மை, செந்நிறம்.*

232. தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ்
சூலமுந் தொக்க வளையு முடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ. 18

***உரை :-*** *புலித்தோலும் (மெல்லிய) ஆடையும், குண்டலமும்*

*வட்டவடிவான தோடும், பால்போன்ற வெள்ளிய திருநீறும், புதிய சந்தனமும், பசுங்கிளியும், முத்தலைவேலும், தொகுதியான வளையலும் உடைய பழமையான மாதொருபாக வடிவத்தையே கண்டு, மெல்லென ரீங்காரஞ் செய்க.*

***குறிப்பு :-*** *இறைவனது வலது பாகத்திலே புலித்தோலும், குழையும், நீறும், சூலமும் இருப்பன. அம்மை இடது பாகத்தில், துகிலுந் தோடும் சாந்தும் கிளியும் வளையும் உள்ளன. வளை பலவாதலின், 'தொக்க' என்று அடைகொடுத்தார். சிவமுந் சத்தியுமாய் நின்ற இறையுருவம் ஆண்பெண் தோற்றத்திற்குக் காரணமாய மூலவடிவைக் குறிப்பதாகலின் 'தொன்மைக் கோலம்' என்றார்.*

**233.** **கள்வன் கடியன் கலதியிவன் என்னாதே**
**வள்ளல் வரவர வந்தொழிந்தான் என்மனத்தே**
**உள்ளத் துறுதுய ரொன்றொழியா வண்ணமெல்லாந்**
**தெள்ளும் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.** **19**

***உரை :-*** *இவன் வஞ்சகன். (இரக்கமில்லாத) கொடுமையன், கீழ்க்குணமுடையோன் என்று என்னை ஒதுக்காமல், அருட் கொடையாளனாகிய கடவுள், பையப்பைய எனது நெஞ்சின் கண்ணே பூரணமாகத் தோன்றியருளினன். மனத்தின்கணுள்ள இடர்ப்பாடுக ளெல்லாவற்றையும், ஒன்றையாவது தப்பவிடாமல், தெளிவு தந்தொழித்த, திருவடியிடமே போய் ரீங்காரஞ் செய்க.*

*வள்ளலாவார் 'இவன் பெரியன், சிறியன்' என்று வாங்குகின்றவர்களின் தகுதி நோக்காது தனது பெருமை நோக்கி எதனையும் வரையாது வழங்குவர். இறைவனும் கிடைத்தற்கு அரிய திருவருட்செல்வத்தைக் 'கள்வன் கடியன் கலதி' என்று எண்ணாது தனக்கு வழங்குகின்றானாதலின் அவனை 'வள்ளல்' என்று குறிப்பிடுகின்றார்.*

*கள்வன் - உடையவன் அறியாமல் உடைமையைத் திருடுபவன். எல்லாவற்றையும் தமக்கே உடைமையாகக்கொண்டவன் இறைவன். வினைக்கு ஈடாக அவன் அளந்து கொடுத்த அளவைக் காட்டிலும் மிகுதியாக நுகர விரும்புதலின் தன்னைக் 'கள்வன்' என்றார். கடியன் - கொடியன்*

*கள்ளம் கொடுமை முதலான தீயகுணங்கள், என் மனப்புலத்தில் அடர்ந்து அவன் எளிமையிற் புகமுடியாதவாறு தடைசெய்தன; கருணையாளனாகிய இறைவன் மெல்ல மெல்ல அவற்றை அகற்றி*

நன்புலமாக்கிக் குடியேறினான் என்ற நயம் துன்பங்கள் தம் ஆற்றலைக் காட்டுமிடம் உள்ளமாதலின் "உள்ளத்து உறுதுயர்" என்றார்.

அரிசி முதலியவற்றை முறத்திலிட்டுத் தெள்ளும்போது நெல்லும் கல்லும் உமியும் ஒதுக்கி அரிசியைக் கொள்வதுபோல இறைவன் திருவடியும் துன்பங்களை எல்லாம் ஒதுக்கித் தள்ளி விட்டுத் தூய இன்பமே தந்தது என்ற சிறந்த கருத்தைத் 'தெள்ளும்' என்ற சொல்லாற்றலால் காண்க.

*குறிப்பு :-* கலதி - கயமைக் குணமுடையோன். ஒழிந்தான் என்பது, முடிவுற்றான் என்ற பொருட்டாய்ப் பூரண நிறைவைக் குறிக்கும். தெள்ளுதல் - தெள்ளியெறிதல், துயர் நீக்கித் தெளிவு படுத்தல். மனத்திற்றெளிவினை யுண்டாக்கித் துயர்களைத் தூர வீசுதல்.

**234.** **பூமேல் அயனோடு மாலும் புகலரிதென்(று)**
**ஏமாறி நிற்க அடியேன் இறுமாக்க**
**நாய்மேல் தவிசிட்டு நன்றாய்ப் பொருட்படுத்த**
**தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 20**

***உரை :-*** தாமரைப் பூவிலே வீற்றிருக்கும் நான்முகனுந் திருமாலும் வீடு புகுதல் இயலாதென்று தடுமாறி நிற்கவும், அடியேன் நிமிர்ந்து மகிழ்வெய்தி யிருக்கும் வண்ணம், நாய்க்கு மேலான ஆசன மிட்டது போல, எனக்கு மேலான ஞான நிலையருளி, நான் பெருநல மடைதற் பொருட்டு என்னை மதித்தருள் செய்த நெருப்புப் போன்ற செம்மேனியுடையான் பொருட்டே போய் ரீங்காரஞ் செய்க.

செல்வர்வீட்டுக் குழந்தை தின்பண்டம் தின்னக்கண்ட ஏழைவீட்டுக் குழந்தைபோல என்னைப் பார்த்து இறைவன்பாற் செல்லுதற்கு உரிய தவம் தமக்கில்லையே என்று பிரமனும் திருமாலும் ஏமாந்து நிற்க என்பதாம்.

உயிர்க்குணம் மற்றவர்க்கு இல்லாத பெருமையும் வாய்ப்பும் தனக்கு உண்டாகும்போது இறுமாத்தலாதலின் அவ்வுயிரியல்பிற்குத் தான் புறம்பானவன் அல்லேன் என்பார் 'அடியேன் இறுமாக்க' என்றார்.

தேவரீர் பெருங்கருணையால் என்னை ஆட்கொண்டாலும், என்னிலை நாய்போல இழிந்தது. என்னை ஆட்கொண்டமை யானைமேல் இடவேண்டிய தவிசினை நாயின்மேல் இட்டது போலாம். அங்ஙனம் இருந்தும் அடியேன் நன்றாக வேண்டும் என்ற

*திருவருட்குறிப்பால், என்னையும் ஒரு பொருளாகக் கொண்டு ஆட்கொண்டீர் என வியந்து வண்டிற்கு அறிவுறுத்துவார் 'நாய்மேல் தவிசிட்டு நன்று ஆ(க)ப் பொருட்படுத்த' என்றருளினார்.*

***குறிப்பு :-*** *புகல் - (வீடு) புகுதல். ஏமாறுதல் - தடுமாறுதல். இறுமாக்க - நிமிர, மகிழ்வெய்த. நாய் என்பதில் நான்காம் வேற்றுமையுருபு தொக்கு நின்றது. நன்றா - நன்றாக. பொருட்படுத்த - மதித்த. மெய்யிற் பொருந்தச் செய்த, என்றும் பொருள் கொள்ளலாம். பொருள் - மெய். படுத்த - பொருந்திய, தவிசு - இருக்கை.*

*தில்லையில் அருளிய*

## 11. திருத்தெள்ளேணம்

***(மகளிர் விளையாட்டுப் பாடல்)***

*நோன்பு நோற்றல், அம்மானையாடுதல், சுண்ணம் இடித்தல், தும்பி பறத்தல் முதலான மகளிர் விளையாட்டினுள் ஒன்றாகத் திருத் தெள்ளேணமும் கருதுதற்குரியது. 'தெள்ளேணம் கொட்டாமோ' என இருபது பாடலும் முடிதலின் கொட்டுதல் என்னும் சொல்லைக் கொண்டு 'தெள்ளேணம்' என்பது ஒருவகைப் பறையைக் குறிக்குமென ஊகிக்கப்பெறுகிறது. மகளிர் பலர் ஒருங்கு கூடித் தமக்கு விருப்பமான பாடலைப் பாடிக்கொண்டு சிறுபறைகொட்டி விளையாடுதலை நாம் இன்றும் பார்க்கிறோம். அதனால் தெள்ளேணம் என்பது அதுவாகவோ அல்லது அதனைப்போன்றதொரு வேறு விளையாட்டாகவோ இருக்கலாம்.*

*பின்வந்த உரைகாரரில் ஒருவர் தெள் தெளிந்த ஓசை, ஏணம் - மான், மானை உணர்த்தும் ஏணம் என்னும் பெயர் அதன் தோல் போர்க்கப் பெற்ற படகம் என்னும் தோற்கருவியை உணர்த்திற்று. ஆகவே மகளிர் இறைவன் புகழைப்பாடி, படகங்கொட்டி விளையாடுதலே திருத்தெள்ளேணம் என்பர் என்று உரைப்பர். இதுபற்றிய விளக்கமான குறிப்பு ஒன்றும் கிடைக்கப்பெறாததால் கைகொட்டி ஆடுகின்ற கும்மிக்கொட்டையோ அல்லது பறைக்கொட்டையோ குறிப்பதாகலாம் என்று எண்ணக்கிடக்கின்றது.*

*திருவாசக உள்ளக்கிடக்கையாகிய அகத்தியச் சூத்திரம் இதன் உட்கிடையான பொருள் 'சிவனோடு அடையச் செலவு' என்கின்றது. அஃதாவது சிவனோடு எல்லாரும் செல்லுதல் எனப் பொருள்படும். அடைய - முற்றும். மற்றொரு பிரதி 'சிவனோடு அடைவு' என்கின்றது. அஃதாவது சிவனுடன் இடையறாது நிற்றல் என்பதாம்.*

--------

***சிவனோடடைவு***

***நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா***

*திருச்சிற்றம்பலம்*

**235.** திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநாம் அறியவோர் அந்தணனாய் ஆண்டுகொண்டான்

ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமில்லாற் காயிரந்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 1

***உரை :-*** *(தேவரிற் சிறந்த) அரியுங்கூடப் பன்றி வடிவெடுத்து நிலத்தைப் பிளந்து போய் அறியமுடியாத திருப்பாதங்களின் மெய் வடிவத்தை நாம் அறியும்படியாக ஒரு வேதியனாய் வந்து ஆட்கொண் டருளினானாகிய ஒரு பெயரும் ஒரு வடிவமும் (அத்தகைய) யாதும் இல்லாதவனுக்கு ஆயிரம் திருப்பெயர் ஓதிப்பாடி நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

***குறிப்பு :-*** *உரு என்பது சொரூப இலக்கணத்தைக் குறிக்கும். இறைவன் சுட்டியறியப்படாதவனாதலின் நாமம், உருவம் முதலியன அவருக்கு இல்லை என்றார். சுட்டியுணர்தற்குக் கருவியாகிய குலம், குணம், ஊர் முதலிய யாதும் இல்லை என்பார், 'ஒன்றுமில்லாற்கு' என்றார். அசத்தொடு தொடர்பில்லான் என்பது கருத்து. உயிர்களின் பொருட்டே இறைவனுக்கு நாமம் முதலியன கூறப்படும். நாமம்-பெயர்.*

**236.** **திருவார் பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்**
**கருவேர் அறுத்தபின் யாவரையுங் கண்டதில்லை**
**அருவாய் உருவமும் ஆயபிரான் அவன்மருவுந்**
**திருவாரூர் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 2**

***உரை :-*** *மேன்மை பொருந்திய திருப்பெருந்துறையில் வீற்றிருந்த பெருமான் எனது பிறப்பின் மூலத்தை வேரோடு தொலைத்தபின் பிற ஒருவரையும் பொருளாக நான் பார்த்ததில்லை. உள்ளத்துள் அருவாயும் புறத்தே உருவாயும் நின்று அருள்செய்த பெருமான் பொருந்தியுறையுந் திருவாரூர்ச் சிறப்பினைப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக.*

***குறிப்பு :-*** *மேய - விரும்பி எழுந்தருளியுள்ள. பிறவிக்கரு - பிறவிக்குக் கருவான ஆகாமிய சஞ்சித வினைகள் பிறவிக்குக் கருவானது பற்று. அதனை வேரறுத்த லாவது முற்றத்தொலைத்தல். இறைவனை தவிரப் பிறரிடத்தில் ஒன்றையும் வேண்டாமையின் ''யாவரையுங் கண்டதில்லை'' என்றார். ''அருவாய் மறைபயில் அந்தணனாய் ஆண்டுகொண்ட" என்று கோத்தும்பியில் கூறியவாறு ஈண்டும் "அருவாய் உருவமுமாய்" என்றார். திருவாரூர் என்பது இதய*

*கமலத்தையுங் குறிக்கும். அது ஞானத்திற்கு இடமாதல் "தேனமர் சோலைத் திருவாரூரின், ஞானந்தன்னை நல்கிய வியல்பும்" என்றமையால் விளங்கும். அனுபவத்தில் அருவாயும், ஆட்கொள்கிற போது உருவாயும் இறைவன் எழுந்தருளுதலின் "அருவாய் உருவமும் ஆய பிரான்" என்றார்.*

**237.** அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்குந்
தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்துநம்மை
உருக்கும் பணிகொள்ளும் என்பதுகேட் டுலகமெல்லாஞ்
சிரிக்குந் திறம்பாடித் தெள்ளேணங் கொட்டாமோ. **3**

***உரை :-*** *திருமாலுக்கும் அயனுக்கும் ஒழிந்த பிற தேவர்களுக்கும் உணர்த்தப்படுந் தரத்ததாகாமல் (அவர்கட்கெல்லாம் அரிய பொருளாய் மேற்பட்டு) நின்ற முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் எழுந்தருளிவந்து எம்மை உள்ளம் உருகுவித்துத் தொண்டு செய்யும்படி எம்மை ஆட்கொண்டருள்வான் என்கின்ற செய்தியை உலகத்தின ரெல்லாரும் கேள்விப்பட்டு (வியப்பால்) நகையாடும் வகையை நாம் விளையாட்டாகப் பாடித் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

*குறிப்பு :- அல்லாத தேவர்களென்பதில் இந்திரன் முதலியோர் அடங்குவர். திருமாலுக்கு மேற்பட்ட உருத்திரவர்க்கத்தினர் அடங்கார். படித்து - தரத்தது, நிலையினது. தெரிவிக்கும் என்பது தெரிக்கும் எனத் தொக்கு நின்றது. சிவம் என்ற சொல் முழுமுதற் கடவுளைக் குறித்து நின்றது. உருக்கும் என்பதை முற்றெச்சமாகவுங் கொள்ளலாம். சிரிக்குந் திறம்பாடி என்பது 'நாடவர் நம்தம்மை யார்ப்ப வார்ப்ப, நாமும் அவர் தம்மை யார்ப்ப வார்ப்ப' என்ற அடிகளை நினைவுறுத்தும். சிரித்தல் வியப்பாலும், இகழ்ச்சியாலும் நிகழலாம். இறைவர் பெருமையும் தமது சிறுமையும் நோக்கி 'சிரிக்கும்' என்றார்.*

**238.** அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே
பவமாயங் காத்தென்னை ஆண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம் ஒழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. **4**

***உரை :-*** *பயனற்ற விண்ணவருடைய இடம்விட்டுப் பெயர்ந்து செல்லும் நெறிகளில் அழுந்தாவண்ணம் பிறவியாகிய சூட்சியினின்று*

*என்னைக் காப்பாற்றி யாட்கொண்டருளிய மேலான ஒளியுரு வுடையவன் புதுமையாகிய செவ்விய நல்ல அறிவை நமக்குக் கொடுத்தவுடனே நமது தற்போதம் நீங்கிச் சிவமாந்தன்மை எய்திய விதத்தைப்பாடி நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

*தேவர்கள் தன்முனைப்பு அடங்கித் திருக்கயிலைக்குச் சென்று சிவபெருமானை வழிபட்டு உய்யும் வாய்ப்பைப் பிறவியால் பெற்றிருந்தும், அதனைப் பயன்படுத்திக் கொள்ளாமல் அமுதம் அருந்தியும் அரம்பையர்களைத் துய்த்தும் ஐம்புலன்கள்வாய் மயங்கியும் தம் பிறவியைப் பயனின்றிக் கழித்தலின் அவர்களை 'அவமாய தேவர்கள்' என்றார்.*

*அவர்கள் பிறவியும் ஞானவாயிலாகாது போகத்தழுந்திப் புந்தியைக் கெடுத்தலின் அவகதியாயிற்று. அவகதி - கீழான பிறப்பு. மலைமேல் ஏறியவனுக்குத் தரை பள்ளமாகத் தோன்றுதல் போல மனிதப்பிறவியில் துன்ப இன்பங்கள் கலந்த சூழ்நிலையில் உழன்ற போது, உயர்ந்ததாகவும் இன்பமாகவும் தோன்றிய தேவப்பிறப்பு, அதைவிட உயர்ந்த சிவபோகத்தை அனுபவிக்கின்ற காலத்து இழிந்த தாகவும் பயனற்றதாகவும் தோன்றலின், அதனை வெறுத்து இறைவன் என்னை அதில் அழுந்தாமல் பாதுகாத்து ஆண்டுகொண்டருளினான் என்று பாராட்டுகின்றார்.*

***குறிப்பு :- அவம் - பயனின்மை. அவகதி - இடம் பெயர்ந்து செல்லு நெறி. சிவத்தை யொழித்த பிறதேவர்கள் வீடு கொடுக்கு ஆற்றலிலர் ஆதலின் அவமாய தேவரென்றார். அவர்கள் பதவிகள் நிலையாதன ஆதலின் அவகதி என்றார். பவமாயம் என்பதை மாயப்பவம் என மாற்றி வஞ்சப்பிறவி என்றும் பொருள் கொள்ளலாம். செஞ்சுடர் என்பது சிவஞானத்தைக் குறிக்கும். பாசம் நீக்கப்பெற்ற பின் அதனை இறைவன் நல்குதலால் அதனை 'நவமாய' என்றார். பாச நீக்கம் வரை அது இன்னதென்று விளங்காமை காண்க. நாம் என்பது யான், எனது என்னுஞ் செருக்கினைக் குறிக்கும். சிவமானவா - என்றது சிவத்தின் தன்மையை அடைந்தமையையே குறிக்கும்.***

**239.** **அருமந்த தேவர் அயன்திருமாற் கரியசிவம்**
**உருவந்து பூதலத்தோர் உகப்பெய்தக் கொண்டருளிக்**

கருவெந்து வீழக் கடைக்கணித்தென் உளம்புகுந்த
திருவந்த வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 5

***உரை :-*** *கிடைத்தற்கரிய அமுதம் போன்ற விண்ணோராகிய நான்முகனுக்கும் திருமாலுக்கும் அறிவதற்கரிய சிவபெருமான் (ஞானாசாரியனாகத்) திருவுருக்கொண்டு வந்து நிலவுலகினர் உயர்வடையும்படியாக என்னை ஆட்கொண்டருளி எனது பிறவியானது ஞானத்தீயால் எரிந்தொழியும்படி திருக்கடைக் கண்ணாற் பார்த்தருளி என்னுடைய நெஞ்சிற் புகுந்தமையால் பேரின்பச் செல்வம் வந்தவாற்றை நாம் பாடித் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

***குறிப்பு :-*** *அருமருந்தன்ன என்பது அருமந்த என்றாயிற்று. தேவரினத்தில் மாலும் பிரமனுமே சிறந்தவர்கள். அவர்க்கு மேல் பட்டவர் உருத்திர வர்க்கத்தினர். உருவந்து - உருவொடு வந்து. உகப்பு - உயர்வு, மகிழ்ச்சி. புகுந்தமையால் வந்த திருவை 'புகுந்த திரு' வென்றார்.*

**240.** **அரையாடு நாகம் அசைத்தபிரான் அவனியின்மேல்
வரையாடு மங்கைதன் பங்கொடும்வந் தாண்டதிறம்
உரையாட உள்ளொளியாட ஒண்மாமலர்க் கண்களில்நீர்த்
திரையாடு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 6**

***உரை :-*** *ஆடுகின்ற பாம்பினை அரையின் கண்ணே கட்டிய பெருமான், மலையில் விளையாடிய மாதாகிய உமையாள்பாகனாய், நிலவுலகிலே எழுந்தருளி எல்லாம் ஆட்கொண்டருளிய திறத்தினை, நமது உரைதடுமாற நெஞ்சின்கண் அறிவு விளங்க, ஒளியுடைய பூப்போன்ற பெருங்கண்களிலே ததும்புகின்ற நீர் அலைபோலசையு மாறு, நாம் பாடித் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

***ஆடு நாகம் :*** *சாதியினியல்பு. எப்போதும் படமெடுத்து ஆடுகின்ற பாம்பை அசையாதவண்ணம் திருவரையில் அரைஞாணாகக் கட்டியுள்ளார் என்பதை 'ஆடு நாகம் அரை அசைத்த பிரான்' என்பதால் குறிப்பித்தார்.*

*உயிர்கள் இவ்வுலகில் வினைக்கீடாக ஓயாமல் பிறந்திறந்து உழலுவதைக் கண்டு கருணை கூர்ந்து, அவரவர் பரிபாகநிலைக்கேற்ப*

ஆட்கொள்ளத் திருவுளங்கொண்டு உமையம்மையாரை ஒருபாகமாகக் கொண்ட பெண் பாதியனாக எழுந்தருளினான் என்பார் 'வரையாடு மங்கைதன் பங்கொடும் வந்து ஆண்ட திறம் பாடி' என்றார்.

இறைவன் தமக்குச் செய்த பேருபகாரத்தைப் பாராட்டிப் பாடும்போது உரை தடுமாறும். உள்ளொளி மிகும், கண்களில் ஆனந்த நீர் ததும்பும் என்பார் 'உரையாட, உள்ளொளியாட, ஒண் மாமலர்க் கண்கள் நீர்த்திரையாட' என்றார். ஒளியாட என்பதற்கு ஒளி மிக என்பது பொருள். ஒளி - ஞானம். அனுபவ உணர்ச்சி மிகுதியால் அறிவு தடுமாற எனலுமாம்.

***குறிப்பு :-*** *ஆடுநாக மென்பது, கிரியாசத்தியை ஆதல், குண்டலி சத்தியை யாதல் குறிக்கும். அசைத்த - கட்டிய. 'வரையாடு' என்பதில், ஆடு - விளையாடுதல். 'ஆடும்' என்பதற்கு 'ஆளும்' என்று பொருள் கொள்வாருமுளர். 'திறம்' என்பதைப் 'பாடி' என்பதோடு சேர்க்க. ஆடுமா - ஆடுமாறு, ஆடும் வண்ணம்.*

**241. ஆவா அரிஅயன்இந் திரன்வானோர்க் கரியசிவன்**
**வாவாவென் றென்னையும் பூதலத்தேவலிந் தாண்டுகொண்டான்**
**பூவார் அடிச்சுவ டென்தலைமேற் பொறித்தலுமே**
**தேவான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 7**

***உரை :-*** *திருமால், பிரமன், இந்திரன், ஏனைத் தேவர்களாகிய விண்ணவர் யார்க்கும் அடைதற்கரிய முழுமுதற் சிவபெருமான், ஐயோவென்றிரங்கி, நிலவுகத்தே வலிய வந்து, ஒன்றுக்கும் பற்றாத என்னை, இங்கே வா, வா என்றழைத்து ஆட்கொண்டருளித் தனது மலர்போன்ற திருவடியடையாளங்களை எனது தலைமேற் பதிவித்த அளவிலே, யான் தெய்வத்தன்மையடைந்த திறத்தைப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக.*

*ஆட்கொண்ட இறைவன், திருவடி தீட்சை செய்தருளினன். அங்ஙனம் செய்தமைக்கு அடையாளமாக அடிச்சுவட்டையும் என் தலையின்மேற் பொறித்தான்; அதனால் என் பசுத்தன்மை பறந்தது; சிவபோதமிகுந்து நான் தெய்வமானேன்; அதனைப் பாடிக் கொட்டுவோம் என்றாள் என்பது கருத்து.*

*வா வா என்ற அடுக்கு, பரிவின் மிகுதியை விளக்குவது. மண*

*வினைக்கு வருபவர்களை வாருங்கள் வாருங்கள் என்று பரிந்து அழைப்பது போல அழைத்தார் இறைவன் என்பது. பிற்காலப் பெரியார் ஒருவர், "வா வா என்று நின் முலைத்தாயர் வருந்தி அழைத்தால் வாராதிருக்க வகையுண்டோ" எனக் கூறுதலும் காண்க.*

*சிவபுரத்திலுள்ள சிவன் எனக்காக நான் வாழுமிடமாகிய பூமிக்கண் வந்து அழைத்தான் என்பார் 'பூதலத்தே' வந்து என்றார். இது இறைவனுடைய பெருங்கருணையையும் எளிமையையும் காட்டுதல் காண்க.*

*பசியிருந்தும் பாலுண்ண மறுக்கும் குழந்தைபோல நான் அவனழைத்தும் பொருட்படுத்தாதிருப்பதை யறிந்து என்னறியாமைக்கு இரங்கி வற்புறுத்தினான் என்பார் 'வலிந்து' என்றார். இறைவன் திருவடி தீண்டுதற்கு மெல்லிதாய், ஊறுணர்ச்சியை மிகுவிப்பதாய், தெய்வமணம் கமழுவதாய் இருந்தது என்று தம்மனுபவம் கூறுவாள் 'பூவார் அடி' என்றாள்.*

***குறிப்பு :-** 'ஆவா' அதிசயம், அல்லது இரக்கத்தைக் குறிக்குஞ் சொல். வலித்து, வலிந்து என்பதன் விகாரம். சுவடு - குறிப்பு, அடையாளம். தெய்வத்தன்மை, ஈண்டு, சிவத்தன்மை குறிக்கும். கொண்டான், முற்றெச்சம்.*

**242. கறங்கோலை போல்வதோர் காயப்பிறப்போ டிறப்பென்னும்**
**அறம்பாவ மென்றிரண்டச் சந்தவிர்த்தென்னை ஆண்டுகொண்டான்**
**மறந்தேயும் தன்கழல்நான் மறவாவண்ணம் நல்கியஅத்**
**திறம்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 8**

***உரை :-** (காற்றிற்) சுழலுகின்ற ஓலைக்காற்றாடி போன்ற உடம்பின் சார்பான பிறப்பிறப்புக்குக் காரணமாகிய நல்வினை, தீவினை யென்னும் இரண்டின் பயத்தை நீக்கி, என்னை ஆட்கொண்டருளிய பெருமான் தன்னை நான் மறந்தாலும், தன் திருவடியை நான் மறவாதபடி (அதனைச் சிரமேற் பொறித்து) அருள் புரிந்த அந்தச் சிறப்பினைப் பாடல்களாற்பாடி நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

***கறங்கு** - காற்றாடி. ஓலைக் காற்றாடி காற்றில் வேகமாகச் சுழலும் போது அதனது இதழ்கள் ஒன்றும் தோன்றாமல் ஒரே*

*வட்டமாகத் தோன்றுவதுபோல உயிர் பிறந்தும் இறந்தும் சுழன்று என்றும் உடம்போடு கூடியதுபோலக் காணப்படுகிறது என்பார் 'கறங்கோலை போல்வதோர் காயம்' என்றார்.*

***குறிப்பு :-*** *கறங்கோலை - குறுக்காக ஒன்றின்மேல் ஒன்றாக வைத்து முள்ளினாற் பிணைக்கப்பட்ட ஓலைக் காற்றாடி. காயத்தை எடுத்தலும் விடுத்தலும் பிறப்பிறப்பாமென்றவாறு. 'என்னும்' என்ற சொல் காரணங் குறிப்பது. 'பிறப்பென்னும் பேதைமை' யென்றாற் போல. இரண்டச்சம் - இரண்டு பயம், இரண்டின் பயம் என இரு வகையாகக் கொள்ளலாம்.*

**243. கல்நா ருரித்தென்ன என்னையுந்தன் கருணையினாற்**
**பொன்னார் கழல்பணித் தாண்டபிரான் புகழ்பாடி**
**மின்னேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்நகையீர்**
**தென்னா தென்னாவென்று தெள்ளேணங் கொட்டாமோ. 9**

***உரை :-*** *மின்னலைப் போன்ற வளைந்த இடையையும் சிவந்த பவள வாயையும், வெள்ளிய பல்லினையுமுடைய தோழிமாரே, கல்லிலே நார் உரித்தாற்போல, பக்குவமற்ற எனக்குத் தனது அருளினால், தனது பொன்மயமான திருவடிகளைக் காட்டி ஆட்கொண்டருளிய பெருமானது பெருமையைத் தென்னாதென்னா வென்று இசையொலியுடன் பாடித் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

***குறிப்பு :-*** *கல்லைப் போன்ற கடினமான பொருளிலே நாருரித்தல், மிகவும் அரியதோர் செய்கை. அதுபோலத், தமது கடின நெஞ்சில் அன்புண்டாக்குதல் அரிய செய்கை யென்றார். 'பொன்னார்' கழல், என்பதற்குப் பொலங்கழலுடைய திருவடி யென்றும் பொருள் கொள்ளலாம். மின்னலைப் போல ஒளியும் வளைவுமுடையது இடை. தென்னா தென்னா - வென்பது இசைக்குரிய மரபொலிகளுள் ஒன்று.*

**244. கனவேயும் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்**
**புனவேய் அனவளைத் தோளியொடும் புகுந்தருளி**
**நனவே எனைப்பிடித்தாட் கொண்டவா நயந்துநெஞ்சம்**
**சினவேற்கண் நீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ. 10**

***உரை :-*** *கனவிலுங்கூட வானவர்கள் அறிய வொண்ணாத, ஒலிக்குஞ் சிலம்புடைத் திருப்பாதமுடையோன், காட்டு மூங்கில்*

போன்ற, வளையலணிந்த தோளினையுடைய உமையாளொடும், நிலவுலகத்தே போந்தருளி, நனவிலேயே என்னைக் கைப்பற்றி ஆண்டு கொண்டருளிய விதத்தை, அன்பு கூர்ந்து, வேல்போன்ற, பருத்த கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகும்படி, நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.

***குறிப்பு :-*** *வளை, வளையல் அல்லது வளைவு என்று பொருள்படும். மூங்கில்போலத் தோள் எழிலும் ஒளியும் நெய்ப்பு முடையதென்பது குறிக்கப்பட்டது. 'பிடித்து' என்றது, வலிய ஆட்கொண்டமை குறிக்கும். நயந்து - விரும்பி, அன்புசெய்து. சினம் - பருமை.*

**245.** **கயல்மாண்ட கண்ணிதன் பங்கன் எனைக்கலந் தாண்டலுமே**
**அயல்மாண் டருவினைச் சுற்றமும் மாண்(டு) அவனியின்மேல்**
**மயல்மாண்டு மற்றுள்ள வாசகம் மாண்(டு) என்னுடைய**
**செயல்மாண்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.** **11**

***உரை :-*** *கயல் மீன்றன்மை மிக்க கண்ணையுடைய அம்மை பாகன் அத்துவிதமாய் என்னறிவிற் பொருந்தி என்னை ஆண்டருளிய வுடனே நிலவுலகிலே பக்கத்தார்பாற் பற்றொழிந்து, கடத்தற் கரிய வினையால் வருஞ்சுற்றத்தார் உறவுமொழிந்து, (நெஞ்சின் கண் உள்ள) மயக்க மொழிந்து, எஞ்சியுள்ள சொல்லின் செயலொழிந்து, (காயத்தின்) செய்கையுந் தீர்ந்துபோன விதத்தைப்பாடி நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

*என்னுடைய செயல் - சீவச்செயல். உயிர்கள் தற்போத முனைப்பால் வினைவயப்பட்டுச் செய்யும் புண்ணிய பாவங்கள். அவை மாளுதலாவது சிவச்செயல்களாகிய சரியை கிரியை யோகம் ஞானங்களையே செய்து, நாம் செய்வன யாவும் அவனருள் துணையிருந்து இயங்கச் செய்வன; இவற்றால் விளையும் இன்பத் துன்பங்கள் நம்மைச் சார்வன அல்ல; சிவனே செய்பவன்; சிவனே கொடுப்பவன்; சிவனே நுகர்பவன் என்று உணர்தல். இவ்வண்ணம் தற்போதமும் தற்செயலும் மாண்டு, சிவபோதமும் சிவச்செயலுமான படியைப் பாடுதலின் இத்திருப்பாடல் சிவனோடடைவாதல் காண்க.*

***குறிப்பு :-*** *'அவனியில் மேல்' என்பதை இரண்டாமடியின் முதலிற் கொள்க. கயல் - கயலின் தன்மை குறித்தது. குஞ்சுகளைப்*

*பார்வையாற் பொறிவித்தல். அம்மையின் கருணைப் பார்வைக்குக் கயலின் பார்வையை உவமித்தல் மரபு. அருள்பெற்றவுடன் மண், பெண், பொன்னாசை என்ற திரிகரணக் குற்றங்கள் ஒழிந்தமை கூறினார்.*

**246.** முத்திக் குழன்று முனிவர்குழாம் நனிவாட
அத்திக் கருளி அடியேனை ஆண்டு கொண்டு
பத்திக் கடலுட் பதித்த பரஞ்சோதி
தித்திக்கு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. **12**

***உரை :-*** *அன்புக் கடலுள் பதியும்படி செய்த மேலான ஒளியுருவனான பெருமான், தவத்தினர் கூட்டம் வீடடைதற் பொருட்டுத் திரிந்து மிகவும் வாடவும், (அவர்க்கு விரைவிலருள் புரியாது) யானைக்கு அருள் செய்து, அடியேனையும் ஆட் கொண்டருளி, இன்பங் கொடுக்கும் வகையைப்பாடி நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

*இத்திருப்பாடல், முத்தியை விரும்பி எத்தனையோ முனிவர்கள் வருந்த, எனக்குப் பத்தியை அருளி ஆண்டுகொண்ட பரஞ்சோதியைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என்கின்றது.*

*முத்தி - என்றும் மாறாத ஆனந்தமயமான இறைவனோடு ஒன்றியிருக்கும் நிலை. அந்நிலையைப் பெறுதற்காக முனிவர் கூட்டங்கள் காயிலை தின்றும், கானில் உழன்றும், தீயிடை நின்றும் வருந்துகின்றன. அவர்களுக்குக் கிடைக்காத அந்த முத்தியை யான் எளிமையில் அடைய இறைவன் வலியவந்து ஆண்டுகொண்டான்; அன்புக்கடலில் ஆழ்த்தினான். ஆதலால் முத்திப்பேரின்பம் எனக்கு மிக எளிமையாயிற்று. இத்தகைய உபகாரத்தை உன்னி அவனைத் தித்திக்கப்பாடுவோம், தெள்ளேணம் கொட்டுவோம் என்றாள் என்க.*

*தவம் யோகம் முதலியவற்றைக் காட்டிலும் முத்திக்கு உரிய நெறி பத்தியே என்பதும், அதனை இறைவன் தமக்கருளினன் என்பதும், அதனாலே எனக்கு அவன் அருட்சோதிப் பெருமானாக விளங்கினன் என்பதும், ஆதலால் அவனைத் தித்திக்கப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என்பதும் கூறப்பெறுதலின் சிவனோடடைவு அறியப் பெறுமாறு உணர்க.*

***குறிப்பு :-*** *யானை, காளத்தியில் இறைவனை வணங்கி, முத்தி*

*பெற்றது. திருவிளையாடற் புராணத்தில் வெள்ளை யானை சாபந் தீர்ந்தமை கூறப்பட்டது.*

247. பார்பாடும் பாதாளத்தார் பாடும்விண்ணோர் தம்பாடும்
ஆர்பாடுஞ் சாரா வகையருளி ஆண்டுகொண்ட
நேர்பாடல் பாடி நினைப்பரிய தனிப்பெரியோன்
சீர்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 13

***உரை :-*** *நிலவுலகத்தார்பாலும் கீழுலகத்தாரிடமும், வானவர் மாட்டும், வேறு எவ்வுலகினர் மாட்டும் போய்ச் சேராத வகையாக என்னை ஆட்கொண்டருளிய இறைவனது நேர்மையைப் புகழும் பாடலைப் பாடி, எண்ணத்திற் கெட்டாத ஒப்பற்ற பெருந்தகையாளன் புகழ்ப்பாடலைப் பாடி நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

***குறிப்பு- :-*** *பாடு - பக்கம், இடம். பிறவியற்றமையால் தமக்கு மூவுலகிலுந் திரிதலில்லையென்றறிவுறுத்தினர். நேர் - நேர்மை, உண்மை. நேர் பாடல் - நேருக்கு நேர் எம்மிடத்து உண்டான அனுபவங்கள் நிறைந்த பாடல்கள். அவை குருவாக வந்ததும், உபதேசித்ததும், குதிரை கொணர்ந்ததும் கோயில் கட்டியதும், பிட்டுக்கு மண் சுமந்ததும், பிரம்படி பட்டதும், ஆரும் பெறாத இன்பம் அருளியதும் முதலான அனுபவங்கள். சீர் பாடல் - சீரடியார்கள் - சிவானுபவங்கள் என்று பிறகும் சொல்வார்.*

**248. மாலே பிரமனே மற்றொழிந்த தேவர்களே**
**நூலே நுழைவரியான் நுண்ணியனாய் வந்தடியேன்**
**பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகத்தாற்**
**சேலேர்கண் நீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ. 14**

***உரை :-*** *அரியும் அயனும் ஏனைத் தேவர்களும், (மறை முதலிய) அறிவு நூல்களும், புகுந்தறிய முடியாதவன், அவர்கட் கெட்டாத நுட்பமுடையவனாய் எழுந்தருளி என்னிடம் போந்து இரங்கி என்னுள்ளத்தை உருகுவிக்குமியல்பால், (அவ்வியல்பினைப்பாடி) சேல்மீன் போலழகிய நமது கண்களில் நீர் பெருகும் படி, நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

***குறிப்பு :-*** *'மாலே, பிரமனே' என்பதில், ஏகாரம், எண் குறித்தது. பாவகம் - இயல்பு, கருத்து, அனுபவப்பொருள்.*

**249.** உருகிப் பெருகி உளங்குளிர முகந்துகொண்டு
பருகற் கினிய பரங்கருணைத் தடங்கடலை
மருவித் திகழ்தென்னன் வார்கழலே நினைந்தடியோம்
திருவைப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 15

*__உரை :-__ உள்ளமுருகி உடல் பூரித்து நெஞ்சங் குளிரும்படியாக, குடிப்பதற்கு (மிக்க) இனிமை பயக்கும் மேலான அருட்பெருங் கடலை யடைந்து அதன்நீரை மொண்டருந்தி, அழகனாகிய பெருமானது விளங்குகின்ற நீண்ட கழல்களை எண்ணி அடியேங்களாகிய எங்களுடைய செல்வத்தைத் துதித்து நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

*கடல் விரிந்து பரந்து கிடப்பினும் உண்ணும் நீராகாது; இக் கருணைக் கடலோ இருகைகளாலும் அள்ளிப் பருகுதற்கு இனிமையானது என்பாள் 'முகந்துகொண்டு பருகற்கு இனிய பரங்கருணைத் தடங்கடல்' என்றாள் என்பர். அப்பர் சுவாமிகளும் "பருகலாம் பரமாயதோ ரானந்தம்" என்றது காண்க.*

*குறிப்பு- :- பெருகி - பூரித்து, 'திகழ்' என்பதை 'வார்கழலே' என்பதோடு கூட்டுக.*

**250. புத்தன் புரந்தராதியர் அயன்மால் போற்றிசெயும்
பித்தன் பெருந்துறை மேயபிரான் பிறப்பறுத்த
அத்தன் அணிதில்லை அம்பலவன் அருட்கழல்கள்
சித்தம் புகுந்தவா தெள்ளேணங் கொட்டாமோ. 16**

*__உரை :-__ புதுமையுடையோன், இந்திரன், பிரமன், திருமால் முதலிய தேவர்கள் வணக்கஞ் செய்யும், அடியார்க்கன்பன், திருப் பெருந்துறையில் வீற்றிருந்த பெருமான், பிறவியைத் தொலைத்த அப்பன், அழகிய தில்லைத் திருச்சபையான், அவனது திருவருட் பாதங்கள் எமதுள்ளத்திற் புகுந்த விதத்தைப் பாடி நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக. அடியார்கள் வீட்டின்பத்தை விரும்ப தேவர்கள் பகை நீக்கமும் அமுதவுண்டியுமாகிய போக வாழ்வை வேண்டுகிறார்களே என்று எண்ணாமல் அவர்களுக்கும் அவர்கள் விரும்பியதை அளித்தலின் "பித்தன்" என்றார்.*

*குறிப்பு :- புத்தன் - புதியவன், புத்தியுடையானென்று பொருள் கோடலுமுண்டு. 'புதன்' புத்தனென விரிந்ததென்பார். புத்தனாகிய சமயமுதல்வன் இங்கே குறிக்கப்படவில்லை. போற்றி - வணக்கம். சித்தம் - நினைவு, உள்ளம். புரந்தரன் - இந்திரன். ஆதியர் - முதலானவர்; ஏனைய தேவர்கள். அத்தன் - தந்தை.*

**251.** உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாஞ்
சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறுங்
கவலைக் கெடுத்துக் கழலிணைகள் தந்தருளுஞ்
செயலைப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. **17**

***உரை*** *:- பொய்ச்சமயங்களும் பொருத்தமில்லாத நூல்களும் ஆகிய கடலில் வீழ்ந்து மெலிவுற்றுத் தடுமாறுதற்கேதுவாகிய கவலையைத் தொலைத்து, தனது இரண்டு திருவடிகளையுந் தந்தருளுகின்ற இறைவன் திருவருட்செயலை வாழ்த்தி நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

*குறிப்பு :- உவலை - பொய். சவலை - மெலிவு. வளர்ச்சி இல்லாதது. கவல், கவலை யென்பதன் கடைக்குறை.*

**252.** வான்கெட்டு மாருதம் மாய்ந்து அழல்நீர் மண்கெடினுந்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்(கு)
ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென் உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. **18**

***உரை*** *:- ஆகாயம் அழிந்து காற்று இல்லாமற்போய், நெருப்பும், நீரும், மண்ணும் ஒழிந்து போயினும், தான் ஒடுங்குதலின்றி, அசைவில்லாத இயல்புடைய பெருமான் பொருட்டு, எனது உடம்பொழிந்து, ஆவியற்று, சுட்டறிவொழிந்து, அகக்கரணங்கள் தொலைந்து, தற்போதமுங்கெட்ட விதத்தைப் பாடி நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

*ஊன் - உடல்; ஆகுபெயர். ஊன் கெடலாவது இறத்தல் அன்று. புன்புலால் யாக்கையாகச் சீவதேகமாக வினைநுகர்ச்சிக்கு வாயிலாக இருந்த உடம்பு சிவதேகமாகச் சிவப்பணிக்கே உரியதாதல். அப்பர் சுவாமிகளுக்குச் சீவதேகமாயிருந்தவரை குடர்நோயும் பிறவும் வருத்தியது. சிவதேகமாதலை யனுபவித்தபிறகு அவை நீங்கிப் பேரானந்த வாழ்வு தொடங்கியமை அறிக. நித்தியபூசை செய்யும்*

*போது நிருவாண தீட்சை பெற்றவன் தன் தேகத்தைச் சிவதேகமாகவும் கரணங்களைச் சிவகரணங்களாகவும் பாவித்து அப்பாவனை நிலைத்த பிறகே சிவபூசை செய்யத் தொடங்குதல்வேண்டும் என்ற சைவநூல் விதியையும் சிந்திக்க.*

***குறிப்பு :-** சலிப்பு - அசைவு. அண்டத்தில் ஐம்பூதங்களின் கேட்டினை யுணர்த்தியதுபோலப், பிண்டத்திலும், 'ஊன், உயிர், அறிவு, உள்ளம், நான்' என்ற ஐந்தின் ஒடுக்கங் கூறினமை காண்க.*

**253. விண்ணோர் முழுமுதல் பாதாளத் தார்வித்து**
**மண்ணோர் மருந்தயன் மாலுடைய வைப்படியோங்**
**கண்ணார வந்துநின்றான் கருணைக் கழல்பாடித்**
**தென்னாதென் னாவென்று தெள்ளேணங் கொட்டாமோ. 19**

***உரை :-** வானவர்க்கு முழுமுதற்றன்மையான கடவுள், கீழுலகத்தார்க்கு அடிப்படையான மூலமாய், மண்ணுலகினர்க்கு அமுதமாய், நான்முகனுக்குந் திருமாலுக்குந் தேடிவைத்த நிதி போல்வன். அடிமைகளாகிய நாம் கண்ணாரக் காணுமாறு ஆசானாய் எழுந்தருளி வந்து நின்றவனது அருட்பாதங்களைத் தென்னா தென்னா வென்று பாடித் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

*விண்ணோர்கள் பதவி மோகத்தில் மயங்கித் தாமே முதற் கடவுள் என்று தமக்குள் வீறுபேசிக் கலகம் விளைத்துக் கொள்பவர்கள். சிவம் அவர்களுக்குத் தானே முழுமுதற்கடவுள் எனப் பல்லாற்றானும் தோன்றச் செய்தலின் 'விண்ணோர் முழுமுதல்' என்றார்.*

*பாதாளத்தார் தாமே அனைத்தினுக்கும் அடியாயிருந்து தாங்குகிறோம் என இறுமாத்தலின் அவர்களுக்கும், அவர்கள் வாழும் உலகத்திற்கும் தான் வித்தாயிருந்து, வித்தின்றேல் முளையேது மரமேது என்று உணர்த்தி நிற்பன் சிவனாதலின் 'பாதாளத்தார் வித்து' என்றார்.*

*மக்கள் என்றும் துன்ப இன்ப நோயுட்பட்டு வருந்துகின்றவர்கள். மரணம் பிறப்பு என்னும் சுழியுட்பட்டவர்கள்; அவர்களை உய்விக்க இறைவன் மருந்தாயினான் ஆதலின் 'மண்ணோர் மருந்து' என்றார். மருந்து - அமுதம்; மருந்துமாம்.*

**254. குலம்பாடிக் கொக்கிற கும்பாடிக் கோல்வளையாள்**
**நலம்பாடி நஞ்சுண்ட வாபாடி நாள்தோறும்**

அலம்பார் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
சிலம்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 20

***உரை :-*** *குலமிலி, நலமிலி என்று இன்மையைப் பாடுதல். குலம் - கூட்டம். அடியார் முதலிய குலத்தையும் (அவன் சூடிய) கொக்கிறகினையும், புகழ்ந்து பாடி சங்கினாலாகிய வளையலணிந்த உமையம்மையின் நன்மைகளைப் பாடி, இறைவன் (தேவரை உய்விக்க) விடமுண்ட விதத்தைப் பாடி, நீர்நிறைந்தசைகின்ற குளங்களை யுடைய தில்லைச் சபையிலே கூத்தியற்றுகின்ற இறைவனது கழல் அசைதலைப் பாடி நாம் தெள்ளேணங் கொட்டுவோமாக.*

*கொக்குருவங்கொண்ட அசுரன் ஒருவனைக் கொன்று அவனிறகைப் பிடுங்கி சிவபெருமான் தரித்துக் கொண்ட கதை உபதேச காண்டத்திற் கூறப்பட்டது.*

*குறிப்பு :- 'குலம்' என்பதற்கு மேன்மை என்றும் பொருள் கொள்ளுவர். 'கொக்கிற்கு' என்பதற்கு, வேட்டுவ வடிவங் கொண்ட காலை. இறைவன் சூடிய கொக்கின் இறகு என்று பொருள் கொள்ளுதலு முண்டு. அலம்பு - அசைதல். புனல் - நீர்நிலை. நலம் - கருணையுமாம். கோல் - திரட்சி.*

***திருச்சிற்றம்பலம்.***

*தில்லையில் அருளிய*

## 12. திருச்சாழல்

***(சாழல் - மகளிர் விளையாட்டு வகைகளுள் ஒன்று)***

*ஈழநாட்டுப் புத்தர்கள், தில்லைப்பதியின் அளவற்ற பெருமைகளையும் தில்லைவாழந்தணர் சிறப்பையும் கேள்வியுற்றுப் பொறாமைகொண்டு, அரசனையும் அவனுடைய ஊமைப் பெண்ணையும் அழைத்துக்கொண்டு சிதம்பரத்துக்கு வந்தனர்; தில்லை வாழந்தணரை வாதுக்கு அழைத்தனர். அந்தணர்கள் அஞ்சி அம்பலவாணன் அடிக்கமலம் இறைஞ்சி 'யாது செய்வோம்; அடியேங்களைக் காத்தருள்க' என வேண்டிக் கொண்டார்கள். தில்லையம்பலவாணரும், 'வாதவூரடிகளைச் சென்று அழைத்து வாருங்கள்; அவர் வாதில் வென்று சைவத்தின் தனிப்பெரு மாட்சியினை உலகறியச் செய்வார்' என்று அசரீரியாக ஆணை வழங்கினர்.*

*தில்லைவாழந்தணர்கள் அங்ஙனமே சென்று பித்தா! பித்தா! என்றழைத்தனர். வாதவூரடிகள் சமாதி கலைந்து கண்விழித்துப் பார்த்தனர்; தில்லைவாழந்தணர்களனைவரும் சிவகணங்களாகக் காட்சி வழங்கக் கண்டு களித்து, பெருமானை ஆணையை உணர்ந்து அவர்களுடன் தில்லையை அடைந்தார்.*

*அந்தணர்கள் அடிகளாரை அழைத்துச்சென்று புத்த நந்தியின் முன்பு விடுத்தனர். அடிகள் அவர்கள் கேட்ட குதர்க்கவினாக்களுக்கு விடையளித்தும் அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. மறக்கருணை காட்டி ஆட்கொள்ளக் கருதி மந்திர வலிமையுள்ள அப்புத்தர்கள் அத்தனைபேரையும் ஊமைகளாக்கினர். அதனைக் கண்டு வியந்த அரசன், அடிகளின் திருமுன்பு வந்து, அடிகளே! பேசவல்லார் பலரையும் ஊமையாக்கியது ஒரு பெருமையன்று; சமய வெற்றியுமன்று; ஊமையாயுள்ளவரைப் பேசவைப்பதே பெருமையாம்; என் மகள் பிறவிமுதல் ஊமை; அவளைப் பேசவைக்க என்று வேண்டிக் கொண்டான். அடிகளார் அப்பெண்மணியை அங்கு வரவழைத்து, புத்தர் கேட்ட வினாக்களைக் கேட்டு, அவளை விடையளிக்கப் பணித்தார். அப்பெண்மணியும் புலவர்கள் வியக்க, மன்னன் மகிழ, புத்தர் மயங்க விடையளித்தாள். அவ்வினாவையும் விடையையும் அமைத்துத் திருச்சாழல் என்னும் விளையாட்டுப் பாட்டாக அடிகளார் அருளிச் செய்தனர்.*

சாழல் - மகளிர் விளையாடும் ஒருவகை விளையாட்டு. சிலப்பதிகாரத்து அடியார்க்கு நல்லாருரையில் "நல்லார்தம் தோள்வீச்சு நற்சாழல்" என்று கூறப்பெற்றுள்ளது. ஆகவே ஒருத்தி பாட்டுடைத் தலைவன் புகழையும் அழகையும் அணியையும் பற்றி வினாவ, மற்றொருத்தி, தோள்வீசிநின்று விடையளிப்பதான விளையாட்டு என்று துணியலாம். இதனைப் பல்வரிக்கூத்துள் ஒன்று எனக் கூறுவாருமுளர் என்பர் அடியார்க்குநல்லார் (சிலப். அரங். 12-25). ஆதலால் இது கூத்து வகைகளுள் ஒன்றாகக் கருதப்பெற்றது என்பது உறுதி. இறைவன் புகழைப் பற்றிய வினாவும் விடையுமாக அமைந்துள்ளதால் இது திருச்சாழல் என வழங்குவதாயிற்று.

இதன் உள்ளக்கிடக்கை 'சிவனுடைய காருணியம்' என்பது. "அவமறு திருச்சாழல், சிவனுடைய காருணியம்" என்பது அகத்தியச் சூத்திரம். இதன் உரைவிளக்கம் காணவந்த பின்னூல் 'சிவனுடைய அருட்சத்தி விளையாட்டு' என்றது. ஆகவே இறைவனுடைய அருட்சத்தி விளையாட்டே, அவன் பூசுவதுமுதல் அறம் நால்வர்க்கு உரைத்ததுவரையுள்ள அனைத்துச் செய்திகளும் என்று உணர்த்தி நம்மையுய்வித்தலின் இக்கருத்துத் தெளிவாதல் காண்க.

''முன்நாற் கலையும் உணரா மூகையா மேடி, தன்னாற் பதிமுதன்மை சாற்றியதாம் திருச்சாழல்'' என்னும் பழைய திருப்பெருந்துறைப் புராணப் பகுதியால், சிவபரத்துவம் கூறுவதே திருச்சாழலின் குறிக்கோளாதல் காண்க.

இப்பாடல்களில் ஏடி என்றும் சாழலோ என்றும் வரும் சொல்லமைதிகளைக் கொண்டு தோழியருள் ஒருத்தி உரிமையுடன் வினவுவதுபோலவும், இது என்ன அரிய பெரிய யாரும் விடையிறுக்க முடியாத வினாவா? என்று இலேசாக அவள் விடையிறுப்பது போலவும், அங்ஙனம் விடையிறுக்கும்போது இலாகவமாகத் தோள்களை வீசுவதுபோலவும் அமைந்திருத்தல் கொண்டு பழைய மரபையொட்டிச் சாழல் தோள்வீசியாடுங்கூத்து எனப் பொருள் கோடலே சிறந்ததாதல் காண்க.

--------

***சிவனுடைய காருணியம்***
***நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா***
*திருச்சிற்றம்பலம்*

**255.** **பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்**
**பேசுவதும் திருவாயால் மறைபோலுங் காணேடீ**
**பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுங் கொண்டென்னை**
**ஈசன் அவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ. 1**

***உரை :-*** *ஆண்டவன் திருமேனியிற் பூசுவதும் வெள்ளிய திருநீற்றுப் பொடியே. அணிவது சீறுகின்ற பாம்பையே. திருவாயினாலே பேசுவது திருமறைகளே போலும். தோழியே! இவற்றைப் பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுஞ் செய்து அவருக்கு என்ன பயன்? எனில் அவற்றால் இறைவன் எல்லாவுயிர்களுக்கும் அவ்வவற்றிற்குத் தக்க பயன் அளிப்பவனானான்.*

***குறிப்பு :-*** *'பூசுவதும்' முதலியவற்றில் உம்மை இழிவைக் குறித்தது. ஏடி என்பது தோழியைக் குறிக்கும் வழக்குச் சொல். இயல்பு - தகுதி, பலன். சாழல் மகளிர் விளையாட்டில் ஒன்று. மறையோதுவதனால் அறிவினைத் தந்தும், அரவம் அணிவதால் உலகினை யியக்குந் தனது சக்தியை உணர்த்தியும், வெண்ணீறணிவதால் நிலையாமை யுணர்த்தி அருளொளி நல்கியும் எல்லா உயிர்கட்கும் நற்பயன் அளித்தலின் இயல்பானான் என்றார்.*

**256.** **என்னப்பன் எம்பிரான் எல்லார்க்குந் தான்ஈசன்**
**துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது என்னேடீ**
**மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்**
**தன்னையே கோவணமாச் சாத்தினன்காண் சாழலோ. 2**

***உரை :-*** *எந்தையாயும் எமது தலைவனாயும் எல்லார்க்கும் முதல்வனாயும் உள்ள பெருமான் கிழிந்த துணிகள் சேர்த்துத் தைத்த ஆடையைத் தான் கோவணமாகக் கொண்டது எதனால் எனின் நான்கு மறைகளையே பெரிய அரைநாணாகவும் நிலைபெற்ற மெய்ந்நூலில் நிறைந்துள்ள பொருள் தன்னையே கௌபீனமாகவுந் தரித்தனனென்றறிக. (கௌபீனம் - கோவணம்).*

*இத்திருப்பாடல், எல்லார்க்கும் தலைவனாக இருப்பவன் கோவணம் மட்டும் உடுத்துவது ஏன்? என்று ஒருத்தி கேட்க, மற்றவள் அவன் உடுத்தும் கோவணம் துணியன்று வேதமே என்றதாக உணர்த்துகிறது.*

ஈசன் பட்டும் பட்டாடையும் உடுத்தாது தைத்த கோவணத்தைக் கட்டியது ஏன்? என்றாளுக்கு அது பஞ்சு நூல் கோவணமல்ல; ஞான நூலாகிய வேதமே கோவணம்; கலைகளையே அரைஞாணாகக் கொண்டு அதில் இதைக் கட்டியிருக்கின்றான் என்பதை அறிவித்தாள் என்பது கருத்து.

*குறிப்பு :-* துன்னம் - தைத்த துணி. மன்னு கலை - மெய்ந் நூல். தன்னையே என்பதைத் துன்னு பொருள் என்பதோடு சேர்க்க. மறைநான்கென்றது நால்வகை வாக்குகளைக் குறிக்கும். சரடு - அரைக்கயிறு.

**257.** கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடீ
தாயுமிலி தந்தையிலி தான்தனியன் ஆயிடினுங்
காயில் உலகனைத்துங் கற்பொடிகாண் சாழலோ. **3**

***உரை :-*** இறைவனுக்கு ஆலயம் சுடுகாடாகவும் அழகிய ஆடை கொல்லுமியல்புடைய புலியின் தோலாகவும் இருக்கின்றது. தாயுமில்லை தந்தையுமில்லை. தான் தனியனாக விருப்பவன் எனில் அவனுக்குத் தாயுமில்லை தந்தையுமில்லை. தான் தனியனாக விருந்தாலும் அவன் கோபிப்பானாயின் உலகமெல்லாம் கல்லின் பொடி போல் தூளாகிவிடு மென்றறிக.

*குறிப்பு :-* எல்லாம் ஒடுங்கிய இடமே சுடுகாடாகும். புலித் தோலுடைமை உயிர்களின் செருக்கை யடக்கவல்லான் என்பதைக் குறிக்கும். தானே எல்லாம் தோன்றுதற்குக் காரணனாய்த் தான் தோற்றமில்லாதவனாய் ஒப்பற்ற ஒருவனாயிருத்தலின் "தாயுமிலி தந்தையிலி தான்றனியன்" என்றார். எல்லாவற்றையும் ஒடுக்கும் முதல்வன் என்பது இறுதியடியாற் குறிக்கப்பட்டது.

**258.** அயனை அனங்கனை அந்தகனைச் சந்திரனை
வயனங்கண் மாயா வடுச்செய்தான் காணேடீ
நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்
சயமன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ. **4**

***உரை :-*** வருத்தியடக்கினமை பிரமனையும் மன்மதனையும் யமனையும் சந்திரனையும், அடையாளங்கள் அழியாத வடுக்கள் உடையராக இறைவன் செய்தானோவெனின், முக்கண்ணுடைய பெருமானே அவ்வாறு அவர்களைத் தண்டித்தால் அது தேவர்களுக்கு

*மெய்யின் வெற்றியாகுமன்றோ! இத்திருப்பாடல் இறைவன் மறக்கருணை காட்டி, தேவர்களை ஆட்கொண்டமையை அறிவிக்கின்றது.*

***குறிப்பு :-*** *அந்தகன் - எமன். அனங்கன் - உடம்பில்லாதவன் வயனம் - வகை - அடையாளம். வடு - புண்ணின் தழும்பு. சிவபெருமானை யிகழ்ந் தமையால் அத்தேவர்கள் தண்டிக்கப்பட்டார்கள். சிவ வடிவமுடைய வீரபத்திரரால் அவர்கள் தண்டனை யடைந்தமை இறைவனால் தண்டனை யடைந்ததை யொக்கும். அது சிவபெருமானே முழுமுதற் கடவுளென்பதை வானவர்க் கறிவுறுத்துதலின் அது உண்மையின் வெற்றி என்ற கருத்துப்பற்றி 'சயமன்றோ' வென்றார்.*

**259.** **தக்கனையும் எச்சனையுந் தலையறுத்துத் தேவர்கணம்**
**தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்ததுதான் என்னேடீ**
**தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்தருளி அருள்கொடுத்தங்**
**கெச்சனுக்கு மிகைத்தலைமற் றருளினன்காண் சாழலோ.** **5**

***உரை :-*** *(சிவபெருமானை மதியாது வேள்வியியற்றிய அயன் புதல்வனாகிய) தக்கனையும், யாகத்தலைவனையும் கொன்றொழித்து தேவர் கூட்டங்களுள் தொகுதியாக வந்தவர்களை ஒறுத்து ஒழித்தமை என்ன செய்கை எனில், தொகுதியாக வந்தவர்களை வருத்தி யடக்கினாலும் அவர்களுக்கு இரங்கியருளினதோடு யாக மியற்றின வனாகிய தக்கனுக்கு இழிந்த ஆட்டுத்தலையைக் கொடுத்தருளினன் என்றறிக.*

***குறிப்பு :-*** *முதலடியில் எச்சன் என்பது வேள்வியியற்றுங் குருவைக் குறித்தது. நாலாவது அடியில் வேள்வியியற்றுவானாகிய தக்கனைக் குறித்தது. தக்கனுக்கு ஆட்டுத்தலை கொடுத்தமை,*

> *"ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக்*
> *கூட்டிய வாபாடி யுந்தீபற"*

*என்றமையால் உணர்க. மிகை என்பது குற்றம். இழிவு என்ற பொருளில் வந்தது. தன்றலைக்கு வேறான தலையை அதிகமான தலை என்பாருமுளர்.*

**260.** **அலரவனும் மாலவனும் அறியாமே அழலுருவாய்**
**நிலமுதற்கீழ் அண்டமுற நின்றது தான் என்னேடீ**

நிலமுதற்கீழ் அண்டமுற நின்றிலனேல் இருவருந்தம்
சலமுகத்தால் ஆங்காரம் தவிரார்காண் சாழலோ. 6

*உரை :- பூவிலுறைகின்ற நான்முகனும் திருமாலும் அடிமுடி தேடியறியாவண்ணம் அனற் பிழம்பு வடிவமாய்ப் பாதாள முதல் அண்ட முடியைப் பொருந்த நின்றது எக்காரணத்தாலெனின் நிலத்திற்குக் கீழ்ப்பட்ட நிலமுதல் மேற்பட்ட அண்டத்திற்கு மேலாகவுஞ் செல்லுமாறு நில்லாமற்போனால் அயன் அரி இருவரும் தமக்குள் நேரிட்ட தணியாப்பகையால் செருக்கினை யொழிக்க மாட்டார்கள்.*

*குறிப்பு :- நிலமுதற்கீழ் என்பது எல்லாவுலகிற்குங் கீழ்ப்பட்ட முதல் தத்துவத்திற்குங் கீழாக எனப்பொருள்படும். அண்டமுற என்றது எல்லாவுலகிற்கு மேற்பட்ட எல்லைக்கு மப்பாலாக என்று பொருள்படும். சலம் - பகை, கோபம், ஆங்காரம், செருக்கு. அலரவன்- என்பதில் அலர் தாமரை மலரைக் குறிக்கும்.*

**261.** மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தால் அவன்சடையிற் பாயுமது என்னேடீ
சலமுகத்தால் அவன்சடையிற் பாய்ந்திலளேல் தரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ. 7

*உரை :- இமயமலை யரசன் புதல்வியாகிய உமை யம்மையைத் தனது திருமேனியின் ஒரு பாதியில் வைத்ததும் இறைவனது மற்றொரு சக்தி நீர்வாயிலாக அவனது சடையின்கண் சென்று பொருந்தியது எக்காரணத்தாலெனின், நீர்வாயிலாக இறைவன் சடையில் ஓடி விழுந்திடாவிடின் நிலவுலகெல்லாம் அவள் வேகத்திற்பட்டுப் பாதாளத்திலே அழுந்தி வீழ்ந்துவிடப் பெரிய கெடுதி ஏற்பட்டு விடும்.*

*குறிப்பு :- சலமுகத்தால் என்பதற்குக் கோபங்காரணமாக என்றுரைப்பாருமுளர். உமையிடத்து வைத்த பொறாமையால் தலையிற்போய் ஒருத்தி பாய்ந்தனள் என்பது நகைச்சுவை பயக்கும். பிலம் - பாதாளம்.*

**262.** கோலால மாகிக் குரைகடல் வாய் அன்றெழுந்த
ஆலாலம் உண்டான் அவன் சதுர்தான் என்னேடீ
ஆலாலம் உண்டிலனேல் அன்றயன்மால் உள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ. 8

*உரை :- கொந்தளிக்கின்ற பாற்கடலின் கண்ணே*

*பேரொளியோடு கிளம்பிய ஆலகால விடத்தை உணவாகக் கொண்ட பெருமானுடைய திறமைதானிருந்தவாறென்னே எனில் ஆலகால விடத்தை இறைவன் அருந்தாவிடில் திருமால் பிரமன் முதலாகிய மேலான விண்ணவரதிபதிகளெல்லாம் இறந்தொழிவரென்றறிக.*

***குறிப்பு :-*** *கோலாலம் - பேரொலி. சதுர் - திறமை, சாமர்த்தியம். வீடுவர் - இறப்பர். குரைகடல் - ஒலிக்கும் கடல்.*

**263.** **தென்பால் உகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்**
**பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடீ**
**பெண்பால் உகந்திலனேற் பேதாய் இருநிலத்தோர்**
**விண்பால் யோகெய்தி வீடுவர்காண் சாழலோ.** **9**

***உரை :-*** *தென்றிசைக்கண் கருணையோடு கூத்தியற்றும் தில்லைப் பதியின்கணுள்ள ஞானசபை முதல்வன் பெண் பகுதியை விரும்பினன், பெரிய பித்துக் கொண்டவனாவானெனில் அறிவிலியே, பெண் பகுதியை அவன் விரும்பாவிடில் பெரிய நிலவுலகிலுள்ளோர் விண்ணிடைத் தடைதற் பொருட்டு யோகநிலை யடைந்து சாவார்கள்.*

*குறிப்பு :- தென்றிசையைப் பார்த்து இறைவன் ஆடுதலினால் தென்பாலுகந்து. உகந்து - விரும்பி, கருணைகொண்டு. யோகு - யோகம், துறவு நிலை. இறைவன் சிவமுஞ் சக்தியுமாய் நின்று உயிர்களை இயக்காவிடில் உயிர்கள் ஆணும் பெண்ணுமாய் இன்பந் துய்க்கமாட்டா என்பது கருத்து. 'அவளால் வந்த ஆக்கம் இவ் வாழ்க்கை எல்லாம்' என்ற சிவஞானசித்தியுங் காண்க.*

**264.** **தான்அந்தம் இல்லான் தனையடைந்த நாயேனை**
**ஆனந்த வெள்ளத் தழுத்து வித்தான் காணேடீ**
**ஆனந்த வெள்ளத் தழுத்துவித்த திருவடிகள்**
**வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழலோ.** **10**

***உரை :-*** *முடிவில்லாப் பெருமான் தன்னை வந்து சேர்ந்த நாய் போன்ற என்னைப் பேரின்ப வெள்ளத்திலே திளைக்கும்படி செய்தான் என்னில், பேரின்ப வெள்ளத்தில் என்னைப் பதிப்பித்த திருப்பாதங்கள் வானுலகிலுயர்ந்த தேவர்கட்குக் கிடைத்தற்கரிய ஒப்பற்ற பெரும் பொருளாகுமென்றறிக.*

*நாய் தன் எசமானன் அடித்தாலும், நன்றாக ஒறுத்தாலும் அவனடியையே சுற்றிவருதல் போலவும், அவனைச் சினவாது நன்றி யறிதலையே காட்டி அவன் விருப்பத்தைச் சம்பாதித்துக் கொள்வது*

*போலவும், நான் அவனடியைச் சார்ந்து விடாமல் பற்றுவேனாயினேன் என்பாள் 'தனை அடைந்த நாயேனை' என்றாள்.*

***குறிப்பு :-*** *தான் என்றது இறைவனது தனிச் சிறப்பை விளக்கும். அவனொருவனே முடிவற்றவனென்பது கருத்து. வானுந்து என்பதில் வான் - வானுலகம். வான்பொருள் என்பதில் வான் - பெரிய; உந்து தேவர் - உயர்ந்த தேவர். பிற விண்ணவரைச் செலுத்துகின்ற அதிபதி களாகிய தேவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம்.*

**265.** நங்காய் இதென்ன தவம் நரம்போ டெலும்பணிந்து
கங்காளந் தோள்மேலே காதலித்தான் காணேடீ
கங்காளம் ஆமாகேள் காலாந்த ரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ. **11**

***உரை :-*** *பெண்ணே இதென்ன தவவேடம்! நரம்பினையும் ஓட்டினையும் எலும்பினையும் தரித்தது மல்லாமல் முழு எலும்புக் கூட்டினைத் தோளின் மேலே விரும்பியணிந்தான். அஃதென்னெனில் முழு எலும்பு வந்த விதத்தைக் கேட்பாயாக. பேரூழி முடிவிலே அரி அயன் என்பவர்களுடைய வாழ்நாளை முடிவுசெய்து அவர்கள் எலும்பைத் தரித்தனன் என்றறிக.*

***குறிப்பு :-*** *நரம்போடெலும்பென்பதற்கு நரம்போடு கூடிய எலும்பு என்று பொருள் கூறுவாரு முளர். இறைவன் ஆமையோட்டைத் தரித்தமையால் ஓடு தரித்தார் என்றுங் கூறலாம். விண்டுவின் கூர்மாவதாரத்தில் கூர்மத்தின் செருக்கை யடக்கி அதன் ஓட்டைப் பறித்தணிந்தார் என்று புராணங் கூறும். எலும்பு முதலியன அணிதல் இறைவன் ஒடுக்கும் முதல்வன் என்பதை யுணர்த்தும். கங்காளம், முழு எலும்புக்கூடு. மூன்றாவதடியில் கங்காளம் ஆம் ஆ எனப் பதம் பிரிக்க. ஆம் ஆ - ஆம் ஆறு - ஆகும் விதம். நாலாவதடியில் காலம் - முடிவு காலம். செய்ய - செய்து.*

> *"பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்*
> *இருங்கடல் மூடி யிறக்கும் இறந்தான் களேபரமும்*
> *கருங்கடல் வண்ணன் களேபரமுங் கொண்டு கங்காளராய்"*

*என்ற தேவாரமுங் காண்க. கங்காளம் அயன்மால் ஒடுக்கத்தையும் எலும்பு பிறருடைய ஒடுக்கத்தையும் குறிக்கும்.*

**266.** கானார் புலித்தோல் உடைதலைஊண் காடுபதி
ஆனால் அவனுக்கிங் காட்படுவர் ஆரேடீ

ஆனாலுங் கேளாய் அயனுந் திருமாலும்
வானாடர் கோவும் வழியடியார் சாழலோ. 12

***உரை :*** *காட்டிலிருக்கும் புலித்தோல் அவனுக்கு உடை. கபாலம் உணவுப் பாத்திரம். சுடுகாடு இருப்பிடம். இங்ஙனமானால் அத்தகைய கடவுளுக்கு யார் தொண்டராவாரென்னில், அவனத்தகையனானாலும் திருமாலும் பிரமனும் வானுலகினர் தலைவனாகிய இந்திரனும் அவனுக்குப் பரம்பரை அடியார்கள் என்பதை நீ கேட்டறிக.*

***குறிப்பு :*** *கான் - கான மென்பதின் கடைக்குறை. ஆர்புலி - வினைத்தொகை. ஆர்-தங்கு; தலை - கபாலம். ஊண் - உண்ணும் பாத்திரம். காடு - சுடுகாடு. பதி - இடம். வழி - பரம்பரை. கேளாய் - கேள், கேட்டறி. தாருகாவனத்து முனிவர் பிற தேவர்களை வணங்கி வேள்வி செய்து அனுப்பிய புலியைக் கொன்று அதன் தோலை யுடுத்தமையால் தேவர் தலைவனாகிய இந்திரனும், பிரமன் தலையைக் கிள்ளிய காலை கையிற்கொண்ட கபாலமே உண்கலமாதலால் பிரமனும், திருமாலுள்ளிட்ட எல்லாரையும் ஒடுக்கிய இடமே சுடுகாடாதலால் திருமாலும், இறைவனால் ஒடுக்கப்படுதலின் அவர்கள் பரம்பரையடியார்கள் ஆவர் என்றறிக.*

**267.** **மலையரையன் பொற்பாவை வாள்நுதலாள் பெண்திருவை**
**உலகறியத் தீவேட்டான் என்னுமது என்னேடி**
**உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்துங்**
**கலைநவின்ற பொருள்களெல்லாம் கலங்கிடுங்காண் சாழலோ. 13**

***உரை :*** *பனிமலையரசன் மகளாகிய பொன்னின் பதுமை போன்ற ஒளி பொருந்திய நெற்றியையுடைய திருமகளாகிய உமை யம்மையை உலகினர் அறியும்படி இறைவன் மணந்தான் என்பது என்னெனில், அங்ஙனம் உலகறிய அவன் அவளைத் திருமணஞ் செய்யாவிடின், எல்லாவுலகமும் கலை நிறைந்த பொருள்கள் அனைத்தும் கலங்கிப்போகும் என்றறிக.*

***குறிப்பு :*** *வேளாது - மணவாது. 'வாணுதலாள்' என்பதில் வாள் - ஒளி, தீவேட்டல் - மணத்தல். தீ முன்பாக விரும்பிய பெண்ணைக் கொள்ளுதலால் தீ வேட்டல் எனப்பட்டது. கலை - நூல், உமையம்மை இறைவனை மணப்பது கருதித் தவங்கிடந்தமையால் அத்தவத்தின் பயனாக இறைவன் திருமணம் நிகழ்த்தினன். ஆதலின் தவஞ் செய்தலின் பயனாக இறைவன் திருவருள் பெறலாமென்பது*

உலகெல்லாம் அறியக் கிடந்தது. நூற்கருத்துமதுவே. பிழை செய்தாலும் அதற்காக வருந்தித் தவம் ஆற்றின் இறைவனருள் கைகூடும் என்பது விளங்கும். உலகினர் வேண்டுவதும் நூல்கள் கூறும் பயனும் திருவருட் பேறேயாதலின் அத்திருவருட்பேறில்லா விடத்து எல்லாங் கலங்கிடும் என்றார்.

268. தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச் சிற்றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடீ
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக்(கு) ஊட்டாங்காண் சாழலோ. 14

***உரை :*** தேன் பெருகிய குளிர்ந்த வயல் சூழ்ந்த தில்லைப்பதியின் கண்ணுள்ள ஞானசபை முதல்வன்; தானே (ஆலங்காட்டில்) போய் (ஊர்த்துவ) நடனம் இயற்றினமை எதனாலெனின் அவன் அங்ஙனம் போய் அந்தத் திருநடனத்தினை யியற்றாவிடின் உலகமெல்லாம் புலாலில் பதிந்த வேலாயுதத்தையுடைய காளிக்கு ஊட்டப்படும் உணவாகிவிடும் என்றறிக.

***குறிப்பு :*** நடம் என்பது நட்டம் என விரிந்தது. காளி தேவதை அசுரரைக் கொன்று இரத்தங் குடித்தமையாலுண்டான வெறியால் உலகத்தை நாசஞ் செய்யக் கருதிய காலை இறைவன் ஊர்த்துவ தாண்டவமியற்றி அவள் செருக்கை யடக்கினமை இங்கே கூறப்பட்டது.

269. கடகரியும் பரிமாவும் தேரும் உகந் தேறாதே
இடபம்உகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ
தடமதில்கள் அவைமூன்றுந் தழலெரித்த அந்நாளில்
இடபமாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ. 15

***உரை :*** மதம் பொழிய வல்ல யானையையும் குதிரையையும் தேரினையும் விரும்பி ஏறாமல் காளையை விரும்பி யதன்மேல் ஏறிச் சென்ற விதத்தை எனக்கு விளங்கக் கூறுகவென்னில், பெரிய சுவர்களையுடைய கோட்டைகள் மூன்றையும் (தன் சிரிப்பிலுண் டாகிய) நெருப்பினாலெரித்த அந்தக் காலத்திலே காளையாய் இறைவனைத் திருமால் தாங்கினா னென்றறிக.

***குறிப்பு :*** கடம் - மதசலம். கரி - யானை; கரமாகிய துதிக்கையை யுடைமையால் கரியெனப்பட்டது. பரிமா - குதிரையாகிய விலங்கு.

*திரிபுரமெரித்தற் பொருட்டு விண்ணவர் சமைத்த தேரின் அச்சு முறிந்த காலத்தில் திருமால் காளை வடிவாய் இறைவனுக்கு ஊர்தியாயினா னென்பது புராணக் கருத்து. காளை அறத்திற் கறிகுறியாகக் கருதப்படுதலின் திருமால் காளைவடிவங் கொண்டனன் போலும். 'மதில்களவை' என்பதில் 'அவை' என்பது கோட்டைகளைக் குறித்து நின்றது.*

**270.** நன்றாக நால்வர்க்கு நான்மறையின் உட்பொருளை
அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ
அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் ஆயிடினுங்
கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ. **16**

***உரை :*** *பண்டைக் காலத்திலே ஒரு கல்லாலமரத்தின் கீழிருந்து இறைவன் செவ்வையாக நான்கு முனிவர்களுக்கு நால் வேதத்திற்கு மூலமாகிய கருத்தினை அறவுரையாக இயம்பினன். அங்ஙனம் அவன் அறவுரை கூறினும் (மறச்செய்கையால்) முப்புரத்தை முற்றிலும் எரித்தழித்தனன் என்றறிக.*

***குறிப்பு :*** *'அன்று' பழமை குறிக்குஞ்சொல். 'நான் மறையினுட் பொருள்' என்றது அறம்பொருளின்பம் வீட்டினை. அறவுரை என்பதை வடநூலார் தருமோபதேசம் என்பர். 'அறம்' என்பது நாற்பொருளையுங் குறிக்கும். "அறநான் கருள்செய்தாய்", "அறம் பொருளின்பம் வீடு மொழிந்த வாயான்", "எல்லாவறவுரையும் இன்னருளாற் சொல்லினான்" என்ற தேவார அடிகளை யுற்று நோக்குக. பக்குவர்களுக்கு அறவுரை கூறி அருள் புரிந்தது போலத் தீயவர்களுக்குத் தண்டனை புரிதலும் இறைவன் செயல் என்பார், 'கொன்றான் புரமூன்று' மென்றார். கூட்டோடே - கூடிய பொருள் களோடு. முதற் பொருள் துணைப்பொருள் என்பன எல்லாம் அழிக்கப்பட்டன என்பது கருத்து.*

**271. அம்பலத்தே கூத்தாடி அமுதுசெயப் பலிதிரியும்
நம்பனையுந் தேவனென்று நண்ணுமது என்னேடீ
நம்பனையும் ஆமாகேள் நான்மறைகள் தாமறியா
எம்பெருமான் ஈசாவென் றேத்தினகாண் சாழலோ. 17**

***உரை :*** *வெளியிடத்திலே (கூத்தியற்றுவார் போல) கூத்தாடி உண்பதற்குப் பிச்சையேற்றுத் திரிகின்ற சிவபிரானைக் கடவுளென்று விரும்புவது எவ்வாறெனில் அவர் கடவுளாயிருக்கும் விதத்தைக்*

கேட்பாயாக. அத்தகைய நம்பனையே நான்கு வாக்குகளும் தாங்க ளறியவொண்ணாத எங்கள் 'தலைவனே' 'ஆண்டவனே' என்று வழிபட்டன என்றறிக.

**குறிப்பு :** 'அம்பலம்' என்பது பொது இடத்தைக் குறிப்பதால் தனக்கென ஓர் இடம் இல்லான் என்றும், பிச்சையேற்றுண்பதால் தனக்கென உணவு முதலிய பொருள்களில்லாதவனென்றும் இறைவனை இகழ்ந்தமையை ஈண்டு மறுத்தார். இரண்டாமடியில், 'நம்பன்' என்பதற்கு நம்மைப் போல்வான் என்று பொருள் கொள்வாரு முளர். உயிர்கள் சுட்டறிவுக்கும் காரணமாகிய நால்வகை வாக்குகளும் இறைவனையறியாவெனில், அவன் உயிர் அறிவுக்கு அப்பாற் பட்டவன் என்பதும், அவன் செய்கைகளின் காரணம் உயிரறிவுக்கு விளங்கா வென்பதுங் குறித்தவாறாம். பலி - பிச்சை. பலி திரியும் - பலியின் பொருட்டுத் திரியும். அமுது செய - உணவு கொள்ள. தேவன் என்ற சொல் கடவுளை உணர்த்தி நின்றது.

**272.** சலமுடைய சலந்தரன் தன் உடல்தடிந்த நல்லாழி
நலமுடைய நாரணற்கன்றருளியவா றென்னேடீ
நலமுடைய நாரணன் தன் நயனம்இடந் தரனடிக்கீழ்
அலராக இடஆழி அருளினன்காண் சாழலோ. **18**

**உரை :** (போரில்) தணியாத வீரசெருக்குடைய சலந்தரா சுரனுடைய உடம்பை வெட்டிய வலிமை மிக்க சக்கரத்தைக் காத்த லாகிய நன்மையைச் செய்யுந் தன்மையையுடைய நாராயணனுக்குப் பண்டைக் காலத்திற் கொடுத்தருளிய காரணம் என்னை எனின் அத்தகைய திருமால் தன்னுடைய கண்ணைத் தோண்டிச் சிவபிரானது திருவடிக் கீழ் (அருச்சனை) மலராகத் தூவினமையால் சக்கரத்தைக் கொடுத்தருளினன் என்றறிக.

**குறிப்பு :** சலம் - போரில் உறுதி, தணியாக் கோபம். தடிதல் - குறைதல், வெட்டுதல். அலர் - பூ. சலந்தராசுரன் என்பான் திருமால், பிரமன் முதலிய தேவர்களையெல்லாம் வென்று செருக்குக் கொண்டு சிவபெருமானிடம் போர் செய்வதற்காகக் கயிலை மலையை யணுகினான். அப்போது இறைவன் பார்ப்பன வடிவத்தோடு எதிர்ப்பட்டு நிலத்தில் வட்டவடிவமான கோடொன்றினைக் கீறி, அக்கோட்டினுள் அடங்கிய நிலத்தைப் பேர்த்தெடுக்குமாறு அவனை ஏவினார். அவனதை எடுக்க முயன்ற காலை, அஃதே சக்கரமாய் மாறி அவனைக் கொன்றது. திருமால் இறைவனை ஆயிரந் தாமரைப்

*பூவினால் அர்ச்சிக்கக்கருதி அர்ச்சித்தபோது ஒரு பூக்குறையக் கண்டு அதற்குப் பதிலாக தன்னுடைய கண்ணைப் பிடுங்கிச் சாத்தினன் என்பது.*

> *“பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத்*
> *தங்கண் இடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே*
> *சங்கரன் எம்பிரான் சக்கரமாற் கருளியவா”*

*என்னுந் திருத்தோணோக்கச் செய்யுட் பகுதியா லறிக.*

**273.** அம்பரமாம் புள்ளித்தோல் ஆலாலம் ஆரமுதம்
எம்பெருமான் உண்டசதுர் எனக்கறிய இயம்பேடீ
எம்பெருமான் ஏதுடுத்தங் கேதமுது செய்திடினுந்
தம்பெருமை தானறியாத் தன்மையன் காண் சாழலோ. **19**

***உரை :*** *புள்ளிகளுள்ள புலித்தோல் எம்பெருமானுக்கு ஆடை யாகும். ஆலகாலவிடம் அவனுக்கு உண்ணும் உணவாகும். அவன் அதனை உட்கொண்ட சாமர்த்தியத்தை எனக்குத் தெளிவாகக் கூறுக வென்னில் எமது தலைவனாகிய அவன் எதனை உடுத்தி எதனை யுண்டாலும் தன்னுடைய பேராற்றலைத் தான் தெரியாத இயல்புடைய னென்றறிக.*

***குறிப்பு :*** *அம்பரம் - ஆடை. ஆரமுதம் - உண்ணும் உணவு. சதுர் - திறமை. இறைவன் கருணையினாலே எல்லாம் செய்வதன்றித் தனது பெருமையை வெளிப்படுத்தவன்று. ‘அவன் தன் பெருமையையே யறியாதவன்’ என்று இறைவனது பேரருளியல்பினை விளக்கினர்.*

**274.** அருந்தவருக் காலின்கீழ் அறம்முதலா நான்கனையும்
இறந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடி
அருந்தவருக் கறம்முதல்நான் கன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ. **20**

***உரை :*** *செய்தற்கரிய பெருந்தவ மியற்றிய நால்வர்க்கும் கல்லால மரத்தின் கீழ் வீற்றிருந்தருளி அறமுதலாகக் கூறப்படும் நாற் பொருளையும் உரைத்தருளிய காரணத்தை எனக்குத் தெளிவாகக் கூறுகவெனில், அருந்தவர்களுக்கு அறம் முதலிய நான்கினையும் அக்காலத்தில் சொல்லியருளாவிடில் திருத்தமான முறையில் அவர்களுக்கு உலகினியல்பு விளங்கியிராதென்றறிக.*

***குறிப்பு :*** *'அறமுதலா நான்கென்றது' - அறம் பொருள் இன்பம் வீட்டினை. 'திருந்த அவருக்கு' என்ற சொற்கள் திருந்தவருக்கு என்றாயிற்று. திருந்த - திருத்தமாக. உலகியற்கை அவர்கள் வாயிலாகவே அவர்க்குப் பின்வந்தோர் அறிந்தனரென்று கருத இடம் உண்டு. உலகியற்கை நாற்பொருளின் சார்பாகவுள்ள தென்பதும் இதனால் தெளிவாகும்.*

***திருச்சிற்றம்பலம்***

*தில்லையில் அருளிய*

## 13. திருப்பூவல்லி

***(பூவல்லி - மகளிர் விளையாட்டு)***

*பூ வல்லி - பூவோடுகூடிய கொடி. வல்லியிலிருந்து பூக்கொய் வாம் என இவ்விருவது திருப்பாடல்களும் முடிதலின் திருப்பூவல்லி எனப் பெயர்பெற்றது.*

*பூ + அல்லி எனப் பிரித்து பூத்த அல்லிப்பூ என்பாரும் உளர். பூக்கொய்தலும் மகளிர் விளையாட்டினுள் ஒன்று. மகளிர் பலர் கூடிப் பாட்டுப் பாடிக்கொண்டு பூஞ்சோலைகளிற் பூப்பறித்தலும், அவற்றைத் தம் தலையிலும் குழமகன் தலையிலும் சூட்டி மகிழ்தலும் மரபு. அங்ஙனம் மகளிர் பூப்பறிக்கும்போது சிவபெருமான் புகழைப் பாடிக்கொண்டு பூப்பறிப்பதாக அமைந்தது இப்பகுதி.*

*இப்பதிகமும் இருபது திருப்பாடல்களைக் கொண்டது. இருபது பாடல்களிலும் முறையே, திருவடிப்பேற்றால் புறப்பற்று அற்றது அதனால் அத்திருவடியைத் துதித்தல்முறையாம் என்பதும், பொறியின்பம் பெற்றாற்போலப் பேரின்பமும் வாய்த்தது என்பதும், ஆட்கொண்ட முறைமையும், பேரின்பம் பெற்றும் அதை மறந்தவர்களைத் தலைவன் ஒறுத்துணர்த்துதலும், சிவதரிசனம் அறிவுக்காட்சியேயாம் என்றலும், திரிபுரசங்காரத் தத்துவமும், தேகாதி பிரபஞ்சங்கள் பேரின்பப் பேற்றிற்காகவே இறைவனால் விலக்கப் பெற்றமையும், சிவனடியாரினத்திற்கே சிவானந்தப்பேறு உண்டென்றும், ஞான விளக்கத்தை நல்குவதெல்லாம் திருவருள் வடிவான திருவடியே என்பதும், அதனைப் பெற்றவுடன் ஆசையும் பாசமும் அகலும் என்பதும், இறைவன் திருமேனி பேரின்பமே என்பதும், துன்பம் போலத் தோன்றினும் அது இன்பமேயாம் என்னும் அனுபவமுறையும், ஆதலால் சிவத்தை விதிப்படிப் பூசித்தல் இன்றியமையாதது என்பதும், பிறவும் நன்கு விளக்கப்பெறுகின்றன.*

--------

***மாயாவிசயம் நீக்குதல்***

***நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா***

*திருச்சிற்றம்பலம்*

**275.** **இணையார் திருவடி என்தலைமேல் வைத்தலுமே**
**துணையான சுற்றங்கள் அத்தனையுந் துறந்தொழிந்தேன்**

அணையார் புனற்றில்லை அம்பலத்தே ஆடுகின்ற
புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 1

***உரை :-*** *ஒன்றோடொன்றொத்த திருப்பாதங்களை இறைவன் எனது தலைமீது வைத்தருளியவுடன், யான் துணையாகக் கருதிய உறவுகளெல்லாவற்றையும் விட்டு நீங்கினேன். என் அகப்புறப் பற்றுக்கள் அகன்றன. இனி செய்யக்கடவதாகிய வினை சிவபூசை ஒன்றே. தடுக்குங்கரை பொருந்திய நீர்நிலைகள் சூழ்ந்த தில்லைப்பதியிலே ஞானசபையிலே திருநடம்புரிகின்ற (பிறவிக் கடலில்) தெப்பமானவனுடைய புகழைப் பாடி மலர்களைக் கொடிகளினின்று பறிப்போமாக.*

***குறிப்பு :-*** *இணை - இரண்டு, ஒப்பு. இறைவன் திருவடிகட்கு அவைகளே யொப்பாவன அன்றிப் பிற ஒப்பாகா என்பது கருத்து. புணை - தெப்பம், பூவல்லி - பூக்கொடி. 'அல்லிப்பூ' என்பாருமுளர். அம்பலம் - மன்றம். அது ஞானமயமானது.*

**276.** எந்தையெந்தாய் சுற்றம்மற்று மெல்லாம் என்னுடைய
பந்தம்அறுத் தென்னை ஆண்டுகொண்ட பாண்டிப்பிரான்
அந்த இடைமருதில் ஆனந்தத் தேனிருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ. 2

***உரை :-*** *எமது அப்பனாகியும் தாயாகியும் உறவினராயும், ஏனை எல்லாமாகியும், நின்று என்னுடைய பாசக் கட்டினைத் தொலைத்து என்னை ஆட்கொண்டருளிய பாண்டிப் பிரானாகிய பேரின்பத் தேனானவன், அழகிய திருவிடைமருதூரிலே வீற்றிருந்த புடையாய கோயிலைத் தொழுது நாம் கொடிகளினின்று மலர்களைக் கொய்வோமாக.*

***குறிப்பு :-*** *என்னுடைய பந்தமறு... பாண்டிப்பிரான், 'எந்தை யெந்தாய் சுற்றமற்றும் எல்லாம்' என்றும் வைத்துப் பொருள் கொள்ளலாம். முதலடிக்கும் இரண்டாமடியிற் பாதிக்கும், 'என்னப்பன்' தாய். 'உறவினர் முதலிய எல்லாரோடும் எனக்குள்ள தொடர்பாய் கட்டினைத் தொலைத்து' என்று பொருள் கொள்வாருமுளர். தேன், மரப்பொந்துகளிலிருப்பதால், இறைவனைத் தேனென்ற இடத்து, அவனிருக்கும் இடத்தைப் 'பொந்து' என்றார். அந்த - அழகிய. பந்தம் - கட்டு, பாண்டி நாட்டிலே தன்னை ஆண்டமையாலும், பாண்டியனை ஆண்டமையாலும், பாண்டிய மன்னனாய் ஒரு காலத்து விளங்கினமையாலும் 'பாண்டிப் பிரான்' என்றார்.*

277. நாயிற் கடைப்பட்ட நம்மையுமோர் பொருட்படுத்துத்
தாயிற் பெரிதுந் தயாவுடைய தம்பெருமான்
மாயப் பிறப்பறுத் தாண்டான்என் வல்வினையின்
வாயிற் பொடியட்டிப் பூவல்லி கொய்யாமோ. 3

*உரை :- நாயினுங் கீழ்ப்பட்ட நம்மையும் மதிக்கத்தக்க ஒரு பொருளாக வைத்துத் தாயினும் மிகுதியான கருணையுடைய தம் வயமுடைய பெருமான் நமது வஞ்சப் பிறப்பினைத் தொலைத்து ஆட்கொண்டருளினான். எனது கொடிய வினையின் வாயிலே மண் பொடியையிட்டுவிட்டு நாம் கொடிப்பூவைப் பறிப்போமாக.*

*தாய், பால் முதலியன ஊட்டி உடலை வளர்ப்பவள். பின்னர் நம்மாற் பேணப்படும் கடமை நோக்குடையவள். இறைவன் திருவருளை ஊட்டிச் சிவஞானத்தை நல்கி உயிரை வளர்த்து நம்மிடம் எத்தகைய கைம்மாறுகளையும் வேண்டாது இருமைக்கும் உதவுபவன் ஆதலால் இறைவனைத் 'தாயிற்பெரிதும் தயாவுடைய தம் பெருமான்' என்றார். 'ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்' என்றதுபோல அவள் வெறுக்குங்குற்றம் நம்பால் உளதாயின் வெறுக்கவும் செய்வாள்; விலகுவாள். இறைவன் யான் என்ன செய்யினும் விலகாது வெறுக்காது மறைக்காது நின்று பெருங்கருணையைச் செய்தலின் 'தாயிற் பெரிதும் தயாவுடைய தம்பெருமான்' என்றார் எனலுமாம்.*

*வல்வினையின் வாயில் பொடியட்டிப் பூவல்லி கொய்யாமோ: வலிய வினைகளின் வாயில் மண்ணைப் போட்டு, பூக்கொய்வோம் என்றாளாம். பூக்கொய்தல் பதிபுண்ணியம். பூமாலை புனைந்தேத்துதல் நிலைபெறுமாறு செய்யும் உபாயமாகிய சரியையும் கிரியையும். ஆதலால் இனி வரக்கடவ வினைகளான ஆகாமிய சஞ்சிதங்கள் ஏறாமலும், பரிபாகம் பெற்று வருபிறவிக்கு உதவியாகாமலும் கெடும் ஆதலின் அவற்றைக் கெடுத்து என்பார் 'வாயிலே மண்ணை அள்ளிப்போடு' என்ற உலகியல் முதுமொழியை ஒட்டி அங்ஙனம் சுவைபட உரைத்தார்.*

*வினைகள் வரும் வழியிலே மண்ணை அள்ளியிட்டு வழியை அடைத்து எனலுமாம். "வாழ்நாள் வழி அடைக்கும் கல்" என்பது போலக் கருத்துக்கொள்க.*

*குறிப்பு :- பொருட்படுத்து - மதிக்கத்தக்க பொருளாக்கி. தயா- கருணை. மாயம் - கள்ளம், வஞ்சகம். 'என் வல்வினையின் வாயிற் பொடியட்டி' என்பதை 'ஆண்டான்' என்பதோடுஞ் சேர்க்கலாம்.*

*வாயில் பொடியட்டி என்பது வாயில் மண்போட்டு என்ற வழக்கச் சொல்லை நினைவுறுத்தும். அட்டுதல் - போடுதல். பொடி - புழுதி. தமக்கு வேறொரு தலைவனிலனாதலின் இறைவனைத் தம் பெருமான் என்றார்.*

**278.** பண்பட்ட தில்லைப் பதிக்கரசைப் பரவாதே
எண்பட்ட தக்கன் அருக்கன்எச்சன் இந்துஅனல்
விண்பட்ட பூதப் படைவீர பத்திரரால்
புண்பட்ட வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. **4**

***உரை :-*** *செம்மை பொருந்திய தில்லையென்னும் திருப்பதிக்கு வேந்தனாகிய சிவபெருமானை வணங்காமல் மதிப்பிழந்த தக்கன், யாகத் தலைவன், கதிரவன், சந்திரன், அக்கினி முதலிய தேவர்கள் வானிற் பொருந்திய பூதங்களின் சேனையையுடைய வீர பத்திரரினாலே ஊறெய்திய விதத்தைப்பாடிக் கொடிப்பூவைக் கொய்வோமாக.*

***குறிப்பு :-*** *'பண்' என்பதற்கு இசை என்று பொருள் கொள்வாரு முளர். எண் - மதிப்பு. இரண்டாவதடியில், பட்ட - கெட்டொழிந்த, 'விண்பட்ட' என்பதற்கு மேன்மை பொருந்தி என்று பொருள் உரைப்பாருமுளர், வான்வரை வளர்ந்த வடிவத்தையுடைய என்று கூறுவாருமுளர், அருக்கன் - சூரியன். எச்சன் - யாகத் தலைவன். இந்து - சந்திரன்; தக்கன் முதலியோரைத் தண்டித்தற்கு வீரபத்திரரை இறைவன் அனுப்பினமை புராணத்தால் விளங்கும்.*

**279.** **தேனாடு கொன்றை சடைக்கணிந்த சிவபெருமான்**
**ஊனாடி நாடிவந் துள்புகுந்தான் உலகர்முன்னே**
**நானாடி ஆடிநின் றோலமிட நடம்பயிலும்**
**வானாடர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ.** **5**

***உரை :-*** *வண்டுகள் நாடியடைகின்ற கொன்றைப் பூவினைச் சடையிற் சூடிய சிவபெருமான் மனித வுடம்பெடுத்து என்னை யாட் கொள்ள விரும்பி வந்து உலகினர்க்கு முன்பாக என்னையாட் கொண்டு என்னுள்ளத்திற் புகுந்தருளினன். நான் அவனைத் தேடிக் கூத்தாடிக் காணப்பெறாது நின்று அடைக்கலமென்று கூவும்படியாகத் திருநடனமியற்றுகின்ற வானுலகினர் தலைவனுக்காகவே நாம் கொடிப் பூவினைப் பறிப்போமாக.*

***குறிப்பு :-*** 'தேனாடு' என்பதை தேன் + நாடு எனவும், தேன் -

*ஆடு எனவும் பிரிக்கலாம். தேன் - வண்டு. ஊன் - உடம்பு. இறைவன் மானுடச் சட்டை சாத்தி வந்தமை குறிக்கப்பட்டது. தான் இறைவனை நாடாமல் இறைவனே தன்னை நாடி வந்து அருள் புரிந்த கருணைத் திறத்தைக் குறிப்பார் 'நாடிவந்' தென்றார். இறைவன் தன்னை யுடனழைத்துச் செல்லாமையால் 'ஓலமிட' என்றார்.*

**280.** எரிமூன்று தேவர்க் கிரங்கியருள் செய்தருளிச்
சிரமூன் றறத்தன் திருப்புருவம் நெரித்தருளி
உருமூன்று மாகி உணர்வரிதாம் ஒருவனுமே
புரமூன் றெரித்தவா பூவல்லி கொய்யாமோ. **6**

***உரைநடை :-*** *மூன்றாம் அடியை முதலிற் கொள்க.*

***உரை :-*** *(போக வடிவம் யோக வடிவம் அகோர வடிவம் என்னும்) மூன்று வடிவங் கொண்டு போக முத்தி தண்டங்களை விதித்தும், உயிர்களால் தாமேயறியக்கூடாத ஒரு முதல்வன், தக்கன் வேள்வியில் அக்கினி, பிரமன், விண்டு என்னும் மூன்று தேவரையும் தண்டித்தும் அல்லது அவர்கள்மேல் இரக்கங் கொண்டு கொல்லாது விடுத்தருளி தக்கன் எச்சன் இந்திரன் என்பவர்கள் தலையற்று வீழும்படி கோபங்கொண்டு புருவம் நெரித்தருளி (வீரபத்திரரால்) அவர்களைக் கொன்றும் திரிபுர மூன்றையும் தாமே எரித்த விதத்தைப் பாடிக் கொடிப்பூக்களை கொய்வோமாக.*

*லயசிவம், போகசிவம், அதிகார சிவமாகி ஆன்மாக்களின் பரிபாக நிலைக்கேற்ப அருள்வழங்குவன் இறைவன். லயசிவமான நிலையில் அருவமாயும், போகசிவமாகிய சதாசிவமான நிலையில் அருவுருவமாயும், அதிகார சிவமாகிய மகேச்சுரமான நிலையில் உருவமும் ஆவர். லயசிவமாய் ஞானமேயான நிலை நமக்குப் பயன்படுகின்ற போது குருவாக எழுந்தருளும். போகசிவம் லிங்கமாகக் காட்சியளிக்கும். அதிகாரசிவம் மூர்த்தி பேதங்களாகவும் சங்கமங்களாகவும் காட்சி வழங்கும். இவ்வண்ணம் மூன்று வடிவத்தைத் தாங்கியும், உணர்த்தினாலன்றி உணராத உயிர்களுக்கு உணர்வரிதாய் இங்ஙனம் நிலையால் மூன்றாயினும் ஒருவனேயாய் விளங்குவது இறைவன் சிறப்பியல்பு. இதனை அறிவிக்கும் பகுதி 'உருமூன்றுமாகி உணர்வரிதாம் ஒருவனுமே' என்பது.*

*இதில் தேவர்களுக்கு அருள்செய்து எனப் போகமூர்த்தியாயும், புருவம் நெரித்தருளிப் புரம்மூன்றும் எரித்தவர் எனக் கோரமூர்த்தி யாயும், உணர்வரிதாம் ஒருவனுமே என யோகமூர்த்தியாயும் இறைவன்*

*விளங்குதலை அறிவித்தவாறு காண்க.*

***குறிப்பு :-*** *'எரி மூன்று தேவர்' என்பதற்கு முத்தீவேட்கும் முனிவர் எனப் பொருள் கொண்டு தக்கன் வேள்வியில் சிவபரஞ் சாதித்தவர் பொருட்டு இரங்கியருளி என முதலடிக்குப் பொருள் கொள்வாரு முளர். உரு மூன்றுமாகி என்பதற்கு அருவம், அருவுருவம், உருவம் என்று பொருள் கொள்வாருமுளர். 'எரிமூன்று' என எடுத்தால் முத்தீ என்பது வீட்டுத்தீ, காட்டுத்தீ, ஞானத்தீ என்பனவாகும். அவற்றை வட நூலார் காருக பத்தியம், ஆகவனீயம், தக்ஷிணாக்கியம் என்பர்.*

**281.** **வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்(து)**
**இணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத் தெம்பெருமான்**
**அணங்கொ டணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற**
**குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ.** **7**

***உரை :-*** *தன்னை வணங்குவதற்குத் தலையாகிய உறுப்பினைக் கொடுத்து நீண்ட சிலம்பணிந்த தனது திருவடியை வாழ்த்துதற்கு வாயினையமைத்து சேர்ந்து பழகுவதற்குத் தனது சிறந்த அன்பர்களது திருக்கூட்டமும் ஏற்படுத்தி (தமது ஐந்தொழிலுக்கறிகுறியாக) உமையம்மைகாண அழகிய தில்லைப்பொதுவிலே கூத்தியற்றுகின்ற அருட்பண்பினை மிகுதியாகப் பாடி நாம் கொடிப் பூக் கொய்வோமாக.*

***குறிப்பு :-*** *"வாழ்த்தவாயும் நினைக்க மட நெஞ்சும் தாழ்த்தச் சென்னியும்" என்ற தேவாரமுங் காண்க. 'சீரடியார்' என்பதில் சீர் என்பது பயன் கருதாது அன்பு செலுத்துஞ் சிறப்பினைக் குறிக்கும். அணங்கு - தெய்வப்பெண். அது இங்கே அம்மையைக் குறித்து நின்றது. அணங்கொடு என்பதற்கு அழகொடு என்று பொருள் கொள்வாரு முளர். கூர - மிகுதியாக.*

**282.** **நெறிசெய் தருளித்தன் சீரடியார் பொன்னடிக்கே**
**குறிசெய்து கொண்டென்னை ஆண்டபிரான் குணம்பரவி**
**முறிசெய்து நம்மை முழு துடற்றும் பழவினையைக்**
**கிறிசெய்த வாபாடிப் பூவல்லி கொய்யாமோ.** **8**

***உரை :-*** *எனக்குத் தக்க வழிகாட்டி யருளித் தனது சிறந்த அடியார் திருவடிகளுக்கே (தொண்டு செய்ய) என்னை இலக்காக்கி ஆட்கொண்டருளிய பெருமானின் அருட் பண்பினை வாழ்த்தி, நம்மை*

*அடிமையாக்கி, முற்றிலும் வருத்தும் பண்டை வினையை அவன் பொய்யாக்கிய விதத்தைப்பாடி நாம் கொடிப்பூக்கொய்வோமாக. மெய்யடியாரின் கூட்டத்தைச் சார்தலே பழவினையைப் பாற்றும் உபாயம். நெறி - இறைவனை அடைதற்குரிய வழிகள் - சரியை, கிரியை, யோகம், ஞானம். குறி - அடையாளம்.*

***குறிப்பு :-*** *முறி - அடிமை. உடற்றும் - வருத்தும். முறிசெய்து - அடிமைச் சீட்டு எழுதி வாங்கி. கிறி செய்தவா - பொய்யாக்கிய விதத்தை.*

**283. பன்னாட் பரவிப் பணிசெய்யப் பாதமலர்**
**என்ஆகம் துன்னவைத்த பெரியோன் எழிற்சுடராய்க்**
**கல்நா ருரித்தென்னை யாண்டுகொண்டான் கழலிணைகள்**
**பொன்னான வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 9**

***உரை :-*** *பலநாட்களாக வணங்கித் தொண்டு செய்தமையால், திருவடித் தாமரையை எனது சென்னியிற் பொருந்தவைத்த பெருந்தகையாளனாய், உள்ளத்தெழுகின்ற சோதியாய், கல்லிலே நார் உரித்தாற்போல, என் நெஞ்சக் கல்லை அன்புடையதாக்கி, என்னை ஆட்கொண்டருளியவனது இருசேவடிகளும், நமக்குப் பொன்போல, மாறாத பயன் தந்த வகையைப் பாடி நாம் கொடிப் பூக்கொய்வோமாக.*

*இடைவிடாது வணங்குதலும், சிவப்பணிகளைச் செய்தலும், மனம் பொறி புலன்களிற் சென்று இருவினைகளைச் செய்து மீளவும் பிறவாதவாறு உய்யும் உபாயமாதலின் அதனை அடியேன் அறிந்து உய்யச்செய்தான் என்பார் 'பன்னாட் பரவிப் பணிசெய்ய' என்றார்.*

***குறிப்பு :-*** *நெடுங்கால மியற்றிய தவத்தின் பயனாக ஞானங் கிட்டுமென்பது, தமது அனுபவத்தின் வைத்து அடிகள் அறிவுறுத்தி யருளினர். ஆகம் - உடம்பு, இங்கே தலையைக் குறிக்கும். 'எழிற்சுடராய்' என்பதை 'உள்ளத் தெழுகின்ற ஞாயிறே போல, என்பதோடு ஒத்துப் பார்க்க. 'பொன்' அரிய பலனளித்தற்கறிகுறி.*

**284. பேராசை யாம்இந்தப் பிண்டமறப் பெருந்துறையான்**
**சீரார் திருவடி யென்தலைமேல் வைத்தபிரான்**
**காரார் கடல்நஞ்சை உண்டுகந்த காபாலி**
**போரார் புரம்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 10**

***உரை :-*** *(எல்லையில்லாமையாற்) பெரிதாய ஆசையால் உள தாம் இந்த உடம்பெடுத்தலாகிய பிறவி நீங்கும்படி, திருப்பெருந்துறை*

*அண்ணல் தனது செவ்விய திருப்பாதங்களை எனது தலைமேல் வைத்த வள்ளல், அச்சம் பொருந்திய கடலின்கண் எழுந்த விடத்தை விரும்பி அருந்திய கபாலங்கையிற் கொண்ட பெருமான், அவன் போர் தொடர்ந்த முப்புரவியல்பு பாடி நாம் கொடிப்பூக் கொய்வோமாக.*

*"அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்*
*தவா அப்பிறப்பீனும் வித்து" - குறள்.*

***குறிப்பு :-** பிண்டம் - உடம்பு பிறவிக்கு ஆகு பெயர். சீர் - செம்மை. கார் - அச்சம், கருமை. உண்டுகந்த - உகந்துண்ட. கபாலி - பிரம கபாலத்தையுடையவன். பிரமன் சிரத்தைக் கொய்தகாலை, அவன் தலையையே பலிப்பாத்திரமாக வைரவர் பிச்சையேற்றமை புராணத்தா லறியற்பாலது.*

**285. பாலும் அமுதமுந் தேனுடனாம் பராபரமாய்க்**
**கோலங் குளிர்ந்துள்ளங் கொண்டபிரான் குரைகழல்கள்**
**ஞாலம் பரவுவார் நன்னெறியாம் அந்நெறியே**
**போலும் புகழ்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 11**

***உரை :-** பாலும் தேனும் அமுதமும் ஒருங்கு சேர்ந்தாலன்ன மிக மேலான பொருளாய், உள்ளங் குளிர்விக்குந் திருவடிவோடு தோன்றி எனது மனத்தைக் கவர்ந்து கொண்ட பெருமானது ஒலிக்குஞ் சிலம்பு பொருந்திய திருவடிகளை உலகத்திலே வழிபடுவாரது உயர் நெறியே நல்ல வழியாம். அவ்வழி போன்ற அவனது புகழினைப் பாடிக் கொடிப்பூக் கொய்வோமாக. குரைகழல்கள் என்றது சிவானுபவம் உடையவர்க்கு எப்போதும் சிந்தையில் சிலம்பொலி அனுபவம் சேரமான் பெருமாள் நாயனாருக்கு நிகழ்ந்தது போல நிகழும் என்பதற்காகவாம்.*

***குறிப்பு :-** பராபரம் - மேலானவற்றிற்கு மேலானது. பரா - மேல், பரம் - மேல். 'கோலத்தாற் குளிர்ந்து' என்னவே, குளிர்ந்த கோலமென்பது கருத்தாம். குளிர்தல் உள்ளத்திற்குக் குளிர்ந்திருத்தல், ஆதலால், உள்ளங் குளிர்விக்கும் என்று பொருளுரைக்கப்பட்டது. 'அந்நெறியே' என்பதைப் 'பரவுவார்' என்பதனோடும் 'போலும்' என்பதனோடு மியைக்க. அகரம், உயர்வு குறிப்பது.*

**286. வானவன் மாலயன் மற்றுமுள்ள தேவர்கட்கும்**
**கோனவனாய் நின்று கூடலிலாக் குணக்குறியோன்**
**ஆன நெடுங்கடல் ஆலாலம் அமுதுசெய்யப்**
**போனகம் ஆனவா பூவல்லி கொய்யாமோ. 12**

***உரை :-*** *(வானவர் தலைவனாகிய) இந்திரன், திருமால், பிரமன், எனைத் தேவர்கள் ஆகிய யாவர்க்கும் தலைவனாய் நின்று, தன்னளவில் இயற்கையாகவே முக்குணமும் நாமம் முதலிய அடையாளமுங் கூடப் பெறாதவன், பெரிய (பாற்) கடலில் உண்டான ஆலகால விடமானது, அவனுக்கு உண்ணுதற்குரிய உணவாக ஆயின வகையைப் பாடி நாம் கொடிப்பூக் கொய்வோமாக.*

***குறிப்பு :-*** *'வானவன்' என்ற ஒருமையால், அது இந்திரனைக் குறிப்பதாயிற்று. குணம் : குறி, கூடலில்லாதவனென்று மாற்றுக. அவ்வாறே 'நெடுங்கடல் ஆனஆலாலம்' எனவும் மாற்றுக. ஒருவரும் அடையக்கூடாத குணமுங் குறியுமுடையோனெனப் பொருள் கொள்ளுவாருமுளர். போனகம் - உணவு. அமுது செய்ய - உண்ண.*

**287.** **அன்றால நீழற்கீழ் அருமறைகள் தானருளி**
**நன்றாக வானவர் மாமுனிவர் நாள்தோறும்**
**நின்றார ஏத்தும் நிறைகழலோன் புனைகொன்றைப்**
**பொன்தாது பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 13**

***உரை :-*** *பண்டை நாளிலே, கல்லாலமர நிழலின் கீழ், அருமையான நூல்களாகிய நான்மறைகளை வெளிப்படுத்தியருளி, ஒவ்வொரு நாளும், தேவர்களும் பெரிய முனிவர்களும், செவ்வையாக அமைதியாய், மனப்பூர்த்தியாய், வழிபடுகின்ற, திருவடிக்கண் நிரம்பிய சிலம்புகளை யுடையோனது திருமுடியை அழகு செய்யும் அடையாளக் கொன்றைப்பூவின் பொன்னிறமான மகரந்தத்தைப் பாடி நாம் கொடிப்பூக் கொய்வோமாக.*

*சிவபெருமானது அடையாள மலரைப் பாடிப் பூவல்லி கொய்வாம் என்பாள் அதன் பொன் தாது பாடிக் கொய்வோம் என்கின்றாள்; அவள் அறிவு பூவாகிய தூலத்தைவிட்டு மகரந்தமாகிய சூக்குமத்தில் ஈடுபட்டதால் என்க.*

*வானவர் நன்றாக ஏத்தியதன் நோக்கம் தமக்கு என்றும் அமுதமும் இந்திரபோகமுமே இடையூறின்றிப் பெருகவும், நித்தலும் எம்பிரான்றன் கோயில்புக்கு என்றதுபோல முனிவர் நாடோறும் ஏத்திய நோக்கம் வாசனாமலம் தாக்காதவாறும் எனவும் கொள்க.*

*சிவன்சேவடிகள் எங்குமாய் நிற்பன; அவற்றைச் சூழ்ந்து கிடக்கும் கழல் எங்கும் நிறைந்த பரநாத ஒலியினையுடையது ஆதலின்*

'நிறை கழல்' என்றார். திருவடிக்கண் நிறைந்து, நோக்குவார் கண்ணிறைந்து விளங்கும் கழல் எனலுமாம்.

மாமுனிவர் ஏத்தும்கழலோன் என்றறிவித்து, கொன்றைத் தாது பாடிப் பூவல்லி கொய்வோம் என்றது முனிவர்போலத் தாமும் மாயையின் வெற்றியை நீக்கி ஞானவெற்றி நாடுதலால் பதிகக் கருத்துத் தோன்றுதல் காண்க.

*குறிப்பு :-* ஆர - முழுமையும். புனை - அழகு செய்யும். அருமறைகள் அருளினமையால், மறைவிதிப்படி வானவரும் முனிவரும் வழிபடுவாராயினர் என்ற கருத்துத் தொனித்தல் காண்க.

**288.** படமாக என்னுள்ளே தன்னிணைப்போ தவையளித்திங்
கிடமாகக் கொண்டிருந் தேகம்பம் மேயபிரான்
தடமார் மதில்தில்லை அம்பலமே தானிடமா
நடமாடு மாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 14

***உரை :-*** எனது உள்ளச் சுவரின் கண்ணே (எழுதிய) சித்திரம் போல நிலை பெறும்படி, தனது இரண்டு திருவடி மலர்களைத் தந்தருளி, அகத்தே (எனது உடலையே) இடமாக ஏற்றுக் கொண்டு, (புறத்தே) திருவேகம்பத்திலும் வீற்றிருந்த பெருமான், நீர்நிலைகள் சூழ்ந்த திருமதில்களையுடைய தில்லைக் கோயிலே திருநடனஞ் செய்தற்குரிய சிறந்த இடமாகக் கொண்டு கூத்தியற்றும் வகையைப் பாடி நாம் கொடிப்பூக் கொய்வோமாக. போது எண்ணாது இணைப்போது என்றது பூவிரட்டை போல பிரியாத் தன்மையைக் காட்டி நின்றது.

*குறிப்பு :-* படம் - சித்திரம், அவை - அடிகளைக் குறித்தன. இங்கு, என்பது உடலையாவது உள்ளத்தையாவது குறிக்கலாம். தடம்-குளம், நீர்நிலை; 'நடமாடு' என்பதை 'இடமா' என்பதனோடும் 'ஆ' என்பதனோடும் கூட்டுக. தான் - சிறப்புணர்த்தும். மனமாகிற படத்தில் திருவடியைச் சித்திரம் போல எழுதி என்பார்; இணைப்போது படமாக அளித்து என்றார்.

**289.** அங்கி அருக்கன் இராவணன் அந்தகன் கூற்றன்
செங்கண் அரி அயன் இந்திரனுஞ் சந்திரனும்
பங்கமில் தக்கனும் எச்சனுந்தம் பரிசழியப்
பொங்கியசீர் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 15

***உரை :-*** *நெருப்புக் கடவுள், சூரியன், இராவணன், அந்தகாசுரன், யமன், சிவந்த கண்ணையுடைய திருமால், பிரமன், இந்திரன், சந்திரன் (வேள்விக்குமுன்) குறைவில்லாத தக்கன், அவன் யாகத்தின் அதிதேவதையாகிய எச்சன் என்னுமிவர்களுடைய மதிப்புக் கெடும்படியாக, விரைவில் உண்டான சினங்கொண்டியற்றிய இறைவன் புகழ்ச் செயல்களைப் பாடி நாம் கொடிப்பூக் கொய்வோமாக.*

***குறிப்பு :-*** *தக்கன் யாகத்தில், அக்கினியின் நாவையுங் கையையும் வீரபத்திரர் கொய்தனர். அரியை மார்பிலே புடைத்தார். அயனைச் சிரசிற் குட்டினார். இந்திரனை வெட்டினார். சந்திரனைப் பாதத்தினாற் றேய்த்தார். தக்கனும் எச்சனும் கொலையுண்டனர். யமனை மார்க்கண்டர்க்காக இறைவன் உதைத்தார். இராவணன் கயிலையை எடுக்க முயன்ற காலை அவனை விரலால் அழுத்தி நெரித்தனர். அந்தகாசுரன், திருமால் பிரமன் முதலியோரை வருத்திப் பெண் வேடங்கொள்ளச் செய்தமையால், வைரவர் சூலத்தாற் றண்டனை யடைந்தான். தக்கன் வேள்வியியற்றுமுன், உமையம்மையை மகளாகப் பெற்றுச் சீரொடு திகழ்ந்தமையால், 'பங்கம் இல்' என்றார். பங்கம்இல்- வெட்கம் இன்றி என்றும் பொருள் கொள்ளலாம். பரிசு அழிதலாவது, உறுப்புக்கள் அழிந்தும் மாற்றுத் தலை பெற்று உயிரழிந்தும் உதையுண்டும் தன்மை கெடுதல்.*

**290.** **திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு**
**மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்**
**தண்டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட**
**புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ.** **16**

***உரை :-*** *வலிய போரியற்றவல்ல காளையை (ஊர்தியாக) உடையவன். சிவலோகத்தாராகிய (அடியார்களைக் காக்கும்) பாசத்தைப் பொருது களையவல்ல சிங்கமானவன். மண்ணுலகிலே, அவன் மதுரைப்பதியிலே, (வையைக்கு மண்சுமப்பதற்குப் பிட்டு வாணிச்சியிடம் பெற்ற கூலியாகிய) பிட்டினை உண்டருளி, பாண்டிய மன்னன் தன்னைப் பிரம்பினால் அடித்து வேலை கொண்டமையாற் புண்பட்ட விதத்தைப் பாடி நாம் கொடிப்பூக் கொய்வோமாக. இத்திருப்பாடல் பெருந்தகையாளன் எளிமையால் அடியார்களை ஆட்கொண்ட பெருமையை உணர்த்துகின்றது.*

***குறிப்பு :-*** *'போரேறே நின்பொன்னகர்வாய்' என்று மேலே வருதல் காண்க. தண்டு - தடி, பிரம்பு. பாடல் படல் என்பதன் விரிவு. புண்பாடல் - புண்பட்ட தன்மை.*

291. முன்னாய மாலயனும் வானவருந் தானவரும்
பொன்னார் திருவடி தாமறியார் போற்றுவதே
என்னாகம் உள்புகுந் தாண்டுகொண்டான் இலங்கணியாம்
பன்னாகம் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 17

***உரை :-*** *பொன்னொளி பொருந்திய இறைவனது திருப்பாதங்களை, (தேவர்க்குள்) முன்னிற்பாராகிய திருமாலும், பிரமனும், தேவர்களும், அசுரர்களும் தாமாக அறியமாட்டார்கள். அத்திருவடிகளை நாம் எளிதாக தெரிந்து வணங்குதல்கூடுமோ? எனக்குப் பக்குவம் வருமுன்னே, எனதுடலிற் புகுந்து என்னை ஆட்கொண்டருளியவனுடைய விளங்கும் நகையாகிய பல பாம்புகளின் சீரினைப் பாடி நாம் கொடிப்பூக் கொய்வோமாக.*

*போற்றுதல் என்பது, பொருளின் பொதுவியல்பு சிறப்பியல்புகளை ஓரளவேனும் உணர்ந்தவர்கள் செய்யவேண்டிய வேலை. இறைவனது பொன்னை ஒத்த திருவடிகளை இவர்கள் ஒரு சிறிதும் அறியாதவர்கள். அங்ஙனமிருந்தும் போற்றமுடியுமோ என்பார் எதிர்மறை ஏகாரம் புணர்த்துப் "போற்றுவதே" என்றார்.*

*ஆகம் - மனம். என்னுடைய மனத்தில் காமம் முதலான பாம்புகள் புகுவதற்கு முன்பு புகுந்து ஆண்டுகொண்டவன் என்பார். 'என் ஆகம் உள்புகுந்து ஆண்டுகொண்டான்' என்றார்.*

*இலங்கு அணியாம் பல்நாகம் எனச் சொற்பிரித்து விளங்குகின்ற ஆபரணங்களாகிய பல நாகங்கள் எனப் பொருள் கொள்க.*

*தலைவன் தயவை நாடுவார் அவன் வீட்டில் காவலர்களையும் வீட்டையும் மாட்டையும் புகழ்வதுபோல, இறைவனது அணியாகிய நாகத்தையும் பாடி அருளை வேண்டுகின்றாள்.*

*நாகத்தைப் பாடுவதன் நோக்கம், மூர்க்கப்பாம்பே வலி ஒடுங்கி அவன் மேனிக்கு அழகாய் அமைந்துள்ளன ஆதலால் 'மாயையே! உன்னுடைய வெற்றி என்னிடம் சாயாது; விலகு' என்பதைக் குறிப்பித்தலின் இப்பாடல் மாயாவிசய நீக்கமாதல் காண்க.*

*குறிப்பு :- 'பொன்னார்' பொன்போல மாற்றமில்லாத என்றும் பொருளுரைப்பர். போற்றுவதே என்பதில் ஏகாரம் வினா. ஆகம் என்பதை அரமென்பதன் விரிவாகக் கொண்டு உள்ளமென்று பொருளுரைத்தலுமுண்டு. பாம்பு - குண்டலி சக்தியைக் குறிப்பதால் இறைவனது வியத்தகு செயல்களுக்கவை அறிகுறியாம்.*

292. சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே
ஆராத ஆசையதாய் அடியேன் அகமகிழத்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடஞ்செய்
பேரானந் தம்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 18

***உரை :-*** *தேவர்கள் நிறைந்த தெருக்களையுடைய திருப்பெருந் துறைப் பெருமான், தனது சிறப்புமிக்க திருப்பாதங்களிலணிந்த வலிய சிலம்புகள் கலீரென ஒலிக்கும் சிலம்போசையைக் கேட்டே, நிரம்பாத பேரார்வமுடையேனாய் அடியேன் மனமகிழும்படியாக திருக் கூத்தியற்றுவதாலுளதாம் பேரின்பத்தைப் பாடி நாம் பூக்கொய் வோமாக. அடியேற்குச் சிலம்பொலி கேட்க பெரு விருப்பம். அதனைத் திருவுளம் கொண்ட இறைவன் என் மனம் மகிழத் திருநடனம் செய்து சிலம்பொலியைக் கேட்பித்தான். அதனால் யாரும் கண்டறியாத பேரானந்தம் பிறந்தது.*

***குறிப்பு :-*** *பகைவர் மனதில் அச்சம் விளைக்குஞ் சிலம்பு என்பார் 'திண்சிலம்பு' என்றார். ஆர்வம் மேலும்மேலும் எப்போதும் விளையு மென்பார். 'ஆராத' என்றார். ஆனந்தக் கூத்தாதலிற் 'பேரானந்த' மென்றார்.*

293. அத்தி யுரித்தது போர்த்தருளும் பெருந்துறையான்
பித்த வடிவுகொண் டிவ்வுலகிற் பிள்ளையுமாம்
முத்தி முழுமுதல்உத் தரகோச மங்கைவள்ளல்
புத்தி புகுந்தவா பூவல்லி கொய்யாமோ. 19

***உரை :-*** *(கயாசுரனாகிய) யானையுருவினனைக் கொன்று உரித்த தோலினைக் கொண்டு தனது திருமேனியை மூடியருளுந் திருப் பெருந்துறை நாதன் அன்பர்பாற் பித்தன் போன்ற திருவுருக் கொண்டு அல்லது இன்னதென்றறிய முடியாத வஞ்சக வுருவங் கொண்டு அடியார்க்கு மகவாகவும் உருக்கொள்ளுவன். வீட்டிற்குத் தானே முழுமுதன்மையுடைய தலைவனாகிய திருவுத்தரகோசமங்கையில் வீற்றிருக்கும் அருட்கொடையாளன் என்று அறிவின் கட்பதிந்த விதத்தைப்பாடி நாம் கொடிப்பூக் கொய்வோமாக.*

***குறிப்பு :-*** *கயாசுரன் கதை முன்னே கூறப்பட்டது, விருத்த குமாரபாலரான படலத்தில், இறைவன் குழந்தையானமை காண்க. 'பாரிரும் பாலகனாகிய பரிசும்' என்றனர் கீர்த்தித் திரு அகவலுள். புத்தி - அறிவு, புத்தி யென்பதற்கு உள்ளம் என்பாருமுளர். 'முத்தி*

*முழுமுதல்' என்றமையால், இறைவன் ஒருவனே வீடளிக்கவல்லான் என்பது முடிந்தது. 'பித்தன்' என்பதற்குக் கள்வன் என்று பொருளு ரைத்தலுமுண்டு.*

294. மாவார வேறி மதுரைநகர் புகுந்தருளித்
தேவார்ந்த கோலந் திகழப் பெருந்துறையான்
கோவாகி வந்தெம்மைக் குற்றேவல் கொண்டருளும்
பூவார் கழல்பரவிப் பூவல்லி கொய்யாமோ. 20

***உரை :-*** *குதிரை மீதேறி யமர்ந்து, மதுரையூரிற் புகுந்தருளி ஒளி பொருந்திய திருவடிவம் விளங்கத் தோன்றிய அப்பெருந்துறைப் பெருமான் தலைவனாக வந்து அடியேங்களாகிய எம்மைப் பணி கொண்டருளுதற்கேதுவாய மலர்போன்ற அவனது திருவடிகளைத் துதித்து நாம் கொடிப்பூக் கொய்வோமாக.*

***குறிப்பு :-*** *ஏறியார, என மாற்றுக, ஆர - ஆர்ந்து, அமர்ந்து. திகழ - திகழ் + அ ...... வினைத்தொகை. தேவு - தெய்வத்தன்மை; ஒளி. இப்பாடல் சில பிரதிகளில் இடம்பெறவில்லை.*

***திருச்சிற்றம்பலம்***

*தில்லையில் அருளிய*

## 14. திருவுந்தியார்

*திருவாதவூரடிகள் தில்லைப்பதியில் எழுந்தருளியிருந்த காலத்து மகளிர் உந்தி பறந்து விளையாடுதலைக் கண்ட போது அவர்கள் கூற்றாகக் கூறியது.*

*இப்பகுதி இருபது பாடல்களும் உந்தீபற என முடிவதால் திருவுந்தியார் எனப் பெயர் பெற்றது. உந்திபறத்தல் மகளிர் விளையாட்டினுள் ஒன்று. கைகளிரண்டனையும் மேலே தூக்கி இருமருங்கும் நீட்டி வானிற்பறப்பதுபோல இருகால்களைச் சேர்த்துப் பெருவிரல் நுனியில் நின்றுகொண்டு பாடி ஆடும் ஓர் ஆட்டவகை.*

*பெரியாழ்வார் திருமொழியில் (3-9) உந்திபறத்தலாவது தனது தலைவன் வெற்றியை வாயாற் புகழ்ந்துகொண்டு உயர எழுந்து குதித்தல் என்ற குறிப்புக் காணப்படுகிறது. இது இரு மாதர்கள் விளையாடும்போது ஒருத்தி இறைவன் புகழைப் பாட, மற்றொருத்தி அப்புகழான் விளைந்த பயனைக் கூறுவதாகச் சொல்லுகின்றது.*

*உந்தியென்பது பல்வரிக்கூத்துக்களுள் ஒன்று. அரங்கேற்று காதையுரையுள் அடியார்க்கு நல்லார் காட்டிய "சிந்துப்பிழுக்கை" என்னும் மேற்கோட்சூத்திரத்தானும், மகளிராடுங்கூத்து என்பது பிங்கலந்தை யானும், "நந்தன் மதலையைக் காகுத்தனை நவின்று உந்தி பறந்த ஒள்ளிழையார் சொல்" என்னும் திருப்பாசுரத்தானும் மகளிர் ஆடும் கூத்துவகையுள் ஒன்றாகவும், அக்கூத்தும் விளையாட்டாக மேற்கொள்ளப் படுவதொன்று என்றும் உணரலாம்.*

*உந்துதல் - தள்ளுதல். இருகால்களையும் பூமியில் உதைத்துக் கொண்டு உந்தியெழுந்து ஆடும் கூத்து என்பர் சிலர்.*

*இதன்கருத்து ஞானவெற்றி; என்பது அருட்சத்தியின் சாமார்த்தியம் என்பது பழைய குறிப்பு. மும்மலகாரியமாகிய முப்புரங்களும் இறைவனது அருட்சத்தியினால் அழிந்தமையும், தக்கன் யாகம் கெட்டமையும், அதனோடு தொடர்புடைய சூரியன் இந்திரன் முதலான தேவர்களின் அகங்காரம் ஒடுங்கியமையும் அறிவிக்கப் பெறுதலின் ஞானவெற்றியாயிற்று என்னலாம்.*

*"அரன்சீர், பாவமுறு தீமையறப் பாடல் திருவுந்தியதே" என்பது*

பழைய புராணத்திலுள்ள திருவாசகச் சிறப்பு.

"ஊனம் ஒழிக்கும் உயர்திரு வுந்தியார்
ஞான வெற்றி யெனநவின் றனரே"

என்பது பழைய உரையிற் காணப்பெறும் அகத்தியச் சூத்திரம். இதுவும் முற்கருத்தையே விளக்குதல் காண்க.

பரமசிவன் சுத்த பஞ்ச கிருத்தியப்பெருக்கால் வெற்றிபெற்ற சிவானந்த யோக விளைவைத் திருவருள் மொழியாகத் திரும்பத் திரும்பச் சொல்லிப் பெருங்கருணையை இன்பாதீதமாகக் கொண்டு விளையாடிய விளையாட்டு என்று பழைய உரை கூறுவதும் விளையாட்டு என்பதை வலியுறுத்தல் காண்க.

இதில் முதல் நான்கு பாடல்களால் திரிபுரமெரித்த வரலாறும், ஐந்து முதல் பன்னிரண்டு பாடல்களால் தக்கன் வேள்வி தகர்த்த செய்தியும், பதினெட்டாவது திருப்பாட்டால் பிரமன் சிரம் கொய்ததும், அடுத்த திருப்பாட்டால் இராவணனை அடக்கியாண்டதும், இருபதாவது திருப்பாட்டால் வாலகில்லியர் முதலிய முனிவர்களை இறைவன் பாதுகாத்து வருவதுமாகிய செயல்கள் தெரிவிக்கப்பெறுகின்றன.

--------

ஞானவெற்றி

கலித்தாழிசை

திருச்சிற்றம்பலம்

295. வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற
ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற. 1

உரை :- மேருவாகிய வில்லானது வளைந்ததும், சண்டை ஏற்பட்டதும், மூன்று நகர்களும் நொந்தன. திடீரென, அவை முழுவதும் வெந்தன. அவ்வழிதானென்னே யென்று உந்தி பறத்தலைச் செய்க.

வில்லு என்பதில் உகரம் சாரியை. வளைந்தது வில்லு; ஆனாலும் அம்பெய்து தொழிற்பட்டிலது; அதற்கு முன்பே வெற்றி விளைந்தது என்றவாறாம்.

*இறைவன் போருக்கென்று புறப்பட்ட இடங்களில் எல்லாவற்றிலுமே சடமாகிய படைகளும், உணர்த்த உணரும் சித்தாகிய பூதங்களும் பயன்படுத்தப்படுமுன்னே, இறைவன் சிரிப்பு விழிப்பாக வெளிப்பட்டு வெற்றியைத் தேடித்தந்தமை காண்க.*

*இது, முப்புரம் என்பது மும்மலகாரியமாதலின் அதனைப் புறத்தேயுள்ள வில் முதலிய படைகளைக்கொண்டு அழிக்க முடியாமையும், ஞானம் ஒன்றே அழிக்கும் ஆற்றலுடையதென்பதும், அதுவே அழித்தமையும் உணர்த்தப்பெறுதலின் இச்செய்யுள் ஞான வெற்றியாயினமை காண்க.*

***குறிப்பு :-*** *'வில்லு' என்பதில், உகரம், சாரியை. பூசல் - போர், சண்டை.*

**296.** **ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்**
**ஓரம்பே முப்புரம் உந்தீபெற**
**ஒன்றும் பெருமிகை உந்தீபற.** **2**

***உரை :-*** *ஏகம்பநாதராகிய இறைவனது திருக்கரத்தில், இரண்டு அம்புகளை நாம் பார்க்கவில்லை. ஓர் அம்புதானே திரிபுர மெரித்தலுக்காக வழங்கியது. (புன் சிரிப்பால் இறைவன் திரிபுரம் எரித்தமையால்) அந்த ஓர் அம்புதானும் மிகவும் அநாவசியதென்ப தாயிற்று. உந்தீபற. இத்திருப்பாடல் இறைவனுக்குப் படைக்கலம் வேண்டுவதில்லை என்பதை உணர்த்திற்று. திருமால் அம்பாக விளங்கினார்.*

***குறிப்பு :-*** *'முப்புரம்' என்பதன்பின் 'அழிக்க' என்பது தொக்கது. மிகை - மிகுதி. வேண்டியதற் கதிகம்; சிறப்பினை நோக்க, அம்பு, பெரியதோர் கருவியாய் மால், எரி, வாயு முதலிய தேவர் ஆற்றல் கொண்டதாயிருந்தமையின் 'பெருமிகை' என்றார். பெருமிகை - மிக அதிகம்.*

**297.** **தச்சு விடுத்தலுந் தாமடி யிட்டலும்**
**அச்சு முறிந்ததென் றுந்தீபற**
**அழிந்தன முப்புரம் உந்தீபற** **3**

***உரை :-*** *(தேவர்கள் வருந்தித்) தேரினைத் தயாரித்து விட்டதும், அத்தேரிலே இறைவன் திருவடியை வைத்ததும், தேரின் அச்சு இற்றொடிந்தது. ஆயினும், திரிபுரம் அவன் நகையால் எரியுற்றழிந்தன.*

*குறிப்பு :- பூமியைத் தேர்த்தட்டாகவும், சூரிய சந்திரர்களைத் தேர்ச் சக்கரமாகவும், கலைகளைக் காலாகவும், மேருவை வில்லாகவும், அங்கியை அம்பின் அடியாகவும், சந்திரனை அதனிடையாகவும், திருமாலை அதன் நுனியாகவும், வாயுவை அம்பின் சிரசாகவும் அமைத்தனர். இறைவன் தேரின்மீது அடிவைத்ததும் அதன் அச்சு முறிந்தது. ஆனாலும், இறைவன் தமது ஆற்றலால் முப்புரங்களை அழித்தார் என்ற வரலாறு இதனுள் உணர்த்தப்படுகின்றது.*

***தச்சு :*** *தைத்து என்பதன் போலி. விடுத்தலும் இட்டலும் என்ற உம்மைகள் இழிவு சிறப்பும்மை. தேருக்கு இறைவனைத் தாங்குதற்குரிய ஆற்றலின்மையை உணர்த்தியது.*

*தச்சிருந்த கட்டுக்கள் நீங்குதலும் அதாவது மலம் பரிபாக முறுதலும், தாம் அடியிட்டலும் - திருவடிப்பதிவு உண்டாதலும், அச்சு முறிந்தது - ஆன்மா தற்போதம் கெட்டது. ஆனாலும் மும்மலகாரியமாகிய உடல் தம் வலி தொலைந்தன எனற தத்துவப் பொருள் அமைந்திருத்தல் காண்க. நமது பரமசிவன் எழுந்தருள எல்லாத் தத்துவ அதிபதிகளும் விதிப்படி பணிமுற்றி நிற்ப, அவ்வோய்விலே நாதன் திருவடி சூட்ட ஆணவமாகிய அச்சு முறிந்ததைக் கண்டு உந்தீபற என்றதாகப் பழைய உரை தத்துவக் கருத்தையே சிறப்பாக எடுத்துக் கூறல் தெளிக. ஆக, இதில் திரிபுரம் எரித்த வரலாறு வெளிப்படையாகவும், மும்மலகாரியத்தை வென்ற வரலாறு அதன் உட்கிடையாகவும் யாம் உணர்ந்துய்ய இருபொருளுணர்த்திய உண்மை ஞானியாகிய வாதவூரடிகள் வாக்கு இருமைக்கும் இன்பம் பயப்பதை எண்ணி இன்புறுக.*

*<u>சாதனங்கள் பயனற்றுப் போகவும் ஞானங்களே வெற்றி அளித்தலின் இது ஞானவெற்றியாயிற்று.</u>*

*இதற்கு ஞானப்பொருள் :- இருவினை யொப்பு, மலபரிபாகம் முதலியன பொருத்திவிட்டதும், இறைவன் ஆசானாக வந்து திருவடி தீக்கை செய்யவும், பிறவி யொழிந்தது. மும்மலங்களும் தொலைந்தன என்பதாம்.*

**298.** **உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்**
**டெய்யவல் லானுக்கே உந்தீபற**

இளமுலை பங்கனென் றுந்தீபற. 4

***உரை :-*** *திரிபுரம் எரித்த காலத்தில் அதில் பிழைக்கத்தக்கவர் களாகிய மூவரையும் தமக்குக் காவலாகக்கொண்டு முப்புரம் அழியும் வண்ணம் அம்பு எய்யவல்ல பெருமானுக்கே உந்தீபற; அவன் இளமை பொருந்திய முலையினையுடைய உமாதேவியை ஒருபாகத்தே உடையவன் என்று உந்தீபற என்றவாறு.*

*அழிக்க வேண்டியவற்றை அழித்துக் காப்பவர்களைக் காத்த இறைவனது ஆற்றல் இதில் எடுத்துரைக்கப்படுகின்றது.*

*உய்ய வல்லார் - அழிவிலிருந்து உய்ய வல்லவராகிய தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்துன்மாலி என்ற மூவரும், இவர்கள் மூவரும் சிவபத்தியும் இடையறாது சிவபூசை செய்யும் சிந்தையும் உடையவர்கள். சிவபெருமானிடமே அழியா வரத்தையும் பறக்கும் கோட்டையையும் பெற்றவர்கள். பெறலரும் திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாதல் உயிர்கட்கு இயற்கையாதலின், வரம் பெற்றதும் நகரங்கள் பலவற்றை அழித்து வந்தனர். தேவர்களும் முனிவர்களும் இறைவனிடம் முறையிட்டும் அவர்கள் சிவனடியார்களாக விளங்குதலின் எவராலும் அவர்களை அழிக்க முடியவில்லை. அந்நிலையில் திருமால் புத்தாவதாரம் எடுத்து அவர்கள்பால் சென்று அரனடிக்கு அன்பு செய்யும் செயலை மாற்றினர். பின்னர், சிவபெருமான் அவர்களைமட்டும் உய்யக்கொண்டு முப்புரங்களை எரித்தனர். முப்புரத்தைச் சிரித்துக்கொண்டே அம்பெய்து அழித்த தாகத் திருமுறைகளில் பல இடங்களில் காணப்படுகின்றன. ''முளைத்தானை எல்லார்க்கும் முன்னேதோன்றி'' என்னும் திருத்தாண்டகத்து "வரைசிலையா வாசுகிமா நாணாக் கோத்து" என வருதல் காண்க. "உய்யக் கொண்ட மூவரை நின்கோவில் காவல் கொண்டாய்" எனவும் கூறப்பெறுதல் காண்க. இவற்றால் இறைவன் திருவுள்ளக் கிடக்கை அவர்களைக் காத்தலேயாதலின், காத்தபின் காத்தாரா? எரித்தபின் காத்தாரா? என்ற ஐயத்திற்கே இடம் இன்று.*

***குறிப்பு :-*** *முப்புரம் என்பது மும்மல காரியமாதலின் மல காரியமாய்ச் சடமாயுள்ள உடம்பு அழியுமேயன்றி, உயிர் அநாதி நித்தியமாதலின் அழியாதென்பது அறிவுநூல் முடிபு. அதனைத் தெரிவிக்கவே 'முப்புரங்களிலும் மூவர் உய்ந்தனர்; முப்புரங்கள் அழிந்தன' என்று அருளியது. சிவபூசையாகிய கிரியை நெறியில் நின்று*

*பரிபாகமுற்ற ஆன்மாவைச் சாமீபமுத்தியில் இருத்துதல் மரபாதலின் தமக்கு அணுக்கத் தொண்டராக அமைத்துக் கொண்டார் என்ற சைவாகமத் துணிவு விளக்கப் பெறுகின்றது.*

*இது மும்மலமாகிய கோட்டையை அழித்து, உணர்த்த உணரும் ஆன்மாவை உய்யக்கொண்டதை அறிவித்தலின் ஞானவெற்றியாயிற்று.*

**299.** சாடிய வேள்வி சரிந்திடத் தேவர்கள்
ஓடிய வாபாடி உந்தீபற
உருத்திர நாதனுக் குந்தீபற. **5**

***உரை :-*** *(வீரபத்திரர் பூதப்படையுடன்) தாக்கிய யாகமானது நிலைகுலையவே, ஆண்டிருந்த தேவர்கள் தப்பிப் பிழைக்க, ஓடிய விதத்தைப் பாடி விளையாடுக. உருத்திரர்கள் தலைவனாகிய சிவபிரான் பொருட்டு விளையாடுக.*

***குறிப்பு :-*** *காயத்திரி, சரசுவதி, சந்திரன், பகன் முதலிய தேவர்கள் ஓடினமை, தக்கயாக வரலாற்றிற் காண்க. கந்தபுராணம் பார்க்க. தேவர்கட்கு மேலாய் ஞானம்பெற்ற இனத்தினர், உருத்திரர், ஒவ்வொரு அண்டத்திலும், நூற்றெட்டு உருத்திரர் உளர். பிரகிருதி புவனங்க ளனைத்துக்கு மேலாக ஸ்ரீகண்ட ருத்திரர் உளர். யாவர்க்குந் தலைவர் சிவபெருமான் இவற்றின் விரிவை, சித்தாந்தப் பிரகாசிகை, சிவஞான பாடியம் முதலிய வற்றிற் காண்க. சாடிய - தகர்த்த. சரிந்திட - சிறிது சிறிதாக அழிய.*

**300. ஆவா திருமால் அவிப்பாகங் கொண்டன்று**
**சாவா திருந்தான்என் றுந்தீபற**
**சதுர்முகன் தாதையென் றுந்தீபற. 6**

***உரை :-*** *ஐயா, தக்கன் வேள்வியில், அரி, வேள்வியுணவில் தனக்குரிய பாகத்தைக் கொண்டகாலை, (வீரபத்திரரால் நெஞ்சில் அடியுண்டு மூர்ச்சித்து) உயிர்மாத்திரம் போகாதிருக்கப் பெற்றான். அவன் நான்முகனுக்கு அப்பன் என்று பாடி விளையாடுக. தக்கன் வேள்வியில் தேவர்கள் தண்டிக்கப்பட்டார்களேயன்றி ஒருவரும் இறந்திலர். அது தேவர்களைத் திருத்த இறைவன் காட்டிய கருணைச் செயலாகும்.*

***குறிப்பு :-*** *ஆவா, இரக்கக் குறிப்பு.*

**301. வெய்யவன் அங்கி விழுங்கத் திரட்டிய**
**கையைத் தறித்தானென் றுந்தீபற**

கலங்கிற்று வேள்வியென் றுந்தீபற. 7

*உரை :- (அவியில்) விருப்பமுடையவனாய், அக்கினி தேவன் (அவியை) உட்கொள்ள ஒன்றுசேர்த்த கையை வீரபத்திரர் தடிந்தார். யாகமே நடவாமல் நிலைபிறழ்ந்தது.*

302. பார்ப்பதி யைப்பகை சாற்றிய தக்கனைப்
பார்ப்பதென் னேயேடி யுந்தீபற
பணைமுலை பாகனுக் குந்தீபற. 8

*உரை :- உமையம்மையைத் தனது மகள் தானேயெனவும், அரன் தேவியெனவும் இகழ்ந்த மாறுபாட்டுச் சொற்களை உரைத்த தக்கனை நாம் பார்த்தல் கூடாது என்று பாடி விளையாடுக. பருத்த நகிலுடைய அம்மை கூறன்பொருட்டுப் பாடி விளையாடுக.*

*இது, பெண்மைக் குலத்தின் தலைவியையே பகைத்த அத் தக்கனைப் பார்ப்பது ஏன் என்கின்றது.*

*தாக்ஷாயணி என்னும் நாமத்தோடு இருந்த உமாதேவி, தக்கன் தன்னையும் தலைவனையும் பகைத்தமையால் அவன்சார்பில் வந்த தேகத்தையே உதறிப் பெயரையும் அழித்துப் பர்வதராசனுக்கு மகளாகி பார்வதியானாள் என்ற செய்தியை உடம்பொடு புணர்த்தலாகப் 'பார்ப்பதியைப் பகை சாற்றிய தக்கன்' என்றார். சிவநிந்தகனைப் பார்ப்பதும் பாவமாதலின் அவனைப் பார்ப்பது என்னே என்றாள். 'உந்தீபற' எனப் பணிப்பாள் ஒரு பெண். தக்கன் பெண்குலத் தலைவியான பராசத்தியையே அவமதித்தவன்; அவனோடு நமக்கென்ன உறவு; அவனைப் பார்ப்பது ஏன்? என்றாள்.*

*குறிப்பு :- 'பார்ப்பதென்னே' என்பதற்கு உயிரோடு வைத்துப் பார்ப்பதாற் பயனென்னே யெனப்பொருள் கொள்வாருமுளர். பணை - பருமை.*

303. புரந்தர னார்ஒரு பூங்குயி லாகி
மரந்தனில் ஏறினார் உந்தீபற
வானவர் கோன்என்றே உந்தீபற. 9

*உரை :- இந்திரன், (தக்கன் வேள்வியில் தப்பியோடுவதற்காக) ஓர் அழகிய குயில்வடிவங்கொண்டு, ஒரு மரத்தினிலேறிப் பதுங்கினான். தேவர்கட் கரசனாகிய அவன் (இவ்வாறு செய்தான்) என்று பாடி உந்தீபற.*

*இந்திரனாகிய தேவர் தலைவனே நம் வேள்விக்கு வந்தான்;*

எமக்கு என்ன குறை என்று நம்பியிருந்த தக்கனை நடுவில் ஏமாற்றினான் என்பதை அவன் குயிலான செய்தி விளக்குகிறது. குயில் பறக்கும் வரையில் வேற்றுக் கூட்டில் வேற்றுப் பறவையின் பாதுகாப்பில் வளர்ந்து, பருவம் வந்ததும் பறந்து போய்விடும். அதுபோல இந்திரனும் அவிதின்னும் வரையில் அவனுடன் உறவாடிக் களித்து, உற்றான்போல் நடித்து, வீரபத்திரர் வந்ததும் வேற்றுருக் கொண்டு ஓடினான் என்ற நயமும் ஓர்க.

இதுவும், ஆவணம் ஞானத்தின்முன் வேற்றுருக்கொண்டு மறைந்து வாய்ப்புக் கிட்டியபொழுது வெளிப்படும் ஆதலால், ஞானம் என்றும் உயிருடன் கூடஇருந்து, ஆணவம் காரியப்படாதவாறு அடக்கியே வைத்திருக்கும் என்பதைக் குறிப்பித்தலின் ஞானவெற்றி யாயிற்று.

**குறிப்பு :-** அவ்வாறு செய்தும் அவன் தப்பாது வெட்டுண்டு வீழ்ந்தானென்று கந்தபுராணங் கூறும்.

**304.** **வெஞ்சின வேள்வி வியாத்திர னார்தலை**
**துஞ்சின வாபாடி உந்தீபற**
**தொடர்ந்த பிறப்பற உந்தீபற.** **10**

**உரை :-** கொடிய கோபத்திற் கேதுவாய தக்கன் வேள்வியின் அதிதேவதையான எச்சன் என்பான் தலைவெட்டுண்டிறந்த விதத்தைப் பாடி உந்தி விளையாடுக. நம்மைப் பற்றி வரும் பிறப்புத் தொலைய (இறைவனைப் பாடி) விளையாடுக.

இது, தக்க யாகத்தில் வியாத்திரன் என்பவன் தலையை அறுத்து, அவனுக்கு மான் தலை தந்த வரலாறு உணர்த்துவது.

தக்கன் சிவபெருமான்மீது சினங்கொண்டு யாகத்தைச் செய்தான் ஆதலின் அவன் தன்மையை அவன் செய்த யாகத்திற்கு ஏற்றி 'வெஞ்சின வேள்வி' என்றார்.

வியாத்திரன் - யாகப்பசுவைக் கொல்வோன். அவன் தலையை அறுத்து, மான்தலையைப் பொருத்தினார் என்று ஒரு வரலாறு சிலர் வாய்க் கேட்கின்றோம். இவ்வியாத்திரனார் பெயரை மட்டும் இந்த வேள்வியோடு தொடர்புபடுத்தி அப்பர் சுவாமிகளும் சொல்லுகிறார்கள் :-

"எச்சனிணத் தலைகொண்டார் பகன்கண் கொண்டார்
இரவிகளி லொருவன்பல் லிறுத்துக் கொண்டார்

*மெச்சன்வியாத் திரன்தலையும் வேறாக் கொண்டார்*
*விறலங்கி கரங்கொண்டார் வேள்வி காத்து*
*உச்சநமன் தாளறுத்தார் சந்திரனை யுதைத்தார்*
*உணர்விலாத் தக்கன்றன் வேள்வி யெல்லாம்*
*அச்சமெழ அழித்துக்கொண் டருளுஞ் செய்தார்*
*அடியேனை யாட்கொண்ட அமலர் தாமே"*

*இத்திருத்தாண்டகத்தில் தக்க யாகத்தில் உறுப்பழிவுற்றுக் குற்றம் நீங்கி உய்யக்கொண்டார் அனைவரையும் குறித்திருத்தல் காண்க. யாரும் வேள்வியில் கொல்லப்படாமையும் அறிக. வருத்தப்பட்டார் களேயன்றிக் கொல்லப்பட்டார் எவரும் இலர். இம்மரபறியாதார் சிலர் சில வானவர்கள் மாண்டனர் என்பர். அது பொருந்தாமை தெளிக.*

*வியாத்திரன் - வேள்வியில் தொழில் புரிவானாகிய 'பிரமா' என்னும் பட்டம்புனைந்த சர்வசாதகன். வேள்வியில் ஹோதா, அத்வர்யு, பிரமா, இருத்விக் முதலாகப் பல பதவிகளுண்மை அறிக. அவருள் சகல காரியங்களையும் கண்காணிப்பவன் பிரமா ஆவான் என்க.*

***குறிப்பு :-*** *வியாத்திரனார் - உறுதியாக உள்ளவர். துஞ்சுதல் - இறத்தல்.*

**305.** **ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக்**
**கூட்டிய வாபாடி உந்தீபற**
**கொங்கை குலுங்கநின் றுந்தீபற. 11**

***உரை :-*** *சிறு விதியாகிய தக்கனுக்கு அவன் இழந்த தலைக்குப் பதிலாக அவன் கழுத்திலே ஆட்டினுடைய தலையைப் பொருத்திய விதத்தைப் பாடி விளையாடுக. நகில்கள் அசைய நகையாடி விளையாடுக.*

***குறிப்பு :-*** *விதி - சிறு விதி என்பதன் முதற் குறை. விதி என்பது அயன் பெயர். அவன் மகனாகிய தச்சனுக்குச் சிறு விதியெனப் பெயர் கூறப்படும்.*

**306.** **உண்ணப் புகுந்த பகன்ஒளித் தோடாமே**
**கண்ணைப் பறித்தவா றுந்தீபற**
**கருக்கெட நாமெலாம் உந்தீபற 12**

***உரை :-*** *(தக்கன் வேள்விச்சாலையில் தனக்குரிய அவிர்ப்*

*பாகத்தை) உட்கொள்ளப் போன பகன் என்பவன் வீரபத்திரரைக் கண்டவுடன் பயந்து ஓடி ஒளியத் தொடங்க அவன் அங்ஙனம் மறைந்து ஓடாத வண்ணம் அவர் அவன் இரு கண்களையும் பிடுங்கிய, விதத்தைப் பாடி விளையாடுக. நமது பிறவி யொழியும் பொருட்டு அங்ஙனம் பாடி விளையாடுக.*

***குறிப்பு :-*** *பகனென்பவன் பன்னிரண்டு சூரியர்களுள் ஒருவன். அவன் கண்ணிழந்தமையை சதபதப் பிரமாணம், கந்தபுராணம் முதலியவற்றிற் கூறப்பட்டது.*

**307.** நாமகள் நாசி சிரம்பிர மன்படச்
சோமன் முகம் நெரித் துந்தீபற
தொல்லை வினைகெட உந்தீபற. **13**

***உரை :-*** *கலைமகள் மூக்கறுபடவும், பிரமன் தலையில் குட்டுப் படவும் நேர்ந்தமையால் சந்திரன் முகத்தை நெரித்ததுவும் பாடி விளையாடுக. நமது பண்டை வினை ஒழியும்படி பாடி விளையாடுக.*

***குறிப்பு :-*** *சோமன் - சந்திரன். பட என்பதை நாசி என்பதுடனும், சிரம் என்பதுடனுஞ் சேர்க்க. வீரபத்திரர் பிரமனைக் குட்டியதாகவும், நாமகளை மூக்கரிந்ததாகவும், சந்திரனைப் பாதங்களால் தேய்த்த தாகவும், கந்தபுராணம் கூறுகின்றது. நெரித்ததும் என்பது 'நெரித்தும்' எனவாயிற்று.*

**308.** நான்மறை யோனும் மகத்திய மான்படப்
போம்வழி தேடுமா றுந்தீபற
புரந்தரன் வேள்வியி லுந்தீபற. **14**

***உரை :-*** *பிரமனும், யாகத்திலே அதிபதியா யிருப்பவனும், தண்டனைப்படவே இந்திரன் தப்பியோடும் வழியைத் தேடிய விதத்தைப் பாடி விளையாடுக.*

***குறிப்பு :-*** *நான்மறையோன் - பிரமன். மகம் - வேள்வி. இயமான் - எஜமான், யாகாதிபதி. இயமான் என்பதற்குப் பின் உம் தொக்கது. புரந்தரன் என்பதைப் போம் வழி என்பதனோடு சேர்க்க.*

**309.** சூரிய னார்தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரித்தவா றுந்தீபற
மயங்கிற்று வேள்வியென் றுந்தீபற. **15**

***உரை*** *:- பகலவனது கொவ்வைக் கனிபோன்ற சிவந்த வாயிலுள்ள பற்களைத் தகர்த்து உதிர்த்த விதத்தைப் பாடி விளையாடுக. யாகமானது கலங்கியதென்று பாடி விளையாடுக.*

*குறிப்பு :- பன்னிரண்டு ஆதித்தர்களுள் பூஷன் என்பவன் பற்களை வீரபத்திரர் தகர்த்தாரென யசுர்வேத தைத்திரிய சங்கிதையிற் கூறப்பட்டது. கந்தபுராணத்திலே சூரியனைக் கபாலத்திலடிக்க அவன் பற்கள் உதிர்ந்தனவென்று சொல்லப்பட்டது. வாரி - வார, தொகுதியாய் உதிர. நெரித்தல் - உடைத்தல். மயங்கிற்று - கலங்கிற்று.*

**310.** **தக்கனா ரன்றே தலையிழந் தார்தக்கன்**
**மக்களைச் சூழநின் றுந்தீபற**
**மடிந்தது வேள்வியென் றுந்தீபற. 16**

***உரை*** *:- தக்கன் வேள்வியியற்றிய அப்பொழுதே தனது தலையிழந்து இறந்தான். அவனைக் காக்கமுடியாத அவனது பிள்ளைகளைச் சூழ்ந்து நின்று (சிவபரத்துவம் ஓதி) உந்தி விளையாடுக. யாகம் அழிந்ததென்று பாடி விளையாடுக.*

*குறிப்பு :- தக்கனார் என்பதில் ஆர் இழிவினைக் குறிக்கும். துணையாவர் என்று கருதிய மக்கள் துணையாகாமையானும் தக்கனைப் போல் மக்களும் சிவப்பெருமை உணராமையானும் 'மக்களைச் சூழநின்'றென்றார்.*

**311.** **பாலக னார்க்கன்று பாற்கடல் ஈந்திட்ட**
**கோலச் சடையற்கே உந்தீபற**
**குமரன் தன் தாதைக்கே உந்தீபற 17**

***உரை*** *:- உபமன்யு முனிவராகிய குழந்தையின் பொருட்டுப் பண்டை நாளில் திருப்பாற் கடலினையே வருவித்துக் கொடுத்த அழகிய சடையையுடைய பெருமானின் பொருட்டே விளையாடுக; முருகப் பெருமானின் தந்தையின் பொருட்டே விளையாடுக.*

*குறிப்பு :- பாலகனார் என்பதில் ஆர் என்பது உயர்வு குறிக்கும். உபமன்யு முனிவர் குழந்தையாயிருந்தபோது தனது மாமனாராகிய வசிஷ்டர் ஆச்சிரமத்தில் காமதேனுவின் பாலையுண்டார். தனது பிதாவாகிய வியாக்கிரபாதர் ஆசிரமத்தில் பால் கிடையாமையால் அழுதபோது அவர் தாயார் நீ சிவபெருமானைப் பூசிக்க வேண்டுமென்று கூற, அவரும் சிவபெருமானைப் பூசித்து வேண்டப்*

*பாற்கடலையே சிவபெருமான் வருவித்தனரென்பது கோயிற் புராணத்தாலறிக.*

312. நல்ல மலரின்மேல் நான்முக னார்தலை
ஒல்லை யரிந்ததென் றுந்தீபற
உகிரால் அரிந்ததென் றுந்தீபற. 18

***உரை :-*** *அழகிய தாமரை மலரின்மேல் வீற்றிருக்கும் அயனுடைய (ஐந்து தலைகளுள்) ஒருதலை விரைவாகக் கிள்ளப்பட்ட தென்று பாடி விளையாடுக. அது சிவபெருமானது நகத்தாற் கிள்ளப்பட்டது என்று பாடுக.*

***குறிப்பு :-*** *சிவபெருமானைப் போல தனக்கும் ஐந்துதலை இருப்பதாகச் செருக்குக் கொண்டு சிவபெருமானை வணங்காது இகழ்ந்ததற்காக பிரமன் நடுத்தலையை வைரவர் நுனிநகத்தாற் கிள்ளினார் என்று புராணங் கூறும். ஒல்லை - விரைவாக. உகிர் - நகம். மலரில் மிக்க அழகுடையது தாமரை மலராதலால் 'நல்ல மலர்' என்றார்.*

313. தேரை நிறுத்தி மலையெடுத் தான்சிரம்
ஈரைந்தும் இற்றவா றுந்தீபற
இருபதும் இற்றதென் றுந்தீபற. 19

***உரை :-*** *(இராவணன் திக்குவிசயத்திற்காகத் தனது தேரைச் செலுத்தியபோது அது கயிலைமலைப் பக்கம் தடுக்கப்பட்டு நின்ற காலை) தேரை நிறுத்திவிட்டு அம்மலையைத் தூக்க முயன்றவனான இராவணனுடைய தலைகள் பத்தும் நெரித்த வகையைப் பாடி விளையாடுக. அவன் தோள்கள் இருபதும் முறிந்து ஒடிந்தன என்று பாடி விளையாடுக.*

***குறிப்பு :-*** *இராவணன் செருக்கினாற் கயிலைமலையை எடுக்க முயன்ற அளவில் இறைவன் பெருவிரலால் அழுத்த, அவன் மலையினுள் அகப்பட்டு நசுக்குண்டு வருந்தினமை திருமுறைகளுள் யாண்டும் ஓதப்படும். இருபது என்பதன்முன் தோள்கள், என்பது தொக்கது.*

கடுகிய தேர்செலாது கயிலாயமீது
 கருதேலுன் வீரமொழிநீ
முடுகுவ தன்றுதன்ம மெனநின்றுபாகன்
 மொழிவானை நன்று முனியா
விடுவிடு வென்றுசென்று விரைவுற்றரக்கன்
 வரையுற் றெடுக்க முடிதோள்
நெடுநெடு விற்றுவீழ விரலுற்றபாத
 நினைவுற்ற தென்றன் மனனே. 19

*என்ற தசபுராணத்தா லறிக.*

314. ஏகாச மிட்ட இருடிகள் போகாமல்
ஆகாசங் காவலென் றுந்தீபற
அதற்கப்பாலுங் காவலென் றுந்தீபற. 20

***உரை :-*** *வானிலே போர்வையிட்டுச் செல்லும் முனிவர்கள் கதிரவன் வெப்பத்தால் ஒழிந்து போகாமல், அவர்களை வானிற் காப்பது முதல்வனென்று கூறி விளையாடுக. வானிற்கப்பாலுள்ள உலகத்தார்க்கும் அவனே காப்பாளனென்றியம்பி விளையாடுக.*

***குறிப்பு :-*** *ஏகாசம் - மேலாடை. 'விண் செலவின் மரபினையர்க் கேந்திய தொருகை' என்ற திருமுருகாற்றுப் படையுங் காண்க. போகாமல் - அழியாமல். ஆகாசம் காவல் - ஆகாசத்திற்கு இறைவனே காவல். இப்பாடல் சில பிரதிகளில் இடம்பெறவில்லை.*

***திருச்சிற்றம்பலம்***

*தில்லையில் அருளிய*

## 15. திருத்தோணோக்கம்

***(மகளிர் கடவுளை வாழ்த்திப் பாடும் கடவுள் வாழ்த்துப் பாடல்கள்)***

*பழைய திருப்பெருந்துறைப் புராணம்,*

*"சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே புண்ணியமாய்*
*அத்தன் செயுங்கருணைக்கு ஆராமை யுண்மிகுந்து*
*பொத்தியகை கொட்டிப் புகழ்தல் தோணோக்கம்"*

*என்கின்றது. இதனால் தலைவனுடைய புகழைப்பாடிக் கைகொட்டி ஆடுதல் தோணோக்கம் எனக் கருதுகிறார் என்பது பெறப்படுதலின் கைவீசி ஆடுதலோ, தொட்டு ஆடுதலோ அன்று என்பது அவர் கருத்து.*

*பழையவுரை 'தோள் கொட்டி ஆடுவோம்' எனக் கூறுவதால் தோளைக்கொட்டி ஆடும் கூத்து என்று எண்ணத் தோன்றுகிறது. முதற்பதிகத்தில் ஞானவெற்றிபெற ஞானியர் இத்தகைய சிவானந்தப் பேற்றிற்கு இத்தேகம் உதவியாயிற்றே என்று தேகத்தை நோக்கிக் கொண்டாடி, பசுகரணங்களைப் பதிகரணமாக்கிச் சிவானந்தமே தானாய் நின்ற முறைமை திருவருளாற் கிடைத்தது என்று அதனைப் பாடுவது என்றும் கூறும்.*

*இப்பதிகம் 'பிரபஞ்சசுத்தி' எனவும், அதன் கருத்து 'ஆன்மாக்களைச் சுத்திகரித்தல்' எனவும் அகத்தியச் சூத்திரமும், பழைய குறிப்பும் தெரிவிக்கின்றன.*

*இது பதினான்கு திருப்பாடல்களை உடையது. முதற்கண் தோணோக்கம் ஆடுவதன் குறிக்கோள் கூறுகிறது. அடுத்துத் திருவடிப் பேற்றிற்கு இன்றியமையாத சிவகுணங்களைத் தோத்தரித்தலைக் கூறுகிறது. இவ்வாறே கண்ணப்ப நாயனாரை எடுத்துக் காட்டி அதுபோலத் தம்மை ஆட்கொண்டமையையும் ஓருருவே பலவுருவாய் நின்று சீவச்செயல்கள் அனைத்தையும் சிவச்செயல்களாக்கிப் பாதகமே புண்ணியமாகச் செய்து ஆனந்தமாக்கிப் பதவியிலிருக்கும் அமரர்கள் யாவரும் அழிந்துபோகத் திருமால் முதலிய தேவர்களுக்குச் சக்கரம் முதலியவற்றை அருளிச் செய்து, தீச்சார்புகளினால் கெட்ட தேவர்கள் முதலானோரை ஆட்கொண்டு, பிரமன் ஆகியோரைச் செருக்கடக்கிப் பிறவியைக் கெடுத்து இந்திரியச் சேட்டை நீங்க ஆட்கொண்டருளிய அருமைப்பாட்டினையும் பாடித் தோணோக்கம் ஆடுவோமென்று*

*ஒருபெண் ஏனைய மகளிரையும் உளப்படுத்தி உரைப்பதாக அமைந்திருக்கிறது.*

*இதில் முதற்கண் இறைவன் இயல்பைக்கூறும் பெண் இறைவனை இடைவிடாது சிந்தித்துத் தெளிந்து சிவஞானம் கைவரப் பெற்ற பக்குவான்மா ஆவள். அந்நிலையில் அடிகளார் இருக்கின்றார். முன்நிற்கும் பெண்கள் அவளைக்காட்டிலும் பக்குவத்தில் குறைந்த நிலையிலுள்ள ஆன்மாக்கள். அவர்களுக்கு இறைவனியல்பையும், அவன் ஆட்கொள்ளும் திறத்தையும், அருள் வழங்கும் எளிமையையும் எடுத்துக் கூறிச் சிவனருளுக்கு வழிப்படுத்துதலின் அனைவரையும் தூய்மையாக்கும் மகா தீட்சையாகிற பிரபஞ்ச சுத்தியாகிறது இப்பகுதி.*

--------

***பிரபஞ்ச சுத்தி***

***நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா***

*திருச்சிற்றம்பலம்*

**315.** **பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே எனக்கருதிப்**
**பேய்த்தேர் முகக்குறும் பேதைகுணம் ஆகாமே**
**தீர்த்தாய் திகழ்தில்லை அம்பலத்தே திருநடஞ்செய்**
**கூத்தா உன்சேவடி கூடும்வண்ணந் தோணோக்கம். 1**

***உரை :-*** *விளங்குகின்ற தில்லைப்பொதுவில் திருநடன மியற்றுங் கூத்தப்பெருமானே, கானலை, மலர்பூத்து நீர் நிறைந்த தடாகத்தின் தண்ணீர் இஃதாமெனத் தவறாக எண்ணி, அதனை மொண்டு கொள்ள விரும்பும் அறியாமை எனது இயற்கைப் பண்பாகாமல், அதனை ஒழித்தாய். உன்னுடைய திருவடியைக் கூடும் வண்ணம் நாங்கள் திருத்தோள் நோக்கம் (விளையாடுவோமாக). பேதை குணம் ஆகாமே தீர்த்தாய் - மலபரிபாகம். சேவடிகூடும் வண்ணம் தோணோக்கம் - சிவஞானப்பேறு.*

***குறிப்பு :-*** *ஆரும் - நிறைந்துள்ள. முகக்க, உறும் என்பன முகக்குறும் எனப் புணர்ந்து நின்றது. பேய்த்தேர் - கானல். பேதை - பேதைமை என்பதன் கடைக்குறை. திருத்தோள் நோக்கம் என்பது ஒருவர் தோளை மற்றொருவர் கடைக்கண்ணாற் பார்க்க முயன்றாடும் ஆட்டம் போன்றதோர் மகளிர் விளையாட்டு என்றும் சொல்லுவர்.*

316. என்றும் பிறந்திறந் தாழாமே ஆண்டுகொண்டான்
கன்றால் விளவெறிந் தான்பிரமன் காண்பரிய
குன்றாத சீர்த்தில்லை அம்பலவன் குணம்பரவித்
துன்றார் குழலினீர் தோணோக்கம் ஆடாமோ. 2

*உரை :- எக்காலத்தும் பிறந்தும் இறந்தும், (துன்பத்தில்) அழுந்தாமல் ஆட்கொண்டருளியவனாய்க் கன்றுக்குட்டியால் விளாங்கனியை எறிந்தவனான திருமாலும் அயனும் அறிதற்கரிய வனாய்க் குறைவற்ற புகழ்படைத்த தில்லைப்பொதுவில் நடமாடு பவனுடைய அருட்பண்பினைப் போற்றி, நெருங்கிய நிரம்பிய கூந்தலையுடைய பெண்களே! நாம் தோள்நோக்கம் ஆடுவோமாக.*

*கன்றால் விள எறிந்தான் திருமால். கண்ணனாகத் தோன்றி ஆயர்பாடியில் பசுக்களை மேய்த்தகாலத்தில் கபித்தாசுரன் என்பவன் கண்ணனைக் கொல்லுவதற்காக வழியில் கனிந்து குலுங்கும் விளாமரமாகத் தோன்றியிருந்தான். இம்மாயத்தை உணர்ந்த மாயவன் தம் ஆனிரையுள் வத்சாசுரன் என்பவன் கன்றாக மறைந்திருப்பதை அறிந்து, அவன் பின்கால் இரண்டையும் பிடித்து விளவின்மேல் வீசினார். கபித்தாசுரனும் வத்சாசுரனும் அசுரவடிவோடு வீழ்ந்திறந்தனர் என்பது வரலாறு.*

*குறிப்பு :- துன்று - நெருங்கு, ஆர் - நிறை. துன்றுகுழல், ஆர் குழல் எனப்பிரிக்க. நெருங்கி நீண்ட கூந்தலென்பது கருத்து.*

**317. பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருள்பெற்று நின்றவா தோணோக்கம் ஆடாமோ. 3**

*உரை :- பூசனைக்குரிய பொருள்களைக் கொண்டு செய்கின்ற வழிபாடுபோலத் தோன்றும்படியாக, செருப்புப் பொருந்திய தமது செவ்விய பாதம், வாயாகிய கலயம், புலாலுணவு என்னுமிவற்றை வேடராகிய கண்ணப்பர் அன்போடு இறைவற்கு நல்லவென்று அறிந்து, (அவற்றை இறைவற்களிப்ப) இறைவன் அவற்றான் திருமேனி குளிர்ந்தவனாக, அவ்விடத்தேயே அவர் திருவருள் பெற்று நின்ற வகையைப் பாடி தோள்நோக்க மாடுவோமாக.*

*பொருள்பற்றிச் செய்கின்ற பூசனை - அர்க்கிய பாத்திரங்களையும், பத்திர புஷ்பங்களையும் தேடி, ஐவகைச் சுத்திகளும்*

*அமைத்துச் செய்யப்படும் ஆகமவிதி வழுவாத பூசை. அன்புநெறிப் பூசையாகிய இதுவும் ஆகமநெறிப் பூசையாகிய சிவகோசரியார் பூசை போன்று இறைவற்கு உவப்பாக என்பதாம். பழைய உரை வேதாகம விதிப்படி மந்திர கிரியா பாவனைகள் வழுவாது செய்யப்படுகின்ற பூசனைபோல் விளங்க என்னும், கண்ணப்பர் பூசைக்கு உகந்த பெருமான் சிறுமியர்களாகிய நாம் ஆடுந்தோணோக்கத்திற்கும் விரும்பித் திருவடியளிப்பான் என்பது குறிப்பித்தாளாம்.*

***குறிப்பு :-*** *கண்ணப்பர் பூசை, ஆகமங்கடந்த அன்பு வழிபாடு, பிறர் பூசை, உரிய பொருள்களைக் கொண்டு ஆகமநெறியிற் செல்லும் பூசை. குற்றங்கருதாத அன்பரடியாதலின், 'சீரடி' யென்றார். சேடு - அழகு, நன்மை.*

**318.** கற்போலும் நெஞ்சங் கசிந்துருகக் கருணையினால்
நிற்பானைப் போலஎன் நெஞ்சினுள்ளே புகுந்தருளி
நற்பாற் படுத்தென்னை நாடறியத் தான்இங்ஙன்
சொற்பால தானவா தோணோக்கம் ஆடாமோ. 4

***உரை :-*** *கல்லைப்போலுங் கடுமையான எனது மனம் நைந்துருகும்படி, இரக்கத்தினாலே என்முன்னே நிற்பவன்போலத் தோன்றி எனது உள்ளத்திலும் புகுந்தருளி, என்னை நன்னெறிப் பகுதியிற் பொருந்திய இம்முறையை நாட்டினர் தெரியும்படியாக (எல்லாரும் பேசும்) பேச்சின் பாலாகிய விதத்தைப்பாடி நாம் தோள் நோக்கமாடுவோமாக.*

***குறிப்பு :-*** *'நிற்பானை' என்பது புறத்தே நிற்பதைக் குறித்தது. இங்ஙன், இங்ஙனம் என்பதன் கடைக்குறை. இங்ஙனம் - இவ்விதம், இம்முறை.*

**319.** நிலம்நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத் தான் ஒருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ. 5

***உரை :-*** *நிலம், நீர், தீ, காற்று, விரிந்தவான், மதி, ஞாயிறு, அறிவுடையனாகிய ஆன்மா என்னும் எட்டினோடும் எட்டுவகையாய்க் கலந்து நின்ற ஒரு கடவுளே, ஏழுலகும் திசைபத்தும் எஞ்சிய பல பொருளுமாகி நின்ற விதத்தைப்பாடி நாம் தோள் நோக்கம் ஆடுவோமாக. இறைவன் ஒருவனே அட்டமூர்த்தியாயும், ஏழுலங்*

*களாயும் பத்துத் திசையாயும் கலந்தும் விரிந்தும் நிற்பதைப் பாடி ஆடுவோம் என்கிறான்.*

***குறிப்பு :-*** *உயிர் - காற்று. புலன் - அறிவு. மைந்தன் - புருடன் - ஆன்மா. ஒரு கடவுளே யாண்டும் வியாபித்து நிற்கும் ஆற்றல் உடைமையின், 'தான் ஒருவனுமே' என்றார். புலனாய மைந்தன் - அறிவு வடிவான சீவன் - யசமானன்.*

**320.** **புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம்**
**தத்தம் மதங்களில் தட்டுளுப்புப் பட்டுநிற்கச்**
**சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்**
**அத்தன் கருணையினால் தோணோக்கம் ஆடாமோ.** **6**

***உரை :-*** *புத்த சமயி முதலிய சிற்றறிவுடைய பல சமயத்தினர், தங்கள் தங்கள் சமயங்களிலே (முடிவு காணாது) தடுமாற்ற மெய்தி நிற்ப, இறைவன் எனக்குத் தோன்றியருளி, எனது உள்ளத்தைச் சிவமயமாக்கி, அதனால் யான் செய்தவைகளே தவச்செயல்களாம் படி பணித்த அப்பன் கருணை காரணமாக நாம் தோள் நோக்க மாடுவோமாக.*

***குறிப்பு :-*** *சமயம் - சமயத்தார். தட்டுளுப்பு - தடுமாற்றம். சித்தம், சிவத்தின் வயமாகவே, நினைந்து செய்யுஞ் செயல்கள், சிவச் செயலாயினமையின், அவை தவச்செயல் எனப்பட்டன.*

**321.** **தீதில்லை மாணி சிவகருமம் சிதைத்தானைச்**
**சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டுஞ்**
**சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர்தொழப்**
**பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்.** **7**

***உரை :-*** *குற்றம் யாதும் நெஞ்சிலில்லாத மாட்சிமையுடைய சண்டேச நாயனார், தானியற்றிய சிவபூசனையை ஊறுபடுத்தியவன், குலத்தால் பார்ப்பனன் என்பதையும், முறையால் தந்தை (என்பதையும் பாராது) அவனது திருவடிகள் இரண்டையும் வெட்டவே, இறைவன் திருவருளினாலே, தேவர்கள் வணங்கும்படியாக (நாயனார் இயற்றிய) பாவச்செயலே வன்மையுற்றுப் புண்ணியமாய்ப் பயனளித்த விதத்தைப் பாடி நாம் தோள் நோக்கம் ஆடுவோமாக.*

***குறிப்பு :-*** *'தீ தில்லை' - தீ தில்லாத தலைவன் (ஆகிய) மாணி- மாண்புடையவன். சோறு - சாரமான திண்பகுதி, வீடு என்று பொருள் கொள்ளுவாருமுளர். மாணி - பிரமசாரி - விசார சர்மர். சோறு -*

*நுகரத்தக்க உணவு - சிவபுண்ணியம். பாதகம் - நுகர்தற்கு ஆகாத நஞ்சு.*

322. மானம் அழிந்தோம் மதிமறந்தோம் மங்கைநல்லீர்
வானம் தொழும் தென்னன் வார்கழலே நினைந்தடியோம்
ஆனந்தக் கூத்தின் அருள்பெறில்நாம் அவ்வணமே
ஆனந்த மாகிநின் றாடாமோ தோணோக்கம். 8

***உரை :-*** *நல்ல மாதர்களே! தற்பெருமை தொலையப்பெற்றோம்; தற்போதங் கழலப் பெற்றோம். இறையடியாராகிய நாம் வானவர்கள் வழிபடுகின்ற அழகனது நீண்ட சிலம்பணிந்த திருவடிகளை உன்னி, ஆனந்த நடனஞ் செய்பவனது பொருளைப் பெறுவோமாயின், அவ்வாறே நாமும் பேரின்பமுற்றுத் தோள் நோக்கம் ஆடுவோமாக.*

*மானம் அழிந்தோம் மதி மறந்தோம் மங்கை நல்லீர். மங்கையர் ஆவார் தலைவனைச் சார்ந்து இன்பந்துய்க்கும் திறமுடையார். அவர்கள் தம் பெண்மையின் சிறப்பையும் தலைவனின் காதன்மையு முணர்ந்து, தலைவனுக்கு யாம் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புல விருந்தாயிருக்கின்றேம்; எம்மை அன்றி அவனது வாழ்வு சிறவாது என்று இருக்கும் மானமும், நுகர்ச்சியை அறிந்து அனுபவிக்கும் மதியும் உடையார். அவருள் 'மங்கை நல்லீர்' என அழைக்கப்படும் இவர்கள் 'யாம் என்றும் தலைவன் உடைமை' எனத் தன் மதிப்பாகிய மானத்தை இழந்தவர்கள். தற்போதம் கழலப் பெற்றவர்கள் என்று அறிவிப்பார் 'மங்கை நல்லீர்! மானம் அழிந்தோம், மதி மறந்தோம்' என்று தம் பரிபாகவிசேடத்தை விண்ணப்பிக்கின்றார். மேலும் தாம் மேற்கொள்ள வேண்டிய கடமையாக இறைவன் திருவடியைத் தியானித்தலும், அதனால் விளையும் திருவருட்பேறும், அதனால் விளையும் ஆனந்த அனுபவமும், அதனால் விளையும் தோணோக்கம் ஆடுதலும் ஆகிய இவற்றை முறையாக உணர்த்துகின்றாள்.*

***வானம் :*** *இடவாகுபெயராகச் சொர்க்கம் முதல் சத்தியலோக மீறான மேல் மூன்று லோகங்களிலுமுள்ள தேவர்களை உணர்த்தி நின்றது.*

*தென்னன் - பாண்டியன். இறைவன் மண்ணுலகமாகிய செந்தமிழ் நாட்டிலிருந்து தேவர்கள் வந்து வணங்கும் பெருஞ்*

*அத்துவிதமாய்க் கலந்த ஒப்பற்றவனாயும், நம்மை யாட்கொண்ட வனாயுமுள்ள மானையிகழ்ந்த மெல்லிய நோக்கமுடைய உமையம்மைக் கணவனை வரும்படி நீ அழைப்பாயாக.*

***குறிப்பு :-*** *'தேன்பழ' மென்பதற்குத் தேனைப் பொழிகின்ற பழமென்பாரு முளர். 'வான்பழித்த' என்றதற்குச் சிதாகாயத்தினின்று இறங்கி என்பது முண்டு. வானைவிட்டு இறங்கினமை அதனைப் பழித்தவன்போ லாகுமென்ப. பிறப்பை ஒழிப்பதால், 'ஊன் பழித்து' என்றார். உயிரறிவு இறையறிவோடு இரண்டறக் கலந்து நின்றே இறைவனை யறிதல் கூடும். அங்ஙனம் கலப்பதே உணர்வதுவாதல். மென்நோக்கிற்கு மான்பார்வை கீழ்ப்பட்டமையால் 'மான்பழித்து' என்றார்.*

**352.** **சுந்தரத் தின்பக் குயிலே சூழ்சுடர் ஞாயிறு போல**
**அந்தரத் தேநின் றிழிந்திங் கடியவ ராசை அறுப்பான்**
**முந்தும் நடுவும் முடிவு மாகிய மூவ ரறியாச்**
**சிந்துரச் சேவடி யானைச் சேவ கனைவரக் கூவாய்.** **5**

***உரை :-*** *(இசையால்) இன்பந் தருகின்ற அழகிய குயிலே, ஒளிர் கதிர்கள் சூழ்ந்த கதிரவன் போன்ற திருவுருவத்தோடு, சிதாகாசத்தி லிருந்து இறங்கி இந்நிலவுலகத்தே தொண்டர்களது பற்றைத் தொலைப்பவனாய், உலகத்திற்கு முதல், இடை, கடை என்ற மூன்றிற்குங் காரணராகிய மும்மூர்த்திகளு மறிய முடியாத சிவந்த திருவடிவுடையானை, நம்மை யாட்கொள்ளும் வீரனை வரும்படி அழைப்பாயாக. முந்து, நடு, முடிவு என்பன படைப்பு, காத்தல், ஒடுக்கம் என முத்தொழிலையும் அதன் கர்த்தாக்களையும் குறித்தன.*

***குறிப்பு :-*** *கடவுள் ஞானசூரியன் என்பார் 'ஞாயிறுபோல' என்றார். சுடர் என்பதை இறைவனோடு வந்த அடியவர்க்கும் ஞாயிற்றினை இறைவனுக்கு மொப்பிடலாம். அந்தரம் - ஆகாயம். எல்லாத் தத்துவங்களையும் கடந்த ஆகாயம் சிதாகாயம், மும்மூர்த்தி களுள் உருத்திரர் ஞானம்பெறினும், அதிகாரமலம் நீங்கப் பெறாமையின் அவரையுமுட்படுத்தி 'மூவரறியா' என்றனர். 'சிந்தூர' மென்பதற்கு வெட்சி என்பாரு முளர். வெட்சி போன்ற சிவந்த அடியென்பது கருத்து. பிறப்பறுப்பதில் இணையற்ற வீரனென்பார் 'சேவகனை' என்றனர். அறுப்பானாகியும், சேவடி யுடையானாகியும், சேவகனாகியு மிருப்பவனை 'வரக்கூவாய்' என்றனர். முந்துநடுவு முடிவுமாகிய என்பதைச் சேவடியானை என்பதோடு முடித்துக் கூறுதலு முண்டு. இழிந்து - தன் நிலையிலிருந்து கருணையே*

*காரணமாக இறங்கி வந்து. சிந்துரம் - சிவந்த சாதிலிங்கப் பொடி.*

**353.** இன்பந் தருவன் குயிலே ஏழுல கும்முழு தாளி
அன்பன் அமுதளித்தூறும் ஆனந்தன் வான்வந்த தேவன்
நன்பொன் மணிச்சுவ டொத்த நற்பரி மேல்வரு வானைக்
கொம்பின் மிழற்றுங் குயிலே கோகழி நாதனைக் கூவாய். **6**

***உரைநடை :-*** *'இன்பந் தருவன்' என்பதை இரண்டாமடியின் ஈற்றில் வைத்துப் பொருள் கொள்ளுக.*

***உரை :-*** *குயிலே, ஏழுலகங்களையும் முழுதும் ஆள்பவனாயும், உயிர்களிடத்து அன்புடையவனாயும், (அன்பர்களுக்கு ஞான) அமுதத்தைக் கொடுத்து, அவர்கள் உள்ளத்தே ஊறுகின்ற ஆனந்த வடிவனாயும், சிதாகாயத்தினின்று எழுந்தருளி வந்த ஒளியுருவனாயுமிருப்பவன் (நிலைத்த) பேரின்பத்தை (நீ கூவினால் உனக்கு)த் தருவன். மரக்கிளையிலிருந்து இசைபயிலுங் குயிலே, தூய பொன்னும் இரத்தினமும் சேர்ந்து அமைத்த கட்டமைந்த உருவம் போன்ற நல்ல குதிரைமே லெழுந்தருளி வருபவனை, திருவாவடு துறை முதல்வனை நீ அழைப்பாயாக.*

***குறிப்பு :-*** *ஏழுலகும் முழுதாளியாய், அன்பனாய், ஆனந்தனாய், தேவனாய் வருவானை, நாதனை, மிழற்றுங் குயிலே கூவாய். குயிலேயின்பந்தருவான், என நான்கடிக்கும் முடிபமைத்துப் பொருள் கூறுதலுமுண்டு. அளித்தூறு, மென்பது 'அளிக்க ஊறு' மெனக் கொள்ளுதலு முண்டு. சுவடு - கட்டு. பொன்னினாலும், மணியினாலும் அமைந்த உருவத்தையே 'கட்டு' என்றார். பொன் - மேனிக்கும், மணி - அங்கங்களுக்கும் உவமையாதல் காண்க. மணி ஒத்த சுவடெனக் கொண்டு மணிபோன்ற தழும்பு அல்லது புள்ளியை யுடைய நற்பரி என்பாரு முளர். ஏழுலகம் என்பது தோன்றிய எல்லா உலகத்தையுங் குறிக்கும்.*

**354. உன்னை உகப்பன் குயிலே உன்துணைத் தோழியும் ஆவன்
பொன்னை அழித்தநன் மேனிப் புகழில் திகழும் அழகன்
மன்னன் பரிமிசை வந்த வள்ளல் பெருந்துறை மேய
தென்னவன் சேரலன் சோழன் சீர்ப்புயங் கன்வரக்கூவாய். 7**

***உரை :-*** *குயிலே, உன்னை விரும்புவேன்; உனக்குத் துணையாய் ஒத்த தோழியுமாவேன்; அழகினாற் பொன்னை வென்ற தூய திருமேனியையுடைய மெய்ப்புகழால் விளங்கும் அழகனாகியும், (நமது)*

*அரசனாகியும், குதிரைமேல் வந்த அருட் கொடையாளனாகியும், திருப்பெருந் துறையில் வீற்றிருந்த பாண்டியன், சேரன், சோழனாகிய, மூவேந்தனாகியும், சிறப்புப் பொருந்திய புயங்கக் கூத்துடையவனாகியு முள்ள பெருமானை நீ அழைப்பாயாக.*

***குறிப்பு :-*** *உகப்பன், ஆவனென்பதை, இறைவனுக்கு ஏற்றிக் கூறுவதிலும், அடிகளுக்கு ஏற்றிக் கூறுவதே பொருத்தம். "சிவன் திரள் தோள்'' கூடுவதாகக் கூறிய அடிகளே தோழியாகவும் பொருத்தமுடையவர். அழித்த - ஒளி மழுங்கச் செய்த மன்ன னென்பதை, 'மேய' என்பதனோடு இணைத்தலு முண்டு. புயங்க மென்பது பாம்பைக் குறித்தலின், பாம்பின் ஆட்டம் போன்றதொரு கூத்தாக அது இருத்தல் கூடும். புயங்க மென்பதற்குப் பாம்பென்றே பொருள் கொண்டு, பாம்பினை அணியாக அணிந்தவன் என்று பொருள் கொள்வோரு முண்டு.*

**355.** **வாஇங்கே நீகுயிற் பிள்ளாய் மாலொடு நான்முகன் தேடி**
**ஓவியவ ருன்னி நிற்ப ஒண்தழல் விண்பிளந் தோங்கி**
**மேவிஅன் றண்டங் கடந்து விரிசுட ராய்நின்ற மெய்யன்**
**தாவிவரும்பரிப் பாகன் தாழ்சடை யோன்வரக் கூவாய். 8**

***உரை :-*** *குயிற் பிள்ளையே! நீ இங்கே வருக. பண்டைக் காலத்துத் திருமாலோடு பிரமனும் (முதலில்) அடிமுடி தேடிப் (பின்) தேடுத லொழிந்து, இது யாதோ என்று வியப்போடு எண்ணி நிற்கும்படியாக ஒளிமிக்க அனற் பிழம்பாக, வானைப் பிளந்து மேற்சென்று அண்டங்களைக் கடந்து எங்கும் விரிகின்ற வொளியாய், பரந்து மேற்பட்டு நின்ற உண்மையனாய்ப் பாய்ந்து வருங் குதிரை மேலேறி வருபவனாய், உள்ள நெடிய சடையுடையானை வரும்படி நீ அழைப்பாயாக.*

***குறிப்பு :-*** *'பிள்ளாய்' என்பது குஞ்சினைக் குறிக்கும். மால் அடியையும், நான்முகன் முடியையுஞ் தேடினமையால் 'ஓடு' என்ற உருபு கொடுத்துப் பிரித்தார். மூன்றாம் அடியில் 'அன்று' என்பது பண்டைக் காலத்தைக் குறிக்கும். அதை 'மாலொடு' என்பதற்கு முன் அமைக்க. ஓவி - ஒழிந்து, நீங்கி. 'மேவி' யென்பதைச் சுடராய் என்பதற்குப் பின் அமைக்க. மேவி - மேற்பட்டுப் பறந்து.*

**356.** **காருடைப் பொன்திகழ் மேனிக் கடிபொழில் வாழுங்குயிலே**
**சீருடைச் செங்கம லத்தில் திகழுரு வாகிய செல்வன்**

பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாசம் அறுத்தெனை யாண்ட
ஆருடை அம்பொனின் மேனி அமுதினை நீவரக் கூவாய். 9

***உரை :-*** *கரிய நிறமுடைய அழகு விளங்குகின்ற உடம்பொடு மணம் பொருந்திய சோலையில் வாழுகின்ற குயிலே, சிறப்புடைய செந்தாமரை போல விளங்குஞ் செம்மேனியுடைய முதல்வனாய் இந்நிலவுலகத்திலே திருவடிகளை எனக்குக் காட்டிக் கட்டுகளை, ஒழித்து ஆட்கொண்டருளிய, ஆத்திமலரணிந்த அழகிய பொன் திருமேனி உடையனாகிய சாவா மருந்து போல்வானை நீ வரும்படி அழைப்பாயாக.*

***குறிப்பு :-*** *கார் - கருமை. பொன் அழகு ஒளியைக் குறிக்கும். கடி-மணம். பாசம் - கட்டு, மலம். ஆர் - ஆத்தி. 'பொனின்' என்பதில் 'இன்' சாரியை. காருடைப் பொன் என்பதற்குக் கரும்பொன் என்ற பொருள் கொள்வோருமுளர். கரும் பொன் - இரும்பு.*

**357. கொந்தண வும்பொழிற் சோலைக் கூங்குயிலேயிது கேள்நீ**
**அந்தண னாகிவந் திங்கே அழகிய சேவடி காட்டி**
**எந்தமராம் இவனென்றிங் கென்னையும் ஆட்கொண் டருளுஞ்**
**செந்தழல் போல்திரு மேனித் தேவர் பிரான்வரக் கூவாய். 10**

***உரை :-*** *பூங் கொத்துகள் நெருங்கிய பெருஞ் சோலையில் தங்கிக் கூவுந் தொழிலை உடைய குயிலே, நீ இதைக் கேட்பாயாக. இவ்வுலகத்தே வேதியனாக எழுந்தருளி வந்து அழகிய தனது செய்ய பொற்பாதங்களைக் காட்டி, எமது (அடியாராகிய) உறவினருள் இவனொருவன் என்று கருதி இவ்விடத்தே தகுதியற்ற என்னையும் ஆண்டு வீடருளவல்ல சிவந்த அனல்போலுந் திருமேனி உடைய விண்ணவர் தலைவனை வரும்படி நீ அழைப்பாயாக.*

***குறிப்பு :-*** *'கொத்து' என்பது 'கொந்' தென மெலிந்தது. 'கூவு' மென்பது 'கூம்' எனக் குறுகிற்று. தமர் - தமருள். தில்லையில் வீடருளுங் குறிப்பு இதன்கட் காண்க. பொழில் - மனிதர்களால் புனையப் பெற்ற பூம்பொழில். சோலை - இயற்கையே வளர்ந்த இளமரக்கா. பிரான் - வள்ளன்மை உடையவன்.*

***திருச்சிற்றம்பலம்.***

*தில்லையில் அருளிய*

## 19. திருத்தசாங்கம்*

***(தசாங்கம் - அரசர்க்குரிய பத்து உறுப்புக்கள்)***

*வாதவூரடிகள் தில்லைப்பதியில் எழுந்தருளியிருந்த போது, சோலையிலுள்ள கிளியைப் பார்த்து, 'கிளியே! நீ பெருமான் பெயரைச் சொல்; நாட்டைச் சொல்; ஆற்றைச் சொல்; ஊரைச் சொல் எனச் சொல்விப்பதாகத் திருத்தசாங்கம் என்னும் இதனைப் பாடியருளினார்கள்.*

*தலைவி குயில் முதலானவற்றைத் தூதனுப்பியும் தலைவன் வரக் காலந்தாழ்க்கின்றமையின் அதுவரை ஆற்றியிருக்கமாட்டாளாய்த் தான் வளர்த்த கிளியைக் கையில் ஏந்திக்கொண்டு, தலைவனுடைய பெயரைச் சொல், நாட்டைச் சொல், ஆற்றைச் சொல், மலையைச் சொல் எனச் சொல்வித்துக் கேட்டுப் பொழுது கழிப்பாளாயினள். இவ்வண்ணம் தலைவனுடைய பெயர், ஊர், நாடு, ஆறு, மலை, குதிரை, படை, பறை, மலை, கொடி என்ற பத்துறுப்புக்களையும் பற்றி அறிவிக்கும் பாக்கள் திருத்தசாங்கமென்னும் பெயர்பெற்றன. இது பிரபந்தவகையுள் ஒன்றாகவும் பிற்காலத்து வழங்குவதாயிற்று. ஈண்டு நூலுறுப்பாக அமைந்துள்ளது. தசாங்கங்களைப் பற்றிய குறிப்புக்கள் கீர்த்தித் திருவகவலிலும் கூறப்பட்டுள்ளன.*

*இப்பகுதிக்கு "செடியுடல் அறுக்கும் திருத்தசாங்கம், அடிமை கொண்ட முறைமையதாகும்" என அகத்தியச் சூத்திரம் பொருள் விளக்கந்தரும். பழையவுரை இன்பத்தில் திளைத்து, அபேதமாய் அதுவாய் நிற்கும் உயிர்களெல்லாவற்றையும் நோக்கித் திருவருட் பயனான அடிமைப் பெருக்கமாகச் சொல்லியது என்று கூறும்.*

*பழைய புராணம் "பேர் நாடு ராறு மலைபேணூர்தி படைமுரசு, தார்கொடி யெலாமரற்குச் சாற்றல் தசாங்கமதாம்" என்கின்றது. ஆன்மா தன்னை அடிமைகொண்ட முறைமையை உணரும்போது தசகாரியம் உணரப்பெறுதலின் தசகாரியம் உண்மைத் தெளிவு என்று பழையவுரை கருத்துக் கூறுவதும் இயையுடைத்தாகின்றது.*

--------

* *அரசனது பத்துறுப்புங் கூறுந் திருப்பதிகம்.*

*அடிமை கொண்ட முறைமை*

***நேரிசை வெண்பா***

*திருச்சிற்றம்பலம்*

**358.** ஏரார் இளங்கிளியே எங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமம் தேர்ந்துரையாய் – ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரான் என்று. 1

*(தலைவி) அழகுநிறைந்த இளங்கிளியே! எமது திருப்பெருந்துறை நாதனுடைய திருப்பெயரை ஆராய்ந்து உரைப்பாயாக (என);*

*(கிளி) வெண்டாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமனும், பாற்கடலிற் பள்ளிகொள்ளும் திருமாலும் முறையே ஆரூரன் என்றும் சிவந்த திருமேனியையுடைய பெருமான் என்றும் கூறுவதுபோல, (தலைவியே நீயும்) எம்பெருமான் தேவதேவன் என்று செப்புக என்கின்றது என்றவாறு.*

*தலைவி கிளியே! எங்கள் திருப்பெருந்துறையார்க்குப் பெயரென்ன சொல் எனக் கிளி, பிரமனும் திருமாலும் ஆரூரன் செம் பெருமான் என்பதுபோல நீயும் எம்பெருமான் தேவதேவன் என்று சொல்லுக என்கின்றது.*

*தன் விருப்பப்படியே சோலையில் சுற்றித் திரியும் கிளியாதலின், அழகும் இளமையுங்குன்றாது உற்சாகத்துடனிருத்தலைக் கண்டு அதனைப் பாராட்டுகின்றாள் தலைவி 'ஏரார் இளங்கிளியே' என்று. ஏர் - அழகு. ஆர்தல் - நிறைதல்; எழுச்சி மிக்க எனலுமாம்.*

*வெண்மலரான் செம்பெருமான் என்றும், பாற்கடலான் ஆரூரன் என்று செப்புவபோல் என எதிர்நிரல் நிறையாகக் கொள்க. பிரமனை இயற்பெயரானும், வேற்றுப்பெயர்களானும் குறியாது வெண்மலரான் என்றது பிரமன் படைப்புத்தொழிலை மேற்கொள்ளுங்காலத்து வெண்டாமரையிலே வீற்றிருக்கும் சிறப்புடையனாதலின் என்க. அவன் பெருமானைச் செம்பெருமானென்று அழைக்கின்றான். இறைவன் சிருஷ்டியுன்முகராகச் சத்தியோடு ஒன்றியகாலத்துப் பச்சைக்கொடி படர்ந்த செம்பவள மலைபோலப் பெருமானைக் காண்பவனாதலின்,*

இவ்வண்ணம் பெருமானை அவன் தியானிக்காவிடின், அவனால் படைப்புத் தொழில் ஓரிம்மியும் இயற்ற ஒண்ணாது என்பது.

பாற்கடலான் - பாற்கடலில் ஆதிசேடனாகிய அணையின்மீது துயில்பவன். அவன் கண்ட இறைக்காட்சி தனது நெஞ்சகத்து தியாகராசப் பெருமானை எழுந்தருளச்செய்து, தியானித்துக் கொண்டே உறங்குபவன். அவனுடைய உச்சுவாச நிச்சுவாசமாகிற மூச்சினசைவே அசபை என்னும் நடனமாகத் தியாகப் பெருமான் அசபாநடேசனாக விளங்குகிறார். ஆகவே, திருமால் கண்ட காட்சி திருவாரூரின்கண் உள்ள அசபாநடேசர் காட்சி. அவன் ஆரூரன் என்று தாம் கண்ட பெயரே கூறுவன்.

இறைவனுக்கு உரிய திருநாமங்கள் ஆயிரமாயிரமும் அவனுடைய புகழ் காரணமாக விளைந்தவை ஆதலின் 'சீரார் திரு நாமம்' என்றாள். அன்றியும், அவனுடைய பல நாமங்களில் உன் அனுபவத்தில் கண்டவற்றை ஆராய்ந்து தெளிந்து கூறு என்பாள் 'தேர்ந்து உரையாய்' என்கின்றாள்.

***உரை :-*** அழகு பொருந்திய இளங்கிளியே, ஆரூரன் செம்மைப் பெருமான், எம்பெருமான், விண்ணவர் தலைவன் என்று வெண்டாமரையி லுறைகின்ற அயனும், திருப்பாற்கடலிற் பள்ளி கொள்ளுந் திருமாலும், கூறுகின்ற முறைபோல, நமது திருப்பெருந் துறை மன்னனது சிறப்பு நிறைந்த திருப்பெயர்களைப் பயனறிந்து சொல்லுவாயாக.

***குறிப்பு :-*** தேர்ந்து - தெளிந்து, அறிந்து. ஆரூரன் - திருவாரூரில் உறைவோன், திருவாரூர், இதயத்திற்கு அறிகுறியாதலின், உள்ளத்து வள்ளலென்ற பொருளுங் கொள்ளப்படும். செம்பெருமான் - சிவபெருமான். செம்மையென்றசொல், நேர்மை, நன்மை, மங்கலம் என்ற பொருள்களை யுணர்த்தும். அயனுக்கும் அரிக்கும் இறைவன் முதல்வனாதலின், எங்கள் தலைவனே! விண்ணவர் தலைவனே! என்று அவர்கள் விளிப்பர்போலும். 'செப்புவ' என்பது செப்புவது என்பதன் கடைக் குறையாகவும் கொள்ளலாம்.

**359.** **ஏதமிலா இன்சொல் மரகதமே ஏழ்பொழிற்கும்**
**நாதன்நமை ஆளுடையான் நாடுரையாய் – காதலவர்க்(கு)**
**அன்பாண்டு மீளா அருள்புரிவான் நாடென்றுந்**
**தென்பாண்டி நாடே தெளி.** **2**

***உரை :-*** (தலைவி) குற்றம் இல்லாத இனிய சொல்லினையுடைய

*மரகதமணிபோலும் பச்சை நிறமுடைய கிளியே! ஏழுலகங்களுக்கும் தலைவனும் நம்மையும் ஒரு பொருளாக ஏற்று ஆளாக உடையவனும் ஆகிய எம் உயிர்த்தலைவன் நாடு யாது? உரையாய் (என்ன).*

*(கிளி) தம்மீது நீங்காத காதலுடையாரை அன்பால் ஆட்கொண்டு என்றும் நீங்காத திருவருள்புரிபவனாகிய சிவபெருமானது நாடு என்றென்றும் தென்பாண்டிநாடேயாம்; இதனை நீ தெளிவாயாக என்றவாறு.*

*தலைவி ஏழுலகுக்கும் தலைவனாகிய எம் தலைவன், நாடு சொல் என்னக் கிளி, காதலரைக் கைவிடாதவனாகிய இறைவன் நாடு தென்பாண்டி நாடு என்கின்றது. ஏதம் - குற்றம்.*

*கிளியின் நிறமே அதன் கவர்ச்சிக்குக் காரணமாதலின், அந்த நிறத்தினை இயற்கையே பெற்றுள்ள பச்சைமணியாக உருவகித்து 'மரகதமே!' என்றாள். முன்பாட்டில், இளங்கிளி பேருரைத்தமையால் சொல்லின் இனிமை உணர்ந்த தலைவி 'இன்சொல் மரகதமே' என்றாள். சொல்லுக்குள்ள ஏதம் பொய், குறளை, வன்சொல், பயனில்சொல் என்பன. இவை பிறர்க்குத் தீமை பயக்கவும், தன்னலம் பெருக்கவும் மனிதனாற் கையாளப்படுவன. கிளியின் சொல் பிறர்க்கு இனிமை பயக்குமேயன்றி, இத்தகைய குற்றங்களை என்றும் செய்யாது ஆதலால் 'ஏதம் இலா இன்சொல் மரகதமே' என்கின்றாள். தான்கேட்ட இன் சொல் இறைவன் நாமம் ஆதலின் அப்பெயர் என்றும் ஏதமிலாமை மட்டுமன்றி ஏதங்கெடுக்கும் மருந்துமாம் ஆதலின் அங்ஙனம் கூறினாள் எனலுமாம்.*

*ஏழ் பொழில் - ஏழுலகு. உலகங்கள் அனைத்திற்கும் தலைவனெனப் பொதுவகையான முதன்மை கூறினவள், அடுத்து நம்மை அடிமையாக ஏற்று அருள்பவனெனச் சிறப்புரிமையைத் தெரிவிக்கின்றாள்.*

*அன்பு ஆண்டு மீளா அருள் காதலவர்க்கு அருள்புரிவானெனக் கூட்டுக. நாம் அவன்மீது செய்யும் அன்பு காரணமாக ஆட்கொண்டு எனவும், நம்மீது வைத்த அன்பால் ஆண்டு எனவும் கொள்ளலாம். ஆட்கொள்வதற்கு அன்பு காரணமேயன்றி, ஆட்கொண்டபின் அவன் நம்மீது செய்வது அன்பின் கனியாகிய அருள். அந்த அருள் அன்புபோல நிலைமாறுவது அன்று, என்றும் மீளாதது என்பாள் "மீளாஅருள்" என்கிறாள்.*

*புரிதல் - விரும்பிச் செய்தல். "புகழ்புரிந்த" என்புழிப் பரிமேலழகர் இப்பொருள் கொள்ளுதல் காண்க. ஆகவே அருள் புரிவான் என்பதற்குத் திருவருளை ஆன்மாக்கள் ஈடேறட்டும் இன்படையட்டும் என்று விரும்பிச் செய்பவன் என்பதாம்.*

*நாடு வெற்றி தோல்விகளால் நிலைமாறுவது, சிவனுக்குரிய நாடு என்றுமே மாறாதது ஆதலின் 'என்றும் தென்பாண்டி நாடே' என்த தேற்றாகாரம் அமைத்துக் கூறுகிறது.*

***நாம் செய்யவேண்டியது முதலில் அன்பு :** பின்பு காதல். இந்த இரண்டும் முறையாக உடையவரை ஆண்டு மீளா அருள் புரிவான் இறைவன் என்பது உணர்த்தினமையால் இச்செய்யுள் அடிமை கொண்ட முறைமையாதல் காண்க.*

***குறிப்பு :-** மரகதம் - பச்சைமணி. பொழில் - உலகம். 'அன்பு ஆண்டு' என்பதற்கு, 'அன்பினால் ஆட்கொண்டு' என்று கூறுதலு முண்டு. 'மீளா அருள்' என்பதற்கு மீளாமைக் கேதுவாகிய அருட்பேறு என்றும் பொருள் கொள்ளலாம். தெளி - அறி. உலகமுள்ள காலமெல்லாம், சிவநெறி விளங்குதற்குரிய நாடென்ற கருத்துப் பற்றி, 'என்றும்', என அருளினர் போலும். 'என்றும்' என்பதை 'அருள் புரிவன்' என்பதோடுஞ் சேர்க்கலாம்.*

**360.** **தாதாடு பூஞ்சோலைத் தத்தாய் நமையாளும்**
**மாதாடும் பாகத்தன் வாழ்பதியென் – கோதாட்டிப்**
**பத்தரெல்லாம் பார்மேற் சிவபுரம்போற் கொண்டாடும்**
**உத்தர கோசமங்கை யூர்.** **3**

***உரை :-** (தலைவி) மகரந்தங்கள் செறிந்த பூக்களையுடைய சோலையின்கண் வாழும் கிளியே! நம்மை ஆளுகின்ற உமையொரு பாகமுடையான் வாழ்கின்ற ஊர் யாது? உரையாய் (என்ன);*

*(கிளி) அன்பர்கள் அனைவரும் இப்பூவுலகில் சிவபுரமாகிய கைலாயம்போலப் பாராட்டிக் கொண்டாடும் திருவுத்தரகோச மங்கையே ஊராம் என்றவாறு.*

*தலைவன் ஊர் எது என்ற தலைவிக்குக் கிளி அன்பர்கள் பூலோக கைலாசமாகக் கொண்டாடும் உத்தரகோசமங்கையே ஊர் என்கின்றது.*

*தாது - மகரந்தம். தாதாடு தத்தாய் எனக் கூட்டின் மகரந்தங்களில் திளைத்த கிளியெனப் பொருள் கொள்க. நம்மை என்றாள் தன்னுயர்வு தோன்ற. கிளியைத் தன்னோடு சேர்த்துக் கூறினாளுமாம். உமாதேவி கலந்த பாகத்தையுடைமையாலேயே அவன் நம்மை ஆட்கொள்ளும் திருவுள்ளம் உடையவனாயினன் என்னுங்குறிப்புத் தோன்ற 'நமையாளும் மாதாடு பாகத்தன்' என்றாள். நமையாளும் மாது எனக் கூட்டின், நம்மை ஆட்கொள்ளும் சிவசத்தியாகிய உமை என்க.*

*பார்மேல் சிவபுரம் - பூலோக கைலாயம். அன்பர்களுக்கு உத்தரகோசமங்கை பூலோக கைலாயமாக விளங்குவது என்க.*

*இது தத்துவசுத்தி கூறியதென்னும் பழையவுரை. கோது ஆட்டி என்பதற்குத் தத்துவங்களாகிய குற்றங்களைச் சுத்தி செய்து என்பது அவ்வுரை.*

***குறிப்பு :-** கோதாட்டுதல் - பாராட்டுதல். அன்பர்க்கு ஞானம் உதவினமை, அப்பதிச் சிறப்பாகும்.*

**361. செய்யவாய்ப் பைஞ்சிறகிற் செல்வீநஞ் சிந்தைசேர்**
**ஐயன் பெருந்துறையான் ஆறுரையாய் – தையலாய்**
**வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்**
**ஆனந்தங் காணுடையான் ஆறு. 4**

***உரை :-** (தலைவி) சிவந்த வாயையும், பசுமையான சிறகினையும் உடைய செல்வியே! நமது சிந்தையின்கண் இடைவிடாது இடங் கொண்ட தலைவனாகிய திருப்பெருந்துறையானுடைய ஆறு யாது? உரையாய் (என்றாளாக);*

*(கிளி) பெண்ணே! பெருமையோடு கூடிய மனமானது மலமாகிய ஆணவத்தைக் கழுவ வந்து இறங்குகின்ற சிவானந்தமே எம்மையுடைய தலைவனது ஆறாம் காண் என்றவாறு.*

*இது தலைவி கிளியை நோக்கித் தலைவனது ஆற்றின்பெயர் வினவ, கிளி ஆணவமலத்தைக்கழுவும் ஆனந்தமே அவனது ஆறு என்கின்றது.*

*கிளி தலைவி கேட்டவண்ணம் ஊரும் பேரும் நாடும் உரைக்கவே, அதனிடமுள்ள பறவை என்ற ஞானம் மறைய, அதனைத்*

*தன்னைப்போன்ற தோழியாகவே கருதிச் 'செல்வீ!' என அழைக்கின்றாள். கிளியைச் செல்வீ என்றது காதன்மை பற்றிவந்த திணைவழுவமைதி. செல்லுகின்ற பறவையே எனப் பொருள்கோடலுமாம்.*

*ஐ - தலைமை. ஐயன் - தலைவன். தலைவனுருவம் என்றும் எக்கணமும் தம் சிந்தையைவிட்டு அகலாதிருக்கின்றமையின் 'நம் சிந்தைசேர் ஐயன்' என்றாளாம். சேர்தல் - இடைவிடாது தியானித்தல். தையல் - அழகு. இது பண்பாகு பெயராகப் பெண்ணை உணர்த்திற்று.*

*'மலம் கழுவ வான் வந்திழியும் ஆனந்தம் உடையான் ஆறு காண்' எனக் கூட்டுக. வான் வந்த சிந்தை - பெருமையோடு கூடிய மனம்; ஆகாய வடிவினராகிய சிவன் எழுந்தருளிய சிந்தை எனலுமாம்.*

*சிவம் நிலவிய சிந்தையின்கண் உயிர்களின் மலத்தைப் போக்க வந்து இறங்கும் ஆனந்தமே ஆறு என்று கூறிற்றாம். ஆனந்தம் - சிவானுபவத்தால் விளையும் களிப்பு. அக்களிப்பு மேன்மேலும் இடையீடின்றிப் பெருகுவதாகலின் அதனை ஆறு என்றார்.*

***குறிப்பு :-** 'வாய்' என்பது மூக்கினையு முளப்படுத்தும். 'செல்வீ' என்பது அருமைச் சொல். 'ஐயன்' என்பதற்குத் தலைவனென்றும் பொருள் கொள்ளலாம். 'மலங்கழுவ' வான் வந்த சிந்தை என மாற்றுக. 'வான்வந்த' என்பதற்கு, 'பெருமை பொருந்திய' என்பதுமுண்டு. 'இழியும்' என்பதற்கு, 'மேல் நின்று இறங்கும்' என்னலுமுண்டு. சிவத்தினின்று உயிரின் இறங்குவது என்பது கருத்து.*

**362. கிஞ்சுகவாய் அஞ்சுகமே கேடில் பெருந்துறைக்கோன்**
**மஞ்சன் மருவும் மலைபகராய் – நெஞ்சத்**
**திருளகல வாள்வீசி இன்பமரு முத்தி**
**அருளுமலை என்பதுகாண் ஆய்ந்து.**

***உரை :-** (தலைவி) முள்முருக்க மலரைப் போலச் சிவந்த வாயையுடைய அழகிய கிளியே! எஞ்ஞான்றும் கேடில்லாத திருப்பெருந்துறை நாதனாகிய மைந்தன் எழுந்தருளியிருக்கும் மலை யாது? உரைப்பாயாக (என்ன);*

*(கிளி) மனத்தில் நிறைந்திருக்கின்ற அறியாமையாகிற இருள்*

*நீங்க ஞானவாளைவீசி இன்பம் பொருந்திய முத்தியை அருளுகின்ற மலை என்று யான் கூறுவதனை ஆராய்ந்து காண் என்றவாறு.*

*கிளியே! பெருந்துறையரசனாகிய வீரனது மலையைக் கூறுக என்ன, வீட்டின்பத்தை அருளும் மலையே அவன் மலை, இதனை நன்றாக ஆய்ந்து காண் என்றது கிளி. கிஞ்சுகம் - முள்முருக்கு மலர். செந்நிறமானது.*

*கேடு - உயிர்கட்குத் தன்னாலும், பூதங்களாலும், தெய்வங் களாலும் வரும் துன்பங்கள். இறைவற்குத் துன்பமே இல்லை ஆதலின் அவனைக் கேடிலாதவன் என்றாள். கேடு - அழிவும், மாற்றமுமாம்.*

*மஞ்சன் - மைந்தன் என்பதன் மரூஉ. மைந்து - வலிமை. மஞ்சு - அழகு; மஞ்சன் - அழகன் எனினுமாம்.*

*நெஞ்சத்து இருள் - உள்ளத்தைச் சார்ந்து உண்மையையறிய வொட்டாது தடைசெய்யும் அஞ்ஞானம்.*

*வாள் - வாளென்னும் கருவி; ஒளியுமாம். 'ஞானவாளேந்தும் ஐயர்' (615) என்பவாகலின் ஈண்டு வீசி என்ற வினைக்கேற்ப ஞானவாள் எனக் கொள்க.*

*முத்தி என்பது இன்பத்தின்கண் இருப்பதாகலின் இன்பமரும் முத்தி என்றதாம். முன்னர்ப் பாடல்களில் 'உத்தரகோச மங்கை ஊர்' 'தென்பாண்டிநாடே தெளி' என்றாற்போலப் பெயரை நேரே கூறாது முத்தியருளுமலையே அவன்மலை எனப் பயனைக்கொண்டு பயன்தரும் பொருளை உணர்த்துகின்றார். முத்தியருளுதலாகிய பயன் கயிலைக்கன்றி, வேற்று மலைகள் எதற்கும் இன்மையான் என்க.*

*இம் முடிவு வேற்றுச் சமயவாதிகள் கூறும் கூற்றுக்களோடு வைத்து, அளவைகளானும் அனுபவத்தானும் அறிந்துகொள்ளத்தக்க தாகலின் 'ஆய்ந்து காண்' என்றது.*

*இருளகல வாள்வீசி என்றதால் ஆன்மாவைப் பற்றியிருந்த மறைப்பு அகல ஆன்மதரிசனம் விளைந்தமை உணர்த்துவது என்பது பழையவுரை.*

*இது, இருளகற்றலும் ஞானமுதவுதலும் முத்தியருளுதலும் முறையே கூறுதலின் அடிமைகொண்டமுறைமை அறிவிப்பது.*

**363.** இப்பாடே வந்தியம்பு கூடுபுகல் என்கிளியே
ஒப்பாடாச் சீருடையான் ஊர்வதென்னே – எப்போதும்
தேன்புரையுஞ் சிந்தையராய்த் தெய்வப் பெண் ணேத்திசைப்ப
வான்புரவி யூரும் மகிழ்ந்து. 6

***உரைநடை :-*** *(தலைவி) எனது கிளியே! கூட்டின்கண் புகாதே; ஒப்பு உரைக்க இயலாத புகழையுடைய பெருமான் ஊர்தியாகக் கொண்டு ஊர்வது என்னே! இப்பக்கம் வந்து சொல் (என்றாளாக);*

*(கிளி) தெய்வமகளிர் தேனையொத்த மனம் உடையவர்களாக எப்போதும் தோத்தரிக்க, மனம் மகிழ்ந்து ஊர்வது ஞானாகாயமாகிய குதிரை என்று கூறியது என்றவாறு.*

*கிளியே! ஒப்பிலாப் புகழுடைய பெருமானுக்கு ஊர்தி எது என்ன, அவர் தெய்வப் பெண்கள் துதிக்க ஞானாகாயமாகிய புரவியை ஊர்வர் என்கின்றது கிளி.*

*கிளிக்கும் தனக்கும் நெடுநாள் பழக்கமுண்டு என்பதைக் குறிப்பிடுவாள் 'என் கிளியே' என்று உரிமை பாராட்டி விளிக்கின்றாள். மக்களைக் கண்டால் அஞ்சி, கூட்டின்கண் புகுந்து ஒளிந்து கிளிகளின் இயற்கையாதலின் 'கூடு புகல்' என்றாள்.*

*இப்பாடு - இப்பக்கம், உரையாடுவார், விரும்பிய பொருளைப் பற்றிய உரையாடலாயின் 'கிட்ட வந்து சொல்' 'இப்பக்கம் வந்து பேசு' என்பது இயல்பு. அங்ஙனமே தலைவிக்குத் தலைவன் ஏறிவரும் பரியைப்பற்றித் தெரிய ஆசை. பரியோ உலகத்திலுள்ள ஏனைய புரவி களைப் போன்றது அன்று. மனனுணர்வாலே காணத்தகும் ஞானப்புரவி. ஆகாயத்தை அனுமானப் பிரமாணத்தால் அறிதலைப் போல இதனை அறியவும் அனுமானமே வேண்டற்பாலது. வேற்றளவைகள் பயன்படா; இதனைக் காதருகில் மிக ரகசியமாகக் கேட்க வேண்டுமென்பாள் 'இப்பாடே வந்து இயம்பு' என்றாள். இயம்பு என்பது இயம் ஒலிப்பதுபோல இனிமை தோன்றப் பேசுதல். இயம் - இசைக்கருவியாகிய முழவு முதலியன. அவை இயம்புவதுபோல நீ உரக்கக் கூறு என்பதுமாம்.*

*ஒப்பாடுதல் - ஒப்புரைத்தல். உரையாடுதல் சொல்லாடுதல் போன்றதொரு வழக்கு. ஏனையோர் புகழ்கள் யாவும் இது போன்றது இது என்று ஒப்புரைக்கலாவது. இறைவன் புகழ் எதற்கும் எக்காலத்தும் ஒப்புரைக்க இயலாதது என்பதாம்.*

*ஊர்வது - ஊர்தியாகக் கொள்வது. எப்போதும் ஊர்வது என்னே என இயைக்க. அவன் விடையின்மீதும், ஐராவணத்தின் மீதும், சூரியன் சந்திரன் யானை பூதம் இவற்றின் மீதும் ஒரோருகால் எழுந்தருளுவன்; எப்போதும் ஊர்வது வான் புரவியேயாம் என்பது.*

*வான் புரவி - பெரிய குதிரை. ஞான ஆகாயமாகிய குதிரை என்க. அருவச் சிவன் ஞானமாகிய குதிரையிலிவர்ந்தே வரக்கூடும் என்பது தெளிக. வான் புரவி மகிழ்ந்து ஊரும் என்றாரேனும், மகிழ்ந்து ஊர்வது வான் புரவி என வினாவிற்கேற்ற விடையாகக் கொள்க.*

*கசிந்த உள்ளமும், கனிந்த பாடலும், சிவஞானமும் எமக்கு அளித்து, இறைவன் அடிமைகொண்டான் எனக் கூறுதலின் இது அடிமைகொண்ட முறைமை உணர்த்தியதாம்.*

**364.** கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக்கோன்
மாற்றாரை வெல்லும் படைபகராய் — ஏற்றார்
அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயுங்
கழுக்கடைகாண் கைக்கொள் படை. 7

***உரை :-*** *(தலைவி) கொம்புத்தேனின் இனிமையை ஒத்து இனிமையான மொழிகளைப் பேசுங்கிளியே! குற்றமற்ற திருப்பெருந் துறைநாதன் தன் பகைவர்களை வெல்லும் படைக்கலம் யாது? சொல்வாயாக (என்ன);*

*(கிளி) எதிர்ந்தவர் அறியாமையாகிய அழுக்கடையாது, கனிந்த அன்பால் நெஞ்சு உருக, மூன்று மலங்களின் மீதும் பாயும் சூலமே இறைவன் கைக்கொண்ட படைக்கலமாகும்; இதனைக் காண் என்றது என்றவாறு.*

*தலைவி, கிளியே! பெருந்துறையான் பகைவரை வெல்லும் படை யாது சொல் என்றாளாகக் கிளி எதிர்ந்தவர்கள் அழுக்கடையாமல் மனம் உருக, மும்மலங்களையும் பாய்ந்தழிக்கின்ற சூலமே என்கின்றது.*

*கோற்றேன் - கொம்புத்தேன். மரக்கொம்புகளில் கட்டப்பெற்ற அடையிலுள்ள தேன் எல்லாத் தேனினும் இனிமையானும் பண்பானும் உயர்ந்தது ஆதலின் அதனைக் கிளியின் மொழிக்கு உவமித்து இங்ஙனம் விளித்தாள்.*

*கோது - குற்றம். இறைவன் அநாதியே மாயையாதி குற்றங்களின் நீங்கியவன் ஆதலின் 'கோதின் பெருந்துறைக் கோன்' என்றாள்.*

365. இன்பால் மொழிக்கிள்ளாய் எங்கள் பெருந்துறைக்கோன்
முன்பால் முழங்கும் முரசியம்பாய் – அன்பாற்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத் தோங்கும்
பருமிக்க நாதப் பறை. 8

***உரை :-*** *(தலைவி) பால்போலும் இனிய மொழி பேசுங் கிளியே! எமது திருப்பெருந்துறைநாதன் திருமுன்பு முழங்குகின்ற முரசு யாது? மொழிவாயாக (என்ன);*

*(கிளி) அடியார்கள் தம்மீதுவைத்த இடையறாப் பேரன்பினால் அவர்களுடைய பிறவியாகிய பகை கெட்டொழியப் பேரின்ப ஒலியை மிக்கு ஒலிக்கும் பரநாதமே பறையாம் என்றவாறு.*

*தலைவி கிளியே! திருப்பெருந்துறைப்பெருமான் திருமுன்பு முழங்கும் முரசு யாது மொழிவாயாக என்னக் கிளி ஆன்மாக்களின் பிறவியாகிற பகை கலங்க, பேரின்பத்து உயர்ந்து ஒலிக்கும் பரநாதமே பறையாம் என்கின்றது.*

*முன்பு - திருமுன்பு. மன்னன் முரசியம்பியவுடன் பகைவர் கதிகலங்கி என்ன விளையுமோ என்று அஞ்சி ஒடுங்குவர். அது போலப் பரநாதப்பறை முழங்கியவுடன் அடியார்களுடைய பிறவியாகிய பகை கெட்டோடியது; பேரின்ப ஒலி உயர்ந்தொலித்தது; அத்தகைய பறையே எமது நாதனது முரசு என்றதாம்.*

***குறிப்பு :-*** *'இன்பால்' என்பதில், 'இன்' என்பது பாலின் இயற்கை யினிமை யுணர்த்துவது. முன்பால் - முன்பக்கம். 'அன்பால்' என்பது இறைவனது அன்பை யுணர்த்தும். அது அருளே யாகும். சுத்த தத்துவங்கள் அபர முத்தித்தானமாய் இன்பம் பயத்தலின், பேரின்பத் தோங்கும்' என்றார். பரு - பருமை. விரிவு - வியாபகம். இந்நாதத்தைச் சூக்குமை வாக்கென்ப. பறை முழக்கத்தாற் பகைவர் மனங் கலங்குவராதலின், 'பிறவிப் பகை கலங்க' என்றார்.*

366. ஆய மொழிக்கிள்ளாய் அள்ளூறும் அன்பர்பால்
மேய பெருந்துறையான் மெய்த்தார்என் – தீயவினை
நாளுமணு காவண்ணம் நாயேனை ஆளுடையான்
தாளிஅறு காம்உவந்த தார். 9

***உரை :-*** *(தலைவி) ஆராயத்தக்க மொழிகளைப் பேசுங் கிளியே!*

*இன்பம் சுரக்கின்ற அன்பர்களிடம் விரும்பி எழுந்தருளியுள்ள திருப்பெருந்துறைநாதன் அணிந்துள்ள உண்மையாகிய மாலை யாது? (என்ன);*

*(கிளி) தலைவியே! நாயை ஒத்த அடியேனைத் தீவினைகள் அணுகாதவண்ணம் தினமும் காத்து ஆளாகவும் ஏற்றருளும் தலைவன் விரும்பிய மாலை கொடியறுகாம் என்றவாறு.*

*தலைவி கிளியே! அடியாருள்ளத்து அமர்ந்திருக்கும் திருப்பெருந்துறைப் பெருமான் மாலை யாது என்னக் கிளி, தீவினை அணுகாதவண்ணம் நாயேனைக் காத்தருளும் அவன் மாலை தாளியறுகாம் என்கின்றது.*

*சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை என்பது பழமொழி. தனக்கு ஒரு சிந்தனையின்றிப் பேசும் என்பது அதன் கருத்து. அப்படியாக நீ யாம் ஆயத்தக்க மொழிகளாக மிகமிகச் சிந்தித்துப் பேசுகிறாய் என்பாள் 'ஆய மொழிக் கிள்ளாய்' என்றாள்.*

*புளிகண்டார்க்கு வாயில் நீருறுதல்போல இன்ப அன்பால் உள்ளத்து விளையும் ஒருவகை மெய்ப்பாடு அள்ளூறுதல். களிந்தூறும் என்கின்றது பழையவுரை.*

*மெய்த் தார் - உண்மையாகிய மாலை; திருமேனியின்கண் விளங்கும் மாலை எனலுமாம். தார் - மார்பிலணியப் பெறுவது. தாளியறுகு - கொடியறுகு.*

*நாயேனைத் தீயவினை அணுகாவண்ணம் ஆளுடையான்; இறைவன்பால் யான் அன்புசெய்து அவன் என்னை ஆட்கொள்வதற்கு முன்பு தீவினைகள் சூழ்ந்து நலிந்தன; பிறைமதி பெருமானை அடைவதற்குமுன் தக்கன் முதலாயினார் சாபம் அவனை நலிந்ததுபோல; இறைவன் நாயேனை ஆட்கொண்ட பின்பு வினைகள் எம்மைச் சாரமாட்டாவாயின; நலிந்து விலகின; அங்ஙனம் எம்மை ஆட்கொண்டவன் என்றார்.*

*உவந்த தார் - விரும்பி அணியும் மாலை.*

*சிவயோகமே பொருளெனக் காட்டி, நாயேனை அடிமை கொண்டவன் என்பதால் சிவயோகம் கூறியது என்னும் பழைய உரை.*

**367.** சோலைப் பசுங்கிளியே தூநீர்ப் பெருந்துறைக்கோன்
கோலம் பொலியுங் கொடிகூறாய் – சாலவும்

ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி ஏர்காட்டுங்
கோதிலா ஏறாங் கொடி.

*__உரை :-__ (தலைவி) சோலையின்கண் வாழுகின்ற பச்சைக் கிளியே! தூய்மையான நீர்சூழ்ந்த திருப்பெருந்துறைத் தலைவனது அழகு விளங்கும் கொடி யாது? கூறுவாயாக (என்ன);*

*(கிளி) அயலார் மிகவும் திடுக்கிட விண்ணின்மேல் விளங்கி அழகும் எழுச்சியும் காட்டுகின்ற குற்றமில்லாத கொடி இடபமாம் என்கின்றது என்றவாறு.*

*தலைவி, கிளியே! பெருந்துறைப் பெருமானுடைய அழகு விளங்கும் கொடி யாது என்ன, கிளி அயலார் திடுக்கிட எழுச்சியை யும் அழகையும் காட்டும் இடபமே கொடியாம் என்கின்றது.*

*கூட்டுக் கிளியைப்போலக் காயச்சிறையிலே அடைபடாது முத்தான்மாவாகச் சோலையில் சிவானுபவச் சுதந்தரம்பெற்றுச் சுற்றித் திரியும் பேரின்பநிலை உனக்கும் இருக்கிறது என்பாள் 'சோலைப் பசுங்கிளியே' என்றாள்.*

*தூ நீர் - தூய்மையையுடைய நீர். தசாங்கம் பத்துப் பாடல்களிலும் பெருந்துறைக்கோன் என்றே தலைவனைக் குறிக்கிறாள். பெண்கள் தம் தலைவன் இயற்பெயரைக் கூறாது மதுரையார், நெல்லையார், தில்லையார், கோகழியார் என ஊரடியாக வந்த பெயராலேயே குறிப்பது தமிழ்மரபாதலைக் காண்க.*

*கோலம் பொலியும் கொடி - அழகோடு விளங்கும் கொடி. கிளி கூறும் விடையிலும் 'ஏர் காட்டும் கொடி' என்றல் காண்க. இஃது உணராதார் சிலர் வடிவம் விளங்கித் தோன்றும் கொடி என்பர். பழையவுரை திருவருளழகான கொடி என்னும்.*

*ஏதிலார் - இயைபு சிறிதும் இல்லாதவர்; அயலார் என்பதாம். கொடிக்கண் ஏறு விளங்கும் எடுப்பும் துடிப்புமாகிய இவற்றைக் கண்டு இவன் கைக்கொடியிலுள்ள ஏறே இவ்வளவு மிடுக்குடையதாயின் யாம் எப்படித் தப்புவோமென்று திடுக்கிடுகின்றனர் பகைவரும் பிறருமாகிய அயலார் என்பார் 'ஏதிலார் சாலவும் துண்ணென்ன மேல் விளங்கி ஏர் காட்டும் கோதிலா ஏறு' என்றார். இடபம் அறவடிவினதாகலின் கோதிலா ஏறு எனப்பட்டது.*

*யானும் தானும் வேறின்மை காட்டும் மெய்கண்ட சிவபோகமே கொடியாதலின் இச்செய்யுள் சிவபோகம் கூறியது என்னும் பழையவுரை.*

*புறச்சமயத்தாரையும், சிவத்தொடர்பு பெறாதாரையும் நடுங்கச் செய்வது கொடி என்றமையான் அடியார்களின் அச்சத்தைப் போக்கிக் காப்பது என்பது போதருதலின் அடிமைகொண்ட முறைமை உணர்த்தியவாறு காண்க.*

***குறிப்பு :-** **சோலையில் வளமுற வாழ்தல், கிளிக்குப் பெருமை. கூட்டில்வாழ் கிளி, சோலைக் கிளியாகாது. 'தூநீர்' என்பதற்குத் 'தூய தன்மை'யெனப் பொருள்கொண்டு, 'கோன்' என்பதோடு இணக்குதலுமாம். ஏதிலார் - பகைவர். ஏறாம் - ஏறு ஆம். ஏறு - காளை வடிவு. ஏறு, அறத்திற் கறிகுறியாம்.***

**திருச்சிற்றம்பலம்**

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 20. திருப்பள்ளியெழுச்சி

--------

***திரோதான சுத்தி****

***எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

*அடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளிய காலத்து, விடியற் காலத்து இறைவனைத் துயிலெழுப்புவதாக இந்தப் பத்துப் பாடல்களையும் அருளிச் செய்தனர். இறைவனைப் பள்ளியினின்றும் எழுந்தருள்க என வேண்டிக் கொள்வதாக இது அமைந்துள்ளது.*

*உறங்கலும் விழித்தலும் இல்லாத இமையா முக்கண்ணனான சிவபெருமானுக்குத் துயிலெழுப்புவது என்பது உண்மை நிகழ்ச்சியாகாது. வெறும் உபச்சாரமேயாகும்.*

*பள்ளி எழுச்சி பழந்தமிழ்நூல்களில் 'துயிலெடைநிலை' என்று வழங்கப்பெறுகின்றது. தொல்காப்பியத்துப் பொருளதிகாரப்புறத் திணையியலுள் பாடாண்டிணையின் பகுதியாக, "தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச் சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்" எனக் கூறப்பட்டுள்ளது.*

*துயிலெடை நிலையாவது பகைமேற்சென்ற மன்னன் பகைவரை வென்று, பாசறைக்கண் மனக்கவற்சி சிறிதுமின்றித் துயிலுகின்ற காலத்து நல்ல புகழைக் கொடுத்தலைக் கருதிய சூதர் துயிலினின்று அவனை எழுப்புவதாகப் பாடுவது. சூதர் - நின்றேத்துவார். சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முந்திய காலம் வைகறை. அப்போது அரசனை எழுப்புவர். அரசன் எழும்புங்காலத்தே தன் வீரமும், வெற்றியும், வழிவழிவரும் குலப்பெருமையும் கேட்டு எழுவானாயின் அன்று முழுதும் பெருங்கிளர்ச்சியுடன் விளங்குவன். அதற்காக அரண்மனையில் வாழுகின்ற அமைதியான காலத்தும், வைகறையில் எழுப்பப் பாடும் பாணர்களை அமைத்திருந்தனர் எனச் சங்கநூல்கள் தெரிவிக்கின்றன.*

*பாணர்கள் துயிலெழுப்புகிறபோது வைகறைக்காலத்தியல்பு களையும் கூறி எழுப்புவர்.*

*புறப்பொருள் வெண்பாமாலையிலும், சூதர் துயிலுணர்த்துதல் சொல்லப்பெற்றுள்ளது. ஆகவே, பாசறைக்கண் துயிலெடுத்தலும் அரண்மனைக்கண் துயிலெடுத்தலும் நிகழும் என்பது பெற்றாம். மனையின்கண் துயிலெழுப்புவர் பரிவாரத்தின் மகளிர்; மனைக்கண்*

---

* *மறைப்பு நீக்கம்.*

*மகளிர் எடுப்பது அகத்திணை, பாசறைக்கண் சூதர் ஏத்துவது புறத்திணை என்பர் சிலர். பாடாண் அகத்தொடு பிணைந்து அகப்புறமாயும், புறத்தொடு பொருந்திப் புறமாயும் விளங்குதல் வெள்ளிடையாதலின் துயிலெடையை இரண்டாகப் பகுத்து உணர்தல் விரும்பற்பாற்றன்று என்க.*

*பழைய குறிப்பு திரோதானசுத்தி; அதாவது ஏகமாய திரோதாயி மறைப்பால் மலத்தை நீக்குதல் எனவும் கூறும். பழைய புராணம்,*

*"ஏர்மருவு திருப்பள்ளி யெழுச்சிபணி விடைகேட்டு*
*ஆர்வமுடன் ஆண்டஅரற் கன்புசெயும் இயல்பே"*

*என விளக்கந்தரும்.*

*பழையவுரை "திருப்பள்ளியெழுச்சி திரோதானசுத்தி" என்று அகத்தியச் சூத்திரத்தை மேற்கோள்காட்டி, உயிர்கள் கேவல சகல சுத்தநிலைகளினின்றும் நீங்கித் திருவருள் உதயமாகுங்காலத்துத் திருவருளே பரையாக அருளுவது என்று கூறும். திரோதானம் சுத்தமாய்ப் பரையாதல் உணர்த்தப்பெறுகின்றது என்பதாம்.*

*இவை அனைத்தையும் ஒருங்கு இயைபுபடுத்தி எண்ணுங்கால், திரோதானசுத்தி என்பது இதுவரை உயிர்களுக்கு மறைப்பினை அளித்து வினைபோகங்களை நுகர்த்திய திரோதானசத்தி அருட்சத்தியாக வெளிப்படுங்காலமே வைகறை, அதனை எண்ணி இறைவனை எழுப்புதலே திருப்பள்ளியெழுச்சியின் பயன் என்பதைத் தெய்வச் சேக்கிழார்பெருமானும்,*

*"நீறணிந்தார் அகத்திருளும் நிறைகங்குற் புறத்திருளும்*
*மாறவருந் திருப்பள்ளி யெழுச்சியினில்"*

*என்று திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில் அறிவித்தல் காண்க.*

*திருச்சிற்றம்பலம்*

**368.** போற்றியென் வாழ்முத லாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்
டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே

ஏற்றுயர் கொடியுடை யாயெனை யுடையாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தரு ளாயே. 1

***உரை :-*** *எனது வாழ்விற்கு மூலப்பொருளாகிய பெருமானே! வணக்கம். (பொழுது) விடிந்தது. உனது அழகிய இரு திருவடிகளுக்கு ஒத்த இருமலர்களை அவற்றின்மேல் தூவி உன் சந்நிதியில் நின்று உனது திருமுகத்தில் எழுகின்ற அருள் விளங்கும் அழகிய புன்சிரிப்பினைப் பெற்று நினது திருவடிகளை வணங்குவோம். சிறந்த இதழையுடைய தாமரைகள் விரியப்பெற்ற சேற்றினையுடைய குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த திருப்பெருந்துறையில் வீற்றிருக்கின்ற சிவபெருமானே, உயர்ந்த நந்திக்கொடியினை யுடையாய், என்னை உடையவனே, எமது தலைவனே, (துயில் நீங்கித்) திருப்பள்ளியினின்று எழுந்தருள்வாயாக.*

*உலகியலில் அரசர் முதலாயினாரைக் காண நேர்ந்தபோது அவர்களைத் தம் முன்னிலைப்படுத்த முதற்கண் 'வணக்கம்' என உரையால் வணக்கம் சொல்லி, அவர் தம்மைத் திருப்பிப் பார்த்தபோது செயலாலும் வணங்கிப் பின்னரே வந்த காரியத்தை விண்ணப்பித்தல் வழக்கம். அங்ஙனமே அடிகளாரும் 'போற்றி' என எடுப்பிலேயே அருளுகின்றார்கள்.*

*வாழ்முதல் - வாழ்வுக்கு அடிப்படை. வாணிகத்திற்கு முதல் இன்றியமையாதவாறுபோல, மக்களுடைய வாழ்விற்கு இன்றியமையாதவர் இறைவன் என்பார் 'வாழ்முதலாகிய பொருளே' என விளித்தார்.*

*அவ்வண்ணம் தம் மனத்தால் அறியப்படுவதாய் வாழ்முதலாகிய அருவச்சிவம் யாமெல்லாம் சென்று அடங்கி வழிபடுதற்கு எளியனாகத் திருப்பெருந்துறைக்கண்ணும் எழுந்தருளி இருக்கின்றார் என்று அறிவிப்பார் 'திருப்பெருந்துறையுறை சிவபெருமானே' என்றார்.*

*திருப்பெருந்துறையைச் 'சேற்றிதழ்க் கமலங்கள் மலரும் தண் வயல் சூழ் பெருந்துறை' எனச் சிறப்பித்தது உயர்ந்த இறைவனுக்கு உகந்த தாமரைகள் வயற்சேற்றிலும் மலர்கின்றமைபோல, சிவானுபூதிச் செல்வர் சிந்தையாகிய உயர்ந்த நிலத்து உளதாம் பரசிவம் நாம் அறிந்து உய்யத் திருப்பெருந்துறையிலும் விளங்குகிறது என்னும் நயம் தோன்ற நிற்றல் காண்க.*

*கமலம் கண்மலருமெனப் பிரித்து, தாமரைகள் கண்போல் மலரும் என உரைத்து, விடியல் நிகழ்ச்சி விளங்குவதாக எனக்*

*கூறுவாருமுளர். திருப்பெருந்துறை சீபஞ்சாக்கரம் ஓதுகின்ற உயிர்கள் திருவடி நெடுங்கரை சேர்ந்து உய்யும் இடமாகும் என்னும் செம்பொருளையும் உணர்த்தி நிற்கின்றது.*

*ஏற்றுயர்கொடி என்பதை உயர் ஏற்றுக்கொடி என மாற்றி வெற்றியோடு உயர்த்திப் பிடித்த இடபக்கொடி எனப் பொருள் கொள்க. அருவாய் அருவுருவாய் உருவாய்த் திருமேனி தாங்கும் சிவம் எம்முடைய ஆணவமலக் கட்டை அறுத்து, அறியாமைப் பகையை அகற்றி, வெற்றிக்கொடி தூக்கி எம்மை அஞ்சல் என்ற அருளி ஆட்கொண்டது என்பார் 'எனை உடையாய்' என்றும், 'எம் பெருமான்' என்றும் விளித்தார். இவை அண்மை விளிகள்.*

*இணை மலர் - ஒன்றோடொன்று ஒத்த மலர். துணை மலர் - இரண்டாகிய மலர். ஒன்றோடொன்று ஒத்த இரண்டாகிய மலர்களைத் திருவடிகளிரண்டினும் ஏற்றித் தொழுகோம் என்க. பூங்கழல் - பூப்போலும் மெல்லிய, மணம் நிறைந்த நிறமுடைய கழல் என்க. கழல்; தானியாகுபெயர்.*

*நாங்கள் பூவினைக் கொண்டு பொன்னடி போற்றத் தேவரீர் திருமுகத்திலே புன்னகை தோன்றும்; அதனை எங்கள் பேறாக நினைத்துத் தொழுவோம் என்பார் 'திருமுகத்து அருள் மலரும் எழில்நகைகொண்டு தொழுகோம்' என்றார்.*

*பழைய உரை 'வாழ்முதலாகிய பொருள்' என்பதற்கு என் உயிர்க்கு அகரமுதல எழுத்தேபோல் விளங்கும் பரசிவனே என்றும், 'போற்றி' என்பதற்கு அடிமையை இரட்சிக்க என்றும், புலர்ந்தது என்பதற்குக் கேவல சகலம் நீங்கிச் சுத்தமான அறிவியல் ஞானம் உதயமாயிற்று என்றும் உரைக்கும்.*

*இது, உறக்கம் நீங்கிப் பெருமானைத் தரிசிக்க எண்ணிய உயிர் அதற்குத்தக அறியாமை நீங்கித் திருவருட்பேற்றிற்குத் தகுதி பெற்றதென்று உணர்த்துதலின் திரோதானசுத்தியாதல் காண்க.*

***குறிப்பு :-** ஏற்றுதல் - மலர் தூவுதல். 'சேற்று' என்பதை 'வயல்' என்பதோடு முடிக்க. 'பங்கஜம்' என்ற வடசொல் சேற்றில் முளைப்பதெனப் பொருள்படும். ஏறு - காளை. புறவிருள் நீங்கக் கதிரவன் விரிதல் போல, அகவிருள் நீங்கத் திருமுகத்தே அருண் மலர்தல் கூறப்பட்டது. எழில்நகை, கதிரவன் கதிர்கள் போல்வது, பள்ளி - படுக்கை, துயில். பள்ளி எழுச்சி - படுக்கையினின்றும் எழுதல். எழுச்சியை விளைக்கும் பாடல்.*

369. அருணன்இந் திரன்திசை அணுகினன் இருள்போய்
அகன்றது உதயம்நின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழஎழ நயனக்
கடிமலர் மலரமற் றண்ணல்அங் கண்ணாம்
திரள்நிரை யறுபதம் முரல்வன இவையோர்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே
அலைகட லேபள்ளி எழுந்தரு ளாயே. 2

***உரைநடை :-*** *'உதயம் அகன்றது' என மாற்றுக. 'அண்ணல்' என்பதைச் சிவபெருமானே என்பதோடு சேர்க்க.*

***உரை:-*** *அளக்கலாகா அளவும் பொருளும் துளக்கலாகா நிலையும் தோற்றமும் வறப்பினும் வளந்தரும் வண்மையுமுடையது மலை ஆதலின் இறைவனை மலையென உருவகிக்க எண்ணி அடிகளார் இறைவனை ஒரொருகால் ஓரொருதன்மையையுடைய மலையாகக் காண விரும்பாது, எப்போதும் இன்பமே தரும் ஆனந்த வடிவான மலையாக உருவகித்து 'ஆனந்த மலையே' என்று விளித்தார். ஆனந்தம் - இன்ப உணர்ச்சி. 'ஆராத இன்பம் அருளுமலை' 'முத்தியருளுமலை' என்றவற்றையும் எண்ணுக. ஆனந்த மலையாகிய இறைவன் தரும் செல்வம் அருட்செல்வம் என்பார் 'அருள்நிதி தர வரும் மலை' என்றார். நிலைத்த பயன் தருதலும், எதற்கும் என்றும் அசையாமையும் உடைமை பற்றி மலை என்று உருவகித்தவர், மேல் அளவிடற்கரிய பரப்பும், ஆழமும், அரும்பொருள் பலவற்றையும் அடக்கிய பெருமையும் உடைமைபற்றிக் 'கடலே' என்றார். அலைகடல்; சாதியடை.*

*அருணன் - சூரியன் தேர்ச்சாரதி. இவனது கால் முடம் என்று புராணம் கூறும். சூரியோதயத்தின்முன் எழும்புகின்ற ஒளியை அருணோதயம் என்றல் உலகவழக்கு. இந்திரன் திசை - கிழக்கு. அருணோதயம் புலர்வதற்கு ஒன்றேகால் நாழிகைக்கு முன் நிகழ்வது. மக்கள் பள்ளியெழவேண்டிய காலம் சூரியோதயத்திற்கு ஐந்து நாழிகைக்கு முன்பு. ஆகவும் அருணோதயமாயிற்று என்றது விரைவில் எழுக என்ற குறிப்பாம்.*

*இருள் - பொருள்கள் புலப்படாவண்ணம் மறைத்து, கண்ணொளிக்கு உபகாரப்படாது நிற்கும் ஒளியின் இன்மை. அது அகன்றது எனவே ஒளி எழுந்தது. அவ்வொளியும் கீழ்த்திசை*

*முழுவதும் பரவி, ஏனைய திசைகளிலும் பாய்ந்துளது என்பார் 'இருள் போய் உதயம் அகன்றது' என்றார். அகன்றது - பரந்தது. "அறிவகற்றும் கல்வி" என்ற ஆட்சியும் இது கண்டு ஆண்டதென்க.*

*முகத்தில் சூரியன், கருணையின் சூரியன் என இயைக்க. முகம் சூரியன், அதில் எழும் கருணை கதிர் எனக் கொள்க. எழ எழ என்ற அடுக்கு, சூரியன் சிறிது சிறிதாக மேலெழும் இயற்கையழகைப் புலப்படுத்துவது. சூரிய கிரணம் சிறிது சிறிதாக எழத் தாமரை இதழ் இதழாக விரிதலைக் காண்கிறோம். அதுபோல இறைவனுடைய கண்களாகிய இதழ்கள் விரிந்தன. புதிதாக மலர்ந்த தாமரையில் தேனுண்ணும் வண்டுகளைப் போலப் பெருமை தங்கிய அடியார் களுடைய கண்களாகிற வண்டுகள் ஒலித்தன எனப் பொருட்டொடர்பு கொள்க.*

*அருணன் கீழ்த்திசையடைந்தான் என்று இயற்கை கூறுவார் போலச் செந்நிறமான அருட்சத்தியின் வெளிப்பாடு நிகழ்ந்தது என்றும், இருள் போயிற்று என்றதால் மலநீக்கமும் உண்டாயிற்று என்றும், உதயம் அகன்றது என்றதால் சிவஞானம் பரவிற்று என்றும், திருமுகத்தின் கருணையின் சூரியன் எழஎழ நயனக்கடிமலர் மலர என்றதால் சிவதரிசனமும் திருவருட் பேறும் சித்தித்தன என்றும், கண்ணாம் அறுபதம் முரல்வன என்றதால் அதனை நுகரும் வண்டுகளாக அடியார் கண்கள் அமைந்துள்ளன என்றும் சிவாநுபவப் பொருளும் தோன்ற உரைத்திருத்தல் காண்க.*

*செங்கதிரவன் இந்திரன் (அதிபதியா யிருக்குந்) திக்காகிய கீழ்த்திசையை நெருங்கிவிட்டான். இரவினிருளானது நீங்க, உதயவொளி பரவிற்று. தாமரைபோன்ற நினது திரு முகத்தின் அருளைப் போலக் கதிரவன் எழுந்து மேற்செல்லச் செல்ல, கண்கள் போன்றனவாய, வாசனை யுடையனவா யுள்ள, தாமரை மலர்கள் விரியும்படி, அழகிய அதன் பாங்கரில் திரளும் வரிசை வரிசையாய் வண்டுக் கூட்டங்கள் (ஒலித்து) ரீங்காரஞ் செய்கின்றன. இவற்றைக் கருதுக. பெருந்தகையே, திருப் பெருந் துறையின்கண் எழுந்தருளிய சிவபெருமானே, அருட் செல்வத்தைத் தரவருகின்ற இன்பமலையே, (எல்லாப் பொருளும்) அலைபோற்றோன்றி யடங்குதற்குரிய பெருங் கடலே, துயில் நீங்கி எழுந்தருள்க.*

***குறிப்பு :-** உதய காலத்திலே திருமுகத்திலே அருட் கதிரவன் விளங்கித் தோன்றத் தோன்ற, அன்பர்களது கண்களாகிய காவல் மலர்கள் மலரும்படியாக, என, 'உதயநின் மலர்த் திருமுகத்தின்*

*கருணையின் சூரியன் எழ எழ நயனக் கடிமலர் மலர' என்பதற்குப் பொருள் கூறி, இத்தொடரைப், 'பள்ளி எழுந்தருளாயே' என்பதோடு முடிப்பாரு முளர். உதயம் - உதயவொளி. அகன்றது - பரவியது. தாமரைக்கு நயனத்தை ஒப்பிடுதல் உண்டு. கடி - வாசனை. ஓர் - அறிக. அறுபதம் - வண்டு, ஆறுகாலுடையது. நிரை - வரிசை. இறைவன் அலைகடல் போலுதலைப் பட்டினத்தடிகள் திருவாக்கினா லறிக.*

370. கூவின பூங்குயில், கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை யொளியொளி யுதயத்
தொருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழல் தாளிணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
யாவரும் அறிவரி யாய்எமக் கெளியாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 3

***உரைநடை :-*** *பூங்குயில் கூவின, கோழி கூவின, சங்கம் இயம்பின, தாரகை ஒளி ஓவின, உதயத்தொளி ஒருப்படுகின்றது. தேவ, நமக்கு விருப்பொடு, கழற்செறி நற்றாளிணை காட்டாய் என அமைத்துக் கொள்ளுக.*

***உரை :-*** *பொழுது புலர ஐந்து நாழிகைக்கு முன்பே கூவுவன கோழி; புலருகின்றபோது கூவுவன குயில்; பின்னர்க் கூவுவன குருகு முதலிய பறவைகள். அங்ஙனமாகவும் குயில் கோழி குருகு என்றது வைகறையில் இயற்கை ஒட்டி எழுந்த வர்ணனையன்று. அறியாமை நீங்கிச் சிவஞான ஒளிபெறுதலாகிய அருளனுபவ நெறியே அடிகளார் கருத்து நிறைந்த பொருள். அதனால் முதலில் உடல் முழுதும் கருமையாய்க் குரலில் இனிமையாய குயில்கள் கூவின என்றார். குயில் போன்ற செறிந்த இருள் விலகும் பரிபாகம் எய்திற்று என்பது உணர்த்தப்பெற்றது.*

*கோழி சிறிது கருமையும், மிக்க செம்மையும் கலந்த பறவை. திரோதான இருளும் அனுக்கிரகச் செம்மையும் கலந்த அனுபவத்தின் அடையாளம் கோழி அது கூவுதல் அஞ்ஞானம் சிறுகி, அருள்மிக்கு விளங்கும்நிலை விளைந்தமையை உணர்த்த என்க.*

*குருகு - நாரை. பெரும் பகுதி வெண்மையும், சிறு பகுதி செம்மை அல்லது சாம்பர்நிறமும் உடைய ஒருவகைப் பறவை. இது எக்காளம் போலக் கூவும் ஆதலால் குருகுகள் இயம்பின என்றார். இயம்பின - வாச்சிய ஒலிபோல் இசைத்தன என்பதாம். ஆகவே, வெண்மை*

*மிகுதியும் செம்மை அல்லது சாம்பர்நிறம் குறைவாகவுமுடைய குருகுகள் பரிபாகச் சிறப்பும், வாசனாமலச் சேர்க்கை சிறிதும் உடைய தூயநிலையை உணர்த்தும் அடையாளமாதலின் குருகுகள் இயம்பின என்றார்.*

*சங்கு - முழுதும் வெண்மையானது. சிறிதும் வேற்று நிற மில்லாதது. அவை இயம்பின என்றது தூயநிலை அனுபவம் விளைந்தமையைக் குறிக்கும் அடையாளமாம். ஆகவே, கரிய குயில், கருமையும் செம்மையும் கலந்த கோழி, அழுக்குநிறங் கலந்த வெண்மையான குருகு, மிக்க வெண்மையான சங்கு இவை ஒலித்தன என்றல் ஆணவமலச் சேற்றுள் அழுந்தி அஞ்ஞான வடிவான ஆன்மா பொழுது புலர்தலாகிய ஒளித்தோற்றம் படிப்படியாக உண்டாக, கலாதி வித்தியாதத்துவ சகாயத்தால் பாசஞானம் பெற்று, பின் பசுஞானமும் பெற்றுச் சுத்தான்மாவாகிப் பிரணவநாதத்தைச் செய்து எங்கும் மங்கல ஒலியை எழுப்பிற்று என்று ஆன்மானுபவநயந்தோன்ற உரைத்தமை காண்க.*

*(பொழுது புலர்வதை யுணர்த்த) அழகிய குயில்கள் கூவிவிட்டன. கோழிகளும் கூவின. பிற பறவையினங்களும் ஒலித்து விட்டன. சங்குகள் சத்தித்தன. நட்சத்திர வெளிச்சங்கள் மறைந்தன. உதயத்தினொளி தோன்றுகின்றது. கடவுளே, எங்கள்பால் விருப்பத்தொடு, வீரக்கழல் செறிந்த உனது (பிறவி யறுக்கும்) நல்ல திருவடி யிரண்டையுங் காட்டியருள்க. திருப்பெருந்துறையில் வீற்றிருக்குஞ் சிவபெருமானே, யாரும் அறிய வொண்ணாதவனே, கருணையால் அடியரான எங்களுக்கு எளிவந் தருள்பவனே, எமது தலைவனே, துயில் நீங்கி யருள்க.*

***குறிப்பு :-** குருகு - பறவைப்பொது. தாரகை - விண்மீன். நற்றாள் - பிறவியறுத்து வீடளிக்கும் நன்மையுடையதாள். ஒருப்படுகின்றது - தோன்றுகின்றது. 'விருப்பொடு நமக்கு', என்பதற்கு நமக்கு விருப்ப முண்டாகுமாறு எனப்பொருள் கொண்டு 'ஒருப்படுகின்றது' என்பதனோடு முடிப்பது முண்டு.*

**371. இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்**
**இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்**
**துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்**
**தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்**
**சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்**
**திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே**

என்னையும் ஆண்டுகொண்டின்னருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 4

***உரை :-*** *(விடியற்காலத்தே, இறைவனை வழிபடுவான் புகுந் தாருள்) இனிய ஓசை யிசைக்கும் வீணையை உடையவர் ஒரு பக்கம் (நின்றனர்). யாழ்வாசிப்போர் பிறிதொரு பக்கம். மந்திரங்களோடு துதிப்பாடல்களையும் ஓதுவார்கள் ஒருபக்கம். நெருக்கிக் கட்டப்பட்ட மலர்மாலை ஏந்திய கையினர் ஒருபக்கம். தொழுபவர், அழுபவர், பாடி யசைபவர் ஒருபக்கம். தலையிற் கைகுவித்தவர் ஒருபக்கம். (இவர் யாவர்க்கும் அருள் புரிவான்) திருப்பெருந் துறையில் வீற்றிருக்கும் சிவபெருமானே! (தகுதியற்ற) அடியேனையும் ஆட்கொண்டு இனிய பேரருள் செய்யும் எமது தலைவனே திருப்படுக்கை விட்டெழுந்தருள்க.*

*என்னையும் என்றதிலுள்ள உம்மை இழிவு சிறப்பு. திருவடிக்கண் அன்பும், ஆசாரசீலமுமில்லாத என்னை ஆளாக ஆண்டாலும் ஒறுத்துத் திருத்தவேண்டிய நீ, கள்ளனுக்குப் பாற்சோறு அளித்ததுபோல, எனக்கு யாராலும பெறுதற்கரிய இனிய அருளைச் செய்து எமக்குத் தலைவனுமாயினை என்பார் 'என்னையும் ஆண்டு கொண்டு இன்னருள்புரியும் எம்பெருமான்' என்றார்.*

*பெருமான் திருச்செவி எவ்விசையைக்கேட்டு உவக்குமோ அவ்விசையில் சீபஞ்சாக்கர முதலிய சிவமந்திரங்களை அமைத்து வாசித்தனர் என்பார் 'இன்னிசை வீணையர் ஒருபால்' என்றார். யாழுக்கும் இன்னிசை என்ற அடைமொழியைக் கூட்டி இன்னிசை யாழினர் என்க. யாழும் வீணையுமாகிய கருவிகளிலமைக்கும் இசை காமத்தையும் வீரத்தையும் விளைப்பதாயிராமல் சிவஞானத்தை விளைக்கும் சிவநாம இசையாயிருந்தது என்பதாம்.*

*பிணை மலர் துன்னிய கையினர் என இயைக்க. பிணை மலர் - இரண்டிரண்டு மலராகக் காம்பொடு காம்பாக மாறி வைத்துக் கட்டப்பெற்ற சரம். பிணை - இருதலையும் கூட்டி முடிக்கப் பெற்ற மாலை என்பாருமுளர். திருவடிக் கமலங்களிற் சாத்திவணங்க மலர்ச் சரத்தைத் தாங்கி வந்தவர்கள் ஒருபுறம். இவர்கள் சரியையாளர்.*

*தொழுகை - தொழுதல். கீழே விழுந்து அட்டாங்க பஞ்சாங்க வணக்கம் செய்தல். அங்கப்பிரதட்சிணம் என்னும் பழையவுரை. மட்டற்ற அன்பு கரை புரண்டு வெளிப்படும்போது பலமுறை விழுந்து விழுந்து வணங்க நேரும். அத்தகைய வணக்கமுடையார் 'தொழுகையர்' என்க.*

*அழுகை - அழுதல். பெரிய பெருமானை வைகறையிற் சேவிக்கும் பேறு பெற்றோமே என்று எண்ணுகிறபோது மனம் உருகி ஆனந்தக்கண்ணீர் சொரியும். அதுவே அழுகை. இது பேற்றின்கண் நிகழும் மகிழ்ச்சி அழுகை என்க. இழப்பின் கண் தோன்றும் அவல அழுகையல்லாமை தெளிக. இவர்கள் ஒருபக்கம்.*

*துவள்கை - நெருப்பிடைப்பட்ட இளம்கொடியைப் போலத் துவண்டு வீழ்தல். ஆராமை மிக்குத் துவண்டு வீழ்பவர்கள் ஒருபக்கம். இவர்கள் சிவானுபவத்தை மெய்ப்பாட்டால் வெளிப்படுத்தும் தீவிர பத்தியுடைய சிவஞானியர் என்க.*

*ஆழ்கடல் அலை எழும்பாது நீர்மட்டம் உயருவதுபோல, முறுகிய அன்பர்கள் தம் சென்னிமேல் கரங்கள் குவிய மெய்ம்மறந்து நிற்பர். அத்தகைய தீவிரதர பத்தியையுடைய சிவஞானானுபூதிச் செல்வர்கள் ஒருபக்கம் கூடினர் என்பதாம். இது விஸ்வரூபதரிசனத்திற்காகக் காத்திருக்கும் அன்பர்வகை கூறியதாம். இத்தகைய அடியார்களுடைய அருளனுபவ அன்பு நிலையை அப்பர் தேவாரத்துப் பல இடங்களில் அறியலாம்.*

***குறிப்பு :-** வீணையும் யாழும் தம்முள் சிறிது வேறுபாடுடையன. இருக்கு - மந்திரம். பிணை - சேர்த்த, தொடுத்த. துவள்கை - அசைதல். 'தொழுகை' என்பதற்குத் தொழுங்கை யெனப் பொருளுரைத்தலு முண்டு. அஞ்சலி - வணக்கம்.*

**372.** **பூதங்கள் தோறும்நின் றாயெனின் அல்லால்**
**போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்**
**கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்**
**கேட்டறி யோம்உனைக் கண்டறி வாரைச்**
**சீதங்கொள் வயல்திருப் பெருந்துறை மன்னா**
**சிந்தனைக் கும்அரி யாயெங்கள் முன்வந்(து)**
**ஏதங்கள் அறுத்தெம்மை ஆண்டருள் புரியும்**
**எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே.** **5**

***உரை :-** அறிஞர் நீ, ஐம்பூதங்களிலும் அல்லது எல்லாப் பொருள்களிலும் கலந்து நின்றாயென் றுரைப்பின் அல்லது, போக்குவரவு இல்லாதவன் என்று உன்னைக் கூறி, உன் பொருட்டு இசைப்பாடல்களைப் பாடுதலும், அதற்கேற்ப ஆனந்தக் கூத்தாடுவதுஞ் செய்வதை அல்லாமல், உன்னைத் தாமாக நேரே பார்த்தறிந்தவர்களை நாங்கள் கேட்டறியவில்லை. குளிர்ச்சி*

பொருந்திய வயல் சூழ்ந்த திருப்பெருந்துறை யரசே, மனதிற்கும் ஊகித்தறிதற் கெட்டாதவனே, அடியேங்கள் எதிரே தோன்றியருளி, எங்கள் குற்றங்களைத் தொலைத்துப் பேரருள் அளிக்கும் எமது தலைவனே, யாங்கள் கண்டுய்யத் திருப்பள்ளிவிட் டெழுந்தருள்க.

பூதங்கள் - மண் புனல் அனல் கால் வெளி ஆகிய ஐம்பூதங்களும் அவற்றிற்குக் காரணமான தன்மாத்திரைகளுமாம். அவை எல்லாவற்றினும் இறைவன் நீக்கமற நிறைந்திருக்கின்றான் என்பதைச் சடமாகிய அவைகள் நிலைத்து நிற்பதொன்றானே அறிகின்றா மாதலின் 'பூதங்கள்தோறும் நின்றாய் எனின் அல்லால்' என்றார். இது இறைவனது நிலை கூறியது. மேல்வருவன போக்காகிய அழிதலும், வரவாகிய தோற்றமின்மையும் அவர்க்கில்லை என்பதை உணர்த்துகின்றன. இதனால் இறைவன் நித்தியசத்தாயுள்ள சித்துப்பொருள் என்றுணர்த்தியதாம். புலவோர் - ஞானிகள். கருவி நூலைக் கரைகண்ட நூற்புலவர்களும் தேவர்களுமல்லர்; அவர்கட்கு இறைநிலை இவ்வண்ணம் சொல்லத்தோன்றாதாகலின்.

இறைவன் இவ்வண்ணம் எல்லாவற்றினும் செறிந்திருத்தலையும், நித்தியனாக விளங்குதலையும் திருவருளால் அறிந்த சிவஞானியர் அதனைத் தம்மறிவாற் காண்டலாகிய அநுபவம் மேற்கொள்ளுகின்ற காலத்து ஆனந்தாதிசயத்தால் பாடவும் ஆடவும் செய்வர். ஆகவே அவர்க்கும் சிவம் தியானப்பொருளாக அநுபவத்திற்கு ஆமேயன்றிக் காட்சிப்பொருளாக நேரே உருக்கொண்டு வாராது என்பார் 'கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால், உனைக்கண்டறிவாரைக் கேட்டறியோம்' என்றருளினார் என்க. கீதம் - இறைவனது பொருள்சேர்புகழ் அமைந்த பாடல்கள். சீதம் - குளிர்ச்சி. பண்பாகுபெயராகக் கொண்டு நீர் என்று உரைப்பாரும் உளர். இங்ஙனம் உரைத்தல் தொன்மரபாகுமேற் கொள்க.

***குறிப்பு :-*** **கடவுள் காட்டாமல், தாமாகக் கண்டறிய இயலாமை குறித்தனர். பூதம் ஐம்பூதத்தையும், உள்பொருள் யாவற்றையுங் குறிக்கும். பிறப்பிறப் பிலனாதலின், இறைவனைப் 'போக்கிலன் வரவிலன்' என்றார். ஏதங்கள் - குற்றங்கள். இச்சொல், பாசங்கள், மலங்கள், காம வெகுளி மயக்கமாய முக்குற்றங்கள் என்பதையுணர்த்தும்.**

**373.** **பப்பற வீட்டிருந் துணரும்நின் அடியார்**
**பந்தனை வந்தறுத் தாரவர் பலரும்**
**மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்**
**வணங்குகின் றார்அணங் கின்மண வாளா**

செப்புறு கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
　　திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
இப்பிறப் பறுத்தெமை ஆண்டருள் புரியும்
　　எம்பெரு மான் பள்ளி எழுந்தரு ளாயே. 6

***உரை :-*** *பப்பு - பரப்பு. அமைதியில்லாது பரபரத்தல். இது இரட்டைக் கிளவியாகவே பெரும்பாலும் வழங்குவது. உணரும் போது பரபரப்பிருந்தால் ஆழ்ந்து சிந்திக்கமுடியாமற்போம். ஆதலால் 'வீட்டிருந்து பப்பற உணரும் அடியார்' என்றார். இறைவனை 'வேகங் கெடுத்து ஆண்ட வேந்தன்' என்றதும் காண்க. 'பப்பு என்ப பரப்பு ஒப்பு' என்பது பதினோராந் தொகுதி நிகண்டு. ஆதலால் இணையற்ற வீடு எனப் பொருள் கொள்க என்பர் சிலர். அற என்பது செயவெனெச்சம். அதனை அற்ற எனப் பெயரெச்சமாகக் கோடல் இலக்கணமரபன்மை. பரபரப்பின்றி அமைதியாகத் திருவடித் தியானமாகிய நிட்டை கூடிய அடியார்கள் வந்து பந்தனையறுத்தார் எனலே மரபு வழிவரும் உரையாதல் காண்க.*

*பந்தனை - கட்டு. உயிர்களை அநாதியே பந்தித்து நிற்கும் ஆணவமலமும், வினைப்போகங்களைத் துய்த்தற்காக உதவப் பெற்ற மாயாமலமும், வினைகளாகிற கன்மமலமும் பந்தனை என்ற பொதுச் சொல்லாற் பொருள்படும். ஆயினும், பப்பற விட்டிருந்து உணரும் அடியார் என்றமையான், அவர்கட்குக் கன்மமல மாயா மலக்கட்டுகளும், ஆணவமலத்தின் வாசனையுங்கூட இல்லை என்பது பெறப்படும். அன்றியும் வீட்டிருப்பார் தானதுவாக அமைவாரேயன்றி உணர்தலாகிய புடைபெயர்ச்சியும் புரியார். மற்றீண்டுவாரா நெறியாகிய வீட்டையடைந்தவர்களுக்குப் பந்தனை சிறிதும் இன்று; மானுடத்தியல்பின் இங்கு வந்து வணங்கவேண்டிய இன்றியமை யாமையுமில்லை. ஆகவே 'வீட்டிருந்தார்' என்ற பாடமே சிறத்தல் காண்க.*

*மானுடம், என்றும் எமக்கு ஓர் முதல்வன் உண்டு என்பதை எந்த நிலையிலும் உணரும் இயல்பினது; உணர்ந்து அடிமை பூணும் அறிவினது; அடிமையனுபவம் முற்றியபிறகு அணுக்கமாய்க் கூடப்பழகும் சகமார்க்கத்தில் நிற்கும் சிறப்பினது; அவ்வனுபவம் சிறந்த பிறகு சிவஞானம் பெற்றுக் காதலனும் காதலியும்போல நீயும் நானுமாய் ஏகபோகமாய் ஒன்றிநிற்கும் உயர்வினது. ஆகவே மானிடப் பிறவியில், தன்னை ஒரு மங்கையாகவும், சிவத்தை மணாளனாகவும் உணர்ந்து ஒழுகும் நிலையில் வணங்குகின்றனர் என்பார் 'மானுடத்து*

*மைப்புறு கண்ணியர் இயல்பின் வணங்குகின்றார்' என்றார். சன்மார்க்க நெறியில் நிற்கின்றனர் என்பதாம். இங்ஙனம் உயிர்கள் காதலன் காதலி நிலையில் நின்று வழிபட்டுய்யவே பெருமான் உமை மணவாளனாக வீற்றிருக்கின்றான் என்பார். 'அணங்கின் மணவாளா' என்று விளிப்பதும் காண்க.*

*உமை மணவாளா! மனவிரி வொழியப் பற்றற்ற நிலைநின்று மெய்யுணரும் உனது அன்பர்கள், உன்பாலெய்திப் பாச நீக்கமடைந்தார்கள். அவர்கள் எல்லாரும் மனித இயற்கையின் அன்பு நீர் பெருக்குந் தலைவியர் போல் நின்னைத் தொழுகிறார்கள். சிவப்பு நிறம் பொருந்திய தாமரைகள் விரியும் வயல் புடைசூழ்ந்த திருப்பெருந்துறையிற் றங்கிய சிவபெருமானே! இந்தப் பிறவியை நீக்கி எங்களை ஆட்கொள்ள வல்ல எமது தலைவனே! திருப்பள்ளி யெழுக.*

***குறிப்பு :-** பப்பு, பரப்பு என்பதன் இடைக்குறை. வீடு - பற்று விட்ட நிலை. பந்தனை - கட்டு, பாசம், மலம். பலரும் - எல்லாரும், மைப்பு - நீருடைமை, மை - நீர். மைப்பு என்பதற்கு மைத்தன்மை யெனப் பொருள் கொள்ளுதலுண்டு. 'மானுடத் தியல்பின், மைப்புறு கண்ணியர், (ஆய்) என மாற்றுக. அவர் பலரும் மைப்புறு கண்ணியரும்' எனக் கொண்டு மானுடத் தியல்பாவது, கீழ்வீழ்ந்து வணங்குதல் என்பாருமுளர். மனித வாழ்க்கையிற் றலைவியர் தலைவர்பாற் காதலால் வழிபடுவ தொப்ப என்ற பொருள் சிறப்புடைத்து. செப்பு - சொல், புகழ் என்பது முண்டு. இப்பிறப்பு - எடுத்த பிறப்பு. உடம்பொழிந்து இரண்டறக் கலத்தலாகிய வீடு வேண்டுமென்பார் இவ்வாறு கூறினார்.*

**374.** **அதுபழச் சுவையென அமுதென அறிதற்**
**கரிதென எளிதென அமரரும் அறியார்**
**இதுஅவன் திருவுரு இவனவன் எனவே**
**எங்களை ஆண்டுகொண் டிங்கெழுந் தருளும்**
**மதுவளர் பொழில்திரு வுத்தரகோச**
**மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா**
**எதுஎமைப் பணிகொளும் ஆறது கேட்போம்**
**எம்பெரு மான் பள்ளி எழுந்தரு ளாயே. 7**

***உரை :-*** *அமரரும் சுவையென அமுதென அரிதென எளிதென அறியார்; (யாம்) அவன் திருவுரு இது என, இவன் அவன் என (நீ)*

*இங்கு எழுந்து எங்களை ஆண்டுகொண்டருளும் மங்கையுள்ளாய், மன்னா எம்பெருமான் எமைப் பணிகொளும் ஆறு எது அது கேட்போம், பள்ளி எழுந்தருளாய் எனக் கண்ணழித்துத் தொடர்புபடுத்திப் பொருள் கொள்க.*

*இங்ஙனம் அன்றி, உத்தரகோசமங்கையுள்ளாய்! மன்னா! எம்பெருமான்! தேவர் எல்லாரும் சிவானந்தானுபவம் கனிந்த பழத்தின் சுவை போலும் அமுதம் போலும் என அறிதற்கு இயலாது எனவும், அறிதற்கு எளியது எனவும் அறியமாட்டார்கள்; இவ்வுலகத்தில் இப்பிறப்பிலே யமைந்த உடலாகிய இது இறைவனது திருமேனியாகத் திகழுமாறும், இந்த உடலில் விளங்கும் உயிராகிய இவன் அவனாகிய சிவனாக விளங்குமாறும் அருளிப்போந்து, எங்களை அடிமை கொண்டு அருளுவாயாக; எங்களை ஏவல்கொள்வதற்கு அமைந்த பணி யாது? அதனைக் கேட்டு ஒழுகுவோம் யாம்; பள்ளியெழுந்தருள் எனப்பொருள் கூறுவர் சிலர்.*

*மாம்பழத்தைச் சுவைத்துச் சுவைத்துத் தேர்ந்தான் ஒருவன் இப்போது ஒரு பழத்தைச் சுவைக்கும்போது அச்சுவையைக் கொண்டு இது நீலம், இது பஞ்சரங்கி என்று வேறுபடுத்தி உணருகின்றான். இங்ஙனமே அமுதம் உண்டானும் இது பாற்கடலமுதம் என்று உணருகிறான். அதற்குக் காரணம் அவனது பருவக்காட்சியே.*

*மாம்பழமே தின்றறியாத ஒருவன், இது மாம்பழச் சுவை இன்ன மாம்பழச் சுவை என்று எங்ஙனம் சொல்வன்; அது போலத் தேவர்கள் சிவானந்தம் என்றுமே பெறாத பொறியான் நுகரப்படும் போக முடையவர்கள். அவர்கள் பழச்சுவை அமுதச் சுவைகளை அறிவர். ஆனால், சிவானந்தமமாகிய அது பழச்சுவையை ஒத்ததா? அமுதச் சுவையை ஒத்ததா? எனின் அவர்கள் எங்ஙனம் அறிவர்? அறியார். சிவானந்தம் அறிதற்கு எளிமையானதா? அருமையானதா? என்று வினவில் அத்துறையில் சிறிதும் முயன்றறியாத அவர்கள் அதன் எளிமை அருமைகளை எங்ஙனம் வரையறுத்து உரைப்பர்? ஆகவே, 'அது பழச்சுவையென, அமுதென, அறிதற்கு அரிதென, அறிதற்கு எளிதென அமரரும் அறியார்' எனப்பட்டது.*

*தேவர்கள் நிலை இங்ஙனமாக, யாம் இதுதான் அவனுரு, இவன் அவனே என்று உறுதியாகக் கூறும்வண்ணம் திருப்பெருந்துறையிலே குருமூர்த்தியாக எழுந்தருளிவந்து, உருவும் குருவே சிவனென்பதும் உணரச்செய்து எங்களையும் தீட்சை செய்து ஆட்கொண்டான் என்பார் 'அவன் திருவுரு இது; இவன் அவன் எனவே எங்களை*

*ஆண்டு கொண்டு இங்கு (குருவாக) எழுந்தருளும் மங்கையுள்ளாய்' என்றமை காண்க. இது என்பது எடுத்த இவ்வுடல்; அவனுரு என்பது சிவதநு; இவன் ஆன்மா, அவன் சிவன் எனக்கொண்டு மாபாடியத்துப் பசுகரணம் பதிகரணமாதல் கூறும் பகுதியையும், ஆனந்தத்து அழுந்தும் உயிர் சிவமேயாதலாகிய அவனே தானேயாகிய அந்நெறியையும் காட்டித் தமது உரையை அரண் செய்வர். மாபாடியத்து அவர் காட்டும் பகுதிகள் சிவபோகத்து ஆழ்ந்த அனுபவிகள் நிலை உணர்த்துவது.*

*இது - இதோ குருந்தடியிலிருக்கிற இது என அண்மைச் சுட்டு. அவன் - திருக்கயிலையில் வாழ்கின்ற சிவன். திருவுரு என்றது குருமேனியை. இவன் - இக்குரு. அவன் - சிவன். "குருவே சிவமெனக் கூறினன் நந்தி" ஆதலின் இவன் அவன் என்றனர். இங்கு - இப்பூமியில்.*

*தேவரீர் ஏனையோரை யாட்கொண்டது ஆண்டானடிமைத் தன்மையில்; அடியோமை ஆட்கொண்டது குருசீட முறையில்; இங்ஙனமாக எம்மை நீர் பணிகொள்வது எம்முறையில் என்று வினவுவோம் என்றருளினர்.*

*சிவமானது, கனியின் சுவைபோலும், அமுதம் போலும் எனவும், அதை அறிவதற்கு முடியாதெனவும் அறிதற்கு எளிதாமெனவும் வாசித்துத் தேவர்களும் அதனை அறியா நிலையி லிருப்பர். வீடருளும் பரம்பொருளினது திருவடிவம் இதுவாகும். திருவுருக் கொண்டுவந்த இவனே அப்பெருமான் என்று நாங்கள் சொல்லும்படியாக, எங்களை யாட்கொள்ள இவ்வுலகத்தே திருவுருக் கொண்டெழுந்தருளிய, தேன் மிகுந்த சோலை சூழ்ந்த திருவுத்தரகோச மங்கையிலுறைவோனே, திருப்பெருந்துறைக் கோவே எங்களை ஏவல்கொள்ளும் முறை எதுவோ, அதனை நாங்கள் கேட்டு நடப்போம். எமது தலைவனே! திருப்பள்ளி யெழுக.*

***குறிப்பு :- அது, என்பது பரம் பொருளாகிய சிவத்தைக் குறிக்கும். பழத்திற் சுவைபோல, உலகிற் கலந்துள்ள தென்ற கொள்கை பற்றி அவ்வாறு கூறினர். பிறவியறுத்தலின் அமுத மாயிற்று. அன்பர்க்கெளி தெனவும், பிறர்க்கரிதெனவும் பேசியும், முயற்சிப் பயன் கைவந்தில ரென்பது கருத்து.***

**375.** **முந்திய முதல்நடு இறுதியு மானாய்**
**மூவரும் அறிகிலர் யாவர்மற் றறிவார்**

பந்தணை விரலியும் நீயும்நின் அடியார்
    பழங்குடில் தொறும்எழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
    திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி
அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய்
    ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே. 8

***உரை :-*** *கிடைத்தற்கரிய நிறைந்த அமுதமே! முற்பட்ட முதலும் நிலையும் முடிவும் ஆனவனே! மும்மூர்த்திகளும் உன்னை அறிய வல்லார் அல்லர். (எனின்) வேறு யார், உன்னை அறிதல் கூடும்? பந்தின்தன்மை சார்ந்த திருக்கை விரலுடைய திருவருட் சத்தியும் நீயும் அன்பர்களுடைய பழைய குடிசைகள் தோறும் அவர்க்கருள் புரிவான் வேண்டி எழுந்தருளிப் போந்த மேலானவனே! சிவந்த அனல்போலுஞ் செம்மேனி வடிவங்காட்டியருளி, நீ திருப்பெருந்துறையிற் றங்குகின்ற திருக்கோயிலையுங் காட்டி, நீ ஆட் கொள்ளும் அருளாளனாய் வருதலையுங் காட்டி, எங்கள்பால் வந்து ஆட்கொண்டவனே! நீ, திருப்பள்ளிவிட்டெழுந்தருள்க.*

*அரியையாகிய நீ எளியையாய்த் திருப்பெருந்துறையே எழுந்தருளுங்கோயிலாகக் காட்டி, குருமேனி தாங்கிவந்து ஆட்கொண்டாய்; பள்ளி எழுந்தருள்க என்று வேண்டியதாம்.*

*தேவாமுதம்போல அனைவரும் உண்ணும் இயல்பினதன்றி, 'இராகு கேதுக்கள் உண்டதுபோலத் தகுதி இல்லாதாரும் உண்ணும் இயல்பினதன்றி, இருவினையொப்பும் மலபரிபாகமும் உடையார்க்கு எளிதாய் ஏனையோர்க்கு அரிதாய அமுதம்போல இருத்தலின் இறைவனை 'ஆரமுதே' என விளித்தார்.*

*எல்லாந்தோன்றுதற்கு வித்தாதலின் முதலென்றார். முதல் அனைத்திற்கும் முந்தியது ஆதலின் 'முந்திய முதல் ஆனாய்' என்றார். முழுமுதல் என்றவாறாம்.*

*தோன்றிய அனைத்தையும் வினைப்போகத்திற்கு ஈடாகத் தத்தம் கால எல்லைவரை போகத்தையூட்டிப் பாதுகாத்தலின் 'நடு ஆனாய்' என்றும், கால எல்லைக்கண் உயிர்களைத் தம்மிடத்து ஒடுக்கி ஓய்வளித்துத் தான் அனைத்திற்கும் முடிவாயிருத்தலின் 'இறுதியும் ஆனாய்' என்றும் அருளினர்.*

*இப்பிரகிருதி மாயா புவனத்தில் படைத்தலாதி முத்தொழிலைச் செய்யும் முதல்வர் மூவர். நீ அவர்களுக்கும் முதல் நடு*

இறுதியாயிருப்பதையும், நீ அங்ஙனமிருப்பதாலேயே அவர்கள் அம்முத்தொழிலைச் செய்யும் ஆற்றல் பெற்றனர் என்பதையும் அறிய மாட்டாதார் ஆவர். அவர்களே அறியாதபோது வேறு யார் அறிய இயலும் என்பார் 'மூவரும் அறிகிலர் யாவர்மற்றறிவார்' என்றருளினார்.

பந்தணை விரலி - இறைவி பெண்மைத்தன்மையிற் பிறழாது பூம்பந்துகொண்டு ஆடும்போது அப்பந்து அணையும் மெல்லிய விரலையுடையள் என்பார் இங்ஙனம் கூறினார். திருப்பந்தணை நல்லூர்ப் பெருமாட்டியின் பெயர் பந்தணை மெல்விரலி என்பதுங் காண்க. விரலி என்றமையால் இறைவனருட் குணம் இறைவியாக உருத்தாங்கியதை உணர்த்தியதால், நீயும் என்றபோது உருவம் மேற்கொண்ட சிவபெருமானை சிந்திக்க வைத்தனர் என்க.

இறைவன் அடியார் உள்ளத்தையே இல்லமாகக் கொள்வர் என்பார் 'நின்னடியார் பழங்குடில்தொறும் எழுந்தருளிய பரனே' என்றார். பழங்குடில் என்றது அவர்கள் உள்ளத்தை. பழங்குடில் கம்புங்கயிறும் சிதைந்து கட்டுக்குலைந்து கீற்றுமக்கி நைந்திருப்பது; அதுபோல அடியார் உள்ளமும் மலக்கட்டுக் குலைந்து நைந்திருப்பது ஆதலின் உவமித்தார் என்க. இலைவேய்ந்த குடில்போல அன்பு வேய்ந்தது உள்ளம் எனலுமாம். 'தொறும்' என்பது இடைவிடாமைப் பொருளில் வந்தது. இறைவன் அடியார்கள் உள்ளந்தோறும் எழுந்தருளியிருப்பர் என்பது அவருடைய அளவிலாற்றலுக்கு இயல்பு.

தழல் - தணல். அடிகளாரை ஆட்கொள்ளக் குருநாதனாக எழுந்தருளியபோது இறைவன் திருமேனி செந்தழல்போலச் சிவந்திருந்தமையின் 'செந்தழல் புரை திருமேனியும் காட்டி' என்றார்.

***குறிப்பு :-*** ***'முந்திய' என்றது, எல்லாவற்றிற்கு முற்பட்ட, முதற் பெரும்படைப்பு, காப்பு, அழிப்பைக் குறிப்பது. இடை முத்தொழில்கள் பல. பந்து, உருட்சி, திரட்சிக்குவமை, 'பந்து சேர் விரலாள்' என்ற தேவாரமுங் காண்க. எழுந்தருளி யாட் கொள்ளுந் தொன்மை முறை குறிப்பார் 'பழங்குடில்' என்றார். அது, போய்ப் பழகிய குடில்போலும். திருப்பெருந் துறையை 'உறை கோயிலாகக்' காட்டி என்பாருமுளர். 'அந்தணன்' வேதிய வடிவங் குறித்தல் கூடும்.***

**376.** **விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா**
**விழுப்பொரு ளேயுன தொழும்படி யோங்கள்**
**மண்ணகத் தேவந்து வாழச் செய் தானே**
**வண்திருப் பெருந்துறை யாய்வழி யடியோம்**

கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடலமு தேகரும் பேவிரும் படியார்
எண்ணகத் தாய்உல குக்குயி ரானாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தரு ளாயே. 9

*உரை :- வானுலகத்தேயுள்ள விண்ணவர்களும் அடைய வொண்ணாத மேலான பரம்பொருளே, உன்னுடைய தொண்டாற்றும் அடிமையேயாகிய நாங்கள் இம்மண்ணுலகத்தே (பேரின்பத்தோடு) வாழும்படியாக, இங்கே எழுந்தருளிவந்து எங்களைச் செய்வித்தவனே, வளம்பொருந்திய திருப்பெருந்துறை யுடையவனே, பரம்பரைத் தொண்டராகிய எங்களுடைய கண்ணில் நின்று, அல்லது அகத்தே நின்று மகிழ்ச்சி தருகின்ற தேன்போலினியவனே, விண்ணவர்க்குத் திருப்பாற்கட லமுதம் போல்பவனே, (அல்லது) எல்லாங்கடந்த அருமருந்தே, கரும்பு போல்பவனே, உன்னை அன்பால் விரும்புகின்ற அடியவர்கள் நினைவிலுள்ளானே, எல்லா உயிர்களுக்கும் உயிரானவனே, எமது தலைவனே, திருப்பள்ளி யெழுக.*

*விழுப்பொருள் - மேலான பொருள். விண்ணகத்தேவர் - திருமால் பிரமன் இந்திரன் முதலான தேவர்கள். நண்ணவு மாட்டா - அறிவாலும் அணுகமுடியாத. மால் முதலிய தேவர்கள் பதவிகளிலுள்ள சகலான்மாக்கள் ஆதலின் அவர்கள் அறிவு எம்முடைய அறிவு போல உணர்த்த உணரும் சிற்றறிவே ஆதலின் அதனால் அறியமுடியாத பொருளே என்றார்.*

*மண்ணகத்தேவந்து தொழும்படியோங்கள் வாழச்செய்தானென மாற்றுக. எம்மீது வைத்த கருணையால் மாயாதீத பரம்பொருள் பிரகிருதிமாயா புவனமாகிய இப்பூமியுள் எம்போல மானிடத் திருமேனி தாங்கிக் குருவாக வந்து, குற்றேவலராகிய எங்களை வாழச் செய்து என்று அக்கருணையை விளக்கி விளிக்கின்றார்.*

*குருவாக வந்ததேயன்றி, லிங்கமாகவும் எழுந்தருளியதை வண் திருப்பெருந்துறையாய் என்பதால் குறிப்பித்தருளுகிறார்.*

*களிப்பு - ஐம்பொறிகளும் ஐம்புலன்களிற் பொருந்தும்போது உண்டாகும் இன்ப மகிழ்ச்சி. இறைவன் கண்களில் நின்றே தேன்போலும் இனிய களிப்பைப் தருகின்றான் என்பார் இறைவனைக் 'கண்ணகத்தே நின்று களிதரு தேனே' என்றருளினார். கண் வழியாக ஐம்புலக் களிப்பையும் ஒருங்கு துய்க்கலாம் என்ற உண்மையை "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள" என்ற சேக்கிழார்பெருமான் திருவாக்கும் நன்கு விளக்கும்.*

*குறிப்பு :- விழு - மேலான. தொழுப்பு - தொழும்பு என்பதன் வலித்தல் விகாரம்; தொண்டு. தேன், அமுது, கருப்பஞ் சாறு மூன்றையு முவமையாகக் கூறுதல் அடிகள் மரபு.*

**377.** புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின் றோம்அவ மேயிந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்
ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே. **10**

***உரைநடை*** *:- 'ஆரமுதே, இந்தப் பூமி.... நோக்கி' என்பதை முதலிலும், 'திருப்பெருந்துறை யுறைவாய்' என்பதை ஈற்றடியிலுங் கொள்ளுக.*

***உரை*** *:- கிடைத்தற்கரிய அமுதமே, இந்தப் பூவுலகம் சிவ பெருமான் உயிர்களை வீடருளி ஆட்கொள்கின்ற வகையுடைய தென்று பார்த்து, நாம் பூமியிற்புகுந்து பிறந்து (அவ்வண்ணம் ஆட்கொள்ளப் பெறாமல்) வாழ்நாளை வீணாகப் போக்குகின்றோமே யென்று திருமாலாகிய பெரியோன் விருப்ப மடையவும், மலரி லுறைகின்ற நான்முகன் ஆசைப்படும்படியாகவும், நீயும், விளங்கிய பொய்யாத நினது திருவருட்சத்தியும், ஞாலத்தே போந்தருளி எங்களை உய்யக் கொண்டருள வல்லவனே, திருப்பெருந்துறை யுறைவானே, திருப்பள்ளி விட்டு எழுந்தருள்க.*

*நாமும் பூமியிற்சென்று மக்களாகப் பிறந்திருந்தால் நம்மையும் சிவபெருமான் ஆட்கொண்டு உய்யச் செய்திருப்பாரே; இத்துணைக் காலமும் நாம் வீணாகக் கழித்துவிட்டோமே! என்று பிரமனும் மாலும் விரும்ப, எம்மைவந்தாட்கொள்ள வல்லவரே பள்ளி எழுக என்பது கருத்து.*

*நாம் வினைப்போகங்களை உண்டு கழித்து, இறையருள் பெற்றுய்யவேண்டுமாயின் 'தேவர்களும் மண்ணிடைவந்தரனை அர்ச்சிப்பர்' என்ற ஆகம விதிப்படி மண்ணிடைப் பிறந்து வழிபடாமல் இதுவரையில் ஆற்ற நாள்போக்கினோம் என்று அவர்கள் வருந்தினர் என்பது. அவம் - வீண். புவனி - பூமி. வைகுந்தத்திருப்பாரும் சத்தியலோகவாசிகளும் வீடுபேறடைய வேண்டுமாயின் மண்ணிடைத்*

தோன்றியேயாதல் வேண்டுமாதலின் 'பூமி சிவன் உய்யக் கொள்கின்ற ஆறு' என்று நோக்கினர் ஆம்.

இப்பத்துப் பாடலானும் இறைவன் ஆன்மாக்களுக்குச் செய்யும் உபகாரம், மறைப்பை நீக்கித் திருவருள் பாலித்தலே என்பதை அறிவித்தல் காண்க.

**குறிப்பு :-** ***புவனி, அவனி, பூமி என்பன நிலவுலகை யுணர்த்தின. அவமே - வீணே. அலரவன் - வெண்டாமரை யுறைவோன். 'அலர்ந்த மெய்க்கருணை' யென்றது, வீடுய்ப்பிக்குந் தாயாகிய அருட் சத்தியை, திரோதான சத்தியின் வேறாய அருட்சத்தி யெனக் குறிப்பித்தார். ஐந்தெழுத்திலே, வகரத்தாற் சுட்டப்படும் அருளென்றறிக.***

**திருச்சிற்றம்பலம்**

*தில்லையில் அருளிய*

## 21. கோயில் மூத்த திருப்பதிகம்

*மூத்த திருப்பதிகம் : கோயிலைப் பற்றி எழுந்த திருப்பதிகங்கள் இரண்டனுள் இது இருதலை மாணிக்கமாகிய சிவமந்திரத்தை முதலாகக் கொண்டு இறையருள்வேண்டி நாமம் பிதற்றி நயனநீர் மல்கா வாழ்த்தா வணங்கா நினைந்துருகி நிற்பதை விண்ணப்பித்து இரங்கியருள வேண்டுதலாகிய முதிர்ந்த அனுபவத்தை உணர்த்துதலின் இப்பெயர் பெற்றது.*

*போப் அவர்கள் தனது மொழிபெயர்ப்பில் பழைமையான கோயில் திருப்பதிகம் என மொழிபெயர்ப்பர்.*

--------

***அநாதியாகிய சற்காரியம்****

***அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**378. உடையாள் உன்தன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி**
**அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப தானால் அடியேன்உன்**
**அடியார் நடுவுளிருக்கும் அருளைப்புரியாய் பொன்னம்பலத்தெம்**
**முடியா முதலே என் கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே. 1**

***உரைநடை :-*** *'பொன்னம்பலத் தெம்முடியா முதலே' என்பதை முதலிலும், 'என் கருத்து முடியும் வண்ணமுன் நின்றே' என்பதை 'அடியேன்' என்பதற்கு முன்னும் அமைக்க.*

***உரை :-*** *பொற் சபையிலாடும் எமது ஈறிலாத முதல்வனே, (நம்மை) உடையவளாகிய சிவசத்தி உன்னிடத்தே உள்ளீடாக, இருக்கின்றாள். நீயும் அவளிடையே கலந்திருக்கின்றாய். எனக்கு உள்ளீடாய் நீவிர் இருவீரும் இருப்பது உண்மையானால், நீ எனக்கு முற்பட்டு நின்று என் விருப்பம் நிறைவேறும் வண்ணம் அடியேன் உன் அடியார் நடுவிலே இருத்தற்குரிய திருவருள் செய்ய வேண்டும்.*

---

** என்றைக்கு முள்ள தன் செயற்பாடு.*

*'பொன்னம்பலம்' என்பது இதன்கண் எல்லாத் திருப்பாடல் களிலும் எடுத்தோதப்பட்டுள்ளது.*

*உடையாள் : எல்லாவற்றையும் உடைமையாகப் பெற்றவள். உடையவன் என்பதன் பெண்பால். ஈசன் என்றது உடையானாதலின் உடையாளென்பதற்கு ஈசை எனப் பொருள் கொள்ளப் பெற்றது.*

*'உடையாள் உன்றன் நடுவிருக்கும்' என்றது சிவம் ஐந்தொழிலாற்றலையும் தன்னகத்தடக்கிச் சுத்த அறிவே வடிவாய் புறப்பொருளை நோக்காது இருக்கும் உண்மைநிலையில் சத்தி சிவத்தில் அடங்கி, அதன்வசமாக இருத்தலை உணர்த்துகிறது.*

*புறத்தை நோக்கி, உலகு எல்லாமாய் வேறாய் உடனாய் நிற்கும் தடத்தநிலையில் சத்தியின்வசமாய்ச் சிவன் நிற்பதை 'உடையாள் நடுவுள் நீ இருத்தி' என்பதால் அருளுகின்றார்.*

*அருள்வயப்பட்டு நிற்கும் அடியேன் மனத்து எழுந்தருள்வதனை 'அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால்' என்பதால் விளக்கியருளுகின்றார்கள்.*

*இத்திருப்பாடல் இருதலை மாணிக்கமாகிய 'சிவய சிவ' என்னும் திருவைந்தெழுத்தின் நிற்குநிலை உணர்த்துகின்றது. 'உடையாள் உன்றன் நடுவிருக்கும்' என்பது சத்தி எழுத்தாகிய வகாரம் சிகாரமாகிய சிவாக்கரத்தின் இடையில் இருத்தல். சிவசிவ என்னும்போது இரு சிகாரங்களுக்கும் நடுவில் வகாரம் இருத்தலை எண்ணுக.*

*உடையாள் நடுவுள் நீயிருத்தி என்பது சிவசிவ என்பதில் இருவகாரங்கட்குமிடையில் 'சி' இருத்தல். அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால் - 'சிவசிவ' என்று என் நெஞ்சில் தியானப்பொருளாகத் தேவரீர் இருவரும் விளங்குவதானால் என்பது. இத்தகைய திருமந்திரார்த்த உண்மையைப் புலப்படுத்துவதால் இத்திருப்பாடல் இத்திருவாசகம் என்னும் திருமறையின் இருதயமந்திரமாகப் பாராட்டப் பெறுவது.*

*இவை முறையே சிவம் தானாய் சத்தியைத் தன்னகத்தடக்கி நிற்கும் நிலையையும், சத்தியுள் தானடங்கி நின்ற ஐந்தொழில் ஆற்றும் அருள்நிலையையும், இருவருமாக அடியார் உள்ளத்திருக்கும் அனுபவ நிலையையும் உணர்த்துகின்றன.*

*இவ்வண்ணம் சிவம் நிற்கும் நிலைகளை உணர்த்துதலின் இச்செய்யுள் அநாதியாகிய சற்காரியமாதல் காண்க.*

***குறிப்பு :- சிவத்தினின்று பராசக்தி தோன்றுதலின், 'உடை யாள் உன் நடுவிலிருக்கும்' என்றார். சிவத்தின் ஒரு கூற்றிலே தோன்றுஞ்***

*சத்தியே உலகத்தே ஐந்தொழில் செய்யப் போது மாதலின், 'நடு என்றாரென்பாரு முளர். 'நடு' என்ற சொல் அந்தரியாமித்துவ முணர்த்துதலின், அது அத்துவிதக் கலப்பையே, குறிப்பதாம். தோன்று முலகில் எப்புறமும் ஆதாரமாய்ச் சிவசத்தி நிற்றல்போல, உலகின் பொருட்டுத் தோன்றுஞ் சிவ சத்திக்கு எல்லாப்புறமும் சிவமே வியாபக மாயிருத்தலின், சிவத்தின் நடுவே சிவசத்தி தோன்றுமென்றார். உலகத் தோற்றத்தின் கண், எங்குஞ் சிவமானது உள்ளீடாய்ச் சத்தியோடு கலந்திருத்தலின், 'நீ அவள் நடுவில் இருத்தி' என்றார். சிவ தத்துவ சம்பந்தமாய்ச் சத்தி தோன்ற, சத்தி சம்பந்தமாய்ச் சதாசிவந் தோன்றுதலின், இங்ஙனங் கூறினாரென்பாரு முளர். 'அறிவினில் அருளான் மன்னி அம்மையோடப்பனாகி' என்றபடி, சத்தியுஞ் சிவமுமாகவே இறைவன் உயிரிற் கலந்துள்ளானாதலின், 'இருப்பதனால்' என்றார். அடியார் நடுவுளிருப்பதால், இறையன்பு நிலைத்து உலகப் பற்றொழிந்து விரைவில் வீடெய்துதல் கூடுமாதலின், 'என் கருத்து முடியும் வண்ணம்' என்றார்.*

379. முன்னின் றாண்டாய் எனை முன்னம் யானும் அதுவே முயல்வுற்றுப்
பின்னின் றேவல் செய்கின்றேன் பிற்பட் டொழிந்தேன் பெம்மானே
என்னின் றருளி வரநின்று போந்தி டென்னா விடில்அடியார்
உன்னின் றிவனார் என்னாரோ பொன்னம் பலக்கூத் துகந்தானே. 2

***உரை :-*** *பொன்னம்பலத்திலே திருநடஞ் செய்வதை விரும்பினவனே, தக்க பக்குவம் (வருதற்கு) முன்னேயே எதிர்ப்பட்டு என்முன் நின்று என்னை யாட்கொண்டாய். அடியேனும் தகுதியடைதற்கே முயற்சி செய்து பின்பற்றிப் பணி செய்கின்றேன். அங்ஙனம் செய்வதில் பெருமானே நான் பின்னடைந்து விட்டேன். என்னிடத்தில் நின்று திருவருள் மேற்படும்படியாக நிலைபெற்ற வீடு புகுந்திடுக என்று கட்டளை செய்யாவிடின், அடியரானோர் உன்பால் நின்று இவன் யாரென என்னைக் கேட்க மாட்டார்களோ?*

*ஒன்றற்கும் பற்றாத என்முன் நின்று ஆண்டுகொண்டனை; அதுபோல அடியேனும் நின் ஏவல்வழிப் பிழையாது ஒழுகி வந்தேன்; ஆயினும் பிற்பட்டேன்; எனக்காகச் சிறிது தாமதித்து நின்று, அருளி, வரும்படி வா என்று அழையாவிடில், உன்னைப் பார்த்து அடியார்கள் உன்னோடு வேறாய் நிற்கும் இவன் யார் என்று கேளார்களோ? ஆதலால், விரைந்து வருக! என என்னை அழைத்து இன்பவீட்டிருத்துக என்பது கருத்து.*

*சகலான்மாக்களில் பரிபாகம் உடையார்க்கு இறைவன் ஆசான் மூர்த்தியாக எழுந்தருளிவந்து அவர்கள்முன் நின்று இருப்பாலும் உரையானும் அருள்செய்து ஆட்கொள்வன் ஆதலின் 'முன்நின்று ஆண்டாய்' என்றார்.*

*சிவகுருநாதனாகிய உன்னைச்சார்ந்த சீவன் சிவமாகவே விளங்கி எம்மைப்போல இன்பப்பெருந்துறையை எய்த வேண்டியிருக்க வேறாக விலகி நிற்கின்றானே இவன் யார் என்று அடியார்கள் கேட்பதால் தன்னைச் சார்ந்ததன் வண்ணமாக்கும் தனித்தன்மை முதல்வனாகிய உனக்கு இல்லையோ என்று எண்ணத் தோன்றுமே! அதற்காகவாவது ஆட்கொண்டருள் என்பார் 'உன் நின்று இவன் ஆர் என்னாரோ' என்றார்.*

*இத்திருப்பாடல் ஒருதலை மாணிக்கமாகிய சீபஞ்சாக்கரம் செப்புவது என்றலும் மரபு. எவ்வாறெனின் 'முன்னின்று ஆண்டாய் என்பதற்குத் தேவரீரே முதலில் நின்று என்னைப் பின்னர் வைத்து ஆண்டீர் என்றும், 'யானும் பின்னின்று அதுவே முயல்வுற்று ஏவல் புரிகின்றேன்' என்பதற்கு நானும் பின்னே இருந்து தேவரீர் அருள் வழியே நின்றேன் என்றும், 'பிற்பட்டு ஒழிந்தேன்' என்பதற்குப் பின்பு நான் என்பதும் ஒழிந்து தேவரீரே ஆயினேன் என்றும் கூறுதலும் மரபு. அதாவது முன்னின்று சிகார வகாரமாகிய சிவசத்திகளாக முன்னின்று, யகாரமாகிய யான் பின்னிற்கச் சிவய என ஆண்டாய்; யானும் அதனை ஓதி நிற்கு முறையிலே சிவசத்திகளின் வியாபகத்திலடங்கித் தாய் தந்தையின் பராமரிப்பில் நிற்கும் பாலன் போலத் துன்பமின்றி இன்பவடிவாக விளங்கி ஏவல் புரிதலாகிய 'நம' என்று நின்றேன் என்பதாம்; அதாவது சிவாயநம என்பதனை முன்னின்று ஆண்டாய் யானும் அதுவே முயல்வுற்றுப் பின்னின்று ஏவல் செய்கின்றேன் என்பதாற்குறித்தவாறு.*

*சிவாயநம என்பதில் யநம நீங்கிச் சிவ சிவ என இருத்தலே பிற்பட்டு ஒழிந்தேன் என்றது. காண்பானாகிய ஆன்மா'ய' காண்டலாகிய ஏவல்வழி நிற்றல் 'நம'. இரண்டும் ஒழிந்தநிலை 'சிவ', சிவா என்று அனனியமாம் அநுபவநிலையில் இருந்தேன் என்பதாம்.*

***குறிப்பு :-** 'முன்னின்று' என்றது அருட்குருவாய் எதிர்ப்பட்டு வந்ததைக் குறிக்கும். அதுவே முயல்வுற்று என்பதற்கு நீ எதிர்ப்படுதலையே கருதி எனவும் பொருள் கொள்வார். பெம்மானே யென்பதற்கு விரும்பத்தக்கவனே எனவும் பொருள் கொள்ப. போந்திடு - அடியார் நடுவுட் புகுந்திடு. இருள் அருள் இவர்தல் - திருவருள் மேற்படத் தான் அதனுள் அடங்குதல்.*

*இதனைப் "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டெரியோம்புஞ் சிறப்பு" என ஞானசம்பந்தப்பெருமான் அருளுதல் காண்க. இஃதன்றிப் பசுமேத முதலான மீமாஞ்சக மதம் பற்றிய யாகங்களன்று என்க. அவ்வியாகங்கள் ஆன்மலாபமாகிய வீடுபேற்றை வழங்காமையும் சுவர்க்காதி போகங்களையே கொடுப்பதும் தெளிவு ஆதலான் என்க. இத்தகைய சிவயாகத்தைச் செய்து சிவனருள் நடத்துகிறது; ஆற்றுவழி மிதவை போல அருள்வழியே இயங்கும் பரதந்திரமான பொருள் யாம் என்று உணரும்நெறி வந்தவர்கள் அடியார்கள். ஆதலின் அவர்களை 'மகஞ்செய்து வழிவந்தார்' என்றருளினார். வாழ வாழ்ந்தாய் என்பது வாழ்வதற்காகவே நீ வாழ்ந்தாய் எனக் காரணப்பொருளில் வந்த செயவெனெச்சம்.*

*முகந்தருதல் - முகங்கொடுத்துப் பேசுதல். அது இலக்கணை பாகத் திருவருள் சுரத்தலை உணர்த்தியது. முகந்தராவிடின் - பராமுகம் செய்தால். முடிவேன் - இவ்வுயிர் இவ்வுடலோடு கூடியதன் பயனை எய்தாமையின் பயனற்றபிறவி எதற்கு என்று எண்ணி இறப்பேன் என்பதாம்.*

***குறிப்பு :-*** ***'சகந்தான்' என்பதில் 'தான்' என்பது தனியே முறையிடாது பலரும் அறிய முறையிடுதல். தமது அன்பின்மையைப் புலப்படுத்து மென்பதைக் குறிக்கும். தன் அன்பின்மை யறியாது இறைவனருளாமையைத் தக்கவாறன்று என்பர் என்ற கருத்துங் கொள்ளப்படுவது. வேள்வி யியற்றினாலும் பயன்கருதாது செந்நெறி நிற்பவருக்கு இறைவனருள் புரிவனென்பது கூறப்பட்டது. வீடருளாவிடினும் அருட்டிரு மேனியையாவது காட்ட வேண்டு மென்பார் 'முகந்தான்' என்றார்.***

**381.** **முழுமுத லேஐம் புலனுக்கும் மூவர்க்கும் என்தனக்கும்**
**வழிமுத லேநின் பழவடி யார்திரள் வான்குழுமிக்**
**கெழுமுத லேயருள் தந்திருக்க இரங்குங் கொல்லோஎன்**
**றழுமது வேயன்றி மற்றென்செய்கேன் பொன்னம்பலத் தரைசே.** **4**

***உரை :-*** *பொற்சபையிலாடுகின்ற மன்னனே, எல்லாவற்றிற்கும் ஆதியான பொருளே, ஐம்பொறி அறிவிற்கும் மனம், புத்தி, அகங்கார மென்ற மூன்று அந்தக்கரணங்களுக்கும், புருடனாகிய எனக்கும் தோன்றி யியங்குவதற்குக் காரணமான நிமித்தப் பொருளே, பழைமையான உன்னுடைய அடியார்கள் திரண்ட பெருங் கூட்டத்திற்குப் பெரிது மருள்புரிய எழுந்தருளு முதல்வனே, யான்*

வீடகத்தே இருக்கத் திருவருள் கொடுப்பான் இரங்குவையோ என்றெண்ணி அழுதலே யன்றி வேறு யான் என்செய்ய முடியும்?

இறைவா! அடியேற்கும் இரங்கி அருள் வழங்குமோ என்று அழுது வீங்குவதன்றி அடியேன் செய்யக்கூடியது யாதுளது என்பது கருத்து.

பழ அடியார் என்று விசேடித்தது அவனருளே கண்ணாகக் கொண்டு சிவத்தொண்டிலேயே உறைத்து நிற்கும் அடியவர்களென்று உணர்த்துதற்கென்க. அடியார் திரள் குழு வான்மிக்கு எழும் முதல் என்க. திரள்குழு; வினைத்தொகை. அடியார்கள் திரண்ட கூட்டமென்க. வான் - ஞானபூமி. சுவர்க்கமோ விண்ணோ அன்று என்க. பழவடியார் போகபூமியாகிய ஆண்டுப் பொருந்தார் ஆதலின் அடியார் திரள் வான் குழுமி கெழு முதல் எனப் பிரித்து, அடியார் கூட்டம் ஞானபூமியில் கூடிக் கலத்தற்குக் காரணமான முதல்வன் எனலும் ஆம்.

அடியேற்குத் தகுதி ஒருசிறிதும் இல்லை என்பதே யானும் அறிவேன். ஆயினும், பரமகருணாநிதியாகிய தேவரீர் எளியேன் மீது வைத்த பேரிரக்கத்தாலேயே இயற்றப்படுவதொன்றாம் என்பார் ‘இரங்குங்கொலோ’ என்றார். கொல் ஐயப்பொருளில் வந்தது. தலைவற்கு இரக்கம் வருவிக்க வேண்டுமாயின் உரிமைப் போராட்டத்தால் முடியாது; தன் தகுதியின்மையைத் தெரிவித்து அழவேண்டும் ஆதலால் அழுவேன் என்பார் ‘அழுமதுவேயன்றி மற்றென்செய்கேன்’ என்றார்.

இரண்டாம் திருப்பாடலில் அருளியவண்ணம் இறைவன் முன்னின்றாள ஆன்மா பின்னின்று ஏவல் கேட்பப் பிற்பட்டு ஆன்மாவும் ஒழியச் சிவமேயாய், முதற்றிருப்பாட்டில் சொன்ன குறிப்பிலே நிற்க நமது பொறி புலன் முதலான தத்துவங்களும், தாத்துவிகங்களும், அதிபதிகளும் சிவமயமாகவே காணப்பெற்று, சிவமன்றி வேறொன்றும் தோன்றாத அநுபவநிலை தோன்றும் என்பதை இத்திருப்பாட்டின் முதலிரண்டடிகளானும் குறிப்பித்தார் என்க. அதாவது சிவயநம என்றிருந்து, சிவசிவ என நின்று, எல்லாம் சிவமாகக்காணும் அநுபவநிலை சித்திக்க இருப்பதைக் குறிப்பித்தவாறாம்.

**குறிப்பு :- ‘மூவர்க்கும்’ என்றது மும்மூர்த்தி யெனப் பொருள்**

*கொள்வோரு முளர். 'வழிமுதல்' என்பது நிமித்த காரணத்தை உணர்த்துவது. 'அருள் தந்திருக்க' என்பதற்கு அருள் கொடுக்கவெனப் பொருள் கொள்வாருமுளர். செயலற்று வருந்துவதே தன்னாலேயாகு மென்பார். 'அழுமதுவே' யென்றார்.*

**382.** அரைசே பொன்னம் பலத்தாடும் அமுதே என்றுன் அருள் நோக்கி
இரைதேர் கொக்கொத் திரவுபகல் ஏசற்றிருந்தே வேசற்றேன்
கரைசேர் அடியார் களிசிறப்பக் காட்சி கொடுத்துன் அடியேன்பால்
பிரைசேர் பாலில் நெய்போலப் பேசா திருந்தால் ஏசாரோ. **5**

***உரை :-*** *மன்னனே, பொற் சபையிற் கூத்தியற்றுகின்ற அருமருந்தே என்று வாழ்த்தி உன்னருளை எதிர்பார்த்து (காத்திருந்து அமைதியாகவுங் குறிப்பாகவும்) இரைதேர்ந் தெடுக்கின்ற கொக்கினைப் போல இரவும் பகலும் கவலையோடிருந்து இளைப்புற்றேன். முத்திக் கரையை யடைதற்குரிய அடியார்களுக்கு மகிழ்ச்சி மிகும்படியாக நீ காட்சி கொடுத்தருளி உனதடியேனாகிய என்னிடத்தில் பிரை ஊற்றிய பாலில் அடங்கியிருக்கும் நெய்போல வெளிப்படாது நீ என்னோடு உரையாடாதிருந்தால் உன்னை உலகத்தார் வையமாட்டார்களா?*

*இரைதேடுகின்ற கொக்குப்போல உன்னருளை நாடியிருந்தேன்; அடியார்கள் உன்னருளைச் சேர்ந்து பேரின்பம் பெற்றார்கள்; என்னிடம் நீ பிரைதோய்ந்த பால்போலப் பேசாதிருக்கின்றாய்; பிறர் உன்னை இகழ்வர்; உலகத்திற்கு அஞ்சியேனும் அடியேனையும் இன்பக்கரையை எய்துவிக்க என்பது கருத்து.*

*தக்கார் தகாதார் என்பது ஆராயாது யாரையும் உவந்தால் உயர்த்தும் வன்மை அரசனுக்கு உண்டு. அடியேன் தகுதி நோக்கித் தள்ளிவிடாது இன்பக்கரையில் ஏற்றுவித்தல் உமக்கு மிக எளிது என்று குறிப்பார் 'அரைசே' என முதலில் விளிக்கின்றார்.*

*தங்கக்கிண்ணத்தில் ஊற்றிய பால்போல, பொன்னம்பலத்தாடும் அமுதமாக இறைவன் விளங்குகின்றார் என்று தம்மநுபவம் கூறுவார் 'பொன்னம்பலத்தாடும் அமுதே' என்றார்.*

*'ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடி இருக்குமாம் கொக்கு' என்றாற்போல, தேவரீர் திருவருள் ஒன்றையேநோக்கி ஏனைய சிற்றின்பங்கள் இடையிலே வலிய வந்து எம்மைச் சாரவும் அவற்றை ஒரு சிறிதும் பொருட்படுத்தாது இருக்கின்றேன் என்பார் 'உன் அருள்நோக்கி இரைதேர் கொக்குஒத்து, இரவு பகல் ஏசற்று இருந்தே*

*வேசற்றேன்' என்றருளினார். ஏசற்று வருந்தி, வேசற்றேன் - வாடினேன். வேசாடிப் போனேன் என்ற வழக்குண்மையும் உணர்க.*

*உன் அடியேன் என்றது காக்கவேண்டிய பொறுப்பு இறைவற்குண்மையை உணர்த்த என்க.*

***குறிப்பு :-*** *இரை தேர் கொக்கானது தன் விருப்பத்திற்கேற்ற உணவாகிய மீன் வருமளவும் அசையாது காத்திருத்தல்போல, உடம்பு நீங்கி வீடு பெறுதலை விரும்பி அடிகள் இறையருளை எதிர் பார்த்திருந்தனர் என்பது விளங்கிற்று. ஏசறுதல் - துக்கித்தல், கவலைப்படுதல். வேசறுதல் - வாடுதல், இளைத்தல். காட்சி - பேரறிவு. பாலில் நெய்யானது நன்கு விளங்காது நிற்கும். தயிரில் நெய்யானது நன்கு விளங்கும். பிரை சேர் பாலில் நெய்யானது விளங்கியும் விளங்காமலும் நிற்கும். பிரை - உரை. "கண்டும் கண்டிலேன்" என்றபடி ஞானம் பெற்றும் உடனே வீடு பெறாமையின் 'பிரைசேர்பாலி னெய்போல' என்றார்.*

**383.** ஏசா நிற்பர் என்னைஉனக் கடியா னென்று பிறரெல்லாம்
பேசா நிற்பர் யான்தானும் பேணா நிற்பேன் நின்னருளே
தேசா நேசர் சூழ்ந்திருக்குந் திருவோலக்கம் சேவிக்க
ஈசா பொன்னம்பலத்தாடும் எந்தாய் இனித்தான் இரங்காயே. **6**

***உரைநடை :-*** *தேசா, ஈசா, பொன்னம்பலத்தாடு மெந்தாய் என்பவற்றை முதலிற் கொள்க.*

***உரை :-*** *ஒளியுருவினனே, ஆண்டவனே, பொற்சபையிற் கூத்தியற்றுமெங்கள் அப்பனே! என்னை (மெய்யுணர்ந்தோர் அன்பில னென்று) வைவர். மற்றவரெல்லாம் உனக்கடிய னென்று என்னைப் பேசுவார்கள். நானோ உனது திருவடிகளையே நாடி நிற்கின்றேன். மெய்யன்பர்கள் புடைசூழ, நீ வீற்றிருக்கும் உனது திவ்விய சமூகத்தை வழிபடுதற்கு இனியாயினும் இரங்கியருள் செய்வாயாக.*

*முதற்றிருப்பாட்டில் விண்ணப்பித்ததுபோல் பிறரெல்லாம் ஏசுவர். 'நீ வேண்டுதல் வேண்டாமையிலான்; வைதனவே வாழ்த்தாகக் கொள்ளும் வள்ளல்' அந்த ஏச்சுரை உனக்குத் தைக்காதொழியாம்; அடியேன் உலகியலில் உலகத்தோடு ஒட்டி, விருப்பு வெறுப்பு, ஏச்சு பேச்சு, தூற்றுதல் போற்றுதல் இவற்றில் இயைந்து வாழ்கின்றவன் ஆகவே என்னைப் பார்த்து பிறர் 'இவன் உன் அடியான்' என்று பேசுகின்றனர்; அப்போது 'இவன் சிவனடியானாக இருந்தும்*

*சிவபெருமான் இவனை இன்பப் பெருந்துறையில் இருத்தாது இவ்வண்ணம் அலையவிட்டார்' என்று ஏளனம்தோன்ற என்னை உனக்கு அடியான் என்று பேசுகின்றார்களே என்று எண்ணி வருந்துகின்றேன் என்பதை உள்ளடக்கிப் 'பிறரெல்லாம் பேசாநிற்பர்' என்கிறார்.*

*திருவோலக்கம் - நாட்சபையில் அரியாதனத்து அடியார்கள் குறைகளைத் தீர்க்க அருளுள்ளத்துடன் அரசன் வீற்றிருக்கும் காட்சி; ஈண்டு ஞானமயமான திருக்கயிலையில், இறைவன் வீற்றிருக்கும் காட்சி. இங்ஙனம் இறைவன் வீற்றிருக்கும்போது அழுகையர் தொழுகையராக அன்பர்கள் சூழ்ந்திருக்கும் காட்சி மிகச் சிறந்ததாம்; அத்தகைய திருவோலக்கத்தை அடியேன் கண்டு தொழ இனியாவது இரங்கியருள் என்று வேண்டிக் கொள்கின்றார். நேசர் - அன்பர். இனித்தான் - இனியாவது. பிறர் - புறச்சமயத்தார்; சமயவுண்மையறியாதார் எனினுமாம்.*

*பிறர் என்ன கூறினும் யான் நின்னருளே வேண்டி நிற்பது, எனக்கும் தேவரீருக்குமுள்ள அநாதியான தொடர்பு; அதனால் நீ திருவோலக்க சேவை தரவேண்டும் என வேண்டுதலின் இது அநாதியான சற்காரியம் உணர்த்துகிறது.*

***குறிப்பு :-** முற்பாட்டில் 'ஏசாரோ' என்பதற்குப் பதிலாக இப்பாட்டின் தொடக்கத்தில் 'ஏசா நிற்பர்' என்றார். 'தேசா' என்பதில், தேசு - ஒளி. ஓலக்கம் - சபை, காட்சி.*

**384.** **இரங்கும் நமக்கம் பலக்கூத்தன் என்றென் றேமாந் திருப்பேனை**
**அருங்கற் பனைகற் பித்தாண்டாய் ஆள்வா ரிலிமா டாவேனோ**
**நெருங்கும் அடியார்களும்நீயும் நின்று நிலாவி விளையாடும்**
**மருங்கே சார்ந்து வரஎங்கள் வாழ்வே வாவென்ற ருளாயே. 7**

***உரைநடை :-** 'எங்கள் வாழ்வே' என்பதை முதலிற் கூறுக.*

***உரை :-** எங்கள் வாழ்க்கை முதலே, நமது சிற்சபையில் திருநடம் புரிவோன் இரங்கி வீடருள்வனென்று நினைந்து நினைந்து அவாவுற்றிருப்பேனை இல்லாத புதிய ஏற்பாடு செய்து ஆட்கொண்டாய். இப்போது நான் உடையவனில்லாத மாட்டுக் கொப்பாவனோ? நீயும், நின்னை நெருங்கி வருமடியார்களும் நிலைத்து விளங்கி மகிழ்கின்ற பக்கத்தின் சார்பாக நானும் வரும்படி இங்கே வாவென்று கட்டளையிட் டருள்வாயாக.*

அடிகளார் வாழ்வே சிவவாழ்வாக அமைதலின் சிவபெருமானை 'வாழ்வே' என்று விளிக்கின்றார். முன்னர் 'வாழ்முதலாகிய பொருளே' (366) என்றார்.

பலருக்கும் அருள்வழங்குவேனென்று அருளாடலை அம்பலத்தே இயற்றுகின்றவன் நமக்கு அருளானா என்று பலகாலும் எண்ணினேன்; ஆனால், ஏமாந்தேன் என்பார் 'அம்பலக் கூத்தன் நமக்கு இரங்கும் என்று எண்ணி ஏமாந்திருப்பேனை' என்றார்.

அருங்கற்பனை - அரிய உபதேசம். முப்பொருளுண்மையும் அவற்றினியல்பும், உயிர்கள் ஈடேறும் உபாயமும், திருவைந்தெழுத்தின் அருள்நிலையும் ஆகிய உபதேசங்கள். கற்பித்தல் - அதில் நிற்கப் பழக்குதல். ஆண்டாய் என்றது ஆண்ட நீ இப்போது கைவிட்டாய் என்றவரை பொருள் தந்து நின்றது. அதனால் நான் உடையவனற்ற ஊர் சுற்றும் மாடு ஆவேனோ என்றதாம்.

முதல்வன் தன் நெருங்கிய அன்பருடனல்லாது பிறரோடு விளையாடான். இது உலகியல் ஆதலால் இறைவனும் அவனுக்கு நெருக்கமான அடியார்களும் விளையாடுகின்றனர். அவ்விளையாட்டு ஏனையோர் விளையாட்டுப்போல, பயனில் தொழிலாகக் கழிவது அன்று; நிலைபெற்றது, விளக்கந்தருவது என்பதனை 'நின்று நிலாவி விளையாடும் மருங்கு' என்பதால் குறித்தார். உங்களோடு கலந்து விளையாடுந்தரம் அடியேற்கு இல்லையாயினும் அந்த இடத்தைச் சார்ந்துவரவாவது அருள்வழங்குக என்றவாறாம்.

தலைவனும் நெருங்கிய அன்பர்களும் விளையாடுமிடத்தில் தலைவன் வா என்று அழைத்தால் அல்லது எவரும் போதல் மரபன்று ஆதலின் உன் ஆணைநோக்கி நிற்கின்றேன் என்பார் 'வா என்று அருளாய்' என்கின்றார்.

***குறிப்பு :- 'ஏமாந்திருப்பே' னென்பதில், ஏமாந்து - ஆசைப் படுதல், களிப்புறுதல். 'அருங்கற்பனை' யென்பதில் 'அரும்' என்பது இன்மை குறித்தது. கற்பனை - ஏற்பாடு. ஆட்கொள்ளுந் தகுதி யேற்படுமுன்னே ஆட்கொள்ளுதலே அருங்கற்பனையெனப்பட்டது. ஆள்வார் - பாதுகாப்பார், உடையவர். நிலாவி - விளங்கி. மருங்கு - பக்கம்.***

**385.** **அருளா தொழிந்தால் அடியேனை அஞ்சேல் என்பார் ஆர்இங்குப்**
**பொருளா என்னைப் புகுந்தாண்ட பொன்னே பொன்னம் பலக்கூத்தா**

மருளார் மனத்தோ டுனைப்பிரிந்து வருந்துவேனை வாவென்றுன்
தெருளார் கூட்டங் காட்டா யேல் செத்தே போனாற் சிரியாரோ. 8

***உரைநடை :-*** *பொன்னம்பலக் கூத்தா, இங்குப் பொருளாய் என்னைப் புகுந்தாண்ட பொன்னே.*

***உரை :-*** *கனகசபையில் நடம்புரிபவனே, இவ்வுலகத்தே என்னையுமொரு பொருளாக மதித்து என்னுள்ளத்திற் புகுந்து ஆட் கொண்டருளிய பொன் போன்றவனே, நீ வீடருள் செய்யாது போவாயானால் அடியேனை நோக்கிப் பயப்படாதே என்று சொல்வார் யார்? மயக்கம் பொருந்திய மனத்தோடுன்னை விட்டுப் பிரிந்து (பிரிவாற்றாமையால்) துன்பப்படுகின்ற என்னை வாவென் றழைத்துத் தெளிவுடையராகிய உன்னடியார் கூட்டத்திற்கு, காட்டா விடில், யானிறந்து போனால் உலகினர் நகையாட மாட்டாரா?*

*மருள் - மயக்கம். அது ஆணவமலத்தின காரியமாய், உயிர்களின் அறிவை மயக்கித் தனு கரண புவன போகங்களிலேயே உழலும்வண்ணம் செய்வது; தெருளாகி அருளைக்காட்டாதது. அதனால் யான் மயங்கி, ஆட்கொண்ட நாள்முதல் அடியினைவிட்டு அகலாத நிழல்போல உடனாகவே வாழவேண்டிய நான், மாயேயமாகிற புவன போகங்களில் பொருந்தி உன்னைப் பிரிந்து வருந்தினேன் என்கிறார். தெருள் - தெளிந்த ஞானம்; சிவஞானம். தெருளார் கூட்டம் - சிவஞானியர் கூட்டம். விளக்குப்புக இருள் மாய்ந்தாங்கு உன் தெருளார் கூட்டத்தைக் கண்டவுடன் என் மருளார் மனமும் தெருளும்; அதனால், நின்னை என்றும் பிரியாநிலை கூடும் என்ற நோக்கால் 'வருந்துவேனை வா என்று உன் தெருளார் கூட்டம் காட்டுக' என வேண்டுகின்றவர் எதிர்மறை வாய்பாட்டால் "காட்டாயேல் செத்தேபோவேன்; செத்தேபோனால் சிரியாரோ" என்கிறார். ஆகவே, தெருளார் கூட்டம் காட்டிச் சாவாப் பெருநெறியையருளுக என்பது அடிகளார் வேண்டுகோள்.*

***குறிப்பு :-*** *பொருளா - பொருளாக. பொன் - மாறிலாத ஒளிக்கு உவமை. ஆசிரியனாய் கடவுள் ஆட்கொண்டருளி மறைந்தவுடன் அடிகள் நெஞ்சந் திகிலடைந்தமையால், 'மருளார் மனத்தோடு' என்றார். தெருள் - தெளிவு, ஞானம். வீடருளப்பெறாதிருந்தால், பிறவி வருமென்ற அச்சம் பற்றி, 'செத்தே போனால் சிரியாரோ', வென்றார். பிரிவாற்றாமையால் சாதல் கூடுமென்ற குறிப்புக் காண்க.*

386. சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வே றிருந்துன் திருநாமந்
தரிப்பார் பொன்னப் பலத்தாடுந் தலைவா என்பார் அவர் முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனோ நம்பி இனித்தான் நல்காயே. 9

***உரைநடை :-*** *நம்பி என்பதை முதலில் கொள்க.*

***உரை :-*** *அண்ணலே! நினது மெய்யன்பர்கள் உன் ஆனந்தத்தை அனுபவித்துப் புறத்தே சிரிப்பார்கள். அகத்தே மகிழ்வார்கள். நிட்டை கூடுவார்கள், கூடிக்கூடி, உன் திருப்புகழை விரித்துப் பேசுவார்கள், அதனை விரும்பிக் கேட்பார்கள், வியந்து கொண்டாடுவார்கள், தனித்தனியே யிருந்து நின்றன் திருப்பெயரை நினைப்பார்கள். 'பொற்சபைக் கூத்தியற்றுகின்ற தலைவனே' யென்று அழைப்பார்கள். அத்தகையார் முன்பாக (உன் பேரானந்தத்தை முற்றிலு மனுபவிக்கப் பெறாது) நாய்போன்ற நான் இகழ்ச்சிக் குரியனாய்ச் சும்மா யிருப்பேனோ? இனியாவது உன்னானந்தத்தை முற்றிலுங் கொடுத்தருள்வாயாக.*

*அடியார்கள் பலரும் உன் அருட்குணங்களில் ஆழ்ந்து பரவசமாம்போது அடியேன்மட்டும் இகழ்ச்சிக்குரியனாக இருப்பேனா? நம்பி! இனியாவது அருள்செய் என்ற கருத்து.*

*சிரித்தல் - சிவானுபவம் சிந்தையில் தேங்கி நிற்றலின் சீவபோத மாகிய புகழும் இகழுங்கடந்து, மகிழ்ச்சியால் அடியார்கள் தம்முள் தாமே நகுதல்.*

*களிப்பார் - முன்னர் நகையாக வெளிப்பட்ட களிப்பு, நாற்கரைக்குள் நிறைந்து ததும்பும் வெள்ளம்போல முகத்திற் பொலிய நிற்பார் என்பதாம். ஆகவே சிரிப்பு நகையாகிய செயலும், களிப்பு மனநிறைவாகிய அநுபவமும் என்க. பிறர் மரபொடுபடாத பிறவும் உரைப்ப.*

*தேனிப்பார் - தேன்போல மனங்கசிவார் என்பதாம். புது மட்கலத்தினுள் நிறைந்த நீர் புறத்தே பொசிதல்போல அன்பு உள்ளத்தில் நிறைய அதனால் கசிவார் என்பதாம். 'காதலாகிக் கசிந்து' என்ற அநுபவம் காண்க. தியானிப்பார் என்பதன் மரூஉமொழியாகக் கூறுவாருமுளர். இக்கருத்து மீண்டும் உன் திருநாமம் தரிப்பார் என்பதிலும் பெறப்படுதலின் பொருந்துமாறு அறைக.*

*'வேதமொழியர்' (338) என்றலின் திருவார்த்தை என்றது இறைவன் வாக்காகிய வேதாகமங்களை என்க. வேதாகமவாக்கியங்கள் அவரவர் அனுபவ நிலைக்கு ஏற்ப அறியப்படுவன ஆகலின், அடியார்கள் கூடிக்கூடித் தாம்தாம் கண்ட அநுபவங்களைக் கூறி இன்புறுகின்றார்கள் என்பார்.*

*திருநாமம் என்பது பொதுவகையால் இறைவனுடைய ஆயிரமாகிய நாமங்களையும் சிறப்புவகையால் திருவைந்தெழுத்தையும் உணர்த்தும்; ஈண்டு ஒவ்வொருவரும் தனித்தனியே இருந்து தரிக்கின்றார்கள் என்றமையால் திருவைந்தெழுத்தே கொள்ளக் கிடத்தல் காண்க. தரித்தலாவது தன் செவிக்குங் கேட்காது நாவிற்றரித்தலும், சிந்தையிற்றரித்தலுமாம். நாவிற்றரித்தல் வாசிகம்; சிந்தையிற்றரித்தல் மானசிகம் என்க.*

*இவ்வண்ணம் சிவபோகத்திருப்பவர்கள் வாய் வாளாமை நேர்ந்தபோது 'பொன்னம்பலக் கூத்தா' என்பார்கள் என்பது பொன்னம்பலத்தாடும் தலைவா என்றதன் கருத்தாகக்கொள்க.*

***குறிப்பு :-** 'தேனிப்பார்' என்பது, தியானிப்பா ரென்பதன் மருவு. 'வெவ்வேறிருந்து' என்பதைத் 'தேனிப்பார்' என்பத னோடுங் கூட்டலாம். 'தரிப்பார்' என்பதில் தரிப்பு - நினைவு, ஞாபகம். அணிவார் என்ற பொருள் சிறப்புடையதல்ல. நரிப்பு - இகழ்ச்சி.*

**387.** **நல்கா தொழியான் நமக்கென்றுன் நாமம் பிதற்றி நயன நீர்**
**மல்கா வாழ்த்தா வாய்குழறா வணங்கா மனத்தால் நினைந்துருகிப்**
**பல்கா லுன்னைப் பாவித்துப் பரவிப் பொன்னம் பலமென்றே**
**ஒல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி அருளாய் என்னை உடையானே. 10**

***உரைநடை :-** 'என்னை உடையானே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-** என்னை அடிமையாக உடைய முதல்வனே! நமக்குப் பேரருளளியாது போகானென்று நினைந்து உன்னுடைய திருப் பெயரைப் பலகாலுரைத்துக் கண்ணீர் பெருக வாய்குளறித் துதி செய்து வணங்கி, நெஞ்சத்தில் நினைந்து கசிந்து பலகாலு முன்னை அத்துவித பாவனை செய்து, பொற்சபை யென்றே துதித்து (அருள் கருதி)த் தளர்ந்து நிற்கும் உயிராகிய எனக்கு இரங்கித் திருவருள் புரிவாயாக.*

***குறிப்பு :-** பிதற்றல் - பலகால் பேசுதல். "மல்கா" மல்க என்பதன் விரி. மல்கி என்றுங் கூறுப. மல்குதல் - பெருகுதல். குழறா - குழறி.*

வாய்தடுமாறுதல், அன்பின் மெய்ப்பாட்டிற்கு அறிகுறி. பாவித்து - கடவுள் உயிரோடு இரண்டறக்கலந்துள்ள நிலையை எண்ணி, ஒல்கா - ஒல்கி, தளர்ந்து.

**திருச்சிற்றம்பலம்.**

*தில்லையில் அருளிய*

## 22. கோயிற்றிருப்பதிகம்

--------

*இதுவும், அடிகள் தில்லையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, இறைவனருள் விரைந்து அடியாருடன் கூடிக் களிக்கவும் பேரின்பமடையவும் முடியாமல் இருப்பதைத் திருவுளங்கொண்டு, மந்திரத்தலையாகிய காரண பஞ்சாக்கரத்தைத் தியானிக்கும் முறையில் நின்று புகழ்ந்து பாடி உருகியும் காலதாமதமாக அதனால் வருந்தித் தில்லைக்கு வழியனுப்பிய திருப்பெருந்துறைநாதனை விளித்து விண்ணப்பிப்பதாக அருளிச்செய்தது.*

***அனுபோக இலக்கணம்***

***எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**388.** மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
இன்பமே என்னுடை அன்பே. 1

***உரைநடை :-*** *'தேறலின்றெளிவே' முதல் 'என்னுடையன்பே' முடிய முதலில் கொள்க.*

***உரை :-*** *தேனின் தெளிவு போன்ற தூய இனிமையானவனே, சிவபெருமானே, திருப்பெருந் துறையில் வீற்றிருந்த மங்கலப் பொருளானவனே, முடிவற்ற பதவிகள் எல்லாவற்றையுங் கடந்த ஆனந்தமானவனே, என்னுடைய அன்புமயமானவனே, என்னைப் பகைத்து நிலைபெற்று அறிவு மயங்கச் செய்யும் கள்ள ஐம்புலன்களின் வாயில்களை அடைத்து ஞான அமுதமே சுரந்து நிற்கும்படியாக என்னுள்ளத்தின் கண்ணே தோன்றுகின்ற மேலான ஒளியே, நீ*

*உண்மையாக விளங்கும் விதத்தை நான் காணும்படி வந்து அருள் செய்வாயாக.*

*தேறல் - தேன். தேன் புழு, மகரந்தம் முதலியவற்றோடு கலந்திருப்பது. அதன் தெளிவு அக்குற்றங்களின்றித் தனித்த நிலை. இறைவன் அங்ஙனம் குற்றங்கள் சிறிதுமின்றி இனிமை பயந்து உயிர்க்கு உறுதி விளைவிப்பன் ஆதலின் தேறலின் தெளிவாகக் காண்கின்றார். தேன், நாப்பொறியின் வாயிலாக இன்பம் பயப்பது. அதுவாகக்கண்ட அநுபவம் முதல்நிலை.*

*தேறலின் தெளிவாய் நுகர்ச்சிக்குரிய பொருளாக விளங்குபவர் சிவபரம்பொருளே; எமக்கு எளிதில் கிடைத்தருளும் வண்ணம் திருப்பெருந்துறையை இடமாகக்கொண்டு விளங்குவது என்பது அடுத்தடுத்து உணர்த்தப்பெறுகின்றன.*

*ஈறிலாப் பதங்கள் - என்றும் அழிவேயில்லாத ஸ்ரீகண்ட ருத்ரபதம், அனந்தேசுரபதம், சதாசிவபதம், பரசிவபதம் ஆகிய நான்கு பதங்களும், சிவம் இந்த நான்கு பதங்களையும் கடந்த இன்பப் பொருளாக நுகர்ச்சிக்கண் விளங்குவதை 'ஈறிலாப் பதங்கள் யாவையுங்கடந்த இன்பமே' என்ற பகுதியால் குறிப்பித்தருளுகின்றார்.*

*இன்பம் விளைவது அன்புசெய்யும் இடத்தில், அவ்வன்பே சிவமாதலின் 'என்னுடை அன்பே' என்றார். இவ்வண்ணம் தேனாய் அரிய இன்பமாய் அன்பாய் விளங்கும் சிவனை விளித்து, தமக்கே உரிய சிறப்புக் காட்சியை வழங்கியருள வேண்டுவதே முதற்பகுதி.*

*இன்பம்போலக் காட்டித் துன்பம் செய்வதே புலன்களின் இயல்பு ஆதலின் 'வஞ்சப்புலன்' என்றார். வஞ்சம் - வஞ்சனை. வஞ்சம் பிரபஞ்சம் என்பதன் திரிபாகக்கொண்டு பிரபஞ்ச வாசனையையே பற்றி நிற்கின்ற புலன் எனலுமாம். புலன் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமாகிய விஷயங்கள். அவை வருகின்ற வழி - கண் காது மூக்கு நாக்கு உடலாகிற நெறிகள். அவற்றை அடைத்தலாவது மனம் பொறி வழியாகப் புலன்களிற் சென்று பற்றாதவண்ணம் தடுத்து, அகமார்க்கமாகவே திருப்பி ஆனந்தப் பொருளாகிய சிவத்தினிடமே நிற்கச் செய்தல். அப்படி நிலைக்கச் செய்தபோது உச்சந்தலை முதல் உள்ளங்கால்வரை அமுதம் பெருகியதுபோல இன்பநிலை எய்துமாதலின் 'என்னுள் அமுதே ஊறிநின்று' என்ற அனுபவமருளப் பெற்றது. அமுதம் ஊறி, ஆனந்தம் வெளிப்பட்டபோது இருந்த நிலையில் எல்லாம் ஒருசேரப் புலனாம். அங்ஙனம் புலப்படுத்தும்*

*உபகாரம் சிவச்சோதியால் விளைவதாம். அச்சோதி எல்லாச் சோதியினும் மேலானது என்பார் 'என்னுள் எழுபரஞ்சோதி' என்றார்.*

***குறிப்பு :-*** *புலன் - பொறியறிவு. பொறி நுகருமியைபுடைய பொருளென்றுங் கூறுக. ஊறி நின்று - ஊறி நிற்க. உள்ளவா - உள்ளவாறு. அது கடவுளின் சொரூப நிலையைக் குறிக்கும். காண - அறிந்தனுபவிக்க. பதவிகள் யாவும் தத்துவங்களுள் அமைதலின், தத்துவங்கடந்த தனி முதல்வனை 'பதங்கள் யாவையுங் கடந்த' என்றார். 'ஈறிலா' என்பதை 'இன்பமே' என்பதோடு முடித்து, எல்லையில்லாத இன்பமென்பது முண்டு. அதுவே வீட்டின்பமாம். அன்பே சிவமா மென்றபடி. சிவஞானிகளுடைய அன்போடு அத்துவிதமாய்க் கலந்திருத்தலின் 'அன்பே' என்றார்.*

**389.** **அன்பினால் அடியேன் ஆவியோ டாக்கை**
**ஆனந்த மாய்க்கசிந் துருக**
**என்பரம் அல்லா இன்னருள் தந்தாய்**
**யானிதற் கிலனொர் கைம்மாறு**
**முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்ப் பரந்த**
**முத்தனே முடிவிலா முதலே**
**தென்பெருந் துறையாய் சிவபெரு மானே**
**சீருடைச் சிவபுரத் தரைசே.** **2**

***உரைநடை :-*** *"முன்புமாய்" முதல் "அரைசே" முடிய முதலிற் கொள்க.*

***உரை :-*** *எல்லாவற்றிற்கும் முன்னுமாய்ப் பின்னுமாய் அவை முழுவதுமாய் வியாபித்துள்ள (இயல்பாகவே) பாச நீக்கமுடையவனே, எல்லையில்லாத முதற்பொருளே, தெற்கேயுள்ள திருப்பெருந்துறையில் வீற்றிருப்பவனே, சிவபெருமானே, சிறப்புடைய சிவலோக மன்னனே, அன்பின் மிகுதியால், அடியேனுடைய உயிரோடு உடம்பும், இன்ப மயமாய்க் கசிந்துருகும்படியாக எனக்குக் கிடைத்தற்குத் தகுதியில்லாத இனிய திருவருளை நீ கொடுத்தாய்; யானிதற்காக உனக்குக் கொடுக்கக் கூடிய ஒரு பதிலுதவி யாதுமில்லை.*

*காலாதீத முத்தனாகிய முதல்வா! உன்மீது அன்பு செலுத்தினேன்; அதனால் அடியேனுடைய உயிர்மட்டுமல்ல, உடலும் இன்பவடிவாயிற்று! என்ன சொல்வேன்! என் நிலைக்கு மீறிய அருளைப் புரிந்தாய்! இதற்கு நான் என்ன பிரதியுபகாரம் செய்வேன் என்பது கருத்து.*

*பெருங்கருணையும் பேராற்றலுமுடைய இறைவன் செய்யுங் கருணைக்குச் சிற்றறிவும் சிறுதொழிலுமுடையவர்கள் செய்யும் பிரதியுபகாரம் ஒன்றுமில்லை; நன்றியறிதலைத்தவிர என்பார் 'யான் இதற்கு ஓர் கைம்மாறு இலன்' என்றார்.*

***குறிப்பு :-*** *பரம் - தகுதி, பக்கம். "ஓர் கைம்மாறு இலன்" என மாற்றுக. சிவபுர மென்பது வீட்டுலகமென்ப.*

**390. அரைசனே அன்பர்க் கடியனே னுடைய**
**அப்பனே ஆவியோ டாக்கை**
**புரைபுரை கனியப் புகுந்துநின் றுருக்கிப்**
**பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே**
**திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**உரையுணர் விறந்துநின் றுணர்வதோர் உணர்வே**
**யானுன்னை உரைக்குமா றுணர்த்தே. 3**

***உரை :-*** *அன்பர்களுக்கு மன்னனே, அடியேனுடைய தந்தையே, உயிரோடு உடம்பும், மயிர்க் கால்தோறும் நெகிழ்ந்துருகும் படி என்னுள்ளத்தே யெழுந்தருளி நிலைபெற்று அதனை உருகுவித்துப் பொய்மையாகிய அறியாமையைத் தொலைத்த மெய்யொளியே, அலைமோதாது நிலைபெற்ற அமுத மயமாகிய தெள்ளிய (ஆனந்தக்) கடலே, திருப்பெருந்துறையில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானே, சொல்லையும், சுட்டறிவையுங் கடந்து சிவஞானத்தா லறியக்கூடிய பேரறிவே, யான் உன்னைப் புகழ்ந்துரைக்கும் விதத்தை நீ அறிவுறுத்து வாயாக.*

*குடிகளுக்கு அரசன் உற்ற காலத்து உதவுவதுபோல அன்பர்களுக்கு ஆவன அறிந்து உதவலின் 'அன்பர்க்கரசே' என்றார்.*

*அடியேன் அறியாமையால் சிறுபிழை பல செய்வேனாயினும் தந்தைபோலப் பொறுத்து, வளாறுகொண்டு ஒறுத்துத் திருத்தி இன்பமுதவவேண்டும் என்பார் 'அடியனேனுடைய அப்பனே' என்றார்.*

*புரை - பொள்ளல். புரை புரை - பொள்ளல் தோறும். உடம்பின்கண் உள்ள புரை - மயிர்க்கால்தோறும் வேர்வை வெளிப்படும் பொள்ளல். இறைவனுடைய மேலான உதவிகளைச் சிந்தித்துக் கனிய வல்லது உயிரும் அன்று, உடலும் அன்று. உயிர் சித்தாயினும் கருவியின்றிக் கனியாது. உடல் சடமாதலின்*

*இறையுதவியை எண்ணுந்தகுதியதன்று. ஆகவே, உயிரோடு கூடிய உடலே கனியவல்லது என்பார் 'ஆவியோ டாக்கை புரைபுரை கனிய' என்றார். உடலினும் உயிருக்கே உணரும்சிறப்பு உண்மையின் ஓடு உயர்பின் வழிப்புணர்த்துக் கூறினார். புரை புரை கனிய - உள்துளை தோறும் கனிய என்று உரைப்பினுமாம்.*

*புகுந்து என்றதற்கேற்ப உயிருள் உயிருக்கு உயிராகப் புகுந்து எனச் சிலசொல் வருவித்து உரைக்க. நின்று - அவ்வுயிரே சிவமாகிய தமக்கு நிலையான உறையுளாக நிலைபெற்று நின்றென்க. உருக்கி - நெஞ்சினை நீராக உருக்கி. இவ்வண்ணம் இறைவன் உயிருக்கு உயிராகக் கலக்க மனம் உருகும். உருக அறியாமை நீங்கும். ஆன்மாவை மறைத்து நிற்கும் மலமறைப்பு அகலும் ஆதலின் 'பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடரே' என்றருளினார்.*

*கடல் என்றும் அலை ஓயாதது. சிவபோகத்தில் அமைதியே அன்றி அலையின்றாதலின் இறைவனை அலைமோதாத அமுதக் கடலாக உருவகித்தார். உரையுணர்வு; உம்மைத்தொகை. உரை - வாக்கு. உணர்வு - உணருந்தன்மைத்தாகிய மனம்.*

***குறிப்பு :-** அன்பர்க்கரசனே என மாற்றுக. ஆவி கனிதல் - தற்போதங் கழலுதலாகும். ஆக்கை உருகுதல் மெய்ப்பாட்டினால், புரை - துவாரம். இஃது மயிர்க் காலினைக் குறிக்கும். பொய்யிருள் என்றெடுத்து பொய் நிலையாமையையும், இருள் அறியாமையுங் குறிக்கலாம். கடவுள் போக்குவரவற்ற பூரண னாதலின் "திரை பொரா" என்றார். உரையுணர்வு என்ற விடத்து, வாக்கின் சம்பந்தமான அறிவு, அதாவது சுட்டறிவு, என்று பொருள் கொள்ளுதலுமுண்டு. பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பதற்கரிய பரம்பரனைப் பதி ஞானத்தாலே என்றபடி, இறைவனைப் பதிஞானத்தாலேதானே, உணர்தல் கூடுமென்பார், 'உரையுணர் விறந்து நின்றுணர்வதோர்' என்றார். இறைவன் ஞான வடிவினனாதலின் 'உணர்வே' என்றார். உணர்வதை யுணர்த்தலரிது என்ற கருத்துப் பற்றி, 'உரைக்கும் ஆறுணர்த்தே' என்றார்.*

**391.** **உணர்ந்தமா முனிவர் உம்பரோ டொழிந்தார்**
**உணர்வுக்குந் தெரிவரும் பொருளே**
**இணங்கிலி எல்லா உயிர்கட்கும் உயிரே**
**எனைப்பிறப் பறுக்குமெம் மருந்தே**
**திணிந்ததோர் இருளில் தெளிந்ததூ வெளியே**
**திருப்பெருந் துறையுறை சிவனே**

குணங்கள்தா மில்லா இன்பமே உன்னைக்
குறுகினேற் கினியென்ன குறையே. 4

***உரை :-*** *கலைஞானமுடைய பெரிய முனிவர்களும், வானோர்களும் பிற பெரியோர்களுமாகிய எல்லாருடைய அறிவினாலும் அறிதற்கரிய பரம்பொருளே, ஒப்பில்லாதவனே, உயிர்களெல்லாவற்றிற்கும் உயிரானவனே, என்னுடைய பிறவியைத் தொலைக்கும் எங்கள் அமுதமே, உயிரை நெருங்கிப் பிணித்த ஆணவ இருளில் நீங்கித் தெளிவடைதற் கேதுவாகிய பரிசுத்தமான அருள் வானமே, திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் சிவபெருமானே, முக்குணங்களின் தொடர்பிலாத பேரானந்தமே, உன்னை யடைந்த எனக்கு இனிமேல் என்ன குறையிருக்கிறது? (ஒன்றுமில்லை என்றவாறு).*

***குறிப்பு :-*** *உணர்ந்த என்பதற்குப் பரஞானத்தால் உணர்ந்த என்று பொருள் கொண்டு, பரஞானத்தாலும் முற்றிலும் அறிய முடியாத முதல்வனாதலின், 'உணர்ந்தமா முனிவர்' என்றார். இணங்கு - இணங்குதல், ஒப்பாதல். ஒழிந்தார் - பிறர், எனைப் பிறப்பறுக்கும் என்பதில் எனை என்பதற்கு எத்தனையோ என்று பொருள் கொள்ளுதலுமுண்டு. 'இருளில் தெளிந்த' என்பதற்கு இருளில் நீங்கி யறிந்த என்றும் பொருள் கொள்ளுதலு முண்டு. இருளென்று அறியப்படாத இருளாகவிருத்தலின், ஆணவத்தை, ஓரிருள்' என்றார். குணங்களென்பது சாத்வீகம், இராசதம், தாமதமென்பவை. குணங்களோடுகூடிய இன்பம், தத்துவச் சார்புடையதாய் அழியுந்தன்மை யுடையதாகலின், இறையின்பத்தைக் 'குணங்கள் தாமில்லா இன்ப' மென்றார். பேரின்பமாதலின், 'என்ன குறை'யென்றார்.*

**392.** குறைவிலா நிறைவே கோதிலா அமுதே
ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெறா நீர்போல் சிந்தைவாய்ப் பாயுந்
திருப்பெருந் துறையுறை சிவனே
இறைவனே நீயென் உடலிடங் கொண்டாய்
இனியுன்னை யென்னிரக் கேனே. 5

***உரை :-*** *யார்பாலும் ஒன்றையும் வேண்டாத பூரணப் பொருளே, குற்றமற்ற அருமருந்தே, முடிவில்லாத பிழம்பான சோதி மலையே,*

*என் மனத்தின்கண்ணே மந்திரமாகவும் மந்திரத்தின் பொருளாகவும் விளக்கி நிலைபெற்ற அரசே, கரைகடந்த வெள்ளம் போல் உள்ளத்தே சென்று நிறைகின்ற இன்பமயமான திருப்பெருந்துறைப் பெருமானே, தலைவனே, நீ என்னுடைய உடலையே இடமாகக் கொண்டாய். இனி யானுன்னை யாது வேண்டி யாசிக்கக்கூடும்.*

*மக்களுக்கு ஒழுக்கத்தையும், இறையுணர்ச்சியையும், புண்ணிய பாவக் கொள்கைகளையும், வீடு சுவர்க்கம் முதலான இன்ப நிலைகளையும் விளக்கிக் கூறுவதும், அவற்றிற்கான நெறிகளை விதிப்பதும் வேதம். வேதம் ஞானவடிவம். அதுவே இறைவனாகக் கூறப்படுகின்றது.*

*மறையின் பொருள் - வேதம் விளக்கும் பொருள். மறைக்கும் அதன் பொருளுக்கும் உள்ள சம்பந்தம் சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ள சம்பந்தம். அது நித்தியமானது. இறைவனும் சொல்லும் பொருளும் போல விளங்கி உயிர்களுக்கு உணர்வை நல்குதலின் 'மறைவின் பொருளுமாய்' என்றார். மன் - அரசன்.*

*சிறை - கரை. அணையுமாம். சிறைபெறாநீர் எங்கெல்லாம் பள்ளம் உண்டோ அங்கெல்லாம் விரைந்து பாயும். அது போலத் திருப்பெருந்துறையுறை சிவபெருமான் அன்பு தோன்றுமிடங்களி லெல்லாம் பாய்ந்து தண்ணளி செய்கின்றமையைக் குறித்தார். சிந்தை வயலாகக் கொள்க. சிவபோகம் விளைதற்கு இடம் அதுவாதலின், சிறைபொறா எனப்பாடங் கொண்டு சிறைப்பட்டிருக்க விரும்பாத நீர் என்பாரும் உளர்.*

*இறைவன் - எல்லாவுயிர்களிலும் தங்குதலையுடையவன். ஊனுடம்பு ஆலயமாதலின் 'உடலிடங்கொண்டாய்' என்றார். 'காயமே கோயிலாக' என்பது அப்பர் வாக்கு. வீட்டின் பராமரிப்பு முழுதும் உடையவன் கடமையாக முடிதல்போல, உடலுறும் இன்பத் துன்பங்கள் அனைத்தும் உனக்கே உரியவாயின; ஆதலால் எனக்கு ஒரு குறையுமில்லை; இரக்கப்படுவானாகிய நீ என்னில் வேறாக இருந்தாலன்றோ எனக்கு இதுவேண்டும் இது வேண்டாம் என்று தெரிவிக்கவேண்டும்; நீயே என்னுடலிடங் கொண்ட பிறகு யான் இரக்க வேண்டுவது ஒன்றும் இன்று என்றவாறு.*

***குறிப்பு :-** கொழுஞ்சுடர்க்குன்று என்பது, அயனுமாலும் அடிமுடி யறியாது நின்ற அனற் பிழம்பு என்பாருமுளர். மறை - கலைஞானமாகிய வேதமென்ப. உடலிடத்தே உயிரோடு*

அத்துவிதமாகக் கலந்த பின் பூரண வின்பம் கிடைத்தலின், 'என்னிரக்கேனே' என்றார். கோது - குற்றம்.

**393.** இரந்திரந் துருக என்மனத் துள்ளே
எழுகின்ற சோதியே இமையோர்
சிரந்தனிற் பொலியுங் கமலச்சே வடியாய்
திருப்பெருந் துறையுறை சிவனே
நிரந்தஆ காயம் நீர்நிலம் தீகால்
ஆயவை அல்லையாய் ஆங்கே
கரந்ததோர் உருவே களித்தனன் உன்னைக்
கண்ணுறக் கண்டுகொண் டின்றே. **6**

*__உரை :-__ உன்னுடைய திருவருளை வேண்டி வேண்டி என துள்ளம் உருகுங் காலத்தே அங்கே தோன்றுகின்ற ஒளியே, விண்ணவர் களுடைய சென்னிமீது விளங்குகின்ற சிவந்த தாமரை போன்ற திருவடியை உடையவனே, திருப்பெருந்துறையில் வீற்றிருக்குஞ் சிவபெருமானே, வரிசையாயுள்ள ஐம்பூதங்களாகிய வெளி, வளி, ஒளி, நீர், நிலம் என்பவற்றோடு கலந்து அவையாய், அவையல்லாதவனாய், அவ்விடத்தே மறைந்த அருளுருவுடையானே, இப்பொழுது உன்னைக் கண்ணாரக் கண்டு உள்ளத்திற் கொண்டு மகிழ்ந்தேன்.*

*எறும்பு ஊரக் கல்லும் குழிவதுபோல, உன்னைக் காண விரும்பிப் பலமுறை திருமுன்னர் கண்களில் நீர்வார நின்று விண்ணப்பித்தேன்; அதன் பயனாகத் தேவரீர் திருவுள்ளம் இரங்கி என் மனத்துள் ஞானச்சோதியாக எழுந்தருளினீர்; அதுவே அடியேன்நிலைக்கு விஞ்சிய சிறந்த திருவருளாம் என்பதை 'இரந்திரந்து உருக என் மனத்துள்ளே எழுகின்ற சோதியே' என்ற விளியால் விளக்கியவாறு.*

*இமையோர் - ஒளி படைத்த மேனியையுடைய திருமால் முதலான தேவர்கள். அவர்கள் வந்து வணங்கும்போது இறைவன் திருவடி அவர்கள் தலைமீது விளங்குதலின் 'சிரந்தனில் பொலியும் கமலச்சேவடியாய்' என்றார். அடிகளார்க்கு அகத்தெழு சோதியான இறைவன் தேவர்கட்குச் சிவஞானம் இன்மையால், வழிபடு பொருளாகப் புறத்தே திருவடிசூட்டும் தெய்வமாகக் காட்சி தருகின்றார் என்பதால் அவர்கட்குப் பரிபாகச் சிறப்பின்மை குறிக்கப்பெற்றதாம்.*

*குறிப்பு :- சோதி யென்றது பேரறிவை; நிரந்த - வரிசையான. ஐம்பூதத்திற்கும் ஆதாரமாகிய கலைகளை உருவாகக் கொண்டவனாத லாலும், அவ்வுருவம் எளிதிற் புலனாகாமையாலும், ஆங்கே கரந்த தோருருவே என்றார்; அருட்சார்பு பற்றிய திருவுருவாதலின் ஓருருவே என்றார். 'கண்டுகொண்டு' என்பதில், 'கொண்டு' என்பதைத் துணை வினையாகக் கொள்ளுதலுமுண்டு.*

**394.** **இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்**
**தெழுகின்ற ஞாயிறே போன்று**
**நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்**
**நீயலாற் பிறிதுமற் றின்மை**
**சென்றுசென் றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாந்**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**ஒன்றும் நீயல்லை அன்றியொன் றில்லை**
**யாருன்னை அறியகிற் பாரே.** **7**

*உரை :- இக்காலத்தே எனக்குத் திருவருள் தந்து அறியாமையை நீக்கி மனத்தின் கண்ணே உதிக்கின்ற கதிரவனைப் போலத் தோன்றி நின்ற உனது மெய்யியல்பைச் சுட்டியறியாது அறிந்தேன். உன்னை யன்றி வேறொன்றும் இல்லையாகும்படி எல்லா வற்றிலுங் கலந்து கலந்து நுட்பமாய் நுணுகி நுணுகி எங்கும் ஒரு தன்மையாய் வியாபகமான ஒரு பொருளாகிய திருப்பெருந்துறைப் பெருமானே, காணப்படுகின்ற ஒரு பொருளும் நீ யன்று. உன்னை யல்லாமல் ஒரு பொருளுந் தொழிற்படுவதில்லை. உன்னை யாரறிய வல்லவர்? ஒருவருமில்லை யென்றவாறு.*

*ஆன்ம அறிவு போய்ப்போய் அணுவாகித் தேய்ந்து தேய்ந்து ஒன்றுதலால் ஆம் சிவனே! என் அறியாமையைப் போக்கி, இன்று எனக்கு அருள் சுரந்து, என் உள்ளத்தில் உதிக்கின்ற ஞானசூரியனாக நீ நின்ற தன்மையால் எனது தற்போதம் அழிய அதனால் என் நினைப்பகன்றுபோக, சிவபரம்பொருளாகிய உன்னையன்றி வேறுபொருள் இல்லாமையை நினைந்தேன்; பிரபஞ்சத்தில் சுட்டறிவால் உணரப்படும் பொருள்கள் ஒன்று நீ அல்லை, அப்பொருள்கள் எல்லாவற்றிலும் உயிருக்குயிராகக் கலந்திருந்து நீ இயக்குதலின் உன்னையன்றி ஒரு பொருளும் இல்லை; உன்னை உள்ளவாறு உணர வல்லார் யார்? என்பது கருத்து.*

*புறத்திலே உள்ள இருளைப் போக்கி ஒளியைத் தந்து பொருள்*

விளக்கஞ்செய்கின்ற பௌதிக சூரியன்போல உயிரினிடமாக விளங்கும் அஞ்ஞானத்தையகற்ற ஞானவொளியை நல்கிச் செம்பொருளை உணர்த்துகின்ற சிவசூரியனாக நின்ற நின் தன்மையால் என உவமைக்கும் பொருளுக்கும் பொதுத்தன்மை தோன்றவுரைக்க.

நினைப்பு மறப்பின்வழி நிகழ்வது. மறதியில்லாதபோது நினைப்பேது? எப்போதும் இடைவிடாது எண்ணினேன் என்பார் 'நினைப்பற நினைந்தேன்' என்றார் என்க. நினைப்பற நினைதலைச் சொல்லாமல் சொல்லுதலும், உணராமல் உணர்தலும், நினையாமல் நினைதலும்போலக் கொள்க.

***குறிப்பு :-*** *உயிரினது அறிவின் கண்ணே விளங்குகின்ற இறைவனது ஞான சக்தியை 'ஞாயிறு' என்றார். நினைப்பு மறப்பு மற்ற அதீத நிலையில் அடிகள் நின்றமையால் 'நினைப்பற நினைந் தேன்' என்றார். ஒவ்வொரு பொருளிலும் இறைவன் நுட்பமாய் வியாபித்திருத்தலின் 'சென்று சென்று அணுவாய்' என்றார். 'அணு' என்றது ஒவ்வொரு பொருளுக்கும் அடிப்படையாய் நிற்கும் நிலையே. எல்லாப் பொருளையும் உள்ளடக்கிய இறைவனது வியாபகம், நுட்பத்தினும் நுட்பமாதலின், 'தேய்ந்து தேய்ந் தொன்றாம்' என்றார். இறைவன் இயக்கினாலன்றி ஒரு பொருளும் தோற்றம், நிலை, இறுதி யென்கின்ற தொழிற்படாமையின் 'அன்றி யொன்றில்லை' என்றார். தொழிற்படு முயிர்களுக்கு அப்பாற்பட்டவனாதலின் 'யாருன்னை யறிய கிற்பார்' என்றார்.*

**395.** பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படரொளிப் பரப்பே
நீருறு தீயே நினைவதேல் அரிய
நின்மலா நின்னருள் வெள்ளச்
சீருறு சிந்தை எழுந்ததோர் தேனே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாருற வெனக்கிங் காரய லுள்ளார்
ஆனந்தம் ஆக்குமென் சோதி. **8**

***உரை :-*** *பூ மண்டலமும், அதற்கு மேலுள்ள பதவியாகிய புவனங்களுமாகிய உலகத் தொகுதிகள் முழுவதிலுமுள்ள எல்லாப் பொருள்களுமாய்த் தோன்றி எங்கும் வியாபித்த ஒப்பற்ற பேரறிவின் விரிவே, நீரிலடங்கியுள்ள நெருப்புப் போன்றவனே, மனத்தால் எண்ண முயன்றால் எண்ணுதற்கரிய குற்றமற்றவனே, உன்னுடைய திருவருட்*

*பெருக்கின் செம்மை பொருந்திய (அன்பருடைய) உள்ளத்தின் கண்ணே தோன்றுகின்ற தேன்போன்ற இனிமையனே, திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் பெருமானே, எனக்குப் பேரின்பத்தை விளைக்கின்ற வொளியே, எனக்கு யாருறவு, யாரயலார்? (உறவினருமில்லை, அயலாரு மில்லை என்றவாறு).*

***குறிப்பு :-** இறைவா! நீயே அனைத்தும் அனைவருமாதலைக் காண்கின்றேன் ஆதலால் எனக்கு அயலும் உறவும் ஆவார் யார்? என்பது கருத்து.*

*சித்தும் சடமுமாய எல்லாப்பொருளும் சிவமாகிய உன் வியாபகத்துள் அடங்கியிருப்பதை அறிகின்ற எனக்கு வேண்டுதலும் வேண்டாமையும் இல்லை; ஆகவே, அயலாரும் இல்லை உறவினரும் இல்லை எல்லாம் நீயே என்றவாறாம்.*

*பார் - பூமி. கன்மபூமியாகிய இதிற்றோன்றிப் புண்ணியம் பல செய்தார் மறுமைக்கண் சென்று எய்தும் வைகுந்தம் முதலியன பதங்கள். இத்தகைய பாரையும் பதங்களையும் அடக்கி நிற்பது அண்டம். படரொளிப்பரப்பு - எங்கும் படருகின்ற ஒளியின் பரப்பாகிய சிதாகாயம். பார் முதல் அனைத்துமாய்த் தோன்றி விரிந்து நிற்பது ஒளிப்பரப்பாகிய பரம்பொருளே என்பதாம்.*

*நீருறு தீ - நீர் தோன்றுதற்கு இடமாகிய தீ. 'தீ முரணிய நீரும்' என்பது புறநானூற்றுப் பகுதி. ஆயினும், நீர் தீயினின்றே தோன்றுவதென்பதை உபநிடதம் உரைக்கும். பரப்பு என ஆகாயம் கூறிய அடிகள், இதில் நீரும் தீயுமாகிய இரு வடிவம் கூறினார். நீருறு தீ - நீரின்கண் இருக்கும் தீயாகிய வடவைத்தீ எனலுமாம். வடவைத்தீ பரந்த கடல்நீரை எல்லை கடவாது அடக்குவதுபோல, இறைவனும், இப்பரந்த உலகில் வாழும் உயிர்களைத் தத்தம் எல்லை கடவாத வண்ணம் காத்தலின் இங்ஙனங் கூறினார் எனக் கொள்க. எரியுறுநீர் எனக் கூட்டியுரைப்பர் பழையவுரைகாரர்.*

*நீர் - அருள்வடிவான நீர். தீ - ஒளிவடிவான இறை. உயிர்களை முத்தொழிற்கட்படுத்தி மலமகற்றி உய்யக்கொள்ளுதற்கு இறைவன் அம்மையோடு வெளிவந்தமை தோன்றற்கு நீருறுதீ என்றும், எல்லாவற்றையும் அழித்துத் தம்மகப்படுத்தியமை தோன்ற 'படரொளிப்பரப்பு' என்றும் கூறினர் என்பர் புத்துரைகாரர்.*

**396.** **சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம்**
**ஒருவனே சொல்லுதற் கரிய**

ஆதியே நடுவே அந்தமே பந்தம்
அறுக்கும் ஆனந்தமா கடலே
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்துநின் இணையடி தந்தே. 9

*உரை :- ஒளியாய் விளங்குகின்ற திருமேனி உடையவனே, தோன்றாத ஒரு பொருளானவனே, சொல்லினாற் கூற வொண்ணாத பெருமையுடைய எப்பொருட்கும் முதலிடை முடிவானவனே, பாசக் கட்டினையொழிக்கும் பேரின்பப் பெருங்கடலே, குற்றமற்ற நலம் பொருந்திய திருவருட் குன்றே, திருப்பெருந்துறைப் பெருமானே, நீ குருவாய் வந்து உன் திருவடியிரண்டையும் எனக்கருளிய பின்னர் நீ என்னைக் கைவிட்டுப் போவதற்குரிய முறை யாதென்று சொல்லி யருள்வாயாக. சோதி வழிபாட்டின்போது அடியார்கள் இப்பாடலைப் பாடி மகிழ்கிறார்கள்.*

*குறிப்பு :- சுத்த மாயையிற் கொள்ளுந் திருவருட் சத்தி வடிவம் ஒளி மயமாகலின் "சோதியாய்த் தோன்று" மென்றார். எல்லா மொடுங்கும் இலயத் தத்துவத்திற்கு அதிபதி கடவுளே யாதலின் 'அருவாம் ஒருவனே' என்றார். 'சொல்லுதற்கரிய' என்பதை 'ஒருவனே' என்பதோடும், 'ஆதியே' என்பதோடும் சேர்க்கலாம். கைம்மாறு கருதாத என்பார் 'தீதிலாத' வென்றார். எனக்கருளா யென்பதை 'இணையடி தந்தே' என்பதோடு மாத்திரம் இணைத்து, உன் திருவடியைக் கொடுத்து எனக்கருள் செய்ய வேண்டுமெனப் பொருள் கொள்ளுதலுமுண்டு.*

**397.** **தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்**
**சங்கரா ஆர்கொலோ சதுரர்**
**அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்**
**யாதுநீ பெற்றதொன் றென்பால்**
**சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்**
**யான்இதற் கிலன்ஓர்கைம் மாறே.** **10**

*உரை :- எனதுள்ளத்தையே திருக்கோயிலாகக் கொண்டு வீற்றிருந்தருளிய எமது தலைவனே, திருப்பெருந்துறைப் பெருமானே, உன்னை எனக்குக் கொடுத்தாய், அதற்குப் பதிலாக என்னை நீ யேற்றுக்*

*கொண்டாய், சங்கரனே! நம்மிருவரில் யார் திறமையுடையவர்? முடிவில்லாத பேரின்பத்தை நான் பெற்றேன்; நீ என்னிடத்தில் பெற்றுக் கொண்டது யாது? (ஒன்றுமில்லை). அப்பனே, ஆண்டவனே, எனதுடலைக் கோயிலாகக் கொண்டவனே, இந்த அருட் செய்கைக்கு உனக்கு அளித்தற்குரிய பதிலுபகாரம் எதுவுமில்லாதேன்.*

*'ஈ, தா, கொடு எனும் மூன்றும் முறையே, உயர்ந்தோன் ஒப்போன் இழிந்தோன் இரப்புரை' ஆதலின் தா என்பது ஒத்தநிலையிலுள்ளார் தருவதையும் ஏற்றதையும் உணர்த்தும் இறைவன் என்னோடு ஒத்த நிலையில் வந்து தன்னைத் தந்தான்; அது அவன் கருணைத்திறம் என்றார்.*

*யார்கொலோ சதுரர் - உயர்ந்த பொருளைத் தந்து இழிந்த பொருளைக் கொண்டவரா, இழிந்த பொருளைத் தந்து உயர்ந்த பொருளைப் பெற்றவரா, யார்? இப்பண்டமாற்றில் சாமர்த்தியம் பொருந்தியவர் என்பதாம். கொல் : அசை. ஓகாரம் வினாப் பொருளில் வந்தது.*

***குறிப்பு :- சங்கரன் - சுகங் கொடுப்பவன். உடலின்பா லறிவு சென்றபோதும் பேரின்பமே தோன்றுதலின் 'உடலிடங் கொண்டா' யென்றார். கடவுளைப் பார்க்கிலுந் தன்னைச் சமர்த்தனாகக் கூறியது இகழ்ச்சிபோற் புகழ்ச்சி.***

***திருச்சிற்றம்பலம்***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 23. செத்திலாப்பத்து*

*(செத்திலாமையைக் கூறும் பத்துப்பாடல்களின் தொகுதி)*

--------

***சிவானந்தம் அளவறுக் கொணாமை***

***எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**398.** பொய்யனேன் அகம்நெகப் புகுந்(து) அமுதூறும்
புதும லர்க்கழ லிணையடி பிரிந்துங்
கையனேன் இன்னுஞ் செத்திலேன் அந்தோ
விழித்திருந் துள்ளக் கருத்தினை இழந்தேன்
ஐயனே அரசே அருட்பெருங் கடலே
அத்தனே அயன்மாற் கறியொண்ணாச்
செய்யமே னியனே செய்வகை அறியேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 1

***உரைநடை :-*** *ஐயனே, அரசே..... செய்ய மேனியனே, திருப்பெருந்துறை மேவிய சிவனே, பொய்யனேன்...... கருத்தினையிழந்தேன். செய்வகை யறியேன்.*

***உரை :-*** *தலைவனே, மன்னனே, பெருங்கருணைக் கடலே, அப்பனே, பிரமனுந் திருமாலுந் தேடிக்காணமுடியாத சிவந்த திருமேனியை உடையவனே, திருப்பெருந்துறையில் விரும்பி யெழுந்தருளிய சிவபெருமானே, பொய்யனாகிய என்னுடைய உள்ளம் நெகிழும்படியாக அகத்துட்புகுந்த, ஞானவமுதம் சுரத்தற் கேதுவாகிய அன்றலர்ந்த தாமரையை ஒத்தனவாய் வீரக்கழல்களணிந்துள்ள இரண்டு திருவடிகளையும் யான் பிரிய நேர்ந்தும் வஞ்சகமுடைய யான் இது வரை சாகாமலிருந்தேன். ஐயோ! கண் திறந்திருந்தும் மனத்தில் விரும்பிய எண்ணத்தை நிறைவேற்றாது கை விட்டேன். இனி அதனை அடைவதற்குச் செய்யவேண்டிய முறையையும் அறிய மாட்டேன்.*

*உலகோடு ஒட்டி வாழும்போது என்மனம் கல்லாயிருந்தது; நீ புகுந்து இடமாக்கிக் கொண்டதும் நெக்குருகியது என்பார் 'அகநெகப் புகுந்து' என்றார். தீயை அணுகியவுடன் வெண்ணெய் உருகுவது போல நீ புகுந்தவுடன் அகம் நெக்கதென்க.*

*இறைவன் திருவடிகள் நிறத்தாலும், மணத்தாலும், சுவையாலும், மென்மையாலும் தாமரை மலர்களை ஒத்தன. அடைந்தார் துன்பமகற்றும் வீரத்தின் அறிகுறியாகக் கழலணிந்தன. அத்தகைய திருவடிப் பெற்றார் ஒருக்காலும் பிரிய ஒண்ணாது. அங்ஙனமிருந்தும், திருவடிப்பெருமை அறியாத கீழ்மகனாதலின் பிரிந்தேன்; பிரிந்தும் செத்திலேன் என்று இரங்குகின்றார். அந்தோ: இரக்கக்குறிப்பு இடைச்சொல்.*

*உலகில் அனைவரும் உறக்கத்தில் புறத்தேயுள்ள பொருளை இழப்பர்; நானோ விழித்திருந்து உள்ளத்திலுள்ள கருத்துப் பொருளாகிய இறையருளை இழந்தேன் என்பதை 'விழித்து இருந்து உள்ளக்கருத்தினை இழந்தேன்' என்பதால் விளக்கியவாறு காண்க.*

*உள்ளதை இழந்தமையால் இனி செய்வகை அறியேன் என்பதாம். விழித்திருந்தும் கைப்பொருள் இழந்தவன்போல, எனது உள்ளம் அதுவாய்ப்போனவண்ணம் காணேனே என்று உரைக்கும் பழையவுரை.*

***குறிப்பு :-** பொய்யனேன் - நிலையாத வற்றிற் பற்றுடையேன், 'புகுந்து அமுதூறு' மென்பது 'புகுந்தமுதூறு' மென்றாயிற்று. புகுந்து அமுதூறுவிக்கு மென்றுங் கொள்ளலாம். பிரிவாற்றாமையால் இறவாமையின் 'கையனேன்' என்றார். கையனேன் - வஞ்சக முடையேன்; சிறுமையேன். இன்னும் - பிரிந்து நாளாகியும். விழித்திருந்தும் - கண்ணாலே இறைவனைக் காணப் பெற்றிருந்தும். உள்ளக் கருத்து - உடனே வீடடையும் எண்ணம்.*

**399.** **புற்றுமாய் மரமாய்ப் புனல்காலே**
**உண்டியாய் அண்ட வாணரும் பிறரும்**
**வற்றி யாரும்நின் மலரடி காணா**
**மன்ன என்னையோர் வார்த்தையுட் படுத்துப்**
**பற்றினாய் பதையேன் மனம்மிக உருகேன்**
**பரிகி லேன்பரி யாவுடல் தன்னைச்**
**செற்றிலேன் இன்னுந் திரிதரு கின்றேன்**
**திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.** **2**

***உரைநடை :-** 'திருப்பெருந்துறை மேவிய சிவனே' என்பதை முதலிற் கொள்க. அண்டவாணரும், பிறரும், யாரும் புற்றுமாய்க்... காணா.*

***உரை :-*** *திருப்பெருந்துறையில் வீற்றிருந்தருளிய சிவபெருமானே, விண்ணுலகில் வாழ்வாரும், ஏனையோருமாகிய (வால்மீகி போன்ற தவத்தினர்) எல்லாரும் தவமியற்றும் நிலையில் தம்மேல் புற்றுவளரப் பெற்று, புற்றாகியும், மரம் வளரப்பெற்று மர வடிவாகியும், நீரையும், காற்றையுமே உணவாகப் பெற்றும், உடல் உலர்ந்து போயும், உனது திருவடியைக் காணப்பெறாது நிற்குந்தன்மைத்தான அரசனே! அடியேனை ஒரு சொல்லிலகப்படுத்தி யாட்கொண்டாய். அப்படிப்பட்ட உன் பொருட்டு நெஞ்சந் துடிக்கமாட்டேன். உள்ளம் மிகுதியாக உருகமாட்டேன். பிரிவாற்றாமையா லிறக்க மாட்டேன். தானே இறந்து விழாத உடம்பை வெட்டி யொழிக்க மாட்டேன். இன்னமு முலகில் அலைந்து திரிகின்றேன். இது எவ்வளவு இழிவு!*

*ஓர் வார்த்தை - சீபஞ்சாக்கரமும் பிரணவ பஞ்சாக்கரமுமாகிய ஒரே வார்த்தை. பஞ்சாக்கரத்துள் தலைவனும், தலைவியும், உயிரும், தடையும், தடைநீக்கும் உபகாரமும் இருத்தலால் அதனையறிவித்து என்னைப் புறத்தலையாது போற்றி, அதிலேயே நிற்கப் பண்ணினான் என்பார் 'ஓர் வார்த்தையுட்படுத்து' என்றார்.*

*வலையிட்டு விலங்கைப் பிடிப்பார்போல ஓர் வார்த்தையாகிற வலையுட்படுத்தி என்னைப் பிடித்தாய் என்கின்றார். தான் இறை பணியாகிற சரியையாதிகளில் பற்றுக்கொள்ளாது உண்டதே உண்டும் உடுத்ததேயுடுத்தும் கண்டதேகண்டும் கதியறியாக் கசடனாகச் சுற்றித் திரிந்தமையை எண்ணி இரங்கியமை குறிக்கப் பெறுகின்றது 'பற்றினாய்' என்ற சொல்லாட்சியால்.*

*சிவபெருமான் ஆட்கொண்டும் மனம் பதைத்தலும் உருகுதலும் பரிதலும் செய்யாது ஊர் சுற்றி வருதலின் சிவபோகந் துய்க்க வேண்டிய தான் அது தம்மறிவளவால் அளவறுக்க ஒண்ணாதிருக்கின்ற தன்மையை அறிவித்தலின் இத்திருப்பாடல் பதிகக் கருத்து விளங்க நிற்றல் காண்க.*

***குறிப்பு :-*** *'மரமாய்' என்பதற்கு மரம்போல் அசைவற்று நின்று என்று பொருள் கொள்வாரு முளர். விண்ணுலகினர், மண்ணுலகில் வந்து இறைவனைக் காணத் தவம் செய்தமை பல புராணங்களில் காண்க. 'ஓர் வார்த்தை' என்றது பிரணவம். பரிகிலேன் - அன்பு செய்யேன் என்றலுமுண்டு.*

**400.** புலைய னேனையும் பொருளென நினைந்துன்
அருள்பு ரிந்தனை புரிதலுங் களித்துத்

தலையி னால்நடந் தேன்விடைப் பாகா
சங்கரா எண்ணில் வானவர்க் கெல்லாம்
நிலைய னேஅலை நீர்விட முண்ட
நித்த னேஅடை யார்புர மெரித்த
சிலைய னேயெனைச் செத்திடப் பணியாய்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 3

***உரைநடை :-*** *விடைப் பாகா சங்கரா.... சிலையனே, திருப் பெருந்துறை மேவிய சிவனே, புலையனேன்..... நடந்தேன், எனைச் செத்திடப்பணியாய்.*

***உரை :-*** *காளை வாகன முடையானே, சங்கரனே, அளவற்ற விண்ணவர்களுக் கெல்லா மாதாரமானவனே, கடலிலெழுந்த நஞ்சினை அமுது செய்த அழியாத் தன்மையனே, தம்மை யடையாத அசுரர்களது திரிபுரத்தை யெரித்த மலைவில்லானே, திருப்பெருந் துறையில் விரும்பியமர்ந்த சிவபெருமானே புலையனாகிய என்னையும் ஒரு பொருளாக மதித்து உன்னுடைய திருவருளை விரும்பி அளித்தலும், செருக்குக்கொண்டு மகிழ்ந்து தலையாலே நடந்தேன். என்னை விரைவில் இறக்கும்படி செய்யவேண்டும்.*

*இறைவா! ஒன்றற்கும் பற்றாத கீழ்மகனாகிய என்னையும் ஒரு பொருளாக எண்ணி நீ அருள்செய்தாய்; நான் செருக்குற்றுத் தலைகீழாக நடந்தேன்; அதலால் அவ்வகங்காரமாகிய நான் என்பது சாகக்கிருவளம்பற்று என்பது கருத்து.*

*விடை - இளமையாலும், வலியாலும் தருக்கியது. அதனை அடக்கியாளுகிற உனக்கு அடியேனுடைய செருக்கொழிக்கல் முடியாததொரு செயல் அன்று என்று குறிப்பிப்பார் 'விடைப்பாகா' என்றார்.*

*தருக்கொழித்தல் அளவினதன்று உம் திருவருள்; அடியேன் என்றும் மாறாத இன்பநிலையில் இருக்கச் செய்வதும் கடமையாகும் என்பார் சுகத்தைச் செய்பவனே என்னும் பொருளைத் தரும் 'சங்கரா' என்ற சொல்லால் விளித்தார்.*

*அடையார் - பகைவர். இறைவன் மேருமலையை வில்லாகக் கொண்டு முப்புரங்களை எரித்தமையின் 'புரமெரித்த சிலையனே' என்றார்.*

*புலையன் - புலைத்தன்மையன்; கீழ்மகன். குணத்தாற்கீழான தன்னைக் குறித்துக் கொண்டார். உம்மை இழிவு சிறப்பும்மை. பொருள்*

- போற்றிக் கொள்ளத்தக்கதொரு பொருள். அடியேன் இழிந்தவன். உன் அருள் மிகவுயர்ந்தது. என் தரம்பாராதே உன் தகுதி நோக்கிப் பேரருளைப் புரிந்தனை; ஆயினும் அருளைப் பெற்று அடங்கியிராதே தருக்கினேன் என்பார் 'அருள்புரிந்தனை; புரிதலும் களித்துத் தலையினால் நடந்தேன்' என்றார்.

தலையால் நடத்தல் : 'தலைகீழாக நடக்கிறான்' என்பதோர் வழக்குப் போல்வது. அஃதாவது நடத்தற்குரிய காலால் நடவாது, வணங்குதற்குவைத்த தலையால் நடத்தலாம். இங்ஙனங் கூறியது செருக்கு முறைமாறி நடக்கச்செய்கிறது என்பதாம்.

***குறிப்பு :-*** ***தலையினால் நடந்தேன் - முறைக்கு மாறாக ஒழுகினேன். நிலை - ஆதாரம். சிலை - வில், 'செத்திட' என்பதில் இட என்னுந் துணைவினை விரைவைக் குறித்து நின்றது. பணித்தல் - செய்வித்தல், கட்டளையிடுதல்.***

**401.** **அன்ப ராகிமற் றருந்தவம் முயல்வார்**
**அயனும் மாலுமற் றழலுறு மெழுகாம்**
**என்ப ராய்நினை வாா்எ னைப்பலர்**
**நிற்க இங்கெனை எற்றினுக் காண்டாய்**
**வன்ப ராய்முரு டொக்கும்என் சிந்தை**
**மரக்கண் என்செவி இரும்பினும் வலிது**
**தென்ப ராய்த்துறை யாய்சிவ லோகா**
**திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.** **4**

***உரைநடை :-*** *கடை யிரண்டடியும் முதலிற் கொள்க.*

***உரை :-*** ***அழகிய திருப்பராய்த்துறைத் திருப்பதியுடையவனே, சிவலோகனே, திருப்பெருந்துறைப் பெருமானே, பிரமனுந் திருமாலும் உன்பாற் பேரன்புடையவர்களாகி உன்னருளைப் பெறுதற்குச் செயற்கரிய தவத்தைச் செய்கின்றார்கள். இன்னும் நெருப்பி லிட்ட மெழுகுபோல உருகும் உள்ளத்தவராய்த் (தவத்தினால் தசை நீங்கப் பெற்று) எலும்பு வடிவராய் உன்னைத் தியானிக்கின்றவர்கள் எத்தனையோ பலர் உன்னருளிற்குரியவராய் நிற்கவும், இவ்வுலகின்கண் என்னை நீ எதற்காக ஆட்கொண்டாய்? என்னுடைய மனமானது, வலிய பராய்மரத்தினுடைய விறகினைப் போல்வது என்னுடைய கண் மரத்தினாலானது. என்னுடைய செவி இரும்பைப் பார்க்கிலும் வலியது.***

*கசிந்து உருகும் மெய்யன்பர்களும் தவத்தோரும் பதவியிலுள்ள தேவர்கள் பலரும் உன் அருளைவேண்டிக் கடுந்தவம் புரிந்தும் கிடக்க, உன்னை நினைக்காத மடநெஞ்சும், தாழாத சென்னியும், காணாத கண்ணும், புகழைக் கேளாச் செவியும் படைத்த என்னை ஏன் ஆட்கொண்டாய் என்பது கருத்து.*

*அன்பராதல் பற்பல பிறவிகளிற்செய்த சிவபுண்ணியச் சிறப்பால் விளைவது. அன்பு உயிரின் குணமாயினும் அது கமரில் உக்க பால் போலாது வாயிற்சிந்திய அமுதம் போலவும், அடியார்க்கிட்ட அன்னம் போலவும் பயன்படும் வகையில் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சுடைமை என்க. அத்தகைய சிவபத்தி சார்பாற் கெடாது மாறாது நிலைக்க வேண்டுமாயின் அதற்குரிய பதிபுண்ணியஞ்செய்தலாகிய தவம் வேண்டும். அத்தவமும் வருந்திச் செயற்பாலதொன்றன்றாய்த் 'தவமும் தவமுடையார்க்காகும் அவமதனை அஃதிலார் மேற்கொள்வது' என்றவாறு முடியும் இயல்பினதாதலின் அதனை முயலுதற்கருமை நோக்கி 'அருந்தவம் முயல்வார்' என்றார்.*

*முயல்வாரும், அயனும் மாலும் நினைவாருமாகிய எனைப் பலர் நிற்க என முடிக்க. சிலர் அருந்தவமுயல்வாராகிய அயனும் மாலும் எனக் கூட்டுவர். வற்றல் மரம் தளிர்க்காதவாறு போல அயனும் மாலும் நிஷ்காமியப்பயனைக் கருதித் தவம் செய்யார் என்பது உறுதியாதலின் அங்ஙனம் கூட்டலாகாது என்க.*

*சிந்தை முருடொக்கும், கண் மரக்கண், செவி இரும்பினும் வலிது எனக்கூட்டுக. பராய் முருடு - உலர்ந்த கட்டை. இறைவனடிக்கண் அன்பகத்தில்லாவுயிர் வாழ்க்கை வற்றல் மரம் தளிர்த்தாற்போலும் ஆதலின் இங்ஙனம் கூறினார். பராய் மரத்தின் கணுக்கட்டை என்பாரும் உளர். முருடு உருளுவதோடு தளிர்க்காமைபோல என்மனம் ஒன்றினும் நிலைபெறாது உருண்டு, தனக்கும் தலைவனுக்கும் பயன்படாதது என்பார் சிந்தையைப் பராய் முருட்டுக்கு உவமித்தார்.*

*மரக்கண் - மரத்திலுள்ள கணு. அது கண்போல்வதாயினும் காணுந்தன்மையில்லாதது; என்கண்ணும் அத்தன்மையது என்பதாம்.*

*இவ்வண்ணம் என் இந்திரியங்களும் மனமும் திருவடியன்பிற் கேலாதனவாயிருக்க ஏன் என்னை ஆண்டாய்; ஆட்கொண்டும் அன்பு செய்யாமையால் யான் செத்திலேன் என்று பதிகத்தோடியைத்துப் பொருள் கொள்க.*

***குறிப்பு :- எனை - எத்துணையோ. பராய் - கடினமான ஒரு மரம். முருடு - கட்டை, விறகு. கடினமாய்க் காய்ந்த கட்டையில், நீர்***

வறண்டு போயிருக்கு மாதலின், உருக்கமில்லாத நெஞ்சிற்கு அது உவமையாயிற்று. கண்ணிற்கு மரமுவமையானதும் அக்கருத்துப் பற்றியே. இரும்பு துளைக்கப்படுதல் அருமை போலச் செவியும் நல்லுபதேசத்தால் தோட்கப்படாத தென்பார். “செவி இரும்பினும் வலிது” என்றார். இறைவனது உபதேச மொழி செவியில் தக்கவாறு புகுந்திருந்தால், தான் அவனைப் பிரிந்திருக்க இடமில்லை யென்பது கருத்து. தென் - அழகிய, தெற்கின்கண் உள்ள.

402. ஆட்டுத் தேவர்தம் விதியொழித் தன்பால்
ஐயனே என்றுன் அருள்வழி யிருப்பேன்
நாட்டுத் தேவரும் நாடரும் பொருளே
நாத னேஉனைப் பிரிவுறா அருளைக்
காட்டித் தேவநின் கழலிணை காட்டிக்
காயமா யத்தைக் கழித்தருள் செய்யாய்
சேட்டைத் தேவர்தந் தேவர் பிரானே
திருப் பெருந்துறை மேவிய சிவனே. 5

***உரைநடை :-*** *சேட்டைத் தேவர் தந் தேவர் பிரானே, திருப்பெருந் துறை மேவிய சிவனே, ஐயனே, என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *எல்லாவற்றையுந் தொழிற்படுத்துங் காரணேசுரர் களுக்குந் தலைவரான பெருமானே, திருப்பெருந்துறையில் வீற்றிருந்தருளிய பெருமானே, தலைவனே, வினைக்கேற்ப என்னை ஆட்டுவிக்கின்ற தேவர்களது கட்டளையின் நீங்கி மெய்யன்போடு, உனது திருவருள் வழியின்கண்ணே எப்போது இருக்கப்பெறுவேன். உலகிலுள்ள தேவர் போன்ற பெருமையுடையாரும், தேடி அறிதற்கரிய பரம்பொருளே, முதல்வனே, ஒளியானே, உன்னைப் பிரியாமைக் கேதுவாகிய திருவருளை எனக்குக் காண்பித்து, கழலணிந்த உனது திருவடிகளிரண்டையுங் காண்பித்தருளி, இந்த உடம்பாகிய சூழ்ச்சி வலையை ஒழித்தருள்க.*

*ஆட்டுத் தேவர் - ஆடுபோலத் தமக்கென்று தனித்ததோர் அறிவின்றி ஒன்றன்வழியே ஒன்று சென்று மாயும் தன்மையையுடைய தேவர்கள். ஆடுபோன்ற தேவர் ஆட்டுத்தேவர் எனலுமாம். ஆட்டு தலையையுடைய தேவர் எனின் சிறுவிதியாகிய தக்கன்பெற்ற ஆட்டுத் தலையையுடைய தேவர் என்க; என்றது தக்கன் முதலான பிரமர்களையும் உபபிரமர்களையுமாம். அவர்கள்தம் விதியாவது படைப்புக் காலத்து இவ்வுயிர் இத்தகைய துன்ப இன்பங்களடைக*

*என விதித்த நியதி. இறைவனிடம் அடியேன் இடையீடில்லா அன்பு பூண்டமையால் விதிவிலகிற்று மார்க்கண்டேயரைப்போல என்பது கருத்து. ஐயன் - தலைவன். உயிர் சிவனைத் தலைவனாக என்று உணர்ந்ததோ அன்றே பரிபாகமுற்றது. அதன் பரிபாகம் கண்டு இறைவனருள் பள்ளம் புகு புனல்போல் அவன்மீது பாயும்; அருள் வெள்ளத்தில் அகப்பட்டுப் புணைபோல எனக்கென்று யாதொரு சொல்லும் செயலும் எண்ணமுமின்றிக் கிடப்பேன் என்பார் 'ஐயனே! என்று உன் அருள்வழி இருப்பேன்' என்றார். சிவனே என்று கிடக்கிறேன் என்ற உலகவழக்கும் உன்னுக.*

*நாட்டுத்தேவர் என்பதற்குப் பூசுரர்களாகிய அந்தணர் என்றும், பிரமாண்டம் வைகுந்தம் முதலான பதவிகளிலிருக்கும் பிரமனாதியர் என்றும் பொருள் கூறுவர்.*

*சேட்டை - சேஷ்டை என்பதன் திரிபாகிய வடசொல். தாமே பெரியர் எனத் தருக்கிச் சிறுகுறும்புசெய்யும் தேவர்கள் சேட்டைத் தேவர்கள். அவர்கள் பூதங்கள் பசாசங்கள் முதலிய கணத்தோர். அவர்கள்தம் தேவர் - அவர்கள் தலைவர்களாகிய கணநாதர் முதலியவர். அவர்கட்கும் பிரான் என்பதாம்.*

***குறிப்பு :-** 'ஆட்டுத் தேவர்' என்பதற்கு விளையாட்டுத் தேவர், பொய்த் தேவர் என்ற பொருளுமுண்டு. நாட்டுத் தேவரென்பார், நிலத்தேவர். அவரை வேதியர்கள் என்பதுமுண்டு. 'நாடு' என்பதற்கு உலகமெனப் பொருள் கொண்டு, 'நாட்டுத் தேவர்' என்பதற்கு புவனாதிபதிகளும் என்றும் பொருள் கொள்ளுதலுமுண்டு. காயமாயம் - வஞ்சனையான உடல். மாயம் - தந்திரம், சூழ்ச்சி, நிலையாத் தோற்றம், 'சேட்டை', என்பதை, சேடு, ஐ எனப் பிரித்துப் பெருமையும் தலைமையுமுடைய எனப் பொருள் கோடலுமுண்டு. சேஷ்டை என்பதன் திரிபாகிய வடசொல்.*

**403.** **அறுக்கி லேன்உடல் துணிபடத் தீப்புக்**
**கார்கி லேன்திரு வருள்வகை யறியேன்**
**பொறுக்கி லேன்உடல் போக்கிடங் காணேன்**
**போற்றி போற்றியென் போர்விடைப் பாகா**
**இறக்கி லேன்உனைப் பிரிந்தினி திருக்க**
**என்செய் கேன்இது செய்களன் றருளாய்**
**சிறைக்க ணேபுனல் நிலவிய வயல்சூழ்**
**திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.** **6**

***உரைநடை :-*** *'சிறைக்கனே... சிவனே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *வரப்புவரை நீர் நிறைந்துலவும் வயல்களாற் சூழப்பெற்ற திருப்பெருந்துறையில் வீற்றிருந்தருளிய பெருமானே, எனது உடம்பானது துண்டுதுண்டாய்ப் போம்படி, அதனை வெட்ட மாட்டேன். (எரிகின்ற) தீயிற் புகுந்து (இறக்குமாறு) அதன்கண் தங்க மாட்டேன். உனது திருவருட் செயல் முறையையும் அறியமாட்டேன். உடம்பையும் தாங்கமாட்டாது வருந்துகிறேன். புகலிடம் ஒன்றும் அறியேன். காக்க, காக்க என்றுடையார்க்கு உரிமையாக உள்ள காளையூர்தியானே! சாகமாட்டாத யான், உன்னைப் பிரிந்தும் நன்றாக இருப்பதற்கு என்ன செய்யக்கூடும்? இன்னதைச் செய்க வென்று நீ கட்டளையிட்டருள்வாயாக.*

*சிவபெருமானே! உன்னைப் பிரிந்து ஒருகணமும் இரேன்; ஆதலால், சித்திரவதை செய்து கொண்டாயினும் செத்திலேன்; போக்கிடம் காணேன்; என்ன செய்வேன்; இது செய் என்று தேவரீரே பணித்தருள வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறார்.*

*உடல் துணிபட அறுக்கிலேன் எனக் கூட்டுக. அங்கியாகிய உடல் துண்டுதுண்டாகும்படி அறுத்துக்கொண்டாயினும் இறந்திலேன் என்றவாறு. சூரபன்மன் யாகத்தீமுன் தன் தசைநார்களையும் உறுப்புக்களையும் ஒவ்வொன்றாகவும் சிறிது சிறிதாகவும் வெட்டிக்கொண்டு உன் திருவருளுக்கு இலக்காயினாற் போன்று ஆவதற்கு எனக்குத் துணிவு இல்லை என்பதுமாம்.*

*ஆனால், ஒன்று மட்டும் உண்மை; உன்னைப் பிரிந்து இவ்வுடலைப் பொறுத்திருக்க மாட்டேன்; எங்கேயாவது போக்கி விடலாமோ எனின், அதற்குரிய இடமும் அறியேன்; என்ன செய்வேன் என்று மனம் அலைபாய மேன்மேலும் சிவானுபவம் அளவறுக்க ஒண்ணாமையால் அதனைப் பிரிந்ததால் வருந்துதல் காண்க.*

***குறிப்பு :-*** *துணி - துண்டு. ஆர்கிலேன் - தங்கும் ஆற்றல் இல்லாதேன். 'போற்றி', என்பதற்கு வணக்கமெனப் பொருள் கொள்ளுதலுமுண்டு. உனைப் பிரிந்து இனிதிருக்க முடியாதென்ற கருத்துப் பற்றி, 'என் செய்கேன்' என்றார். அப்படி இருத்தல் கூடுமாயின், அதுவும் நீதான் உணர்த்த வேண்டுமென்றார்.*

**404.** **மாய னேமறி கடல்விடம் உண்ட**
**வான வாமணி கண்டத்தெம் அமுதே**

நாயி னேன்உனை நினையவும் மாட்டேன்
நமச்சி வாயஎன் றுன்னடி பணியாப்
பேயன் ஆகிலும் பெருநெறி காட்டாய்
பிறைகு லாஞ்சடைப் பிஞ்ஞக னேயோ
சேய னாகிநின் றலறுவ தழகோ
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 7

***உரைநடை :-*** *மாயனே... அமுதே.... பிறைகுலாஞ்.... னேயோ, திருப்பெரு.... சிவனே. சேயனாகி நின்றலறுவதழகோ. நாயி னேன்..... காட்டாய், எனக் கொள்க.*

***உரை :-*** *மாயையைக் காரியப்படுத்தும் மாயனே! அலைகள் மடங்கி வீழ்கின்ற கடலி லெழுந்த நஞ்சை அருந்தின தேவனே, நீல மணி போன்ற நஞ்சமைந்த திருக்கழுத்துடையானே, எங்கள் அருமருந்தே, இளஞ் சந்திரன் வாழுகின்ற சடையொடு தலைக்கோல மணிந்தவனே, ஓலம், திருப்பெருந்துறை வீற்றிருந்த சிவபெருமானே, உனக்குத் தூரத்தேனாகி நின்று உன்னடியானாகிய நான் கதறுவது பொருத்த மாகுமோ? நாய்போன்ற யான் உன்னைத் தக்க முறையில் எண்ணவு மாட்டேனாய், சிவனே உனக்கு வணக்கமென்று உன் திருவடியிற் பணிதல் செய்ய மாட்டாத பேய்த்தன்மையேனாகிலும், எனக்கு உனது மாண்பமைந்த ஞானநெறியைக் காட்டியருள்வாய்.*

*மாயனே - மாயையையுடையவனே. மாயை சுத்தம் அசுத்தம் பிரகிருதி என மூவகைப்படுவதாய். சிவசத்தி சங்கற்ப ரூப சந்நிதியினின்றும் வாக்கு நான்கையும், காரண தத்துவம் ஐந்தையும் போக்கிய தத்துவமிருபத்து நாலையும் தோற்றுவித்தலின் இறைவன் மாயன் என விளிக்கப்பெறுகின்றார்.*

*நாயின் தன்மை நன்றி மறவாமை. அங்ஙனமாகவும் நான் உன்னை நினையவும்மாட்டேன் என்றமையால் நாய்க்குணமும் இல்லாத கடைப்பட்டவனென்று கருதவைத்தவாறாம். உயர்ந்த உணவளித்துக் காப்பாற்றினாலும் இழிந்த உணவையும் விரும்பிச் செல்லும் நாய்போல அருளூட்டிக் காக்கவும் புலனூண் விரும்பிப் புறம்போன தன்மையால் நாயினேன் என்றார் எனலுமாம்.*

*சிவப்பணி செய்யும்போது திருவைந்தெழுத்தைத் தியானித்துச் செய்வதே உத்தமம். ஆதலின் திருவைந்தெழுத்தை நெஞ்சமுழுத்தி அடி பணிய வேண்டிய அடியேன் அங்ஙனம் செய்யேன் ஆதலால் பேயன்னவனாயினன் என்றதாம்.*

*பேயன் - பேய்த்தன்மை உடையவன். பேய் நன்றி செய்தாரையே வருத்தும் இயல்பினது; பிறரைப் பற்றிநின்று அவர் தம் அறிவைத் தமதாக்கி மயக்குவது. அதுபோல அடியேனும் சிவன்செய்த நன்றியை மறந்து பிறரை வருத்துமியல்பினன் ஆயினேன் என்றவாறாம். தற்போதமாகிய பேய்பிடித்த யான் என்பது பழையவுரை.*

***குறிப்பு :-** அருள் புரிந்தபின், உடன் அழைத்துச் செல்லாது, உலகிலே தம்மைவிட்டுச் சென்ற தந்திரத்தை நினைந்து, அடிகள் 'மாயனே' என்றார். அடைக்கலம் புகுந்தாரை அபாயநிலையிற் காப்பாற்றுவானென்பார். 'மணிகண்டத் தெம்மமுதே' பிறை குலாஞ் சடைப் பிஞ்ஞகனேயோ' என்றனர். திருவைந்தெழுத்து, வாசனாமல மொழிக்குங் கருவி யென்பது, சிவஞான போத ஒன்பதாஞ் சூத்திரத் தாலினிது விளங்கும். உலகப் பற்றுடைமையாற் றம்மை அடிகள் 'பேயன்' என்றார்.*

**405.** போது சேரயன் பொருகடற் கிடந்தோன்
புரந்த ராதிகள் நிற்கமற் றென்னைக்
கோது மாட்டிநின் குரைகழல் காட்டிக்
குறிக்கொள் கென்றுநின் தொண்டரிற் கூட்டாய்
யாது செய்வதென் றிருந்தனன் மருந்தே
அடியனேன் இடர்ப் படுவதும் இனிதோ
சீத வார்புனல் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. **8**

***உரைநடை :-** சீத..... சிவனே என்பதை, முதலிற் கொள்க. அடுத்தபடி, 'யாது செய்வது.... இனிதோ' என்பதற்குப் பொருள் கூறுக. பின், பிற அடிகட்குப் பொருள் கூறுக.*

***உரை :-** குளிர்ச்சியுள்ள, நிறை நீர் பொருந்திய வயல் சூழ்ந்த திருப்பெருந்துறையிற் றங்கியருளிய சிவபெருமானே, அமுதமே, உன்னைப் பிரிந்து, என்ன செய்வது என்றெண்ணி வருந்தி யிருந்தேன். உன்னடியானாகிய யான் துயரப்படுவது நல்லதாகுமா? மலரிலுறை கின்ற பிரமனும், அலைகள் மோதுகின்ற திருப்பாற் கடலில் பள்ளிகொண்ட பெருமானும், இந்திரன் முதலிய தேவர்களும், உன் அருள்நாடி நிற்பினும், (என்னை யாட்கொள்ளவந்த நீ) எனது குற்றங்களை யொழித்து, வீரக்கழல் ஒலிக்கின்ற உனது திருவடிகளைக் காட்டியருளி, காட்டிய குறிப்பில் நிற்கவென்று பணித்து, உனது அன்பரோடு என்னைச் சேர்ப்பாயாக.*

*குறிப்பு :- கோது - குற்றம். மாட்டி - மாள்வித்து, தொலைத்து. 'குறிக்கொள்க' என்பதற்கு, வீடடையும் நோக்கத்தைக் கைக்கொள்ளுக வெனப் பொருளுரைத்தலு முண்டு. மருந்து - அமுதம். ஆர் புனல் - நிறைந்த நீர். "வார்புனல்" எனக்கொண்டு, பெரும் புனலென்றலு முண்டு.*

**406.** ஞாலம் இந்திரன் நான்முகன் வானவர்
நிற்க மற்றெனை நயந்தினி தாண்டாய்
காலன் ஆர்உயிர் கொண்டபூங் கழலாய்
கங்கை யாய்அங்கி தங்கிய கையாய்
மாலும் ஓலமிட் டலறும் அம் மலர்க்கே
மரக்க ணேனையும் வந்திடப் பணியாய்
சேலும் நீலமும் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. **9**

***உரைநடை** :- சேலும் நீலமும்.... சிவனே, காலன் ஆருயிர்.... கையாய், என்னுமடிகளை முதலிற் கொள்க.*

***உரை** :- சேல்மீன்களும், நீலநிறமுடைய குவளைப் பூக்களும் பொருந்திய வயல்கள் சூழ்ந்துள்ள திருப்பெருந் துறையிற் றங்கி யருளிய சிவபெருமானே, இயமனது அரிய உயிரை வவ்விய அழகிய திருவடி யுடையானே, கங்கையைத் தலையிற் றரித்தவனே, நெருப்பு அமர்ந்த திருக்கரத்தானே, உலகத்துயர்ந்தோர், இந்திரன், பிரமன், விண்ணவர் என்று மிவரெல்லாம் உனதருளைப் பெறாது நிற்கவும், விரும்பி என்னை யாட்கொண்டாய், திருமால் காணப் பெறாது ஓலமிட்டுச் சரண்புகும் அப்பெற்றித்தாய திருவடிக் கமலங்கட்கே மரத்தாற் செய்தாற்போன்ற கண்ணையுடைய அடியேனையும் வந்து சேரும் படியாக அருள் புரிவாயாக. திருவடியைக் காட்டியும், சூட்டியும் ஆட்கொண்டும் கண்கள் கசியாதிருந்தமையின் தம்மை மரக்கண்ணேன் என்றார்.*

**407.** அளித்து வந்தெனக் காவஎன் றருளி
அச்சந் தீர்த்தநின் அருட்பெருங் கடலில்
திளைத்துந் தேக்கியும் பருகியும் உருகேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே
வளைக்கை யானொடு மலரவன் அறியா
வானவாமலை மாதொரு பாகா

களிப்பெ லாமிகக் கலங்கிடு கின்றேன்
கயிலை மாமலை மேவிய கடலே.

**உரைநடை :-** திருப்பெரு...... சிவனே, வளைக்கை.... பாகா, கயிலைக் கடலே, அளித்து...... உருகேன், களிப்பெலா மிகக் கலங்கிடுகின்றேன்.

**உரை :-** திருப்பெருந்துறையிற் றங்கியருளிய பெருமானே, (பாஞ்சசன்னிய மென்னுஞ்) சங்கணிந்த கையையுடைய திருமாலொடு, பூமேலுறையும் அயனும், அறியமுடியாத தேவனே, மலை மகளை யொருபாகத் துடையவனே, கயிலைமலைக்கண் வீற்றிருந்த கருணைக் கடலே, நீ இரக்கங் கொண்டு குருவாயெழுந்தருளி வந்து, எனக்குக் கருணைக் குறிப்புக் காட்டிப் பாசப்பயமொழித்து நல்கிய உனது பெரிய திருவருட் கடலிலே மூழ்கி, உள்ளம் நிரம்பப் பெற்று, அதனை உண்டும் இன்னும் அன்பால் உருகமாட்டேன். செருக்கே மிகுதிப்படுதலால், நான் (வீடு கிடையாதோ என்ற அச்சத்தால்) கலக்கமுறுகின்றேன்.

**குறிப்பு :-** அளித்து - இரங்கி. ஆவ - இரக்கக்குறிப்பு. தேக்குதல் - நிறைதல். களிப்பு - செருக்கு. களிப்பெலாம் இக, எனப் பிரித்து மகிழ்ச்சியெல்லாம் ஒழிந்துபோக என்று பொருள் கோடலுமுண்டு. மலையிற் கடல்மேவும் நயம் இறுதியடியிற் காண்க. கடல் - அருட்கடல். வளைக்கையன் - அரி அரற்குத் தேவியாதலின் வளையைக் கையில் உடையவன் எனலுமாம்.

**திருச்சிற்றம்பலம்.**

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 24. அடைக்கலப் பத்து

*(இறைவனுக்குத் தாம் அடைக்கலம் என்பதைக் கூறும் பத்துப் பாடல்களின் தொகுதி)*

--------

*அடிகளார் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்குங் காலத்து, அடியார்கள் அனைவரும் இறைவனது திருவடிக் கமலத்தைச் சேர்ந்து பேரின்பக் கடலில் அமிழ்ந்திருக்கத் தாம்மட்டும் தனித்தமைக்குக் காரணம் தமக்குப் பரிபாகமின்மையே என உணர்ந்து, அடி அடைதற்குரிய பக்குவத்தை வரையறுப்பாராக, இப்பதிகத்தை அருளுகின்றார்கள்.*

*அடைக்கலம் புகுவதை அறிவிக்கும் பாடல் பத்தினைக் கொண்ட நூற்பகுதி அடைக்கலப்பத்து. இதில், ஏனைய அடியார்கள் போலத் தாமும் திருவடியை அடையவிடாது தடுத்து நின்றது வாசனாமலம் ஆதலின் அதற்கு அஞ்சி, இறைவனிடம் அடைக்கலம் புகுந்ததை அறிவிக்கும் பகுதி என்பது கருத்து. இதன் கருத்தாவது பக்குவ நிர்ணயம்; அதாவது வித்தும் அங்குரமும்போல என்று பழைய குறிப்புக்கூறும். வித்தின்தன்மை முளையிற் காணப்படுமாறுபோல, வித்தொன்றும் முளையொன்றுமாக மாறித் தோன்றாதவாறுபோல வாசனாமலம் கெடாத ஆன்மா ஒருக்காலும் திருவருளுக்கிலக்காகாது என்பதனை உணர்த்த இப்பதிகத்து 'அழுக்கு மனத்தடியேன் உன் அடைக்கலம்; வல்வினையேன் உன் அடைக்கலம்; கெடுவேன் உன் அடைக்கலம்' எனத் தடையும், அவற்றை நீக்கும் உபாயமும் தெரிவித்து வேண்டிக் கொள்கின்றார்.*

***பக்குவ நிண்ணயம்***

***கலவைப்பாட்டு***

***திருச்சிற்றம்பலம்***

**408. செழுக்கமலத் திரளனநின் சேவடிசேர்ந் தமைந்த**
**பழுத்தமனத் தடியருடன் போயினர்யான் பாவியேன்**
**புழுக்கணுடைப் புன்குரம்பைப் பொல்லாக்கல்வி ஞானமிலா**
**அழுக்குமனத் தடியேன் உடையாய்உன் அடைக்கலமே. 1**

***உரைநடை :-*** *'உடையாய்' என்பதை முதலிற் கொள்க.*

*__உரை :-__ என்னுடைய முதல்வனே, செழுமையாகிய தாமரை மலரின் செறிவுபோன்ற உன்னுடைய செவ்விய திருவடிகள் சேரப் பெற்றுத் தகுதியாயமைந்த, கனிந்த உள்ளத்தை உடைய அடியார்கள் உன்னோடு உடனே வீட்டிற்குச் சென்றனர். பாவியேனாகிய யான், புழுக்கள் தமக்கு இடமாகக் கொண்ட இழிவான உடம்பையுடைய தீமை மிக்க கலைஞானமில்லாத அழுக்கு மனத்தேனாகிய அடியேன், உனக்கு அடைக்கலம்.*

*சேர்தல் - இடைவிடாது தியானித்தல். அமைதல் - அறிவு இச்சை செயல்கள் அடங்குதல். பழுத்த மனம் - அன்புமிக அதனாற் கனிந்த - <u>கனிகின்ற மனம். உண்மையடியார்கள் இடைவிடாது தியானித்தலும், மனமொழிமெய்கள் பொறிவழி பற்றிப் புலன்களிற் செல்லாது அடங்குதலும், கனிந்த மனமுடைமையுமாகிய மூன்று இயல்பும்</u> உடையவர்கள் என்பது உணர்த்தப் பெற்றது. இதுவே பக்குவ நிண்ணயமாதல் தெளிக.*

*உடன் போயினர் - ஆசாரியனுடன் செல்லுதல் மாணாக்கர்க்குப் பெருமைதரும் செயல். மன்னருடன் செல்லுதல் பரிவாரங்களுக்குச் சிறப்பு. அதுபோல மெய்யடியார்கள் உடன் சென்றமை அவர்கள் பரிபாக விசேடத்தைத் தெரிவிப்பது. பழையவுரை அபேத அத்துவித அடிமை வாழ்வான இன்பம் இம்மையிலே பெற்றார்கள் என்னும். உடன் போயினர் - இம்மையிலே பெற்றார்கள். எடுத்த இப்பிறவியிலேயே குருவுடன் சென்று பெற்றனர் என்பது கருத்து.*

*__குறிப்பு :-__ அமைந்த - அமைதிபெற்ற. பழுத்த - அன்பினாற் கனிந்த. கண் - இடம். 'புழுக்கண் உடை' என்பதைப் புழுக்கள் நுடையெனப் பிரித்துப் புழுக்கள் நெளிந்த என்று பொருள் கொள்ளுதலுமுண்டு. குரம்பை - கூடு, உடல். அழுக்கு - வாசனா மலம். கலம் - பாத்திரம்.*

**409.** **வெறுப்பனவே செய்யும்என் சிறுமையைநின் பெருமையினாற்**
**பொறுப்பவனே அராப்பூண் பவனேபொங்கு கங்கைசடைச்**
**செறுப்பவனேநின் திருவரு ளால்என் பிறவியைவேர்**
**அறுப்பவனே உடையாய் அடியேன்உன் அடைக்கலமே. 2**

*__உரைநடை :-__ வெறுக்கத் தக்கனவே செய்யும் என்னுடைய இழிவினை, உன்னுடைய பெருந்தன்மையினாலே பொறுத்துக் கொள்பவனே, பாம்பினை ஆபரணமாக அணிந்தவனே, மிகுந்து வருங் கங்கை வெள்ளத்தைச் சடையின்கண் அடக்குபவனே, உன்னுடைய*

*திருவருளினாலே எனது பிறப்பின் மூலத்தைக் களைபவனே, முதல்வனே அடியேன் உனக்கு அடைக்கலம்.*

*பாம்பும் கங்கையும் செய்யாத தீமைகளை அடியேன் செய்திலேன்; அவற்றைத் தாங்கி ஆட்கொண்டதுபோல என்னையும் (பிறவியை நீக்கி) ஆட்கொள்ளவேண்டும்; நான் உன் அடைக்கலம் என்பது கருத்து.*

*'சிறியோர் செய்த சிறு பிழை யெல்லாம் பெரியோராயிற் பொறுத்தலும் கடனே' என்பவாகலின் யான் செய்த சிறுமைகளைப் பொறுத்தல் நின் பெருந்தன்மைக்கு இயல்பு என்பார் 'என் சிறுமையை நின் பெருமையினால் பொறுப்பவனே' என்றார். சிற்றறிவும் சிறு தொழிலுமுடைய உயிர்களாகிய நாங்கள் அநாதியே அறியாமையைச் செய்யும் ஆணவமலத்தோடு கூடியவர்களாதலின், தேவரீர் திருவுள்ளத்திற்கு உவப்பாவன இவை என்பதைச் சிவாகமங்களாலும், ஆன்றோர் ஆசாரத்தானும் தெரிந்துவைத்திருந்தும், மலமறைப்பால் அகங்கரித்து உவக்கத்தகாத - வெறுக்கத்தக்க செயல்களையே செய்வேமாயினும், அவை எம் அறியாமை ஏதுவாக நிகழ்ந்தன என்று திருவுளம் பற்றி இரங்கிப் பொறுத்தருளவேண்டும்; அங்ஙனம் பொறுப்பதே நின் பெருந்தன்மைக்கு அழகுமாம் என்பது கருத்து. அரா - பாம்பு. இது நஞ்சும், நன்றிகெட்ட தன்மையும் உடையதாயினும் அதனைப் பெரிய அணிகளாக அணிந்து தேவரீர் ஆட்கொள்ள வில்லையா? நான் நச்சுப்பாம்பைவிட மிகக்கொடியவனா? என்பார் 'அராப்பூண்பவனே' என்று விளித்தார்.*

*மேலும் கங்கை எவ்வளவு மிடுக்கோடு உன் சந்நிதானத்தில் இறங்கினாள்; அவள் ஆணவத்தை ஒடுக்கிச் சடையில் அடக்கிப் பொறுத்த உனக்கு என் சிறுமையினால் விளைந்த வெறுப்பனவற்றையும் பொறுத்தல் மிக மிக எளிதாம் என்று வேண்டுவார் 'பொங்கு கங்கை சடைச்செறுப்பவனே' என்றார்.*

*பிறவி வினைவயத்தால் ஓயாமற்கிளைக்கும் மரம்போல்வது. அடியேன், பதிபுண்ணியங்களைச் செய்தலால் கிளைகளைக் கழித்துக் கொண்டே இருப்பேனாயினும், அது என்சோர்வின்கண் மீட்டும் கிளைத்துத் தழைத்துவிடும் இயல்பினது; அதனை நின் திருவருளாகிற குந்தாலிகொண்டு வேரையே களையவேண்டும் என்பதை 'என் பிறவி வேர் அறுப்பவனே' என்ற விளியால் புலப்படுத்துகிறார்.*

*உடைமையாக உள்ளவனுக்கு மீட்டும் அடைக்கலம்கூறல் தகுதியாமா? அங்ஙனமிருந்தும் உடையாய் உன்னடைக்கலம் எனற்கு*

இயைபு யாது எனின், உன்னை உடையான் என்றும் நான் உன் உடைமை என்றும் உணர்வதற்கு முன்னே தற்போத முனைப்பால் புறம்பான பாவ கன்மங்களைச் செய்துவிட்டேன்; அவை முதிர்ந்து என்னை இப்போது வாட்டத் தொடங்குகின்றன; அவைகளினின்று அடியேனைக் காக்க வேண்டும் என்பது கருத்தே அன்றி, இயல்பாகவே உடைமையமைந்ததாக இருக்க உன் அடைக்கலம் என யான் இப்போது விண்ணப்பிக்கவில்லை; அச்சத்தாற் கூறும் அவல உரையே என்றவாறாம்.

***குறிப்பு :-*** 'பொங்குகங்கை' என்றதனால் கங்கை வெள்ளம் எனப்பட்டது. 'செறிப்பவனே' என்றது 'செறுப்பவனே' என்றாயிற்று.

**410.** **பெரும்பெருமான் என்பிறவியை வேறுத்துப் பெரும்பிச்சுத்**
**தரும்பெருமான் சதுரப்பெரு மான்என் மனத்தினுள்ளே**
**வரும்பெருமான் மலரோன்நெடு மாலறி யாமல்நின்ற**
**அரும்பெருமான் உடையாய் அடியேன்உன் அடைக்கலமே. 3**

***உரை :-*** எல்லாத் தேவர்களிலும் பெரியவனான தலைவனே, என் பிறப்பினை அடியோடு தொலைத்து, மிகுந்த பித்தினைத் தருந் தலைவனே, திறமையுடைய பெருமானே, என்னுள்ளத்தின் உள்ளீடாகத் தோன்றுகின்ற பெருமானே, பிரமனும் மாலும் தேடியுந் தெரியாதபடி நின்ற கிடைத்தற்கரிய பரம்பொருளானவனே, முதல்வனே, அடியேன் உனக்கு அடைக்கலம்.

பெரியவற்றுள் பெரியனாயும், அரியவற்றுள் அரியனாயும், எல்லாந்தருபவனாயும் உள்ள நீ என்னை உடையாய் ஆதலால் யான் உன் அடைக்கலம் என்பது கருத்து.

பெருமான் - பெருமையையுடையவன். அங்ஙனமாயும் பெரும் பெருமான் என்றது பெருமான் என்ற பெயரைக் காரணங்கருதாமலே எத்தனையோ தேவர்கள் தாங்கியிருக்க அவர்கட்கும் தலைவனாதற் சிறப்பு உனக்கே உளது என்பதை வியந்ததாம்.

பிறவி நீங்கிய சிவானுபவ காலத்தில் ஆன்மா, சிவத்தையன்றி வேறொன்றையும் சாராது சிவத்தையே நோக்கிச் சிவமாகவே விளங்கியிருக்கும் ஆதலின், கண்டதையே கண்டு, கொண்டதையே கொண்டு, கூறியதையே கூறும் பெரும் பிச்சான அத்தன்மையை விளக்கிப் 'பெரும்பிச்சுத் தரும் பெருமான்' என்றார்.

சதுரன் - சாமர்த்தியம் பொருந்தியவன். விச்சதின்றியே விளைவு

*செய்தலும் வைச்சு வாங்கலும் பிச்சதாக்குதலும் முதலாயின இறைவன் செய்யும் சதுரப்பாடுகள் என்க. சதுரர்கள் எல்லாருக்கும் தலைவன் சதுரப்பெருமான்.*

*என்மனம் என்ற குறிப்பு இறைவன் எழுந்தருளுதற்குத் தகாத அறுவகைப் பகைகளும் நிரம்பியது என்பதாம். ஆயினும் கருணையினால் வருகின்றான் என்ற எளிமைதோன்ற 'என் மனத்து வரும்பெருமான்' என விளித்தார். மனத்தைக்காட்டிலும் அணிமையான தொன்று இன்மையின் இத்திருப்பாடலிற் கூறப்பெறும் விளிகள் அனைத்தும் அண்மைவிளிகளாகவே அமைந்துள்ளமை சிவானுபவ முதிர்ச்சியின் விளைவென்க.*

***குறிப்பு :-** பிச்சு - பித்து, மயக்கம் - பேரன்பு. சதுர் - திறமை அதற்கு நான்கெனப் பொருள்கொண்டு, சரியை, கிரியை, யோகம், ஞானம் நான்கினையும் வகுத்த பெருமான் எனக் கொள்ளுதலுமுண்டு.*

**411.** **பொழிகின்ற துன்பப் புயல்வெள் ளத்தில்நின் கழற் புணைகொண்**
**டிழிகின்ற அன்பர்கள் ஏறினர் வான்யான் இடர்க்கடல்வாய்ச்**
**சுழிசென்று மாதர்த் திரைபொரக் காமச் சுறவெறிய**
**அழிகின்றனன் உடையாய் அடியேன் உன் அடைக் கலமே.** **4**

***உரை :-** முதல்வனே! துன்பமாகிய மேகம் பொழிகின்ற வெள்ளத்திலே உன்னுடைய திருவடியாகிய தெப்பத்தைத் துணையாகக் கொண்டு உன்னோடு இறங்கிவந்த, அன்பர்கள் மேலுலகத்திற்கு ஏறிவிட்டார்கள். யானோவெனில் துன்பக்கடற் சுழியிலகப்பட்டு, பெண்டிராகிய அலைகள் மோத, ஆசையாகிய சுறாமீன் தாக்க நசித்துப் போகின்றேன். அடியேன் உனக்கடைக்கலம்.*

*பொழிகின்ற துன்பம் என்றதால் துன்பம் மழையாகவும், பிறவி புயலாகவும், வான் ஏறினர் என்பதால் வான் கரையாகவும் கொள்ளப்பட்டன.*

*பிறவி நாம் ஈட்டிய வினைகள் திரண்டு கருக்கொண்டு முதிர்ந்து வருதலின் புயலாக உருவகிக்கப்பெற்றது. புயல் - மேகம். பிறந்தோருறுவது பெருகிய துன்பமாதலின் துன்பம் மழையாகவும், அதன் திரட்சி வெள்ளமாகவும் கொள்ளக்கிடந்தன. கழல் ஆகுபெயராகத் திருவடியை உணர்த்திற்று. பிறவியும் அதனால் வரும் துன்பமும் யாரையும் விடா ஆகலின் அன்பர்கள் அதனுட்பட்டு இழிவாராயினர். ஆயினும், அவர்கள் திருவடிப்புணை பற்றிக் கிடந்தார்கள். கரை ஏறினார்கள் என்பதாம்.*

*எனக்கும் அவர்களுக்குக் கிடைத்தகாலத்துத் திருவடித் தெப்பம் கிடைக்கத்தான் செய்தது; அறியாமையால் அதனைப் பற்றிலேன்; அதனால் துன்பக்கடலிலேயே வினைச்சுழியில் அகப்பட்டு வருந்துகிறேன் என்பார் 'யான் இடர்க்கடல்வாய்ச் சுழி சென்று' என்றார்.*

*அலை ஒன்றன்பின் ஒன்றாக எழுந்து, நீரளவு சிறிதாயினும் பெருக்கக்காட்டி கடலுள்ளும் புறம்புமாக இழுத்து அலைக்கும் தன்மையது. அதுபோல மாதர்களும் ஐம்புல இன்பங்களை ஒன்றன்பின் ஒன்றாக ஊட்டி, தம்மின்பம் சிற்றின்பமாயினும் அதனைப் பேரின்பமாகக் காட்டிப் பிரியவுமுடியாமல் கூடியே இருக்கவும் முடியாமல் அலைக்கழித்தனர் என்பார் மாதர்களைத் திரையாக உருவகித்தனர்.*

*சுறவு யானையாயினும் அதனை விழுங்கித் தம் மகப்படுத்தும் தன்மையது. சுறவின் வாய்ப்பட்டது மீளாது. அதுபோலக் காமத்தின் வயப்பட்டார் மீளாது, சிறிது சிறிதாக நசித்துப் போதலின் காமத்தைச் சுறவாகக் காட்டினதாம் என்க.*

*இத்தகைய சூழ்நிலையில் உய்யும் உபாயம் ஒன்றுமறியேன்; உம்மையே அடைக்கலமாக அடைகின்றேன் என்பதாம்.*

*ஆன்மா வினைப்போகங்களுக்கீடாக எத்துணைத் துன்பத்துட்பட்டு எவ்வளவு வருந்தினாலும் திருவடிப்புணை பற்றிக் கிடக்குமேல் உய்யும்; அஃதின்றி உலகவின்பத்தை உறுதியெனக் கொண்டுழலுமேல் இடிமேலிடியாகத் துன்புறும் என உடன்பாட்டு முகத்தானும், எதிர்மறை முகத்தானும் பக்குவ நிண்ணயம் செய்தவாறு காண்க.*

***குறிப்பு :-** இழிகின்ற - இறங்குகின்ற, இச்செய்யுளில் அது இறந்த காலப் பொருளில் வந்தது. வான் - சிதாகாசம். 'இடர்' என்பதைச் 'சுழி' என்பதனோடு சேர்த்துப் பொருள் கொள்ளுதலுமுண்டு. இடராயிருப்பது உடம்பு.*

**412.** **சுருள்புரி கூழையர் சூழலிற் பட்டுன் திறம்மறந்திங்**
**கிருள்புரி யாக்கையிலேகிடந் தெய்த்தனன் மைத்தடங்கண்**
**வெருள்புரி மான்அன்ன நோக்கி தன் பங்கவிண் ணோர்பெரு மான்,**
**அருள்புரியாய் உடையாய் அடியேன்உன் அடைக்கலமே. 5**

***உரைநடை :-** 'மைத்தடங்கண்.... பெருமான் உடையாய்' என்பதை முதலிற் கொள்க.*

***உரை*** *:- மைதீட்டிய விசாலமாகிய கண்ணின்கண் மருட்கை யுடைய மானின் பார்வைபோன்ற நோக்கினையுடைய உமையம்மையை ஒரு பாகமுடையவனே, வானோர்கள் தலைவனே, எனது முதல்வனே, சுருளுதலைச் செய்யுங் குழலினையுடைய பெண்களது சூழ்ச்சியிலகப்பட்டு உன் சிறப்பினை மறந்து இவ்வுலகிலே அறியாமையை வளர்க்கின்ற உடம்பிலே கிடந்து இளைத்தனன். திருவருள் புரிவாயாக. அடியேனுனக்கே அடைக்கலம்.*

*இருட்டறையிற் புகுந்தவனுக்குப் பொருள் புலப்படாதவாறு போல இவ்வுடலுட்புகுந்த எனக்குச் செய்வன தவிர்வன புலப்படா வாயிற்று. அன்றியும், இருட்டறையில் இருளன்றி வேறு ஒன்றும் காணப்படாததுபோல என்னுடலின் அடங்கி யான் கண்டது அறியாமையே; அதனால் எய்த்தேன் என்பார் 'இருள் புரி யாக்கையிலே கிடந்து எய்த்தனன்' என்றார்.*

*இவ்வண்ணமாகிய துன்பநிலையில் உறுதுணையாவார் பிறரின்மையின் உன் அடைக்கலமானேன்; நீ அருள்புரியாய் என்றவாறு.*

*<u>மாழை மாதர் போகத்தை வெறுத்தலும், உலகப்பற்றைத் துறத்தலும், இறைவன் உடையான் யாம் என்றும் உடைமை என</u> <u>**உணர்தலும்**</u> திருவடிச் சார்பிற்குரிய பக்குவங்களாக இப்பாட்டில் நிண்ணயிக்கப்பெறுதல் காண்க.*

***குறிப்பு*** *:- 'சுருள்' என்பது ஐவகை மயிர்முடியினொன்று அவைகளாவன : முடி, கொண்டை, பணிச்சை, சொருக்கு, சுருள். கூழை - தலைமயிர். சூழல் - சூழ்ச்சி, தந்திரம். இருள் - நிலை இல்லாதன வற்றை நிலையென்றுணரும் புல்லறிவு. மாயாகாரியமாகிய உடம்பானது அப்படிப்பட்ட திரிபுணர்ச்சியை விளைக்கும். 'மைத் தடங்கண்' என்பதைக் 'கூழையர்' என்பதனோடுங் கூட்டலாம். வெருள் - மருட்கை, அச்சம். புரி - செய்.*

**413.** **மாழைமைப் பாவிய கண்ணியர் வன்மத் திடவுடைந்து**
**தாழியைப் பாவு தயிர்போல் தளர்ந்தேன் தடமலர்த்தாள்**
**வாழியெப் போதுவந் தெந்நாள் வணங்குவன் வல்வினையேன்**
**ஆழியப் பாவுடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே.** **6**

***உரைநடை :-*** 'ஆழியப்பாவுடையாய்' என்பதை முதலில் கொள்க.

***உரை :-*** கருணைக்கடலாகிய அப்பனே, முதல்வனே, மாம்பிஞ்சின் பிளவைப் போன்றமை பரவிய கண்களை உடைய பெண்கள் பால், வலிய மத்தை இட்டபோது, உடைவுற்றுப் பானையின் பக்கமெங்கும் பரவுகின்ற தயிரினைப் போலத் தளர்ச்சி யுற்றேன். உன்னுடைய பெருமை பொருந்திய தாமரை மலர் போன்ற திருவடிகள் வாழ்வனவாக. அவற்றைக் கொடிய வினையையுடைய யான் எப்பொழுது வந்தடைந்து எந்தக் காலத்திலே வணங்கப் போகிறேன். உனக்கு அடைக்கலம்.

மாழை - மாவடு; அழகு. வடு கண்ணுக்கு வடிவால் ஒப்பு. கண்ணின் தோற்றமும், அதன் ஒப்பனையும் வசப்படுத்தின என்பார் 'மாழை மைப்பாவிய கண்ணியர்' என்றார்.

மத்து - தயிர் கடையும் மத்து. அது கடைந்து கட்டியான தயிரை உடைத்து, ஆடையில் எங்கும் பரவியுள்ள வெண்ணெயையும் வெளிப்படுத்தி, அதனைத் தயிர் என்ற பெயரையும் மாற்றி மோராய் நீராக்குகிறது. அதுபோல, மகளிரும் தன்னை விரும்பியவனுடைய மனவுறுதியை உடைத்து, வலிமையைப் புறம்போக்கி அழகைக் கெடுத்து மனிதப்பதராக்குகின்றனர் ஆதலின் மகளிரை வலிய மத்திற்கு உவமை ஆக்கினார். வன்மம் - மர்மம் என்பதன் போலியாகக் கொண்டு மார்பால் உழக்க உடைந்து என வேறும் ஒரு பொருள் தோன்ற நிற்றல் காண்க. பாவுதல் - மறுகுதல்; பரவுதலுமாம்.

குருடனாக நடித்து வழியில் கிடந்த பெரும்பொருளைத் தாண்டிச் சென்ற பேறிலான்போல, நீயே கருணையால் வந்து தாளிணை காட்டினும் என் வல்வினை காண ஒட்டாது என்பார் தன்னை வல்வினையேன் என்றார். வினை பரிபாகமுறும் நாளே உன் தாளைக் காணும் நாள்; அந்நாள் எந்நாள் என்பதைச் சிற்றறிவின னாகிய அடியேன் எங்ஙனம் அறிவேன் என்பார் 'எந்நாள் எப்போது வந்து வணங்குவேன்' என்றார். இதன் பயன் அந்நாளையும் காலத்தையும் தேவரீரே குறிப்பித்தருள வேண்டும். அடியேன் உன் அடைக்கலப் பொருளாதலின் என்பதாம்.

மாதர்போகமே பெரிது என மயங்கியிருந்த நிலை மாறி, அதன் இழிவு புலப்பட நின் தாளை வணங்குவது எந்நாள் என்ற எண்ணம்

*தோன்றியகணமே பக்குவம் விளைந்தமைக்கு அறிகுறி; மேலும் அடைக்கலம் புகுதல் பக்குவநிண்ணயம் என்பதறிக.*

***குறிப்பு :-** தாழி - மிடா - பானை. ஆழி - கடல். தடமலர்த்தாள் துணையாகலின், வாழியென்றார். கண்ணியரால் தளர்ந்தேன் என்று வேற்றுமையுருபு விரித்துக்கொள்க.*

**414. மின்கணினார் நுடங்கும் இடையார் வெகுளி வளையில் அகப்பட்டுப்**
**புன்கணனாய்ப் புரள்வேனைப் புரளாமற் புகுந்தருளி**
**எண்கணிலே அமுதூறித் தித்தித்தென் பிழைக்கிரங்கும்**
**அங்கணனே உடையாய் அடியேன்உன் அடைக்கலமே. 7**

***உரை :-** மின்போன்ற விழியை யுடையவர்களும், அசைகின்ற இடையை யுடையவர்களுமாகிய மங்கையரது கோபவலையிற் சிக்குண்டு துன்பமுடையவனாய் உழல்கின்ற என்னை அங்ஙனம் உழலாத வண்ணம் என்னுள்ளத்தே புகுந்து, என்னிடத்திலே ஞான அமுதமானது சுரந்து இன்பந்தரும்படியாகச் செய்து, எனது குற்றத்திற்கு இரங்கி, அவற்றைப் பொறுத்தருளு மழகிய கருணைக் கண்ணை யுடையவனே, முதல்வனே உனக்கு அடைக்கலம்.*

*புன்கண் - துன்பம். புன்கணன் - துன்பமுடையவன். புரள்வேனை என்றது இடமும் காலமும் சூழலும் நோக்காது கள்ளுண்டார் கீழே விழுந்து புரள்வதுபோலச் செய்வதறியாது புரண்டேன்; அங்ஙனம் புரளாதவண்ணம் தெளிவுறுத்தியாண்டான்; இனித்தான்; என் பிழைக்கு இரங்கினான்; அத்தகைய கருணையாளன் சிவன் என்றவாறு.*

*அங்கணன் - அழகிய கண்களை உடையவன். கண்ணுக்கு அழகு கண்ணோட்டமாதலின் பிழைக்கு இரங்கும் பெற்றியனை அங்கணன் என்றார்.*

***குறிப்பு :-** மின்கண் - மின்னுகின்றகண் என்றலுமுண்டு. நுடங்குதல் - துவறுதல், அசைதல். ஆசையினால் மாதர் கோபப்பட்டும் அவர்களைவிட்டு நீங்க மனமிராது மயக்கமுறுதலால் வெகுளிவலை யென்றார். என்கணிலே - என்னிடத்திலே. தித்தித்து - தித்திக்க.*

**415. மாவடு வகிரன்ன கண்ணி பங்காநின் மலரடிக்கே**
**கூவிடுவாய் கும்பிக்கே யிடுவாய்நின் குறிப்பறியேன்**

பாவிடை யாடுகுழல் போற்கரந்து பரந்ததுள்ளம்
ஆகெடுவேன் உடையாய் அடியேன்உன் அடைக்கலமே. 8

***உரை :-*** *மாங்காய் வடுவின் பிளவு போன்ற கண்ணை உடைய வளாகிய உமைபாகனே, நீ உன் திருவடித்தாமரைக்கே என்னை அழைத்துக் கொள்வாயோ! அல்லது கும்பிபாகமென்னும் நரகத்தி விடுவாயோ! உன்னுடைய திருவுள்ளக்கருத்தை நான் அறிய மாட்டேன். (கைக்கோளர்) நூலிழைப் பரப்பிலே அங்குமிங்கும் ஓடித் திரிகின்ற அவர்களது குழல்போல என்னுடைய உள்ளமானது உலகப் பற்றில் மறைந்து திரிவதாயிற்று. (உன்னிடம் மனங்குவியாமையால்) அந்தோ! கெட்டொழிவேன். முதல்வனே, அடியேன் உனக்கே அடைக்கலம்.*

*நீ ஆண்டவன்; யான் அடியவன்; என்னைத் திருவடியில் சேர்த்து; நரகத்தில் தள்ளு; நின் திருவுள்ளம் எதுவோ யான் அறியேன்; என் மனம் பாவில் குழல்போலத் தடுமாறுகிறது; ஆதலால், அமைதி காண யான் உன் கழலில் அடைக்கலம் புகுகின்றேன் என்பது கருத்து.*

*தலைவன் அடிமையை எதுவேனும் செய்யலாம் என்பார் 'மலரடிக்கே கூவிடுவாய், கும்பிக்கே இடுவாய்' என்கின்றார். சுந்தரமூர்த்திசுவாமிகளும் ''விற்றுக்கொள் ஒற்றிவை விரும்பி ஆட்பட்டேன்'' என்றல் காண்க. இறைவன் வேண்டத்தக்கது அறிவோன் ஆதலின் இன்னது அருளுக என்று வேண்டிக் கோடலும் அடிமை செய்யத்தகாத செயலாதலின் 'நின் குறிப்பு அறியேன்' என்றார்.*

*பாவு - நெசவிற்காகக் கஞ்சியிட்டு முறுக்கேற்றிப் பதப்படுத்தப் பட்ட நூற்பாவு. குழல் - நூலுண்டை போட்ட குறுக்கு நூல் நெய்யும் தார்க்குழல். மேலும் கீழுமாக மாறித் தூக்கப்பெற்ற பாவினுள் தார் மறையும்; பின்னர், நூலைப் பரப்பும்; அதனை அச்சால் நெருக்கி நெய்தவுடன் நூல் பரந்துதோன்றும்; அதுபோல, என் மனமும் ஒருநிலைப்படாது இங்கும் அங்குமாக அலைந்து பரந்தது. ஒன்றி நின்றிலது என்பதாம்.*

*'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே' எனத் தன்முனைப்படங்கித் தலைவன் தாளில் தலைப்படுதலும், மனம் பாவாடுகுழல்போலாது எழுதிய விளக்குப்போல ஒன்றுபட்டு நிற்றலுமே பக்குவ நிண்ணயமாதல் அறிவித்தவாறு.*

*நெறியறியாமைமட்டும் அன்று; ஆன்மாக்கள்மீது வைத்த கருணையால் ஆகமங்களை அருளிய உன்னையே அறியேன்; என்றது சங்காரகாரணனாகிய சிவனே முதல் என அறியாமை. இதுபோல வருவன அனைத்தும் சகலான்மாக்களின் நிலையைத் தம்மேலிட்டு உலகருய்ய உணர்த்தியதாம்.*

*பாச பசு ஞானங்களால் சிவன் அறியப்படான் ஆதலின் சிவனையேயறியும் அறிவு சிவஞானம். இதுவே திருஞானம், மெய்ஞ்ஞானம், பரஞானம் என்றெல்லாம் வழங்கப்பெறுவது. இதனையடைந்தோர் சிவமே கண்டிருப்பர் ஆதலின் அச்சிவம் அடியேற்கு அனுபவமாகாமையால் 'நின்னையேயறியும் அறிவு அறியேன்' என்றார்.*

***குறிப்பு :-*** *வகிர் - பிளவு. அது வடிவத்தாற் கண்ணுக்கு உவமை.*

**416.** **பிறிவறியா அன்பர்நின் அருட்பெய் கழல் தாளிணைக்கீழ்**
**மறிவறியாச் செல்வம்வந்து பெற்றார்உன்னை வந்திப்பதோர்**
**நெறியறியேன் நின்னையே அறியேன் நின்னையே அறியும்**
**அறிவறியேன் உடையாய் அடியேன்உன் அடைக்கலமே.** **9**

***உரை :-*** *முதல்வனே! நின் திருவருளை விட்டுப் பிரியவறியாத மெய்யடியார்கள் கழல்கள் நிறைந்த உனது இருதிருவடியின் கீழே மீண்டும் பிறவியில் திரும்புதலை யறியாத பேரின்பச் செல்வத்தைப் போயடைந்தனர். நான் உன்னை வழிபடுகின்ற ஒப்பற்ற வழியினை யறியமாட்டேன். பிறபொருளைக் கருதாது உன்னையே முழுவதும் அறியமாட்டேன். உன்னையே முழுவதுமறிதற் கேதுவாகிய சிவஞானத்தையுந் தெரிந்திலேன். அடியேன் உனக்கு அடைக்கலம்.*

*மறிவறியாச் செல்வம் - பெற்றவர் மீளவும் பெறுதலை அறியாத செல்வம் எனலுமாம். மீளாச்செல்வமாவது வீட்டின்பம். தாடலைபோல ஒன்றிநின்று மோட்சவின்பம் பெற்றார்கள் என்க.*

*வந்திப்பது - பூசிப்பது. இதற்குரிய நெறிகளை மந்திரங்களுடன் விளக்கும் நூல் சிவாகமங்கள் ஆதலின் சிவாகமங்களை ஓதி விதிப்படி உன்னைப் பூசிப்பதற்குரிய நெறிகளை அறியேன் என்றார்.*

*நெறியறியாமைமட்டும் அன்று; ஆன்மாக்கள்மீது வைத்த கருணையால் ஆகமங்களை அருளிய உன்னையே அறியேன்; என்றது*

*சங்காரகாரணனாகிய சிவனே முதல் என அறியாமை. இதுபோல வருவன அனைத்தும் சகலான்மாக்களின் நிலையைத் தம்மேலிட்டு உலகருய்ய உணர்த்தியதாம்.*

*பாச பசு ஞானங்களால் சிவன் அறியப்படான் ஆதலின் சிவனையேயறியும் அறிவு சிவஞானம். இதுவே திருஞானம், மெய்ஞ்ஞானம், பரஞானம் என்றெல்லாம் வழங்கப்பெறுவது. இதனையடைந்தோர் சிவமே கண்டிருப்பர் ஆதலின் அச்சிவம் அடியேற்கு அனுபவமாகாமையால் 'நின்னையேயறியும் அறிவு அறியேன்' என்றார்.*

***குறிப்பு :-*** *பிரிவு என்பது பிறிவென வலித்தது. நின்னருள் பிறிவறியா என மாற்றிக்கொள்க. மறிவு என்பது பிறவிக்கு மீளுதல். அதனை மரித்தலின் விகாரமாகக் கொண்டு நசித்தலெனப் பொருள் கொள்ளுதலுமுண்டு.*

**417. வழங்குகின் றாய்க்குன் அருளார் அமுதத்தை வாரிக் கொண்டு**
**விழுங்குகின்றேன் விக்கினேன் வினையேன்என் விதியின்மையால்**
**தழங்கருந் தேனன்ன தண்ணீர் பருகத்தந் துய்யக் கொள்ளாய்**
**அழுங்குகின்றேன் உடையாய் அடியேன் உன் அடைக்கலமே. 10**

***உரை :-*** *முதல்வனே, வீட்டினை யன்பர்க்கு வழங்குகின்ற உன் திருவருளாகிய கிடைத்தற்கரிய அமுதத்தை அள்ளி உட்கொண்டு விழுங்குங்காலைத் தீவினையேனாகிய எனக்கு நல்ல ஊழின்மையால் தொண்டையில் தடைபடுதலாயினேன்; அருமையாகிய தேன் போன்றதான சலசலவென்று ஒலிக்கின்ற தண்ணீரைக் குடிப்பதற்குக் கொடுத்து, என்னைப் பிழைக்கும்படி செய்யவேண்டும். நான் அலைந்து வருந்துகின்றேன். உனக்கே யடியேன் அடைக்கலம்.*

*நீ அருளமுதம் அளித்தாய், அதனை உண்ண எனக்கு நல்லூழ் துணை செய்திலது; கொடுத்த உனக்காக விழுங்கினேன்; விக்கிக் கொண்டது; வருந்துகின்றேன்; குடிக்கத் தண்ணீர் கொடுத்துக் காப்பாற்று; யான் உன் அடைக்கலப் பொருளாவேன் என்பது கருத்து.*

*உன் திருவருள் அமுதம்போல இனிமையும், என்றும் அழியாமையும் அளிப்பது; நிறையக் கிடைப்பது. அங்ஙனமிருந்தும் கைப்பினையுண்பார்போல விருப்பின்றி ஒரே கவளமாக வாரி உண்டேன்; சுவையான பொருளை உண்பார் சிறிதுசிறிதாகச் சுவைத்து*

*விரும்பியுண்பார்; அங்ஙனமின்றி வாரி விழுங்கினேன்; அதுவும் பெருந்தகையாகிய நீர் கொடுத்தீரே என்று உமக்காக உண்டேன்; விக்கியது; கொடுக்கின்றவர்கள் கொடுத்தாலும் உண்ண எனக்கு ஊழ் வேண்டாமா? அஃதில்லை; அதனால், விக்கினேன்; வருந்துகின்றேன்; குடிக்கத் தண்ணீர் கொடு; தொண்டை அடைக்கிறது; ஐயோ! வருந்துகின்றேன்; உன் அடைக்கலம் என்பதால்.*

*விக்கிக்கொண்டது அமுதம்; வெறுந்தண்ணீர் குடித்தால் அதன் சுவை குன்றக்கூடும்; அதனால் தேனன்ன தண்ணீர் கொடு என்று வேண்டுகிறார். விக்கல் எடுக்கும்போது தொண்டையிலிருந்து ஓரொலி உண்டாகும் அது நீங்கக் கொடு என்கின்றார். தழங்கு அரு தேன் - ஒலியில்லையான தேன். தழங்கு; முதனிலைத் தொழிற்பெயர். அருமை - இன்மை.*

*அருளையளித்த தேவரீர் அவ்வருளை அடியேன் நுகரும் வன்மையையும் உதவவேண்டும்; இல்லையேல் திருவருட்பயனை அடியேன் நுகரேன் என்பதால் அருளடைதற்குரிய ஆன்மாவின் பக்குவத்தை நிண்ணயம் செய்தவாறு காண்க.*

*இங்ஙனம் அடைக்கலம் கூறிய பத்துப் பாடல்களாலும் திருவடித் தியானமும், முதிர்ந்த அன்பும், திருவருட் சிறப்பை விளக்கும் கல்விஞானமும், விதித்தன செய்தலும், விலக்கியன செய்யாமையும், திருவடிக்கே பிச்சாதலும், காமதாபங்களின்மையும், திருவடிச்சார்பு எப்போது கிடைக்கும் என்றெண்ணி அதனையே எதிர்நோக்கலும், தம்முடைய நலந்தீங்குகளைத் தலைவனிடத்திலேயே ஒப்பித்தலும், தனக்கு எதிலும் முதன்மையில்லாமையும், அவனருளைத் துய்த்தற்குக்கூட வன்மையில்லாமையை உணர்தலுமான பக்குவங்கள் நிண்ணயஞ் செய்யப்பெறுதல் காண்க.*

***குறிப்பு :- விக்குதல் - தொண்டையில் தடைபடுதல். விதி - நல்ல ஊழ். தழங்கு என்பதைத் தண்ணீரென்பதனோடு சேர்க்க. தண்ணீர் குளிர்ந்த தன்மை யென்பாருமுளர். ஓடுகின்ற நீரினாலே விக்கல் நிற்றலால் தண்ணீர் 'பருகத்தந்து' என்றார். அழுங்கு - அலைதல், வருந்துதல்.***

***திருச்சிற்றம்பலம்***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 25. ஆசைப் பத்து

*(ஆசையை விண்ணப்பித்துக் கொள்ளும் பத்து திருப்பாடல்களின் தொகுதி)*

--------

### ஆத்தும இலக்கணம்

*இதுவும், அடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்குங் காலத்து, இறைவன் திருவடியைச்சார ஆசைப்படுவதாக அருளிச் செய்யப்பெற்றது.*

*ஆசை முறுகிய அன்பு காரணமாக ஒரு பொருளை அடைய வேண்டும் என்றெழுகின்ற விருப்பம். அடிகளார்க்கு இறைவனது செவ்வி காணவும், செவ்வியில் ஈடுபட்டு அழுந்தி நிற்கின்றபோது அருளைப்பெறவும், அருளை விரும்புகின்ற என்னைப் பார்த்து இரங்கி வா வா என்று உன்னால் அழைக்கப் பெறவும், அழைத்தாலும் வர முடியாமை என்பாலிருப்பதை அறிந்து நீயே என்பால் எழுந்தருளி வந்து அருள்வழங்கப்பெறவும் ஆசைப்படுவதாக அறிவிப்பதால் இப்பத்துப் பாடல்களும் ஆசைப்பத்து எனப் பெயர் பெற்றது.*

*இதன் கருத்து ஆத்தும இலக்கணம்; அஃதாவது ஆன்ம ரூபத்தை அறிதல் என்பது பழைய குறிப்பு. "தீர்க்கரும் ஆசைப்பத்து ஆன்ம இலக்கணம்" என்பது அகத்தியச் சூத்திரம்.*

*முன்னுள்ள அடைக்கலப்பத்தால், சிவாநந்தச் செருக்கால் பற்றற்றுத் தலைவனடியில் தன்னை ஒப்பித்தலே மேன்மையானது என்று உணர்த்தப்பெற்றது. இப்பத்தில் அதற்குக் காரணமான அருளை ஆசைப்படுதல் உணர்த்தப்பெறுகின்றது. இதனால் பதிக இயைபும் காண்க.*

*பழைய திருப்பெருந்துறைப் புராணம் "கருவியுறு மூனுடற் கண் வாராமல் திருவருளிற் கலப்பதற்கே, அரனடியைப் புகழ்ந்து பெரு கார்வமொடு பாடுதலே ஆசைப்பத்தாம்" என்று விளக்கம் தருகிறது.*

*கண்ணொளி விளக்கொளியோடு கலந்து ஓர் உருவைக் கலந்தா லல்லது அவ்வுருவம் அறியப்படாதவாறுபோல, உணர்த்த உணருந் தன்மையையுடைய உயிர்கள் திருவருளோடுகலந்து, அதனோடு சிவத்தைப் பொருந்தினாலல்லது சிவானந்தாநுபவம் சேராது என்பதனை அறிவிப்பதால் இது ஆத்தும இலக்கணம் ஆயிற்று.*

*தொகுத்துநோக்கின், பெற்றதை விட்டுப் பெற வேண்டியதை விரும்புதலே ஆசையாதலின் பெற்ற உலகச்சார்பை விட்டு, பெற வேண்டிய அருட்சார்பை விரும்புதல் இதனால் உணர்த்தப்பெறுகிறது என்பதாம்.*

***அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**418.** கருடக்கொடியோன் காணமாட்டாக் கழற்சேவடி யென்னும்
பொருளைத் தந்திங் கென்னை யாண்ட பொல்லா மணியேயோ
இருளைத் துரந்திட் டிங்கே வாவென்றங்கே கூவும்
அருளைப் பெறுவான் ஆசைப்பட்டேன் கண்டாய் அம்மானே. **1**

***உரை :-*** *கருடனெழுதிய கொடியையுடைய திருமால் அறிய வொண்ணாத கழல்களணிந்த செவ்விய திருவடிகளாகிய அரிய செல்வத்தை இவ்வுலகத்தே எனக்குக் கொடுத்து எனையாட்கொண்ட தொளைக்கப்படாத மாணிக்கமே! எனதறியாமையை ஓட்டி இங்கே வாவென்று நீ என்னை வீட்டுலகத்திற்கு அழைக்குந் திருவருட் சிறப்பைப் பெறுதற்கு அம்மானே நான் ஆசைப்பட்டேன்.*

*இருள் - ஆணவமலம். நோய் நீங்கினாலல்லது அமுதம் உண்டாலும் உடல் வளம்பெறாததுபோல் அது என்னைப் பற்றி நின்று தன் வலிமையைக் காட்டுகின்ற வரையில் அடியேன் உன்னைச் சாரகில்லேன்; அதனை முன்னர் ஓட்டவேண்டும்; அதன்பிறகே இங்கே வா என்றழைத்தால் வருவேன் என்பார் 'இருளைத் துரந்திட்டு இங்கே வா என்று அங்கே கூவும் அருள்' என்றார்.*

*குறிப்பு :- பொருள் - அருட்செல்வம். துரந்து - செலுத்தி, ஓட்டி. அங்கே என்றது வீட்டுலகத்தே. பொல்லா - உளி முதலியவற்றாற் செதுக்கப்படாத. கண்டாய் - அசை. காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே. இங்கே - கேவலாவத்தை. அங்கே - சகலாவத்தை.*

**419.** மொய்ப்பால் நரம்பு கயிறாக மூளை என்பு தோல்போர்த்த
குப்பாயம்புக் கிருக்ககில்லேன் கூவிக்கொள்ளாய் கோவேயோ
எப்பா லவர்க்கும் அப்பாலாம் என்னா ரமுதேயோ
அப்பா காண ஆசைப்பட்டேன் கண்டாய் அம்மானே. **2**

***உரை :-*** *எலும்பு, மூளை என்பவற்றை நெருங்கிய பகுதிகளாகிய வெள்ளிய நரம்புகளைக் கயிறாகக் கொண்டு கட்டி, தோலைக்*

*கொண்டு மூடிய சட்டைக்குள் புகுந்து அதில் தங்கியிருக்க இயலாதவன் யான். அரசனே! என்னை விரைவாக அழைத்துக் கொள்வாயாக. எவ்வளவு உயர்ந்த பதவியிலிருப்பவர்களுக்கும் அப்பாற்பட்ட கிடைத்தற்கரிய அருமருந்தே, அப்பனே, அழகிய பெரியோனே உன்னைக் காண்பதற்கு விருப்பமுடையவனா யிருக்கிறேன்.*

***குறிப்பு :-*** *மொய் - நெருங்கி, பால் நரம்பு - பகுதிகளாகிய நரம்பு. குப்பாயம் - சட்டை. கண்டாய் - அசை. எப்பாலவர்க்கும் - எத்தகைய பரிபாகம் உள்ளவர்களாலும்; என்றது அனந்தாதி அஷ்ட வித்தியேசுவர்களாலும் என்றபடி.*

**420. சீவார்ந் தீமொய்த் தழுக்கொடு திரியுஞ் சிறுகுடி லிதுசிதையக்**
**கூவாய் கோவே கூத்தா காத்தாட் கொள்ளுங் குருமணியே**
**தேவா தேவர்க் கரியானே சிவனே சிறிதென் முகநோக்கி**
**ஆவா என்ன ஆசைப்பட்டேன் கண்டாய் அம்மானே. 3**

***உரைநடை :-*** *கோவே, கூத்தா.... குரு மணியே அம்மானே, என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *அரசனே, திருநடமியற்றுவானே, (அடியேனைத்) தடுத்தாட் கொள்ளும் ஆசிரிய மாணிக்கமே, நிணம் (கொழுப்புத்தசைகள்) வடிந்து, ஈக்களால் மொய்க்கப்பட்டு, அழுக்கு நிறைந்து அலைகின்ற சிறிய வீடாகிய இவ்வுடம்பு சிதைந்தொழியும்படி, என்னை அழைத்துக்கொள்ள மாட்டாயா? வானவனே, வானவர்க்கரியவனே, மங்கலப் பொருளாவானே, அழகிய பெரியோனே, சற்று நீ என்முகத்தைப் பார்த்து இரக்கக் குறிப்புக் காட்டுவதை விரும்பினேன்.*

***குறிப்பு :-*** *'வார்ந்து' என்பது வார்த்து என்பதன் விகாரம். வார்த்து - வடித்து, ஊற்றி, ஒழுக்கி, வார்ந்து என்பதைத் தன் வினையாகக் கொள்ளலாம். அழுக்கு - மலம். இது என்றது தமது உடம்பைக் குறித்து நின்றது. ஆவா - ஐயோ, நீவா, என்றிரக்கச் சொற்கூறுவது. குடியிருக்கும் வீடு, குடிலாயிற்றுப் போலும். காத்து - தடுத்து. சீ - சீழ். செங்குருதி கெட்டு வழியும் நச்சுப்பொருள்.*

**421. மிடைந்தெலும் பூத்தைமிக் கழுக்கூறல் வீறிலி நடைக் கூடந்,**
**தொடர்ந்தெனை நலியத் துயருறுகின்றேன் சோத்தம் எம் பெருமானே,**
**உடைந்து நைந்துருகி உன்னொளி நோக்கி உன்திரு மலர்ப்பாதம்,**
**அடைந்து நின்றிடுவான் ஆசைப்பட்டேன் கண்டாய் அம்மானே. 4**

***உரைநடை :-*** *'எம்பெருமானே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *எமது தலைவனே, எலும்பு நெருங்கி ஊத்தை மிகுந்து அழுக்கு ஊறி நிற்பதாய்ச் சிறப்பற்ற நடைவீடாகிய இவ்வுடம்பு என்னைப் பற்றித் துன்புறுத்துவதால் நான் மனம் வருந்துகின்றேன். உனக்கு வணக்கம். அழகிய பெரியோனே, அன்பினால் உள்ளமுடைந்து, (செருக்கொழிந்து), மனங்கனிந்துருகி, உனது அருளொளியைப் பார்த்துச் சென்று, உனது திருவடிக் கமலங்களை விரைவில் எய்தி நிலை பெறுவதற்கு அவா மிக்குடையேன்.*

***குறிப்பு :-*** *எலும்பு மிடைந்து என மாற்றுக. வீறு - சிறப்பு. கூடம் - வீடு. சோத்தம் - அஞ்சலி. தோத்திரம் என்பதன் திரிபு.*

**422.** அளிபுண் ணகத்துப் புறந்தோல் மூடி அடியே னுடை யாக்கை,
புளியம் பழமொத் திருந்தேன் இருந்தும் விடையாய் பொடியாடீ,
எளிவந் தென்னை ஆண்டுகொண்ட என்னாரமுதேயோ,
அளியேன் என்ன ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. **5**

***உரைநடை :-*** *விடையாய், பொடியாடீ, ஆரமுதே, அம்மானே என்னும் விளித்தொடர்களை முதலிற் கொள்க. முதலடியில், அகத்து அளிபுண் என மாற்றுக.*

***உரை :-*** *காளையூர்தியனே, திருநீறணிந்தவனே, எளிதாகத் தோன்றியருளி என்னை யாட்கொண்ட அருமருந்தே, அழகிய பெரியோனே, ஓலம், உட்பக்கம் நெருங்கிய புண்ணுடையதாய்ப் புறத்தே தோலால் மூடப்பெற்ற, அடியேனுடைய உடம்பின்கண் புளியம்பழம் போலப் பற்றற்று இருந்தாலும், (அதன் தொடர்பு அறவே விடப் பெறாமையால்) இரங்கத் தக்கவன் என்று என்னை நீ கருதி யருள ஆசைப்பட்டேன்.*

***குறிப்பு :-*** *அளி - நெருங்குதல். மூடிய அடியேன், என்பது மூடியடியேன் என அகரந் தொக நின்றது. பொடி - பூதி, நீறு. புளியம்பழமானது, அதன் ஓட்டினுள், ஓட்டிற்கு வேறாக இருத்தல் யாருமறிந்ததே. அதுபோல, ஞானிகள் பற்றற்றிருப்பர், அடிகள் அனைய ரென்பதற்கு இச்செய்யுள் அகச் சான்றாதல் காண்க, அளியேன் - இரங்கத்தக்கேன்.*

423. எய்த்தேன் நாயேன் இனியிங்கிருக்க கில்லேன் இவ்வாழ்க்கை
வைத்தாய் வாங்காய் வானோர் அறியா மலர்ச்சேவடியானே
முத்தா உன்தன் முகவொளி நோக்கி முறுவல் நகைகாண
அத்தா சால ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. 6

*உரைநடை :- 'வானோர்... சேவடியானே' என்பதை முதலிற் கொள்க.*

*உரை :- விண்ணவரும் அறியாத திருவடித் தாமரையுடையானே, நாயனைய யான், (உடம்பைச் சுமந்து) இளைத்துப் போனேன். இனிமேல் இந்நிலவுலகத்திலே தரிக்கமாட்டேன். இவ்வுலக வாழ்க்கையை எனக்கு நியமித்தாய். நீ இதனை நீக்கி விடுவாயாக. இயல்பாகப் பாசங்களின் நீங்கியவனே, உன்னுடைய திருமுகத்தின் அருளொளியைக் கண்டு, உனது புன்சிரிப்பினைப் பார்ப்பதற்கு அப்பனே, அழகிய பெரியோனே மிகவும் அவாவுற்றேன்.*

*குறிப்பு :- வாங்காய் - ஒடுக்குவாய், எடுப்பாய். முத்தா என்பதற்கு முத்தி தருவோனே யென்றுங் கூறுவதுண்டு.*

424. பாரோர் விண்ணோர் பரவி யேத்தும் பரனே பரஞ்சோதி
வாராய் வாரா வுலகந் தந்து வந்தாட் கொள்வானே
பேரா யிரமும் பரவித் திரிந்தெம் பெருமான் எனஏத்த
ஆரா அமுதே ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. 7

*உரை :- மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் வாழ்த்தி வணங்கும் மேலோனே, மேலான ஒளியானவனே, மீண்டுவருத லில்லாத வீட்டுலகைக் கொடுத்து என்னை ஆண்டருள்பவனே, வந்தருள்வாயாக. (உன் திருமேனியைக் கண்டு) உனது ஆயிரந் திருப்பெயருஞ் சொல்லி அலைந்து எமது தலைவனே என்று வாழ்த்துவதற்கு, தெவிட்டாத அருமருந்தே, அழகிய பெரியோனே, நான் அவாவுற்றேன்.*

*பரவுதல் - தோத்தரித்தல். ஏத்துதல் - வணங்குதல். முன்னது வாக்கின் தொழில், பின்னது காயத்தின் தொழில். இரண்டும் கூறவே உபலக்கணத்தால் உள்ளத்தால் எண்ணுதலும் கொள்க. பரன் - எங்கும் நிறைந்த பொருளாய் விளங்கும் பரசிவன். பரஞ்சோதி - ஆன்மாக்களின் ஆணவ இருளை அகற்ற எழுந்தருளிய கருணைத் திருவுருவாகிய அருள் மேனி.*

'வாராய்' என்றது இறைவன் அடிகளாரை நோக்கிக் கூறியதைக் கொண்டு கூறியது. இங்ஙனமன்றி, அடிகள் இறைவனை நோக்கி வாராய் எனக் கூறியதாகவும் உரைப்பர்.

வாரா உலகம் - மோட்ச உலகம். 'வந்து வாராவுலகம் தந்து ஆட்கொள்வானே' எனக் கூட்டுக.

ஆரா அமுதே - தெவிட்டாத அமுதமே. தேவர் முதலிய பசுக்களால் அநுபவிக்கமுடியாத அமுதமே எனலுமாம்.

தலையிலே தீப்பற்ற அரற்றி அலைவார்போலப் பிறவியால் வருந்தி ஆயிரம் நாமஞ்சொல்லி அலைந்து, இறுதியாக யான் மீளா அடிமை அவன் என்பெருமான் என்ற ஆண்டானடிமைத் திறத்தை விளக்கும் எம்பெருமான் என்ற பெயரைச்சொல்லி ஏத்த ஆசைப்பட்டமையை அறிவித்தலால் இது ஆன்ம இலக்கணமாதல் உணர்த்தப்பெற்றது.

***குறிப்பு :-* திரிந்து, என்பதற்கு ஆனந்தக் கூத்தாடி என்றும் பொருள் கொள்ளலாம். ஆரா - நிறையாத, தெவிட்டாத.**

**425. கையால் தொழுதுன் கழற்சேவடிகள் கழுமத் தழுவிக்கொண்**
**டெய்யா தென்றன் தலைமேல்வைத் தெம்பெருமான் பெருமானென்**
**றையா என்றன் வாயா லரற்றி அழல்சேர் மெழுகொப்ப**
**ஐயாற் றரசே ஆசைப்பட்டேன் கண்டாய் அம்மானே. 8**

***உரைநடை :-*** ஐயாற்றரசே... அம்மானே என்பவற்றை முதலிற் கொள்க.

***உரை :-* திருவையாறமர்ந்த கோவே, அழகிய பெரியோனே, உனது வீரக்கழலணிந்த செவ்விய திருவடிகளைக் கையினாலே வணங்கி, முழுவதும் பற்றி, இடைவிடாது எனது சிரமேற் கொண்டு எமது தலைவனே, எமது தலைவனே, ஐயனே, ஐயனே, என்று வாயாரக் கூவி வாழ்த்தி அனலிடைப்பட்ட மெழுகுபோல உருகுவதற்கு ஆசைப்பட்டேன்.**

*கழலணிந்த சேவடிகள் காந்தம் போல என்னை இழுப்பன.* ***ஆகவே அடியேன் கைகளால் தூரநின்று தொழுத காலத்தே அவற்றின் ஒளியும், நிறமும், அழகும் என்னுடைய மனத்தை இழுத்தன. அடியேன் ஓடி வந்து இறுகத்தழுவினேன்; தழுவிய போது ஓரின்பம் உண்டாக, அவ்வின்பம் எல்லாவற்றினும் சிறந்ததாக, இவ்வின்பம் எங்கே***

*கைநழுவிவிடுமோ? அதனால் நமக்கு இடையீடு வருமோ? என அஞ்சி என் தலைமேற் சூடிக் கொண்டேன் என்பார் 'சேவடிகள் கழுமத் தழுவிக்கொண்டு எய்யாது என்றன் தலைமேல் வைத்து' என்றருளினார். கழும - நிறைய, எய்யாது - இடைவிடாமல்; இளைக்காமல் எனலுமாம்.*

***குறிப்பு :-*** *கழும - பூரணமாக. கழுமல் - நிறைதல். எய்யாது - சலியாது, இடைவிடாது.*

**426. செடியா ராக்கைத் திறமற வீசிச் சிவபுர நகர்புக்குக்**
**கடியார் சோதி கண்டு கொண்டென் கண்ணிணை களிகூரப்**
**படிதா னில்லாப் பரம்பர னேஉன் பழஅடியார் கூட்டம்**
**அடியேன் காண ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. 9**

***உரைநடை :-*** *படிதானில்லாப் பரம்பரனே, அம்மானே என்பவற்றை முதலிற் கொள்க.*

***உரை :-*** *குணம் யாதுமில்லாத (ஒப்பற்ற) மிக்க மேலோனே, குற்றம் நிறைந்த இவ்வுடம்பின் வகையனைத்துந் தொலைத்து, சிவமா நகரத்துட் புகுந்து, காவல்பொருந்திய அருளொளிக் காட்சியடைந்து, எனது இருகண்ணும் மகிழ்ச்சி மீதூரும்படி, உனது பழைய அன்பர் திருக்கூட்டத்தை அடியேன் காண்பதற்கு ஆசைப்பட்டேன்.*

*அம்மானே! என்னுடலை வளர்க்கும் உபாயங்களை அறவே எறிந்துவிட்டு, சிவநகர்புக்குப் பரஞ்சோதியாகிய உன்னைக் கண்டும், உன் பழவடியார்கூட்டம் காணவும் ஆசைப்பட்டேன் என்பது கருத்து.*

*ஆக்கைத்திறம் - யாக்கையை உண்டும், உடுத்தும், புனைந்தும், போற்றுந்திறம். செடி - ஒருவகை நாற்றம். அற - முற்றும்; என்றது உடற்பற்றை ஒழித்து என்றவாறாம்.*

*சிவபுரம் - முத்தியுலகு. கடி - விளக்கம்; தெய்வத்தன்மையுமாம். கடி ஆர் சோதி - தெய்வத்தன்மை நிறைந்த சோதி. இடைவிடாது சோதியைத் தரிசித்துக்கொண்டே இருப்பதால் கண்ணினை களிகூரவும், கூட்டங்காணவும் ஆசைப்பட்டேன் எனக் கூட்டுக.*

*இத்திருப்பாடலுக்கு, ஆண்டவனே! அடியேன் அழுக்குப் பொருந்திய யாக்கையைத் தேவரீர் திருவருளால் நீக்கிச் சிவபுர நகரிலே புகுந்து, ஞானமணம் பொலிவதான சிவஞானச் சோதியைத் திருவுருவாகவே கண்ணின்புறக் கண்டேன்; கண் களிகூர்வதானேன்; யாதொரு குணமும் இல்லாத பரம்பரா! பரமசிவனே! தேவரீர்*

*திருவடிக்குத் தொன்றுதொட்டு அடிமைப் பணிசெய்யும் சீரடியார் திருச்சபை காண ஆசைப்பட்டேன் என்பது பழையவுரை. இதில் செடி - குற்றம், கடி - ஞானமணம். சோதி - சிவஞானச்சோதி, படி - குணம், கூட்டம் - திருச்சபை எனப் பொருள்கொள்ளப் பெற்றிருத்தல் காண்க.*

*சோதி காண்டல் - சிவதரிசனம். அடியார் கூட்டம் காண்டல் - நேயமலிந்த அடியார் வழிபாடு. இவை இரண்டுமே பரிபாகமுற்ற ஆன்மாக்களின் இயல்பென்பதை ''நேயமலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே" என்ற அணைந்தோர் தன்மை அறிவிக்கும். ஆதலால், இச்செய்யுள் ஆன்மவிலக்கணம் உணர்த்திற்றாதல் தெரிக.*

***குறிப்பு :-*** *படி - குணம். ஒப்பு. 'குணங்கள் தாமில்லா இன்பமே' என்றதுங் காண்க. பரம்பரனே - மேலானவற்றிற்கு மேலோனே, இறைவன் ஒருவனே ஒப்பற்ற வனாதலின், 'படிதான் இல்லா' என்றார்.*

**427. வெஞ்சே லனைய கண்ணார்தம் வெகுளி வலையில் அகப்பட்டு**
**நைஞ்சேன்நாயேன் ஞானச்சுடரே நானோர் துணைகாணேன்**
**பஞ்சே ரடியாள் பாகத் தொருவா பவளத் திருவாயால்**
**அஞ்சேல் என்ன ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. 10**

***உரைநடை :-*** *பஞ்சேரடியாள் பாகத்தொருவா, அம்மானே, ஞானச்சுடரே, என்பவற்றை முதலிற் கொள்க.*

***உரை :-*** *செம்பஞ்சு ஊட்டிய அடி. (அல்லது பஞ்சுபோல் மெல்லிய) அழகிய திருவடிகளுடைய உமையம்மை பங்கனாகிய ஒப்பற்றவனே, அழகிய மேலோனே, அறிவுப்பிழம்பே, விருப்பத்தைத் தருகின்ற (அழகிய) சேல்மீன்போன்ற கண்களையுடைய மாதரது கோப வலையிற் சிக்குண்டு சிதைவுற்றேனாகிய நாயனைய நான், (நின்னைத் தவிர வேறு) யாதொரு துணையுமில்லாதேன், உனது பவளம் போன்ற அழகிய திருவாயால், அஞ்சாதே என்று சொல்வதை விரும்பினேன்.*

*வெகுளி - புலவி. புலவியாகிய வெகுளியே வெகுளப் பட்டாரைப் புறம்போகவிடாமலும், அணுகவிடாமலும், அணுகற்குரிய ஆத்திரத்தை மிகுவித்து வலைபோலப் பின்னி நைய வைக்கும் என்க. நைஞ்சேன் - நைந்தேன் என்பதன் மரூஉ.*

*எனக்கு அபயந்தரவும் வேண்டாம்; உன் வாயால் சொன்னாற் போதும், அதுவே எனக்கு ஆறுதலாம் என்பார் 'வாயால் அஞ்சேல்*

என்ன ஆசைப்பட்டேன்' என்கின்றார்.

இவ்வண்ணம் இப்பத்துப் பாடலும், இங்கே வா என்னும் அருளைப் பெறவும், எனையழைத்து உன்னைக் காணச்செய்யவும் என் முகம்பார்த்து இரங்கவும், திருவடியைச் சார்ந்து நிற்கவும், பாவம் இவன் இரங்கத்தக்கவன் என்று நீ சொல்லவும், முகவொளிநோக்கி முறுவல்காணவும், ஆயிரந்திருநாமம் சொல்லி ஏத்தவும், ஐயா ஐயாற்றரசே என அரற்றவும், உன் ஒளியான திருமேனியையும் பழவடியார் கூட்டத்தையும் காணவும், அஞ்சேல் என்று உன்வாயால் சொல்லவும் நான் ஆசைப்பட்டேன் என, ஆன்மா தன் குறையறிந்து தலைவனைச் சார விரும்புவதாகக் கூறுதலின் ஆன்ம இலக்கணம் உணர்த்தியமை காண்க.

***குறிப்பு :-* வெம் - விரும்பத்தக்க. அதனைச் சேலோடுங் கண்ணோடுங் கூட்டலாம். பஞ்சேர் - பஞ்சு + ஏர். பஞ்சுபோன்ற அழகிய.**

***திருச்சிற்றம்பலம்***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 26. அதிசயப் பத்து

*அடிகளார் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, தன்னையும் ஒரு பொருளாக ஏற்று ஆட்கொண்டு அடியார்களுள் ஒருவனாக ஆக்கிய அதிசயத்தை வியந்து இப்பத்தையும் பாடியருளுகின்றார்கள்.*

*அதிசயம் - வியப்பு. வியப்பாவது இதுவரை உண்டாகாததும், இனியும் உண்டாகக் கூடாததாகவும் உள்ள நிகழ்ச்சியொன்று நம் அனுபவத்திற்கு வந்தபோது விளையும் ஓர் சுவை. இதனை வடநூலார் அற்புதரசம் என்பர். பொறி புலன்களிற்சிக்கி உலகியலிலே உழன்று கிடக்கின்ற தன்னை, உயர்வற உயர்ந்த நிலைக்கு உயர்த்தியது ஓர் வியப்புத்தரும் நிகழ்ச்சியாதலின் அதனைப் பாராட்டிய இப்பத்துப் பாடலும் அதிசயப்பத்து எனப் பெயர்பெற்றது.*

*இதற்கு முத்தியிலக்கணம் அதாவது மோட்சத்தின் அடையாளம் என்று பழைய குறிப்புக் கூறுகிறது. அகத்தியச்சூத்திரம் "அடியரிற் கூட்டும் அதிசயப்பத்து, முடிவிலாத முத்தியிலக்கணம்" என்கின்றது.*

*பழையபுராணம், "வெருவி மலத்தினைச் சீலத்தொன் றாகும் அடியார் குழாத்துடனே கூட்டும், பரம ரருட்பெருமை மிகுதியைப் புகழ்ந்து பாடல் அதிசயப் பத்தாமே" என்கின்றது.*

*இவை அனைத்தையும் ஒத்துநோக்கின், ஆணவ மலத்திற்கு அஞ்சிய அடியார்களின் கூட்டத்தோடு சேர்ந்த சிவபெருமான் திருவருளை வியந்து கூறும் அணைந்தோர் தன்மையாகிற முத்தியிலக்கணம் அறிவிப்பது என்பது விளங்கும்.*

--------

***முத்தி இலக்கணம்***

***அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

***திருச்சிற்றம்பலம்***

***('செத்திலாப் பத்து' முதலிய மூன்று பத்துக்களும், இவ்வுலக வாழ்க்கையினின்றும் நீங்கி இறைவன் திருவடி கூடுதற்கண் அடிகளுக்கு இருந்த விரைவு கூறுதலாகவே அமைந்தன. இனி அப்பால் வரும் புணர்ச்சிப் பத்து முதலிய மூன்று பத்துக்களும் அன்ன அவற்றது இடைக்கண் தம்மை இறைவன் ஆண்டுகொண்ட கருணைத் திறத்தை***

*தன்மையினின்று அப்பாற்பட்டனவும் ஆகிய திருவடிகளென்க. அங்ஙனமாகவும் பின்னர் 'ஒண்மலர்த் திருப்பாதம்' என்றது தன்னெஞ்சத்துப்பட்டு அனுபவத்திற்குரியதானபோது ஒளி பொருந்திய மலர்போல இருந்தது என்று ஒருவகையால் அநுபவம் உணர்த்திய அளவினதாகக் கொள்க.*

*இந்தத் திருப்பாடலே காழித்தாண்டவராயர் திருவாசக வியாக்கியானம் எழுதுதற்குக் காரணமாக விளங்கினமையை, "தகரவித்தியாபுரமாகிய திருத்தில்லையில் வாழும் சிவனடியார் இவ்வுரை அனுபூதி என்பதைத் திருவுளங்கொள்வதோ என்று எண்ணி, திருவுளச்சீட்டொன்று எழுதிப் பொன்னம்பலவாணர் சந்நிதியான முத்தி பஞ்சாட்சரப்படியில் வைக்க, இப்பாடல் தோன்றித் திருவடிப் பெருமை உணர்த்த, அதனுடன் அருள் ஓலையும் காட்டி, ஆண்டருள் செய்ததென்க" என்னும் வரலாறு நன்கு விளங்கும். இந்நிகழ்ச்சியை,*

*குறுமுனி யெழுகடலை யும்பருகும்*
*கொள்கைபோற் றில்லையி னடஞ்செய்(து)*
*உறுபவனு மகிழ்ந்தருளச் சீட்டங்(கு)*
*உதவுமுத் தரவினாற் சிறந்த*
*மறுவிலா விடையான் திருவடிப்பெருமை*
*வாதவூ ரையன்முன் விடுத்த*
*சறுவநற் கருத்தும் தாண்டவராயன்*
*தகுமுரை செய்தனன் தமிழால்.*

*என்னும் இராமசாமிபாரதியின் பாயிரப்பாடல் குறிக்கின்றது.*

***குறிப்பு :-** வைப்பு - எய்த்த காலத்துப் பயன்படுவதற்காகச் சேமித்து வைத்திருப்பது; மாடு - செல்வம்; வைப்பு என்பதற்கு இடமெனப் பொருள் கொள்வாருமுளர். இடருற்ற காலை பயன்படுதலால், 'வைப்புமா' டென்றார். நிலைத்த இன்பந் தருதலால் 'மாணிக்கத்து ஒளி' என்றார். செப்பு - குங்குமம் முதலியன வைத்தற் குரிய சிமிழ், பெருமையால் ஒப்பில்லாதன என்றார். தன்மையால் உவமனில் இறந்தன வென்றார். உவமன் - உவமம். உவமையில்லாது கடந்த என்றுங் கொள்க.*

**429.** **நீதி யாவன யாவையும் நினைக்கிலேன் நினைப்பவ ரொடுங்கூடேன்,**
**ஏத மேபிறந் திறந்துழல் வேன்தனை என்னடி யானென்று,**
**பாதி மாதொடுங் கூடிய பரம்பரன் நிரந்தர மாய்நின்ற,**
**ஆதி ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 2**

*__உரை :-__ நியாயமாயுள்ள எவற்றையும் எண்ணமாட்டேன். அவற்றை எண்ணி நடப்பவரோடும் நான் சேரமாட்டேன். குற்ற வடிவாகவே, பிறந்தும் இறந்துந் துன்புறுகிற என்னை, தன்னுடைய அடியவனென்று கருதித் திருமேனியிற் பாதி பெண்ணொடுங் கூடிய மிகமேலோனாய் அழிவின்றி நின்ற ஆதி முதல்வன் ஆட்கொண்டு தன்னடியார்களுட் சேர்ப்பித்த வியப்பினை யறிந்தோமே.*

*நீதி - வேதாகமங்களில் விதிமார்க்கங்களாகவும், ஞானமார்க்கங் களாகவும் செய்யத்தக்கவை இவை என விதிக்கப் பெற்றவை. அவை சரியை முதலாகிய தொண்டுகள். அவற்றைச் செய்து அருளுக்கு இலக்காகுதல் உடலெடுத்த உயிர்களின் கடமை. இதனை உணர்ந்து முற்பிறப்பில் பரிபாகமுற்ற புலி, பசு, யானை முதலிய விலங்கினங் களும், கரிக்குருவி நாரை கோழி முதலிய பறவைகளும், ஈ எறும்பு முதலியவைகளுங்கூடச் சரியை கிரியைகளைச் செய்து சிவலோகம் பெற்றுள்ளனவே என்று அறிந்து ஒழுகவேண்டிய யான் நீதிகளை நினைக்கவும் செய்யேன் என்றார்.*

*ஏதம் - துன்பம். அது பிறவிக்கேதுவாகிய துன்பம். அது வினையின் வந்தது. பிறந்த பின்னர் நுகருவதும், ஈட்டுவதும் துன்பமே ஆதலின் வினைக்கு விளைவாகியது. ஆகவே, ஏதமே பிறந்து என்பதற்குத் துன்பத்தால் பிறந்து துன்பத்திற்கு இடமான பிறவி எனப் பொருள்கொள்க. கறங்கும் சகடமும் போலப் பிறத்தலும் இறத்தலும் மாறிமாறி வருதலின் 'பிறந்து இறந்து உழல்வேன்றனை' என்றார்.*

*தன் அடியரிற்கூட்டினமையாவது எனது அகப்பற்று புறப்பற்றையும், அதற்கேதுவாகிய அறியாமையையும் அதற்கேதுவாகிய ஆணவமலத்தையும், அது பரிபாகமுறுத்தக் கூட்டப்பெற்ற மாயா மல கன்மமலங்களையும் போக்கிச் சுத்தான்மாவாக்கிச் சிவத்தையே நோக்கிச் சிவமயமாக விளங்கும் சிவனடியார் கூட்டத்தில் சேர்த்தல்.*

*__குறிப்பு :-__ ஏதம் - குற்றம். ஏதமே - ஏதமேயாய் - குற்றத்தின் வடிவமேயாய்; வீணே என்றும் பொருள் கொள்ப. உழல்வேன் - அலைந்து துன்புறுவேன். நிரந்தரமாய் - நித்தியமாய்.*

**430.** முன்னை என்னுடை வல்வினை போயிட முக்கணதுடை யெந்தை,
தன்னை யாவரும் அறிவதற் கரியவன் எளியவன் அடியார்க்குப்,
பொன்னை வென்றதோர் புரிசடை முடிதனில் இளமதி யது வைத்த,
அன்னை ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. **3**

*__உரைநடை :-__ முன்னை யென்னுடைய வல்வினை போயிட என்பதை ஆண்டு என்பதனோடு முடிக்க.*

***உரை :-*** *மூன்று கண்ணையுடைய எமது அப்பன், தனக்குத் தானே தலைமையானவன், யாருமறிய வொண்ணாதவன், அன்பர்க்கு எளியனாய் விளங்குபவன். பொன்னினொளியினும் மேம்பட்ட ஒப்பற்றதாயமைந்த சடையினாலாகிய முடிமீது பிறையினை வைத்தருளிய தாய்போன்ற அவன், பக்குவம்வரு முன்னே என்னுடைய கொடிய வினைகள் அகன்றொழியும்படி என்னை ஆட்கொண்டருளித் தனதடியாருட் சேர்ப்பித்த வியப்பினை யறிந்தோமே.*

*சிவனடியார்களுடன் அடியேன் கூடுதற்குத் தடையாக இருந்தவை மல மாயா கன்மங்களே என்பதைத் திருவுளம் பற்றி, மல மாயைகளைப் போக்கி ஆண்டமையை முன்னருள்ள திருப்பாடல்களில் தெரிவித்த அடிகள், இத்திருப்பாட்டில் முக்கண் - சோம சூரிய அக்கினிகளாகிற மூன்று கண்கள். இவை காலக்கருவி யாகிற சூரிய சந்திரர்களுக்கு ஒளி தருவனவாயும், அக்கினிக்கு வலியும் சுட்டொன்றுவிக்கும் ஆற்றலும் அளிப்பதாயும், யாகசாட்சியாகவும், யாகாக்கினிக்கு மூலமாயும் அமைந்தவை என்பது சிவாகமக் கருத்து. அவற்றைத் தம் கண்களாகக் கொண்டது ஆன்மாக்களுடைய வினைப்போகங்களை வரையறுத்துக் காட்டவும், அவர்கள் தீவினைகளைச் சுட்டு எரித்துத் தம் திருவடிக்கீழ் ஒன்றுவிக்கவும் என்க.*

*யாவரும் - பதமுத்தியிலும், பதவிகளிலும் இருப்பவர்களாகிய அயன் முதல் அனந்தாதிவரை உள்ள எவராலும் என்க. அவர்கள் மலமுடையவர்களாதலின் மலரகிதனாகிய இறைவன் அவர்களால் அறியவொண்ணாதவனாயினன் என்க.*

***குறிப்பு :-*** *முன்னை - முன்னாக. இதனை வல்வினை என்பதனோடு சேர்த்துப் பழமையாகிய வினையென்பாருமுளர். போயிட - விரைவிலொழிய. வினைக்கு ஆட்பட்டிருந்ததனால் 'உடைவல் வினை' என்றார். தன் + ஐ - தன் தலைவன். இதனை 'யறிவதற்கு' என்பதனோடு சேர்த்துத் தன்னை யறிவதற் கரியவன் என்று முரைப்பர். புரிசடை - கட்டிய சடை. சடையின் பிரிவுகளைப் 'புரி' என்றலுமுண்டு.*

**431.** பித்த னென்(று) எனை உலகவர் பகர்வதோர் காரணம் இது கேளீர்,
ஒத்துச் சென்றுதன் திருவருட் கூடிடும் உபாயம தறியாமே,
செத்துப் போய்அரு நரகிடை வீழ்வதற்கொருப்படு கின்றேனை,
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. **4**

***உரை :-*** *உலகத்தவர்கள் என்னைப் பித்தம் பிடித்தவனென்று*

சொல்லுவதற்குக் காரணமிது கேட்பீர்களாக. இறைவனது திருவருளோடு மனமொத்து நடந்து அதனை விரைவி லெய்துகின்ற தந்திரத்தைத் தெரியாமல் இறந்து தாண்டுதற்கரிய நரகத்தினிடை வீழ்வதற்கு இசைகின்ற என்னை அப்பன் ஆட்கொண்டு தன்னடியார் கூட்டத்திற் சேர்ப்பித்த வியப்பினை யறிந்தோம். (அறிந்து திகைத்தாற் போல் நின்றோம்).

பொன்னும் மணியும் வழியிற்கிடக்கும்; அவற்றை மிதித்து இடறிவிட்டு ஓட்டைப் பொறுக்கும் உலகவனைப் பித்தனென்று உலகம் சொல்வதுபோல, திருவருளோடு கூடி நித்தியானந்தம் அனுபவிக்கவேண்டிய அடியேன் திருவருளோடு கூடாமல் அருநரகில் வீழ்ந்து அவதிப்பட்டேன்; ஆதலால், உலகவர் என்னைப் பித்தன் என்றனர் என்கின்றார்கள். உலகவர் என்றது ஈண்டுக் கன்ம பூமியிலுள்ள பசுபோதமுனைப்புள்ள மக்களை அன்று; ஞானபூமியிலே உலாவும் சிவஞானியரை என்க. அவர்களுக்குத்தான் இவர் பொருந்தவேண்டியதை விட்டுப் பொருந்தத் தகாததைப் பொருத்தி உழல்வது புரியும்; ஆகவே இரங்கிப் பித்தன் என்று உரைப்பர் ஆதலான் என்க.

***குறிப்பு :-*** *திகில் பிடித்தாற்போல் நிற்பவனை உலகினர் பித்தனென்று இகழ்கின்ற மரபுபற்றி இச்செய்யுளியற்றினர். 2-ம் அடியில் தன் என்பது அத்தனைக் குறிக்கும். அருநரகு பொறுத்தற்கரிய துன்புடைய நரகு என்பாருமுளர். ஒருப்படுகின்றேன் - ஒருப்படு மியல்புடை என்னை.*

**432.** **பரவு வாரவர் பாடுசென் றணைகிலேன் பன்மலர் பறித் தேத்தேன்**
**குரவு வார்குழ லார்திறத் தேநின்று குடிகெடு கின்றேனை**
**இரவு நின்றெரி யாடிய எம்மிறை எரிசடை மிளிர்கின்ற**
**அரவன் ஆண்டுதன் அடியாரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 5**

***உரை :-*** *இறைவனைத் துதிப்பவர்களிடத்தே சென்று சேர மாட்டேன். பலவகையான பூக்களைப் பறித்து இறைவன் மீது தூவி வணங்கேன், குரவமலரணிந்த நீண்ட கூந்தலையுடைய மாதர் சார்பிலே நின்று பிழைப்புக்குக் கேடு தேடுகின்ற என்னை, எல்லாம் ஒடுங்குகின்ற சங்கார காலமாகிய இரவிலே தான் ஒருவனேயாய் நின்று சோதி மயமாய்க் கூத்தியற்றுகின்ற எமது தலைவன், செந்தீப் போன்ற சடையின்கண் மின்னுகின்ற பாம்பினை யுடையவனாகிய பெருமான் ஆட்கொண்டு தனதடியாருடன் சேர்ப்பித்த வியப்பினை அறிந்தோமே.*

*பரவுவார் - இறைவன் புகழ்களைச் சொல்லித் துதிப்பவர். பாடு - பக்கம். துதிப்பவர்களின் பக்கம் சென்று துதிகளைக் கேட்பின் ஊமைத்தசும்பில் நீர் நிறைந்தாற்போலச் சிறிது சிறிதாகவேனும் சிந்தையில் அன்புநீர் சுரக்கும். அதனால் சிவபூசை செய்யும் விருப்புண்டாம். ஆதலால், புகழ்வார்பக்கமே போகேன். அங்ஙனமிருக்க எங்ஙனம் மலர்பறித்திட்டு ஏத்துவேன் என்பார். தன் குறைகளை விதியும் உடன்பாடுமாகிய இருவகையானும் உணர்த்துகின்றவர் 'அணைகிலேன்; ஏத்தேன்; குழலார்திறத்தே நின்று குடிகெடுகின்றேன்' என்றார்.*

***குறிப்பு :-*** *பாடு - இடம், குணம், பெருமை. பன்மலர் - நிலப்பூ, நீர்ப்பூ, கொடிப்பூ, கோட்டுப்பூ என்பன. குரவு - ஒருவகை வாசனை யுள்ள மரம். வார் - நீண்ட, எரியாடிய - ஊழித்தீயிலாடிய என்பது முண்டு. எரிசடை - ஒளிர்கின்ற சடை என்றலுமுண்டு.*

**433. எண்ணிலேன் திரு நாமஅஞ் செழுத்தும்என் ஏழைமை யதனாலே,**
**நண்ணி லேன்கலை ஞானிகள் தம்மொடு நல்வினை நயவாதே,**
**மண்ணிலேபிறந் திறந்துமண் ணாவதற் கொருப் படுகின்றேனை,**
**அண்ணல் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 6**

***உரை :-*** *என்னுடைய அறியாமையினாலே இறைவனுடைய திருப்பேராகிய திருவைந்தெழுத்தினை நினைந்திலேன். அருட்கலை வல்ல அறிஞரோடு சேர்ந்திலேன். நற்செயல்களை விரும்பாது இம்மண்ணுலகிற் பிறந்து, இறந்து மண்ணாய்ப் போவதற்கு இயைபுடைய என்னைச் சிறப்பு மிகுந்த பெருமான் ஆட்கொண்டருளித் தன்னடியார்களோடு சேர்ப்பித்த வியப்பினை யறிந்தோமே.*

*திருவைந்தெழுத்தை ஓதுதலும் கலைஞானங்களை அடைதலும் ஞானியர்தம்மோடு கூடிப் பதி புண்ணியமே புரிதலும் பிறவி எடுத்த உயிர் பேறடையும் நெறிகளாக இருக்கவும், யான் அவற்றைச் செய்யாது, மண்ணிலே பிறந்து இறந்து மண்ணோடு மண்ணாகப் போவதற்கு இருக்கின்றேன்; என்னையும் அண்ணல் ஆண்டு அடியார் கூட்டத்திற்கூட்டினார்; இதுவோர் அதிசயம் காணீர் என்பது கருத்து.*

*திருநாம அஞ்செழுத்து - அஞ்செழுத்து மந்திரமுமதுவே, அவர் பெயருமதுவே என்றபடி. எண்ணிலேன் - உருச்செபியேன் என ஓதுமுறையினும், தியானியேன் என நிற்குமுறையினும் உரைகொள்க. அங்ஙனம் எண்ணாமைக்குக் காரணம் என் ஆணவமலகாரியமாகிய*

*அறியாமையே என்பார் 'ஏழைமை யதனாலே எண்ணிலேன்' என்றார். வாய்வைத்தளவில் மருந்தாய் வாசனாமலங்கெடுப்பது ஐந்தெழுத்தாகலின் அதனை எண்ணி மலவாசனையை அகற்றேன்; அன்பரோடு மருவுதலும் அங்ஙனமே நன்மை பயப்பதாகலின் அதனையும் செய்கிலேன் என்றவாறாம். உயிர்கள் உலகில் உடலொடு வந்தது சிவபுண்ணியங்களைச் செய்து சிவகதிசாரவேயாதலின் அடியேன் அங்ஙனம் செய்யாது, மண்ணிலே பிறந்து நல்வினை நயவாது இறந்து மண்ணாவதற்கு ஒருப்படுகின்றேன் என்பதாம்.*

***குறிப்பு :-*** *வாசனாமலம் நீங்குவதற்குத் திருவைந் தெழுத்தை நினைதல் சிவஞானபோதம் 9-ம் சூத்திரத்திற் கூறியதைக் காண்க. பிரணவத்தை ஐந்தெழுத் தெனலுமுண்டு. ஏழைமை - அறியாமை. நல்வினை - நற்செயல். இது இருவினைகளுட் சேர்ந்த நல்வினையன்று. அது பயன்கருதிச் செய்யப்படுவது, பயன் கருதாத நற்றவமே ஈண்டு குறிக்கப்பெற்றது. இறந்தவுடன் உடம்பானது மண் முதலிய ஐம்பூதத்திற் கலத்தலால் 'மண்ணாவதற்கு' என்றார்.*

**434.** **பொத்தை ஊன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும் பொழுகிய பொய்க்கூரை**
**இத்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற் சுழித்தலைப் படுவேனை**
**முத்து மாமணி மாணிக்க வயிரத்த பவளத்தின் முழுச்சோதி**
**அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே.** **7**

***உரை :-*** *துளைகளுள்ள தசையைச் சுவராகவுடையதாய்ப் புழுக்களினாலே வேயப்பெற்று, வலியற்று நிணநீர் வடிகின்ற நிலையற்ற கூரையை உடையது (இவ்வுடம்பு). இதனை நிலைத்த பொருளாக எண்ணித் துன்பக்கடலின் சுழியில் அகப்படுவேனை, மணிகளுட் சிறந்த பெருமணியாகிய முத்து, மாணிக்கம், வயிரம், பவளம் இவற்றின் முழுவொளியும் கலந்தாற்போன்ற திருமேனி உடைய அப்பன், ஆட்கொண்டு தன்னடியாரோடு சேர்ப்பித்த வியப்பினை யறிந்தோமே.*

***குறிப்பு :-*** *உடம்பகத்தே உள்ள தசையைச் சுவராகவும், தோல் முதலியவற்றைக் கூரையாகவுங் கூறினர். முத்து, வைரம் என்பவற்றின் நிறம் திருவெண்ணீற்றினொளிக்கும், மாணிக்கம், பவளம் என்பவற்றின் ஒளி திருமேனியின் ஒளிக்கு முவமைகளாயின. மாமணி முத்து என மாற்றுக. இதை என்பது இத்தை என விரிந்தது, பொத்தை யென்பதற்குப் பருத்தது எனவுங் கூறுப. பொத்தை - பொள்ளல். மயிர்த்துவாரம்.*

435. நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து நுகமின்றி விளாக்கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத் தெழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 8

*__உரைநடை :-__ எழுதரு சுடர்ச்சோதி என்பதை முதலிற் கொள்க.*

*__உரை :-__ எழுந்து விளங்கித் தோன்றும் பிழம்புபோன்ற ஒளி யுருவனாகிய பெருமான், முன்னாளிலே தன்னுடனில்லாதபடி என்னை விலக்கிச் சிறுகுடிலாகிய உடம்பினுட் புகுத்தி இப்பிறவியிலே தக்க பருவத்திலே திருவருட்கண்ணால் பார்த்து நுட்பத்தை உணர்த்துவதாகிய நொடிப்பொழுதில் சொல்லப்படுஞ் சொற் போன்ற உபதேசமொழி யுரைத்து, நுகத்தடியாகிய தொடர்பில்லாமல், (திருவடியிலே) என்னைப்பூட்டிப் பிறவிக்கடலிலிருந்து மேலே தூக்கி உபதேசம் பெறுதற்கு முன்செய்த பயனில் செயல்கள் ஒழியும்படி பாசமாகிய குற்றத்தைத் தொலைத்து வீட்டிற்குரியவனாக்கி என்னை யாட்கொண்டருளித் தன்னடியாருடன் சேர்த்த வியப்பினை யறிந்தோமே.*

*குரம்பையிற் கூட்டியவுடன் பொறிகளைத் துணைக்கொண்டு புலன்களைத் துய்த்துப் போகமே பெருக்கி வருவினைக்கு வழிதேடிப் பிறவிக்கடலின் நடுவையடைந்து கரைகாணாது தவிக்க இருந்த என்னை 'இவன் அறியாமை இருந்தபடி என்னே' என்று இரங்கிக் கருணைபாலித்ததை 'நோக்கி' என்றதால் உணரவைத்தமை காண்க. கடாட்சம் புரிந்து என்பது ஒருரை. பழையவுரை சகலப்படுவதான தேகமருளி என்பது.*

*நுண்ணிய சொல் - மிக நுட்பமான ஒலியையுடைய சொல். அது சிவயநம என்பது. அதனைச் செய்தலாவது 'விதி எண்ணும் அஞ்செழுத்தே' என்றபடி எண்ணச்செய்தல். நொடி அன்ன சொல் செய்து - நொடித்தற்றொழில் புரியுங்காலத்து முவ்விரல் விலகப் பெருவிரலோடு சுட்டுவிரலனைய நிற்கும் நொடியை உராத்துணை தேர்த்தெனப் பாசம். ஒருவப் பசுபதியை அடைதலாகிய குறிப்புணர்த்தும் சொல்லாகச் செய்து. ஆகவே எண்ணுநிலையும் நிற்குநிலையும் ஒன்றாகக் காட்டி என்பதாம். பழையவுரை 'பரிபாக காலநுட்பச் சத்திநிபாதம் விரைவிலே அருளி' என்பது.*

*நுகம் - நுகத்தடி. ஏரிற் பிணைக்கப்பட்டு மாட்டின் கழுத்தில் பூட்டப்படும் மரம். நுகமின்றி உழமுடியாது. ஆயினும் விச்சதின்றி*

*விளைவு செய்யுமிறைவன் நுகமின்றி உழும் வன்மையும் உடையான் எனவுணர்க. விளா - வட்டமாக உழுதல். விளாக்கைத்து - வளைய வளைய உழுது. வயலுழுதல் போல என்பது பழையவுரை. உழுதலை விளாவடித்தல் என்பது உழவர் வழக்கு. இறைவன் சாதனங்களின்றியே சாதிக்கும் பேராற்றலன் என்பதுணர்த்தியவாறாம்.*

*எழுதரு சுடர்ச்சோதியாக்கி - உதயசூரியனாக்கி. சிவஞானியாக்கி என்றவாறு. ஆண்டு - மீண்டும் மலகன்மங்கள் வந்து தாக்கிப் பதிபோதம் பிற்பட்டொழியாது அதுவே விஞ்சி விளங்க ஆட்கொண்டு. அது கெடாமைப்பொருட்டு அடியார் கூட்டத்தும் கூட்டினான் அது அதிசயமாம் என்றது.*

***குறிப்பு :-** இறைவன் தன்னொடு நின்றது என்றது, முற்பிறவியில் கயிலையிலிருந்தமையைக் குறிக்குமென்றும், கேவல நிலையிலிருந் தமையைக் குறிக்குமென்றுங் கூறுப. நொடியன என்பதில் நொடி - கைநொடிப் பொழுதில் கூறப்படுஞ் சொல். அன - அன்ன, போன்ற, அத்தகைய சொல்லினை "ஓம்" என்ப. சொல்லின்பொருளை உள்ளத்திற் பதியவைத்தமையாற் 'சொற் செய்து' என்றார். நுகம் - வண்டியிற் காளைகளைப் பூட்டும் மரத்தடி. 'நுகமின்றி' என்றது சுட்டறிவின் றொடர்பின்றி. விளாக்கைத்து - சேர்த்து, பூட்டி, கலக்கச் செய்து. விளாக்கை - விளாவுதல், கலத்தல், விளாக்கை என்பது வினையாக வழங்கப்பட்டது. பொய் - பயனில் செயல். துகள் - குற்றம்.*

**436.** **உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம் போல்**
**பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள் அப்பொருள் பாராதே**
**பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்சொல் தெளியாமே**
**அத்தன் ஆண்டுதன் அடியாரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 9**

***உரை :-*** *(வினைக்கு ஈடாக) வந்தடைந்த வுடம்பின் மேலான பலன், வாசனையுடைய பூவின்கண் கண்ணால் பார்க்கப்படாது எழுகின்ற வாசனைபோல, ஐம்புலனால் பற்றப்படுவதோர் தன்மை யிலாத மேலாகிய மெய்ப்பொருளைக் காணுதல். அம்மெய்ப் பொருளைக் காண முயலாது வினைக்கேற்றபடி கிடைத்த வினைப் பயனைக் கிடைத்த முறையே அனுபவித்தொழியும் அறிவீனர் பேச்சுகளை நம்பாதிருக்குமாறு, அப்பன் என்னை யாட்கொண்டு தன்னடியாருடன் சேர்ப்பித்த வியப்பினை யறிந்தோமே.*

*உயிர்களின் வினைநுகர்ச்சிக்குத் தக்கவாறு இறைவன் உடலைக் கொடுக்க உடல் வந்தடைகின்றதேயன்றி 'இவ்வுடல் வலியவுடல்,*

*அழகிய உடல், இதுதான் வேண்டும்' என்று தாமே கொள்ள உயிர்களுக்கு என்றும் சுதந்திரமின்மையின் உற்ற யாக்கை என்றருளினர். உற்ற யாக்கை - வினைக்கீடாக இறைவன் உதவ வந்து பொருந்திய யாக்கை.*

*'எமக்குச் சிவபெருமான் இப்பிறவியைக் கொடுத்தது தம்மை வணங்கிப் பேரின்பம் பெரும்பொருட்டேயாம்' என்பது நீதி வாக்கியமாகலின் இவ்யாக்கையால் யாம் அடையும் பேறு பரம்பொருளைப் பெறுதலே என்பது. அப்பரம்பொருள் பூவினிற் கந்தம் பொருந்தியவாறுபோலச் சீவனுக்குள்ளே சிவமணம் பூக்க நிற்கின்றது. அதனை, இடைவிடாது நுகர்தலே தம் கடமையா யிருக்கவும், அதனைப் பாராமல், தாம் கண்டதைக் கண்டு பயனுகர்தலின் பித்தர் என்றார்.*

***குறிப்பு :-** உறுபொருள் - மிகுந்த பயன். மலர் எழுதரு நாற்றம் பற்றப்படுவது போல் பற்றமுடியாத தன்மையுடைய பரம் பொருள் என்று கூறுவாரு முளர். பெற்றவா வென்பதை நுகர்ந்திடும் என்பத னோடு முடிக்காமல், பெற்ற என்பதனோடு முடித்து அடைதற்குரிய முறையிலே யடைந்த எனப் பொருள் கொள்வதுமுண்டு. பித்தர் - அறிவீனர்.*

**437. இருள் திணிந்தெழுந் திட்டதோர் வல்வினைச் சிறுகுடி லிதுஇத்தைப்**
**பொருளெ னக்களித் தருநர கத்திடை விழப் புகு கின்றேனைத்**
**தெருளும் மும்மதில் நொடிவரை யிடிதரச் சினப்பதத் தொடுசெந்தீ**
**அருளும் மெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கிய அதிசயங் கண்டாமே. 10**

***உரை :-** அறியாமையாகிய ஆணவமலச் செறிவால் ஏற்பட்ட தாகிய கொடிய வினைகளா லமைந்த சிறிய குடிசை இவ்வுடம்பு. இதனை நிலைப் பொருளாக எண்ணி மகிழ்ந்து கடத்தற் கரிய நரகத்தினிடை விழப்போகு மென்னை, தெளிவாக விளங்குஞ் சுவர்களையுடைய முப்புரமானது நொடிப்பொழுதி லிடிந்துவிழும் படியாகக் கோபக் குறிப்பொடு செந்நிறமான தீயாகிய அம்பை விடுத்தருளிய உண்மைவழியே வடிவமாக வுடையவன், எனது பொய் வழியைத் தொலைத்த வியப்பினை யறிந்தோமே.*

*இவ்வுடல் அறியாமையால் விளைந்த வினைகளை நுகர்வதற்காக இறைவனால் அருளப்பெற்றது. இதனை உண்மை என்று களித்து நான் நரகிடைப் புகுகின்றேன்; என்னையும் திரிபுரம்*

எரித்த சினக்குறிப்போடுகூடிய உண்மை நெறியால் பொய்ந்நெறி புகாமே தடுத்து ஆட்கொண்டான் இறைவன்; அவ்வதிசயம் காண்போமாக என்பது கருத்து.

இருள் - ஆணவம். அது ஆன்மாவின் அறிவு இச்சை செயல்கள் காரியப்படாதவாறு மறைக்கும் அறியாமையை விளைவித்தலின் இருள் எனப்பட்டது. ''இருள் சேர் இருவினையும் சேரா'' என்ற திருக்குறளையும், அதன் உரையையுங் கொண்டு அறியாமையின் செறிவால் விளையும் வினை என்பதையுணர்க.

வல்வினை - வலிய வினை. இறைவன் கருணையாலும், நுகர்ந்து கழிப்பதாலும் அன்றி வேறெவ்வுபாயத்தாலும் அகற்ற முடியாதது என்றவாறு. இவ்வினைகள் அவிச்சை காரணமாக ஆன்மாவினிடம் தோன்றுவன, அவிச்சை ஆணவமாகிய மூலமலங் காரணமாக விளைவது என்ற காரண காரிய இயைபு உணர்க.

**குறிப்பு :- இருள் - அறியாமைக் கேதுவாகிய ஆணவத்தை யுணர்த்தும். திரிபுணர்ச்சியை யுண்டாக்கும் மாயையினை இருளென்பாரு முளர். திணிந்து - மிகுந்து. வினைப்போகமே தேகமாதலின் வல்வினைச் சிறுகுடி லென்றார். இரும்பு, வெள்ளி, பொன் இவற்றாலாகிய சுவர்களை முப்புரங்கள் உடையவாயிருந்தன. அவை ஆகாயத்தில் விளங்கினபடியால் தெருளும் மதிலென்றார். மதில் - கோட்டைக்கு ஆகுபெயர். பதம் - அடையாளம். நெறியென்பது ஆகுபெயர்.**

**திருச்சிற்றம்பலம்.**

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 27. புணர்ச்சிப் பத்து

*("இன்றே போல்கநும் புணர்ச்சி" (புறம். 58) என்புழிப் போல, 'புணர்ச்சி' என்பது இங்கு ஒருங்கிருத்தலைக் குறித்தது. எனவே, 'இறையுலகத்தில் சென்று இறைவன் திருமுன்பிருத்தலைக் கூறும் பத்துத் திருப்பாட்டுக்களின் தொகுதியே இப் புணர்ச்சிப்பத்து' என்பதாயிற்று. இதனுள், நான்காம் திருப்பாட்டுள், 'புல்லியப் புணர்வது என்று கொல்லோ' என்னும் தொடரைச் சிறப்பாகக் கருதி இதற்கு, 'அத்துவித இலக்கணம்' எனக் குறிப்புரைத்தனர் முன்னோர். அத்துவிதம் - இறைவனும் ஆன்மாவும் இரண்டற்று நிற்கும் நிலை. இது திருப்பெருந் துறையில் அருளிச் செய்யப்பட்டது என்பதே பதிப்புக்களில் காணப்படுவது. இஃது இடை இடையே சில அடிகள் சீர் குறைந்து வரும் எண்சீரடி விருத்தத்தால் ஆயது. சில அடிகள் இங்ஙனம் சீர் குறைந்து வருதல் பற்றி இவற்றைப் பொதுவே 'ஆசிரிய விருத்தம்' என்றனர். இங்ஙனம் சில அடிகள் சீர் குறைந்துவரச் செய்தது, இவ்வாறு வருதலும் விருத்தத்திற்கு, இயல்பு என்பது பற்றி.*

*புணர்ச்சி - இறைவனுடன் ஒன்றிக்கலத்தல். அதனையுணர்த்தும் பத்துப் பாடல்களைக்கொண்ட இப்பகுதி புணர்ச்சிப்பத்தெனப் பெயர்பெற்றது. இப்பகுதியுள் 'புணர்ந்தே' என்ற சொல் மிகுதியாக வருதலும் இக்கருத்தை வலியுறுத்தும்.*

--------

***அத்துவித இலக்கணம்***

***ஆசிரிய விருத்தம்***

***திருச்சிற்றம்பலம்***

**438. சுடர்பொற் குன்றைத் தோளா முத்தை**
**வாளா தொழும்பு கந்து**
**கடைபட் டேனை ஆண்டுகொண்ட**
**கருணா லயனைக் கருமால்பிரமன்**
**தடைபட் டின்னுஞ் சாரமாட்டாத்**
**தன்னைத் தந்த என்னாரமுதைப்**
**புடைபட் டிருப்ப தென்று கொல்லோஎன்**
**பொல்லா மணியைப் புணர்ந்தே. 1**

***உரை*** *:- ஒளிர்கின்ற பொன் மலையைப் போல்வானை, தொளைக்கபடாத முத்தினை யொப்பானை, மிகவுங் கீழ்மைப் பட்டேனாகிய என்னை யாட்கொண்டு பயனில்லாத என் தொண்டை ஏற்றுக் கொண்ட அருட்கோயிலானவனை, கரிய நிறமுடைய திருமாலும் நான்முகனும் செருக்கினால் தடைபட்டு இன்னுஞ் சென்றடைய முடியாத, என்னுடைய கிடைத்தற்கரிய அருமருந்தை, பொள்ளலில்லாத என் மாணிக்கத்தைச் சேர்ந்து பக்கத்திற் பொருந்தியிருப்பது எந்நாளோ,*

*அடியேன் மலமாயாகன்மங்களோடு கூடி மாசுண்டு கிடப்பவன்; இறைவனோ ஒருகாலைக்கொருகால் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்ற பொன்மலை போல்வான்; பொன்மலையைச் சார்ந்த பொல்லாக் கருங்காக்கையும் பொன்னிறமாவது போலச் சகலான்மாவாகிய அடியேனும் அநாதி நித்த சுத்தராகிய பெருமானைச் சார்ந்து மலகன்மங்கள் அகன்று தூயனாவேன் என்று எதிர்நோக்குகிற குறிப்பால் இறைவனை எடுத்த எடுப்பிலே சுடர்பொற்குன்றாக அனுபவிக்கின்றார்.*

*கருணாலயன் - திருவருளுக்கு உறையுளானவன். கருணை - மேலார் கீழோர்மாட்டுக் கைம்மாறு வேண்டாது இரக்கத்தாற் செலுத்தப்பெறும் திருவுள்ளக்கனிவு. அதற்கு இடமானவன் கருணாலயன்.*

***குறிப்பு*** *:- மாற்றம் யாதுமில்லாத பயனைத் தருவதால் 'பொன் குன்ற' மென்றார். குறைவு யாதுமில்லாதது என்பார் 'தோளா முத்து' என்றார். வாளா - பயனின்றி. உரிச் சொல்லாகக் கொண்டு பயனற்ற என்றும் சொல்லலாம். கருணை + ஆலயன் - கருணாலயன். புடை - பக்கம். பட்டு - பொருந்தி. 'பொள்ளா' என்றது 'பொல்லா' என்றாயிற்று. பொள்ளாத - உளி முதலியவற்றால் செதுக்கப்படாத. இறைவன் தனக்கு உரியவனானது பற்றி 'என் பொல்லாமணி' யென்றார். பொள்ளா - துளையிடப்படாத என்ற பொருளுமுண்டு.*

**439.** ஆற்ற கில்லேன் அடியேன் அரசே
அவனி தலத்(து)ஐம் புலனாய
சேற்றி லழுந்தாச் சிந்தை செய்து
சிவனெம் பெருமா னென்றேத்தி
ஊற்று மணற்போல் நெக்குநெக்
குள்ளே உருகி ஓலமிட்டுப்

போற்றி நிற்ப தென்று கொல்லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 2

*__உரை :-__ மன்னனே! அடியே னிவ்வுலக வாழ்க்கையைப் பொறுக்கமாட்டேன். பூதலத்திலே ஐம்பொறிகளுக்கும் விடயமாகிய சேற்றின் கண்ணே ஆழ்ந்துவிடாதபடி சிவனடியைச் சிந்தித்து எமது தலைவனே என்று வாழ்த்தி மணலின்கண் சுரக்கின்ற ஊற்று நீர் போல, நெகிழ்ந்து நெகிழ்ந்து உள்ளத்தை உருக்கங்கொண்டு கூவியழைத்துப் பொள்ளலில்லா வென் மாணிக்கம் போல்வானாகிய உன்னைச் சேர்ந்து வணங்கி நிற்பது எந்த நாளோ.*

*__குறிப்பு :-__ 'அவனிதலத்து ஐம்புலன் ஆற்றுகிலேன்' என்றலு முண்டு. புலன் - பொறி ஏற்கும் பொருள். அதன்கண் அகப்பட்டால் எழுந்து விலகுவது கடினமாதலின் 'சேற்றி' லென்றார். ஊற்று மணலென்பதை மணல் ஊற்று என மாற்றுக. நெக்கு - நெகிழ்ந்து. ஓலம் - அடைக்கல ஒலி. அவனி - பூமி.*

**440.** நீண்ட மாலும் அயனும் வெருவ
நீண்ட நெருப்பை விருப்பிலேனை
ஆண்டு கொண்டஎன்ஆ ரமுதை
அள்ளூ றுள்ளத் தடியார்முன்
வேண்டுந் தனையும் வாய்விட் டலறி
விரையார் மலர் தூவிப்
பூண்டு கிடப்ப தென்று கொல்லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 3

*__உரை :-__ (வாமனாவதாரத்தில்) உலகை யளத்தற்பொருட்டு நெடிய திருவுருக்கொண்ட திருமாலும், பிரமனும், அஞ்சும்படியாக உயர்ந்த அனற்பிழம்பானவனை, தன் பால் விருப்பமில்லாத வென்னை யாட்கொண்டருளிய, கிடைத்தற்கரிய எனதருமருந்தை, பொள்ளலில்லாத என மாணிக்கம் போல்வானை யடைந்து மிகுதியும் இன்பம் ஊறுகின்ற அன்பர் முன்னே வேண்டியன வெல்லாம் வாய்விட்டரற்றி வாசனை பொருந்திய பூக்களைத் தூவி வணங்கித் திருவடியைச் சிரமேற் பூண்டுகொண்டு செயலற்றிருப்ப தெந்நாளோ.*

*__குறிப்பு :-__ அள்ளூறும் - மிகுதியாக ஊறும். கசிகின்ற எலும்பும் உருக என்றுரைத்தலு முண்டு. சீவ உபாதி ஒழியும்வரை துதிப்பதையே 'வேண்டுந்தனையும் வாய்விட்டலறி' என்றார். 'பூண்டு' என்பதற்கு அடிமைத்திறம் பூண்டு, திருவடியைப் பொருந்தி என்றுமுரைப்ப. விரை - மணம்.*

441. அல்லிக் கமலத் தயனும் மாலும்
அல்லா தவரும் அமரர் கோனுஞ்
சொல்லிப் பரவும் நாமத்தானைச்
சொல்லும் பொருளும் இறந்த சுடரை
நெல்லிக் கனியைத் தேனைப் பாலை
நிறையின் அமுதை அமுதின் சுவையைப்
புல்லிப் புணர்வ தென்று கொல்லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 4

**உரை :-** *அழகிய உள்ளிதழ்களை யுடைய தாமரையில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும், விண்ணவர்க்கரசனாகிய இந்திரனும், பிறரும் புகழ்ந்து துதிக்கின்ற திருப்பேருடையானை, சொல்லுலகத்தையும், பொருளுலகத்தையுங் கடந்த வொளியானவனை, நெல்லிப் பழத்தையும் தேனையும் பாலையும் பூரண நயம் அமைந்த அமுதத்தையும், அமுதத்தின் சுவையையும் போலத் தித்திப்பவனை, பொள்ளலில்லாத மாணிக்கம் போல்வானை இறுகப்பற்றி அத்துவித மாய்க் கலந்து நிற்ப தெந்நாளோ.*

**குறிப்பு :-** *அல்லி - அகவிதழ், சொல்லும் பொருளும் மாயா காரியமாதலால், அவற்றைக் 'கடந்த' என்றார். சரியை, கிரியை, யோகம், ஞானயோகம், ஞானத்தின் ஞானம் என்னும் நிலையில் நிற்பவர்க்கு இறைவன் இன்பந் தருமுறையை நெல்லிக் கனி முதலிய உவமைகளாற் குறிப்பித்தார் என்னலாம். புல்லி - இரண்டான உடல் ஒன்றாம் வண்ணம் இறுகத் தழுவி.*

**442. திகழத் திகழும் அடியும் முடியுங்
காண்பான் கீழ்மேல் அயனும் மாலும்
அகழப் பறந்துங் காண மாட்டா
அம்மான் இம்மா நிலம் முழுதும்
நிகழப் பணிகொண் டென்னை ஆட்கொண்
டாவா என்ற நீர்மை எல்லாம்
புகழப் பெறுவ தென்று கொல்லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 5**

**உரை :-** *செல்லச் செல்ல மிக்கு விளங்கும் அடியையும் முடியையுங் காணும்பொருட்டு மேலே பிரமனுங் கீழே திருமாலும் உயரப் பறந்தும், மிக அகழ்ந்துங் காணமுடியாத அப்பெரியோன் இப்பெரிய நில உலக முழுவதுஞ் செய்தி தெரியுமாறு என்னை ஏவல்*

*கொண்டு ஆண்டருளி, ஐயோ என்றிரங்கிய தன்மையனைத்தும் பொள்ளலில்லாத மாணிக்கம்போல் வானையடைந்து புகழ்ந்து பேசக்கிடைப்பது எந்நாளோ.*

*இயற்கைப்புணர்ச்சியுள் தலைவியைப் புணர்ந்த தலைவன் புணர்ச்சி மகிழ்ந்தபின் அவளைப் புகழ்வன். அதுபோல அயன் மாற்கும் அரிய பெருமான் எனக்கு எளிவந்து ஆட்கொண்டு வா என்ற கருணையை, நான் அவனோடு அத்துவிதக்கலவி நிகழ்த்தியபின் புகழவேண்டும் என்று எண்ணுகிறேன்; அஃது என்று சித்திக்குமோ என்று மனமிரங்கிக் கூறியவாறாம்.*

*திகழத்திகழும் அடி காண்பான் மால் கீழ் அகழ்ந்தும் காண மாட்டா அம்மான் எனவும், திகழத்திகழும் முடி காண்பான் அயன் மேல் பறந்தும் காணமாட்டா அம்மான் எனவும் கண்ணழித்துப் பொருள் கொள்க.*

***குறிப்பு :-** திகழத் திகழும் - மிகுதியாக விளங்கும். கீழ் மேலயனும் மாலும் என்றது எதிர்நிரல் நிறை. கீழ்மாலும் மேலயனும் எனக்கொள்க. அகழ்ந்து என்பது, அகழ என நின்றது. அம்மான் - அப்பெரியோன். நிகழ - செய்தி பரவ.*

**443.** **பரிந்து வந்து பரமா னந்தம்**
**பண்டே அடியேற் கருள்செய்யப்**
**பிரிந்து போந்து பெருமா நிலத்தில்**
**அருமா லுற்றேன் என்றென்று**
**சொரிந்த கண்ணீர் சொரிய உள்நீர்**
**உரோமஞ் சிலிர்ப்ப உகந்தன்பாய்ப்**
**புரிந்து நிற்ப தென்று கொல்லோஎன்**
**பொல்லா மணியைப் புணர்ந்தே.** **6**

***உரை :-** பேரின்பம் அடைய வேண்டிய உயிர் இங்ஙனம் தீச்சார்பாற் கெட்டலைகின்றதே என்று இறைவன் இரங்கிக் குருவாய் வந்து பேரானந்தத்தை முன்னமே அடியேனுக் கருள்செய்யவும், அவனைப் பிரிந்து பெரிய நிலவுலகத்தில் தங்கிக் கடத்தற்கரிய மயக்கமுற்றேனே யென்றெண்ணி யெண்ணிச் சிந்திய கண்ணீரோடு உள்ளம் உருகி நீர் பொழிய மயிர்க் கூச்செரிய மகிழ்ந்து அன்போடு பொள்ளலில்லாத மாணிக்கம் போல்வானைச் சேர்ந்து காதலித்து நிற்ப தெந்நாளோ?*

*குறிப்பு :-* *பெருமாநிலத்து என்பதில் மா என்பது அசை. 'சொரிய உள்நீர்' என்பதற்கு உயிரின் தன்மைகள் நீங்க என்றும் பொருள் கொள்க. புரிந்து - விரும்பி. பண்டே - குருந்தடியில் குருநாதனாக எழுந்தருளிய அன்றே.*

**444.** நினையப் பிறருக் கரிய நெருப்பை
நீரைக் காலை நிலனை விசும்பைத்
தனையொப் பாரை யில்லாத் தனியை
நோக்கித் தழைத்துத் தழுத்த கண்டம்
கனையக் கண்ணீர் அருவிபாயக்
கையுங் கூப்பிக் கடிமலராற்
புனையப் பெறுவ தென்று கொல்லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. **7**

*உரை :-* *அன்பரல்லாத ஏனையோருக்கு நினைவதற்கரிய வான், காற்று, நெருப்பு, நீர், நிலம் என்னும் ஐந்துமானவனை, தனக்கு நிகரானவர் யாருமில்லாத ஒரு பொருளைப் பார்த்து உடல் பூரித்துத் தழுதழுத்த தொண்டை ஒலிசெய்ய, கண்ணீர் அருவியாகப் பாய, கையினால் அஞ்சலி செய்து பொள்ளலில்லாத மாணிக்கம் போல்வானை யடைந்து அவனை நறும்பூவினால் அணிசெய்யக் கிடப்ப தெந்நாளோ?*

*குறிப்பு :-* *செய்யுள் பற்றி ஐம்பூதங்களை முறையாக வைக்கவில்லை. அன்பின் மெய்ப்பாட்டினால் தொண்டை தழுதழுத்து நாத்தடுமாறிக் கனைப்பது போல ஒலியெழுவதால் 'தழுத்தகண்டம் கனைய' என்றார்.*

**445.** நெக்கு நெக்குள் உருகி உருகி
நின்றும் இருந்துங் கிடந்தும் எழுந்தும்
நக்கும் அழுதுந் தொழுதும் வாழ்த்தி
நானா விதத்தால் கூத்தும் நவிற்றிச்
செக்கர் போலுந் திருமேனி
திகழ நோக்கிச் சிலிர்சிலித்துப்
புக்கு நிற்ப தென்று கொல்லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. **8**

*உரை :-* *உள்ளங் குழைந்து குழைந்து இடைவிடாது உருகி, நின்றாலும் இருந்தாலுங் கிடந்தாலு மெழுந்தாலும் சிரித்தாலும்*

*அழுதாலும், இடைவிடாது வணங்கி அவனை வாழ்த்திப் பற்பல வகையான ஆனந்தக் கூத்துகளுமியற்றிச் செவ்வானம் போன்ற அவன் திருமேனியை விளங்கப் பார்த்து உடல் புளகங் கொண்டு பொள்ளலில்லாத மாணிக்கம் போல்வானை யடைந்து அவனிடைப் புகுந்து அத்துவிதமாய்க் கலந்து நிற்பது எந்த நாளோ?*

***குறிப்பு :-** எச்செயல் செய்தாலும் இறைவனை வாழ்த்த வேண்டுமென்பார் 'நின்றுமிருந்தும்..... வாழ்த்தி' என்றார். நவிற்றி யென்பது கற்று என்றும் சொல்லி என்றும் பொருள் படினும் ஈண்டுக் கூத்தியற்றுதலைக் குறித்து நின்றது. மயிர் சிலிர்த்தல் வியப்பினா லாடுவது புக்கு நிற்பதென்றது, இறைவியா பகத்துள் அடங்கி நிற்றலை.*

**446.** தாதாய் மூவே ழுலகுக்குந்
தாயே நாயேன் தனையாண்ட
பேதாய் பிறவிப் பிணிக்கோர் மருந்தே
பெருந்தேன் பில்க எப்போதும்
ஏதா மணியே என்றென் றேத்தி
இரவும் பகலும் எழிலார் பாதப்
போதாய்ந் தணைவ தென்று கொல்லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. **9**

***உரைநடை :-** பெருந்தேன் பில்க என்பதை அணைவது என்பதனோடு முடிக்க.*

***உரை :-** பழமையாகிய ஏழுலங்களுக்கும் தந்தையானவனே, தாயானவனே, நாயனைய என்னை யாட்கொண்டருளுபவனே! பிறவி நோய்க்கு ஒப்பற்ற மருந்தே, எக்காலத்திலும் எவ்விதப் பயனுமாகின்ற மாணிக்கமே என்று இரவும், பகலும் இடைவிடாது வாழ்த்திப் பொள்ளலில்லாத மணிபோல் வானை யடைந்து அழகு நிறைந்த அவனுடைய திருப்பாத மலரைச் சிவானந்தம் பெருகும்படி அறிவினாலாராய்ந்து சார்வது எந்த நாளோ?*

*உலகு சுவர்க்கம் மத்தியமம் பாதாளம் என மூவகையாகவும், பூலோகம், புவர்லோகம், சுவர்க்கலோகம், தபோலோகம், மகாலோகம், சனலோகம், சத்தியலோகம் என ஏழாகவும் பிரிக்கப்பெறுதலின் 'மூவேழுலகுக்கும் தாயே தந்தையே' என்றார்.*

*தாய் தந்தை என்பதே உலகியல் மரபாயினும் முதற்கண் தாதாய்*

*என்றது சிவமாகிய தாதையினின்றே தோற்றக்காலத்துச் சத்தியாகிய தாய் பிரிதலானும், ஆதிக்கண் சிவம் ஒன்றே சத்தியைத் தன்னகத்தடக்கி நிற்றலானும் என்க.*

*பேதாய் என்றது அன்பு மீதூர்ச்சியால் விளைந்த ஏச்சுரை. ஒன்றற்கும் பற்றாத சகலான்மாவாகிய என்னையும் பரிபாக முறுத்தி ஆட்கொண்டதால் இறைவன் பேதை எனப்பட்டார் என்க. இறைவனே மருந்தாதலை 'மருந்தவை மந்திரம் மவை' 'மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி' என்ற திருமுறைகள் கொண்டும் தெளிக. சிலர் பிறவிப்பிணியைப் போக்கும் அருளாகிய மருந்தையுடையவன் என்பர்.*

***குறிப்பு :-** மூ - மூத்த; பழமையான, மூன்றிடத்துமுள்ள ஏழுலகங்கள் என்று பொருள் கொண்டால், ஈரிடத்தே ஏழுலகங் கூறு மரபிற்கு மாறாகும். 'ஏழு' என்பதை 'எழு' என்பதன் நீட்சியாகக் கொண்டு மேல் கீழ் நடுவென்னு மூவிடத்தும் எழும் மூவகையான உலகங்கள் யாவற்றிற்கும் என்று பொருள் கொள்ளலாம். 'பேதாய்' என்றது பக்குவமடைதற்கு முன்னே தன்னை யாண்டமையால். அது இகழ்ச்சிபோற் புகழ்ச்சி. 'பெருந்தேன்' என்பது சிவானந்தத்துக்கு அறிகுறி. பில்க - சிந்த. ஏதாமணியே என்பதை மேதாமணியே எனக் கொண்டு அறிவு வடிவாகிய ரத்தினமே என்று முரைப்பர். மேதா - அறிவு.*

**447. காப்பாய் படைப்பாய் கரப்பாய் முழுதுங்**
**கண்ணார் விசும்பின் விண்ணோர்க்கெல்லாம்**
**மூப்பாய் மூவா முதலாய் நின்ற**
**முதல்வா முன்னே எனையாண்ட**
**பார்ப்பா னேஎம் பரமாஎன்று**
**பாடிப் பாடிப் பணிந்துபாதப்**
**பூப்போ தணைவ தென்று கொல்லோஎன்**
**பொல்லா மணியைப் புணர்ந்தே.**

***உரை :-** எல்லாவற்றையும் படைப்பவனும், காப்பவனும், ஒடுக்குபவனுமானவனே, இடம் நிறைந்த வானின்கணுள்ள தேவர்களுக்கெல்லாம் முற்பட்டமையால், மூத்தவனாயிருப்பவனே, ஆனால் முதிர்ச்சியெய்தாத ஆதியாய் நின்ற தத்துவனே, முன்னாளிலே யெனையாட்கொண்ட அந்தணனே, பொள்ளலில்லாத மாணிக்க மாகிய உன்னையடைந்து எமது மேலோனே யென்று இடைவிடாது*

*பாடிப் பொலிவுடைய உனது பாதமலரைச் சார்வது எந்த நாளோ.*

*முழுதும் காப்பாய் முழுதும் படைப்பாய் முழுதுங்கரப்பாய் எனக் கூட்டுக. இறைவன் ஆணைவழி நின்று ஐந்தொழில்களையும் தனித்தனியே ஆற்றும் அயனாதியர்க்கு அவரவர் அதிகார எல்லைக்குட்பட்ட புவனங்களிலேயே படைத்தலாதித் தொழிலை ஆற்றும் வன்மையுண்டு; இறைவற்கோ எல்லா அண்டங்களிலும் ஒக்க ஐந்தொழிலையும் ஒருசேர ஆற்றும் அருளாற்றல் உண்டு. ஆதலின், பொதுவகையால் 'முழுதும் காப்பாய் கரப்பாய்' என்றார்.*

*மூப்பாய் - காலத்தால் மூத்தவனே! மூவா முதலாய் நின்ற முதல்வா. மூப்பினாலாய மாற்றத்தை அடையாது பதினாறு வயது காளையாகவே, எல்லாம் தோன்றற்கு அடியாய் நின்ற தலைவா என்றவாறு. 'அந்தணனாவதும் காட்டி வந்து ஆண்டாய்' என்றாராகலின் ஈண்டும் ஆசாரியமூர்த்தியாகி எழுந்தருளி என்னை ஆண்ட பார்ப்பானே என்றார்.*

*புணர்ந்த பிறகு அத்துவிதக் கலவியால் விளைந்த களிப்பால் பலமுறை பாடுதலும் பணிதலும் காலிலே விழுந்து கிடத்தலுமாகிய இயல்புகள் விளையும் என உணர்த்துதலின் இத்திருப்பாடல் அத்துவித இலக்கணம் அறிவிக்கின்றமை காண்க.*

***குறிப்பு :- கண் - இடம், பெருமை. அந்தணவடிவொடு ஆண்டமையாற் 'பார்ப்பானே' என்றார். பூப்போது - பொலிவுடைய மலர், அழகிய மலர்.***

**திருச்சிற்றம்பலம்**

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 28. வாழாப் பத்து

--------

***முத்தி உபாயம்***

*இவ்வண்ணம் புணர்ச்சியை வேட்ட அடிகளார், இப்பத்தில், அடியேனை ஆட்கொண்ட தேவரீர், என்னை இங்ஙனம் கைவிடின் நான் என்ன செய்வேன்; எனக்கு ஒன்றிலும் பற்றில்லை; குறைகளை யாரிடத்தில் எடுத்துக் கூறுவேன்; ஆதலால் நான் வாழமாட்டேன் என்ற கருத்தமைய விண்ணப்பிக்கின்றார்கள்.*

*இது முத்தி உபாயத்தை அறிவிப்பது என்றும், பிரபஞ்சமயல் நீங்கிப் பரபோகத்தைக் கூடுகின்ற உபாயத்தை உபதேசிப்பதென்றும் குறிப்புக்கள் கூறும். வாழ்க்கை என்பது இன்று கிடைத்த களாக்காயைக் காட்டிலும் நாளைக்குக் கிடைக்கப் போகும் பலாப் பழத்தை எதிர்நோக்கும் இன்பக்கனவால் வளர்வது. அந்தப் பற்று அற்றவிடத்து வாழாமையே வேண்டப்படுவது; ஆகவே உலகப் பற்றறுதல் முத்திக்கு உபாயமாதலால் இது முத்தி உபாயத்தை மொழிவது எனப்பட்டது.*

*'நீண்ட உலகத்தினிற் பற்றொன்றிலேன் இவ்வுடற்கணின்று வாழேன் மாண்டகு நின்பத நிழற்கீழ் வருக அருள்புரி எனுஞ் சொல் வாழாப்பத்தே' என்பது பழைய புராணத்தில் திருவாசகச் சிறப்புரைக்கும் பகுதி.*

*பழையவுரை 'வாழாது வாழவருள் வாழாப்பத்து தத்துவஞான முத்தியுபாயம்' என்ற அகத்தியச்சூத்திரத்தைக் காட்டி, அத்துவித அன்பு முத்தியே திருவடிஞானத் திருவருள்வாழ்வு; அஃதெய்தாத உயிர் வாழ்ந்தும் பயன் இல்லை என்பதை அறிவிக்கின்றது என உரைக்கும்.*

***எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**448.** பாரொடு விண்ணாய்ப் பரந்த எம்பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே

யாரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ அருளிலை யானால்
வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 1

***உரை :-*** *மண்ணுமாய் விண்ணுமாய் எங்கும் வியாபித்த எமது மேலோனே! நான் வேறு ஆதரவில்லாதவன் என்பதைக் கண்டருள்க. சிவலோக மன்னனே, (அங்கு) சிறப்பாய் விளங்குபவனே, திருப்பெருந்துறையில் வீற்றிருக்குஞ் சிவபெருமானே, என்னை யாட்கொண்ட நீ வீட்டின்பத்தை நல்கி யருளவில்லையானால் உன்னைத் தவிர நான் யாரோடு நொந்து கொள்வேன்? வேறு யாரிடம் இக்குறையை எடுத்துப் பேசுவேன்? நெடிய கடல் சூழ்ந்த இவ்வுலகில் வாழ்ந்திருக்க இயலாத என்னை உன்பால் வருகவென்று அருள் செய்வாயாக.*

*குறிப்பு :- மண்ணும் விண்ணுங் கூறவே எங்கும் வியாபகமானமை கூறியவாறாயிற்று. பற்று - ஆதரவு. 'சிவபுரத்தரசே சீரொடு பொலிவா'யென மாற்றுக. 'ஆண்ட நீ யருளிலையானா' வென்பதை 'ஆரொடு நோகேன்' என்பதன் முன் வைக்க. 'கண்டாய்' அசை.*

**449.** வம்பனேன் தன்னை ஆண்டமா மணியே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
உம்பரும் அறியா ஒருவனே இருவர்க்
குணர்விறந் துலகமூ டுருவுஞ்
செம்பெரு மானே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எம்பெரு மானே என்னையாள் வானே
என்னைநீ கூவிக்கொண் டருளே. 2

***உரை :-*** *வீணனாகிய என்னையாட்கொண்ட பெருமை பொருந்திய இரத்தினம் போல்வானே, நான் வேறு ஆதரவில்லாதவன், தேவர்களும் அறியமுடியாத ஒப்பற்றவனே, அயன் மால் என்னுமிருவருடைய அறிவினைக் கடந்து உலகங்களை ஊடுருவிச் சென்ற சிவந்த திருமேனி உடைய பெருமானே, சிவலோக மன்னனே, திருப்பெருந்துறையில் தங்கும் சிவபெருமானே, எமது தலைவனே, என்னை யாட்கொண்டவனே, என்னை நீ விரைவில் உன்பால் அழைத்துக் கொள்க.*

ஏதோ ஒருவகையில் பயன்படுபவர்களையே உலகவர் ஆட்கொள்வர்; நீயோ என்னறியாமையை யுணர்ந்து, குருமாமணியாக வந்து, ஒருவகையானும் பயன்படாத என்னையும் ஆண்டனை; இச்செயல் நினது பயன் கருதாத பண்பினை உணர்த்துவது என்று பாராட்டுகின்ற அடிகளார் 'வம்பனேன் தன்னை ஆண்ட மாமணியே' என்றருளுகின்றார். வம்பு - வீண். வம்பன் - வீணன். குறும்பான சொற் செயல்களையுடையன் எனலுமாம். நிலையாமையுடையேன் என்பாரும் உளர்.

உம்பரும் என்ற உம்மை உயர்வு சிறப்பு. உம்பர் பலராயினும், பல இன்பங்களைக் கருதியும், பெற்ற இன்பம் இடையீடில்லாது துய்ப்பது கருதியும் உன்னை வணங்குகின்றனர்; அவர்களும் தேவரீர் சிறப்பியல்பைத் தெரிந்து சிந்தித்து அறிய மாட்டார்கள் ஆயினர்; ஆகவே அவர்கள் நிலையில் காமியப் பயனைத்தரும் கடவுளாயும், கடந்த நிலையில் பேரின்பந்தரும் பெருமானாயும் இருக்கும் தனிச் சிறப்புடையவனே என விளிப்பார் 'உம்பரும் அறியா ஒருவனே' என்றார்.

இருவர் - தொகைச் சொல்லாய்க் குறிப்பால் ஈண்டு அயனையும் அரியையும் உணர்த்திற்று. அவ்விருவரும் தாம் திருக்கயிலையில் சென்று காணும் பேறு பெற்றவர்களாதலின் அவ்வளவில் இறைவனை மதித்து, அடிமுடியைத் தேடத் தொடங்கினாராதலின் தத்தம் அறிவின் எல்லையில் ஆண்டவன் அடங்கியதாக எண்ணினர். இறைவனோ அவர்கள் அறிவின் எல்லையைக் கடந்து, அறிவால் அளவிட்டு உணர முடியாத தன்மையில் விளங்குகின்றார். அறிவின் எல்லையிற் காணப்படாது போகவே உலகங்களை ஊடுருவி நிற்கும் உருவத்தையாவது சென்று பார்க்க எண்ணினர். அதிலும் அவர்கள் அதிகார வரம்புட்பட்டனவும், செல்லக்கூடியனவுமாகிய அண்டங்களையுங் கடந்து அண்டங்கள் யாவற்றினும் ஊடுருவி நிற்பதனை அறியமாட்டாமையால் அயர்ந்தனர் என்று இறைவனது உணர்வு இறந்த நிலையையும், எங்கும் கலந்து நிற்கும் நிலையையும் வியந்து விளிக்கின்றவர் 'இருவர்க்கு உணர்விறந்து உலகம் ஊடுருவும் செம்பெருமானே' என்கின்றார்கள். செம்பெருமான் - செந்நிறமாகிய தீவண்ண அண்ணாமலைப் பெருமான்.

இவ்வண்ணம் கடந்த நிலையில் விளங்கினும், எம்மனோர் உய்யும்வண்ணம் சிவபுரம் திருப்பெருந்துறை முதலிய தலங்களில் எழுந்தருளி என்னை ஆண்டு, எம்பெருமானாக இருப்பதை விளக்கி அடுத்தடுத்து விளிக்கின்றார்.

*கூவுதல் - நெடுந்தூரத்திலிருப்பவனை உரக்க அழைத்தல். ஆகவே, திருவடிச்சார்பினின்று நெடுந்தூரம் விலகியிருப்பேன் ஆயினும் அடிமையைக் கூவியழைத்துப் பணிகொண்டு அருளுக்கு உரிமையாக்குதல் ஆள்பவனது கடமையாதலின் கூவிக் கொண்டருள் என வேண்டுகின்றார்.*

*உலகத்தில் வாழ்வதற்கேற்ற பற்றிலேன் என்றமையாலும், கூவிக் கொண்டருள் என வேண்டுவதன் வாயிலாக, அங்ஙனம் அழையாவிடின் வாழேன் என்பது பெறவைத்தலின் இத்திருப்பாடல் வாழாப்பத்தில் ஒன்றாயும், முத்தியுபாயத்தை மொழிவதாயும் விளங்குதல் காண்க.*

***குறிப்பு :-** வம்பு - பயனின்மை. இருவர்க்கு - இருவருடைய. உம்பர் - வானவர்.*

**450.** **பாடிமால் புகழும் பாதமே அல்லால்**
**பற்றுநான் மற்றிலேன் கண்டாய்**
**தேடிநீ ஆண்டாய் சிவபுரத் தரசே**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**ஊடுவ துன்னோ டுவப்பதும் உன்னை**
**உணர்த்துவ துனக்கெனக் குறுதி**
**வாடினேன் இங்கு வாழ்கிலேன் கண்டாய்**
**வருகஎன் றருள்புரி யாயே.** **3**

***உரை :-** திருமால் பாடித் துதிக்கும் உன்னுடைய திருவடிகளே யல்லாமல் வேறு ஆதரவு உடையேன் அல்லேன், சிவலோக மன்னனே! நீயாகவே என்னைத்தேடி வந்தாட்கொண்டாய். திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, பிணங்குவதும் உன்னோடுதான். மகிழ்வதும் உன்னைக் கண்டே; எனக்கு உறுதியறிவிப்பது உனக்குரியதே. வாட்டமடைந்தேனாகிய நான் இந்த உலகிலே வாழ மாட்டேன். உன்பால் வருக வென்று அருள் செய்வாயாக.*

*ஒரு பெண்ணைத் தேடி மணந்த தலைமகன் பெண்ணுள்ளம் தெரிந்து நடந்து கொள்ள வேண்டும். பெண் என்ன விரும்புவாள்? தலைவனோடு ஊடுதலையும், தலைவன் ஊடல் தணிக்கும் உபாயமாக அருகிருந்து பணிமொழி கூறிச் சிறுபுறம் தைவந்து, அடி வருடி இன்மொழி கூறுதலையும், அதனால் தான் ஊடல் தீர்ந்து கூடிக் களித்தலையும் விரும்புவாள். அதுபோலக் குருந்தடியில் குருவாக*

எழுந்தருளி ஆட்கொண்ட காலத்து யான் புறம்புறம் திரிந்தது ஊடற்குறிப்பு. அஃதுணர்ந்து ஊடல் உணர்த்திக்கூடிக் களிப்பூட்டுகின்றிலை எனத் தலைமகள் நிலையில் அடிகள் நின்று, நீ தேடி ஆண்டாய்; உன்னோடு ஊடுவதும் உன்னைக் கலப்பதும் என்னுறுசெயல்கள் என்றும், எனக்குறுதியுணர்த்துவது உனக்கு உரிய செயல் என்றும் விண்ணப்பிக்கின்றார். இதில் என்னுறுசெயல், நின்னுறுசெயல் என்ற சொற்களை ஏற்ற இடத்துக்கூட்டி முடிக்க. அங்ஙனம் உணர்த்தப் பெறாமையால் வாடினேன்; வாழ்கிலேன்; ஆதலால் நீ மேலே, ஊடலுணர்த்தும் உபாயங்களாகக் கிழத்தியுயர்வும் கிழவோன் பணிவுங் கூறலும் வேண்டா; வருக என்று அழைத்தாற் போதும்; அதுவே வாயிலாகக்கொண்டு கூடிவாழ்வேன்; அவ்வளவாவது அருள்புரிக என்று வேண்டிக்கொண்டவாறாம்.

மால்புகழும் பாதம் என்றது அரியலால் தேவியில்லை என்ப வாகலின் பெண்ணாந்தன்மைபெற்ற பிறர் தன் தலைவனைப் புகழ்வராயின் அதனைப் பொறாது ஊடுதல் மகளிர்க்கியல்பாதலால் யானும் ஊடாது மால் புகழ்ந்த பாதத்தையே பற்றி நின்றேன்; புணர்ச்சி விருப்பினளாதலைக் குறிப்பினால் உணர்த்தினேன்; ஆதலால் வருக என்று அருள்செய் போதும் என்பதை விளக்குவதாம்.

***குறிப்பு :-*** *'பாடி மால்' என்பது 'மால் பாடி' என மாற்றுக. எனக்குறுதி யுணர்த்துவது உனக்கு எனக் கொள்க.*

**451.** **வல்லைவா ளரக்கர் புரமெரித் தானே**
**மற்றுநான் பற்றிலேன் கண்டாய்**
**தில்லைவாழ் கூத்தா சிவபுரத் தரசே**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**எல்லைமூ வுலகும் உருவியன் றிருவர்**
**காணும்நாள் ஆதியீ றின்மை**
**வல்லையாய் வளர்ந்தாய் வாழ்கிலேன் கண்டாய்**
**வருகஎன் றருள்புரி யாயே. 4**

***உரை :-*** *விரைவிலே வாளினையுடைய அசுரர்களது திரிபுரத்தை எரித்தவனே, நான் வேறு ஆதரவில்லாதவன். தில்லைப் பதியில் வாழ்கின்ற கூத்தப்பெருமானே, சிவலோக மன்னனே, திருப்பெருந் துறையிற்றங்கி யருளிய சிவபெருமானே, பண்டைக் காலத்து அயனு மாலுமாகிய இருவர் உன்னைக் காண முயன்ற நாளிலே மேல் கீழ் நடுவென்ற எல்லையுடைய உலகங்களை ஊடுருவி முதலும் முடிவுந்*

*தோன்றாமை செய்யும் வலிமை யுடையவனாய் வளர்ந்தவனே, நானிவ்வுலகில் வாழமாட்டேன். உன்பால் வருக வென்றருள் செய்வாயாக.*

***குறிப்பு :-*** வல்லை - *விரைவில், அரக்கரும் அசுரரும்* வேறாயினும் *இருசொல்லும் பரியாய நாமங்களாய் வருதல் காண்க. அன்று - பண்டைக்காலம். 'அன்று இருவர் காணும் நாள் எல்லை மூவுலகுமுருவி ஆதியீறின்மை வல்லையாய்' என முடிக்க. வல்லையாய் - வலிமையுடையனவாய்.*

**452.** பண்ணினேர் மொழியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திண்ணமே ஆண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எண்ணமே உடல்வாய் மூக்கொடு செவிகண்
என்றிவை நின்கணே வைத்து
மண்ணின்மேல் அடியேன் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 5

***உரை :-*** *பண்ணை யொத்த சொல்லையுடைய உமையம்மை பாகனே! நான், உன்னை யல்லாது வேறு ஆதரவில்லாதவன். உறுதியாக என்னை யாட்கொண்டவனே, சிவலோகப் பெருமானே, திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, அறிவுக் கருவியாகிய மனத்தையும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளையும் நின்னிடத்தே வைத்து விட்டுப் பின் இம் மண்ணுலகில் அடியேன் வாழமாட்டேன். என்னை உன்பால் வருக வென்றருள் செய்க.*

***குறிப்பு :-*** *பண்ணின் நேர் எனவும், பண்ணின் ஏர் எனவும், பிரிக்கலாம். பின்னதிற்கு, பண்ணைப்போல அழகிய என்று பொருள். தமது மனமும், ஐம்பொறிகளும் இறைவனை நாடினமை இதன்கட் குறித்தார்.*

**453.** பஞ்சின்மெல் லடியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செஞ்செவே ஆண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அஞ்சினேன் நாயேன் ஆண்டுநீ அளித்த
அருளினை மருளினால் மறந்த

வஞ்சனேன் இங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 6

*__உரை :-__ பஞ்சைப்போன்ற மென்மையான அடியை உடைய உமையம்மை பாகனே! நீயல்லால் எனக்கு வேறு ஆதரவு இல்லை. மிகச் செவ்வையாகவே ஆட்கொண்டருளியவனே, சிவலோக மன்னனே, திருப்பெருந்துறையில் வீற்றிருக்குஞ் சிவபெருமானே, நீ நல்கின திருவருளினை மயக்கத்தால் மறந்த நாயேன் பயப்பட லாயினேன். வஞ்சனையுடையேனாயினும் யானிவ்வுலகில் வாழ மாட்டேன். வருகவென்றருள் செய்வாயாக.*

*சிவனே! நீ செவ்வையாகத்தான் என்னை யாட்கொண்டாய்; யான் அறியாமையால் மறந்தேன்; ஆகையால் அஞ்சினேன்; உன்னை யன்றி வேறு துணையில்லேன்; வாழேன்; வருக என்றருள் என்பது கருத்து.*

*தந்தையிடம் நலம் வேண்டும் குழந்தை தந்தையின் பக்கத்தில் தாயிருக்கின்றபோதுதான் வேண்டிக் கொள்ளும்; அது போல இறைவனிடம் வருக என்ற அருளழைப்பை வேண்டுகின்ற அடிகளார் திருவருட்சத்தியாகிய உமையொரு கூறனாக விளங்குகின்ற நிலையைக் கண்டு, இப்போது எம் வேண்டுதல் வீணாகாது என்ற குறிப்புத்தோன்ற 'பஞ்சின் மெல்லடியாள் பங்க' என விளிக்கின்றார்.*

*பற்று - பற்றப்படுபொருள்; அதாவது உறுதுணை. இவ்வுலகில், தாயே தந்தையென்றும் தாரமே மனை மக்கள் என்றும் பற்றாவார். அனைவரும் பற்றின் காரணமாகப் பற்றியவர்கள். பற்று அற்றால் பற்ற மாட்டார்கள். 'உற்றார் யாருளரோ உயிர் கொண்டு போம்பொழுது குற்றாலத்துறையும் கூத்தா! நீயன்றி உற்றார் யாருளரோ' என்றதுபோலப் பற்றின்றியே எனக்குப் பற்றாக எஞ்ஞான்றும் துணையாக விளங்குபவன் நீ என்பார் 'நீயல்லால் பற்று நான் மற்றிலேன் கண்டாய்' என்றார்.*

*செஞ்ச - செவ்வையாக. என்னிடம் என்ன குறைகள் இருப்பினும் அவற்றைப் பொருட்படுத்தாது நீ செம்மையாகத்தான் ஆண்டாய்; அடியேன் அன்று நீ அளித்த அருளினை என் அறியாமையால் மறந்தேன்; ஆதலால் நின்பால் வர அஞ்சுகிறேன்; வருக என்று பணித்தருள் என வேண்டியவாறாம்.*

*__குறிப்பு :-__ 'பஞ்சின்' என்பதற்கு 'ஊட்டின செம்பஞ்சை யுடைய' எனவுங் கூறுப. செஞ்செவே - செம் + செவ்வே - மிகச் செவ்வையாக.*

*நீ யளித்த அருளினை மருளினால் மறந்த நாயேன் அஞ்சினேன் வஞ்சனேன் என முடிக்க.*

454. பரிதிவாழ் ஒளியாய் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திருவுயர் கோலச் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
கருணையே நோக்கிக் கசிந்துளம் உருகிக்
கலந்துநான் வாழுமா றறியா
மருளனேன் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 7

***உரை :-*** *எல்லா அண்டங்களிலும் உள்ள சூரியர்கள் உட்பட அனைத்து ஒளிப்பொருள்கள் யாவும் வாழ்வதற்கு உதவும் ஒளி வடிவானவனே. உன் திருவடியே யல்லாமல் வேறு ஆதரவில்லாதேன். சிறப்பு மிகுந்த அழகிய சிவலோக மன்னனே, திருப்பெருந்துறை யிலெழுந்தருளிய சிவபெருமானே, உலகப் பொருள் எதனையும் நோக்காது உன் திருவருளையே கருதி உள்ளங் கனிந்துருகி உன்னோடு கலப்புற்று வாழும் விதத்தை யறியாத மயக்கமுடையேன் (ஆயினும்) இவ்வுலகிலே நான் வாழமாட்டேன். உன்பால் வருக வென்று அருள் செய்வாயாக.*

*எல்லா அண்டங்களிலும் உள்ள ஒளிப்பொருள்கள் யாவும் தத்தம் நிலை குலையாது வாழ்வது சிவஒளி அருள்வதாலேயே ஆதலின், சூரியன் வாழ்வதற்குரிய ஒளி வடிவானவனே என்பார் 'பரிதி வாழ் ஒளியாய்' என்றார். பழையவுரை பரிதியின் உதவியைப் பார் அறியார்போல திருவடியருமை அறியாத பாவிக்கு வேறு பற்றுளவோ? என்றுரைக்கும். இதற்குச் சூரியன் செய்யும் உதவி, காணுங்கண்ணொளி யொடு கலந்துநின்று பொருள்களை உணர்த்துதல். உலகத்துப் பொருள்களைக் காண்பார் கண்கண்டது யான் கண்டேன் என்பதன்றிச் சூரியவொளி கண்ணொளிக்கு உதவியது அதனாற் கண்டேன் என்னார். அதுபோல நின் திருவடியே எல்லாமாயிருந்து உணர்த்துகிறது என்பதை அறிந்துகொள்ளாதவன் யான்; அங்ஙனம் உணர்ந்து பற்ற வேண்டியதைப் பற்றத்தெரியாத எனக்கு வேறு பற்றுளதோ என்பது கருத்தாகக்கொள்க. பரிதி வாழ் ஒளியாய் விளங்கும் நின்பாதம் என ஒருசொல் வருவித்துப் பொருள் கொள்க.*

*தலைவன் ஒருவன் ஆட்கொண்ட பிறகு, அடிமை தன் வாழ்வு தாழ்வு அனைத்திற்கும் தலைவனை எதிர்நோக்கி அவன்*

*கருணையாலேயே வாழ்தல்போல, அடியேனும் நின் கருணையே நோக்கி, அதன்கண் அழுந்தி, மனங்கசிந்து நின்னோடு கலந்து வாழ வேண்டியவன்; அங்ஙனம் வாழத் தெரியா மருளனேன் ஆனேன் என்றார். மருளன் - மயக்கவுணர்வுடையவன்.*

***குறிப்பு :-*** *இறைவன் செம்மேனியாதலின் சூரியமண்டலத்தி னொளிக்கு அவன் மேனி யொளியை உவமித்தார். திரு - வீடளிக்குஞ் சிறப்பு.*

**455.** பந்தணை விரலாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செந்தழல் போல்வாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அந்தமில் அமுதே அரும்பெரும் பொருளே
ஆரமு தேஅடி யேனை
வந்து (ய்)ய ஆண்டாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. **8**

***உரை :-*** *பந்தின் உருட்சித் தன்மை வாய்ந்த விரலையுடைய உமையம்மை பாகனே, நீ யல்லாமல் வேறு ஆதரவு இல்லாதேன். செவ்விய அனல்போன்ற திருமேனியுடையவனே, சிவலோக மன்னனே, திருப்பெருந்துறையிற்றங்கிய சிவபெருமானே, முடிவில்லாத நித்தியனே, பெறுதற்கரிய பெரிய பொருளே, கிடைத்தற்கரிய சாவா மருந்தே, அடியேன் உய்தி கூடும்படி குருவாய் வந்து ஆட்கொண்டவனே, இவ்வுலகில் வாழமாட்டேன். வருக வென்றருள் செய்க.*

*'அந்தமில் அமுதே' 'ஆர் அமுதே' என்பன இறைவன் நுகரத்தக்க அமுதாயும் சிவபோகத்தழுந்திய பக்குவான்மாக்களுக்கு நுகரநுகர எல்லை கடந்த பேரின்பத்தை நல்கும் அமுதாயும் விளங்குவதை யுணர்த்தின. சிலர் அந்தமிலமுதே என்பதற்கு முடிவில்லாதிருந்து சார்ந்தாருக்கும் முடிவில்லாமையைத் தருகின்ற அமுதமே என்பர்.*

*சுட்டறிவாற் காணப்படும் பொருள்கள் யாவும் பெரும் பொருளாமேயன்றி அரும்பொருளாகா. அரும்பொருளாயின் பெரும்பொருளாகா. இறைவன் இவ்விருதன்மையும் உடையனாதலின் 'அரும்பெரும் பொருளே' என விளித்தார். அமுது செந்தழல் இவற்றோடு ஒப்பித்து உரைத்த அடிகள் தம் திருவுள்ளத்து*

*இறைவனுடைய அளவிலாற்றலும், பெருமையும், ஒருவ மனில்லாமையும் தோன்ற இறைவன் தானே தனக்குச் சமமாவன் என்பதை உணர்ந்து 'அரும்பெரும்பொருளே' என்று கூறி அமைந்தனர் என்க.*

*மலகன்மங்களோடுகூடி இம்மண்ணுலகில் வாழ்ந்த என்னை இந்நிலையினின்று முத்தான்மாவாக அடியேன் உய்ய ஆண்டாய்; ஆண்டபின் எங்ஙனம் இம்மண்ணுலகில் வாழ்வேன்? வாழ்கிலேன்; அதற்காகவேனும் வருக என்று பணி என்று அருளியதாம். இதனால் முத்தியுபாயம் வெளிப்படுதல் காண்க.*

***குறிப்பு :-*** *'பந்தணை' என்பதற்குப் பந்து சேர்ந்த என உரைப்பாருமுளர். 'அந்தமிலமுதே' என்பதில் அமுதமென்பது மரணத்தைக் கடந்தவன் என்ற பொருளுடைத்து. 'உயவந்து அடியேனை ஆண்டாய்' என முடிக்க.*

**456.** **பாவநா சாவுன் பாதமே யல்லால்**
**பற்றுநான் மற்றிலேன் கண்டாய்**
**தேவர்தந் தேவே சிவபுரத் தரசே**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**மூவுல குருவ இருவர்கீழ் மேலாய்**
**முழங்கழ லாய்நிமிர்ந் தானே**
**மாவுரி யானே வாழ்கிலேன் கண்டாய்**
**வருகஎன் றருள்புரி யாயே.** **9**

***உரை :-*** *தீவினையை அழிப்பவனே, உனது திருவடி யன்றி வேறு ஆதரவு இல்லாதேன். விண்ணவர்க்குத் தலைவனே, சிவலோக மன்னனே, திருப்பெருந்துறையில் வீற்றிருக்குஞ் சிவபெருமானே, மூவுலகங்களையும் ஊடுருவும்படி அயன் மால் இருவரும் மேலுங் கீழுஞ் சென்று தேடும்படி ஒலிக்கின்ற அனற்பிழம்பாய் உயர்ந்து நின்றவனே, யானைத்தோல் போர்த்தவனே, இவ்வுலகில் வாழ மாட்டேன். வருகவென்றருள் செய்வாயாக.*

***குறிப்பு :-*** *மூவுல குருவ என்பதை இருவர் என்பதனோடும், கீழ்மேலாய் என்பதை நிமிர்ந்தானே என்பதோடும், முழங்கு என்பதை அழலாய் என்பதோடு முடித்தலுமுண்டு. மாவுரி யென்பது புலித்தோலையுங் குறிக்கும். மா - யானை. முழங்கழலாய் - சடசட என ஒலிக்கும் நெருப்பாய்.*

457. பழுதில்தொல் புகழாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செழுமதி அணிந்தாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர்
துணையென நினைவனோ சொல்லாய்
மழவிடை யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 10

***உரை :-*** *குற்றமற்ற பழமையான புகழையுடைய உமையம்மை பாகனே, உன்னையன்றி வேறு ஆதரவில்லாதேன். செழுமையுற்ற பிறையினை யணிந்தவனே, சிவலோக மன்னனே, திருப்பெருந் துறையி லெழுந்தருளி யிருக்குஞ் சிவபெருமானே, உன்னைத் தவிர பிற தேவர்களை வணங்குவேனோ, வாழ்த்துவேனோ, எனக்குதவியாகக் கருதுவேனோ கூறியருள்க. இளங்காளையை வாகனமாக உடையவனே. இவ்வுலகில் வாழமாட்டேன், வருக வென்றருள் செய்வாயாக.*

*குறிப்பு :- சிவத்தோடு சத்தியும் யாண்டு முண்மையால் அவன் கீர்த்தியைத் தொல்புகழ் என்றார். சந்திரன் கடவுளை யடைந்து செழுமை யுற்றமையால் செழுமதி என்றார். தொழுவனோ, துதிப்பனோ, நினைவனோ என்றமையால் மனம், வாக்கு, காயம் என்ற மூன்றினாலும் பிறரை வழிபடேன் என்று குறிப்பித்தார். வருக வென் றருள்புரிதல் அறம் என்பார், அறத்திற்கு அறிகுறியாகிய விடையைக் கூறினார்.*

*இறைவியின் புகழ் அனைத்தும் பிறர்புகழ்போலப் பழுதுறாதன ஆதலின் 'பழுதில் தொல்புகழாள்' என்றார். திருக்குறளில் 'பொருள்சேர் புகழ்புரிந்தார்மாட்டு' என்பதற்குப் பரிமேலழகர் 'இறைவனது மெய்ம்மையான புகழை விரும்பினாரிடத்து' எனக் கூறும் உரைநயம் ஈண்டு எண்ணுதற்குரியது. பிற தெய்வங்களின் புகழ்களிற் சில உபசாரமாகவும், ஒருகாலத்துப் பிழைத்தும் போவனவாகவும் உண்மையின்றியிருக்க இறைவியின் புகழ் என்றும் நிலைத்த பழைமையானதாக விளங்குதலின் இங்ஙனம் அருளினார் என்க.*

*குற்றமே செய்தவர்களையும் காத்து உயர்நிலை உதவுகின்றவன் நீ என்பார் 'செழுமதி அணிந்தாய்' என்றார். மதி செய்யாத தவறு இல்லை. அத்துணைப் பாவங்களையும் போக்கி, யாரும் அடைய*

இயலாத திருமுடியை அவனுக்கு இடமாகத் தந்த பெருங்கருணை யாளனாகிய நினக்கு என்னை ஏற்பது முடியாத தொன்றன்று என்றவாறாம்.

உன் இயல்புகள் அனைத்தும் உன்னருளால் உணர்ந்த யான், அருளிற்றிளைத்திருப்பதன்றிப் பிறரைத் தொழேன், துதியேன்; ஆகையால், நின்னடிசேர அழைத்தருள் என வேண்டுகின்றமையின் இப்பாடல் முத்தியுபாயமாதல் காண்க.

இப்பத்துப் பாடல்களாலும் இவ்வண்ணம் உமையொரு பாகனாகவும், பகை ஒழிப்பவனாகவும், எங்குமாய் யாவுமாய் யாருமாய் விளங்குபவனும் ஆகிய நீ, நின்பால் உறுதியான பற்றுக்கொண்ட என்னை வருக எனப் பணித்தருள்; இல்லையாயின், இவ்வுலகத்து வாழேன் எனத் தாம் விரும்பும் முத்தி உபாயங்களையும் அவைகளில் பரிபாகம் கைவரப் பெற்ற தகுதியுடன் தானிருத்தலையும் அடிகளார் அறிவித்தல் காண்க.

***திருச்சிற்றம்பலம்.***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 29. அருட்பத்து

*இறைவனது அருளை வேண்டும் பத்துப் பாடல்களின் தொகுதி அருட்பத்து. இதன் எட்டாம் திருப்பாடலில் 'பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப் பரகதி கொடுப்பவன் இறைவன்' எனக் குறித்தலாலும், பரகதியாவது மாமாயையையும் கடந்தது. ஆதலாலும் இதற்கு, 'மகாமாயா சுத்தி' எனக் குறிப்புரைத்தனர் போலும் முன்னோர். இது, திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது என்பதே பதிப்புக்களில் காணப்படுவது. இதுவும் முற்றிலும் எழுசீரடி விருத்தத்தால் ஆயது.*

*திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் குருமூர்த்தியாக எழுந்தருளி ஆட்கொண்ட குருநாதனை நோக்கி, அடிகள், ஆதியே! அருத்தனே! அங்கணா! அமலனே! அடிகளே! அப்பனே! ஐயனே! அத்தனே! அருளனே! என்று யான் அன்புகொண்டழைத்தால், நீ 'அது எந்து' என்று அருள்செய்; இது தான் கயிலையிற் புகுநெறி வருக என்றருள் செய் என்று அருட்பத்தாகிய இதனை அருளிச் செய்தார்கள்.*

*யான் அழைக்கும்போது வாளா இராமல் 'ஏன் என்றாவது கேள்' என்று அருளை விழைந்துரைக்கும் பத்துப் பாடல்களையுடைமையின் இது அருட்பத்து என்னும் பெயர்பெற்றது.*

*சென்ற பத்தில் வாழேன் என்றுரைத்து வருக என்றருள் புரிதலை வேண்டிய அடிகள் அங்ஙனம் வரவேற்கும் நிலையைத் தாம் பெறாமையால் வருந்தி ஏனென்று கேட்கும் அருளையாவது புரிக என வேண்டிக் கொள்ளுதல் காண்க.*

*பழையவுரை, "பெருகருட் பத்து, பெரு மாயா சுத்தி" என்ற அகத்தியச் சூத்திரத்தைக் கூறி, முற்பதிகத்தில் திருவடிஞானமான அன்பு நிட்டை பெற்றமையின், தற்போதமற்ற அடிமை வழிபாடான இன்ப மாயாதீத சுக உல்லாச அன்பை அறிவித்தலின் அருட்பத்தென லாயிற்று என்னும்.*

*பழைய குறிப்பு மகாமாயாசுத்தி; அதாவது மாயையினின்றும் விலகுதல் என்று விளக்கம் தருகின்றது. உலகத்தை வெறுத்து இறைவன் திருவடியை விரும்புதலே மாயையினின்று விலகுவது ஆதலின் இது மாயாசுத்தி ஆயிற்றுப்போலும்.*

*பழைய திருப்பெருந்துறைப் புராணம், "சோதியருட் சுடர் விளக்கே துயர் பிறவிக்கடல்விடுத்து உன்தாள் சேர்தற்கு, ஆதரித்திங்குனையழைத்தால் அதெந்துவெனக் கேளென்னுஞ்சொல் அருட்பத்தாகும்" என்றுரைக்கும்.*

--------

***மகாமாயா சுத்தி***

***எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**458.** சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் நீற்றாய்
பங்கயத் தயனும்மா லறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 1

***உரை :-*** *ஒளிவடிவானவனே! (ஞாயிறு, திங்கள்) என்ற இரு சுடரானவனே! (அவற்றை) சூழ்ந்த (நட்சத்திரங்களாகிய) தன்னொளி யுடைய விளக்குகளானவனே! சுழல்களையுடைய கூந்தலையும் பருத்த நகிலையுமுடைய உமைமங்கையைத் திருமேனியிற் பாதியாகக் கொண்டவனே! மேலோனே! பாலின் நிறத்தைக் கொண்ட திருவெண்ணீற்றை யணிந்தவனே! தாமரையில் வீற்றிருக்கும் நான்முகனும், திருமாலுமறியாத நியாயவானே! வளம் பொருந்திய திருப்பெருந்துறையில் மலர் நிறைந்த குருந்த மரத்தடியின் கீழ் வீற்றிருந்த சிறப்பையுடைய முதல்வனே! அடியேன் விரும்பி உன்னை அழைத்தால் நீ அஞ்சாதே என்றுறுதி யுரைத்தருள்க.*

*சோதி - நெய்யும் திரியுமாகிய ஆதாரங்கள் ஒன்றும் பெறாத ஒளியே என முதற்கண் தனித்த நிலையை விளித்தவர் அடுத்து அவற்றையடுத்து நிற்கும் தீப்பிழம்பாகக் கண்டு 'சுடரே' என்றும், பின்னர் அச்சுடர்பற்றிய நெய்க்கும் திரிக்கும் ஆதாரமாய் நிற்கும் விளக்காகக்கண்டு "சூழொளி விளக்கே" என்றும் தம் பரிபாகத்தி லிருந்து உலகவர் நிலைக்கு இறங்கி வந்து விளிக்கின்றார்கள். சோதி என்றது இறைவன் அருளே மேனியாய் எழுந்தருளியிருக்கும் தனிநிலையை. சுடரே என்றது ஆதாரமும் ஆதேயமுமாய் நிற்கும்*

*அருவுருவநிலையை. விளக்கே என்றது மந்தபரிபாகிகளுக்காகத் திருமேனி தாங்கி, அதன் வாயிலாக அருளொளியை அனுபவிக்கச் செய்யும் உருவ நிலையை என உணர்க.*

***குறிப்பு :-*** *ஞாயிற்றைச் சோதியென்றும், திங்களைச் சுடரென்றும், நெருப்பினை விளக்கென்றுங் கூறுவாருமுளர். மடந்தை - மடமையுடைய பெண். மடமை - இளமை, அடக்கம், கொளுத்தக் கொண்டு, கொண்டது விடாமை. பாதி யென்றதனால் உமையம்மை உடம்பினில் தான் பாதியாயிருப்பவனென்று பொருள் கொள்வாரு முளர். பால் என்பது பாலின் நிறத்திற்கு ஆகுபெயராய் நின்றது. சீர், அடியார்க்கு ஞானமருளுஞ் சிறப்பு. அதெந்துவே என்ற திசைச் சொல்லை மலையாளச் சொல்லாகக் கொண்டு அதென்னவென்று கேட்டருள்க எனப் பொருளுரைப்பது முண்டு. கன்னடத்தில் அஞ்சாதே என்று பொருளுடைய தென்ப.*

**459.** நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
ஒருத்தனே உன்னை ஓலமிட் டலறி
உலகெலாந் தேடியுங் காணேன்
திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. **2**

***உரை :-*** *கூத்தப் பெருமானே! குற்றமற்றவனே! என்றுமுள்ளவனே! நெற்றிக் கண்ணையுடையவனே! வானோர் தலைவனே! ஒப்பற்றவனே! உன்னைக் காண்பதற்காகக் கூவியழைத்து உலக முழுவதுந் தேடியுங் காணக்கூடவில்லை. திருந்திய முறையாலமைந்த தடாகத்தையுடைய திருப்பெருந்துறையின்கண் வளம்மிக்க மலர்களையுடைய குருந்த மரத்தடியில் விரும்பி வீற்றிருந்த சிறப்புடைய மெய்ப்பொருளானவனே! அடியேன் விரும்பி யழைத்தால் அஞ்சாதே என்று அருள் செய்வாயாக.*

*தேவரீர் எழுந்தருளியிருக்கும் இடங்களைவிட்டு உலகெலாந் தேடியலைந்தேன்; கண்ட பயன் உன்னைக் காணாமையே; இப்போது குருந்தடியிற் குருவாகக் காண்கிறேன்; நான் ஆதரித்தழைத்தால் அதெந்து என்று வினவியருள் என்பது கருத்து.*

*நிருத்தம் - மனக்கருத்தை அங்கம், நிலை, அசைவு இவற்றால் விளக்கும் நடனம். இறைவன் பஞ்சகிருத்திய பரமானந்த நிருத்தம் புரிபவனாதலின் 'நிருத்தனே' என விளித்தவாறு. அந்நிருத்தமில்லை யாயின் உலகில் எதுவும் புடைபெயராதாதலின் முதற்கண் நிருத்தனே என விளித்தார். அவர் ஆட்டம் நின்றால் சர்வலோக ஆட்டமும், நம் அனைவரது ஆட்டமும் நின்று விடும் என்பது கருத்து.*

*நிமலா - நின்மலா என்பதன் திரிபு. நின்மலன் - அநாதியே மல மாயைகளோடு பொருந்தாதவன். பற்றி விலகி நின்மலனானவன் அன்றென்க. மலரகிதனாகிய குருவே பிறர் மலங்களைப் போக்க முடியும் ஆதலால் எம் மல மாயைகளை அகற்றி ஆட்கொள்ள வேண்டுமென விரும்பி நிமலா என்றருளினார்.*

*எம் மல மாயைகளை நீக்குதற்கு உபாயமாக, நோயுண் மருந்து தாயுண்டாங்கு, திருநீற்றைத் தன்மேனிக்கண் அணிந்துள்ளான் என்பார் 'நீற்றனே' என்கின்றார்.*

*நெற்றிக்கண் இறைவற்கேயுரிய சிறப்படையாளம். நெற்றிக்கண் அக்கினிக்கண். அக்கினி சுட்டழித்துத் தூய்மையுறுத்துவது; சங்கார கிருத்தியம் செய்வது; சிவனுடைய தெறற்றன்மையைத் தெரிவிப்பது. ஆதலின், இறைவனே முழுமுதற்கடவுள் என்பதை யாமறிந்துய்ய 'நெற்றிக்கண்ணனே' என்றனர்.*

*ஓலம், அரற்று இரண்டும் அச்சத்தால் அலறும் அரற்றொலி. புலி அல்லது அரவம் வெருட்ட அஞ்சியோடுவார் காப்பாரைக் காணாவிடினும், ஐயோ! ஐயோ! அம்மா அப்பா எனக் கூவி ஓடுவர். அதுபோல, வினைகள் ஒறுக்கும்போது உன்னைக் காணாமலே உலகெங்கும் உன் பெயர்களைச் சொல்லியும் அலறியும் அலைந்தேன் என்பதை 'ஓலமிட்டு அலறி உலகெங்கும் தேடியும் காணேன்' என்றார்.*

*திருத்தமாம் பொய்கை - தீர்த்தமாகிய பொய்கை எனலும் ஆம். அருத்தம் - பொருள்; ஈண்டு மெய்ப்பொருள்.*

*தலையில் தீப்பிடித்தாரைப்போல, உலகியலில் உவர்ப்புத் தோன்றி, உன்னைத் தேடி உலகெங்கும் அலைந்தேன்; திருப்பெருந்துறையில் கண்டு ஆதரித்தழைக்கின்றேன் என்றலின் மாயையினின்று விலகலும், பதியைச் சார்தலும் உணர்த்தலின் இத்திருப்பாடல் மாகாமாயா சுத்தியாதல் காண்க.*

***குறிப்பு :-*** ***உயிர் தானே முயன்று கடவுளைக் காண முடியா தென்பதும், தேடி முயன்ற காலை பக்குவம் பார்த்து இறைவன் தானே***

*வந்து அருள் புரிவானென்பதும் இதனைட் கூறப்பட்டன. திருத்தமாம் என்பதைத் திருப்பெருந்துறை என்பதோடு சேர்த்து யான் திருத்தமடைவதற்கு ஏதுவாகிய என்றும் பொருள்கொள்ப. அருத்தம் - பொருள்... அருத்தன் - பொருளானவன். எல்லாவற்றையும் ஒடுக்கிய காலத்தில் தடுக்கினமைக்கு அறிகுறியான நீற்றினை இறைவன் அணிந்து விளக்குதலின் நீற்றினை - என்று முள்ளவனே.*

**460.** எங்கள்நா யகனே என்னுயிர்த் தலைவா
ஏலவார் குழலிமார் இருவர்
தங்கள்நா யகனே தக்கநற் காமன்
தனதுடல் தழலெழ விழித்த
செங்கண்நா யகனே திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அங்கணா அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 3

***உரை :-*** *எங்கள் தலைவனே! எனதுயிர் நாதனே! மயிர்ச் சாந்தணிந்த நீண்ட கூந்தலையுடைய உமை, கங்கை என்னுமிருவர் கணவனே! சிறந்த அழகுடைய மன்மதனுடைய உடலானது தீப்பற்றுமாறு நோக்கிய சிவந்த நெற்றிக் கண்ணையுடைய பெருமானே! திருப்பெருந்துறையின்கண் வளமிக்க மலர்களையுடைய குருந்த மரத்தடியில் விரும்பி வீற்றிருந்த சிறப்புடைய அருட் கண்ணை யுடையவனே! அடியேன் விரும்பி யழைத்தால் அஞ்சாதே என்றருள் செய்வாயாக.*

*இருபெருந்தேவியர் தண்மைக்கும் கருணைக்கும் உரியவர்களாக இருந்தும், அவர்கட்குத் தேவரீர் தலைவராக இருந்தும் நான் அன்பு கொண்டு அழைக்கும்போது அது என்ன என்று வினாவியருளல் கூடாதா என்பது கருத்து.*

*உயிர்களின் பரிபாகநிலைக்கேற்ப எங்கும் எவ்வுயிருள்ளும் இறைவன் காணப்படுதலைத் திருவுள்ளத்தெண்ணி 'எங்கள் நாயகனே' என்றும், எங்கும் விளங்குகின்ற இறைவன் தன் உயிருக்கு உயிராக விளங்குதலால் 'என் உயிர்த் தலைவா' என்றும், அதனையும் காணமாட்டாத உயிர்கட்கு உருவமாக இரு பெருந்தேவியர் நாயகனாகவும், இவ்வண்ணம் தன்னைக் கண்டு பரிபாகமுற்ற உயிர்கள் சிவஞானத்தைப் பெற விரும்பின் அதற்கிடையூறாக இருக்கும் மதனனை எரித்து ஞானம் பிறப்பிக்கும் நாயகனாகவும்,*

*சிவஞானப்பேறு பெற்றுச் சிவனடிசேரும் உபாயம் தேடும் பரிபக்குவிகட்குக் குருந்தடிமேவிய குருநாதனாகவும் இருக்கின்ற அருளிப்பாடு பலவற்றையும் எண்ணி விளித்த நயம் ஊன்றி உணரத்தக்கது.*

***குறிப்பு :-*** *உயிர்களுக்கெல்லாம் தலைவனாதலின், எங்கள் நாயக னென்றார். குழலிமாரிருவர் என்பதற்குக் கிரியா சக்தி, ஞான சக்தி என்பாருமுளர். நெற்றிக்கண் நெருப்புக் கண்ணாதலின் செங்கணாயகன் என்றார். அழகிற் சிறந்தவனாதலால் தக்க நற்காமன் என்றார்.*

**461.** கமலநான் முகனுங் கார்முகில் நிறத்துக்
கண்ணனும் நண்ணுதற் கரிய
விமலனே எனக்கு வெளிப்படா யென்ன
வியன் தழல் வெளிப்பட்ட எந்தாய்
திமலநான் மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அமலனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. **4**

***உரை :-*** *தாமரையில் வீற்றிருக்கும் அயனும், கரிய மேகத்தின் நிறத்தினையுடைய திருமாலும் காணமுடியாத மலங்களற்றவனே! எங்களுக்கு வெளிப்பட வேண்டுமென்று இரந்து வேண்ட, பெரிய அனற்பிழம்பிலிருந்து வெளி வந்தருளிய என் தந்தையே, ஒலி முழக்கமுடைய நான்கு வேதங்களும், பயில்கின்ற திருப்பெருந்துறையின் வளமிக்க மலர்களையுடைய குருந்த மரத்தடியில் விரும்பி வீற்றிருந்த சிறப்புடைய மாசிலாதவனே! அடியேன் விரும்பி யழைத்தால் அஞ்சாதே என்றருள் செய்வாயாக.*

*இருள் ஒளியைக் காணமுடியாதவாறு போல, கமல நான்முகனும் கருமுகில் வண்ணனும் பதவிகளில் இருப்பவர்களே யாயினும் அவர்களால் சாமீபம் கூட அடையமுடியாது. அத்தகைய அநாதி மலமுத்தன் சிவன் என்பதைக் 'கமல நான் முகனும்... விமலனே' என்பதால் உணர்த்தினார். சாமீபத்தையடையச் சிவயோகம் ஒன்றே சிறந்த சாதனம்; இவர்களோ சரியை கிரியைத் தொண்டுகள்கூடக் கைவராதவர்கள்; இவர்கள் எப்படி இறைவன் பக்கலை அணுகமுடியும் என்றவாறாம்.*

*குறிப்பு :- திமிலம் - பேரொலி. விமலன் - இயல்பாகவே பாசங்களில் நீங்கினவன். அமலன் - குற்றமற்றவன். நான்மறை - பல்வகை மந்திரங்கள் என்று பொருள் கொள்வாரு முளர்.*

**462.** துடிகொள்நே ரிடையாள் சுரிகுழல் மடந்தை
துணைமுலைக் கண்கள்தோய் சுவடு
பொடிகொள்வான் தழலிற் புள்ளிபோ லிரண்டு
பொங்கொளி தங்குமார் பினனே
செடிகொள்வான் பொழில்சூழ் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அடிகளே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 5

***உரை :-*** *உடுக்கையின் வடிவத்தை உடைய நுண்ணிய இடையை உடையவளாகிய சுழன்ற கூந்தலை உடைய மங்கையாகிய உமையம்மையின் இரு நகிலின் நுனிகள் அழுந்திய தழும்புகள் சாம்பல் சூழ்ந்த பெரிய அனலின் நடுவில் இரண்டு புள்ளிகள் போல விளங்கும் ஒளி தங்கிய மார்பினனே! புதர்களைக் கொண்ட பெரிய சோலைகள் சூழ்ந்த திருப்பெருந்துறையில் வளமிக்க மலர்களையுடைய குருந்த மரத்தடியில் விரும்பி விற்றிருந்த சிறப்புடைய கடவுளே! அடியேன் விரும்பி யழைத்தால் அஞ்சாதே என்று அருள் செய்வாயாக.*

*குறிப்பு :- காஞ்சீபுரத்தில் உமை இறைவனைப் பூசித்த காலை வெள்ளம் வந்துவிட, தனது முலைக்கண்கள் இறைவனது மார்பினிலே பதியும்படி தழுவிய கதை ஈண்டுக் குறிக்கப்பெற்றது. சுவடு - தழும்பு; இறைவனது திருமேனி வான்றழலிற்கும், அவர் மேலணிந்த சாம்பல் வெண்ணீற்றுக்கும், புள்ளி, சுவட்டிற்கும் உவமையாயின. செடி - புதர். அடிகள் - கடவுள், சுவாமிகள்.*

**463.** துப்பனே தூயாய் தூயவெண் ணீறு
துதைந்தெழு துளங்கொளி வயிரத்(து)
ஒப்பனே உன்னை உள்குவார் மனத்தின்
உறுசுவை யளிக்கும் ஆரமுதே
செப்பமா மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அப்பனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 6

*உரை :- பவளம் போல்பவனே! பரிசுத்தமானவனே! சுத்தமான திருவெண்ணீறு படிந்து மின்னு மொளியானது வயிரத்தின் மின்னு மொளி போன்ற விளக்கமுடையவனே! உன்னை நினைக்கின்றவர் களுள்ளத்தில் மிகுந்த சுவை தருகின்ற கிடைத்தற்கரிய அமுதமானவனே! செவ்விய பெரிய மந்திரங்கள் நிறைந்த திருப் பெருந்துறையின் கண்ணே வளமிக்க மலர்களை யுடைய குருந்த மரத்தடியில் விரும்பி வீற்றிருக்கும் தந்தையே! அடியேன் உன்னை விரும்பி யழைத்தால் அஞ்சாதே என்று அருள் செய்வாயாக.*

*குறிப்பு :- பவள மேனியின் இடையிடையே படிந்து தோற்றும் திருவெண்ணீற்றடையாளங்கள் அசைகின்ற ஒளி போன்றமையால் துளங்கொளி என்றார். துதைந்து - நெருங்கி, படிந்து. செப்பம் - செம்மை.*

**464.** மெய்யனே விகிர்தா மேருவே வில்லா
மேவலர் புரங்கள்மூன் றெரித்த
கையனே காலாற் காலனை காய்ந்த
கடுந்தழற் பிழம்பன்ன மேனிச்
செய்யனே செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
ஐயனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 7

*உரை :- நிலைத்த பொருளானவனே! அன்பர் பொருட்டு வெவ்வேறு வடிவங் கொள்பவனே! மேரு மலையை வில்லாகக் கொண்டு பகைவர்கள் ஊர்கள் மூன்றையும் எரித்தழித்த திருக்கையை யுடையவனே! திருப்பாதத்தினால் எமனைக் கோபித்துதைத்த கடுமையாகிய அனல் தூண்போன்ற திருமேனியுடைய செம்மையனே! வளம் பொருந்திய திருப்பெருந்துறையிலே வளமிக்க மலர்களையுடைய குருந்த மரத்தடியில் விரும்பி விற்றிருக்குஞ் சிறப்புடைய தலைவனே! அடியேன் உன்னை விரும்பிக் கூப்பிட்டால் அஞ்சாதே என்று அருள் செய்வாயாக.*

*குறிப்பு :- விகிர்தா என்றதற்குப் பொய்யனே எனப் பொருள் கொள்வாரு முளர். மெய்யற்கு மெய்யனாகவும், பொய்யற்குப்*

*பொய்யனாயு மிருத்தலால் அவ்வாறு கூறுவர். வில்லா வென்பதைக் கையனே என்பதனோடு முடிக்க. வில்லையுடைய கையனே என்பது கருத்து. செய்யனே - செம்மையனே - நேர்மையனே. பிழம்பு - திரட்சி.*

**465.** முத்தனே முதல்வா முக்கணா முனிவா
 மொட்டறா மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
 பரகதி கொடுத்தருள் செய்யுஞ்
சித்தனே செல்வத் திருப்பெருந் துறையில்
 செழுமலர்க் குருந்தமே வியசீர்
அத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்
 அதெந்துவே என்றரு ளாயே. **8**

***உரை :-*** *இயல்பாகவே பாசங்களில் நீங்கினவனே! ஆதியானவனே! முக்கண்ணுடையவனே! தவவேடங் கொண்டவனே! அரும்பு நிலைமாறாத பூவினைப் பறித்துத் திருவடிகளிலே தூவி வணங்கி அன்பாகத் தியானித்துத் துதிக்கின்றவர்களுக்கு மேலான நெறியினை நல்கியருளும் ஞானவடிவனே! வளம்பொருந்திய திருப்பெருந் துறையில் வளமிக்க மலர்களை உடைய குருந்த மரத்தடியில் விரும்பி வீற்றிருக்குஞ் சிறப்புடைய அப்பனே! அடியேன் உன்னை விரும்பி அழைத்தால் அஞ்சாதே என்றருள் செய்வாயாக.*

*முத்தன் - இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன்.*

*முதல்வன் - சங்காரகாரணனாய்ப் புனருற்பவகாலத்து மீளவும் தம்மிடத்தே யாவையும் யாவரும் தோன்றநிற்கும் முதற் பொருளானவன்.*

*முக்கணன் - உலகிற்கு ஒளிதரும் பொருளாகிய சோம சூரிய அக்கினிகளைத் திருக்கண்களாகக் கொண்டவன்.*

*முனிவன் - இயங்குவனவான உயிர்கள் அனைத்தும் மலக்கட்டினின்று விடுபட்டு வீடுபேறடையட்டுமென்ற தியான முடையவன். மனனசீலன், முனிவன் என்க. முனிதல் - வெறுத்தல்.*

*மொட்டு - அரும்பு. மொட்டறா மலர் - நன்றாக விரியாத அலரும் பருவத்துள்ள அரும்பு என்க. அதுவே வண்டுமொய்யாததாய், தேனோடு கூடியதாய் மணங்குன்றாது இருக்குமாதலின் அவைகளே இறைவன் பூசனைக்குரியன. அடியார்கள் அவற்றைப் பறித்துச் சாத்தி*

*வணங்கித் தியானிப்பர். அவர்கட்கு இறைவன் பரகதி அருளுவர் என்பது ‘நிலைபெறுமாறு எண்ணுதியேல்’ என்ற திருத்தாண்டகத்திலும் குறிக்கப்பெறுதல் காண்க. சித்தன் - திருவுள்ளம் உடையான்.*

***குறிப்பு :-*** *ஞாயிறு, திங்கள், அக்கினி மூன்றையும் இறைவனுக்கு முக்கண்ணாகக் கூறுவர். முனிவர் என்பதற்குத் துறவு வேடம் உடையவனே என்று முரைப்பர். இறைஞ்சுதல், நினைதல், பரவுதல் மூன்றுங் கூறினமையால் திரிகரணங்களாலும் வழிபடுவது குறிக்கப் பட்டது. சித்தன் என்பதற்குச் சித்தர் வடிவ முடையவனென்று முரைப்பர். சித்து - அறிவு, நுட்பமான அற்புதத் திருவிளையாட்டு.*

**466.** மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி
மறுமையோ டிம்மையுங் கெடுத்த
பொருளனே புனிதா பொங்குவா ளரவங்
கங்கைநீர் தங்குசெஞ் சடையாய்
தெருளுநான் மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருளனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. **9**

***உரை :-*** *மருட்சியையுடைய என துள்ளத்தை மயக்கந் தீரும்படியாகத் திருவருட் கண்ணாற் பார்த்து இம்மை மறுமை என்னுமிரண்டின் சார்பான பிறவியொழித்த மெய்ப்பொருளானவனே! (குற்றமற்ற) தூயதன்மையை உடையவனே! சீறுகின்ற ஒளியுடைய பாம்புங் கங்கையுந் தங்கிய சிவந்த சடையையுடையவனே. உயிர்கள் தெளிவடைவதற் கேதுவாகிய நான்மறைகளும் பொருந்திய திருப்பெருந் துறையின்கண் வளமிக்க மலர்களையுடைய குருந்த மரத்தடியில் விரும்பி வீற்றிருந்தருளிய சிறப்புடைய கருணையாளனே! அடியேன் உன்னை விரும்பிக் கூப்பிட்டால் அஞ்சாதே என்றருள் செய்வாயாக.*

*மருள் - மயக்கம்; அறியாமை. இது ஆணவத்தின் காரியம். அதனை அநாதியேயுடையேன் என்பார் ‘மருளனேன்’ என்றார். மயக்கு அற நோக்கி - பேயினால் மால்கொண்டான் ஒருவனை முருகனைத் தியானிக்கும் மந்திரவாதி ஒருவன் தியானபாவனையோடு முருகனாகவே இருந்து அவனை நோக்கப் பேய்மயக்கம் அகல்வது போல என் ஆணவமல விளைவாகிய அறியாமை மயக்கம் நீங்கச் சிவன் திருவருணோக்கம் பாலித்தான் என்பார் ‘மயக்கற நோக்கி’ என்றார்.*

*குறிப்பு :- மருள் - திரிபுணர்ச்சி, மயக்கு - அறியாமை, பிறவி யறுத்தமையால் மறுமையும் இம்மையும் ஒழிந்தன. பொருள் - மெய். பொங்கு - சீறுகின்ற. வாள் - ஒளி.*

**467.** **திருந்துவார் பொழில்சூழ் திருப்பெருந் துறையில்**
**செழுமலர்க் குருந்தமே வியசீர்**
**இருந்தவா றெண்ணி ஏசறா நினைந்திட்**
**டென்னுடை எம்பிரான் என்றென்**
**றிருந்தவா நினைந்தே ஆதரித் தழைத்தால்**
**அலைகடல் அதனுளே நின்று**
**பொருந்தவா கயிலை புகுநெறி இதுகாண்**
**போதராய் என்றரு ளாயே.** **10**

***உரை :-*** *திருத்தமாகிய பெரிய சோலை சூழ்ந்த திருப்பெருந் துறையிலே வளமிக்க மலர்களையுடைய குருந்த மரத்தடியில் விரும்பி வீற்றிருந்த சிறப்பு இருந்த முறையை நினைந்து அது காணப் பெறாமையால் துக்கித்து என்னை அடிமையாகவுடைய எமது தலைவன் என்று கருதி அவ்வாறழைத்து அரிய தவவுருவ முடையவனே என எண்ணி விரும்பி யழைத்தால், பிறவியாகிய அலை மிகுந்த கடலின்கண் நின்று என்னை யடைவதற்கு நீ வா கயிலைக்குச் செல்லும் வழி இதுதான் பார், அவ்வழியே வருக என்று அருள் செய்ய வேண்டும்.*

*திருந்து திருப்பெருந்துறை, வார்பொழில்சூழ் திருப்பெருந்துறை எனக் கூட்டுக. மாணிக்கவாசகப் பெருமானுக்காகப் பரசிவம் தாமே குருநாதனாக எழுந்தருளிவந்து அடிகளாரைத் திருத்தியுய்யக் கொள்வதான உபாயத்தான் உலகமே திருந்தச் செய்த திருத்தலமாதலின் திருந்துதிருப்பெருந்துறை என்றும், பிறவிவெப்பம் தாங்காது வினைச்சுடர் கொளுத்த அஞ்சிவந்தார்க்கு அடைக்கலத்தானமாய்த் தட்பம் செய்தலின் வார்பொழில்சூழ் திருப்பெருந்துறை என்றும், பிறவிக்கடலினின்றும் திருவடியாகிய சிவநகர்சேர உதவும் பெருந்துறைபோறலின் திருப்பெருந்துறை என்றும் அருளிச் செய்தவாறு காண்க.*

*சீர் - புகழ். ஈண்டு ஆகுபெயராகப் புகழே வடிவான குரு மணியை உணர்த்தியது. சிறப்பே வடிவான சிவம், மெய்யடியார்களை உய்யக் கொள்வதற்காக உபதேச குருமூர்த்தியாகச் சின்முத்திரைக் கையராக, இடதுகாலை மடக்கி, வலதுகாலை முயலகன் மீதூன்றி,*

இருகண்களும் புருவநடுவிற் பொருந்த அருள்வழியும் முகத்தோடும் அமைதியே வடிவாக இருந்தபடி எண்ணி என்பார் 'சீர் இருந்தவாறு எண்ணி' என்றார்.

**குறிப்பு :-** திருந்து - தாம் திருந்துதற் கேதுவாகிய என்றும் பொருளுரைப்ப. ஏசறா - ஏசற்று - துக்கித்து. இனைந்திட்டு எனவும் பாடமுண்டு. இனைந்திட்டு - வருந்தி, எம்பிரான், அருந்தவா, என்றென்று நினைந்தே என முடிக்க. அலைகடல் என்பது துன்பமுள்ள பிறவிக்கு உருவகமாக நின்றது. ஆனந்தக்கடலுக்கு அதனை உருவகமாகக் கூறுவாரு முளர். ஆனந்தக் கடல் அலைகடல் ஆகுமா என்பது ஐயம். கயிலை - வீட்டிற் கறிகுறி. போதராய் - போவாய் அல்லது வருவாய்.

இங்ஙனம் இப்பத்துப் பாட்டானும், செல்வம் சேர்ந்ததும், திருத்தமாம் பொய்கையுடன் கூடியதும், நான்மறை சேர்ந்ததும், பொழில் சூழ்ந்ததும், திருந்தியதுமாகிய திருப்பெருந்துறையிலே, செழுமலரோடு கூடிய குருந்தமரத்தடியிலே குடிகொண்ட சீராக விளங்கும் சிவபரம்பொருளைப் பலவாறு துதித்து ஆதரித்து அழைத்தால், பிறவிக்கடலிற் கிடந்து அலையாதே அப்பா அணுகவா; இதுதான் திருக்கயிலைக்குப் புகும் வழி; விரைந்து போதருக என்று அருள்செய் என வேண்டுகின்றாரென்ற பதிகப்பொழிப்புக் காண்க.

**திருச்சிற்றம்பலம்**

*திருக்கழுக்குன்றத்தில் அருளிய*

## 30. திருக்கழுக்குன்றப் பதிகம்

--------

*அடிகளார் திருவண்ணாமலை, காஞ்சிபுரம் முதலிய பல தலங்களை வணங்கிக்கொண்டு திருக்கழுக்குன்றத்திற்கு எழுந்தருளினார்கள். அங்கே பெருமான் குருவடிவாக எழுந்தருளிக் காட்சி வழங்க அதனைக்கண்டு மகிழ்ந்து காட்சிப்பத்தாகிய இதனை அருளிச் செய்தார்கள்.*

*இது திருக்கழுக்குன்றத்தைப் பற்றிக் கூறுவதால் திருக்கழுக் குன்றப்பதிகம் எனவும், திருக்கழுக்குன்றம் எனவும் சில பிரதிகளில் வழங்கப்பெறும். இது ஏனைய பதிகங்கள் போலப் பொருளாலும் தன்மையாலும் பெயர்பெறாது, பாடிய தலத்தாற் பெற்றது.*

*பழையவுரையில் இப்பதிகக்கருத்தாகக் "காட்சிப் பத்தாகும் திருக்கழுக் குன்றம், மாட்சிமை தருசற் குருதரி சனமாம்" என்ற அகத்தியச் சூத்திரம் எடுத்துக்காட்டப் பெறுகின்றது. முற்பதிக அநுபூதியிற்கண்ட இன்பம் திருவடியன்றி வேறு இன்மையால், இப்பதிகத்து அதுவே தானாந்தன்பால், எப்பதம், எவ்வுலகு, எவ்வுயிர் எல்லாம் அப்படியே கண்ட திருவடிஞான அன்பு உல்லாச அநுபூதி யென்பது அதன் விளக்கம். இதனால் அடிகள் முதன்முதற்கண்ட குருவடிவ அநுபூதியே இங்கும் கிடைக்கப்பெற்று, அவ்வானந்தத்தால் அருளிச் செய்யப்பெற்ற பதிகம் இது என்பது போதரும்.*

*பழைய குறிப்பு குருதரிசனம்; என்பது பசுத்துவம் கெட்ட இடம் என்று கூறும். பசுத்தன்மை நீங்கப்பெற்று, இருவினையொப்பும் மலபரிபாகமும் பெறத்தக்க பரிபாக நிலையிலேயே குருதரிசனம் கிட்டும் என்பதாம். மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொழுதவர்க்கோர் வார்த்தைசொலச் சற்குரு வாய்க்கும் என்பது பராபரக்கண்ணி.*

*பழையபுராணம், "நீதிமறை பரவு திருப்பெருந்துறையிற் குரு வடிவாய் நிகழ்ந்த கோலம், காதலொடும் காட்டினையே யெனுங் களிப்புப் பகர்தல் திருக்கழுக்குன்றாமே" என்பது. இவற்றால், இப்பதிகத்தின் பெயர் முதலில் காட்சிப் பத்தெனவே வழங்கியிருக்கலாம் என்பதும், பழையபுராணம் இயற்றிய ஆசிரியர்*

*காலத்தின் முன்பே திருக்கழுக்குன்றம் என்ற வழக்கு வந்துவிட்டது என்பதும் அறியப்படும்.*

*முற்பதிகமாகிய அருட்பத்தில், அது என்ன என்று கேட்கவாவது செய் எனக் கேட்டல் ஒன்றை விரும்பிய அடிகளார், கழுக்குன்றம் வந்தவுடன் பழைய குருதரிசனம் மீளவும் கிடைத்தமையால், கணக்கிலாத் திருக்கோலம் காட்டினாய், கலங்காமலே காட்டினாய், காணொணாத திருக்கோலம் காட்டினாய் என்பன முதலாகக் கண்டதை வியந்து கூறுதலின் பதிகத்தொடர்பு இனிது விளங்கும்.*

*இதுவும் பத்துப் பாடல்களைக் கொண்டதாக முன்னர் இருந்திருத்தல் வேண்டும். இன்று ஏழு திருப்பாடல்களே காணப்படுகின்றன.*

***குரு தரிசனம்***

***எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

***திருச்சிற்றம்பலம்***

**468. பிணக்கி லாபெருந்து றைப்பெரு மான்உன் நாமங்கள் பேசுவார்க்**
**கிணக்கி லாததோர் இன்பமேவருந் துன்பமே துடைத் தெம்பிரான்**
**உணக்கி லாததோர் வித்து மேல் விளையாமல் என்வினை ஒத்தபின்**
**கணக்கி லாத்திருக்கோலம் நீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே. 1**

***உரை :-*** ***யாவரிடத்திலும் மாறுபாடில்லாத, திருப்பெருந் துறையில் வீற்றிருந்த பெருமானே! உன்னுடைய திருப்பெயர்களை எடுத்தியம்புவார்களுக்கு நிகரற்ற சிறந்த பேரின்பமே உண்டாகும். எமது தலைவனாகிய நீ, துயரங்களை யொழித்து, காய்ந்து போதல் இல்லாத தனித்தன்மையுடைய பிறவி விதையானது மேலே விளையாதபடி, இருவினையொப்பு எனக்கு வந்தபிறகு, அளவிலடங் காத உனது திருவடிவத்தைத் திருக்கழுக்குன்றத்தே எழுந்தருளி வந்து காண்பித்தனை.***

***குறிப்பு :-*** ***பிணக்கு - சண்டை, மாறுபாடு. இணக்கு இணங்கு என்பதன் விகாரம்; ஒப்பு. உணக்குதல் - காய்தல், வற்றுதல். ஓர் - தனியியல்புடைய இருவினையொப்பு என்பது - இருவினைப் பயன்களிலும் ஒரு தன்மையான வெறுப்பு. கணக்கிலா - அகண்டமான.***

469. பிட்டு நேர்பட மண்சு மந்த பெருந்து றைப்பெரும் பித்தனே
சட்ட நேர்பட வந்தி லாத சழக்கனேன் உனைச் சார்ந்திலேன்
சிட்டனேசிவ லோகனே சிறுநாயினுங் கடையாயவெங்
கட்டனேனையும் ஆட்கொள் வான்வந்து காட்டினாய்கழுக் குன்றிலே.
2

***உரை :-*** *(மதுரைப் பிட்டு வாணிச்சியின்) பிட்டினை ஏற்றுக் கொள்ள, மண்சுமந்த திருவிளையாட லியற்றிய திருப்பெருந் துறையிற்றங்கிய (அன்பர்பால்) பேரருட் பித்துடையவனே! உனது கட்டளைத் திட்டத்திற்கு ஒத்துவராத குற்றமுடைய யான் உன்னை யானே அடையமாட்டேன். சிறந்த ஒழுக்கநெறி யானவனே! சிவலோக நாதனே! இழிந்த நாயினுங் கீழ்ப்பட்ட, கொடிய துன்பமுடைய என்னையும் அடிமைகொண் டருளும்பொருட்டு, திருக்கழுக் குன்றத்தில் எழுந்தருளி உன் திருக்கோலங் காண்பித்தருளினை.*

*சட்டம் - உடல். சிவாகமக் கட்டளைகள் என்னும் பழையவுரை. இவ்வுரை சட்டம் என்பது விதியை உணர்த்துவதாகக் கொண்டு விதிகளையுணர்த்தும் சிவாகமங்களைத் தெரிவிக்கும் என்கிறது. இச்சொல் இப்பொருளில் மிகப்பழைய இலக்கியங்களிலும், அடிகளார் காலத்துப் பிறநூல்களிலும் வழக்கின்மை கொண்டு உடல் எனப் பொருள்கோடலே சிறந்ததாம். சிலர் சட்டம் - ஓலை எனப் பொருள் கொண்டு. அது ஆகுபெயராய் உடம்புக்குக் காரணமாய வினைகளை உணர்த்திற்று என்பர்.*

*சட்டம் நேர்பட - உடல் கிடைக்கவும் என ஒரும்மை வருவித்து, என்வினைப்போகங்களைத் தொலைத்துப் பரிபாகம் பெற உடலம் கிடைக்கவும், அதனால் உய்ந்து உன்னிடம் வந்திலாத வஞ்சனேன் என உரைக்க.*

*'சட்டோ நினைக்க மனத்தமுதாம் சங்கரனை' என்புழிப்போல சட்ட - விரைவாக எனக்கொண்டு, விரைவாக உன்னெதிர்ப்பட வந்திலாத சழக்கனேன் எனலுமாம். சிலர் வினையொப்பாக வந்திலாத யான் என உரைப்பர். 'உனைச் சார்ந்திலேன்' என்றது, சார்புணர்ந்து சார்புகெட ஒழுகிலேன் என்றவாறாம்.*

*சிட்டன் - சிஷ்டன் என்பதன்றிரிபு. ஒழுக்கமே உருவானவன். எல்லாரையும் ஒழுக்கத்து நிறுத்துபவன் எனலுமாம்.*

*கட்டன் - கஷ்டன்; துன்பமே வடிவானவன். துன்ப வடிவான என்னையும் ஆளவந்து கழுக்குன்றிலே இன்பவுருவைக் காட்டி*

*உய்வித்தாய் என்றதால் இத்திருப்பாடல் சற்குருதரிசனமாயிற்று என்க.*

***குறிப்பு :-*** *நேர்பட - இசைந்து கொள்ள, ஒற்றுமைப்பட, சழக்கு - குற்றம். சிட்டன் - ஆசார முடையவன். கட்டம் - கஷ்டம். சட்ட என்பதற்கு முற்றிலும் எனப் பொருள் கொள்ளுவது முண்டு.*

**470.** **மலங்கி னேன்கண்ணில் நீரை மாற்றி மலங்கெ டுத்த பெருந்துறை**
**விலங்கி னேன்வினைக்கேட னேன்இனி மேல் விளைவ தறிந்திலேன்**
**இலங்கு கின்றநின் சேவடிகள் இரண்டும் வைப்பிட மின்றியே**
**கலங்கி னேன்கலங்காமலே வந்து காட்டினாய் கழுக்குன்றிலே. 3**

***உரை :-*** *(பிறவித் துயரால்) கலங்கின என்னுடைய கண்ணீரைத் துடைத்துப் பாசமறுத்த பெருந்துறைப் பெருமானே விட்டு நீங்கினேன். நான் தீவினையாகிய கெடுதியை யுடையேன், இனி மேல் நிகழக்கூடிய பயனை அறியாதேன். (என் மனம் பரிசுத்த மின்மையால்) அறிவில் விளங்குகின்ற உன் செய்ய பொற்பாதங் களிரண்டினையும் வைத்து வழிபடும் இடமில்லாமல் மருண்டேன். அங்ஙனம் நான் மயங்காவண்ணம், திருக்கழுக் குன்றத்திலே நின் திருவருட் கோலத்தைக் காட்டியருளினை.*

***குறிப்பு :-*** *மலங்குதல் - அசைதல், கலங்கல். பெருந்துறை, ஆகுபெயர். பெருந்துறை யென்பதற்கு, மலங்கெடுத்த இடமாகிய பெருந்துறையை யெனவும், மலங் கெடுத்தற் கேதுவாய பெரிய நெறியை யெனவுங் கூறுப. விலகினேன் என்பதன் விரித்தல் விகாரம், விலங்கினேன் என்பது.*

**471.** **பூணொணாததொ ரன்பு பூண்டு பொருந்திநாள் தொறும் போற்றவும்,**
**நாணொ ணாததொர் நாணம் எய்தி நடுக்கடலுள் அழுந்திநான்,**
**பேணொ ணாதபெ ருந்துறைப் பெருந் தோணிபற்றி யுகைத்தலுங்,**
**காணொ ணாத்திருக் கோலம் நீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே.**
**4**

***உரை :-*** *(உனதன்பர்) பிறரால் மேற்கொள்ளப்படாத உயர்ந்த பேரன்பு பூண்டு உன்னை யடைந்து தினமும் வழிபடவும், அது செய்ய இயலாமையால், அன்பர் வெட்கப்படக் கூடாததொரு வெட்க மடைந்து, பிறவியாகிய கடல் நடுவுள் ஆழ்ந்து போக இருந்த யான், அடியேன் பற்றிப் போற்றுதற்கரிய, திருப்பெருந் துறையிற் பரமாசாரி யனது திருவடிகளாகிய பெரிய தெப்பத்தை எய்தி அதனைச்*

செலுத்துதலும், எளியேன் காணுதற்கரிய அகண்டமாய நின் திருவடிவத்தைத் திருக்கழுக்குன்றத்திலே எனக்கு உணர்த்தி யருளினை.

**குறிப்பு :-** முதலிரண்டடியும், திருப்பெருந்துறையில் அருள் பெறுதற்கு முன்னுள்ள அடிகள் நிலையைக் குறிப்பன, பெருநெறி யாகிய பெருந்தோணி யென்பாருமுளர். தோணி, திருவடிக்கே உவமையாதல் மரபு.

**472. கோல மேனிவ ராக மேகுண மாம்பெ ருந்துறைக் கொண்டலே**
**சீல மேதும் அறிந்தி லாதஎன் சிந்தை வைத்த சிகாமணி**
**ஞால மேகரி யாக நானுனை நச்சி நச்சிட வந்திடுங்**
**கால மேஉனை ஓதநீ காட்டி னாய்கழுக் குன்றிலே. 5**

**உரை :-** (பன்றிக் குட்டிக்கு முலைகொடுப்பான் தோன்றிய) அழகிய திருமேனியுடைய பன்றி யுருவனே! திருப்பெருந்துறைக் கண் வீற்றிருந்த, நற்பண்பாகிய அருண் மேகமே! நல்லொழுக்கம் யாதும் அறியாத எனது உள்ளத்தில் வைக்கப்பட்ட தலைமணி போல்வானே! நான் உன்னை மிகவும் விரும்பிய அளவில், உலகமே சான்றாகும்படி, அருள்செய்ய விரைவில் எழுந்தருளி வந்திட்டவனாகிய காலத்தை வடிவாக வுடையவனே! உன்னை நான் துதிக்கும்படி திருக்கழுக் குன்றத்திலே உன் திருக்கோலத்தைக் காட்டியருளினை.

பெருந்துறை குணமாம் கொண்டலே - திருப்பெருந்துறைக்கண் நீருண்ண இறங்கும் எண்குணங்கட்கும் இடமாகிய மேகமே! மேகம் கடலின்கண் நீருண்ண இறங்குமாதலின் சிவபெருமானைத் திருப்பெருந்துறையிலே நீருண்ண வந்து தங்கிய மேகமாக விளித்தனர்.

கொண்டல் உப்புநீரை நன்னீராக மாற்றுவது போல ஆன்மாக்களைத் தூய்மையுறுத்தலின் கொண்டல் என்றார் என்பது பழையவுரை.

சீலம் - ஒழுக்கம். காமமாதிய குற்றங்களை நீக்கிப் புனிதம் உறுத்தப்பெற்ற மனமே இறைவன் எழுந்தருளும் இடமென ஆகமங்கள் கூறவும், என்மீது வைத்த கருணையால் இறைவன் ஒழுகலாறு சிறிதும் அறியாத என் சிந்தையிலே தன்னை வைத்தான் ஒளிதந்தான் என்பார் 'என் சிந்தைவைத்த சிகாமணி' என்றருளினார். சிகாமணி - முடிமணி அல்லது தலையாய மணி எனலுமாம்.

காலம் - இறைவனைப்போல எல்லையற்றதாகலின்

இறைவனைக் காலமே என அழைக்கின்றார். உனை ஓத எனப் பொதுப்படக் கூறினும் ஓத என்ற மரபுச்சொல்லால் திருவைந்தெழுத்து வடிவாகிய உன்னை ஓத என்று கொள்க.

**குறிப்பு :-** கோலம் - அழகு. பன்றிக்குட்டிகட்கு முலை கொடுத்த செய்தி, திருவிளையாடற் புராணத்திற் காண்க. கொண்டல் - மேகம். கரி - சாட்சி. திருப்பெருந்துறையில் எழுந்தருளி அடிகட்கு உபதேசித்தமை, உலக மறிய நேர்ந்ததாகலின், ஞாலமே கரியாக என்றார். நச்சி நச்சிட - மிகவும் விரும்பிட. காலதத்துவம் - இறைவன் தொழிற்குத் துணையாதலின் அவன் வடிவமாகக் கூறுதல் மரபு. பக்குவ காலத்தையும், இறைவனையும் ஒன்றாகவே கருதினமை காண்க.

**473.** பேதம் இல்லாதொர் கற்பளித்த பெருந்துறைப் பெருவெள்ளமே,
ஏத மேபல பேச நீ எனை ஏதி லார்முனம் என் செய்தாய்,
சாதல் சாதல்பொல் லாமையற்ற தனிச்ச ரண்சர ணாமெனக்,
காத லால்உனை ஓதநீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே. **6**

**உரை :-** உன்னிடமிருந்து வேறுபாடடைதற் கேது வில்லாத ஒப்பற்ற கற்பு நிலையை எனக்குக் கொடுத்தருளிய திருப்பெருந் துறையிற் றங்கிய இன்பப் பெருங் கடலானவனே, நான் உன்னைப் பற்றிக் குறைகளே கூறும்படி, அயலார் முன்னிலையில் என்னை விடுத்து, நீ யாது செய்தாய்? அழிவற்றதாய்த் தீங்கற்றதாய் ஒப்பற்றதாயுள்ள உன் திருவடியே புகலென்று நான் அன்பினாலே உன்னைத் துதிக்கும்படி, திருக்கழுக்குன்றிலே நீ உனது திருக்கோலங் காண்பித்தனை. கற்புடையாளைப் பற்றி அயலார் குறை சொல்லும்படித் தலைவன் என்றும் அவளைப் பிரிந்துறைதலாகாது. பிரித்தலும் ஆகாது. அங்ஙனமிருக்கத் திருப்பெருந்துறையில் அன்று நீ என்னைப்பிரித்து ஏனையரோடு சிவலோகமாகிய இன்பவுலகிற்கு ஏகினை; அதனால் அயலவர் வாயில் வந்தன வந்தன பேசினர்; இவ்வாறு செய்யலாமோ என உரிமை பற்றித் தலைவனை வினவுவார் 'முனம் ஏதிலார் ஏதமே பல பேச என் செய்தாய்?' என்றார்.

சாதலும், சாதல் பொல்லாமையுமற்ற தனிச் சரண் என்க. சாதல் பொல்லாமையாவது மரணகாலத்து வருந்துன்பங்கள். அவை மூச்சு வாங்கலும், இழுத்தலும், உட்குழித்தலும், கண் சுழித்தலும் ஆகியவற்றால் உயிர் அடையுந்துன்பங்கள். அற்ற - அறுதற்குக் காரணமான எனப் பொருள் கொள்க. இறைவன் திருவடிகட்குச்

சாதலும், சாதற்றுன்பமும் இல்லாமை தானே அமைந்தது ஆகலின்.

உன்னை ஓத எனின் 'சிவ' என்று செபிக்க என்பது. திருவைந்தெழுத்தைச் சொல்ல, அதுவே ஆறாகக்கொண்டு நீ காட்சியருளினை என்பதால் சற்குரு தரிசனமாயிற்று இத்திருப்பாடல்.

***குறிப்பு :-*** *கற்பு - கற்புடைப் பெண்டிர். பிற கணவரை நாடாமைப் போல பிற தெய்வத்தை நாடா நிலை. கற்பு - கல்வி எனவுமுரைப்பர். பேதமில்லதோர் கற்பு - அத்துவித ஞானம். இவையெல்லாம் உடலுக்குக் கற்பு, உயிருக்குக் கற்பு சிவத்தை மட்டும் தொழுதலே. இறைவன் உபதேசஞ் செய்தவுடன், தம்முடன் அடிகளை அழைத்துச் செல்லாமையின், ஏதிலார் முனம் என்செய்தார் என்றார். சாதல் சாதல்... சாதலில்லாமை, அழிவின்மை. பொல்லாமை - பாசச் சார்பாய குற்றம். உனை யோத என்பதற்கு, உன்னை நான் ஓதவும், அங்ஙனம் ஓதியபின் எனவு முரைப்பர்.*

**474. இயக்கி மாரறு பத்து நால்வரை எண்குணம் செய்த ஈசனே,**
**மயக்க மாயதோர் மும்ம லப்பழ வல்வி னைக்குள் அழுந்தவுந்,**
**துயக்க றுத்தெனை ஆண்டு கொண்டுநின் தூய் மலர்க்கழல் தந்தெனைக்,**
**கயக்க வைத்தடி யார்மு னேவந்து காட்டினாய் கழுக்குன்றிலே. 7**

***உரை :-*** *(உத்தர கோசமங்கையில் ஞானோபதேசஞ் செய்து) இயக்கப் பெண்களாகிய அறுபத்து நால்வரை இறைவனது எட்டுத் திருக்குணங்களின் வயமாக்கிய ஆண்டவனே! அறியாமைக் கேதுவாகிய இருள், வினை, மருள் என்னு மும்மலங்களினா லுளதாய பண்டைக் கொடிய வினைப் பயன்களின் அடியேன் ஆழ்ந்து கிடப்பவும், அதனாலாய எனது தளர்ச்சியை யொழித்து என்னை ஆட்கொண்டருளி, உனது பரிசுத்தமான பூங்கழல்களைக் கொடுத்தருளி (உன்னுடன் அழைத்துச் செல்லாது) அங்ஙனஞ் சென்ற அடியவர்கள் முன்பாக என்னைத் துயருறுவித்து, இப்போது திருக்கழுக் குன்றத்திலே எழுந்தருளி வந்து, உனது திருவருட் கோலத்தைக் காட்டியருளினை.*

மும்மலம் - ஆணவம் கன்மம் மாயை என்பன. இவை மூன்றும் ஆன்ம அறிவை மறைப்பனவாகலின் 'மயக்கமாயதொர் மும்மலம்' என்றார். இருளின்குணம் தன்னையன்றி ஒன்றையும் காட்டாதவாறு போல, மலமாகிய தம்மையும், தம்மையுடைய பொருளாகிய

*உயிரையும், தலைவனையும் காட்டாத்தன்மையவாகலின் 'மயக்கமாய தொர் மும்மலம்' என்றது. மும்மலமென்பது தொகுதியொருமை யாதலின் ஆயதோர் மும்மலம் என ஒருமைக்கு முடிபாக வந்தது.*

*துயக்கு - தொடக்கு. அச்சேற்றுள் அழுந்துதற்கான பற்றாகிய தொடர்பை நீக்கி என்க. அறியாமையால் அங்கணத்து வீழ்ந்த குழந்தையை எடுக்கும் தாய்போலத் தூக்கி ஆண்டு கொண்டு என்க.*

*செல்வத்தின் அருமையறியாது செலவழிக்கும் மகனுக்குப் பலவகையில் நோய் தந்து வருத்திப் புத்திவரக்காட்டும் தந்தை போல நெடுநாட்பிரிந்து வருந்தவைத்துத் திருவடியருமை உணர்த்தியாட் கொண்டான் என்பார் 'கயக்கவைத்து' என்றார்.*

***குறிப்பு :-** **இயக்கர் - பதினெட்டுத் தேவகணங்களுள் ஒரு வகையார். இயக்கியர் காதை உத்தரகோச மங்கைப் புராணத்துட் காண்க. எண்குணம் - முற்றறிவு, இயற்கை யறிவு, தம் வயமுடையமை, இயல்பாகக் கட்டின்மை, வரம்பிலாற்றல், வரம்பிலின்பம், தூய வுடம்புடைமை, பேரருளுடைமை என்பன. எண் குணத்துளோமே என்ற அப்பர் திருவாக்குங் காண்க. மும்மலத்துட் சேர்ந்த வினை - மூலவினை. வல்வினை யென்றது, இருவினைப் பயன்களை. துயக்கு- தளர்ச்சி. கயக்க - கசக்க, துன்புற. இதற்குச் சிறக்க வென்று பொருள் கொள்வாரு முளர்.***

***திருச்சிற்றம்பலம்.***

*தில்லையில் அருளிய*

## 31. கண்டபத்து

*சிவஞானிகள் என்றும் அகலாத தில்லையம்பதியில் சென்று சிவாகமமுணர்ந்த சீலர்களாகிய தில்லைவாழந்தணர்கள் வழிபாடு செய்யும் பொன்னம்பலத்தைக் கண்ட திருவாதவூரடிகள், அதனுள் ஆனந்தக்கூத்தனை அந்தமிலா வடிவினனாகக் கண்டு, கண்டபத்தாகிய இதனை அருளிச்செய்கின்றார்கள்.*

*சென்ற பதிகத்து, திருப்பெருந்துறையில் கண்ட குருவடிவைக் கழுக்குன்றிலும் கண்டு, தில்லைக்கு வந்தபோது, ஞான நடனமும் ஊன நடனமுமாகப் பரிபாக நிலைக்கு ஏற்பக் காட்சி வழங்கும் ஆனந்தக் கூத்தன் திருவுருவையும் கண்டு இதனை அருளுகின்றார்கள். ஆகவே அடிகள் இறைவனைக் கண்ட பத்துப்பாடல்களைக் கொண்டதொரு பகுதியாம் இது என்க.*

*"சுட்டறு சுட்டாற் கண்டபத்து மட்டறு நிருத்த தரிசனமாகும்" என்பது அகத்தியச் சூத்திரம். முதற்பதிகத்திலே திருவருளே தானந்தன்மை பெற்றும், சதா நடன தரிசனத்தின் அளவு அருளை வேண்டி வற்புறுத்தித் தரிசனமே வீடென அருளிய அநுபவம் இப்பத்தில் உணர்த்தப்பெறுகின்றது என்பது பழையவுரை.*

*பழைய குறிப்பு நிருத்த தரிசனம் என்கிறது. பழையபுராணம், "இந்திரியவயம் மயங்காதே யெடுத்துத் தானாக்கு மெழிலானந்தம் கந்தமலி தில்லையினுட் கண்டேனென் றுவந்துரைத்தல் கண்ட பத்தாம்" என்று விளக்கந்தருகிறது. அதாவது, ஆன்மா இந்திரியங்களின் வசப்பட்டு மயங்கி யழியாதபடி, கைதூக்கித் தாமாக்குந் தன்மைவாய்ந்த ஆனந்தத்தைத் தில்லையுட் கண்டேன் என்று மகிழ்ந்துரைப்பதாம்.*

--------

***நிருத்த தரிசனம்***

***கொச்சகக் கலிப்பா***

*திருச்சிற்றம்பலம்*

**475. இந்திரிய வயம்மயங்கி இறப்பதற்கே காரணமாய்**
**அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வேற்குச்**
**சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி எனையாண்ட**
**அந்தமிலா ஆனந்தம் அணிகொள் தில்லை கண்டேனே. 1**

***உரை :-*** *ஐம்பொறிகளின் வசப்பட்டு அறியாமையுற்று, இறந் தொழிவதற்கே ஏதுவாகி, இறந்தபின் வானிலே அலைந்து போய்க் கடத்தற்கரிய நரகத்தில் வீழும் இயல்புடைய எனக்கு, மனத்தைப் புனிதமாக்கிச் சிவமயமாகச் செய்து என்னை ஆட்கொண்டருளிய முடிவில்லாத பேரின்பமானவனை அழகு கொண்ட தில்லைச் சபையிற் காணலாயினேன்.*

*இந்திரிய சுகங்களிலேயே மயங்கி நரகில் வீழ இருந்த என்னைச் சிந்தை தெளிவித்துச் சிவமாக்கியாண்ட ஆனந்தத்தைத் தில்லையுட் கண்டேன் என்பது கருத்து.*

*முற்பதிகத்துக் கழுக்குன்றிற் காட்டினாய் என்ற அடிகள் இப்பத்தில் தில்லையுட் கண்டேன் எனல் காண்க.*

*பிரபஞ்ச விஷயங்களை இடைவிடாது இந்திரியங்கள் வாங்கிக் கொடுத்துக் கொண்டேயிருக்க, அவற்றை மனம்பற்ற, அவற்றை அகங்காரம் உள்ளே கொண்டுய்க்க, அவற்றைப் புத்திதத்துவம் குணங்கட்கேற்பச் சுகமாகவோ துக்கமாகவோ மோகமாகவோ நிச்சயிக்க, அவற்றை ஆன்மா வித்தை வாயிலாக அறிந்து, அவற்றின் வசப்பட்டு மயங்கி இறப்பதே தொழிலாதலின் 'இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்' என்றருளினர். ஆன்மா மும்மலச் சுழலிற் பட்டலையுமாயினும் அதனால் அது அறியவொண்ணாதது ஆகவே காட்சிக்குரியதாய் எளிதில் அறியப்படுவது ஐம்பொறிச்சுழலே என்க.*

*அந்தரமே திரிந்து - வானில் அலைந்து, வான் அருவாதலின் நிராதரவாய்த் திரிந்து என்பதனை இச்சொற்றொடரால் விளக்கியதாம். பழையவுரை அனேகபுவனவாசியாகத் திரிந்து என்னும். வேறுபட்டலைந்து என்றும் சிலருரைப்பர்.*

*சிந்தைதனைத் தெளிவித்து - இந்திரியவயமயங்கிய சிந்தையைத் தெளிவித்து. பித்தநோயால் மயங்கிப் படுகுழியில் விழ இருந்த ஒருவனை மருத்துவன் பித்தந்தெளிய மருந்தளித்து மயக்கம்போக்கித் தாமே படுகுழிக்கு விலகிச்செல்ல உதவுவது போல அருநரகில் விழ இருந்த என்னை இந்திரிய சுகத்தின்வழி மயங்கிய என் சிந்தை மயக்கைப் போக்கித் தெளிவித்தான் என்பார் 'அருநரகில் வீழ்வேற்குச் சிந்தைதனைத் தெளிவித்து' என்றார்.*

*சிவமாக்கி - சிவத்துவம் அடையச்செய்து, சிந்தை சிந்திப்பதன் வடிவன்றித் தனக்கென ஒரு வடிவுமில்லாதது ஆதலால் இந்திரிய சுகங்களை விட்டுச் சிவத்தைப் பற்றியவழிச் சிவமே ஆயிற்று என்பார்*

‘சிவமாக்கி’ என்றருளினார். சிலர், இந்திரிய வயமின்றித் தனித்து நிற்றலே சிவமாந்தன்மை என்பர். சுகம் என்பது நோய் நீக்கமும் இன்பப்பேறும் இணைந்தவழியன்றி உணரப்படாதவாறு போல, இந்திரிய வயமின்றிப் பிரிதலே சிவமாந்தன்மையாகாது; சிவச்சார்பு பெற்று ஊன்றி நிற்கும் யோகானுபவ முதிர்ச்சியும் இன்றியமையாததென உணர்க.

ஆனந்தமே வடிவான சிவத்தை ஆனந்தம் என்றதாம். சிவமும் ஆனந்தமும் குண குணியின்றி அதுவே இரண்டுமாம் என்க. இக்கருத்து அறியாதார் குணியைக் குணமாக உருவகித்ததாக உரைப்பர். அது பொருந்தாமைச் சைவ நூல்களிற் காண்க. உலகியல் ஆனந்தம், இந்திராதி பதவிகளிலுள்ள ஆனந்தம், இவற்றின் வேறுபடுத்தற்காக ‘அந்தமிலா ஆனந்தம்’ என்றார். தில்லைக்கூத்தனைக் கண்ட மாத்திரத்தே காந்தம் பற்றிய இரும்பு காந்தமாதல்போல, தீக்கதுவிய இரும்பு தீ வண்ணமும் தன்மையும் அடைதல்போல ஆன்மா காண்பது ஆனந்தம் ஒன்றையுமே ஆதலின் இங்ஙனம் கூறினார் எனலும் ஆம்.

***குறிப்பு :-*** *இந்திரியம் - பொறி. மயங்கி - மயக்க முற்று என்று முரைப்பர். திரிபுணர்ச்சி யெய்தி என்பது பொருள். இறந்தவுடன் வான் வழிச் சென்று பிற இடங்களுக்குப் போதல், நூல்களுட் கூறப்படும். சிந்தை, அறிவைக் குறிக்கும். சிவத்தின் வசப்படுதலே சிவமாதல் என அறிக. ஆனந்தம் இறைவனுக்கு ஆகு பெயர்.*

**476. வினைப்பிறவி என்கின்ற வேதனையில் அகப்பட்டுத்**
**தனைச்சிறிதும் நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை**
**எனைப்பெரிதும் ஆட்கொண்டென் பிறப்பறுத்தஇணையிலியை**
**அனைத்துலகுந் தொழுந்தில்லை அம்பலத்தே கண்டேனே. 2**

***உரை :-*** *வினைப்பயன் காரணமாக வருகின்ற பிறவியாகிய துன்பத்திலகப்பட்டு, இறைவனான தன்னைச் சற்றும் எண்ணாது சோர்வடைந்து கிடக்கின்ற என்னை, எவ்வளவோ பெரிய வகையில் ஆண்டருளி ஏற்றுக் கொண்டு என் பிறப்பினைத் தொலைத்த ஒப்பற்றவனை, உலக முழுதும் வழிபடுகின்ற தில்லைத் திருச்சபையிற் காணலாயினேன்.*

*பிறவி இடையறாது வருதலானும், நல்வினைப் பயனாகிய இன்பத்தை நுகர்த்தும்போதும் வருந்தி உழைத்தலாதியாய வேதனையை உண்டாக்குதலானும், துன்பத்தைப் புணர்த்தும் போது*

துன்பமேயாக மிகுத்துத் தோன்றலானும் பிறவி என்ற வேதனையில் அகப்பட்டு என்றார். பிறவிக்கு வித்து வினையாதலின் வினைப்பிறவி என்றதாம். வினைப்பிறவி - வினையான் வருவதும், வினைக்கு ஏதுவாவதும் ஆகிய பிறவி என்க.

தனைச் சிறிதும் நினையாதே; தன் - சிவம். இறைவன் செய்த உபகாரத்தை எண்ணி அவனைச் சிறிதும் நினையாமல் என்றவாறு. இன்பமேயான சிவத்தைத் தியானியாதபோது துன்பம் மிக்குத் தோன்றும்; அப்போது உள்ளமும் உயிரும் தளரும்; செயலற்றுக் கிடக்க நேரும் ஆதலின் 'நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை' என்றார்.

கிடப்பேனை ஆட்கொண்டு எனவே இயைதலின் நடுநின்ற 'எனை' என்பதனை ஆட்கொண்டு என்னும் வினைக்கு முதலாக்கி என் + ஐ எனப் பிரித்து என் தலைவனெனக் கூட்டுக. எதுகை நயமும் ஓசையினிமையும் நோக்கி எனைப் பெரிதும் என வல்லொற்றுமிக்கது. பொருளின்தரம் நுகர்ச்சிக்கு வந்தபோது தான் அறுதியிட்டு அறியப் பெறும். அதுபோல இறைவனும் வேறெதனாலும் எவராலும் நீக்கற் கியலாத வினையையும் பிறவியையும் அறுத்து ஆட்கொண்ட அனுபவத்தைக்கொண்டு அவரை இணையிலி என்றார் ஆதலின் இது ஈண்டு அனுபவ ஞானத்தால் விளைந்த திருப்பெயராயிற்று.

அனைத்துலகும் என்றதற்குக் கந்தபுராணத்து அண்ட கோசப் படலத்தில் அறிவிக்கப்பெற்ற உலகங்கள் யாவும் கொள்க. புண்ய பூமியாகிய மண்ணுலகில் விராட்புருடனுடைய இதயத்தானமாய், தகராகாசமாய், ஞானவெளியாய் விளங்கும் தில்லைவேறெங்கும் இன்மையானும், எல்லாவுலகும் இத்தில்லையாற் பெரும்பயன் உறுதலானும் அனைத்துலகும் இதனைத் தொழுகின்றன. அங்ஙனம் தொழ அணிசெய்து நிற்பது அம்பலம், அம்பலத்திற்குயிர் இணையிலி என இயைய எண்ணச் செய்யும் வனப்பு உற்றுநோக்கி நயங்கொள்க.

***குறிப்பு :- தனை யென்பதற்கு உயிராகிய தன்னை யென்று பொருள் கொள்ளுவாருமுளர். ஐம்புலனிற்பட்ட காலை, உயிர் தன்னையுந் தலைவனையு முணராமை காண்க. எனை - எத்துணை.***

**477. உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்தென் உளம்மன்னிக்**
**கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையினால் ஆண்டுகொண்ட**
**திருத்துருத்தி மேயானைத் தித்திக்குஞ் சிவபதத்தை**
**அருத்தியினால் நாயடியேன் அணிகொள் தில்லைகண்டேனே. 3**

*உரை :- (இறைவனாகிய) தன்னுடைய வடிவத்தை யான் அறியாத காலத்திலேயே என் அறிவிற் புகுந்து உள்ளத்தில் நிலை பெற்று என் எண்ணத்தைத் திருத்தி உடம்பு கொண்டு எழுந்தருளி வந்து, திருவருளினால் என்னை ஆட்கொண்டருளியவனாகிய, திருத்துருத்தி யென்னுந் திருப்பதியில் வீற்றிருந்தவனது, இன்பம் பயக்கும் மங்களமான திருவடியை ஆசையோடு, நாயனைய அடியேன் அழகுகொண்ட தில்லைத் திருச்சபையிற் காணலுற்றேன்.*

*கரு + திருத்தி - கருவையே சிவப்பணிக்காகும் வண்ணம் திருத்தி; கருவில் திருத்தாவிடின் பிறந்து வினைக்கீடாகச் சுழலும்போது திருத்த இயலாதாகலின் கருவிலேயே திருத்தி என்றதாம். கருத்து + இருத்தி எனப் பிரித்து என் கருத்தைத் தன்னில் பிரியாதே இருக்கச்செய்து எனலுமாம்.*

*இறைவன் இவ்வண்ணம் தகுதியற்ற என் உள்ளம், கரு, ஊன் இவற்றுள் புக்கது கைம்மாறில்லாத கருணையே என்பார் 'கருணையினால் ஆண்டுகொண்ட' என்றார்.*

*நாயடியேன் - அடித்தாலும், புறம்போக்கினாலும் தன் தலைவனைச் சூழ வருதலேயன்றி புறம்போகாத நற்குணம் அமைந்த நாய்போன்ற அடியேன் என்பதாம். அருத்தி - அமையாத ஆசை. ஒரு பொருளிடத்து ஒருவர்க்கு அயரா அன்பு விளையின் அதனையடைந்தே தீருதல் உறுதியாதலின் அருத்தியினால் தில்லை கண்டேன் என்றருளியதாம்.*

*அணிகொள்தில்லை - அழகிய தில்லை. உலகிற்கே அணியாம் தன்மையைக் கொண்ட தில்லை எனலுமாம்.*

*சிவபதத்தைக் கண்டேன் என்றதால் இது குஞ்சிதபாத நிருத்த தரிசனமாயிற்று.*

***குறிப்பு :-*** *தான் இறைவனை அறிதற்குமுன், அவன் தன்னைப் பக்குவப்படுத்தினமை கூறினார். ஊன்புக்கு என்பதற்குத் தனதுடலை யிடமாகக் கொண்டு என்று முரைப்பர். திருத்துருத்தி சோழ நாட்டிலுள்ளது. பதம் - பாதம். சிவம் - மங்களமான. அருத்தி - ஆசை, அன்பு.*

**478.** கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை
வல்லாள னாய்வந்து வனப்பெய்தி இருக்கும் வண்ணம்
பல்லோருங் காணஎன் தன் பசுபாசம் அறுத்தானை
எல்லோரும் இறைஞ்சுதில்லை அம்பலத்தே கண்டேனே. **4**

***உரை :-*** *அருட்கடலை, ஞானம் பெறாத சிற்றறிவுடையவனாய்க் கீழ்ப்பட்ட நாயனையயான், அறிவுத் திறமுடையவனாய்ப் போந்து அருளழகடைந் தினிதிருக்கும்படி, (அடியார்) பலருங்காண எனது பாசத்தன்மையும் பசுத்தன்மையும் தொலைத்தவனை, எல்லா உயிரும் வணங்குகின்ற தில்லைத் திருச்சபையிற் காணலாயினேன்.*

*கற்றல் - பரிபாகப்படுதல், கல்வி அறியாமையைப் போக்கி அறிவை வளர்த்து மனத்தைப் பரிபக்குவப்படுத்துகிறது. ஆதலால் அங்ஙனம் பரிபாகமுறாத அறிவு புல்லறிவு. அதனையுடைமையால் அடியேன் கடைப்பட்ட நாயேன் ஆயினேன் என்பார் 'கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை' என்றார். சிவனையறியக் கற்க வேண்டிய கல்வி சிவஞானமாதலின் அதனை அடையாத என்றார்.*

*நில்லாதவற்றை நிலையின என்று உணரும் புல்லறிவையன்றிப் பிறவற்றைக் கல்லாத என்னை என்று கூறும் பழையவுரை.*

*என்னை ஆட்கொள்ள வேண்டுமானால் - என் வலிய வினைகளை நீக்கி உய்யக்கொள்ள வேண்டுமானால் எளிதில் இயற்றுதல் ஒண்ணாது என எண்ணி மிக வன்மையுடையவனாக வந்தான் இறைவன் என்பார் 'வல்லாளனாய் வந்து' என்றார். வல் + ஆளன் - வலிமையையாள்பவன், வலிய ஆள்பவன் என்றெல்லாம் கொள்க. எல்லாம் வல்ல சித்தனாக வந்தென்பது பழைய உரை.*

*உடலில் உள்ள நோய் நீங்கியவழி உடல் புத்தழகும் புது வளர்ச்சியும் பெற்று விளங்குதல்போல எனக்கு உள்ள சிற்றறிவுடைமை முதலான பசுத்தன்மையும், அறியாமை மயக்கம் முதலான பாசப் பிணிப்பும் நீங்கி யான் புத்தழகு பொருந்தும் வண்ணம் செய்தான் என்பதனை 'வனப்பு எய்தியிருக்கும் வண்ணம் பல்லோரும்காண என்றன் பசு பாசம் அறுத்தானை' என்றதால் குறித்தருளினார். பசு - பசுத்தன்மை. பாசம் - பாசப் பிணிப்பு.*

*விண்ணவர் முதல் விஷ்ணுவரை அனைவரும் இம்மை மறுமை இன்பங்களை விரும்பி, அவரவர் பரிபாக நிலைக்கு ஏற்ப வணங்கு கின்றனர் ஆதலின் 'எல்லோரும் இறைஞ்சு தில்லை' என்றார். மக்கள் நரகர் முதலியோரும் வணங்கத்தக்க எளிமையுடைமையை விளக்கினார் எனலுமாம். பெத்தர் முத்தர் எல்லோரும் என்பது பழையவுரை.*

***குறிப்பு :-*** *வனப்பு - அழகு, புனிதம், பாசம் - ஆணவம். பசு - தன்னுணர்ச்சி.*

**479.** சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம் யான்எனதென் னுரைமாய்த்துக்
கோதிலமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே. 5

***உரை :-*** *வருணம், குலம், குடிப்பிறப்பு என்பவற்றின் சுழியிலகப்பட்டு, அவற்றால் ஏற்படும் பற்றுக்களால் அறிவு தடுமாறி, ஆதரவில்லாதேனாகிய நாயேனது பிறவித் துன்பத்தைத் தொலைத்து நாயேனை அடிமையாகக் கொண்டு, என் அறியாமைக் குணம், பிறர் வடிவின் நினைவு, யான் எனது என்ற செருக்கு மொழி என்பவற்றைக் களைந்து, குற்றமற்ற சாவாமருந்தானவனை, (அருள்) விளங்குகின்ற தில்லைச் சபையிற் கண்டேன்.*

***குறிப்பு :-*** *வருணம், பெரும்பிரிவு, குலம் அதனுட் பட்டது. அதனினுட் பகுதி, குடிப்பிறப்பு. ஆதம் - ஆதரவு, பிறருருவம் - பிற தெய்வத் தோற்றம் என்று முரைப்பர். 'குலாவு' என்பதற்கு ஞானம் விளங்கும் என்று முரைப்பர்.*

**480. பிறவிதனை அறமாற்றிப் பிணிமூப்பென் றிவையிரண்டும்**
**உறவினொடும் ஒழியச்சென் றுலகுடைய ஒருமுதலைச்**
**செறிபொழில்சூழ் தில்லைநகர்த் திருச்சிற்றம் பலம்மன்னி**
**மறையவரும் வானவரும் வணங்கிடநான் கண்டேனே. 6**

***உரை :-*** *பிறவி முற்றிலும் மாறப்பெற்று, நோய், முதிர்ச்சி என்பவையிரண்டும் சுற்றத்தார் பற்றினோடு நீங்கும்படியாகப் போய், உலகத்தை உடைய ஒப்பற்ற முதல்வனை, அடர்ந்த சோலை சூழ்ந்த தில்லை நகரத்தின்கணுள்ள ஞானசபையினையடைந்து வேதியரும் விண்ணவரும் வழிபடுவதை நான் பார்த்தேன்.*

*எரிவதிழுத்தால் கொதிப்பது நிற்பதுபோலப் பிறவிக்கு ஏதுவாகிய வினைகளைச் செய்யாது, செய்கின்ற வினைகளையும் சிவனருளால் செய்வதாகச் சிந்தித்துச் செய்யின், உள்ள வினை அழிவதோடு வருவினையும் ஏறாமற்போகவே பிறவி தானே நீங்குமாதலின் அங்ஙனம் ஒழுகினேன் என்பார் 'பிறவிதனை அறமாற்றி' என்றார்.*

*பிணி மூப்பு என்பன நம் தீவினையின் பயனாகவும், வினைக் கழிவாலும் விளைவன. வினையொழியவே நோயும் நோய்க்கு ஏதுவாய*

*ஆதிபௌதிக, ஆதிதெய்விக ஆதியாத்மிகங்களாகிற ஏதுக்களும் மூப்புக்கு உறவாகிய நரை திரைகளும், இந்திரியங்கள் வலிகுன்றுதலும் உடனே ஒழியுமாதலின் 'பிணிமூப்பு என்றிவையிரண்டும் உறவினொடும் ஒழியச் சென்று' என்றருளினர். உறவு - உறவினர் எனலுமாம்.*

***குறிப்பு :-** 'பிணி மூப்பு உறவினொடு மொழிய' என்பதற்குப் பிணி, மூப்பு முதலிய தமக்கில்லாது சுற்றத்தாரோடு ஒழிய, என்று முரைப்பர். பிறவியொழிந்த விடத்தே, பிணி, மூப்பு, சுற்றப்பற்று முதலியன ஒழிதல் இயல்பே.*

**481.** **பத்திமையும் பரிசுமிலாப் பசுபாசம் அறுத்தருளிப்**
**பித்தனிவன் எனஎன்னை ஆக்குவித்துப் பேராமே**
**சித்தமெனுந் திண்கயிற்றால் திருப்பாதங் கட்டுவித்த**
**வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே. 7**

***உரை :-** எனது பசுத்தன்மையையும் மலக்கட்டினையும் நீக்கியருளி, அன்பும் பண்புமில்லாத பித்தன் இவனாவன் என்று என்னை உலகினர் கூறும்படி செய்வித்து, நான் பெயர்ந்து போகாவண்ணம், நினைவு என்கின்ற வலிய கயிற்றினால் என்னைத் திருவடியிற் கட்டுவித்த அறிஞராய பெருமானது திருவிளையாடலை, (அருள்) விளங்குகின்ற தில்லையின்கண் பார்த்தேன்.*

*பத்திமை - அன்பு உடைமை. பரிசு - நல்லொழுக்கமாகிற பண்பு. இல்லாப்பித்தன் என இயைக்க.*

*பித்தன் செய்வன தவிர்வன அறியாது மயங்கித் துன்ப இன்ப வேறுபாடின்றி நுகர்ந்து உறக்கமின்றி உழல்பவன். உடலெடுத்ததன் பயன் சிவனிடம் அன்புசெய்து சிவநெறி நிற்க வேண்டியிருக்க அவற்றைச் செய்யாது புறம்புறந்திரிதலால் இவன் ஒருபித்தனெனத் திருவுளங்கொண்டு இறைவன் இவன் இங்ஙனம் திரிதற்குக் காரணம் இவனது சிற்றறிவும், பெத்த நிலையுமே என ஆய்ந்து, நோய்முதல் நாடி நோய் தீர்க்கும் மருத்துவன்போலப் பசுத்துவத்தையும் பாசத்தையும் அறுத்து என்னை உயர்த்தினான் என்பார் 'பசுபாசம் அறுத்தருளிப் பித்தனிவன் என என்னை ஆக்குவித்து' என்றருளினார். ஆக்குவித்து - ஆக்கம் விளைத்து.*

*முன்னே ஆட்கொண்டபோது பிரிந்து புறம்போந்ததை எண்ணி இன்றும் அங்ஙனம் நேராதவண்ணம் மனம் என்னுங் கயிற்றால்*

*திருவடியென்னும் தறியிலே கட்டுவித்தான்; இது வோர் வித்தகச்செயல் என்பது போதர 'சித்தம்' எனும் திண் கயிற்றால் திருப்பாதம் கட்டுவித்த வித்தகனார்' என்றருளினார்.*

***குறிப்பு :-*** *பத்திமை - அன்புடைமை. பரிசு - பண்பு. பசு - தன்னினைவு. பாசம் - கட்டு. வித்தகனார் - கல்வியாளர், அறிஞர்.*

**482.** **அளவிலாப் பாவகத்தால் அமுக்குண்டிங் கறிவின்றி**
**விளைவொன்றும் அறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனுக்(கு)**
**அளவிலா ஆனந்தம் அளித்தென்னை ஆண்டானைக்**
**களவிலா வானவருந் தொழுந்தில்லை கண்டேனே.** **8**

***உரை :-*** *பாவனை - ஒன்றனை மனத்தால் எண்ணுதல். பாவகம் - அங்ஙனம் எண்ணிய எண்ண முதிர்ச்சியால் எண்ணப்பட்ட பொருளாகவே இருத்தல். எண்ணங்கள் நம் நிலைக்கு ஏற்ப விளைதல் இல்லை. எத்தனையோ மனக்கோட்டைகள் விஞ்சிய நிலையில் விளைகின்றன. அந்த மனக்கோட்டைகளின் நடுவில் புதையுண்டு என்பார் 'அளவிலாப் பாவகத்தால் இங்கு அமுக்குண்டு' என்றார். பாவகம் - தீவினை என்னும் பழையவுரை.*

*அங்ஙனம் அமுக்குண்டபோது ஆன்ம அறிவு மழுங்குமாதலின் அறிவின்றி, மனக்கோட்டைமயமாய், அதனால் விளையும் பயன் இன்னவென்று உணராமல் வீணனாகக் கிடந்த நிலைக்கு இரங்கி, எனக்கு ஆனந்தமளித்தான், என்னையாட்கொண்டான், இத்தகைய உபகாரியைத் தில்லையில் கண்டேன் என்பதாம்.*

*களவிலா வானவர் - கரவாடும் வன்னெஞ்சர்க்கு இறைவன் அரியனாகலின் வஞ்சனையில்லாத வானவர்கள் தொழுகின்றனர் என்றவாறு. களவு - தன்னலமும், பிறர்தீங்கும் வேண்டி வழிபடுதல். அங்ஙனமன்றி, என் கடன் பணிசெய்து கிடப்பதே என வழிபடுபவர்கள் என்பதாம்.*

*அளவில்லாத எண்ணங்களால் அழுத்தப்பெற்று நல் லறிவில்லாமல், செய்யும் வினையின் பயனாக எதிர்காலத்தில் வருவ தொன்றையும் அறியாது பயனற்றவனாய்க் கிடக்குமியல்புடைய எனக்கு எல்லையிலாத பேரின்பம் ஈந்து என்னை ஆட்கொண்டவனை, வஞ்சமில்லாத தேவர்களுந் தொழுகின்ற தில்லையின்கட் கண்டேன்.*

***குறிப்பு :-*** *அறிவின்றி - அறிவு விரிதற்கிடமின்றி. வெறுவியன் - வெறுமையன், பயனற்றவன், களவிலாமையால், வானவர் தில்லையிற்*

*றொழுவாராயினர் என்ற குறிப்புக் காண்க. களவிலா - சூழ்ச்சியற்ற, தூய்மையான. 'வானவரும்' என்பதில் உம்மை, பிற அடியாரையுந் தழுவியது.*

**483.** பாங்கினொடு பரிசொன்றும் அறியாத நாயேனை
ஓங்கியுளத் தொளிவளர உலப்பிலா அன்பருளி
வாங்கிவினை மலம்அறுத்து வான்கருணை தந்தானை
நான்குமறை பயில்தில்லை அம்பலத்தே கண்டேனே. **9**

***உரை :-*** *(இறைவனை நாடும்) முறையும் பயனும் ஒரு சிறிதும் தெரியாத நாயேனுக்கு உள்ளத்தே ஞானவெளியானது தழைத்து மிகும்படி, முடிவில்லாத அன்பினைத் தந்தருளி, எனது வினைகளைத் தன்பாலேற்றுப் பாசத்தைக் களைந்து உயர்ந்த பேரருள் புரிந்தவனை, நான்கு வேதங்களும் முழங்குகின்ற தில்லைத் திருச்சபையிற் காணலாயினேன்.*

*பாங்கு - தலைவனுக்கு உவப்பான செயல்கள். பரிசு - அவனுக்குப்பிடித்த குணங்கள். அல்லது அவனைக் கூடுதற்குரிய உபாயங்கள் எனலுமாம். பாங்கு - உரிமை, பரிசு - உரிமையால் விளையுங்குணம் என்பது பழையவுரை.*

*உளத்து ஒளி ஓங்கி வளர உலப்பிலா அன்பருளி எனக் கூட்டுக. இதற்கு, தகுதியற்ற அடியேனுள்ளத்தும் சிவஞானந் தழைத்தற்கு ஏதுவாகிய அழியாத சிவனடி மறவாத பற்றை ஊட்டி எனப் பொருள் கொள்க.*

*வாங்கி - அறியாமையிற்கிடந்த என்னை எடுத்து எனலுமாம். வினைவாங்கி எனக்கூட்டி அடியேன் மேன்மேலும் வினைகளைச் சாராது வினைகளையொழித்து எனக்கொள்க.*

*மலமறுத்து வான்கருணை தந்தானை - மலங்கள் நித்தியமாகலின் அவை எம்மைப்பற்றாது தொடர்புநீக்கி, மீளவும் மலகன்மங்கள் வந்து பற்றாதவண்ணம் பாதுகாவலாகக் கருணையையும் அருளியவனை என்க.*

*அங்ஙனம் பரிபாகமுறுத்தி ஆட்கொண்டு கருணையும் வழங்கிய வள்ளலைத் தில்லையம்பலத்துத் தரிசிக்கப்பெற்றேன் என்பதாம்.*

***குறிப்பு :-*** *பாங்கு - முறை. பரிசு - பயன். 'உளத்தொளி ஓங்கி' என மாற்றுக. உளத்தொளி - உயிரினறிவிற் கலந்த இறையறிவு. உலத்தல் - வற்றிப்போதல். 'வாங்கு' என்பதற்குக் கழித்து என்றும்*

*பொருளுரைப்பர். மலம் - ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்கள். நான்குமறை - நால்வகை வாக்குக்கள்.*

**484.** பூதங்கள் ஐந்தாகிப் புலனாகிப் பொருளாகிப்
பேதங்கள் அனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே. **10**

***உரை :-*** *ஐம்பூதங்களை வடிவாகக் கொண்டும், மனத்தால் அறியு மறிவாகியும், உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் ஆகியும் அப்பொருள்களின் வேறுபாடுகளெல்லாம் ஆகியும், தன்னியல்பில் மாற்றமில்லாத பெருந்தன்மையுடையானை, துன்பங்களைத் தொலைத்து ஆட்கொண்ட, தானே விளங்கும் ஒளி போல்வானை மரகதமலையானை ஞான நூல்கள் வணங்கி வாழ்த்தும் அருள் விளங்குந் தில்லையிற் காணலாயினேன்.*

*பூதங்களைந்து - மண் நீர் அனல் கால் விண் என்ற ஐந்து பூதங்கள். புலன் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்து தன் மாத்திரைகள். அவற்றின் பேதங்கள் - தாத்துவிகங்களாகிய சிவதத்துவம் முதல் பிருதிவியீறான தத்துவங்களானியன்ற பொருள்கள். இவ்வண்ணம் எல்லாமாய்ப் பேதப்படினும், தான்மட்டும் விகாரியாகாமல் விளங்கும் பெருமை இறைவற்கேயுரிய சிறப்பிலக்கணம் என்பார் 'பேதங்கள் அனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனை' என்றார்.*

*கேதங்கள் - துன்பங்கள். நோய்களை ஒளியாலும் மணியாலும் நீக்குதல் மருத்துவநூன்மரபு. ஆதலின் துன்பந்துடைக்கும் பெருமானைக் கேதங்கள் கெடுத்தாண்ட ஒளி என்றும் மரகதம் என்றும் கூறினார். கேதம் - யான் எனது என்னும் பொய் என்பது பழையவுரை. மரகதம் - பச்சைமணி. பச்சை தன்னைச் சார்ந்த பால் முதலியவற்றையும் பசுமையாகத் தோற்றுவித்து, பாலைச்சார்ந்த தான் வெண்மையாகாதது போல இறைவன் சத்திதன் பேதம் எல்லாம் தானாத்தோன்றியும் தன் நிலை ஒன்றாயே நிற்பன் என்றதை உருவகத்தாலும் உளங்கொள வைத்ததாம்.*

***குறிப்பு :-*** *எல்லாவற்றிலும் அத்துவிதமாய்க் கலந்திருத்தல் பற்றி 'எல்லாமாகி' என்றார். புலன் - மன அறிவு. ஐம்பொறி யறிவென்றுங் கொள்ளுவர். வேதங்கள் பயின்றோர்க்கு வேதங்கள் ஆகுபெயர். மரகதம், அம்மையின் நிறம். அருட்சத்தியும் அதன் வடிவேயாதலின், 'மரகதத்தை' என்றார்.*

***திருச்சிற்றம்பலம்.***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 32. பிரார்த்தனைப் பத்து

*(பிரார்த்தனை - இரந்துநிற்றல். அடிகள் தம்மை ஏனை அடியார்களோடு உடன் சேரச் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும் என இறைவனை இரந்து நிற்கும் செய்தியைக் கூறும் பதினொரு பாடல்களின் தொகுதியே இப்பகுதி. இங்ஙனம் இரக்கப்படுவது இடையறாத பேரின்ப நிலையேயாதல் பற்றி இதற்கு, சதாமுத்தி எனக் குறிப்புரைத்தனர் முன்னோர். சதா - இடைவிடாமை. இது, திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது என்பது பதிப்புக்களில் காணப்படுவது. இதன்கண் உள்ள எல்லாத் திருப்பாட்டுக்களும் அறுசீரடி விருத்தங்கள். இப்பகுதி அந்தாதியாய் அமைந்தது.)*

*சில நாட்களுக்குப்பின் அடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளி யிருந்தபோது, தில்லையில் இறைவனைக் கண்ட ஆனந்தம் கருத்தைக் கவர, பசியால் வாடிய ஒருவனுக்கு உணவு கண்டாற்போலக் கண்டதில் அமைதியுறாது அவரிடம் இடையறா அன்புசெய்யவும், ஓவாது உருகவும் பரமானந்தப் பழங்கடல் மூழ்கவும், தளிர் பொற்பாதம் பெறவும், பேரானந்தம் வைக்கவும், ஆனந்தமேயாக அபேதமாகி விளங்கவும் இறைவனை நோக்கிப் பிரார்த்தித்தலின் இப்பகுதி பிரார்த்தனைப் பத்தாயிற்று. இது திருப்பெருந்துறையில் அருளப்பெற்றது எனவும், தில்லையில் அருளப்பெற்றது எனவும் கூறப்படுகிறது.*

*பத்து எனப்படுமாயினும் பதினொரு பாடல்களைப் பெற்று, அந்தாதித்தொடையாக விளங்குவது இதன் தனிச்சிறப்பு.*

*'பிரார்த்தனைப் பத்து சதாமுத்திப் பேறே' என்பது அகத்தியச் சூத்திரம். முன்னைப் பத்தில் திருவருட்காட்சி கண்டும் எதிர் தோன்றாது சிவாநுபவமே சுவாநுபூதிகமாக நிட்டை பெறுங்காலம் திருத்தொண்டை அளவளாவி அடியார் உறவே நீங்காப் பெருமை நெறியென வேண்டுதல் என்பது பழையவுரையின் கருத்து.*

*பழையகுறிப்பு சதாமுத்தி; என்பது ஆன்மாக்களுக்கு முத்தி நிச்சயம் பண்ணுதல் என்கின்றது.*

*திருவாசகச் சிறப்புக்கூறும் பழையபுராணம் 'அந்தமிலா ஆனந்த சத்தகலாமல் எனை அழுத்தி ஆள்வாயென்று சிந்தைகலந்துரைத்ததுவே பிரார்த்தனைப் பத்தாய்ப் புகலும் செய்கையாமே' என்னும், இடையீடில்லாது சிவனாந்தப் பெருங்கடலில் திளைக்கத் திருவருள்புரிக என வேண்டிக் கொள்ளுதலே பிரார்த்தனைப் பத்தாதல் காண்க.*

***சதாமுத்தி***

***அறுசீர் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**485.** **கலந்து நின்னடியா ரோடன்று வாளா களித்திருந்தேன்**
**புலர்ந்து போன காலங்கள் புகுந்து நின்ற திடர்ப்பின்னாள்**
**உலர்ந்து போனேன் உடையானே உலவா இன்பச் சுடர்காண்பான்**
**அலந்து போனேன் அருள் செய்யாய் ஆர்வங் கூர அடியேற்கே. 1**

***உரைநடை :-*** *அன்று என்பதை முதலிற் கொள்க. அடியேற்கே ஆர்வங் கூர அருள் செய்யாய் எனக் கொள்க.*

***உரை :-*** *(நீ என்னை யாட்கொண்ட) அந்நாளில் உனதடியாரோடு கூடிச் சும்மா மகிழ்ந்திருந்தேன். அவர்கள் பிரிந்த பின் கூடிக்களித்த காலங்களெல்லாம் கழிந்து போயின. பின்னாளில் துன்பம் ஏற்பட்டு நிலை பெற்றது. உடையவனே யதனால் நான் வாடிப் போனேன். என்றுங் கெடாத பேரின்பத்தைத் தருகின்ற சோதியைப் பார்க்க விரும்பிப் பார்க்கப்பெறாது வருந்தினேன். அடியேனுக்கு அன்பு மிகும்படி அருள் செய்யவேண்டும்.*

*அன்று : காலம் கருதிய சுட்டுப்பெயர். குருந்தடியில் நீ குருவாக எழுந்தருளி அடியேனை முதன்முதலாக ஆட்கொண்ட அன்று என்க. அடியார்கூட்டத்தில் கலக்கப்பெற்றால் சிரித்தும் களித்தும் தேனித்தும் திரண்டு திரண்டு சிவன்புகழைப் பேசியும் மகிழவேண்டிய யான் பயனின்றிக் களித்தே காலம் போக்கினேன் என்பார் 'வாளா களித்திருந்தேன்; காலங்கள் புலர்ந்து போன' என்றார்.*

*திருவருளில் திளைத்துத் தியானித்துப் பயன்பெறவேண்டிய காலம் கிடைத்தும் பயன்படாமல் நழுவியதால் பின்னாளிலே பலவகையான துன்பங்கள் தலைக்காட்டலாயின என்பார் 'பின்னாள் இடர்புகுந்து நின்றது' என்றார். வருவன தாமே வரும் என்றாற்போலத் துன்பம் தானேவரும் தடுத்தற்கியலாது என்பது போதர 'இடர்புகுந்து நின்றது' என்றார்.*

*எதனையுந்தாங்கும் ஆற்றலற்றகாலத்தே துன்பந்தோன்றுமாயின் அதனைப் போக்கிக்கொள்ள முடியாமல் வருந்துதலே நிகழக்கூடிய தாகலின் 'உலர்ந்து போனேன்' என்கின்றார். உலர்தல் - ஈரம் வற்றிச் சருகாதல்; அன்பும் ஆதரவும் அற்றுப் போதலுமாம்.*

*இத்தனைத் துன்பச்சூழல்களுக்கு இடையிலேயும் ஓராசை;*

*எப்படியாவது என்றும் மாறாத இன்ப ஒளியைக் காண வேண்டுமென்று. அவ்விருப்பம் எளிதில் ஈடேறாமையால் 'அலந்தே போனேன்' என்றார்.*

*தந்தை தன்மகனுக்குத் தன்செல்வமுழுதையுமே கொடுப்பா னாயினும், அறிவுள்ள தனயன் தந்தையை நோக்கி, எனக்கு முதல் கொடு அதனை வைத்து உழைத்து ஊதியம் பெருக்கிச் செல்வனாய் இன்பம் துய்ப்பேன் என்கிறான். அவன் நோக்கம் தான்தேடாப் பொருளால் இன்பமுமில்லை புண்ணியமுமில்லை என்பதாம். அதுபோல அடிகள் இறைவனிடம் பேரின்பம் அருளுக எனப் பிரார்த்திப்பாராயின், பெருங்கருணைத் தடங்கடலாகிய பெருமான் அதனையும் அருள்வர். ஆயினும், அன்பு செய்து சிவஞானம் பெற்றுச் சிவபோகம் துய்க்க விரும்பி, எனக்கு ஆர்வம் அருளாய் என வேண்டுகின்றார். ஆர்வம் - போதும் என்று அமையாத அன்பு.*

*தைலதாரை போன்ற இடையீடில்லா அன்பே சிவமாய் இன்பாம் ஆதலின் சதாமுத்தியாதல் காண்க.*

***குறிப்பு :-** வாளா என்பது அன்பு செலுத்தாமையைக் குறிக்கும். புலர்ந்து - விடிந்து, கழிந்த நாட்களும், மாதங்களும் பல வாயினமையின் காலங்கள் என்றார். மதுரையிற் பாண்டியன் முதலியோர்க்கு பதிற் சொல்ல வேண்டியிருந்ததை இடர் என்ற சொல் குறிக்கும். இறைவனைப் பிரிந்த ஆற்றாமையும் இடரே. அலந்து - எண்ணியது கிடைக்கப் பெறாது வருந்தி.*

**486. அடியார் சிலருன் அருள்பெற்றார் ஆர்வங் கூர யான் அவமே**
**முடையார் பிணத்தின் முடிவின்றி முனிவால் அடியேன் மூக்கின்றேன்**
**கடியே னுடைய கடுவினையைக் களைந்துன் கருணைக் கடல்பொங்க**
**உடையாய் அடியேன் உள்ளத்தே ஓவா துருக அருளாயே. 2**

***உரைநடை :-** உடையாய் என்பதை முதலிற் கொள்க. சிலர் என்பதை ஆர்வங் கூர என்பதோடு முடிக்க.*

***உரை :-** முதல்வனே! அடியார் சிலர் அன்பு மிகுதியினால் உன் திருவருளைப் பெற்றார்கள். யானோ வீணாகப் புலால் நாற்றம் நிறைந்த பிண உடம்பிற்கு ஓர் முடிவின்றி அதிலிருக்கப் பெற்ற வெறுப்பினால் அடியேன் முதிர்ச்சியுற்றேன். கடுமையான குணத்தையுடைய எனது கொடிய வினைகளைத் தொலைத்து உன்னுடைய அருட்கடலானது அடியேனுடைய உள்ளத்திற் பொங்கும்படியாக ஓயாது அன்பில் உருகுவதை எனக்கு அருள் செய்வாயாக.*

*குறிப்பு :-* இழிவுபற்றியும், அன்பின்மை பற்றியும் உடம்பைப் பிணமென்றார். முடை - புலால் நாற்றம், தீய வாசனை, வெறுக்கத் தக்க தன்மை தன்னிடத்தில் அதிகப்படுவதாகக் கூறுவார் முனிவால் மூக்கின்றேன் என்றார். கடியேன் - உருக்க மில்லாத நெஞ்சுடையேன். பொங்க - விளங்க வென்று முரைப்ப.

**487.** அருளா ரமுதப் பெருங்கடல்வாய் அடியா ரெல்லாம் புக்கழுந்த
இருளா ராக்கை இதுபொறுத்தே எய்த்தேன் கண்டாய் எம்மானே
மருளார் மனத்தோர் உன்மத்தன் வருமால் என்றிங் கெனைக்கண்டார்
வெருளா வண்ணம் மெய்யன்பை உடையாய் பெறநான் வேண்டுமே. 3

***உரை :-*** முதல்வனே! திருவருளாகிய கிடைத்தற்கரிய அமுதப் பெருங்கடலின்கண் அடியாரெல்லாம் புகுந்து திளைத்தாடவும், அறியாமை நிறைந்த உடம்பாகிய இதனைச் சுமந்து இளைத்தேன். எமது தலைவனே! மருட்சி பொருந்திய மனத்தை உடைய ஒரு பித்தன் வருகின்றானென்று இவ்வுலகிலே என்னைக் கண்டவர்கள் சொல்லி அஞ்சாவண்ணம், (வீடடைதற் பொருட்டு) நான் உண்மையான அன்பைப் பெறுதல் வேண்டும்.

*குறிப்பு :-* வருமால் என்பதில் ஆல் அசை. வெருளுதல் - மருளுதல், அஞ்சுதல். மருள் - மயக்கம். உன்மத்தன் - பித்தன். இருள் - அறியாமை. இருளாராக்கை - அறியாமை காரணமாக வரும் உடல்.

**488.** வேண்டும் வேண்டும் மெய்யடியா ருள்ளே விரும்பி எனை அருளால்
ஆண்டாய் அடியேன் இடர்களைந்த அமுதே அருமா மணிமுத்தே
தூண்டா விளக்கின் சுடரனையாய் தொண்ட னேற்கும் உண்டாங்கொல்
வேண்டா தொன்றும் வேண்டாது மிக்க அன்பே மேவுதலே. 4

***உரைநடை :-*** வேண்டுமென்பதை மேவுதலே என்பதனோடு முடிக்கலாம்.

***உரை :-*** தன்னை விரும்பி நின்ற மெய்யடியார்கள் நடுவே என்னை வைக்க விரும்பித் திருவருளாலெனை யாட்கொண்டவனே! அடியேனுடைய பிறவித் துன்பத்தை நீக்கிய அருமருந்தே! கிடைத்தற் கரிய பெரிய மாணிக்கமே! முத்தே! தூண்ட வேண்டாது, தானே யெரியும் விளக்கின் கொழுந்து போன்றவனே! அடியனேற்கும் விரும்பத்தகாத தொன்றையும் விரும்பாது உயர்ந்த அன்பினையே பொருந்துதலாகிய செய்கை யேற்படுமா அஃதே எனக்கு வேண்டும்.

*குறிப்பு :-* வேண்டும் வேண்டுமென்பதற்கு இடைவிடாது விரும்புமென்றும் பொருள்கொள்ப. இறைவன் இயற்கை யறிவுடை

*யனாகலின் 'தூண்டா விளக்கின் சுடரனையாய்' என்றார்.*

**489.** மேவும் உன்தன் அடியாருள் விரும்பி யானும் மெய்ம்மையே
காவி சேருங் கயற்கண்ணாள் பங்கா உன்தன் கருணையினால்
பாவி யேற்கும் உண்டாமோ பரமா னந்தப் பழங்கடல் சேர்ந்
தாவி யாக்கை யானெனதென் றியாது மின்றி அறுதலே. 5

***உரைநடை :-*** *'காவி சேருங் கயற்கண்ணாள் பங்கா' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *குவளை மலரின் தன்மை பொருந்திய கயல் போன்ற கண்ணையுடைய உமையம்மை பாகனே! உன்னுடைய அடியார் நடுவண் இருக்க விரும்பி யானும் உண்மையையே விரும்புகின்றேன். உன்னுடைய திருவருளினாலே மேலாகிய பேரின்பமாகிய பழைய கடலிற் புகுந்து, உயிர்ப் போதம், உடம்புணர்ச்சி, யானென தென்னுஞ் செருக்கு முதலிய யாது மில்லாமற் செயல் அற்றுப் போதலாகிய நிலை பாவியேனுக்கு மேற்படுமோ?*

***குறிப்பு :-*** *விரும்பி என்பதை விரும்ப என்பதன் திரிபாகக் கொண்டு, அடியார் மெய்ம்மையையே உள்ளத்தில் விரும்ப, அவர்கள் சார்பு பற்றி யானும் மெய் விரும்புவேன் என்றலுமுண்டு. காவி - நீலோற்பல மலர். மேவும் என்பதை அடியாரென்பதோடு முடித்தலும் மெய்ம்மையே என்பதைச் சேர்ந்து என்பதனோடும் முடித்தலுமுண்டு.*

**490.** அறவே பெற்றார் நின்அன்பர் அந்த மின்றி அகநெகவும்
புறமே கிடந்து புலைநாயேன் புலம்பு கின்றேன் உடையானே
பெறவே வேண்டும் மெய்யன்பு பேரா ஒழியாப் பிரிவில்லா
மறவா நினையா அளவிலா மாளா இன்ப மாகடலே. 6

***உரைநடை :-*** *பேரா வொழியா.... கடலே என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *நிலை பெயராத, என்றும் நிலைத்த, நம்மை விட்டு நீங்காத, மறப்பு, நினைப்பில்லாத, அளவற்ற, தொலையாத பேரின்ப சாகரமே! உன்னுடைய மெய்யன்பர்கள் முடிவில்லாமல் உள்ளம் உருகவே உன்னை முழுவதும் பெற்று விட்டார்கள். அவர்கள் கூட்டத்திற்கு வெளியே பயனில்லாமல் கிடந்து கீழ்த் தன்மையுடைய நாயேன் பேரின்பம் வேண்டுமென்று புலம்புகின்றேன். நாதனே! அது பெறுதற்குரிய உண்மை யன்பினை நான் கட்டாயம் பெறவேண்டும்.*

*நின் அன்பர்கள் இன்பத்தை மிகப் பெற்றார்கள். யான் மட்டும் பிரிந்து வருந்துகிறேன். அதற்குக் காரணம் என்பால் மெய்யன்பு இன்மையே. அதனால் இன்பக்கடலே! எனக்கு உண்மை அன்பை உதவுக. உனக்கு அன்பராயினார் நின்பால் எய்தும் இன்பத்தை மிகப் பெற்றனர்; ஏகபோகமாகப் பெற்றனர். அறவே - மிகுதியாக. தான் உண்மையன்பு பெறாமையால் மனிதகுலத்திற்கே ஒவ்வாத இழிதகைமையுடையேன் என்பார் தன்னைப் புலைநாயேன் என்றார். ஏனையோர் பேரின்பம் பெற்றதைக் கண்டு யான் மனமுடைகின்றேன்; ஓராண்டா? ஈராண்டா? எல்லையில்லாத காலம் மனமுடைகின்றேன்; அதனால் புலம்புகின்றேன்;*

*கடலில் எத்தனைபேர் எத்தனைகுடம் முகந்தாலும் நீர் குறையாதவாறுபோல, பேரன்பர்கள் மிக மிக நுகர்ந்தாலும் உன் இன்பம் குறையாது என்றுணர்த்த 'இன்பமாகடலே' என்றும், ஏனைய இன்பத்திற்குள்ள தீயகுணங்கள் ஒன்றும் இல்லை என்பார் 'பேரா, ஒழியா, பிரிவில்லா, மறவா, நினையா, அளவில்லா, மாளா இன்பம்' என்றும் அருளினர்.*

*மெய்யன்பு பெறுதல் ஒன்றே அமையும்; அதன் வாயிலாக இன்பப்பேறு தானே சித்திக்கும்; ஆதலின் அதனை வேண்டுகின்றார். அதனால் இது சதாமுத்தி கூறுவதாயிற்று.*

***குறிப்பு :-** அறவு என்பதற்கு நிராசை, ஆசையின்மை எனப் பொருளுரைப்பாருமுளர். கடல் ஏழு ஆதலின் இன்பமா கடலுக்கும் ஏழு அடைமொழி கொடுத்தார். இறைவன் போக்கு வரவில்லாதவ னாதலின் 'பெயரா' என்றார். இன்பம் இறைவனைவிட்டு நீங்காமையின் 'ஒழியா' என்றார். உயிர்களோடு இறைவன் அத்துவிதமாய்க் கலந்திருத்தலின் 'பிரிவில்லா' என்றார். சகல அவத்தையைக் கடந்த அதீத நிலையில் அனுபவிக்கப் படுவதாதலின், 'மறவா, நினையா' என்றார். வரம்பிலின்பமாகலின் 'அளவிலா' என்றார். பெற்ற பேரின்பம் உயிரைவிட்டு நீங்காமையின் 'மாளா' என்றார்.*

**491.** **கடலே அனைய ஆனந்தம் கண்டா ரெல்லாங் கவர்ந் துண்ண**
**இடரே பெருக்கி ஏசற்றிங் கிருத்த லழகோ அடி நாயேன்**
**உடையாய் நீயே அருளுதியென் றுணர்த்தா தொழிந்தே**
**கழிந்தொழிந்தேன்**
**சுடரார் அருளால் இருள் நீங்கச் சோதீ இனித்தான் துணியாயே. 7**

***உரை :-*** *முதல்வனே! மேலே கூறிய கடல்போன்ற பேரின்பத்தைக் கண்ட அடியார்களெல்லாம் வலிதிற்பெற்று அனுபவிக்கவும், துன்பத்தையே பெருக்கித் துயருற்று அடிமையாகிய நாயேன் இவ்வுலகில் சும்மா விருப்பது அழகாகுமா? என்னை உடைய நாதனாகிய நீயே நான் கேளாமலே அப்பேரின்பத்தைத் தருவா யென்றெண்ணி உனக்கு என் விருப்பத்தைத் தெரிவியாது போய்க் கழிவுபட்டுவிட்டேன். ஒளிவண்ணனே! இனியாவது பிரகாசம் பொருந்திய (நினது) அருளாகிய (வாளினாலே) என்னுடைய அறியாமையாகிய இருள் நீங்கும்படி அதனைச் சேதிப்பாயாக.*

*கண்டவர்களெல்லாம் ஆனந்தமடைய நான் வருந்துவது உன் பெருமைக்கு அழகோ? முதல்வனுக்குத் தெரியாதா? அவரே அருளுவர் என்றிருந்து காலங்கழித்தேன்; சோதீ! இனியாவது என் மனவிருள்கெடத் திருவருள்செய் என்பது கருத்து.*

*அடிமைக்குப் பணி செய்வது கடமை. அறிந்து பயனூட்டுவது முதல்வன் கடமையாயிற்றே. அன்றியும், எனக்கு அதைக்கொடு இதைக் கொடு என்று கேட்க அடிமைக்கு உரிமை ஏது? ஆதலால், முதல்வனுக்குத் தெரியாதா அவரே நமக்கு அருள் புரிவாரென்றிருந்தேன். அதன் பயன் காலம் கடந்தது அவ்வளவே! அழுத பிள்ளைதான் பால் குடிக்கும். கேட்டாற்றான் பெறலாம் என்பதை இப்போது உணர்கின்றேன். இதுவரை இருந்த அறியாமையை நீக்கி, உண்மை அன்பை உதவு என வேண்டுகிறார்.*

***குறிப்பு :-*** *கடலே என்பதில் ஏகாரம் தேற்றம் உணர்த்தும். சுடர் - ஞானப் பிரகாசம். துணி யென்றமையால் அருள் என்பது வாளாக உவமிக்கப்பட்டது.*

**492.** **துணியா உருகா அருள்பெருகத் தோன்றுந் தொண்ட ரிடைப் புகுந்து,**
**திணியார் மூங்கிற் சிந்தையேன் சிவனே நின்று தேய்கின்றேன்,**
**அணியா ரடியாருனக்குள்ள அன்புந் தாராய் அருளளியத்,**
**தணியா தொல்லை வந்தருளித் தளிர்ப்பொற் பாதந் தாராயே. 8**

***உரை :-*** *சிவபெருமானே! நீ ஆதரவென்று துணிவுற்று மனமுருகித் திருவருட் பொலிவு மிகும்படி விளங்குகின்ற அடியார்கள் நடுவே புகுந்திருக்குந் திண்மை பொருந்திய மூங்கிலைப் போல உருகாத மனமுடைய யான் இவ்வுலகில் நிலையுற்றுத் தளர்கின்றேன். அழகு பொருந்திய உனதன்பர் உன்பால் வைத்துள்ள மெய்யன்பையும் எனக்குத் தர வேண்டும். தாமதஞ் செய்யாமல் விரைவில்*

என்னுள்ளத்தில் அருள் கனியும்படி தோன்றியருளித் தளிர்போன்ற உனது பொன்னடிகளை எனக்குத் தருதல் வேண்டும்.

திணியார் மூங்கில் என்பதற்குத் திண்மை நிறைந்த மூங்கிலின் கணுவை ஒத்து என்பாரும், உள்ளீடு அற்ற மூங்கில் என்பாரும் உளர். கணுவுக்குக்கணு முள் நிறைந்திருக்கும் மூங்கில் போலத் தீமை பொருந்தியவன் என்பது. ஏனைய அடியார்கள் மூங்கிலின் வழுவழுப்பும் பசுமையும் தண்மையுமுடைய பகுதியாகவும், அடியார்களிடைப் புகுந்த இவர் அதன் கணுவாகவும் கருதியதாகக் கொள்க. உள்ளீடு அற்ற மூங்கில் என எதிர்மறைப்பொருள் கோடலும், உள்ளீடாகிய அறிவு இல்லாமைக்குக் கூறினார் என அதுபற்றி எழும் நயங்கூறலும் ஈண்டுப் பொருந்தாமையைத் ‘திணி ஆர் மூங்கில்’ என்ற சொல்லமைப்பாலேயே தெளிக. உட்டுளையுடைய மூங்கிலையே சுமைகளைத் தூக்கவும், வீடு மேயவும் பயன்படுத்துவர். கல்மூங்கில் ஊன்றுவதற்கும் அடிப்பதற்கும் அன்றிப் பயன்படாமையும் காண்க. தேய்கின்றேன் என்றது பயன்படாமையைக் கருதிக் கூறியது. துணியா என்பதற்கு அருள் பெருகுதலால் ஐயந்தெளிந்து எனக் கூறுதலுமாம்.

அணியார் அடியார் - அணுக்கத்தொண்டர். அணுக்கத் தொண்டர்களிடத்துத் தலைவற்குத் தனித்ததோரன்பு இருத்தலும், சேய்மைக்கண் உள்ளார்பால் பொதுவகையான அருள் இருத்தலும் இயல்பு ஆதலின் சிறப்பாக அணுகியார்மாட்டு உனக்குளதாம் அன்பை அருளவேண்டுகிறார். அடியார்க்கு உன்னிடமுள்ள அன்பு என உருபு பிரித்துக்கூட்டிப் பொருள் கூறுவாருமுளர்.

***குறிப்பு :-* துணியா - துணிந்து, உறுதியுடன். திணி - திண்மை. மூங்கிலானது மேற்செல்லாது வளைவுற்று நிற்றல்போல, மனமானது கடவுளை நோக்காது உலகினை நோக்கினமை குறிக்கப்பட்டது. அணி - அழகு, நேர்மை. தாராய் - தருக. அருளளியத் தணியாதென்று சேர்த்து, அருள் தானே கனியும்வரை தாமதியாது என்று பொருள் கொள்வதுமுண்டு.**

**493.** **தாரா அருளொன் றின்றியே தந்தாய் என்றுன் தமரெல்லாம்
ஆரா நின்றார் அடியேனும் அயலார் போல அயர்வேனோ
சீரார் அருளாற் சிந்தனையைத் திருத்தி ஆண்ட சிவலோகா
பேரா னந்தம் பேராமை வைக்க வேண்டும் பெருமானே.** **9**

***உரைநடை :-*** ‘சீரார் அருளாற் சிவலோகா’ வென்பதை முதலிற் கொள்க.

***உரை :-*** *சிறப்புப் பொருந்திய உனது திருவருளினால் எனது உள்ளத்தைச் செம்மை செய்து ஆட்கொண்ட சிவலோகநாதனே உன் உறவினர்களாகிய அடியாரெல்லாம் நீ அவர்களுக்குக் கொடுக்க வேண்டிய அருள் என்றும் பாக்கியில்லாமற் கொடுத்தா யென்பதைத் தெரிந்து உன் பேரானந்தத்தை முழுதுந் துய்க்கின்றார்கள். அடியேன் மாத்திரம் உன்னருளுக்கு அயலானவர்கள் போலத் தளர்வேனா? பேரின்ப நுகர்ச்சியானது எப்போதும் நீங்காதபடி பெருமானே! எனக் கமைத்தருள வேண்டும்.*

*தமர் - தம்மைச் சேர்ந்தவர்; உறவினர். உன் தமரெல்லாம் என்றது தாம் அருளாராமை காரணமாக எழுந்த சினம் பற்றிய உரை என்க. இரு குழந்தைகள் விளையாடுகின்றபோது, ஒரு குழந்தை இதோ பார்! அப்பா எல்லாப் பழங்களையும் என்னிடம் கொடுத்துவிட்டார் என்று சொல்லிக்கொண்டே தின்னுமாயின் மற்றொரு குழந்தை அயல்வீட்டுக் குழந்தை போலத் தூர நின்று அழும். அதுபோல நின்னடியார், மிச்சமில்லாமல் அருள் முழுதையும் எம்மிடமே கொடுத்தாயென்று கூறிக்கொண்டே அருளை அனுபவிக்க, யான் அயலார்போல அயர்வேன் என்கின்றார்.*

*புறம்போதற்குக் காரணமாக இருந்தது என் மனமே எனத் தன் குறையைத் தானுணர்ந்து, இறைவன் திருவருளால் தன் சிந்தையைத் திருத்தியதை முற்கூறுகின்றார். 'சீரார் அருளால் சிந்தனையைத் திருத்தி ஆண்ட சிவலோகா' என்று.*

***குறிப்பு :-*** *அயலார் - அருளுக்குப் புறம்பானவர்கள். ஆரா நின்றார் - உண்ணா நின்றார், அனுபவிக்கின்றார். அயர்வேன் - தளர்வேன். பேராமை - பேணுதலில்லாமை.*

**494.** **மானோர் பங்கா வந்திப்பார் மதுரக் கனியே மனம் நெகா,**
**நானோர் தோளாச் சுரையொத்தால் நம்பிஇத்தால் வாழ்ந்தாயே,**
**ஊனே புகுந்த உனையுணர்ந்தே உருகிப் பெருகும் உள்ளத்தைக்,**
**கோனே அருளுங் காலந்தான் கொடியேற் கென்றோ கூடுவதே. 10**

***உரை :-*** *மானைப் போன்ற பார்வையுடைய உமையம்மை பாகனே! வணங்குவார்க்கு இனிய கனிபோல்பவனே! மனம் நெகிழாத நான் தொளைக்கப்படாத பயனற்ற ஒரு சுரைக்குடுக்கை போன்றிருந்தால், அண்ணலே! நீ யிதனால் நன்கு வாழ்ந்துவிட்டாய் போலும்! உடம்பினை இடமாகக் கொண்ட உன்னை யறிந்து அன்பினா லுருகி அறிவு பெருகுதற்குரிய மனதைத் தலைவனே! நீ*

கொடுத்தருளுங் காலந்தான், கொடுமை யேனுக்கு எந்நாள் வந்து சேருமோ?

வந்திப்பார் - வணங்குகின்றவர்கள். வந்தனை என்பது தன்முனைப்பற்றுத் தலைவன்பால் விளைந்த இடையீடில்லாத பேரன்பால் நிகழ்வது. அங்ஙனம் வணங்குவார் பேரின்பத்தை எய்தச் செய்கின்றான் இறைவன் ஆதலின், 'மதுரக் கனியே' என்றார். மதுரம் - இனிமை. வாயிலிட்டது முதல் உண்டு, முன்னறி காட்சியாக உணர்வில் ஒட்டியிருக்கின்ற ஆயுட்காலம் வரை இனிமை மறவாமையின் இறைவனை மதுரக் கனியாக அனுபவிக்கின்றார். ஔவையுண்ட நெல்லிக்கனிபோல்பவனே எனப் பொருள்கொண்டு, முன் துவர்த்துச் சிறிது புளித்து, பின்னர் முற்றும் இனித்து வாழ்வளிப்பவனே எனலுமாம்.

மனம் நெகுதலாவது இறைவனை - அவன் செய்த உபகாரங்களை எண்ணியபோது ஆன்மபோதமுனைப்பற்று உருகுதல். கணவனைவிட்டுப் பல்லாண்டு பிரிந்து, அவனையே நினைந்து நினைந்து நைந்திருந்த கற்பரசி, கணவன் வர இருக்கின்றான் வந்து விட்டான் என்றபொழுது எந்நிலையில் இருப்பாளோ அந்நிலையில் மனம் இளகுதல்.

அங்ஙனம் நெகாமையால் நான் ஒரு தோளாச்சுரையை ஒத்தேன் என்கின்றார். துளைத்த சுரைக்காய் நீருள் ஆழ்ந்து நீரை முகந்து கொள்ளும் இயல்பினது. தோளாச்சுரை பெருவெள்ளமாயினும் மிதக்குமேயல்லாது முழுவதும் நனையாது. அதுபோல, அடியேன் நின் வெள்ளத்து ஆழ்ந்து அதன் வியாபகத்துள் வியாப்பியமாய் அடங்கியும், அருளின் கொள்கலமாய் ஏற்றும் பேரானந்தத்துத் திளைக்க வேண்டியவாய்ப்பை விட்டிருக்கின்றேன் என்பார் இங்ஙனம் கூறினார்.

கொடியேனாகிய என் உள்ளத்திற்குத் தானே உருகும் தன்மை இல்லாமையால் பெருகி வாழ்வதற்குரிய வாய்ப்பை இழந்திருக்கிறது. அடியேற்கு வாழ்வளிப்பதற்கு முன் அதற்கு வாயிலாகிய மனமுருகும் உபாயத்தை உதவினால் போதும்; அப்போதுதான் நீ அருளும் பெருக்கத்தை நான் சுவைத்து அனுபவிக்க இயலும்; அதனை விரைவில் அருளவேண்டும் என விரைகின்றார்.

***குறிப்பு :- தோளாச்சுரை, நீர்ப்பாத்திர முதலிய எவ்வகையான கருவியாகவும் பயன்படாதது. அதுபோல மனம் நெகிழ்ந்து அருள்***

*தங்குவதற்குப் பயன்படாத இடத்து, அது தோளாச்சுரை போல்வ தென்றார். பயன்படாத அடியவர் வாயிலாக இறைவன் பெருமை விளங்காமையின், 'நம்பியித்தால் வாழ்ந்தாயே' என்றார். 'ஊனே புகுந்த' என்பதற்கு மனித வடிவமெடுத்து வந்த என்றுமுரைப்பார். "பொத்தல் சுரைக்காய் நீச்சலுக்கு ஆகாது" - பழமொழி.*

495. கூடிக்கூடி உன்னடியார் குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா
வாடி வாடி வழியற்றேன் வற்றல் மரம்போல் நிற்பேனோ
ஊடி ஊடி உடையாயொடு கலந்துள் ளுருகிப் பெருகிநெக்
காடி ஆடி ஆனந்தம் அதுவே யாக அருள்கலந்தே. 11

***உரை :-*** *உன்னுடைய தொண்டர்கள் தம்முன் இடைவிடாது சேர்ந்து சேர்ந்து கூத்தாடி நகைத்து, இறுமாப்புக் கொள்வாரா யிருப்பவும், ஓயாது வாட்டமடைந்து உன்னை யடையும் வழியற்றுப் போன யான், உலர்ந்து போகின்ற மரம்போலப் பயனற்று நிற்பேனோ? என்னை யடிமை கொண்டவனாகிய உன்னோடு சேர்ந்து சேர்ந்து பிணங்கிப் பிணங்கி உள்ளமுருகி, அன்பு பெருகி, மனம் நெகிழ்ந்து, இடைவிடாது ஆனந்தக் கூத்தாடி, இன்ப மயமேயாகும்படி நீ என்னோடு அத்து விதமாய் இணைந்து அருள் செய்வாயாக.*

*அடியார்கள் தங்கள் தங்களுக்கு இறைவனுதவிய அருளனுபவம் தனித்தனியே சிறந்திருந்தமையை ஒருவருக்கொருவர் வியந்து கூடிக்கூடிப் பேசியும் ஆடியும் சிரித்தும் களிக்கின்றார்கள் என்பார் 'கூடிக்கூடி உன்னடியார் குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா' என்றார். ஆக என்ற செயவெனெச்சம் ஆ என ஈறு குறைந்து நின்றது. குனிப்பாராக, சிரிப்பாராக என ஒவ்வொன்றோடும் கூட்டுக.*

*வாடி வாடி என்றது அத்தகைய ஆனந்தக்களிப்பு தமக்கு உண்டாகாத ஏக்கத்தால் இயம்பிய எச்ச அடுக்கு. தலைவன் கூடினாலல்லது வழியாகிய சந்ததி பெருகுதல் கற்புடைய நங்கைக்கு இன்றாதலின் 'வற்றல்மரம்போல் வழியற்றேன்' என்கிறார். இப்போதும் மணமாகியும் நெடுநாள் மகப்பேறில்லாதாளை வற்றல்மரம் என்றல் உலகவழக்கு.*

*ஊடுதல் காமத்திற்கு இன்பமாதலின் பலகாலும் ஊடுதலை வேண்டுகின்றவர் 'ஊடியூடி' என்கின்றார். ஊடுதற்கு உரிமை எனக்குண்டு என்னும் உரிமையை விண்ணப்பிப்பார் 'உடையாய்' என்றார். எவன் என்னைக் கூடுதற்குரியனோ அவனொடு நான் ஊடுதற்குரியேன் என்பது கருத்து.*

*கலந்து, உருகி, பெருகி, நெக்கு, ஆடியாடி, ஆனந்தமேயாக அருள்கலத்தல் படிமுறையான ஆனந்தானுபவம். இவ்வாறாக இத்திருப்பாட்டும் சதாமுத்தியை வேண்டி நிற்பதை அறிவித்தல் காண்க.*

***குறிப்பு :-** குனிப்பார், சிரிப்பார் என்பவற்றை முற்றெச்சமாகக் கொள்க. கலந்தே என்பதைக் கலந்து என்பதனோடு இசைத்து மீட்டும் மீட்டும் கலந்தும் ஊடியும் எனப் பொருள் கொள்க. அன்பினால் கலத்தலும் குறைகண்ட விடத்து ஊடுதலும் நிகழ்வன. குறை நீங்கவே மீட்டும் கலத்தலுண்டாம். கலத்தலும், ஊடுதலும் காதலை மிகுதிப் படுத்துமாதலின், அவற்றை வேண்டினர். உள்ளுருகுதல் தற்போதங் கழல்வதற் கிடமாகும். மனம் நெகிழ்ந்த இடத்தே அந்தக் கரணங்கள் ஓய்வடையும். ஆனந்தக் கூத்து, பேரின்பத்தின் மெய்ப்பாடு.*

***திருச்சிற்றம்பலம்.***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 33. குழைத்த பத்து

--------

*வாதவூரடிகள் இறைவன் தன்னை ஆட்கொண்டு மீட்டும் விடுத்து, தன்னைக் குழைவித்த அருமைப்பாடுகளை விளக்கித் திருப்பெருந்துறையில் விண்ணப்பிக்கின்றார்கள்.*

*வினைகளால் உயிரைத் தன்னிலை திரியுமாறு குழையச்செய்தல் குழைத்தல். சோறு குழைந்தது என்றவழிப் பதனாகிய சோறு தன்னிலையில் திரிந்து அளிந்து கஞ்சியோடு கஞ்சியாய்ச் சோற்றுருவின்றி மெலிதல். அதுபோல இருவினைகளும் எடுத்த உடல் அழியாமையால் உயிரைக் குழைத்தது எனக் கூறுதலின் இப்பெயர்த்தாயிற்று.*

*'குழைத்தால்' எனத் தொடங்கிப் பத்தாம் பாட்டினிறுதியில் 'குழைத்தாயே' என மண்டிலமாய் முடிதலின் இப்பெயர்த்தாயிற்று எனலுமாம்.*

***ஆத்தும நிவேதனம்***

***அறுசீர் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**496.** **குழைத்தாற் பண்டைக் கொடுவினைநோய் காவாய் உடையாய் கொடுவினையேன்**
**உழைத்தா லுறுதி யுண்டோ தான் உமையாள் கணவா எனைஆள்வாய்**
**பிழைத்தாற் பொறுக்க வேண்டாவோ பிறைசேர் சடையாய் முறையோவென்**
**றழைத்தால் அருளா தொழிவதே அம்மா னேஉன் அடியேற்கே.** **1**

***உரைநடை :-*** *கொடுவினை நோய் குழைத்தால் உடையாய் என மாற்றுக. உன்னடி யேற்கே என்பதை அருளாது என்பதற்கு முன்னமைக்க.*

***உரை :-*** *பழைய தீ வினையாகிய வியாதி என்னை வாட்டினால் என்னை உடையவனே! நீ காப்பாற்றுவாயாக. தீவினை யுடையேன் முயற்சி செய்தால் மட்டும் உறுதியான பயன் ஏற்படுமா? உமையம்மையின் மணவாளனே! என்னை யாண்டருள்வாய். நான்*

*பிழை செய்தால் நீ மன்னித்து அருளவேண்டாமா! இளமதி சூடிய சடையை யுடையவனே! ஓலமிட்டழைத்தால் தந்தையே! உன்னடியானாகிய எனக்கு அருள் செய்யாது போவது தகுதியோ?*

*வினைகள் என்னைக் குழைக்கின்றன; வினைத்தடையிருக்கும் போது யான் உழைத்தாற் பயனுண்டோ? அடியேங்கள் பிழை செய்தால் பொறுக்க வேண்டாவோ? யாம் கூவினாலும் அருளாது ஒழிவது முறையோ என்பது கருத்து.*

*ஆன்மா கேவலத்துட் கிடக்கும்போதே சூக்கும கன்மமாய் உயிரைப்பற்றி நின்று, பிறவிகள்தோறும் விளைந்து பெருகி இடையறாது வருதலின் அதனைப் 'பண்டைக்கொடுவினை நோய்' என்றார்.*

*நோய்கள்வந்து ஆளை உருத்தெரியாது உருக்குலைப்பதுபோல வினைகள் உயிரினது அறிவையும் அஃதடைய இருக்கும் வீட்டின்ப முயற்சிக்குரிய ஆற்றலையும் வலியொடுக்குகின்றது என்பார் வினைப்பயனை நோய் என்றும், அதன் துன்பைக் குழைத்தால் என்றும் கூறினார்.*

*படலம் மறைத்த கண் பார்க்க இயலாதது போலவும், விலங்கிட்ட கை வேலைசெய்ய முடியாததுபோலவும் என்வினை, வாயை வாழ்த்தவும், தலையை வணங்கவும், நெஞ்சை நினைக்கவும் விட்டிலது அதனால் மனம் மொழி மெய்களால் யான் எவ்வளவு முயன்றாலும் பயனென்ன என்பார் 'கொடுவினையேன் உழைத்தால் உறுதியுண்டோ' என்றார். தான் : அசை.*

*என் பிழைகண்டு ஒதுக்கிவிடாமல் ஆட்கொள்ளத்தான் வேண்டும் என்பார் 'உமையாள் கணவா எனை ஆள்வாய்' என்கிறார். எம்போலியர்க்கு அருள் வழங்கவே உமாசகாயராக எழுந்தருளியிருக்கின்றீர் என்றது குறிப்பு. கணவனை ஓரேழை ஒன்றைக் கேட்க, அக்கணவன் தன் மனைவியின்முன் மறுக்கக் கூசவேண்டி வருமே; அங்ஙனம் நிகழாதவண்ணம் நீ ஆட்கொள்வாய் என்பார் 'உமையாள் கணவா எனை ஆள்வாய்' என்றார் எனலுமாம்.*

*ஆன்மாக்களின் இயல்பு பிழை செய்தலே. அவற்றைப் பொறுத்தும் மீளவும் அவை நிகழாதவண்ணம் தடுத்தும் ஆட்கொள்ள வேண்டுவது தலைவர் கடமையன்றோ என்பார் 'பிழைத்தாற் பொறுக்க வேண்டாவோ' என்றார்.*

*பிழைகளைப் பொறுத்தல் தேவரீருக்கு வழக்கம் என்பதை*

*சிரத்திலுள்ள பிறை காட்டி நிற்கவும் என்வகையில் அங்ஙனம் செய்யாமைக் காலந்தாழ்ப்பது கருணையன்று என்பார் 'பிறை சேர் சடையாய்' என விளித்தார்.*

*அம்மான் - தலைவன். வேலி பயிரைக்காக்க உதவுவது. அதுவே பயிரை அழித்தல் ஆகாது. முறைசெய்து காப்பாற்றுபவனே இறைவன். அங்ஙனமாகவும் அடியேன் முறையோ என்று அழைத்தால் அருளாதொழிவதே? என வினவுகின்றார். அன்றியும் யான் உன் அடியான் அன்றோ? அடியானுக்குற்ற அவதியைப் போக்காத ஆண்டவனா நீர் என்று கருணை தோன்ற விளிக்கின்றார்.*

***குறிப்பு :-** முறையோ வென்பதை ஒழிவதே என்பதோடு சேர்த்துத் தகுதியோ வென்று பொருளுரைப்பின் சடையாய் என்றழைத்தால் என முடித்தல் வேண்டும். ஓலமிட் டழைப்பதை முறையோ வென்றழைப்பதாகவுங் கூறுவர். அம்மானே - தந்தையே! அழகிய பெரியோனே! எனவுங் கூறுவர்.*

**497\. அடியேன் அல்லல் எல்லாம் முன்அகல ஆண்டாய் என்றிருந்தேன்,**
**கொடியே ரிடையாள் கூறாஎங் கோவே ஆ! ஆ! என்றருளிச்,**
**செடிசேர் உடலைச் சிதையாத தெத்துக் கெங்கள் சிவலோகா,**
**உடையாய் கூவிப் பணிகொள்ளா தொறுத்தால் ஒன்றும் போதுமே. 2**

***உரைநடை :-** கொடியே ரிடையாள் கூறாவெங் கோவே என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-** கொடிபோன்ற அழகிய இடையையுடைய உமையம்மை பாகனே! எமது தலைவனே! அடியேனுடைய துன்பமெல்லாம் முன்னமே நீங்கும்படியாக நீ யாட்கொண்டாயென்று எண்ணி யிருந்தேன். ஐயோ வென் றிரக்கங் கொண்டு தீவினை சேருதற் கிடமாகிய உடலை அழித்து ஒழியாதது எதற்காக? எங்கள் சிவலோக நாயகனே! எங்களை உடையவனே! எங்களை யழைத்து ஏவல்கொள்ளாது தண்டிப்ப தொன்றுமே போதுமா? அருளவும் செய் என்பது கருத்து.*

***குறிப்பு :-** முன் என்றது திருப்பெருந்துறையில் அடிகளை ஆட்கொண்ட காலத்தே. செடி - பாவம், சிறுதூறு - உவமாகுபெயராக வினைகளை உணர்த்திற்று. தீவினை. ஒறுத்தால் - தண்டித்தால். உடம்பில் தம்மை வைத்திருப்பதே தண்டனை யென்பது அடிகள் கருத்து. செடிசேர் உடல் - வினைகள் சேர்தற்குக் காரணமான உடல்.*

498. ஒன்றும் போதா நாயேனை உய்யக் கொண்ட நின் கருணை
இன்றே இன்றிப் போய்த்தோ தான் ஏழை பங்கா எங்கோவே
குன்றே அனைய குற்றங்கள் குணமா மென்றே நீகொண்டால்
என்தான் கெட்ட திரங்கிடாய் எண்தோள் முக்கண் எம்மானே. 3

***உரைநடை :-*** *ஏழைபங்கா எங்கோவே, எண் தோள் முக்க ணெம்மானே என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *உமையொரு பாகனே! எம்மிறைவனே! எட்டுத் தோள்களும், மூன்று கண்களுமுடைய தந்தையே! ஒன்றுக்கும் பற்றாத நாயேனாகிய என்னைப் பிழைக்கும்படி அன்று குருந்தடியில் ஆட்கொண்ட உன்னுடைய கருணையானது இப்போது இல்லாமற் போயிற்றோ? மலைபோன்ற குற்றங்களைக் குணங்களென்றே நீ ஏற்றுக்கொள்வாயானால் என்னதான் கெட்டுப்போயிற்று? அதனால் என் குற்றங்களைப் பொறுத்து இரங்கியருள்க.*

***குறிப்பு :-*** *எண் குணங்களை/எண் திசைகளை, எண் தோள் களாகக் கூறுவதுமுண்டு. அன்பர் செய்த மலைபோன்ற குற்றங்களைக் குணமென்று இறைவ னேற்றுக் கொள்வானென்ற குறிப்புக் காண்க. போய்த்தோவென்பது போயிற்றோ என்பதன் மருவு. ஏழை - பெண். முக்கண் - சோம சூரியாக்கினி. உலகமனைத்தும் இறை வடிவு.*

**499. மானேர் நோக்கி மணவாளா மன்னே நின்சீர் மறப்பித்திவ்**
**வூனே புகஎன் தனைநூக்கி உழலப் பண்ணு வித்திட்டாய்**
**ஆனால் அடியேன் அறியாமை அறிந்து நீயே அருள்செய்து**
**கோனே கூவிக்கொள்ளுநாள் என்றென் றுன்னைக் கூறுவதே. 4**

***உரை :-*** *மான் பார்வை போன்ற திரு நோக்குடைய உமையாள் கணவனே! அரசே! உன்னுடைய புகழை மறக்கும்படி செய்து, இவ்வுடம்பிலே புகுந்து தங்குமாறு என்னை யதன்கண் தள்ளி, என்னை யலையும்படி செய்துவிட்டாய். அது அப்படியாயினும், அடியேனது அறிவில்லாமையைத் தலைவனே! நீயே தெரிந்து அருள்புரிந்து உன்பாலென்னை யழைத்துக்கொள்ளும் நாள் எப்போது எப்போது என்று உன்பால் முறையிடுவதே எனக்குத் தொழிலாய் விதித்தாய் போலும்.*

*சிவபூசா துரந்தரர்களாக இருந்த திரிபுராரிகளைத் திருமாலைக் கொண்டு பௌத்த மதத்தை உபதேசிக்கச்செய்து, சிவநேசத்தை மறக்கச் செய்து, பின்னர் அவர்கள் செருக்கடக்கி உய்யக்கொண்ட வழக்கம்*

*போல, இன்று என்னையும், நின்புகழை மறக்கச் செய்து இவ்வுடலிற் புகுத்தினாய்; அடியேனோ நீ தந்த தீட்சையாதி சம்ஸ்கார விசேடங்களால் அறியாமை அறிந்து அறிவகற்றினேன்; நீயே கூவிக் கொள்ளும் நாளையும் நின்னைப் புகழும் நாளையும் எதிர்நோக்கி யிருக்கின்றேன் என்பதாம்.*

*அடியேனுடைய குறிக்கோள் எப்போதும் உன்னைப்பற்றிப் புகழ்வதொன்றே. அதனை மறப்பித்தமை என்னால் ஆற்றொணாத் துயராகியது. அந்நிலை மாறி, என்றும் உன்னையே கூறிக் கொண்டிருக்க வேண்டும். அதில் ஈடற்ற இன்பம் எனக்கு இருக்கிறது. அப்புகழைக் கூறுவது என்று? என்றார்.*

*உழலப்பண்ணுவித்தமையால் தன்னைக் குழைந்தமை கூறுதலின் இது குழைத்தபத்திற்கு இயைபுடைத்தாயிற்று.*

***குறிப்பு :-*** *நூக்கி - தள்ளி. கூறுவது - முறையிடுவது; கேட்பது எனவும் பொருள் கொள்ளலாம். கூறுவதே என் தொழில். நீ பயனளிக்க மாட்டாய்போலு மென்று இறைவனை நோக்கிக் கூறுங் குறிப்புக் காண்க.*

**500. கூறும் நாவே முதலாகக் கூறும் கரணம் எல்லாம் நீ,**
**தேறும் வகைநீ திகைப்பும்நீ தீமை நன்மை முழுதும்நீ,**
**வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மை உன்னை விரித்துரைக்கில்,**
**தேறும் வகைஎன் சிவலோகா திகைத்தால் தேற்ற வேண்டாவோ. 5**

***உரைநடை :-*** *சிவலோகா வென்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *சிவலோகநாதனே! உண்மையாக உன் தன்மையை விரித்துப் பேசில் சொல்லுதற்குக் கருவியாகிய நாக்கு முதலாகப் பேசப்படுங் கருவிகளெல்லாம் நீயே, திகைப்பதற்குக் காரணமும் நீயே, தெளிவடையும் வழியும் நீயே, நன்மை தீமை முழுவதும் நீயே, உனக்கு வேறாக யாதொரு தன்மையுமில்லை. நான் தெளிவடையும் வகையாது? நான் திகைப்படைந்தால் நீ என்னைத் தெளிவிக்க வேண்டாவோ?*

***குறிப்பு :-*** *எல்லாவற்றையு மியக்குபவனும், எல்லாம் நிகழுவ தற்குக் காரணமானவனுங் கடவுளாதலானும் அவன் எல்லாவற்றோடும் அத்துவிதமாய்க் கலந்திருத்தலாலும் நா முதலிய யாவும் அவனே என்றார். தேறுதல் - தெளிதல். வீடு கிடைக்குமோ வென்ற தமது திகைப்பை இறைவன் மாற்றவேண்டு மென்பது குறிப்பு.*

501. வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ வேண்டி என்னைப் பணி கொண்டாய்
வேண்டி நீயா தருள் செய்தாய் யானும் அதுவே வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில் அதுவும் உன்தன் விருப்பன்றே.
6

***உரை :-*** *காய்ச்சல் கண்ட குழந்தை புளியை விரும்பினால், தாய் புளியைக் கொடுத்து, போன காய்ச்சலை புளியிட்டழைப்பாளா? மாட்டாள். அதுபோல, இறைவனும் ஆன்மாக்களுடைய பரிபாக நிலைக்கு ஏற்ப இன்னகாலத்து இன்னது வேண்டும் என்பதை அறிவார் என்பார் 'வேண்டத்தக்கது அறிவோய் நீ' என்றார்.*

*தாய்க்குப் பாலூட்ட வேண்டுமென்ற விருப்பமிருப்பினும், குழந்தை அழுதாலன்றித் தூக்கி மார்போடணையாள். அதுபோல, இறைவனும் இவ்வுயிர்க்கு வேண்டுவது இதுவெனத் திருவுளங் கொள்ளினும், அவ்விருப்பை அவ்வுயிர்கள் மாட்டுத் தோன்றச் செய்து, அவைகள் வேண்டத் தருவார் என்பது விளங்க 'வேண்டத் தக்கது' என்றார்.*

*எல்லையில்லாத தாயன்பு வயிறு நிறையப் பாலூட்டுவது போல, இறைவனும், ஆன்மா தான் தந்த உணர்வின்வழி நின்று ஓரளவு வேண்டிக்கொள்ள, உணவுக்கு அரிசி கேட்ட இரவலன் நிலை நோக்காது, தன் தகுதிக்கேற்ப யானையும் யானை சுமக்கும் பொன்னும் தந்த வள்ளல்போலப் பெரிதும் அனைத்தும் உதவுகின்றான் என்பார் 'வேண்ட முழுதும் தருவோய்' என்றார்.*

*தேவரீர் திருவுள்ளக் குறிப்பிற்கு மாறாக என்னிடம் எத்தகைய விருப்பமும் எந்தச் சூழ்நிலையிலும் விளையாது; அங்ஙனம் விளையுமாயின் அதுவும் உன் உள்ளக்குறிப்பாகவே இருக்கும் என்பார் 'வேண்டும் பரிசு ஒன்று உண்டென்னில் அதுவும் உன்தன் விருப்பன்றே' என்றார்.*

*இவ்வண்ணம் தற்போதம் கெட்டு, எல்லாம் அருள்மயம் என்றிருக்கும் தன்னிலையைத் தெரிவித்தலின் இத்திருப்பாடல் ஆத்தும நிவேதனமாயிற்று.*

*யான் விரும்பத் தக்கனவற்றை யறிபவன் நீயே, அவற்றை உன்பாலிரந்து கேட்க முழுவதையுந் தருபவனும் நீயே, உன்னைக் காண விரும்பிய பிரமனுக்குந் திருமாலுக்கும் காணுதற்கரிய வனானவனும் நீயே. என்னை நீயே விரும்பிவந் தாட் கொண்டாய், நீ*

*எதனை விரும்பி யருள் செய்தாயோ யானுமதனையே விரும்புவதல்லாமல் இன்னும் நான் விரும்பக்கூடியது யாதாகிலு மிருக்குமாயின் அதுவும் உன்னுடைய விருப்பத்தின்படி நிகழ்வதல்லவா?*

***குறிப்பு :-*** *இதனுள் இறையருள் வசப்பட்டு நிற்குந் தமது நிலையை அடிகளறிவுறுத்தினர். பணி - ஏவல். பரிசு - வகை, செயல்.*

**502. அன்றே என் தன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமுங்,**
**குன்றே அனையாய் என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ,**
**இன்றோர் இடையூ றெனக்குண்டோ எண்தோள் முக்கண் எம்மானே,**
**நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே. 7**

***உரைநடை :-*** *'எண்தோள் முக்கண் எம்மானே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *எண்தோளும் முக்கண்ணு முடைய எமது பெரியோனே! என்னை யாட்கொண்ட அக்காலத்திலேயே என் உடல், பொருள், ஆவி எல்லாவற்றையும் மலைபோல்வாயாகிய நீ ஏற்றுக் கொள்ள வில்லையா? இப்போது எனக்கு இடையூறு ஏதாவதுண்டா? தக்கது செய்வாயாயினும், தவறு செய்வாயாயினும் செய்க. நானிதற்குத் தலைவனா? (உன் விருப்பமல்லவா?)*

*உயிர்கள் அநாதியே இறைவனுக்கு அடிமையாயினும் அன்றே என்றன் ஆவி கொண்டிலையோ என்றது, இதுவரை மலமறைப்பால் யான் உன் அடிமை என்பதையும், நீ ஆண்டானென்பதையும் அறியாதிருந்தேன்; நீ ஆட்கொண்ட அன்று தொடங்கி, என் மலமறைப்பு அகன்றதாதலின் யான் என்பதும் எனது என்பதும் இல்லாமையையும் அவை அனைத்தும் நின்னுடைமை என்பதையும் உணர்ந்தேன் என்றருளினர்.*

*உடல் - வினைப்போகத்திற்காக இறைவனால் வினைக்கீடாக அருளப்பெற்றது. அதனை ஆண்டவனிடம் ஒப்பிக்கவே அவ்வுடல் வழிதவறித் தீமைபுரியாதென்பதும், அங்ஙனம் புரியினும் அத்தீமை இறைவனதாமேயன்றி, என்னைச் சாராதென்பதும், அதனால் விளையும் துன்பங்கள் என்னை வாதியா என்பதும் விளக்க 'இன்றோரிடையூறு எனக்கு உண்டோ' என்றார். உண்டோ என்ற ஓகாரம் இல்லையென்ற எதிர்மறை உணர்த்தி நின்றது.*

*இறைவற்கு எட்டுத்திசைகளும் தோள்கள். முச்சுடர்களும் கண்கள். ஆகவே, இறைவன் விசுவரூபன். உயிர் எது செய்யினும், எதை விரும்பினும், எதைப் பெறினும் எல்லாம் நினதே என்பார். 'எண்தோள் முக்கண் எம்மானே! நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகம்' என்று அருளினர். நாயகம் - தலைமை.*

***குறிப்பு :-*** *அன்றே என்பதை ஆட்கொண்ட போதே என்பதனோடு முடிக்க. குருவுக்கு உடல், பொருள், ஆவி மூன்றையுங் கொடுத்தல் மரபு. பாதுகாப்புக்குச் சிறந்த அரணான மலைபோல நீ யிருக்கும்பொழுது எனக்கு எப்படி இடையூறு வரும் என்ற குறிப்பைக் காண்க. உடைமை - பொருள். தனக்கு யாதொரு அதிகாரமு மில்லை. நன்மையுந் தீமையுங் கடவுளைப் பொறுத்தது என்று குறிப்பித்தார்.*

**503. நாயிற் கடையாம் நாயேனை நயந்து நீயே ஆட்கொண்டாய்**
**மாயப் பிறவி உன்வசமே வைத்திட் டிருக்கும் அதுவன்றி**
**ஆயக் கடவேன் நானோதான் என்ன தோஇங் கதிகாரங்**
**காயத்திடுவாய் உன்னுடைய கழற்கீழ்வைப்பாய் கண்ணுதலே. 8**

***உரை :-*** *நாயினுங் கீழ்ப்பட்ட நாய்த்தன்மையுடைய என்னை நீயே விரும்பிவந்து ஆண்டருளினை. கபடுமிக்க என் பிறவியை உன் வசமே ஒப்புவித்துவிட்டுச் சும்மா யிருக்குந் தன்மை யன்றி அதனைப் பற்றி ஆராய உரிமை யுடையேனோ? அதைப் பற்றிய அதிகாரம் என்னுடையதோ? (அது உன்னுடையதே யாதலால்) நெற்றிக் கண்ணையுடைய பெருமானே! உடம்பி லிடுவையோ? உன் திருவடியின் கீழ் வைப்பையோ? (எதுவும் உன் கட்டளைப்படி நிகழ்வதே).*

***குறிப்பு :-*** *நாய் பிறப்பால் இழிந்ததாயினும், நன்றிமறவாத் தன்மையால் உயர்ந்தது. 'நாயனையார் கேண்மை கெழீஇக்கொளல் வேண்டும்' என்பர் பிறரும். அதிலும் கடையாய நாய் புழுத்தலை நாய். புழுத்து அலைகின்ற நாய் தன்னைக்காப்பார் பிறர் இலர் என்ற உறுதியால் தன்னை வளர்த்த தலைவனையே சாரும். அது போல அடியேனும் இழிந்த பிறவியால் இருவினை நோயுற்று உழல்வேன் என்பார் 'நாயிற்கடையாம் நாயேனை' என்றார்.*

*பிறவி மாயாகாரியமாக வினைக்கீடாக இறைவன் ஆணையால் உயிர்களைச் சார்வது. ஆதலால், அப்பிறவி 'மாயப்பிறவி' எனப்பட்டது. அப்பிறவியோ உன்வசமாயுள்ளது. நீ தந்தால் என்னைச் சாரும். நீ*

*தடுத்தால் என்னை விலகும். ஆதலால், இறைவனருள் விட்டவழி நாம் நடப்போம் என்று இராமல், இப்பிறவி எங்ஙனம் வந்தது? வராமல் தடுக்கும் உபாயம் என்ன? என்றெல்லாம் ஆராய எனக்கு உரிமை ஏது? என்பார் 'மாயப்பிறவி... ஆயக்கடவேன் நானோதான்' என்று அருளினார்.*

504. கண்ணார் நுதலோய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர,
எண்ணா திரவும் பகலும்நான் அவையே எண்ணும் அதுவல்லால்,
மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன்கழற்கே புகுமாறும்,
அண்ணா எண்ணக் கடவேனோ அடிமை சால அழகுடைத்தே. **9**

***உரை :-*** *கண்பொருந்திய நெற்றியை யுடையவனே! உன்னுடைய திருவடிக ளிரண்டையும் என் கண்குளிரக் காணப் பெற்றேன். அவற்றையே இரவும் பகலுமாய் எப்போதும் நான் நினைப்பு மறப்பில்லாது எண்ணிக் கொண்டிருப்ப தல்லாமல் மண்ணுலகத்திலே இவ்வுடம்பு நீங்கும் வகையையும் அதனைவிட்டு உன் திருவடிக்கே போய்ச் சேரும் வகையையும் அப்பனே! நான் நினைக்க உரிமையுடையேனோ? அப்படி எண்ணினால் எனதடிமைத் தன்மை மிகவும் பொருத்தமுடைத் தாகுமோ?*

*பிராரத்தகன்மங்கள் ஒழிந்து எடுத்த உடல் விழுமாற்றையும், அறுகயிற்று ஊசல்போல உடல் விழுந்தவுடன் உயிர் திருவடியைப் பற்றுமாற்றையும் எண்ணுவதற்கு யான் யார்? எப்போது பொழுது சாயும், எப்போது கூலி கிடைக்குமென்று எண்ணுகின்ற கூலியாள் போலாது, அடிமைக்கு இடைவிடாது எண்ணுதல் கடமையேயன்றி எப்போது திருவடிப்பேறாகிய முத்தி கிடைக்கும் என்று எண்ணுதல் கூடாது என்பதாம்.*

*அண்ணா - தந்தையே; எனலுமாம். தம்பியின் விருப்பம் அறிந்து கருத்தை முடிப்பது தந்தை போல்பவனாகிய அண்ணனின் கடமை ஆதலின், நான் பயனை எண்ணேன் என்பதற்கியைய அண்ணா என விளித்தார்.*

*திருவடிக் காட்சியும் - கண்டதை இடைவிடாது எண்ணுதலுமே ஆன்மாவின் கடமை; உடல் நீக்கமும் வீடுபேறும் அருள்வது ஆண்டவன் கடமை; அதனை எண்ணுதலும் கூடாது என ஆன்மாவின் முதிர்ந்த பரிபாகத்தை விண்ணப்பித்தலின் இத்திருப்பாடல் ஆத்தும நிவேதனமாயிற்று.*

*குறிப்பு :- எண்ணாது எண்ணுவது - சுட்டியறியாம லறிவது. அண்ணா - மேலோனே. மிகவும் அழகுடைத்தே என்று இகழ்ச்சி பற்றிக் கூறினா ரென்றலு முண்டு.*

**505.** அழகே புரிந்திட் டடிநாயேன் அரற்றுகின்றேன் உடையானே
திகழா நின்ற திருமேனி காட்டி என்னைப் பணிகொண்டாய்
புகழே பெரிய பதம்எனக்குப் புராண நீதந் தருளாதே
குழகா கோலமறையோனே கோனே என்னைக் குழைத்தாயே. 10

***உரை :-*** *அழகனே! நாயேன் உன் திருவடியைப் பெற விரும்பி யலறுகின்றேன். என்னை உடையவனே! ஒளி விளங்குகின்ற உனது திருமேனியை காட்டி என்னை ஏவல் கொண்டாய். புகழ்வடி வானவனே! பெரிய பேரின்ப நிலையை நீ கொடுத்தருளாமல், பழமையானவனே! இளமை வடிவனே! அழகிய வேதியனே! தலைவனே! என்னை நீ குழைய வருத்தினையே.*

*உடையானுக்கு உடைமைகளைப் பாவிக்கும் முறை தெரிய வேண்டும். உடைமையாகிய யான் வருந்த உடையானாகிய நீ களித்தல் கூடாது என்பார் 'உடையானே' என முதற்கண் விளித்தார்.*

*என்னைப் பணிகொண்டாய் என்றார். திருமேனியின் அழகும் ஒளியுமே என்னைத் தொண்டனாக்கின என வியந்தவாறாம்.*

*உலகில் புகழத்தக்க பதவிகள் யாவற்றினும் சிறந்த புகழத்தக்க பதவி திருவடிப்பேறே என்பார் 'புகழே பெரிய பதம்' என்றார். புகழால் பெரிய பதவி எனப் பொருள் கொள்க.*

*புராணன் - புராதனன் என்பதன் திரிபு. பழமைக்கெல்லாம் பழமையானவன் என்பதாம்.*

*தலைநாட்கண்ட திருமேனியில், என்றும் மாறாத இளமையும், அழகும் தம்மை வசப்படுத்தின என்றறிவிப்பார் 'குழகா! கோலமறையோனே!' என்கின்றார்.*

*இப்பத்தாலும், அடிகள் ஆன்ம இயல்பு பிழைசெய்தல், ஆண்டவன் இயல்பு அவற்றைப் பொறுத்து ஆட்கொள்ளுதல், நீ ஆட்கொண்டபோதே என் துன்பங்கள் அனைத்தும் அகன்றன என்று*

*இருந்தேன்; துன்பக்கொள்கலமான இவ்வுடலைச் சிதைக்காமல் மேலும் நீ துன்புறுத்துகின்றாய்; ஆட்கொண்ட காலத்திருந்த கருணை இன்றில்லையோ? என் கருவி கரணங்கள் அனைத்தும் நீ; என் விருப்பமும், விருப்பத்தை முடிப்பவனும் நீ; உடல் பொருள் ஆவி அனைத்தும் உனக்குச் சொந்தம்; எனக்கு இடையூறு ஒன்றும் இல்லை; நீ உடலில் இட்டுவை; அல்லது வீடுபேறளி; எனக்கு என்ன சுதந்திரம் இருக்கிறது; ஆனாலும் ஒன்று விண்ணப்பிக்கின்றேன்; நீ வீட்டுலகைத் தந்தருளாது என்னைக் குழைக்கின்றாய்; இது தகாது; திருவுளங் கொண்டருள வேண்டும் என்று விண்ணப்பிக்கின்ற அழகு அன்பு நிறையுள்ளத்திற்கு அமுதமாதல் காண்க.*

***குறிப்பு :-*** *அழகு என்பதை, குழைத்தாயே என்பதனோடு முடித்து இது அழகோ என்று பொருளுரைத்தலு முண்டு.*

***திருச்சிற்றம்பலம்.***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 34. உயிருண்ணிப்பத்து

*உண்ணி - உண்பது. உயிர் உண்ணி - உயிரை உண்ட பொருள். உயிர் உண்ணப்பட்டுச் சிவமே மிக்கு விளங்குதலின் உயிரின் தன்மை இல்லையாயிற்று. இந்நிலையை எடுத்து விளக்குவது இப்பத்தாதலின் உயிருண்ணிப்பத்து எனப் பெற்றது. ஆன்மாவைத் தூய்மைப்படுத்துவது சிவனது அருளும், அதனைத் தன்னுட்படுத்துக்கொள்வது சிவனது ஆனந்தமும் ஆதல் பற்றிச் சிவானந்தத்திற்கு 'உயிர் உண்ணி' என்னும் ஆக்கப் பெயர் கொடுத்து, அதனைப் பொருளாக உடைய பத்துப் பாடல்களை இப்பகுதியில் அருளிச் செய்கின்றார். எனவே, 'உயிருண்ணிப் பத்து' என்பது, 'உயிருண்ணியின்மேற் பாடப்பட்ட பத்துப்பாடல்கள்' என்றானும், உயிருண்ணியைப் பற்றிய பத்துப் பாடல்கள் என்றானும் பொருள் தருவதாம். 'உயிருண்ணி' என்பது, மிக்கெழும் சிவானந்தம் என்பது பற்றியே இதற்கு, 'சிவானந்தம் மேலிடுதல்' எனக் குறிப்புரைத்தனர் முன்னோர். இது, திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது என்பதே பதிப்புக்களில் காணப்படுவது. இது முழுதும் கலிவிருத்தத்தால் ஆயது.*

--------

***சிவானந்தம் மேலிடுதல்***

***கலி விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**506. பைந்நாப்பட அரவேரல்குல் உமைபாகம தாய்என்**
**மெய்ந்நாள் தொறும் பிரியாவினைக் கேடாவிடைப் பாகா**
**செந்நாவலர் பரசும்புகழ்த் திருப்பெருந்துறை உறைவாய்**
**எந்நாட்களித் தெந்நாள் இறு மாக்கேன் இனியானே. 1**

***உரைநடை :-*** *பைந்நா அரவுபடம் ஏர் அல்குல் எனக் கொள்க. செந்நாவலர் பரசும் புகழ் உறைவாய் என்ற அடியை முதலிற் கொள்க.*

***உரை :-*** *செவ்விய நாவன்மையுடைய புலவர் போற்றுங் கீர்த்தி யுடைய திருப்பெருந் துறையிலுறைகின்ற பெருமானே! பசிய நாவினையுடைய பாம்பின் படத்தை யொத்த இடை முன் பகுதியுடைய உமை பாகனாய்த் தோன்றி, நாள்தோறும் எனது உடம்பை விட்டு நீங்காத வினையினைத் தொலைப்பவனே! வினைக்கேடன் - ஆகாமிய சஞ்சித வினைகள் ஆன்மாவைச் சாராவண்ணம் காப்பவன். பிராரத்த வினையையும் உடலிலுள்ள*

*அளவு மெலிவித்து ஊட்டுவான். காளை வாகனனே! இனி மேல் யான் எந்நாளிலே மகிழ்ந்து எந்த நாளிலே இறுமாந்திருப்பேன்.*

***குறிப்பு :-*** *அல்குல் - இடைக்கு முன்பாகம். வினைப் போகமே தேகமாதலின், மெய் பிரியாவினை என்றார்.* ***ஞானிகளுக்கு வரும் வினைப்பயனை, இறைவனே ஏற்றுக் கொள்கின்றானென்ற கருத்து*** *இங்கே புலனாதல் காண்க. பை - விடப்பை. பையையும், நாவையும் உடைய அரவின் படத்தை ஒத்த அல்குல்.*

**507.** **நானாரடி யணைவானொரு நாய்க்குத் தவிசிட்டிங்**
**கூனாருடல் புகுந்தான்உயிர் கலந்தான்உளம் பிரியான்**
**தேனார்சடை முடியான்மன்னு திருப்பெருந்துறை உறைவான்**
**வானோர்களும் அறியாததோர் வளம்ஈந்தனன் எனக்கே. 2**

***உரைநடை :-*** *நான் ஆர் என்பதன் பின், மூன்றாம் அடியை முதலில் கொள்க.*

***உரை :-*** *நான் யார்? (யாதொரு தகுதியுமில்லாதேன்) வண்டு பொருந்திய சடை முடியையுடையானாகிய நிலைபெற்ற திருப்பெருந் துறையில் வீற்றிருந்த பெருமான், நான் தனது திருவடியை எய்துதற் பொருட்டு, ஒரு நாயாகிய எனக்கு இருக்கை யளித்து இவ்வுலகிலே புலால் நிறைந்த உடம்பிலே புகுந்து உள்ளத்தைப் பிரியாதவனாய் உயிரிற் கலந்தான். மேலும் விண்ணவரும் அறிய வொண்ணாத வொரு (பேரின்பச்) செல்வத்தை எனக்கு நல்கி யருளினன்.*

***குறிப்பு :-*** *அடிகட்கு உடலிலும் உள்ளத்திலும் உயிரிலுங் கலந்தவனாய் இறைவன் விளங்கினமை, ஈண்டு அறியற்பாலது. தேன் - வண்டு. சடையிலுள்ள மலரிலே வண்டு மொய்க்கு மென்பது கருத்து. தவிசு - யானை, குதிரை முதலியவற்றின் மேல் இடப்படும் இருக்கை. யானைக்கிடப்படும் இதை அம்பாரி என்பர். அதனை நாய்க்கிடுதலாவது தாங்காத ஒன்றற்குத் தகாத பதவி அளித்தல்.*

**508.** **எனைநானென்ப தறியேன்பகல் இரவாவதும் அறியேன்**
**மனவாசகங் கடந்தான்எனை மத்தோன்மத்த னாக்கிச்**
**சினமால்விடை உடையான் மன்னு திருப்பெருந்துறை உறையும்**
**பனவன்னெனைச் செய்தபடி(று) யறியேன் பரஞ்சுடரே. 3**

***உரைநடை :-*** *மனவாசகங் கடந்தான், சினமால் விடையான், உறையும் பனவன், பரஞ்சுடரே, எனைமத்தோன் மத்தனாக்கி எனைச்*

செய்த படிறு அறியேன். எனை நான் என்பதறியேன். பகலிரவாவது மறியேன். பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர். பதார்த்தங்கள் பாரார் என்பதாம். உயிருண்ணப்பட்டமையால் தற்போதம் அழிந்தது.

***உரை :-*** *மனத்தையும் சொல்லையும் (காயத்தையுங்) கடந்தவன், வலியுடைய திருமாலைக் காளை யூர்தியாகக் கொண்டவன், நிலை பெற்ற திருப்பெருந்துறையின்கண் விற்றிருந்தவனாகிய வேதியன், மேலான ஒளிப்பிழம்பு போல்வான். என்னைக் களிப்பு மிகுந்த பித்தனாக்கி எனக்குச் செய்த மாயம் அறியேன், நான் யாரென்ப தறிந்திலேன்; பகலு மிரவுங் கழிந்ததையும் உணர்ந்திலேன். இந்திரஜாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கியது போல என்னை மயக்கினான்.*

***குறிப்பு :-*** *தன்னுணர்ச்சியின்றி இறை நினைவேயுடைமையால், தான் யார் என்பதை அடிகள் தெரியாதவராயினர். சகலாவத்தை கடந்து, சுத்த நிலையிலிருப்பதால், கரணங்கள் கொண்டுணருங் காலத்தினியல்பை அறிந்திலர். மனமுஞ் சொல்லுங் கூறவே, காயத்தையு முடன் கொள்க. மத்த + உன்மத்தன் - களிப்புடைய பித்தன். மிகுந்த பித்தனென்றும் பொருள் கொள்ளலாம். ஞானோபதேசம் பெறுதற்குமுன், அறியப்படாத தன்மை தனக்கு வந்தெய்தினமையாற் படிறு என்றார். பனவன் - முனிவன், வேதியன். பரஞ்சுடரென்பதைப் பனவனென்பதோ டியைத்துப் படர்க்கையாகக் கொள்ளுவதே பொருத்தம். படிறு - தன்னைச் செய்த மாயம் - வஞ்சனை என்பாரும் உளர்.*

**509.** **வினைக்கேடரும் உளரோபிறர் சொல்லீர்விய னுலகில்**
**எனைத்தான்புகுந் தாண்டான்என தென்பின்புரை யுருக்கிப்**
**பினைத்தான்புகுந் தெல்லேபெருந் துறையில்உறை பெம்மான்**
**மனத்தான் கண்ணின் அகத்தான் மறுமாற்றத் திடையானே.** **4**

***உரைநடை :-*** *முதலடியை இறுதியிற் கொள்க. பெருந் துறையிலுறை பெம்மான் என்பதை முதலிற் கொள்க. தான் புகுந்து என்பின் புரையுருக்கிப் பினைத்தான் புகுந்தெல்லே எனையாண்டான் என அமைக்க.*

***உரை :-*** *திருப்பெருந் துறையில் வீற்றிருந்த பெருமான். தானே வலிதிற் போந்து என்னுடைய என்பின் உள்துளைப் பகுதிகளை யுருகுவித்து அவற்றினூடாகப் பின் பக்கமுஞ் சென்று ஐயோ, (என்னை முற்றிலும் வியாபித்து) என்னை ஆட்கொண்டருளினன். அவன் என்*

*உள்ளத்திலுள்ளான், கண்ணினுள் இருக்கின்றான், தவிரவும் எனது சொல்லினிடையேயு முளன். அவனைப்போல வினையை யொழிப்பார் பிறர் யார் அகன்ற இவ்வுலகில் உளர்? சொல்லுவீராக.*

***குறிப்பு :-*** *தான் புகுந்து - தானே வலிந்து, புரை - உட்டுளை. பினைத்தான் - பின்பக்கத்தானும், எல்லே - இரக்கச் சொல். அவன் பெருமைக்குக் குறைவான செய்கை, கருணையாற் செய்தருளினன் என்பது கருத்து. 'என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்துபுக்கென்னுளே நிற்கும் இன்னம் பரீசன்' என்ற அப்பர் திருவாக்கை ஒப்பிடுக. பெம்மான் - பெருமான். விரும்பத்தக்க பெரியோன் எனவுங் கூறலாம். (பெம் - விருப்பம், மான் - மகான்) மறும் என்பது மற்றும் என்பதன் இடைக்குறை.*

**510.** பற்றாங்கவை அற்றீர்பற்றும் பற்றாங்கது பற்றி
நற்றாங்கதி அடைவோமெனிற் கெடுவீரோடி வம்மின்
தெற்றார் சடை முடியான்மன்னு திருப்பெருந்துறை இறைசீர்
கற்றாங்கவன் கழல்பேணின ரொடுங்கூடுமின் கலந்தே. 5

***உரைநடை :-*** *கெடுவீர். பற்றாங்கவை.... எனில் ஓடி வம்மின் தெற்றார்..... கலந்தே கூடுமின் என்க.*

***உரை :-*** *உலகிற் கெட்டொழியு மியல்பினரே! உலகத்தே பற்றாயவைகளை ஒழித்தீராய், பற்ற வேண்டிய ஆதரவு தன்னைப் பற்றி நல்லதாகிய நெறியை அடைவோமென்று நீங்கள் எண்ணினால், ஓடி வாருங்கள். தேன் துளிக்கு மாலை யணிந்த சடைமுடி யுடையவன், நிலைபெற்ற திருப்பெருந்துறைத் தலைவனாயிருப்பவனது புகழைக் கற்றுக் கற்றவாறே, அவன் திருவடியைத் தழுவின* ***<u>அடியாரொடுஞ் சேர்ந்து (அவனடியை) அடைவீர்களாக</u>***.

***குறிப்பு :-*** *ஆங்கு - அசை. உலகில் என்றும், விரைவில் என்றும் பொருள் கொள்ளலாம். பற்றும்பற்று என்பதில், பற்று - ஆதரவு.அது என்னுஞ்சொல் ஆதரவின் சிறப்புணர்த்துவது. நற்று நன்று என்பதன் வலித்தல் விகாரம். தென் + தார் - தெற்றார். தென்தேன் என்பதன் குறுக்கம். கலந்தே என்பதை, கூடுமின் என்பதோடு முடிக்க.*

**511.** கடலின்திரை யதுபோல்வரு கலக்கம்மலம் அறுத்தென்
உடலும்என துயிரும்புகுந் தொழியாவண்ணம் நிறைந்தான்
சுடருஞ்சுடர் மதிசூடிய திருப்பெருந்துறை உறையும்
படருஞ்சடை மகுடத்தெங்கள் பரன்தான் செய்தபடிறே. 6

***உரைநடை :-*** *பின்னிரண்டடியை முதலிற் கொள்க.*

***உரை :-*** *ஒளிபரப்புங் கதிர்களையுடைய பிறை சூடியவனாகிய திருப்பெருந்துறையிற்றங்கிய, விரிந்த சடையைக் கிரீடமாக வுடைய எங்கள் மேலோன் செய்த சூழ்ச்சி யாதெனில், கடலின் அலைபோல் ஓயாது வருகின்ற கலக்கத்தைச் செய்யும் பாசங்களைத் தொலைத்து, எனது உடம்பிலும் உயிரிலுங் கலந்து நீக்கமற நிறைந்து விளங்கினன்.*

*குறிப்பு :- சுடர் - கதிர். பரன் - மேலோன். படிறு - சூழ்ச்சி, வஞ்சகம்.*

**512. வேண்டேன்புகழ் வேண்டேன் செல்வம் வேண்டேன் மண்ணும் விண்ணும்**
**வேண்டேன்பிறப் பிறப்புச்சிவம் வேண்டார் தமை நாளுந்**
**தீண்டேன்சென்று சேர்ந்தேன் மன்னு திருப்பெருந் துறை இறைதாள்**
**பூண்டேன்புறம் போகேன் இனிப் புறம்போக லொட்டேனே. 7**

***உரை :-*** *புகழையும், பொருளையும், மண்ணுலக விண்ணுலக வாழ்க்கையையும், பிறப்பிறப்புக்களையும் விரும்பேன். தூய மங்களப் பொருளான முழுமுதற் கடவுளை விரும்பாதவரை நான் ஒருநாளும் தொடமாட்டேன், நிலைபெற்ற திருப்பெருந்துறைப் பெருமான் திருவடிகளைப் போய்ச் சேர்ந்தேன். அவற்றை என் தலைமேற் கொண்டேன். அவற்றிற்குப் புறத்தே நான் போகமாட்டேன். இனிமேல், அவை என்னைவிட்டு அகலுவதற்கு மிசைய மாட்டேன்.*

*குறிப்பு :- உறுதியால் விரும்பாமை பற்றி, வேண்டேன் எனத் தனித்தனியே முற்படக் கூறினர். தீண்டேன் என்பதை யாதொரு தொடர்பும் வைத்துக் கொள்ள மாட்டேனென்ற கருத்தைக் குறிப்பது. ஒட்டேன் - இசையேன்.*

**513. கோற்றேன் எனக்கென்கோகுரை கடல்வாய்அமு தென்கோ**
**ஆற்றேன்எங்கள் அரனேஅரு மருந்தேஎன தரசே**
**சேற்றார்வயல் புடைசூழ்தரு திருப்பெருந்துறை உறையும்**
**நீற்றார்தரு திருமேனிநின் மலனேஉனை யானே. 8**

***உரைநடை :-*** *முதலடியை இறுதியிற் கொள்க. ஆற்றேன் என்பதை, யானே என்பதனோடு முடிக்க.*

***உரை :-*** *எங்கள் பாசநீக்குபவனே! அரிய அமுதே! என் மன்னனே! சேறுநிறைந்த வயல்கள் மருங்கு சூழ்ந்த, நிலைபெற்ற திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் திருவெண்ணீறு நிறைந்த திருவடிவமுடைய குற்றமற்றவனே! (நீ கொடுத்த இன்பத்தைத்) தாங்க மாட்டாத யான், உன்னை எனக்குக் கொம்புத்தேன் போல்பவனென் பேனோ? ஒலிக்கின்ற திருப்பாற்கடலி லெழுந்த அமுதமென்பேனோ? (கூறுக.)*

*சிவானந்தம் மெய்யன்பர்கள் கூட்டத்தில் கலந்து நின்றே நுகரத்தக்கது என்பதை முன் 'அவன் கழல்பேணினரொடுங் கலந்து கூடுமின்' என்ற பகுதியால் விளக்கினார்களாதலின் ஈண்டு அடியார்களையும் தம்மோடுசேர்த்து 'எங்கள் அரனே' என விளிக்கின்றார்.*

*அருமருந்து, தேவாமுதம்போலப் பாற்கடலில் தோன்றாததாய், தேவாசுரப்போரை விளைவியாததாய், சிவயோகியர் உள்ளத்தினின்று ஊறி, உச்சந்தலைமுதல் உள்ளங்கால்வரை இன்பமயமாகச் செய்வது. சிவயோகியர் இதனை 'மதிமண்டலத்தமுதம்' என்பர்.*

*நல்லவற்றில் ஊக்கியும் தீயவற்றினின்று விலக்கியும் காத்தலின் இறைவனை 'எனது அரசே' என்கின்றார்கள்.*

*கோற்றேன் - கொம்புத்தேன். எடுக்கப்பெற்ற இடமும் இறால் தொடுக்கப்பெற்ற இடமும் தூயதாய் முற்றி இனிமை மிக்கதாதலின் சிவானந்தத்தைக் 'கோற்றேன் என்கோ' என்று வியந்தார். அங்ஙனமே இறவாமையும், இன்பமும் பயத்தலின் 'அமுதென்கோ' என்றார். ஆகவே சிவானந்தானுபவம் இங்ஙனமிருந்தது என்று சொல்லும் உரையளவிற்கு வாராதது, மனனுணர்வாலே ஆன்மபோதம் அடங்கி அனுபவிக்கத்தக்கது என்றவாறாம்.*

***குறிப்பு :-** கோற்றேன் - கோல் + தேன். கோல் - கொம்பு. மரக்கிளை. அதிலமைந்த தேன், மிகச்சுவையுந் தூய்மையு முள்ளது. சேற்று - சேறு என்பதன் விரித்தல் விகாரம். நீற்றும் - அனையதே. ஆர்தரு - ஆரும் - பொருந்தும், நிறையும்.*

**514. எச்சம்அறி வேன்நான் எனக் கிருக்கின்றதை அறியேன்**
**அச்சோ எங்கள் அரனேஅரு மருந்தேஎன தமுதே**
**செச்சைமலர் புரைமேனியன் திருப்பெருந்துறை உறைவான்**
**நிச்சம்என நெஞ்சில்மன்னி யானாகிநின் றானே. 9**

***உரைநடை :-** முதலடியை இறுதியிற் கொள்க; மூன்றாம் அடியை முதலிற் கொள்க.*

***உரை :- ஆகாமிய சஞ்சிதங்கள் எவ்வளவு இருக்கின்றன என்பதை அறியேன்; அவை என்ன செய்யுமோ! ஐயோ! என்று இரங்கினார் என்பது கருத்து. பிணியைப் போக்கும் மருந்தாக இறைவன் உதவுவதை 'அருமருந்தே' என்பதால் உணர்த்தினார்கள். பிற மருந்துகள் உண்டாலன்றிப் பிணியைப் போக்கா; இறைவனாகிய மருந்தோ எண்ணினாலே பிணிபோக்குமாதலின் அருமருந்தே என்றார் என்க. எண்ணியமாத்திரத்தே என்னுட்சென்று பிணி போக்குதலேயன்றி இனிக்கவும் செய்கிறது என்பார் 'அமுதே' என்றார்.***

*வெட்சிமலர் போன்ற சிவந்த திருமேனியுடையனாய்த் திருப்பெருந்துறை உறையும் பெருமானாய், உறுதியாக எனது உள்ளத்தில் நிலைபெற்று அத்துவிதமாய் என்னோடு கலந்து யானாகி நின்றவனே! எங்கள் பாசநீக்குபவனே! கிடைத்தற்கரிய அமுதமே! என்னுடைய சாவாமருந்தே! நான் இன்னும் பெற வேண்டிய மிச்சத்தை அறியேன். எனக்குள்ள குறையை அறியேன். இது அழகிது!*

***குறிப்பு :-** எச்சம் - குறை; உண்டு கழிந்தது போக மிச்சமுள்ள வினைகள், பாக்கி. செச்சை - வெட்சி; சிவந்த மலர். நிச்சம் - நித்தம்; நிச்சயமென்பதன் மருஉ என்பார். நின்றானே என்பதை, விளியாகக்கொள்க. அச்சோ - வியப்பு; அழகு என்பவற்றை யுணர்த்துஞ்சொல். அரன் - பாவநாசன்.*

**515.** **வான்பாவிய உலகத்தவர் தவமேசெய அவமே**
**ஊன்பாவிய உடலைச்சுமந் தடவிமர மானேன்**
**தேன்பாய்மலர்க் கொன்றைமன்னு திருப்பெருந் துறைஉறைவாய்**
**நான்பாவியன் ஆனால்உனை நல்காய்என லாமே.** 10

***உரை :-** வானிற்பரவிய உலகத்திலுள்ளவர்கள், தவஞ் செய்யவும், யான் வீணாகப் புலால் நிரம்பிய உடம்பினைத் தாங்கிக் காட்டு மரம் போலப் பயனிலே னாயினேன். தேன்பொழிகின்ற கொன்றை மலரை யுடையனாய்த் திருப்பெருந்துறையில் வீற்றிருப்பவனே! நான் (உன் பேரருள்பெற தகுதியில்லாத) தீவினையே னாயின், அருள் கொடுப்பாயாக என, உன்னை வேண்டுதல் கூடுமோ? (கூடாதோ).*

***குறிப்பு :-** வான் பாவிய உலகத்தவர் - சிதாகாயப் பெருவெளியிற் பரந்துள்ள உலகத்தவர்கள்; சிவஞானியர். சிவஞானியர் சிவத்தோடு இடையறாது கலந்திருக்கத் தவம் செய்கின்றனர்; நான் மட்டும் வினைப்போகத்திற்காக நீ உதவிய இவ்வூனுடலைச் சுமந்து காட்டு மரமானேன் என்கின்றார்.*

*காட்டுமரம் பழமரமாயினும் இருக்குமிடம் சரியின்மையின் பாம்பும் பல்லியும், புலியும் கரடியும் உறைதற்கு இடமாகிப் பறவைகட்கும் மக்களுக்கும் எவ்வகையினும் பயன்படாதாகி வீணே நிற்கும்; அதுபோல நானும் யார்க்கும் பயன்படாதவனானேன் என்றார்.*

*திருப்பெருந்துறையே பொன்னார் மேனியனாகக் காட்சி அளிக்கின்றது என்பார் 'மலர்க்கொன்றை மன்னு திருப்பெருந்துறை' என்றார். அடிகள் தங்குறைக்காகத் தம்மை யிகழ்ந்து இறைவனைப் போற்றுங் குறிப்பு. இச்செய்யுளிலும் முந்திய செய்யுளிலும் காண்க.*

***திருச்சிற்றம்பலம்.***

*தில்லையில் அருளிய*

## 35. அச்சப்பத்து

--------

*வாதவூரடிகள் தில்லையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, சிவானந்தானுபவம் சிறந்து விளங்க, அதிலே தோய்ந்து இருக்கின்ற அநுபவநிலையில், அதற்குப் புறம்பானவர்களைக் காண நேர்ந்தபோது, எவற்றிற்கும் அஞ்சாத எமக்கு, இவர்களைக் காண்பது மட்டும் அச்சம் ஆகின்றது என்று இதனை அருளிச் செய்தார்கள்.*

*அச்சப்பத்து என்பது அஞ்சுதற்குரிய காரணங்களைப் பொருளாகக்கொண்டு, அவற்றினின்று தப்பி உய்ய அருளை விரும்பும் நோக்குடன் விண்ணப்பிக்குமுறையில் அமைந்த பத்துப் பாடல்களை யுடையது. இதனானே பெயர்க்காரணமும் இனிது விளங்கும். அமுத முண்டார் அவ்வினிமையையே என்றும் விரும்புவதல்லது வேம்பு தின்ன விரும்பார். அதுபோலச் சிவானந்த மேலீட்டில் திளைக்கும் அடிகளார் அதிலேயே நிலைத்து நிற்க விரும்பி, அதற்கு எதிரான புறச்சூழலைக் கண்டு அஞ்சுவதாக விண்ணப்பிக்கின்றார்கள் என்பதாம்.*

*இவையனைத்தையும் இணைத்து எண்ணும்போது நேயமாகிய சிவானந்தத்து வேறின்றி அழுந்தினமையால், சிவத்தோய்வில்லாத எதனைக் கண்டாலும் அஞ்சுவது இயல்பாதலின், 'அம்ம நாம் அஞ்சுமாறே' என்ற மகுடத்தைக்கொண்டு எழுந்தது இப்பத்து என்பது பெறப்படும்.*

***ஆனந்த முறுதல்***

***அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**516. புற்றில்வாள் அரவும் அஞ்சேன் பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்**
**கற்றைவார் சடைஎம் அண்ணல் கண்ணுதல் பாதம் நண்ணி**
**மற்றும்ஓர் தெய்வந் தன்னை உண்டென நினைந்தெம் பெம்மாற்**
**கற்றிலா தவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சு மாறே. 1**

***உரை :-*** *புற்றிலே வாழுகின்ற ஒளியையுடைய பாம்பிற்கும் பயப்படமாட்டேன், பொய்யர்கள் (பிறரை ஏமாற்றும் பொருட்டுச்*

*சொல்லும்) மெய்போலும் பொய்க்கும் பயப்படமாட்டேன். தொகுதியான நீண்ட சடையைத் தரித்த எமது பெருமானாகிய நெற்றிக் கண் கடவுளுடைய திருவடிகளை யடைந்து அவனுக்கு வேறாகப் பிறிதொரு கடவுளை யிருப்பதாக நினைந்து எம்பெருமான் பொருட்டு பிற பொருட்பற்று, பிற கடவுட்பற்று என்பன நீங்காதவரைக் கண்டால், ஐயோ! நாம் பயப்படும் வகையை என் சொல்லுவோம்?*

*அரவு தீண்டின் உடலழியுமேயன்றி உயிருக்குத் தீங்கில்லை ஆதலால் அதற்கு அஞ்சவேண்டிய நிலை எனக்கு இல்லை என்றார்.*

***குறிப்பு :-*** *வாள் என்பதற்கு, வாள்போன்ற என்றலுமுண்டு. புற்றிலுறைந்து ஒளிமிக்க நாகரத்தின மமையப் பெற்ற பாம்புகள் கொடிய விடமுடையனவாதலால் அதனை எடுத்துரைத்தார். கற்றிலாதவரை என்று பாடமுரைத்து எம்பெருமான் தன்மைகளைக் கல்லாதவரை எனவுங் கொள்ப. அம்ம - அச்சத்தை உணர்த்தும் இடைச்சொல்.*

**517.** **வெருவரேன் வேட்கைவந்தால் வினைக்கடல் கொளினும் அஞ்சேன்**
**இருவரால் மாறுகாணா எம்பிரான் தம்பி ரானாந்**
**திருவுரு அன்றி மற்றோர் தேவரெத் தேவ ரென்ன**
**அருவரா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே.** **2**

***உரை :-*** *ஆசை வந்து என்னைப் பற்றினாலும் நான் அஞ்ச மாட்டேன். வினையாகிய கடல் என்னைக் கவர்ந்தாலும் அதற்கு நான் அஞ்சமாட்டேன். பகைமை காரணமாக, அயன், மால் இருவருங் காண முயன்று காணாத எமது தலைவனாய், தனக்குத் தானே தலைவனா யுள்ளவனுடைய திருவடிவத்தை அன்றி, மற்றொரு தேவர் எத்தகைய தேவராவரென்று வெறுப்புக் கொள்ளாதவரைக் கண்டால், அது நாம் பயப்படும் வகையாகும்.*

***குறிப்பு :-*** *வேட்கை வந்தால் வெருவரேன் என மாற்றுக. மாறு - மாறுபாடு. மாறுபாடு பற்றிக் காணாவெனக் கொள்க. தம்பிரானார் தம்வயமுடையவர். எல்லாப் பொருளும் அவன் திருவுரு ஆவதன்றி, அவனின் வேறாய ஒரு தனித் தெய்வமில்லை யென்பது. தம்பிரான் - தமக்குத்தலைவன் தாமேயானவன். வேறு தலைவன் இல்லாதவன் என்றவாறு.*

**518.** **வன்புலால் வேலும் அஞ்சேன் வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன்**
**என்பெலாம் உருக நோக்கி அம்பலத் தாடு கின்ற**

என்பொலா மணியை ஏத்தி இனிதருள் பருக மாட்டா
அன்பிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 3

*உரை :- பிறர் மீது பாய்ந்து வளமையுடைய மாமிசத்தைக் கொள்ளுங் (கூர்மையுடைய) வேலாயுதத்திற்கும் அஞ்சமாட்டேன். வளையணிந்த கையையுடைய மாதருடைய (உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்) கடைக்கண் பார்வைக்கும் பயப்பட மாட்டேன். அன்பருடைய எலும்பெலா முருகும்படியாகத் திருநோக்கஞ் செய்து சபையிற் கூத்தியற்றுகின்ற பொள்ளலில்லாத எனது மாணிக்கம் போல்வானை வாழ்த்தி, இனிதாகிய அவனது திருவருளை நுகர மாட்டாத, அன்பில்லாதவரைக் கண்டால், அம்ம! அது நாம் அஞ்சும் வகையாகும்.*

**519.** **கிளியனார் கிளவி அஞ்சேன் அவர்கிறி முறுவல் அஞ்சேன்**
**வெளியநீ றாடும் மேனி வேதியன் பாதம் நண்ணித்**
**துளியுலாம் கண்ண ராகித் தொழுதழு துள்ளம் நெக்கிங்**
**களியிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 4**

*உரை :- கிளி போன்ற மொழியையுடைய மகளிருடைய சொல் மயக்கிற் கஞ்சமாட்டேன். அவர்களது பொய்யான நகைப்பிற்கும் பயப்பட மாட்டேன். வெள்ளிய திருநீறணிந்த திருமேனியுடைய அந்தணனாகிய பெருமானது திருவடிகளை யடைந்து நீர்த்துளி சிந்துகின்ற கண்ணை உடையவராகி வணங்கிக் கசிந்து உள்ள முருகிக் கனியுந் தன்மை யில்லாதவரை இவ்வுலகிற் கண்டால், அம்ம! அது நாம் அஞ்சும் வகையாகும்.*

*குறிப்பு :- கிறி - பொய்; வஞ்சம். இங்கு என்பதைக் கண்டா லென்பதோடு முடிக்க, அளி - அன்பு; கனிவு. உலவு மென்பது உலாமென்றாயிற்று. ஆடு - தரி; முழுகு.*

**520.** **பிணியெலாம் வரினும் அஞ்சேன் பிறப்பினோ டிறப்பும் அஞ்சேன்,**
**துணிநிலா அணியி னான்தன் தொழும்பரோ டழுந்தி அம்மால்,**
**திணிநிலம் பிளந்துங் காணாச் சேவடி பரவி வெண்ணீ,**
**றணிகிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே. 5**

*உரை :- நோய்களெல்லாம் வந்தாலும் அஞ்சமாட்டேன். பிறப்பும், இறப்பும் நேர்ந்தாலும் பயப்படேன். மதியின் துண்டாகிய*

இளம்பிறையை நகையாகத் தலையில் தரித்தவனது தொண்டரோடு ஆனந்தத்தில் ஆழ்ந்து, அழகிய திருமால் வளமை உடைய நிலத்தைக் கீறித் தேடியுங் காணாத இறைவனது செய்ய பாதங்களை வாழ்த்தித் திருவெண்ணீற்றை அணியமாட்டாதவரைக் கண்டால், அம்ம! அது நாம் அஞ்சும் வகையாகும். அன்பர் கடமை கழலே நினைதலும், திருவாய் பொலியச் சிவாயநம என நீறணிதலுமாகும். அதனைச் செய்யாதவர்கள் கடமை தவறிய கயவர்கள். அவர்களைக் காணலும் ஆகாது என ஆனந்தமுறாதார் வாயிலாக ஆனந்தமுறுதலின் இலக்கணம் தெரிவிக்கிறார்.

*குறிப்பு :- துணிநிலா - துண்டு மதி. மூன்றாம் பிறைச்சந்திரன் தோன்றுங் காலத்தே சந்திரனின் பிற பகுதிகள் தோன்றாமையால் இளம்பிறையைத் 'துணி நிலா' வென்றார். அம்மால் என்பதற்கு அவ்வளவு பெருமையை யுடைய திருமாலெனவுங் கூறுவர். திணி - திண்மையுடையது.*

**521. வாளுலாம் எரியும் அஞ்சேன் வரைபுரண் டிடினும் அஞ்சேன்,**
**தோளுலா நீற்றன் ஏற்றன் சொற்பதம் கடந்த அப்பன்,**
**தாளதா மரைகளேத்தித் தடமலர் புனைந்து நையும்,**
**ஆளலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 6**

*உரை :-* ஒளி நிலவுகின்ற நெருப்பிற்கும் அஞ்சமாட்டேன். மலை புரண்டுவந்தாலும் பயப்படேன். திருத்தோள்களிலே விளங்குகின்ற திருநீறுடையவனாயும், காளைவாகன முடையவனாயுமுள்ள சொல்லின் தரத்தைக் கடந்த அப்பனாகிய பெருமானுடைய திருவடி களாகிய தாமரை மலர்களை வாழ்த்தி பெருமை பொருந்திய அம்மலர்களைத் தலைமே லணிந்து, மனம் நெகிழும் அடிமை யல்லா தவரைக் கண்டால், அம்ம! அது நாம் அஞ்சும் வகையே.

வாள் - ஒளி. கண்ணைப் பறிக்கும் பேரொளியை வீசுகின்ற எரியும், உருண்டோடி வருகின்ற மலையும் அழிப்பது உடலை. உடல் அழியின் வினைப்போகம் கழிந்தது என்னும் உவப்பேயன்றி எனக்கு உவர்ப்பில்லை ஆதலால் அவைகட்கு அஞ்சேன் என்றார்கள். இறைவனைப் பூசியாதவர்களோ உணர்வையே கெடுப்பவர்கள் ஆதலின் அவர்களைக் காண அஞ்சுவேன் என்கின்றார்கள்.

ஆள் அலாதவர் - மக்கள் அல்லாதவர். மக்களாக இருந்தால்

திருவடியைத் தரிசித்தலும் பூசித்தலும் செய்தல்வேண்டும். அது செய்யாதவர்கள் உறுப்பான் மக்களே போல்வாராயினும் உணர்வால் ஆளல்லர் என்றவாறு. தீயாரைக் காண்பதுவும் தீதேயாதலின் 'ஆளலாதவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே' என்கின்றார்கள்.

*குறிப்பு :- ஏற்றன் - காளையை யுடையவன். பதம் - தரம். சொற்பதம் என்பதற்குப் பேசப்படுகின்ற பதவி யெனவுங் கூறுப. தாள தாமரை - தாளவென்பது குறிப்புப் பெயரெச்சம். தட - பெருமையை யுடைய. ஆளலாதவர் - ஆட்படாதவர். ஒளி வீசாத நெருப்பினும் ஒளியோடு கூடிய நெருப்பு விரைவாகப் பொருள்களை எரித்து விடுமாகலின் அதனை விதந்தோதினர்.*

**522. தகைவிலாப் பழியும் அஞ்சேன் சாதலை முன்னம் அஞ்சேன்**
**புகைமுகந் தெரிகை வீசிப் பொலிந்தஅம் பலத்து ளாடும்**
**முகைநகைக் கொன்றை மாலை முன்னவன் பாத மேத்தி**
**அகம்நெகா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 7**

*உரை :- நீக்கமுடியாப் பழிக்கும் அஞ்சமாட்டேன். இறப்பதற்கு முன்னமே பயப்படேன். புகையைக் கொண்ட அனலைத் திருக்கரத்தின் கண் வைத்துப், பொலிவுபெற்ற சபையின்கண் அனற் புகைவீசும்படி கூத்தியற்றுகின்ற மொட்டுகள் விரியும் கொன்றை மாலையணிந்த முதல்வனது திருவடிகளைத் துதித்து மனம் நெகிழாதவரைக் கண்டால், அம்ம! அது நாம் அஞ்சும் வகையாகும்.*

*குறிப்பு :- தகைவு - தடுத்தல்; நீக்குதல். முகந்த எரி என்பது முகந்தெரி என்றாயிற்று. முகை - மொட்டு. நகை - விரிதல்; விளங்குதல். முன்னவன் - பழமையோ னெனவுங் கூறுவர்.*

**523. தறிசெறி களிறும் அஞ்சேன் தழல்விழி உழுவை அஞ்சேன்**
**வெறிகமழ் சடையன் அப்பன் விண்ணவர் நண்ண மாட்டாச்**
**செறிதரு கழல்க ளேத்திச் சிறந்தினி திருக்க மாட்டா**
**அறிவிலா தவரைக் கண்டால் அம்மநம் அஞ்சு மாறே. 8**

*உரை :- கட்டிய தறியைச் சினந்து அசைகின்ற யானைக்கும் அஞ்சமாட்டேன். தீப்பொறி போன்ற கண்ணினை உடைய புலிக்கும் பயப்படேன். தேன் மணங்கமழ்கின்ற சடையினை யுடையவனாகிய தந்தையினது தேவருமறிய முடியாத வீரக்கழல்கள் செறிந்த திருவடிகளை வாழ்த்திச் சிறப்புற்று இனிய முறையி லிருக்கமாட்டாத*

ஞானமில்லாதவர்களைக் கண்டால், அம்ம! அது நாம் அஞ்சும் வகையாகும்.

***குறிப்பு :-*** *தறி - யானைகட்டிய கம்பம். செறி - செறு. செறுதல் - தாக்குதல். மதமிகுதி, வளமிகுதி முதலியவற்றால் கட்டுத் தறியை யானை தாக்கும். சடையில் நறும்பூத் தரிப்பதால் வெறிகமழ் என்றார். கழல்கள் திருவடிக்கு ஆகுபெயர். உழுவை - புலி*

**524.** மஞ்சுலாம் உருமும் அஞ்சேன் மன்னரோடுறவும் அஞ்சேன்
நஞ்சமே அமுத மாக்கும் நம்பிரான் எம்பி ரானாய்ச்
செஞ்செவே ஆண்டுகொண்டான் திருமுண்டம் தீட்டமாட்டா
தஞ்சுவா ரவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. **9**

***உரை :-*** *மேகத்தில் உண்டாகி நிலவுகின்ற இடிக்குப் பயப்பட மாட்டேன். சமயத்திற் கைவிடக்கூடிய அரசருடைய நட்பிற்கும் பயப்படமாட்டேன். விடத்தை அமுதமாக உட்கொண்ட இறைவனாகிய தமது தலைவன், மிகச் செவ்வையாக நம்மை யாட் கொண்டவன். செல்வமாகிய அவனது திருவெண்ணீற்றை நெற்றியில் அணியமாட்டாது அதற்குப் பயப்படுகின்றவர்களைக் கண்டால், அம்ம! அது நாம் அஞ்சும் வகையேயாகும்.*

*இறைவன் குற்றங்களைக் குணமாக்கொள்ளும் தன்மைய னாதலை, நஞ்சை அதன் தீயகுணம் போக்கி, அமுதாகச் செய்து அழகுப்பொருளாக்கிச் செம்மையான தன்திருமிடற்றிற் கொண்டமையால் விளங்கும் என 'நஞ்சமே யமுதமாக்கும் நம்பிரான்' என்ற பகுதியால் உணர்த்துகிறார்கள்.*

*நம்பிரான் என்பதால் அடியார்கள் பலருக்கும் தலைவன் என இறைவன் பொதுமையினிற்றலையும், எம்பிரான் என்பதால் தமக்கே தலைவனாகச் சிறப்பினிற்றலையும் தெரிவிக்கின்றார்கள். செஞ்செவே - செவ்வையாக. முத்திக்காலத்திலும் எவ்விதமான சுதந்திரமும் கொடாமல், பொய்யான சுதந்திரத்தை ஏறட்டுக் கொண்டு ஆன்மாவின் ஞானத்தை மறைக்கும் மலங்களைப் புண்வைத்துப் பொதிந்து மூடாத மருத்துவன்போல நன்றாக அகற்றி அடிமைகொண்டான் என்பது 'செஞ்சவே ஆண்டு கொண்டான்' என்பதால் உணர்த்தப்பெறுகின்றது.*

*திருமுண்டம் தீட்டமாட்டாது அஞ்சுவார் - திருநீறாகிய விபூதியை நெற்றியில் தீட்டமாட்டாமல் அஞ்சுகின்றவர்கள் என்க. முண்டம் - நெற்றி.*

*குறிப்பு :- திரு - செல்வம். அதாவது திருவெண்ணீறு. விபூதி என்ற சொல்லும் இக்கருத்தை யுடையது. முண்டம், திரு, தீட்டமாட்டாவென முடிக்க.*

**525. கோணிலா வாளி அஞ்சேன் கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்**
**நீணிலா அணியி னானை நினைந்துநைந் துருகி நெக்கு**
**வாணிலாங் கண்கள் சோர வாழ்த்திநின் றேத்த மாட்டா**
**ஆணலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 10**

***உரை :-*** *கொலைத்தன்மையையுடைய அம்பிற்கும் அஞ்சமாட்டேன். யமனுடைய கோபத்திற்கும் பயப்படேன். நீண்ட பிறையினை நகையாகச் சூடிய பெருமானை எண்ணிக் கசிந்து மனம் நெகிழ்ந்துருகி ஒளியுடைய கண்கள் நீரைச் சிந்தும்படி துதித்து உறுதியாய் வழிபட மாட்டாத ஆண்மையுடையர் அல்லாதாரைப் பார்த்தால், அம்ம! அது நாம் அஞ்சும் வகையாகும்.*

*கோண் இலா வாளி - கோணல் இல்லாத நேரிய அம்பு. "கணை கொடிது யாழ்கோடு செவ்விது" என்ற குறட்கருத்தோடியைந்திருத்தல் காண்க. இஃதன்றி, கோண் என்பதற்குக் கூர்மை என்று கூறும் பழையவுரை. கோள் நிலா வாளி எனப் பிரித்து உயிரைக்கொள்ளும் தன்மையில் விளங்கும் அம்பு என்பாரும் உளர்.*

*குறிப்பு :- கோள் உயிரைக் கொள்ளுந் தன்மை. அதாவது கொலைத்தன்மை. பிறையி னகலத்திலும் அதன் நீளம் அதிகமானதால் நீள்நிலா என்றார். வாள் நிலாவு மென்பது வாள்நிலாவென் றாயிற்று. சோர - வடிய. ஏத்தமாட்டா என்பது வழிபடமாட்டா என்ற பொருளில் வழங்கியது.*

*இங்ஙனம் பத்துப்பாடல்களாலும் பெருமானைப் புகழ்தலும், இவர் தேவர் என இரண்டாட்டாமையும், திருவருளைப் பருகித் திருவடிக்கன்பராதலும், மனங்கனிதலும், வெண்ணீறணிதலும், சிவார்ச்சனை செய்தலும், திருவடியை ஏத்திக்கொண்டு செயலற்றிருத்தலும், கபாலம் ஏந்துதலும், கண்கள் நீர்வார ஏத்துதலும் ஆனந்தமுற்றார் மெய்ப்பாடுகளாதலை அறிவித்து, அவற்றைச் செய்யாதாரையே நாம் அஞ்சுவது என்று திருவாய்மலர்ந்தருளு கின்றார்கள். இதன்பயன் அடியாரோடு கூடுக, அடியாரல்லாரோடு சேரற்க என்பது.*

***திருச்சிற்றம்பலம்.***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 36. திருப்பாண்டிப் பதிகம்

*'பாண்டியன் நாடு' என்பது, 'பாண்டிய நாடு' என மருவிய வழி, 'பாண்டி' என்பதே அந்நாட்டின் சிறப்புப் பெயர்போல நிற்றலின் அதன்கண் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறும் பதிகத்தை, 'பாண்டிப் பதிகம்' என்றார். இதனை, 'புகார்க் காண்டம் (சிலப்பதிகாரம்), அயோத்தியா காண்டம்' (இராமாயணம்) முதலியனபோலக் கொள்க. அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சியாவது, இறைவன் நரியைக் குதிரையாக்கித் தானும் ஒரு குதிரை மேல் வந்து காட்சி வழங்கியது. பாண்டி நாட்டை அடிகள் இறைவன் வெளிப்பட்டருளும் நாடாகக் கருதுதலின், 'திரு' என்னும் அடையும் புணர்ந்தருளினார். இறைவன் அடிகள் பொருட்டுக் குதிரை கொணர்ந் தளித்தமையை, அவர் அவனது அருள் இன்பத்தின் தொடக்கமாகக் கருதி இதற்கு, 'சிவானந்த விளைவு' எனக் குறிப்புரைத்தனர் முன்னோர். விளைவு - தோற்றம். இதன் மூன்றாம் திருப்பாட்டின் பொருள், இதற்கு அரண் செய்யும். இறைவன் மதுரையில் குதிரை கொணர்ந்தளித்தமை அனைவராலும் உணரப்பெற்றபின், அவ்விடத்தே அடிகள் இதனை அருளிச் செய்தார் எனக் கருதுதற்கு இடம் உண்டு. இதன்கண் அடிகள் தம்மை இவ்வுலக வாழ்க்கையின் நீக்கித் தன்பால் வரவழைத்துக் கொள்ளல் வேண்டும் என இறைவனை நோக்கி விண்ணப்பியாமை, இக்கருத்தை வலியுறுத்தும். இது, திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது, என்பதே பதிப்புக்களில் காணப்படுவது. இது முழுவதும் கட்டளைக் கலித்துறையால் ஆயது.*

--------

***சிவானந்த விளைவு***

***கட்டளைக் கலித்துறை***

*திருச்சிற்றம்பலம்*

**526.** **பருவரை மங்கைதன் பங்கரைப் பாண்டியற் காரமுதாம்**
**ஒருவரை ஒன்று மிலாதவரைக் கழற்போ திறைஞ்சித்**
**தெரிவர நின்றுருக் கிப்பரி மேற்கொண்ட சேவகனார்**
**ஒருவரை யன்றி உருவறி யாதென்றன் உள்ளமதே.** **1**

***உரை :-*** *பெரிய மலையாகிய இமயமலை யரசன் புதல்வியைப் பாகமாக வுடையாரைப், பாண்டிய மன்னனுக்குப் பெறுதற்கரிய அமுதமான ஒப்பற்றவரை, பெயர், வடிவு முதலிய ஒன்றும் இல்லாத வரை, நான் தமது திருவடி மலரை வணங்கும்படி வெளிப்பட்டு நின்று மனத்தை உருகுவித்துக் குதிரைமேல் ஏறிவந்த வீரர் ஒருவரையல்லாது பிற எவருடைய வடிவத்தையும் என் உள்ளமானது அறியமாட்டாது.*

*முதற்கண் அம்மையப்பரான உருவடிவாகவும், அடுத்து ஆரமுதாகும் அருவுருவாகவும், பின் ஒன்றுமேயில்லாத அருவமாகவும் நினைத்தமை உன்னுக.*

*உலகிலுள்ள மலைகள் அனைத்தினும் பெரியது ஆகலின் இமயத்தைப் 'பருவரை' என்ற சொல்லால் குறித்தார்.*

*ஒன்றுமிலாதவர் என்றது கடவுளராக விளங்கும் பிறரிடமுள்ள எப்பொருளும், எப்பற்றும், எவ்வுருவும், எப்பெயரும் தம்மிடம் இல்லாதவர், மனவாசகம் கடந்தவர் என்பதை விளக்கிற்று. இதன் கருத்து, ஒரு நாமம் ஓருருவம் இல்லானுக்கு ஆயிரம் திருநாமம் அமைதல் வழக்காதலின் எல்லோமும் அவன் அடிமையும் உடைமையுமாவேம் என்பது.*

***குறிப்பு :-*** *பரு - பருத்த; பெரிய. வரை - மலையரசன். மங்கை - புதல்வி. இறைஞ்சி - இறைஞ்ச. உரு என்பதற்கு இயல்பு என்றும் பொருளுரைப்பர்.*

**527.** **சதுரை மறந்தறிமால்கொள்வர் சார்ந்தவர் சாற்றிச்சொன்னோங்**
**கதிரை மறைத்தன்னசோதி கழுக்கடை கைப்பிடித்துக்**
**குதிரையின் மேல்வந்து கூடிடு மேற்குடி கேடுகண்டீர்**
**மதுரையர் மன்னன் மறுபிறப் போட மறித்திடுமே.** **2**

***உரைநடை :-*** *இரண்டாவது மூன்றாவது அடிகளை முதலிற் கொள்க.*

***உரை :-*** *கதிரவனைத் தன் ஒளி மிகுதியால் மறைத்தாலன்ன செஞ்சோதியானவன் மூவிலைச் சூலத்தைக் கையிற்கொண்டு, குதிரைமேல் ஏறி வெளிப்பட்டு நமது நடுவே வந்து கூடிவிடுவா னாயின், அவனைக் கண்டவர்களது பிறப்பு நாசமாகும் என்றறிவீர் களாக. அவனை அடைந்தவர்கள் தமது திறமையை மறந்து ஞானப் பித்துக் கொள்ளுவார்கள். உறுதியாக (ப்பறை, சாற்றினாற்போலச்) சொன்னோம். மதுரை வாழ்கின்றவர்களது அரசனாகிய பாண்டியனது மறுபிறப்பினை மேல் நிகழவொட்டாதபடி அச்சோதியானவன் தடுத்து விடுவானாயினன்.*

*சார்ந்தவர் - கேட்டு வந்தவர்கள். சதுர் - சாமர்த்தியம்; அதாவது தன்முனைப்பு. அறிமால் - ஞானப்பித்து. எம் உரையைக் கேட்டு வந்தவர்கள் இறைவனை எதிர்ப்படுதலின் தன்முனைப்படங்கிச்*

*சிவபோதம் தலைப்பட்டு எல்லாம் சிவமாகக் காணும் ஞானப்பித்துக் கொள்வர் என்பதாம்.*

*கழு - முள். கழுக்கடை - முள்ளைக் கடைசியிலே உடைய அதாவது தாற்றினைக் கோலின் நுனியிலேயுடைய தாற்றுக்கோல். சூலம் என்பர் பிறர். அது பொருளாயினும், குதிரையின்மேல் வருதற்கு ஏலாமையின் ஈண்டு இயையாதென்பது தெளிக.*

*குதிரையின் மேல்வரும் வீரன் எதிரியை ஓடஓட வெருட்டி மேலேறவிடாது மறிப்பதுபோல இறைவன் குதிரைச் சேவகனாக வந்து மறுபிறப்பென்கிற பகைவனை ஓட வெருட்டி, மீளவும் நம்மைச் சாராதவண்ணம் தடுப்பன் என்பதனை 'மறு பிறப்பு ஓட மறித்திடுமே' என்பதால் உணர்த்தினார்.*

***குறிப்பு :-** சதுர் - திறமை. தற்போத மிழத்தலையே சதுரை மறத்தலாகக் கூறினர். சிவஞான அவாவே அறிமால் எனப்பட்டது. கழுக்கடை - சூலம்; மூவிலை வேல். குடிகேடு - குடியின் முடிவு; அதாவது பிறவியின் அறிவு. ஓட - மேல்நிகழ. மறு பிறப்பாகிய ஓடத்தை மேற்செல்லாது தடுத்து விடுமென்றலுமொன்று.*

**528.** **நீரின்ப வெள்ளத்துள் நீந்திக் குளிக்கின்ற நெஞ்சங் கொண்டீர்,**
**பாரின்ப வெள்ளங் கொளப்பரி மேற்கண்ட பாண்டியனார்,**
**ஓரின்ப வெள்ளத் துருக்கொண்டு தொண்டரை உள்ளங் கொண்டார்,**
**பேரின்ப வெள்ளத்துட் பெய் கழலே சென்று பேணுமினே. 3**

***உரை :-** நீங்கள் இன்பச்சுனையில் நீந்திக்குளிக்கின்ற எண்ண முடையீர் ஆயின், உலகத்தை யெல்லாம் ஆனந்த வெள்ளம் மூடிக் கொள்ளும்படி குதிரைமேல் ஏறிவந்த பாண்டியனாராகிய பெருமான், ஒப்பற்ற பேரின்ப வெள்ளமே திருவுருவாகக் கொண்டு வந்து அடியவரது உள்ளத்தைக் கவர்ந்து கொண்டார். பேரின்ப வெள்ளத்துள் விளங்கும் அவனது வீரக்கழல் நிறைந்த திருவடிகள்பாற் சென்று அவற்றையே வழிபடுவீராக.*

***குறிப்பு :-** இன்பப்பெருக்கை விரும்புவார், இறைவன் பேரின்பச் சேவடியே நாடவேண்டுமென்பது குறிக்கப்பட்டது. பார் - நிலம்; பூமி. தொண்டரை - தொண்டருடைய. உருபு மயக்கம்.*

**529.** **செறியும் பிறவிக்கு நல்லவர் செல்லன்மின் தென்னன் நன்னாட்**
**டிறைவன் கிளர்கின்ற காலமிக் காலம்எக் காலத்துள்ளும்**

அறிவொண் கதிர்வாள் உறைகழித் தானந்த மாக் கடவி,
எறியும் பிறப்பை எதிர்ந்தார் புரள இருநிலத்தே. **4**

***உரைநடை :-*** *முதலடியில் 'செல்லன்மின்' என்பதுவரை இறுதியிற் கொள்க.*

***உரை :-*** *பாண்டியனது நல்ல நாட்டிலே கடவுள் புறப்பட்டு விளங்குகின்ற காலம். இது எக்காலத்திலும் நல்ல காலம். பாண்டியனாக எழுந்தருளியுள்ள இறைவன் அறிவாகிய ஒளிக்கதிர் வீசும் வாளினை உறை நீக்கி யெடுத்துக் கொண்டு, ஆனந்தமாகிய குதிரையைச் செலுத்தி, எதிர்த்தவர்கள் மண்மிசை விழுந்து புரண்டு பணியும்படியாக அவர்களது பிறப்பை வாள் வீசிச் சேதிப்பன். ஆதலால், மிகுதியாக அடரும் பிறவிக்கு இணக்கமானவர்கள் அவர்முன் செல்லா தொழியுங்கள்.*

*வெட்டிய பொருள் குருதியோட்டடம் கழிகின்றவரை பூமியில் கிடந்து புரளுமே! இப்பிறவியாகிற பகைவன் எங்கே புரளும் எனின் இப்பூமியிற்கிடந்து புரள்கின்றான் என்று அணிநயம் தோன்ற அறிவித்தார்.*

***குறிப்பு :-*** *எக்காலத்துள்ளும் என்பதை எறியும் என்பதனோடு முடித்தலுமுண்டு. செறியும் பிறவிக்கு நல்லவர் செல்லன்மின், என்பதற்கு, அடரும் பிறவியைத் தொலைத்தற்குக் கடவுள் நல்லவர், பிறவிதொலைய விரும்புபவர், புறநாட்டிற்கு இக்காலத்தே செல்லாதீர்களென்றலு மொன்று. எதிர்ந்தார் பிறப்பை எறியும் என மாற்றுக. எதிர்ந்தார் இரு நிலத்தே புரள, என மாற்றுக. எதிர்ந்தார் - இடைவிடாது சிவஞானியாக இருப்பவர்.*

**530.** காலமுண் டாகவே காதல்செய் துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண் டான்எங்கள் பாண்டிப் பிரான் தன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே. **5**

***உரை :-*** *(உய்தி கூடுங்) காலம் கிடைத்திருக்கும்போதே அன்பு செய்து பிழையுங்கள்; நினைத்தற்கரிய பெருமையுடைய மண்ணினை யுண்ட திருமாலும் அயனும் பிற தேவர்களும் அடைதற்கரிய ஆலகால விடத்தை யுண்ட எங்கள் பாண்டி நாயகன், தனது அடியவர்கட்கு மூலமாகவுள்ள நிதியினை எடுத்தளிக்கின்றான். விரைந்து வந்து முற்படுங்கள்.*

*பகை வென்று வெற்றிகண்ட வீரன் வெற்றிக் களிப்பால் பகை மன்னரிடம்கொண்ட பொருளையும் தன் சேமநிதியையும்,*

*பாணர்க்கும் பாவலர்க்கும் இரவலர்க்கும் ஏனையோர்க்கும் வாரி வழங்குவன். அதுபோலப் பாண்டிப்பிரானும், அடியார்களின் பிறவிப் பகையை ஒழித்துச் சிவானந்தமாகிய மூல பண்டாரத்தை வழங்குகிறான்; அதற்கு நீங்கள் உங்களைப் பரிபாகப்படுத்திக் கொண்டு வந்து முந்துங்கள் என்பதாம்.*

*உடையவனே வந்து உதவக்கூடிய இத்தகைய காலத்தை நீங்கள் எண்ணிப்பார்த்திருக்கவும் முடியாது என்பார் 'கருதரிய காலமுண்டாகவே' என்றார். கருதவும் அரிய எனச் சிறப்பும்மை விரித்துக்கொள்க.*

*திருமால் ஞாலமுண்டானாயினும் அவன்பாற் சைவசீலம் இன்மையின் சிவன்பால் நண்ணவும் முடியாதவனாயினான். நான்முகனும் தேவர்களும் தத்தம் பதவிகளில் மயங்கிநிற்பவர்கள் ஆதலின் அவர்களும் இறைவனுடைய உண்மையியல்பினை உணர்ந்து உய்யமாட்டாராயினர்.*

*நண்ணரிய ஆலம் எனக் கூட்டிப் பொருள்கோடலுமாம். மூல பண்டாரம் - யாவற்றிற்கும் மூலமான சேமநிதி; என்றது சிவானந்தத்தை.*

***குறிப்பு :-** வாழ்நாளை வீணாக்காது உய்யுங்கள் என்ற குறிப்புங் காண்க. பண்டாரம் - சேமநிதி; நிதிக் களஞ்சியம். மூல பண்டார மென்பது பேரின்பச்செல்வம். பாண்டி நாட்டிலே தமக்கு அருளின மையின் 'பாண்டிப் பிரான்' என்றார்.*

**531.** **ஈண்டிய மாயா இருள்கெட எப்பொரு ளும்விளங்கத்**
**தூண்டிய சோதியை மீனவ னுஞ்சொல்ல வல்லன் அல்லன்**
**வேண்டிய போதே விலக்கில் ஐவாய்தல் விரும்புமின்தாள்**
**பாண்டிய னார்அருள் செய்கின்ற முத்திப் பரிசிதுவே.** **6**

***உரை :-** நெருங்கிய மாயாமலமாகிய இருள் நீங்கவும், எல்லாப் பொருளும் விளங்கவும், குதிரையைச் செலுத்தி வந்த ஒளியானவனைப் பாண்டியனும் இன்னாரென்று சொல்ல இயலாதவனே, ஐந்து வாயில்களாகிய ஐம்பொறிகளை விரும்பிய பொழுதே விலக்க வேண்டுமாயின், அவனது தாள்களை விரும்புவீர்களாக. பாண்டியனா ராகிய சிவபிரான் அன்பர்க்கு நல்கியருள்கின்ற வீடாகிய பரிசில் அவனது திருவடியாகிய இதுவே.*

*தாள் வாய்தல் விரும்புமின் - திருவடி தானே வந்து*

*பொருந்துதலை விரும்புங்கள். திருவடியைச் சென்று கூடுதற்கும் உயிர்க்கு உரிமையின்றாதலின் வாய்தல்தொழிலைத் திருவடிய தாக்கியும், விரும்புதல் ஒன்றே ஆன்மா செய்யக்கடமைப்பட்டதென விரும்புதலை அன்பர் தொழிலாக்கியும் உரைத்தார்.*

***குறிப்பு :-*** *மாயாவிருள் என்பது மாயா மலத்தாலுண்டாகிய திரிபுணர்ச்சி. நில்லாதனவற்றை நிலையின வென்றுணரும் அறிவு. தூண்டிய - செலுத்திய; குதிரையை என்பது தொக்கு நின்றது. எப்பொருளும் விளங்க உயிரினறிவை இயக்கிய என்றும் பொருள் கொள்ளலாம். ஐவாய்தல் - ஐவாசல்; ஐம்பொறி. விலக்கில் - விலக்கின். 'தாள் விரும்புமின்' என மாற்றுக. பாண்டியனாரென்பது சிவபிரானுக்கு வழங்குதல் அடிகள் மரபு. அப்பொழுதெல்லாம் பாண்டிய மன்னனை 'மீனவன்' என்பார். அறியப்படாது வந்து விரைவில் அருள் புரிதலையே 'முத்திப்பரிசு' என்றார்.*

**532.** மாயவ னப்பரி மேல்கொண்டு மற்றவர் கைக்கொளலும்
போயறும் இப்பிறப் பென்னும் பகைகள் புகுந்தவருக்
காய அரும்பெருஞ் சீருடைத் தன்னரு ளேஅருளுஞ்
சேய நெடுங்கொடைத் தென்னவன் சேவடி சேர்மின்களே. 7

***உரை :-*** *பாண்டியன் மாயமாகிய அழகிய பரிமேல் வந்து, பிறரைத் தன் வசப்படுத்துதலும், இப்பிறப்புக்குக் காரணமாகிய அறுபகைகள் கழிந்தொழியும். தன்பாற் சேர்ந்தவர்க்கு (வீட்டிற்குச் சாதனம்) ஆகிய அரிய பெரிய சிறப்புடைய தனது திருவருளையே நல்குவன்; செம்மையாகிய பெரிய கொடை வள்ளலாகிய பாண்டியனாகிய சிவபிரானது செய்ய பாதங்களையே சேருங்கள்.*

*ஆய - அவரவர் பரிபாகநிலைக்கு ஏற்ற. அருள் யார்க்கும் எளிதில் கிடைத்தற்கு அரியதாகலின் அதனை 'அரும் அருள்' என்றும், எல்லா உயிர்களையும் தன்னகத்தடக்கி ஆட்கொள்ளுதலின் 'பெரும் அருள்' என்றும் அருளினர். அருளும் : செய்யு மென்முற்று.*

*உலகினர் வழங்கும் கொடை ஒருவேளைக்கு உதவுவதாய், ஓராண்டு ஓராயுள்வரை உதவுவதாய்மட்டும் அமைவது. இறைவன் வழங்கும் வள்ளன்மை என்றுமழியாத பேரின்பத் திருத்துவது ஆகையால் அவன் திருவடி உதவுதலைச் 'சேய நெடுங்கொடை' என்றார்.*

*'மற்றவர் கைகொளலும்' என்னும் பாடத்திற்கு வஞ்சனையாக*

நரிகளைப் பரிகளாக்கிய குதிரைமேல் வந்து, பாண்டியன் ஏவலர்களாகிய மற்றவர்கள் கயிறுமாறி ஏற்றுக்கொண்டவுடன் இந்தக் குதிரையாகிய பிறப்பகலும்; தவத்தோராகிய எம் போலியர்க்குப் பகைகள் புகும்; அவர்களைக் காப்பதற்கேற்ற அரிய பெரிய சிறப்புக்களோடு கூடிய தன்னருளே யருளும் என்னும் மிகப் பெரிய கொடையினையுடைய தென்னவன் சேவடியைச் சேமின்கள் என அடிகளார் வரலாற்றை விளக்கும் பொருள் தோன்ற நிற்றல் காண்க.

***குறிப்பு :-*** தென்னவன் பரிமேல் கொண்டு மற்றவர் கைக் கொளலும் என முடிக்க. சேய்மையாகிய பெருங் கொடையெனப் பொருள் கொண்டு, அது முத்திப் பெருங் கொடை யென்றலு மொன்று. பிறப்பென்னும் - பிறப்பிற்குக் காரணமாய, பகைகள் - மும்மலங்கள், அல்லது காமக்குரோத லோபமோகமத மாற்சரிய மாய அறுபகைகள். பகைகள் போயறுமென முடிக்க.

**533.** அழிவின்றி நின்றதொர் ஆனந்த வெள்ளத் திடையழுத்திக்
கழிவில் கருணையைக் காட்டிக் கடிய வினையகற்றிப்
பழமலம் பற்றறுத் தாண்டவன் பாண்டிப் பெரும்பதமே
முழுதுல குந்தரு வான்கொடை யேசென்று முந்துமினே. **8**

***உரை :-*** அழிவில்லாமல் நிலைபெற்ற ஒப்பற்ற பேரானந்த வெள்ளத்தின்கண் அழுந்துவித்து நீக்கமில்லாத அருளைக் காண்பித்துக் கடுமையாகிய இருவினைகளை யொழித்துப் பழமையாக வரும் ஆணவமலப்பற்றைத் தொலைத்து ஆட்கொண்டவன். பாண்டியனாகும் பெரும் பதவி மாத்திரமின்றி உலக முழுதுந் தரவல்லன். அவனது முத்திக் கொடையையே முற்பட்டுப் போய்ப் பெறுங்கள்.

சிவானந்தம், அழிவும் வளர்ச்சியும் விளக்கமும் அஃதின்மையும் இன்றி என்றும் ஒருபடித்தாயிருப்பது ஆதலின், ‘அழிவின்றி நின்றதொர் ஆனந்தவெள்ளம்’ என விதந்தார். வற்றாதும் முற்றாதும் பல உயிர்களையுந் தன்னகத்தடக்கி இன்பூட்டுதலின் வெள்ளமென்றும், தேனில் விழுந்த ஈப்போல உயிர்கள் சிவானந்தத்தில் தோயின் புறம்போகா ஆதலால் வெள்ளத்திடையழுத்தி என்றும், உயிர்கள் மாட்டு இறைவன் காட்டிய அருள் என்றும் மாறாது ஒருபடித்தாதலால் கழிவில் கருணையை என்றும், இறைவன் கருணை வலியவரினும் காட்டும் உபகாரத்தைப் பெருமான் செய்யாவிட்டால் பிறவிக்குருடனுக்குப் பொற்கிழி எதிர்ந்தாற்போல இடறிச்

*செல்வதன்றி அழுந்தி அனுபவிக்க இயலாமையின் கருணையைக் காட்டி என்றும், காட்டிய கருணையைக் காணாதவாறு இடையிடையே வினைகள் தடுக்குமோ என்று இரங்கிக் கடியவினை அகற்றி என்றும், இத்தனை கேடுகளுக்கும் தாரகமாய் இருப்பது மலமாதலின் தொன்று தொட்டு வந்த அதனையும் கெடுத்து ஆண்டான் என்பது போதர பழமலம் பற்றறுத்து ஆண்டவன் என்றும் கூறினர்.*

***குறிப்பு :-*** *பாண்டிப் பெரும்பதமேயோ, அன்றி உலக முழுதும், எனக் கொள்க. பாண்டியனாகிய அவனது பெருமை வாய்ந்த திருவடியே சென்று அவனது கொடையே முந்துமின், என முடிப்பது முண்டு. பதம் - பதவி; திருவடி.*

**534.** **விரவிய தீவினை மேலைப் பிறப்புமுந் நீர்கடக்கப்**
**பரவிய அன்பரை என்புருக் கும்பரம் பாண்டியனார்**
**புரவியின் மேல்வரப் புந்திகொ ளப்பட்ட பூங்கொடியார்**
**மரவியன் மேல்கொண்டு தம்மையுந் தாம்அறி யார்மறந்தே. 9**

***உரை :-*** *உயிரிற் கலந்துள்ள தீய வினைகள் காரணமாக வருகின்ற முற்பிறப்புக்களாகிய கடலைக்கடக்கும்படி தன்னை வழிபட்ட அன்பரது எலும்பையும் உருகுவிக்கும் மேலான பாண்டியனார் குதிரை மேல் வந்தபோது அவரால் அறிவு கவரப்பெற்ற அழகிய கொடி போன்ற மங்கையர், மரத்தினியல்பைப் பெற்றுத் தம்மையு மறந்து தாம் தம்மை அறியாராயினர்.*

***குறிப்பு :-*** *முந்நீர் - ஆற்றுநீர், ஊற்று நீர், மழை நீர் என்ற மூன்றுங் கலந்தது, நிலம் உண்டாவதற்கு முற்பட்ட என்ற பொருளில், முன்னீரென்று பாடங் கோடலுமுண்டு. பூங்கொடியார் மெய்யன்பர்க்கு உருவகம். மரம் இயல் - மரத்தின் தன்மை. புந்தி - அறிவு. தன்னுணர்ச்சி கெட்டு இறையன்பு வயமாயினர் என்பது கருத்து.*

**535.** **கூற்றைவென் றாங்கைவர் கோக்களை யும்வென் றிருந்தழகால்**
**வீற்றிருந் தான்பெருந் தேவியுந் தானும்ஒர் மீனவன்பால்**
**ஏற்றுவந் தாருயி ருண்ட திறலொற்றைச் சேவகனே**
**தேற்றமி லாதவர் சேவடி சிக்கெனச் சேர்மின்களே. 10**

***உரை :-*** *யமனை வென்று, அவ்வாறே ஐம்புல அரசர்களையும் தோல்வியடைவித்துத் தானும் தனது பெரிய சக்தியும், (அன்பர்க்*

*கருளுதற் பொருட்டு) அழகாக எழுந்தருளி யிருந்தானாகிய பெருமான், ஒரு பாண்டியன்பால் இரந்து வந்து, அவனது உயிரினைத் தன்பால் அடக்கிக் கொண்ட வீரமுடைய ஓர் ஆண்மகனாயினன். தெளிவில்லாதவர்களே! அவன் பாதங்களையே உறுதியாகச் சேர்ந்து பற்றுமின்கள்.*

*அறிவில், சந்தேக ஞானமும், விபரீத ஞானமும், உண்மை ஞானமும் என மூவகை உண்டு. அவற்றுள், ஒன்றை ஒன்றாக உணர்ந்த விபரீதஞானமுடையார்க்கு ஒருபோதும் உண்மைஞானத்தை உணர்த்த இயலாதாம். அங்ஙனம் உணர்த்த முற்படின் காணாதார்க் காட்டுவான் தான் காணான் என்று பழிக்கப்படுநிலை விளையுமாதலின் மதின்மேல் பூனைபோல, இதுவோ அதுவோ என்ற ஐயஞானமுடையவர்களையே அடிகள் 'தேற்றமிலாதவர்' என விளித்தார்.*

***குறிப்பு :-** ஐவர் - ஐம்புலன். கோ - அரசன். மீனவன் - மீன் கொடியுடையவன். பாண்டியற்குக் கொடி, கயற் கொடி. உயிர் உண்ட - உயிர்ப் போதத்தைக் கவர்ந்து கொண்ட, சேவகனே என்பதில், ஏகாரத்தை அசையாய்த் தள்ளி அதனைச் சேவடியென்பதோடு முடிக்கலாம். வீற்றிருந்தான் சேவகன் சேவடி சேர்மின்களே என முடிக்க.*

***இவ்வண்ணம் இப்பத்துத் திருப்பாடல்களும் சிவானந்த விளைவு என்பும் ஊனும் உளமும் உருக்குதலையும், குதிரை வீரனாகவே எண்ணி ஏமாந்த மீனவனுக்கும் அறிய இயலாத ஆண்டவனியல்புகளையும், இறைவன் அடியார்க்கு மூலபண்டாரம் வழங்கும் வள்ளன்மை யினையும் பலமுறைகளால் உணர்த்தி முந்துமின், சேர்மின், சிக்கெனச் சேர்மின் என அடிகளார் அன்பர்களுக்கு அறிவிக்கும் உபதேசமாக அமைந்திருத்தல் காண்க.***

***திருச்சிற்றம்பலம்.***

*திருத்தோணிபுரத்தில் அருளிய*

## 37. பிடித்த பத்து

*இறைவனைச் சிக்கெனப் பிடித்தமையைக் கூறும் பத்துப் பாடல்களின் தொகுதி பிடித்த பத்து. இறைவனை விடாது பற்றி நிற்றலே முத்திப் பேறு ஆதலின், இதற்கு, 'முத்திக் கலப்பு உரைத்தல்' எனக் குறிப்புரைத்தனர் முன்னோர். இது, தோணிபுரத்தில் அருளிச் செய்யப்பட்டது என்பதே பதிப்புக்களில் காணப்படுவது. இதனை இங்ஙனம் கொண்டமைக்குக் காரணம், இதன் மூன்றாவது திருப்பாட்டில் இறைவனை அடிகள், "அம்மையே அப்பா" என அழைத்திருத்தலே போலும்! ஞானசம்பந்தர் சீகாழியில் திருத்தோணிச் சிகரத்தைப் பார்த்து இவ்வாறு அழைக்க, இறைவன் அங்ஙனமே அம்மையப்பனாய் வந்து அருள் புரிந்தமையும், திருத்தோணியில் என்றும் அவ்வம்மையப்பர் வடிவமாயே இறைவன் எழுந்தருளியிருத்தலும் யாவரும் அறியப்பட்டன வாதல் அறிக. இது, முழுதும் எழுசீரடி விருத்தத்தால் ஆயது.*

--------

***முத்திக் கலப்புரைத்தல்***

***எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

***திருச்சிற்றம்பலம்***

**536.** உம்பர்கட் கரசே ஒழிவற நிறைந்த
யோகமே ஊற்றையேன் தனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 1

***உரை :-*** *விண்ணவர்களுக்கு மன்னனே, எங்கும் நீக்கமில்லாது வியாபித்த அத்துவிதக் கலப்புடைய பொருளே, மன அழுக்குடையே னாகிய எனக்குப் புதுமை என்று சொல்லும்படி அருள் கனிந்து வந்து என் குடும்பம் முழுவதையும் ஆட்கொண்ட, இவ்வுலக வாழ்வு நீங்கும்படி (பேரின்பத்தில்) வாழச்செய்த அமுதமே, செவ்விய நூற் பொருளின் முடிவே, சிறப்புடைய திருவடிகளை யுடையவனே, (நிலைத்த) செல்வமாயிருப்பவனே, சிவபெருமானே யாங்களுய்யும்*

பொருட்டு உன்னை உறுதியாகப் பற்றினேன். நீ இனி மேல் எங்கே என்னை விட்டு எழுந்தருளிச் செல்வது?

உம்பர் - மேலோராகிய வானவர். அவர்கள் விண்ணுலக வாசிகள் முதல் ஸ்ரீகண்டருத்ரபுவனம் வரையுள்ள தேவர்கள். அவர்கள் அனைவருக்கும் அரசாக - அவர்கள் அனைவரையும் தம் ஆணைவழி நடத்தும் சிறப்புடையது பரசிவம் ஒன்றே ஆதலின் 'உம்பர்கட்கு அரசே' என்றார்.

மணியின்கண் ஒளியும் பாலின் கட்சுவையும்போல எங்கும் நீக்கமின்றி நிறைந்தும், கலந்து ஒன்றாகியும் விளங்குதல் சிவத்தின் சிறப்பிலக்கணமாதலின் 'ஒழிவற நிறைந்த யோகமே' என்றார். யோகம் - ஒரொருக்கால் உளதாம் உள்ளத்துயர்வு. இதனை யோகசாலி முதலிய வழக்கானும் அறிக. அங்ஙனம் ஆகாது இறைவன் என்றும் எங்கும் நிலவும் யோகமாக விளங்குகின்றான்.

ஊற்றை - அழுக்கு. இஞ்ஞான்று ஊத்தை என வழங்கும். ஊற்றையேன் - அழுக்காகிய மலமுடைய யான் எனலுமாம். வம்பு -- காலமல்லாத காலத்துப் பழுத்த கனி முதலியன. மல கன்மங்களி னின்றும் நீங்காமையால் பரிபாகப்படாத என்னிடத்தும், காலமல்லாத காலத்துக் கனிந்த கனிபோல என் குடியை வாழவைத்தான் எனக் கருணையின் சிறப்பைக் காட்டுவார், 'ஊற்றையேன்றனக்கு வம்பெனப் பழுத்து, என் குடி முழுது ஆண்டு வாழ்வற வாழ்வித்த மருந்தே' என்றார். வாழ்வற வாழ்வித்தலாவது, இந்த உலகில் வாழவேண்டிய இன்பத் துன்ப வாழ்வு இனியும் எஞ்சியுள்ளது என்னாதபடி எல்லா வகையானும் வாழச்செய்த என்பதாம். அன்றி, இவ்வுலக வாழ்வாகிய இருவினைவாழ்வு நீங்கச் சிவஞானவாழ்வு வாழ்வித்த எனலுமாம். 'வாழ்வில்லாத பேரானந்த சுகம் அருளிய பிறவிப்பிணிக்கோர் மருந்தே' என்பது பழையவுரை.

**குறிப்பு :- யோகமே - கலப்பே, உயர்வு என்ற பொருளுமுண்டு. குடி என்பதற்குக் குலமென்ற பொருளுமுண்டு. வாழ்வற - பிறவியற. கழல் ஆகுபெயர். எம்பொருட்டென்றது தானுந் தன்னைச் சேர்ந்தாரையு முளப்படுத்தி. ஞானி ஒருவனுடைய தவத்தினால் அவன் குடிமுழுதும் உய்யுமென்பது நூற் கருத்து.**

**537.** **விடைவிடா துகந்த விண்ணவர் கோவே**
**வினையனே னுடையமெய்ப் பொருளே**

முடைவிடா தடியேன் மூத்தற மண்ணாய்
முழுப்புழுக் குரம்பையிற் கிடந்து
கடைபடா வண்ணம் காத்தெனை ஆண்ட
கடவுளே கருணைமா கடலே
இடைவிடா துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 2

***உரை :-*** *(திருமால் காளையாகத் தாங்க விரும்பிய காலை) காளையை நீக்காது வாகனமாக விரும்பிக்கொண்ட வானவர் தலைவனே, தீவினையேனை (அடிமையாக) உடைய மெய்ப்பொருளே, புலால் நாற்றம் நீங்காத, முழுவதும் புழுவினாலாகிய கூட்டிற் கிடந்து முதிர் வெய்திப் பாழாகி, அடியேன் கீழ்மைப் படா வண்ணம் என்னைத் தடுத்தாட் கொண்ட தெய்வமே, அருட் பெருங் கடலே, இடையறாமல் உன்னை உறுதியாகப் பற்றினேன். நீ, என்னை விட்டு எங்கே எழுந்தருளிச் செல்வது?*

*முடை - ஊனாற்றம். முடை என்ற நாற்றத்தின் பெயர் அதனையுடைய உடலுக்கானமையின் பண்பாகுபெயர். உடலை விடாது மூத்த மண்ணாய் அறக்கிடந்து எனக்கூட்டுக. மூத்து - பயனின்றி மூத்து என்க.*

***குறிப்பு :-*** *விடாது - நீக்காது. திருமால் விடையானபடியினால் அதனை வாகனமாகக் கொண்டவரென்று திருச்சாழலிற் குறித்த கருத்தை நோக்குக. முடைவிடாத அடியேன் என்றது முடை விடாதடியேன் என்றாயிற்று. முடைவிடாத என்பதைக் குரம்பை என்பதோடு முடிக்க. குரம்பை - கூடு. அதாவது இவ்வுடம்பு. முடைவிடாது, என்பதை வினை யெச்சமாகக் கொண்டு மூத்து என்பதோடு முடித்தலுமுண்டு. அறமண்ணாய் - முற்றிலும் பாழாய். புலால் நாற்றம் நீங்கப் பெறாது அடியேன் கிடந்து மூத்துக் கடைபடா வண்ணமென முடிக்க.*

**538. அம்மையே அப்பா ஒப்பிலா மணியே**
**அன்பினில் விளைந்த ஆரமுதே**
**பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்**
**புழுத்தலைப் புலையனேன் தனக்குச்**
**செம்மையே ஆய சிவபதம் அளித்த**
**செல்வமே சிவபெரு மானே**

இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 3

***உரை :-*** *தாயே, தந்தையே, நிகரற்ற மாணிக்கமே, அன்பாகிய கடலில் விளைந்த கிடைத்தற்கரிய அமுதமே, நிலையாதவற்றின் கண்ணேயே அறிவினைப் பெருகச்செய்து, நேரத்தைப் பயன்படாது கழிக்கின்ற புழுப்பற்றி யலைகின்ற கீழ்மைக்குண முடையேனாகிய எனக்கு, பெருநன்மைக் கேதுவாகிய சிவமாந்தன்மை கொடுத்தருளிய நிலைத்த செல்வமானவனே, சிவபெருமானே, இப்பிறவியிலேயே உன்னை உறுதியாகப் பிடித்தேன்; நீ என்னை விட்டு இனி எங்கெழுந் தருளிச் செல்வது?*

*பயனற்ற காரியங்களைச் செய்து வாழ்நாளை வீணாளாகச் சுருக்கும் எனக்கும் ஈறிலா இன்பம் அளித்த பெருமானே! எடுத்த இப்பிறவி வீண்போகாதவண்ணம் இம்மையிலேயே இறுகப் பற்றினேன்; இனி, எங்கு எழுந்தருள்வது என்கின்றார் என்பது கருத்து.*

*இறைவன் தனக்கு, இன்பமே பெருக்கி, யான் செய்யும் குற்றங்களைஎல்லாம் மறந்து அன்பேபொழிதலால் அம்மையே என்றும், தீயரைக் கண்டவிடத்துக் கண்டித்துத் திருத்தி நல்வழிப்படுத்துதலின் அப்பா என்றும், கிடைத்தற்கு அரிய மணியாயும் பிறவி நோயகற்றும் மணியாயும் விளங்குதலின் ஒப்பிலா மணியே என்றும் கூறினார்.*

*அன்பு ஒரு புலம். அப்புலத்துள் விளைந்த அமுதமாய இனித்தலின் 'அன்பினில் விளைந்தவமுதே' என்றார். இங்ஙனம் முறையே இப்பிறப்பு மெய்ம்மையாம் உழவைச்செய்து சிவபோகம் விளைக்க உதவப்பெற்றது; அத்தகைய பிறப்பைப் பொய்ம்மையை விளைத்து, மெய்ம்மைக்குரிய காலத்தைப் பாழ்படுத்தியதால் அதற்குரிய காலம் சுருங்கியதென்பார் 'பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும் புலையனேன்' என்றருளினார். நாய் காரியமின்றி அலையும் குணம் உடையது. அதிலும் அது புழுக்கண்டதாயின் அதனைப் போக்கிக்கொள்ளும் அறிவின்மையால், தன் உடற்புண்ணில் புழு நெளியும்போதெல்லாம் அந்நோய் பொறுக்கமாட்டாது அலைந்துகொண்டேயிருக்கும்; அதுபோல வினையின்றி அலைகின்றேன் என்பார் 'புழுத்து அலைப் புலையனேன்' எனத் தன்னைக் குறித்தார்.*

*சிவபதம் - பேரின்ப நிலையாகிய முத்தி. செம்மை - நேர்மை. அதாவது கோணல் இல்லாதது. மலக்கோண் நீங்கியது. ஆதலால்*

*மலக்கோணலும், அதன் விளைவாகிய அறியாமையும், அதன் விளைவாகிய அகங்கார மமகாரங்களும் நீங்கியதால் உளதாம் இன்ப நிலையாதலின் அதனைச் 'செம்மையேயாய சிவபதம்' என்றருளினர்.*

***குறிப்பு :-*** *பொய்மை - பயனற்றவை; நிலையாதவை. பயனற்றவைகளை மிகுதிப்படுத்திப் பயன்படுஞ் செயலுக்குரிய நேரத்தைக் குறைப்பது இங்கே குறிக்கப்பட்டது. புழுத்தலை - புழுத்து அலைதல். உடம்பு புழுமயமாய் இருத்தலால் உடம்பொடு திரிதலைப் புழுத்தலைதல் என்றார். புழுத்தலை என்று கொண்டால் புழுப்பற்றிய தலையை உடைய என்பது பொருளாகும். செம்மை - நன்மை; நேர்மை. பதம் - நிலை.*

**539.** **அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே**
**பெருந்திறல் அருந்தவர்க் கரசே**
**பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த**
**போகமே யோகத்தின் பொலிவே**
**தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த**
**செல்வமே சிவபெரு மானே**
**இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்**
**எங்கெழுந் தருளுவ தினியே.** **4**

***உரை :-*** *கருணை நயமுடைய விளக்கே, கனிந்த நிலையிலுள்ள ஒப்பற்ற பழம் போல்வானே, பேராற்றலுடைய செயற்கரிய தவத்தைச் செய்தவர்களுக் கரசே, மெய்ப்பொருள் விளக்கும் நூலானவனே, புகழ்தலைக் கடந்த சிவானுபவமானவனே, யோகத்தின் விளக்கமான பயனானவனே, தெளிவெய்திய இடத்து அடியாருள்ளத்தில் தங்கிய செல்வமானவனே, சிவபெருமானே, அறியாமை நிறைந்த இடமாகிய இவ்வுலகத்தின் கண்ணே உன்னை உறுதியாகப் பற்றினேன். இனி நீ எங்கெழுந்தருளிச் செல்வது?*

*சுடர் - தீப்பிழம்பு. இறைவன் தீப்பிழம்பு. அதன் ஒளி அருள். ஆதலின், திருவருளாகிற ஒளியோடுகூடிய தீப்பிழம்பு என இறைவனை விளித்தார். இதனால் சத்தியோடு கூடிய சிவமே என விளிக்கப்பட்டமை காண்க.*

*யோகம் - கலப்பு. தம் அறிவை எப்போதும் இறை ஒளியிலேயே கலந்திருக்கச் செய்யும் தவம். அத்தகைய யோகம் உடையாரிடம் எரிகிற சுடர்போல ஒருவகை விளக்கம் இருக்கக் காண்கின்றோம். அது இறையொளியே என்பார் 'யோகத்தின் பொலிவே' என்றார்.*

*குறிப்பு :-* *படிப்படியாகப் பக்குவப்படாது எப்போதும் ஒரே தன்மையான இன்ப நிலையிலிருப்பதால் அளிந்ததோர் கனியே என்றார். தவர் என்பது சரியையாளரையும், அருந்தவரென்பது கிரியையாளரையும், திறலருந்தவரென்பது யோகிகளையும், பெருந் திறலருந்தவரென்பது ஞானிகளையும் குறிக்குமென்பர். வீடடைதற் குரிய மெய்க்கலை ஞானத்தை இறைவன் ஆசிரிய பரம்பரையில் வைத்து நல்கினமையால் பொருளுடைக் கலையே என்றார். சிவானுபவம் சொல்லினாற் கூறப்படாமையின், புகழ்ச்சியைக் கடந்த போகமே என்றார். சிந்தை தெளிந்த இடத்திலேதான் இறைவன் விளங்குதலின், தெருளிடத் தென்றார். இருளிடத்தே என்பதை வினைத்தொகையாகக் கொண்டு, உய்திக்கு வழி தெரியாது திகைக்கின்ற இடத்து எனப் பொருள் கொள்வாருமுளர்.*

**540.** ஒப்புனக் கில்லா ஒருவனே அடியேன்
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே
மெய்ப்பதம் அறியா வீறிலி யேற்கு
விழுமிய தளித்ததோ ரன்பே
செப்புதற் கரிய செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. **5**

***உரை :-*** *தனக்கு யாரும் நிகரில்லாத ஒருவனா யுள்ளவனே, அடியேனது மனத்தில் உள்ளீடாக விளங்குகின்ற அறிவொளியே, உண்மை நிலையறியமாட்டாத சிறப்பில்லாத வெனக்கு உயர்ந்த நிலையைக் கொடுத்த ஒப்பற்ற அன்பு வடிவமானவனே, புனைந்துரைக்க முடியாத வளம் பொருந்திய ஒளி வடிவானவனே, நிலைத்த செல்வமே, சிவபெருமானே, யான் இளைத்த இடத்தே உன்னை உறுதியாகப் பற்றினேன். இனி என்னை விட்டு நீ எங்கெழுந் தருளிச் செல்வது?*

*குறிப்பு :-* *வீறு - சிறப்பு. மூர்த்தி - வடிவுடையவன். ஈறிலி - முடிவற்றவன். எய்ப்பு - இளைத்த காலம்.*

**541.** அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்
டளவிலா ஆனந்தம் அருளிப்
பிறவிவே ரறுத்தென் குடிமுழு தாண்ட
பிஞ்ஞகா பெரியஎம் பொருளே

திறவிலே கண்ட காட்சியே அடியேன்
செல்வமே சிவபெரு மானே
இறவிலே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 6

*__உரை :-__ உயிர்கொண்டு போகும்பொழுது திக்கற்றவனாகிய என்னுடைய உள்ளத்தையே கோயிலாகக் கொண்டு எழுந்தருளி யாட்கொண்டு எல்லையற்ற பேரின்பத்தைக் கொடுத்து என் பிறப்பின் மூலத்தைக் களைந்து, என் குடும்பம் முழுவதையும் ஆட்கொண்ட, தலைக்கோல முடையவனே, எமது பெரிய பொருளே, தெளிவாக யான் கண்ட காட்சி யானவனே, அடியேனுடைய நிலைத்த செல்வமே, சிவபெருமானே, முடிவிலே உன்னையே உறுதியாகப் பற்றினேன். இனி நீ எங்கெழுந்தருளிச் செல்வது?*

*குறிப்பு :- அறவை - எல்லாமற்றவன்; யாதொரு கதியுமில்லாதவன். பிஞ்ஞகம் - இறைவனது சடைமுடி, பிறை, அவனது தலைக்கோலமாகும். திறவு - திறத்தல், வெளிப்படை, தெளிவு. இறவு - முடிவு; இறுதி. இறுதி யென்பதற்கு அபாயம் எனவுங் கொள்க.*

**542.** பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா றடியனேற் கருளிப்
பூசனை உகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே
தேசுடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
ஈசனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 7

*__உரை :-__ மும்மலமாகிய கட்டுக்களின் மூலத்தைக் களையும் பழம் பொருளானவனே, அன்பு செய்யும் வகையை அடியேனுக்கருள்செய்து, எனது வழிபாட்டை விருப்புடன் ஏற்று, என துள்ளத்துட் புகுந்து அழகிய திருவடிகளைக் காட்டிய மெய்ப் பொருளே, இயற்கை ஒளியுடைய விளக்கே, வளமிக்க கதிர்வீசும் ஒளிவடிவானவனே, நிலைத்த செல்வமே, சிவபெருமானே, ஆண்டவனே, உன்னை உறுதியாகப் பற்றினேன், இனி நீ எங்கெழுந் தருளிச் செல்வது?*

*குறிப்பு :- பழம் பொருள் என்பதற்குப் பழைய உபாயம் என்றலு முண்டு. அதாவது ஞானத்தைப் பற்றி நிற்றல். தேசுடை விளக்கே*

*என்றது இறைவனது தனி நிலையையுஞ், செழுஞ்சுடர் மூர்த்தி என்பது அவனது பல அருள் வடிவங்களையுங் குறிக்கும்.*

**543.** அத்தனே அண்டர் அண்டமாய் நின்ற
ஆதியே யாதும் ஈறில்லாச்
சித்தனே பத்தர் சிக்கெனப் பிடித்த
செல்வமே சிவபெரு மானே
பித்தனே எல்லா உயிருமாய்த் தழைத்துப்
பிழைத்தவை அல்லையாய் நிற்கும்
எத்தனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. **8**

***உரை :-*** *அப்பனே, விண்ணவர்க்கு ஓராதாரமாய் நின்ற முதல்வனே, சற்று முடிவில்லாத திருவிளையாட்டுடையவனே, அல்லது ஞானவடிவனே, அன்பர்கள் உறுதியாகப் பற்றிய நிலைத்த செல்வமே, சிவபெருமானே, அன்பர்பால் விருப்புடையவனே, எல்லா வுயிர்களோடும் கலந்து அவையேயாய், அவை உண்டாகி, நிலைபெற்று, நிற்பதற்குக் காரணமாய்த் தான் அவையல்லாமல் வேறு பொருளாய், நிற்குந் தந்திரக்காரனே, உன்னை உறுதியாய்ப் பற்றினேன். இனி என்னை விட்டு, எங்கே எழுந்தருளிச் செல்வது?*

*குறிப்பு :- அண்டமாய் - ஆதாரமான உலகமாய் என்பர். யாதும் - ஒரு சிறிதும். பித்தன் - விருப்பமுடையவன். தழைத்து, பிழைத்து என்பவை, தழைப்பித்து, பிழைப்பித்து என்ற பொருளில் வந்தன.*

**544.** பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுன்னைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. **9**

***உரை :-*** *பாலினைக் குழந்தைக்குப் பசிக்குங் காலத்தே அது அழுமுன்னே அறிந்து ஊட்டுகின்ற தாயைப் பார்க்கிலும் மிகவுமிரங்கித் தீவினையேனுடைய உடம்பை உருகுவித்து, உள்ளத்தே*

*அறவொளியை வளர்த்து வற்றுதலில்லாத பேரின்பமாகிய தேனைப் பொழிந்து இடந்தொறும் உடன் திரிந்த செல்வமே! சிவபெருமானே! உன்னை யான் இடைவிடாது உறுதியாகப் பற்றினேன். இனி என்னை விட்டு நீ எங்கெழுந்தருளிச் செல்வது?*

***குறிப்பு :-*** *மறப்பு நினைப்புடைய தாயினும், மறப்பு நினைப் பில்லாது எப்போதும் உதவும் கடவுளது கருணை பெரிதாதலின், சாலப் பரிந்து என்றார். ஊனினை உருக்கி என்பதற்குப் பிறவியை ஒழித்து என்று முரைப்பர். புறம் - இடம். சென்ற இடமெல்லாம் உடன் நின்றுத வுதலின், 'புறம், புறந்திரிந்த' என்றார்.*

**545.** புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி எளியையாய் ஆண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காந்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதீ
இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 10

***உரை :-*** *தசையாலாகிய என் சிற்றுடம்பு மயிர்க் கால்கள் தோறும் நெகிழ்ச்சி யடையுமாறு அதனைப் பொன்னினாலாகிய பெரிய கோவிலாகக் கருதி அதன்கண் எழுந்தருளி, என் எலும்பை எல்லா முருகுவித்து எனக்கு எளிதில் வெளிப்படுபவனாகி என்னை யாட்கொண்ட ஆண்டவனே! குற்றமில்லாத மாணிக்கமே! பிறப்பு, இறப்பு, வாழ்வின் துன்பங்கள், அறியாமை என்னுமிவற்றின் சார்புகள் எல்லாவற்றையு மொழித்த நல்ல ஒளி வடிவனே! பேரின்பமானவனே! உன்னை உறுதியாகப் பற்றினேன். இனி நீ எங்கெழுந்தருளிச் செல்வது?*

***குறிப்பு :-*** *யாக்கை என்பதைக் கோயிலா என்பதனோடு முடிக்க. துன்பமே என்பதில் ஏகாரம் எண்ணுப் பொருளில் வந்தது.*

***திருச்சிற்றம்பலம்.***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 38. திருவேசறவு

*வாதவூரடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்து இறைவன் தமக்காக நரிகளையெல்லாம் குதிரையாக்கித் தாமும் குதிரைவீரனாக எழுந்தருளி ஆட்கொண்டவிதத்தை எண்ணியெண்ணி ஏசறுகின்றார்.*

*ஏசறவு என்பது விருப்பம், தோத்திரம், துக்கம் என்ற பல பொருள் உடையது. விரும்பியதொன்றனை அடைய நெடுநாள் முயன்று வருந்தியவன் 'வேசாறிப்போயிற்று' 'வேசாடிப்போயிற்று' என்றலும், அலைந்து களைத்தவன் 'வேசாடிவந்தேன்' என்றலும் உலகியலில் வழங்கக் காண்கிறோம். ஏசறவு அல்லது வேசறவு என்ற சொல், விருப்பங் காரணமாக விளைந்த துக்கத்தை அறிவிப்பதாதல் தெளிவு. ஆகவே, திருவேசறவு என்னும் இப்பகுதி விருப்பத்தையும் அது கிடைக்கத் தாழ்க்கின்றமையால் விளையும் வருத்தத்தையும் உணர்த்துதலின் இப்பெயர் பெற்றது. திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய திருவாரூர்த் திருவிருத்தத்தில் 'ஈசனையே நினைந்து ஏசறுவேனுக்கும் உண்டுகொலோ' எனவும், திருவாலவாய்த்திருநேரிசையில் 'என்பொனே ஈசா என்றென்று ஏத்தி நான் ஏசற்றேனுக்கு' எனவும் வரும் பகுதிகளைக்கொண்டு இச்சொல் ஏசறவு எனவே வழங்கியமையும், அதுவே உலகியலில் வேசறுதலாயிற்று எனவும் துணியலாம்.*

*இப்பதிகம், இறைவன் வலியவந்தாட்கொண்டதும், திருவடி காட்டியதும் முதலான ஆட்கொண்டமுறைகளை அறிவித்து, அவன் அருளிய சிறப்புக்களைத் தெரிவித்து, தமது விருப்பமும் உறுபயனும் உரைக்கிறது. பழையவுரை, 'பாசமதறு திருவேசறவு பத்தெட்டனை நீங்காச் சுட்டறிவொழிதல்' என்ற அகத்தியச்சூத்திரத்தை எடுத்துக்காட்டி, தன்னிழப்பதனை அருளால் சாதித்தது உரைத்தல் என்னும்.*

--------

***சுட்டறிவு ஒழித்தல்***

***கொச்சகக் கலிப்பா***

***திருச்சிற்றம்பலம்***

**546. இரும்புதரு மனத்தேனை ஈர்த்தீர்த்தென் என்புருக்கிக்**
**கரும்புதரு சுவைஎனக்குக் காட்டினைஉன் கழலிணைகள்**

ஒருங்குதிரை உலவுசடை உடையானே நரிகளெல்லாம்
பெருங்குதிரை ஆக்கியவா றன்றேஉன் பேரருளே. 1

***உரைநடை :-*** *இரண்டாமடியில் கழலிணைகள் கரும்பு தரு சுவை காட்டினை யென மாற்றுக. மூன்றாமடியை முதலிற் கொள்க.*

***உரை :-*** *கங்கையில் அடங்கிய அலைகள் உலவுகின்ற சடையினை யுடையவனே! இரும்பின் தன்மையைப் பயக்கும் உள்ள முடையேனை இழுத்து இழுத்து எலும்பினை உருகுவித்து, நினது திருவடிகள் இரண்டின், கரும்பின் சுவைபோன்ற இனிமையை எனக்குக் காண்பித்தருளினை, நரிகள் எல்லாவற்றையும் பெரிய குதிரைகளாக்கிய வகை உனது பேரருளினா லாயதன்றோ.*

*தகாத நரியைத் தகுதி வாய்ந்த பரியாக்கியதுபோல, கனியாத மனத்தைக் கனியவைத்தாய் என்பதாம்.*

*வெளியில் ஓடிப்போகும் குழந்தையைத் தாய் அடிக்கடி இழுத்தணைப்பதுபோல அடியேன் புறம்புறந்திரியும் இயல்பின னாதலின், என்னைப் புறம்போகவிடாது அடிக்கடி இழுத்துத் தன் திருவடிக்கண் பற்றச்செய்தான் என்பார் 'ஈர்த்து ஈர்த்து' என்றார்.*

*இறைவன் செய்த மாயம், இரும்புதரு மனத்தை இளகச் செய்தது மட்டுமன்றி உணருந்தன்மையே இல்லாத எலும்பையும் உருகச் செய்தனன் என்பார் 'என்புருக்கி' என்றார்.*

*இங்ஙனம் அடியேன் பரிபாகமுற்றதற்குக் காரணம் உன் திருவடிகளை நீ காட்டக் கண்டேன்; அது கரும்பின் சுவை போல இனித்தது என்பதனை 'உன் கழலிணைகள் காட்டினை; கரும்புதரு சுவை எனக்குக் காட்டினை' என்பதனால் உணர்த்தினார். காட்டினை என்பதனை ஈரிடத்தும் ஒட்டுக.*

***குறிப்பு :-*** *இரும்பு - இரும்பின் தன்மை. எளிதில் உருகாமை. கங்கை சடையில் அடங்கினமையால், 'ஒருங்குதிரை' என்றார். ஒருங்கு - அடங்கு. அன்றே என்பதைப் 'பேரருள்' என்பதனோடு சேர்த்துப் பேரருளல்லவா, என்று கொள்க. அன்றே, என்பதை ஆக்கியவாறு என்பதனோ டியைந்து, அந்நாளில் ஆக்கியவாறு என்று முரைப்பர்.*

**547.** பண்ணார்ந்த மொழிமங்கை பங்காநின் ஆளானார்க்(கு)
உண்ணார்ந்த ஆரமுதே உடையானே அடியேனை
மண்ணார்ந்த பிறப்பறுத்திட் டாள்வாய்நீ வாஎன்னக்
கண்ணார உய்ந்தவா றன்றேஉன் கழல்கண்டே. 2

*__உரை :-__ பண் நிறைந்த சொல்லுடைய உமையம்மை பாகனே! உன் அடிமையானவர்கட்கு நுகர்வதற்குரிய நிறைந்த கிடைத்தற்கரிய அமுதமானவனே! முதல்வனே! மண்ணுலகிற் பொருந்திய என் பிறவிகளைத் தொலைத்து அடியேனை ஆண்டருள்பவனே! நீ என்னை வாவென்று சொல்ல, உன் திருவடிகளைக் கண்ணாரக் கண்டல்லவா நான் உய்ந்த முறை ஏற்பட்டது!*

*__குறிப்பு :-__ உண்ணார்ந்த - உண் + ஆர்ந்த, நுகரும்படி நிறைந்த, கண்ணார என்பதை உன் கழல் கண்டேனை என்பதனோடு முடிக்க. அன்றே - அன்றோ. உன் திருவடியைக் கண்டுதானே நான் உய்ந்தேன். நீ ஆண்டகாலத்திற் போலவே, இன்று முதல் திருவடியைக் காட்டவேண்டுமென்று குறிப்பித்தவாறு.*

**548.** ஆதமிலி யான்பிறப் பிறப்பென்னும் அருநரகில்
ஆர்தமரும் இன்றியே அழுந்துவேற்கு ஆ! ஆ! வென்
றோதம்(ம்)மலி நஞ்சுண்ட உடையானே அடியேற்குன்
பாதமலர் காட்டியவா றன்றேஎம் பரம்பரனே. **3**

*__உரைநடை :-__ எம்பரம்பரனே என்பதை முதலிற் கொள்க.*

*__உரை :-__ எமது மிக்க பெரியோனே! ஆதரவில்லாதேனாய்ப் பிறவி, சாவு என்கின்ற கடத்தற் கரிய நரகத்திலே உறவினர் யாதும் உதவுதற் கில்லாமலே அழுந்து மியல்புடையேனாகிய அடியேனுக்கு, ஐயோ வென்றிரங்கியருளிய, கடலிற் சீறியெழுந்த விடமுண்ட நாதனே! உன் திருவடிக் கமலங்களைக் காட்டிய விதம் என்னே!*

*__குறிப்பு :-__ ஆதம் - ஆதரவு. அழுந்து வேற்கு அடியேற்கு என்பதனோடு முடிக்க. ஓதம் - கடல். மலி - மிக்கெழுதல். அன்றே - அசை.*

**549.** பச்சைத்தால் அரவாட்டீ படர்சடையாய் பாதமலர்
உச்சத்தார் பெருமானே அடியேனை உய்யக்கொண்
டெச்சத்தார் சிறுதெய்வம் ஏத்தாதே அச்சோஎன்
சித்தத்தா றுய்ந்தவா றன்றேஉன் திறம்நினைந்தே. **4**

*__உரை :-__ பசிய நாவினையுடைய பாம்பினை ஆட்டுபவனே! விரிந்த சடையை யுடையானே! உனது திருவடித் தாமரையைத் தலையுச்சியிலுடைய பேரன்பரது தலைவனே! குறைவுகள் நிறைந்த*

*சிறு தெய்வங்களை வழிபடாமல், உனது தன்மையையே நினைந்து, அந்தோ என் நினைவின் முறைப்படியே அடியேனை நீ உய்யக் கொள்ள, நான் உய்திகூடிய முறைதான் என்னே?*

*பாதமலர் உச்சத்தார் - பாதமலரால் உச்சநிலையை அடைந்தவர்கள். அவர்கள் மெய்யடியார்கள். அடியார் சிவனே பரம்பொருள் என்பதனைச் சிவாகமங்களின் அறிவானும் ஆசாரிய உபதேசத்தானும் உணர்ந்து தெளிந்து என்றும் தமது உச்சியில் வைத்துத் தியானிப்பவர்கள் ஆதலின் அவர்கட்குத் தலைவனென்பார் 'பாதமலர் உச்சத்தார் பெருமானே' என்றார்.*

*உச்சத்தார் - உயர்ந்தோர் எனப் பொருள் கொண்டு, உயர்ந்தோர் திருப்பாதத்தைத் திருமுடியின்மேல் தரிக்கும் பெருமானே! எனக்கூறும் பழையவுரை.*

*உச்சத்தார் - வானமாகிய உச்சியிலுள்ள தேவர்கள் எனக் கொண்டு, பாதமலர் சூட்டிய தேவர்கட்குத் தேவனே எனலுமாம். பாதமலர் சூடாத தேவர்கள் தாமே பிரமமெனத் தருக்கி இறைவனுடைய முழுமுதற்றன்மையை உணர்ந்துய்யும் ஞானமில்லாதவர்கள் ஆதலின் அவர்களால் அவன் அறியப்படான் என்பதால் கூறியதாம். இது தேவர்களும் இறைவனை முதல்வனெனப் போற்றியுய்கின்றனர் எனத் தேவர்கள் நிலை கூறியது.*

*இம்மைப் பயன்கள் பலவற்றை வேண்டி, காளியும் வீரனும் சூரனும் முதலான சிறு தெய்வங்களை வழிபடுதல் உலகினர் இயல்பு. அங்ஙனம் யான் என் மனம்போன போக்கின்படி வழிபட்டுக் கெடாமல் இறைவன் உய்யக்கொண்டான் என்பார் 'என் சித்தத்தாறு, எச்சத்து ஆர் சிறு தெய்வம் ஏத்தாதே உய்யக்கொண்ட' என்றார். எச்சம் - குற்றம். ஆர் - பொருந்திய. உய்யக்கொள்ளலாவது உலகியற் பற்றைப் போக்கி, அதற்காக வழிபடும் சிறுதெய்வ வழிபாடு முத்திக்கு நெறியாகாமையையும் உணரப்பண்ணி, சிவஞான உபதேசம் செய்து உய்யக் கொண்டமை. உய்யக்கொண்ட எச்சத்தார் எனப் பெயரெச்சத்து அகரம் தொக்கதாகக் கொள்ளலாம். சிவ வழிபாடு ஒன்றே சிறந்த வழிபாடு.*

***குறிப்பு :-** தாள் - தால். தாலு - (வடமொழி) நாக்கு. தாள் என்பதை ஆட்டீ என்பதோ டியைத்து இளந் திருவடியுடைய பாம்பாட்டி என்பது முண்டு. இறைவன் பாம்பினைக் கச்சாக வுடையவன். திருப்புறம்பயத்தில் பாம்பாட்டுவானாக விடந்தீர்த்த கதை*

*முற்கூறப்பட்டது. தாள் - கால் - புற்று எனவும் கொள்வர். உய்யக் கொண்டு - உய்யக் கொள்ள. எச்சத்தார் - எச்சத்து + ஆர் - எச்சம் - குறை. ஆர் - நிறைந்த. சித்தத்தாறு - சித்தத்து + ஆறு - நினைவின் முறை. அது இறைவனொருவனையே நினைதலாகிய முறை.*

**550.** கற்றறியேன் கலைஞானம் கசிந்துருகேன் ஆயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிறுமாந் திருந்தேன்எம் பெருமானே அடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே. **5**

***உரை :-*** *ஞான நூல்களைப் படித்தறியேன்; உள்ளங் கனிந்துருக மாட்டேன். ஆயினும், உன்னையன்றி வேறு தெய்வம் எதனையும் அறியமாட்டேன். உனது திருவாக்கினியல்பினால், உனது நீண்ட கழல்களைச் சேர்ந்து இறுமாப்புற்றேன். எம்பெருமானே! நினது மாறில்லாத பொன்போன்ற அருள் அடியேனுக்கு நல்கியது பொன் இருக்கையை நாய்க்கிட்ட முறைபோலா மன்றோ?*

*திருவடி சார்தற்கேற்ற சிவாகம அறிவும், இடையீடில்லாத அன்பும் அடியேற்கு இல்லையாயினும், சிவமே பரம்பொருள்; அவன் ஒருவனே தியானிக்கத் தக்கவன் என்ற உறுதியுள்ள மட்டும் இருந்தது என்பார் 'கற்றறியேனாயிடினும் கசிந்து உருகேனாயிடினும் பிற தெய்வம் அறியேன்' என்றார். மற்று : அசைநிலை. அறியேன் என்றமையால் நீயே முதல்வன் என்பதை அறிவேன் என்றவாறாம்.*

*ஆயின், திருவடியைச் சாரும் உபாயம் யாங்ஙனம் உணர்ந்தனை? என வினவின், அடியேனைக் குருந்தடியில் குருவாக வந்து ஆட்கொண்டபோது தேவரீர் உபதேசமொழிகளைத் துணைக் கொண்டு திருவடியே புகல் என உணர்ந்து அதனைச் சார்ந்து யாரும் பெறாத இன்பம் பெற்றேன். யாம் பெற்றது யார் பெறுகிற்பார் என இறுமாந்திருந்தேன் என்றவாறாம்.*

*அடியேற்கு நின் பொன்னருள் (அருளியது) நாய்க்குப் பொற்றவிசு இடுமாறு அன்றே எனக்கூட்டிப் பொருள் காண்க.*

*இழிந்த நாய்க்குப் பொன்னாசனம் இட்டது போலாம் நீ எனக்குச் செய்த அருள் என்றவாறு. தவிசு - அம்பாரி என்பாருமுளர். யானைக்கிடுந்தவிசினை நாய்க்கு இட்டதுபோலாம் என்பது அவர் கருத்து.*

*குறிப்பு :- வாக்கு - இறைவன் உபதேசமொழி. எம்பெருமானே! என்பதை முதலிற் கொள்க.*

**551.** **பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு**
**நஞ்சாய துயர்கூர நடுங்குவேன் நின்னருளால்**
**உய்ஞ்சேன்எம் பெருமானே உடையானே அடியேனை**
**அஞ்சேலென் றாண்டவா றன்றேஅம் பலத்தமுதே.** **6**

***உரைநடை*** *:- எம்பெருமானே, உடையானே, அம்பலத் தமுதே என்பவற்றை முதலிற் கொள்க.*

*பெருமானே! மாதர் கடைக்கண்ணால் வருந்தும் என்னை அஞ்சாதே என்று ஆட்கொண்டவாறு வியப்பான செயலன்றே என்றார் என்பது கருத்து.*

*தகுதியற்ற என்னை ஆட்கொண்டது உன்னுடைய பெருங்கருணைக்கு எடுத்துக்காட்டு என்றவாறாம்.*

*பஞ்சு ஆய அடி மடவார் - செம்பஞ்சு பூசியதால் சிவப்பான அடிகளையுடைய பெண்கள் எனலும் ஆம். அவர்களுடைய அடியின் அழகும் மென்மையும் இளமையும் என்னை வசப்படுத்த, அவர்கள் வீசிய கடைக்கண் பார்வையால் துன்புற்றேன்; அத்துன்பமோ நஞ்சு போல மிகக்கொடியது என்றவாறு. நஞ்சின் வேகந்தாக்கிய தேவர்கள் உடல் ஒளி குன்றினர்; வலியிழந்தனர். அதுபோல மடவார்கண் தாக்கின் தேசு கெட்டு அறிவு மழுங்கித் துன்பம் மிகுதலின் 'நஞ்சாய துயர்' என்றார். கூர - மிக. உய்ஞ்சேன்; உய்ந்தேன் என்பதன் மரூஉ.*

***உரை*** *:- எமது பெரியோனே! நாதனே! சிற்சபையிலாடும் அருமருந்தே! பஞ்சின் தன்மையையுடைய பாதங்களையுடைய மாதரது கடைக்கண் பார்வையால், இடைஞ்சற்பட்டு, நஞ்சு போன்ற துன்பம் மிகுதலினால், (அஞ்சி) நடுங்கு மியல்பினனாகிய நான், உனது இனிய அருளாற் பிழைத்தேன். அடியேனை நீ அஞ்சாதே யென்று ஆட் கொண்ட வகைதான் என்னே?*

*குறிப்பு :- பஞ்சாய என்பதற்குச் 'செம்பஞ்சூட்டிய' என்றுமுரைப்பர். கூர - மிக. நஞ்சாய - நஞ்சுத்தன்மை யுள்ள.*

**552.** **என்பாலைப் பிறப்பறுத்திங் கிமையவர்க்கும் அரியவொண்ணாத்**
**தென்பாலைத் திருப்பெருந் துறையுறையுஞ் சிவபெருமான்**

அன்பால்நீ அகம்நெகவே புகுந்தருளி ஆட்கொண்ட(து)
என்பாலே நோக்கியவா றன்றேஎம் பெருமானே. 7

***உரைநடை :-*** *'எம்பெருமானே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *எமது தலைவனே! இவ்வுலகத்தே என்மாட்டிருந்த பிறவியைக் களைந்து, வானவருமறிய வொண்ணாத, தென்திசையி லுள்ள திருப்பெருந்துறையிற் றங்கியருளுஞ் சிவபெருமானாகிய நீ, என் மீது வைத்த தயவால், உள்ளம் நெகிழும்படி அதனுட் போந்தருளி ஆண்டுகொண்டது, நீ என்னிடமே திருநோக்கஞ் செலுத்திய முறை பற்றி யல்லவா?*

***குறிப்பு :-*** *பாலை - இடத்தே, ஐ, சாரியை. அன்பால் - தயவால்; அருளால்.*

**553. மூத்தானே மூவாத முதலானே முடிவில்லா**
**ஓத்தானே பொருளானே உண்மையுமாய் இன்மையுமாய்ப்**
**பூத்தானே புகுந்திங்குப் புரள்வேனைக் கருணையினால்**
**பேர்த்தேநீ ஆண்டவா றன்றேஎம் பெருமானே. 8**

***உரை :-*** *(எமது தலைவனே! எல்லாவற்றிக்கும் முற்பட்டமையால்) மூத்தவனே! மூப்பு எய்தாத ஆதியே! எல்லையற்ற அருள் நூல் வடிவானவனே! அவற்றின் பொருளானவனே! மெய்யர்க்கு மெய்யாயும் அல்லாதார்க் கல்லாதானாகியும் தோன்றினவனே! இவ்வுலகிலே போந்து நின்று உலக வாழ்விற் புரள்கின்ற என்னைத் திருவருளினால் நீ அந்நிலை நின்று நீக்கி ஆண்டமுறைதான் என்னே?*

*உலகில் காணப்பெறும் பொருள்களுள் காலம் ஒன்றே எல்லாவற்றையும் அளப்பதாய், தான் அளக்கப்படாததாய் நெடிது இடையறாது நிற்பது. அதற்கும் மூத்தவன் இறைவன் என்பது. காலங் கடந்தவன் என்றவாறாம்.*

*அங்ஙனம் மூத்திருப்பினும், மூப்பிற்கு அடையாளமான நரை திரை முதலிய தீமைகள் தீண்டப்பெறாத முதற்பொருள் என்பது 'மூவாத முதலானே' என்பதாலுணர்த்தப்பெற்றது. அதாவது எல்லாருக்கும் எல்லாவற்றிற்கும் மூத்தவனாக இருந்தும் அருளுடலால் மூப்படையாதவனே என்றதாம்.*

*இறைவனைப்போல அவனருளிய ஞான வடிவான வேதமும் முடிவற்றதாகலின் 'முடிவில்லா ஓத்தானே' என்றார். ஓத்து - ஞானம்.*

*பொருள் - வேதங்களிற் சொல்லப்பெறும் ஞானவடிவான பொருள்.*

*உண்மை - என்றும் அழியாது நிலைத்த பொருள். அது சத்து. இன்மை - தோன்றி நின்று அழிதற்பாலனவாகிய நிலையற்ற பொருள். அவை சடப்பொருள். இவ்விருவகையன்றி உலகிற்பொருள்கள் யாதொன்றும் இல்லை ஆதலின் இவ்விரண்டாகவும் காட்சியளிப்பவன் இறைவன் என்பார் 'உண்மையுமாய் இன்மையுமாய்ப் பூத்தானே' என்றார்.*

***குறிப்பு :-** ஓத்து - ஓதப்படுவது; நூல். ஓத்தானே, பொருளானே, என்பதற்குச் சொல்லுலகமும் பொருளுலகமு மானவனே யென்று முரைப்ப; பேர்த்தே, மீண்டுமெனவு முரைப்ப.*

**554.** **மருவினிய மலர்ப்பாதம் மனத்தில்வளர்ந் துள்ளுருகத்**
**தெருவுதொறும் மிகஅலறிச் சிவபெருமா னென்றேத்திப்**
**பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமா**
**றருளெனக்கிங் கிடைமருதே இடங்கொண்ட அம்மானே.** **9**

***உரைநடை :-** இடைமருதே யிடங்கொண்ட அம்மானே என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-** திருவிடைமருதைத் தனது திருப்பதியாகக் கொண்ட எந்தையே! பொருந்துதற்கினிய உனது திருவடி மலர்கள் எனது உள்ளத்தில் நிலவி யோங்கி, உள்ளமுருகவும், தெருவெல்லாம் மிகவும் ஓலமிட்டுச் சிவபெருமான் என்றியம்பி வழிபட்டு நின்னருளைப் பருகவும், உனது மேலான திருவருட் பெருங்கடலில் மூழ்குதலாகிய விதத்தை இவ்வுலகத்திலே நீ எனக்கு அருள்செய்க.*

*மகாலிங்கப் பெருமானே! திருவடிகள் என் மனத்தில் வளர்தலால் என் மனம் உருக, தெருக்கடோறும் சிவசிவ என்று அலறிக்கொண்டு புகழ்ந்து, பருகக் கிடைத்த நின் அருட்கடலில் மூழ்கும்வண்ணம் அருள் என்று வேண்டியவாறாம்.*

*எல்லா உயிர்களும் தம் வினைப்போகம் அற்ற காலத்து, சிவனருளே கண்ணாக இருந்து கண்டு அடைதற்குரியதாக மென்மையும் மணமும் உடையதாதலின் இறைவன் திருவடிகளை 'மருவ இனிய மலர்ப்பாதம்' என்றார்.*

*இதுவரை பரங்கருணை எனக்குப் பருகக் கிடைத்ததே அன்றித் தோயக் கிடைக்கவில்லை. அதற்குக் காரணம் நின் கருணைக் குறைவு அன்று. என் பரிபாகக் குறைவே. இனி, எனக்குப் பரிபாகத்தை முற்றுவித்து, கருணைக்கடலிலேயே மூழ்கித் திளைக்கும்படிச்செய் என்று வேண்டிக்கொள்கின்றார்; 'பரங்கருணைத் தடங்கடலில் படிவு ஆமாறு அருள்' என்று.*

***குறிப்பு :-*** *உள்ளுருக என்பதற்கு, உயிர்போதங் கெட எனவு முரைப்பர். பருகிய - பருக, செய்யிய வென்னும் வினையெச்சம்.*

**555. நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்**
**தேனாய்இன் அமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்**
**தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்**
**ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே. 10**

***உரைநடை :-*** *இறுதியடியை மூன்றாம் அடியில் 'புகுந்து' என்பதனை அடுத்தமைக்க.*

***உரை :-*** *நானோ, (வீடடைதற்குரிய) நற்றவஞ் செய்தேன். (வீடு விரும்புவார் புகலும் நுட்பவைந் தெழுத்தாய) சிவாயநம வென்பதைச் சொல்லப் பெற்றேன். தேன்போலவும், இனிய பாலமுதம் போலவும் இனிமை பயக்குஞ் சிவபெருமான் தானே வலிதில் எழுந்தருளிவந்து என்னுடைய மனதிற் புகுந்தருளிப் புலால் நிறைந்த உடம்பில் உயிர் வாழ்தலைக் கண்டித்து அதனை வெறுத்திடும்படி அடியேனுக்கு அருள் செய்தான்.*

***குறிப்பு :-*** *நமசிவாய வென்பது தூல பஞ்சாட்சரம்; சிவாயநம வென்பது சூட்சும பஞ்சாட்சரம்.*

*திருவாரூரில் அருளிய*

## 39. திருப்புலம்பல்

*குருநாதன் ஆணையின்வண்ணம் தில்லையேநோக்கி எழுந்தருளுகின்ற திருவாதவூரடிகள், இடையிலே திருவாரூரை அடைந்து, தமக்குத் திருவடிகாட்டும் கருணை ணத் திறம் கால நீட்டித்தலைக் கருதித் திருப்புலம்பலாகிய இதனை அருளிச் செய்கின்றார்கள்.*

*'புலம்பே தனிமை' என்பது தொல்காப்பியச் சூத்திரம். தனக்கு உறுதுணையாவன இவை என்று எண்ணியவைகள் தம்மைவிட்டு விலகுதலால் விளைந்த தனிமை. இது தனிமையால், விளைந்த வாய் விட்டுப் புலம்புவதாகிய செயலை உணர்த்திற்று.*

*உலகியலில் காதலிக்கப்பட்டதொரு பொருள் கைநழுவிப் போவதால் புலம்பு விளைவதைப் பார்க்கிறோம். அப்புலம்பலின் பயன் வெறுந்துன்ப நுகர்ச்சியாய் முடியும். நமக்குச் சார்பான மலமாயை கன்மங்களை விட்டுப் பிரிதலினால் விளைகின்ற தனிமையின் பயன் பேரின்பமாக விளையும். இங்ஙனம் அடியேன் பிரிந்துய்ய வழிசெய்த திருவருளை நினைந்து, அதனோடு இடைவிடாது உறையும் சிவபோகத்தை விரும்பிக் களிப்புரை கூறச்செய்யும். ஆகவே இப்புலம்பல் சிவானந்த முதிர்ச்சிவேண்டிக் கூறிய களிப்புரையாம் என்க.*

--------

***சிவானந்த முதிர்வு***

***கொச்சகக் கலிப்பா***

*திருச்சிற்றம்பலம்*

**556. பூங்கமலத் தயனொடுமால் அறியாத நெறியானே**
**கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறாவெண் நீறாடி**
**ஓங்கெயில்சூழ் திருவாரூர் உடையானே அடியேன்நின்**
**பூங்கழல்கள் அவையல்லா தெவையாதும் புகழேனே. 1**

***உரை :-*** ***அழகிய தாமரை மலரில் தங்கும் நான்முகனுந் திருமாலுமறியாத ஞானநெறியால் அடையப்படுபவனே! கோங்கம் பூவையொத்த நகிலையுடைய உமையம்மை பாகா! திருவெண்ணீறு முற்றிலும் பூசப்பெற்றவனே! உயர்ந்த மதில் சூழ்ந்த திருவாரூரினை இடமாக வுடையானே! அடியேன் உன்னுடைய கழலணிந்த***

*திருவடிகளிரண்டினையு மல்லாமல் வேறெவற்றையும் ஒரு சிறிதும் புகழ மாட்டேன்.*

***குறிப்பு*** *:- திருமாலுக்கும் பிரமனுக்கும் கடவுளை யறியும் சிவஞானம் ஏற்பட்டிருக்க வேண்டுமென்ற கட்டாயமில்லாமையால் அவர்கள் அறியாத நெறியான், என்றார். கோங்கி னரும்பை நகிலுக் குவமையாகக் கூறுவர். திரு - இலக்குமி. ஆர் - பூமி.*

**557. சடையானே தழலாடீ தயங்குமூ விலைச்சூலப்**
**படையானே பரஞ்சோதீ பசுபதீ மழவெள்ளை**
**விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையாய் அடியேன்நான்**
**உடையானே உனையல்லா துறுதுணைமற் றறியேனே. 2**

***உரை*** *:- சடையவனே! தழலின்கண் கூத்தியற்று பவனே! மூன்று இலைபோன்ற கிளைகளை உடைய சூலாயுத முடையவனே! மேலான அறிவொளியே! உயிர்களுக்குத் தலைவனே! வெண்ணிறமுடைய இளங்காளையை வாகனமாக வுடையவனே! எங்கும் பரவிய சோலைகள் சூழ்ந்த திருப்பெருந்துறையானே! முதல்வனே! உன்னை யல்லால் வேறு உற்ற துணையை நானறிகிலேன்.*

***குறிப்பு*** *:- அக்கினியின் இதயத்தி லிருப்பவன் சிவபிரானாகலின், தழலாடீ என்றார். தயங்கு - விளங்கு. பசு - கட்டப்பட்ட உயிர்கள். உறுதுணை - இடருற்றகாலைத் துணை, பெரிய துணை யெனவுங் கூறுவர்.*

**558. உற்றாரை யான் வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்**
**கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையுங்**
**குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாஉன் குரைகழற்கே**
**கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. 3**

***உரை*** *:- திருக்குற்றாலத்திலே விரும்பி வீற்றிருக்குங் கூத்தப் பெருமானே! உறவினரை யான் வேண்டுவனல்லேன், ஊரும், பேரும் எனக்கு வேண்டுவனல்ல. (திருவடிஞானம் பெறாத) கலைஞான முடையாரை யான் விரும்பேன். கற்க வேண்டியனவும் இனிப் போதுமானவையே. கழல்கள் ஒலிக்கின்ற உனது திருவடிக்கே கன்றை உடைய பசுவின் மனம்போலக் கனிந்து உருகுவதையே யான் உன் பால் வேண்டுகின்றேன்.*

*உற்றார், ஊர், பேர், படித்தவர்கள், படிப்பு ஒன்றுமே வேண்டாம்; உன் திருவடியைப் பற்றிநின்று மனங்கசியும் வாய்ப்*

*பொன்றளித்தால் அதுவே போதும் என்று வேண்டுகின்றார்.*

*உற்றார் - அண்ணன் தம்பி மாமன் மாமி முதலிய சுற்றத்தார். அவர்களை விரும்பின் அவ்விருப்பம் மேலும் பாசகன்மங்களுக்கு ஏதுவாய்ப் பிறவிக்கு வாயிலாதலின் வேண்டேன் என்றார். முன்னரும் 'சுற்றமென்னும் தொல்பசுக் குழாங்கள், பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்' என உற்றாரால் விளையும் ஊறுணர்த்தினமை காண்க. குரைகழல் - ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த திருவடி.*

*முற்றத்துறந்த துறவிகளுக்குங்கூட யான் பிறந்த ஊர் எனின் தன்னையறியாத விருப்பம் விளைவதைக் காண்கிறோம் ஆதலின், அதுவும் பற்றிற்கு ஏதுவாதலின் அதனையும் வெறுக்கின்றார். பேர் - புகழுமாம்.*

*கற்றார் தம் கல்விவன்மையால் நெறியல்லா நெறிகளையும் நன்னெறியெனச் சாதிப்பவர்கள் ஆகையால் அவர்களையும் வெறுத்தார். கற்றார் என்றது ஈண்டுக் கருவிநூலும் உலக நூலுமாகிய பாசநூல்களை ஓதியவர்களை என்க. சைவநூல் ஓதியவர்களை வெறுத்திலர் என்க. கற்பனவும் இனி அமையும் - கல்வி மேன்மேலும் குதர்க்க, விதர்க்க ஞானத்தை விளைவித்தலின் அதனையும் அமையும் என்றார்.*

***குறிப்பு :- கற்பன வெல்லாம், சுட்டறி வுடையார்க்கே பயன்படுவன. அகண்ட அறிவுடையார்க்குச் சுட்டறிவினாற் பெறுங் கலைஞானம் புதிது புதிதாக வேண்டியதின்மையின் கற்பனவும் இனியமையுமென்றார். கற்றா - கன்று + ஆ - கன்றினையுடைய பசு. பசு கன்றின்பாலன்புடைமையாற் பால் சுரத்தலின், அதனை எடுத்து விதந்தனர்.***

***திருச்சிற்றம்பலம்.***

*தில்லையில் அருளிய*

## 40. குலாப்பத்து

*வாதவூரண்ணல், தில்லைக்கு எழுந்தருளியபொழுது, திருத்தில்லையின் விளக்கத்தையும், பெருமானது திருவோலக்கச் சிறப்பையும் கண்டு, சிவாநுபவம் இடையீடுபடாமையை உணர்ந்து உளங் கனிந்து இப்பத்தினை அருளிச் செய்கின்றார்கள்.*

*குலாவுகின்ற பத்துப் பாடல்களைக்கொண்ட பகுதி என்பது இதன்பொருள். சிவனடியையன்றிச் சிந்தைசெய்யேன் துதியேன் என்ற உறுதிபூண்ட அடிகள், அவனலாது துணைமற்றின்மையை ஓர்ந்து, அவனடிக்கே கற்றாவின்மனம்போலக் கசிந்துருகவேண்டி நின்று, அங்ஙனம் பெற்று அவனை அடைந்து குலாவுகின்ற நிலையை உணர்த்துதலின் குலாப்பத்து எனப் பெயர்பெற்றது. தலைவனைத் தனித்துநேர்ந்த தலைவி இடையீடின்மையையுணர்ந்து தலைவனோடு கூடிக்குலாவுவதுபோலச் சிவானந்தம் முதிர்ந்தநிலையில் தில்லையாண்டானோடு குலாவுதல் கொண்டேன் என்கின்றார் என்க. குலாவுதல் - விளங்குதல் என்பாரும் உளர்.*

*"பாரம்பரியமாந் திருக்குலாப் பத்து, அநுபவம் இடையீடு படாமை" என்பது அகத்தியச் சூத்திரம். இதன் பொழிப்பாகப் பழையவுரை கூறுவது, 'முற்பதிகத் திருவருளன்பை உகந்தே யான், ஆனந்தம்பெறல் இன்றோ அன்றோ? நடனங்கண்டு நல்விழி பெற்றமை இன்றோ? என்றும் உண்டு என்று உருகி அருள்வதான சிவாநுபூதி என்னும். இதன் கருத்து, திருவருளன்பை விரும்பிய யான் சிவானந்தம் பெற்றேனோ இல்லையோ? நடனங்கண்டு விழி பெற்ற பயனைப்பெற்றேன்; அது என்றுமுள்ள மகிழ்ச்சி என்பது.*

*திருவாசகத் திருவுள்ளக்கிடை, குலாப்பத்தாவன அநுபவம் இடையீடுபடாமை; அதாவது தன் செயலறநிற்றலென்னும், இடையிடை விட்டுவிட்டுப் பற்றாமல் என்றும் பற்றி நிற்பதால் ஒருபடித்தான இன்ப வெள்ளத்தில் திளைத்துக் களிப்புமிக்கு இன்பத்திலிருத்திய தலைவனோடு குலாவும்பத்து இது எனல் தெளிக.*

*பழையபுராணம், "விரும்பு சிவானந்த வெள்ளம் விழைந்து தில்லை நாயகனை மிகக்கொண்டாடி, நிரம்பு மனக்களி மிகுத்த இறுமாப்பே குலாப்பத்தாய் நிகழ்த்த லாமே" என்பது.*

*இதனால் குலாவுதல் இறைவனைக் கொண்டாடி அதனால்*

*விளையும் மனக்களிப்பால் உண்டாம் இறுமாப்பு என்பது புராண ஆசிரியர் கருத்தாதல் காண்க.*

--------

***அநுபவம் இடையீடுபடாமை***

***கொச்சகக் கலிப்பா***

*திருச்சிற்றம்பலம்*

**559. ஓடுங் கவந்தியுமே உறவென்றிட் டுள்கசிந்து**
**தேடும் பொருளுஞ் சிவன்கழலே எனத்தெளிந்து**
**கூடும் உயிருங் குமண்டையிடக் குனித்தடியேன்**
**ஆடுங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 1**

***உரைநடை :-*** *குலாத்தில்லை யாண்டானைக் கொண்டு என்பதைத் தெளிந்து என்றதன் பின் வைக்க.*

***உரை :-*** *அடியேன் திருவோடுங் கோவணமுமே பற்றாவன என்று நினைந்து உள்ளமுருகித் தேடுகின்ற பொருள் சிவனது திருவடியே எனத் தேறி விளங்குகின்ற தில்லை யாண்டவனைப் பற்றிக் கொண்டு உயிரும் அதன் கூடாகிய உடம்பும் ஆனந்தத்தால் நிறைந்து தள்ளாட யானும் வளைந்து கூத்தாடுவேன்.*

*அகப்பற்று புறப்பற்றெலாம் ஒழித்து, எம்மால் தேடப்படும் பொருள் சிவன் சேவடியே எனத் தெளிந்து, தில்லைக் கூத்தனோடு குலாவுதலைக் கொண்டேன் அன்றோ என்பது கருத்து.*

*அயலார் இடுகின்ற பிச்சையை ஏற்று உண்ணத் திருவோடும், பிறர்கண்டு நாணாதிருக்கக் கோவணமுமன்றி வேறு எதனையும் எவரையும் உறவாகக் கொண்டிலேன் என்பார் 'ஓடும் கவந்தியுமே உறவென்றிட்டு' என்றார்.*

*தேடும் பொருள் - நம்மால் தேடப்படுகின்ற பொருள். தெளிந்து - ஆசாரிய உபதேசத்தால் தேறி.*

*கூடு - உடல். உயிர் இருத்தற்கு உரிய கூடுபோல்வதாகலின் அதனை உவமவாகுபெயராகக் கூடு என்றார்.*

*குமண்டையிட - கூத்தாட. குமண்டை - ஒருவகைக் கூத்து. ஈண்டுக் கூத்து என்னும் பொதுமையுணர்த்தி வந்தது. இடக்கொண்டு அன்றே எனக் கூட்டுக.*

***குறிப்பு :-*** *குமண்டையிட - நிறைவினால் அசைந்திட; தெவிட்ட.*

560. துடியேர் இடுகிடைத் தூய்மொழியார் தோள்நசையால்
செடியேறு தீமைகள் எத்தனையுஞ் செய்திடினும்
முடியேன் பிறவேன் எனைத்தனதாள் முயங்குவித்த
அடியேன் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 2

***உரைநடை :-*** *எனைத்தனதாள் முயங்குவித்த குலாத்தில்லை யாண்டானை அடியேன் கொண்டன்று, துடியேரிடு... பிறவேன்.*

***உரை :-*** *என்னைத் தனது திருவடியின் கண் புணர்வித்த விளக்கம் மிக்க தில்லையாண்டவனை அடியேன் பற்றினேன். ஆதலால் உடுக்கைபோல அழகிய நுணுகிய இடையை உடைய, புனிதச் சொல்லுடைய பெண்டிர் தோள்கள்பாலுள்ள விருப்பத்தால் பாவ மிகுதற்கு இடமாகிய தீய செயல்கள் எத்தனை செய்து விட்டாலும் நான் இறக்கமாட்டேன்; பிறக்கவுமாட்டேன்.*

*தில்லைநாதனோடு குலாவுதல் கொண்டேனாதலின் எனக்கு மரணமும் பிறப்பும் இல்லை; அழியாப்பதம் கிட்டியது என்பது கருத்து.*

*மாதர்களிடம் ஆடவர்க்கு விருப்பம் விளைக்குங் கருவிகளாக விளங்குவன இடையும் மொழியும் தோள்களும் ஆம். அவற்றில் வைத்த ஆசையால் மக்கள் செய்யும் தீங்கு எண்ணிலாதன. ஆகவே ஆடவர்களிற் புறம்பானவனா யான்; யானும் செய்தேன் ஆனாலும், தீமைகளால் விளையும் பிறப்பு இறப்புக்கள் எனக்கு இல்லை; எனக்கு என்றும் இன்பமேவும் முத்தியே என்றார்.*

*இத்திருப்பாடல், தில்லைநாதனைக் குலாவுதல்கொண்டேன் ஆதலால் அடியேன் எத்துணைத் தீமைகள் செய்யினும் எனக்குப் பிறப்பு இறப்பு இல்லை எனத் தெரிவித்தலால் அநுபவம் இடையீடு படாமையை அறிவித்தவாறு காண்க.*

***குறிப்பு :-*** *ஞானிகளுக்கு நேரும் பிராரத்த வினைகளை இறைவன் ஏற்றுக்கொள்வானாதலின் தனக்கு மேற் பிறவிக்கு இடமில்லை யென்பது குறிப்பித்தார்.*

561. என்புள் ளுருக்கி இருவினையை ஈடழித்துத்
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து
முன்புள்ள வற்றை முழுதழிய உள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 3

***உரை :-*** *எலும்புகளை உள்ளுருகச் செய்து, இருவினைகளின்*

*வலியினை ஒழித்து, பிறவித் துன்பத்தை நீக்கி, உடன்பாடாகவும் எதிர்மறையாகவுமுள்ள இருவகைப் பற்றுக்களையுங் களைந்து, புனிதஞ் செய்து, எதிர்காலத்தில் வரக்கூடிய வினைப் பயன்களை முழுவதுமளித்தற் பொருட்டு என் நெஞ்சத்தே எழுந்தருளிய அன்பு வடிவான விளக்கமிக்க தில்லை யாண்டவனை யான் பற்றிக் கொண்டேன்.*

*உருக்கி, அழித்து, களைந்து, செய்து, அழிய உள்புகுந்த தில்லையாண்டானைக் குலாக்கொண்டடன்றே என முடிக்க.*

*இருவினையையீடழித்தலாவது மிகாதவாறு அருள்செய்தல். வன்மையுடன் தாக்காத வண்ணம் மெலிவித்தலுமாம். இருவினை ஆகாமிய சஞ்சிதங்கள் எனலுமாம்.*

*துவந்துவம் - பற்று. அவை ஆன்மாவை அநாதியே பற்றியதாகிய மூலமலமும், ஆகந்துகமாய் அந்த மலத்தைப் பரிபாகப்படுத்தப் புணர்க்கப்பெற்ற மாயாமலமும், அதன் காரியமாகிய மாயேயங்களாகிற தத்துவ தாத்துவிகங்களுமாம்.*

*அவற்றைத் தூய்மை செய்தலாவது மூலமலத்தை மீட்டும் அங்குரியாதவாறு வலியடக்கி, மாயா கன்ம மாயேயங்களைக்களை பிடுங்குவதுபோல உயிரைவிட்டு அகலச்செய்து ஆன்மாவைச் சுத்தான்மாவாகச் செய்தல்.*

*இவ்வண்ணம் முன்புள்ளவற்றை எல்லாம் முழுதுங்கெடச் செய்து உயிருக்கு உயிராகக் கலந்த தில்லைநாதன் என்பார் 'முன்புள்ளவற்றை முழுதழிய உள்புகுந்த தில்லையாண்டான்' என்றார்.*

***குறிப்பு :-** என்பினுட் பகுதியும் அன்பினால் உருகுதல்பற்றி 'என்புள்ளுருக்கி' என்றார். ஈடழித்து - இருவினைப் பயனையும் சமமாக அழித்து எனவுமுரைப்பர். துவந்துவம் - விருப்பு வெறுப்பு, போற்றல் இகழ்தல், தழுவல், அடித்தல் என்பனபோல எதிரிடையாய இருவகைச் செயல்களும் குணங்களுமாம். முன்பு - எதிர்காலம். அன்பின் என்பதில் இன்சாரியை. அன்பு என்பதை ஆண்டானை என்பதோடு முடிக்க.*

**562.** **குறியும் நெறியும் குணமுமிலார் குழாங்கள் தமைப்**
**பிறியும் மனத்தார் பிறிவரிய பெற்றியனைச்**
**செறியுங் கருத்தில் உருத்தமுதாஞ் சிவபதத்தை**
**அறியுங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.** **4**

***உரை :-** அடையாளமும், வழியும், முக்குணச்சார்பும் இல்லா*

*தவராய்ப் பாசக்கூட்டங்களை விட்டு நீங்கு மெண்ணத்தினராய், உள்ள அடியார்கள் தன்னைப் பிரிதற்கரிய தன்மையுடையவனே, அன்பு மிகுகின்ற உள்ளத்திற்றோன்றி அவைகட்கு அமுதமயமாக விளங்கும் தூய நிலையுடையானை எல்லாவற்றையும் அறிகின்ற விளக்கமிக்க தில்லை யாண்டவனைப் பற்றிக் கொண்டேன்.*

*குறி - இறைவன் சடையுடையவன், செம்மேனியன், வெண்ணீற்றன், கைக்கபாலத்தன், மழுவன், மானன் என்ற அடையாளங்கள்.*

*நெறி - அவனை அடைதற்குரிய சரியையாதி நான்கு வழிகள். குணம் - நெறிகளைச் சார்தற்குரிய ஆன்மபரிபாகம். இம்மூன்றும் இலார் பிறராகலின் அவரோடு சேர்தலுமாகாது. 'சிவபத்தர்களோடு இணங்குக' எனவே ஏனையர்களோடு இணங்கற்க என்பதூஉம் பெறப்படுதலானும் அவர்கள் அஞ்ஞானத்தை உணர்த்துவராகலானும் அவர்கள் கூட்டத்தைப் பிறியும் மனத்தாரென மெய்யடியாரைக் குறிப்பித்தார். அக்குழாங்கள் இன்னாரின்னார் என்பதை அடிகளே 'ஆத்தமானார் அயலவர்கூடி நாத்தழும் பேற நாத்திகம் பேசினர்' என்பது முதலாகப் போற்றித் திருவகவலில் உணர்த்துதலும் காண்க.*

***குறிப்பு** :- குறி என்றதற்குப் பெயரென்றுங் கூறுப. நெறி என்பது சமயவழி. குழாங்கள் என்பதற்குச் சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்களென வுரைப்பர். பெற்றி - தன்மை. செறியும் - (அன்பு) மிகும். உருத்து - உருவோடு தோன்றி.*

**563.** பேருங் குணமும் பிணிப்புறும்இப் பிறவிதனைத்
தூரும் பரிசு துரிசறுத்துத் தொண்டரெல்லாஞ்
சேரும் வகையாற் சிவன்கருணைத் தேன்பருகி
ஆருங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 5

***உரை** :- பேரும் பல்வகைக் குணங்களும் நம்மைக் கட்டுப் படுத்துதற்கேதுவாகிய இந்தப் பிறவியைத் தூர்ந்தொழியும்படி மலமாகிய குற்றத்தை யறுத்து அடியார்கள் எல்லாரும் இறைவனைக் கூடும் முறையிலே சிவபெருமானது அருளாகிய தேனினையுண்டு நிறைவடைதற் கேதுவாகிய விளக்கமிக்க தில்லை யாண்டவனைப் பற்றினேன்.*

***குறிப்பு** :- உடம்பு காரணமாக உயிரிற்கொரு பேரும் தன்மைகளும் பேசப்படுதலின் பிறவியே அதற்குக் காரண மென்றார். தூரும் பரிசு - பற்றறக் கழியும் வண்ணம். வகையால் - வகையினைப்*

*பின்பற்றி. ஆரும், என்பதைத் தில்லைக்கு அடையாக்குவாருமுளர்.*

**564.** கொம்பில் அரும்பாய்க் குவிமலராய்க் காயாகி
வம்பு பழுத்துடலம் மாண்டிங்ஙன் போகாமே
நம்புமென் சிந்தை நணுகும்வண்ணம் நானணுகும்
அம்பொன் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. **6**

***உரை :-*** *மரக்கொம்பில் அரும்பாகவும், குவிமலராகவும், காயாகவும், ஆய்கனி உதிர்தல்போல உடம்பும் அவ்வாறாக வீணே பழுத்து முதிர்ந்து இவ்வாறு பயனில்லாமல் அழிந்து போகாதபடி நான் நம்பித் துணையாகக் கொண்ட என் மனமானது கடவுளைச் சேரும்படி நான் விரும்பும் அழகிய பொன்னினாலாகிய விளக்கமிக்க தில்லையாண்டவனைப் பற்றிக் கொண்டேன்.*

*உடல் கருவாய், குழம்பிலிருந்து, உருக்கொண்டு, குழவியாய், காளையாய், மூத்துக்கிழமாய் அழிதலைக் 'கொம்பில் அரும்பாய்க் குவிமலராய்க் காயாகி வம்புபழுத்து உடலம்மாண்டு இங்ஙன் போகாமே' எனக் கூறினார்கள்.*

***குறிப்பு :-*** *கொம்பு உலகத்திற்கும், அரும்பு, மலர், காய் முதலியன உடம்பின் வளர்ச்சி நிலைகளுக்கு முவமையாகும். போகாமே, வண்ணம் அணுகும், தில்லை, கொண்டன்றே என முடிக்க.*

**565.** **மதிக்குந் திறலுடைய வல்அரக்கன் தோள்நெரிய**
**மிதிக்குந் திருவடி என் தலைமேல் வீற்றிருப்பக்**
**கதிக்கும் பசுபாசம் ஒன்றுமிலோம் எனக்களித்திங்(கு)**
**அதிர்க்குங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.** **7**

***உரை :-*** *எல்லாரும் புகழ்தற்குரிய வலிமை வாய்ந்த மன வன்மை யுடைய இராவணனுடைய தோள் நெரியும்படி மிதித்த இறைவன் திருவடியானது எனது தலைமேற் பொருந்தி யிருக்குங்கால், எழுந்து தோன்றக்கூடிய பசுபாச வுணர்ச்சி யாதும் இல்லேமாகினேமென்று மகிழ்ந்து ஆரவாரித்தற்கேதுவாகிய விளக்கமிக்க தில்லையின்கண் ஆண்டவனைப் பற்றிக் கொண்டேன்.*

*இராவணன்மீது ஊன்றியது வலதுகாற் பெருவிரலின் நகத்தின் நுனியாக இருக்கவும் மிதிக்குந் திருவடி என்றது, என் தலைமேல் வீற்றிருக்கும்போது நுனிமட்டும் பட்டாற்போதாது; நனைந்தனைய திருவடியை முழுதும் சூட்டவேண்டும்; பொருந்தச் சூட்டவேண்டும்; அப்போதுதான் ஊறுணர்ச்சியும், உள்ள இன்பமும் மிகும் என்ற*

எதிர்நோக்கால் 'மிதிக்கும் திருவடி என் தலைமேல் வீற்றிருப்ப' என்றார்.

இராவணனுக்குப்போல ஒருமுறை ஊன்றி எடுத்தாற் போதாது; எப்போதும் வீற்றிருக்கச் செய்யவேண்டும் என்பார் 'வீற்றிருக்க' என்றார். வீற்றிருத்தல் - வேறொன்றற்கும் இல்லாத அழகோடும் சிறப்போடும் இருத்தல்.

பசுஞானமும், பாசஞானமும் மீளவும் பிறவிக்கு ஏதுவாகலின் 'கதிக்கும் பசுபாசம் ஒன்றுமிலோம்' என்றார். இறைவன் திருவடி சூட்டியவுடன் மலமாயைகளோடு கூடி இருத்தலாகிய பசுபாசத்தன்மைகள் நீங்கிச் சுத்தான்மா ஆதலின் இங்ஙனம் கூறினார். கதிக்கும் - தோன்றும். அதிர்க்கும் - ஆரவாரிக்கும்.

***குறிப்பு :-*** ***இராவணன் கதை வெளிப்படை. கதிக்கும் - மேற்பட்டு எழும். பசு - உயிரின் தன்னினைவு. பாசம் - மும்மலமாகிய கட்டு. இங்கு - இவ்வுலகில். அதிர்க்கும் - ஆரவாரிக்கும்.***

**566. இடக்குங் கருமுருட் டேனப்பின் கானகத்தே**
**நடக்குந் திருவடி என்தலைமேற் நட்டமையால்**
**கடக்குந் திறல்ஐவர் கண்டகர்தம் வல்லாட்டை**
**அடக்குங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 8**

***உரை :-*** ***பூமியைத் தோண்டும் இயல்புடைய கரிய விறகுக் கட்டையை ஒத்த பன்றியின் புறத்தே, காட்டகத்தில் நடந்த திருவடியை என் தலைமேல் நாட்டினமையால் என்னை வெல்லுந் திறமையுடைய ஐம்பொறிகளாகிய கொடியவரது வலிமையுடைய ஆடலை அடக்கவல்ல விளக்க மிக்க தில்லையாண்டவனைப் பற்றிக் கொண்டேன்.***

***கோரைக்கிழங்கு முதலானவற்றைத் தோண்டுவதற்காகப் பூமியைக் கிளறுதலும், எதிர்ந்தார்மேல் முருட்டுத்தனமாகச் சீறிவிழுதலும் பன்றியின் இயற்கையாதலை 'இடக்கும் முருட்டு ஏனம்' என்பதனால் உணர்த்தியவாறு. அருச்சுனன் கைலை மலைச்சாரலில் பாசுபதாஸ்திரம் பெறுதற்காகத் தவம் செய்த போது, அவன் தவத்தைக் கலைக்கக் காட்டுப்பன்றி ஒன்று அவனை நோக்கி ஓடி வந்தது; இறைவன் இறைவியோடு வேடவடிவு தாங்கி எழுந்தருளி, அப்பன்றியைக் கொன்று அருச்சுனற்குப் பாசுபதம் அருளினார் என்பது வரலாறு. அங்ஙனம் காட்டுப்பன்றியின்பின் நடக்கும் திருவடி என அன்பர்க்காக நடந்த அருட்சிறப்பை உணர்த்தியவாறறிக. என்***

*தலை கானகத்தைக் காட்டிலும் கரடுமுரடாயிருப்பினும், கானகத்தில் நடந்த பயற்சியால் என் தலைமீதும் அதனைச் சூட்டினாரென்பார் 'திருவடி என் தலைமேல் நட்டமையால்' என்றார்.*

*நடுதல் - செடி நடுதல் முதலியனபோலக் கிளைத்துத் தழைத்துப் பூத்துக் காய்க்கச் செய்தல். அங்ஙனமே இறைவன் திருவடியைச் சூட்டி, திருவருள் தழைத்துக் கிளைத்துக் கருணை பூத்துத் தீமையைக் காய்த்துச் சிவபோகம் பழுக்கச்செய்தான் என்றார்; நட்டமையால் ஐம்பொறிகளின் ஆட்டம் அடங்கிற்று என்றார்.*

***குறிப்பு :-** 'கருமுருடு' என்றது பன்றியின் நிறத்தையும், வலிமையையுங் குறித்தவாறு. அர்ச்சுனன் தவத்திற்காக இறைவன் வெளிப்பட்டு அருள்புரியக் கருதிய காலை, இறைவன் வேட்டுவ வடிவங்கொண்டு, மூகாசுர னென்பவன் கொண்ட பன்றி வடிவத்தின் பின், அதனை ஓட்டிச் சென்றமை பாரதத்திற் காண்க. கண்டகர் - கீழ்மக்கள்; கொடியவர். வல்லாட்டை - வலிமிக்க ஆட்டங்களை. அடக்கும் என்பதை ஆண்டானென்பதனோடு முடிக்க.*

**567.** **பாழ்ச்செய் விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேற்குக்**
**கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டுத்**
**தாட்செய்ய தாமரைச் சைவனுக்கென் புன்தலையால்**
**ஆட்செய் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.** **9**

***உரை :-** பாழான வயலை உழுது பயன்பெறாது நன்மையின்றிக் கிடக்கு மியல்புடைய எனக்கு முற்பிறப்பிற் செய்த தவத்தால் முடிந்து வைத்த நிதி கிடைக்கப் பெற்றுச் சிவந்த தாமரை போன்ற திருவடிகளையுடைய சைவனாகிய கடவுளுக்கு இழிவான எனது தலையினால் அடிமைத் தொழில் செய்தற்குரிய விளக்க மிக்க தில்லை யாண்டவனாகிய கூத்தப் பெருமானைப் பற்றினேன்.*

*பயனற்ற செயலிற்றலைப்பட்டிருந்த எனக்கு, பூர்வபுண்யத்தால் புதையல் கிடைத்தாற்போலக் கிடைத்த செந்தாமரைப் பொற்பாதனாகிய சிவனுக்கு ஆட்செய்தல் தில்லைக்கூத்தனைக் குலாவுதல் கொண்டதால் விளைந்தது என்பது கருத்து.*

*பாழ்ச்செய் - பண்படுத்தப்படாததும், வித்திட்டாலும் முளையாததும், நீரேறாததுமாய வயல். விளாவி - உழுது. விளாக் கொள்ளல், விளா அடித்தல் என்பது ஒருசுற்று உழுதலுக்கும் வழங்கும்*

*வழக்கு. பாழ்ச்செய் விளாவி என்பது 'பாழுக்கிறைத்தேன்' என்பது போல்வதோர் வழக்கு.*

*பரிபாகமற்ற எனக்கும் திருவடிதீக்கை செய்து உயர்த்தியது அவனைக் குலாவிக் கூடியதால் விளைந்த பயனன்றே என வியத்தலின் இத்திருப்பாடல் சிவானுபவம் இடையீடுபடாமையை அறிவித்தவாறு.*

***குறிப்பு :-*** *பாழ்ச் செய் - பாழான வயல். இங்கே பயனில்லாத உடம்பினைக் குறிக்கும். தவத்தால் - நல்வினைப் பயனால். கிழியீடு - புதையல் போல் துணியிற் கட்டியிடப்பட்ட நிதி. செய்ய தாமரைத் தாள் என மாற்றுக. 'ஐயாறதனிற் சைவனாகியு' மென்ற படி இறைவன் திருவையாற்றில் சைவனாக வடிவங்கொண்ட கதை முன் கூறப்பட்டது. ஆள் - அடிமைத் தொழில்.*

**568.** **கொம்மை வரிமுலைக் கொம்பனையாள் கூறனுக்குச்**
**செம்மை மனத்தால் திருப்பணிகள் செய்வேனுக்**
**கிம்மை தரும்பயன் இத்தனையும் ஈங்கொழிக்கும்**
**அம்மை குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 10**

***உரை :-*** *திரட்சியும் வரிகளுமுள்ள நகிலை உடைய, பூங்கொம்பை யொத்த உமையம்மை பாகனுக்கு நேர்மை உடைய உள்ளத்தோடு பணிவிடை செய்கின்ற எனக்கு இப்பிறப்பில் நிகழக் கூடிய வினைப் பயன்களனைத்தையும் இவ்வுலகிலே ஒழிக்க வல்ல, தாய்போன்ற, விளக்க மிக்க தில்லையாண்டவனைப் பற்றிக் கொண்டேன்.*

*செம்மை மனம் - மலமாயைகளோடு கூடி மயங்கியிருந்து பின் செம்மை பெற்ற மனம். கூறனுக்குத் திருப்பணிகள் செய்வேனுக்கு என்பதால் பதிபுண்ணியமே தாம் செய்தமையும், ஏனைய பசு புண்ணியங்கள் இன்பத்துன்பம் காரணமாய் இக்கன்மபூமியிலேயே ஒழிக்கப்பட்டமையும் உணர்த்தியவாறு காண்க.*

*அம்மை என்பது ஆகுபெயராக அம்மையின்பமாகிய வீடுபேற்றை உணர்த்தியது.*

*இதுவும் அனுபவ இடையீடின்மையை அறிவித்தமை காண்க.*

*இப்பத்துத் திருப்பாடல்களானும், அடிகள் உறவுகளை ஒழித்து ஒடுங்கவந்தியுமே உறவாகக் கொண்டு, சிவன் கழலலது பற்றில்லை எனத் துணிந்து, பொறியின்பங்களைப் பெருக்குவனவாகிய*

*மகளிராசை முதலியவற்றைத் துறந்து, வினைகளின் வன்மையை வாட்டி, யான் எனதென்னும் பற்றறுத்து, எடுத்த இவ்வுடலம் பாழ் போகாமல் திருவடிசூட்டி, வறியவனுக்குப் புதையல் கிடைத்தாற்போலத் திருவருள் நேர்படத் திருவருட் பணியேசெய்து, தில்லை நடராசப்பெருமானோடு குலாவுதலைக் கொண்டேன் எனச் சிவானுபவம் இடையீடுபடாமல் வருதலை உணர்த்தியருளு கின்றார்கள்.*

***திருச்சிற்றம்பலம்.***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 41. அற்புதப்பத்து

*வியப்பு, புதுமையும் பெருமையும் சிறுமையும் ஆக்கமும் ஆகிய நான்கினையும் நிலைக்களனாகக் கொண்டு தோன்றும் என்பர் தொல்காப்பியர். ஆனால் அவர் வியப்பினை 'மதிமைசாலா மருட்கை' எனல் சிந்திக்கத்தக்கது. மதிமை - அறிவுடைமை. அறிவு நிரம்பப் பெற்றவர்க்கு எத்தகைய சூழ்நிலையிலும் வியப்புத் தோன்றாது. எல்லாம் அவர்கட்கு இயல்பாகவே நிகழ்வனவாகவும், முன்னறியப் பட்டனவாகவுமே தோன்றும் என்பது தொல்காப்பியர் கருத்து. ஈண்டு அறிவாற் சிவனேயான மதிமந்திரியாரான வாதவூர் வள்ளலுக்கு அற்புதம் தோன்றுகிறது. இந்த அற்புதம் மதிமை சாலா மருட்கையாகாது. பசுபோதத் தன்மையிலுள்ள பொல்லாங்கைப் போக்கி அருளாற் பொறுத்தாண்டு அருளிய சிவானந்தானுபவம் எவராலும் கண்டறியாத ஒன்று. அது பரிபாகமுற்ற ஆன்மாக்களுக்கு அனுபவமாகாது. அதனைக் கண்டவுடன் அடிகள் அற்புத மடைந்தார்கள் ஆதலின் மதிமைசாலா மருட்கை ஆகாது என்பது தெளிவு. இத்தகைய ஆனந்தாதீதம்பெற்ற பேர்கள் ஆனந்தமே தாமாய் அபேதமாய் இருத்தலன்றி, அவர்கள் அறிவு காரியப்படுந்தன்மை இலதாகலின் மதிமை சாலா மருட்கை என்றார் எனலும் ஒன்று.*

*அகத்தியச் சூத்திரம் 'கற்பனை கழறும் அற்புதப்பத்துத், தனியதீதமாய் அனுபவம் ஆற்றாமை' என்பது.*

**அதிசயம் என்னும் சொல் மேன்மை மரியாதை முதலான பல பொருளை உணர்த்தும் என்றும் சொல்வர். அதிசயம் என்பது மிகுதிகாரணமாக விளைந்தமேன்மையை உணர்த்துவது; அற்புதம் என்பது இதுவரை நுகரப்படாத ஒன்று நுகர்ச்சிக்குப் புலனானபோது விளைந்த தன் வசமற்ற நிலை என அறியப்பெறுதல் காண்க.*

--------

***அனுபவ மாற்றாமை***

***அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

***திருச்சிற்றம்பலம்***

**569. மையலாய்இந்த மண்ணிடை வாழ்வெனும் ஆழியுளகப் பட்டுத்**
**தைய லாரெனுஞ் சுழித்தலைப் பட்டுநான் தலைதடு மாறாமே**

பொய்யெ லாம்விடத் திருவருள் தந்துதன் பொன்னடி யிணைகாட்டி
மெய்ய னாய்வெளி காட்டிமுன் நின்றதோர் அற்புதம் விளம்பேனே. 1

***உரை :-*** *(நில்லாதவற்றை நிலையென்றுணரும்) மயக்கவுணர்ச்சி யுடையனாய் இந்த மண்ணுலகிலே வாழ்க்கை யென்னுங் கடலினுள் அகப்பட்டு, பெண்கள் என்கிற சுழியிற் சிக்கி, நான் அறிவு மாற்ற முறாமல், நிலையாத பயனற்றவை யெல்லாம் விட்டு நீங்கும் படி திருவருள் கொடுத்துத் தனது அழகிய திருவடிக ளிரண்டையுங் காட்டி யருளி, நிலை பேறுடையனாகும் பொருட்டு அருள் வழி காட்டி என் முன்பாக வெளிப்பட்டு நின்றதொரு வியப்பான செயலை இன்னதென்று சொல்ல அறியேன்.*

*உலகவாழ்விற் சிக்கி உழல இருந்த என்னைக் காப்பாற்றித் திருவடிகாட்டிப் பரவெளிகாட்டிக் குருவாக வந்து முன் நின்ற அற்புதம் சொல்லொணாததாக இருந்தது என்பது கருத்து.*

*மையல் - மோகம்; அஃதாவது ஆணவமல காரியமாகிய அறியாமையான் விளைவது. இது மண்ணிடைப் பிறந்தவுடன் உடலொடுகூடிய உயிரை மயக்குவது ஆதலின் 'இந்த மண்ணிடை மையலாய்' என்றது.*

*தையலார் - பெண்கள். தையல் - அழகு; உரிச்சொல். அதனையுடையார் தையலார் என்க. சுழி - நீரில். எதிர் எதிரான ஓட்டத்தால் விளையும் ஆழமான சுழற்சி. இது அகப்பட்ட பொருளை ஆழ்த்திக் கொள்வது. அதுபோல மகளிரும் தம் வயப்பட்டாரை மேலெழாவாறு சுழலச் செய்தலின் 'தையலார் எனும் சுழி' என்றார். தலைப்பட்டு - சிக்கி.*

*இறைவன் திருவருள் ஞானமயமானது; அதனை என்மீது பதியத் தந்தமையின் பொய்யெலாம் விட்டது என்பார் 'பொய்யெலாம்விடத் திருவருள் தந்து' என்றார். பொய் - யான் எனது என்னும் பொய் என்பது பழையவுரை.*

*முன்னின்றது ஓர் அற்புதம் - கருவிகரணங்களால் உணர்தற்கு ஒண்ணாத இறைவன் அவற்றால் உணரத்தக்க நிலையில் வந்து என் முன்னே நின்றது ஒப்பற்ற அற்புதம் என்றவாறு.*

*விளம்பேன் - அத்தகைய ஓர் அற்புதத்தை அநுபவிக்க இயலுமே யன்றி, இங்ஙனமிருந்தது என்று சொல்ல இயலாது என்றதாம். பழையவுரை மவுனானந்தம் பெறுதலே சுவானுபூதி எனல் காண்க.*

இது வியப்புச்சுவையின் முற்றிய நிலை. இதனால் ஆற்றொணாத அனுபவத்தை உணர்த்தியமையில் அற்புதப்பத்தாதல் காண்க.

***குறிப்பு*** :- மையல் - மயக்கம். வாழ்வெனுமாழி - பிறவிக்கடல். பெண்டிரை மணப்பதால் மக்களுஞ் சுற்றமும் சூழப்பெற்று அவர்கள் பாசத்தினின்று புறம் போதலருமையாகலின் சுழித் தலைப்பட்டு, என்றார். தலை - அறிவுக்கு இடம். மெய்யனாய் என்பதற்குத் திருமேனி உடையனாய் என்றும், வெளிக்காட்டி என்பதற்கு அதனை வெளிப்படக் காட்டி என்று முரைப்பர்.

**570.** **ஏய்ந்த மாமல ரிட்டுமுட் டாததோர் இயல்பொடும் வணங்காதே,**
**சாந்த மார்முலைத் தையல்நல் லாரொடுந் தலைதடு மாறாகிப்,**
**போந்து யான்துயர் புகாவணம் அருள் செய்து பொற்கழ**
**லிணைகாட்டி,**
**வேந்த னாய்வெளி யேஎன் முன் நின்றதோர் அற்புதம் விளம்பேனே. 2**

***உரை*** :- பொருத்தமான அழகிய பூக்களைத் தூவி, முட்டுப்படாத நல்லியல்போடு இறைவனை வழிபடாது, சந்தனக் குழம்பு நிறைந்த நகிலை உடைய அழகிய பெண்டிர்களோடு கலந்து தடுமாறிப் போய் யான் துன்பத்தி லழுந்தாதபடி திருவருள் புரிந்து, கழலணிந்த இரண்டு பொன்னடிகளையுங் காட்டி என்னரசனாய் வெளிப்பட என்முன் நின்ற ஒப்பற்ற வியப்புச் செய்கையை இன்ன தென்று சொல்ல அறியேன்.

பூக்கள் கொண்டு பொன்னடி போற்றிப் பூசியாமல், காரிகையார் கலவியிற்கூடித் தலைதடுமாறிப் போகாமல், திருவடி காட்டிக் குருநாதனாக என்முன் காட்சிதந்து நின்ற அற்புதம் சொல்லொணாதது என்பது கருத்து.

ஏய்ந்த மாமலர் - இறைவன் பூசைக்குரியனவாகச் சிவாகமங்களில் விதிக்கப்பட்ட சிறந்த மலர்கள்; ஏதோ கிடைத்த பூக்கள் எனலுமாம். புல்லிலை எருக்கமாயினும் என்பதாம்.

சிவபூசைசெய்வார், நாளிடையிட்டுச் செய்யாது நாடோறும் தவறாது செய்துவரல் வேண்டுமாதலின் 'முட்டாதது ஓரியல்பொடும் வணங்காதே' என்றார். உடற்பயிற்சி செய்பவன் ஒரு நாள் செய்யாதுவிடின் மறுநாள் உடல்நலிவும் பயிற்சிக்குறைவும் விளைதல் போல, யோகமும் தியானமும் பக்தியும் கலந்த உளப்பயிற்சியாகிய சிவபூசை செய்பவர்கள் நாளிடையிட்டும் காலந்தாழ்த்தும்

*செய்வார்களாயின் தியானசித்தி விளையாமை மட்டுமன்றித் தீ நரகினும் புகுவராதலின் 'முட்டாதது ஓர் இயல்பொடும் வணங்காதே' என்றார்.*

*வேந்தன் - அரசன். ஈண்டு ஞானவேந்தனாய் வந்த குருவுருவை நினைவூட்டியது. வெளியே என்முன் நின்றது என்றது அத்தகைய பெரியோன் சிறியேனாகிய என் கண் காணவெளியில் நின்றது எனப் பெருமானுடைய உயர்வும், தன்னிழிவும் தோன்றச்செய்து அவனது எளிவந்த தன்மையையும் உணர்த்திற்று. இதனால் இத்திருப்பாடல் சிவானுபவத்தின் ஆற்றொணாத்தன்மையை அறிவித்தல் காண்க.*

***குறிப்பு :-*** *ஏய்ந்த மாமலர் - பழுதில்லாத வாசனையுடைய நன்மலர். முட்டாத தோரியல்பாவது - நன்மை வரினுந் தீமை வரினும் அவற்றைப் பொருட்படுத்தாமல், பயன் கருதாது வழிபடுதல். சாந்தம் - சந்தனம். தையல் - அழகு.*

**571.** **நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து நானென தெனும்மாயக்**
**கடித்த வாயிலே நின்றுமுன் வினைமிகக் கழறியே திரிவேனைப்**
**பிடித்து முன்னின்றப் பெருமறை தேடிய அரும்பொருள் அடியேனை**
**அடித்த டித்துஅக் கார முன் தீற்றிய அற்புதம் அறியேனே. 3**

***உரை :-*** *மண்ணுலகத்திலே தக்கவன்போல நடித்துப் பொய்யான பல காரியங்களைச் செய்து, யானென தென்னுஞ் செருக்கில் விளைந்த மயக்கமாகிய பாம்பு கடித்த இடத்திலே முன் வினையாகிய விடந்தங்கி மிகுதிப்படவே, புலம்பியலையு மியல் புடையேனைத் தானே பிடித்து எதிரே எழுந்தருளி நின்று அந்தப் பெரிய வேதங்கள் தேடி அடைதற் கரிய பரம்பொருள் அடியேனை எளிதாகத் தண்டித்துத் தண்டித்துப் பேரின்பமாய சர்க்கரையை முற்படத் தின்பித்த அருஞ்செயலை இன்னதென்று நான்சொல்ல அறியேன்.*

*பாலகன், தந்தை நிறுத்தினாலும் அறியாமையால் மீளவும் ஓடிவிழுவதுபோல யானும் வாசனாமலத்தாற்றாக்குண்டு தடுமாறிப் போவேனோ என்று திருவுளத்தெண்ணி, என்னை அறிவு தெரிகின்ற வரையில் பாதுகாக்கத் திருவுளங்கொண்டு என் முன்னே தன் ஞானத் திருவுருவைக் காட்டி நிற்கின்றான் என்பார் 'முன்னின்று' என்றார்.*

*அன்னை பாலும் சர்க்கரையும் கலந்து பொற்கிண்ணத்தில் வைத்து ஊட்டவும் உண்ணமாட்டேன் என்று அடம்பிடித்து அழும் குழந்தையை அடித்து, அதற்கு அமுதை ஊட்டுவது போலச் சிவானுபவமாகிய திருவருளமுதத்தை அடித்தடித்து இறைவன்*

*ஊட்டுகிறான் என்பார் 'அடித்து அடித்து அக்காரம் முன் தீற்றிய அற்புதம்' என்றார்.*

***குறிப்பு :-*** *மாயம் - மயக்கம், அறியாமை பற்றி வருஞ் செருக்கு. செருக்கினால் ஒரு காரியத்தைச் செய்தவுடன் அதன் பயன் முற்செய்த வினைப் பயனுக் கேற்ப வருதலால் முன்வினை யென்றார். அக்காரம் - சர்க்கரை. பேரின்பத்திற்கு உருவகம். தீற்றிய - தின்பித்த, நுகர்வித்த.*

**572.** **பொருந்தும் இப்பிறப் பிறப்பிவை நினையாது பொய்களே புகன்றுபோய்க்**
**கருங்கு ழலினார் கண்களால் ஏறுண்டு கலங்கியே கிடப்பேனைத்**
**திருந்து சேவடிச் சிலம்பவை சிலம் பிடத் திருவொடும் அகலாதே**
**அருந்து ணைவனாய் ஆண்டு கொண்டருளிய அற்புதம் அறியேனே.**
**4**

***உரை :-*** *(மாறிமாறி வந்து) பொருந்துகின்ற இந்தப் பிறப் பிறப்புக்களைக் களையும் வழிகளை எண்ணாது, நிலையாதன வற்றையே விரும்பிப் போய் அல்லது பொய்களையே சொல்லித் திரிந்து கரிய கூந்தலையுடைய பெண்களுடைய கண்களினாலே, தாக்குண்டு கலக்க முற்றுக் கிடக்கும் இயல்புடைய என்னை இறைவன் யான் திருந்துவதற் கேதுவாகிய தனது செய்ய பாதங்களிலுள்ள சிலம்புகள் ஒலித்திடத் தனதருட் சத்தியோடு நீங்காது, பெறுதற்கரிய உதவியாளனாய் ஆட்கொண்டருளிய அருஞ்செயலை நான் இன்னதென்று அறியமாட்டேன்.*

***குறிப்பு :-*** *இவை என்பது பிறவியை நீக்கும் வழிகளைக் குறித்து நின்றது . புகன்று - விரும்பி; சொல்லி. ஏறு - இடி, எறியப்படுதல். கண்களாகிய வேலினாலே எறியுண்டு எனவும் கொள்க. சிலம்பவை என்பது பிரணவம் முதலிய மந்திர ஒலிகளைக் குறிக்கு மென்ப. திரு - அருட்சத்தி.*

**573.** **மாடுஞ் சுற்றமும் மற்றுள போகமும் மங்கையர் தம்மோடுங்,**
**கூடி அங்குள குணங்களால் ஏறுண்டு குலாவியே திரிவேனை,**
**வீடு தந்தென்றன் வெந்தொழில் வீட்டிட மென்மலர்க் கழல்காட்டி,**
**ஆடு வித்தென தகம்புகுந் தாண்டதோர் அற்புதம் அறியேனே. 5**

***உரை :-*** *செல்வமும் உறவும் ஏனைய போகப் பொருளும் பெண்களுமாகிய இவற்றோடு தொடர்வுற்று அவற்றிலுள்ள*

*நயங்களால் தாக்குண்டு அவற்றைப் பாராட்டித் திரிவேனை, எனது தீவினைகளை அழிக்கும் வண்ணம் தனது மெல்லிய திருவடித் தாமரையைக் காட்டி வீட்டின்பத்தைக் கொடுத்தருளி, என்னை ஆனந்தத்தால் கூத்தாடச் செய்து எனதுள்ளம் புகுந்து ஆட்கொண்ட அருஞ்செயலை, இன்னதென்று அறியமாட்டேன்.*

***குறிப்பு :-*** *குலாவுதல் - பாராட்டுதல். வீட்டுதல் - அழித்தல். வீடு - பாச நீக்கமெனவும், முடிவாய்த் தங்குமிடமெனவுங் கூறுப. விடுபடுதல் - வீடு; விடுதல் - தங்குதல். தங்குமிடம், வீடு என விரு வகையாகவும் பொருள் கொள்க, அகம் - உள்ளம்.*

**574. வணங்கும் இப்பிறப் பிறப்பிவை நினையாது மங்கையர் தம்மோடும்**
**பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத் தழுந்தி நான் பித்தனாய்த் திரிவேனைக்**
**குணங்க ளுங்குறி களுமிலாக் குணக்கடல் கோமளத் தொடுங்கூடி**
**அணைந்து வந்தெனை ஆண்டுகொண் டருளிய அற்புதம் அறியேனே. 6**

***உரை :-*** *தொடர்ந்து மாறி மாறி வரும், இந்தப் பிறப் பிறப்புக்களை நீக்கும் வழிகளை எண்ணாது, மாதர்களோடுங் கலந்து அவர்களது அதரத்தினின்று பெருகும் எச்சில் நீர்ப் பெருக்கிலாழ்ந்து மயக்க முடையேனாய் அலைவேனை, (முக்குணச் சார்பாய) இயல்புகளும், (தத்துவச் சார்பாய) அடையாளங்களு மில்லாத அருட்குணக் கடலாகிய பெருமான், இளமைச் செவ்வியையுடைய அம்மையொடு கூடி வந்து என்னைச் சேர்ந்து ஆட்கொண்டருளிய அருஞ்செயலை நான் இன்னதென்று அறியமாட்டேன்.*

***குறிப்பு :-*** *சுழல்போலப் பிறப்பிறப்பும் மாறிமாறி வருதலால் வணங்குமென்றார். அஞ்சி யீடுபடுதற்குரிய எனவும் கொள்க. பிணைந்து - நெருங்கிச் சேர்ந்து. கோமளம் - பசிய நிறமென்றும் கொள்ப.*

**575. இப்பி றப்பினில் இணைமலர் கொய்துநான் இயல்பொடஞ் செழுத்தோதித்**
**தப்பி லாதுபொற் கழல்களுக் கிடாது நான் தடமுலை யார்தங்கள்**
**மைப்பு லாங்கண்ணால் ஏறுண்டு கிடப்பேனை மலரடி யிணைகாட்டி**
**அப்பன் என்னைவந் தாண்டுகொண்டருளிய அற்புதம் அறியேனே. 7**

***உரை :-*** *இந்தப் பிறவியில் இசைவான பூக்களைப் பறித்து*

முறையாகத் திருவைந்தெழுத்தினைச் சொல்லித் தவறுதலில்லாமல் அவனது திருவடிகளில் அவற்றைத் தூவாது பெரிய நகிலை உடைய மாதர்களது கருமுகிலின் தன்மை பொருந்திய கண்களினாலே தாக்குண்டு பயனின்றிக் கிடக்கு மியல்புடைய எனக்குத் தனது திருவடித் தாமரை இரண்டையும் காட்டியருளி, அப்பன் தானே ஆட்கொண்ட வியப்பினை இன்னதென்று அறியமாட்டேன்.

இணை மலர் - இணைந்த மலர்; வினைத்தொகை. சிவனை அருச்சிப்பதற்குப் பொருத்தமான மலர்கள். கொய்து - மலரைக் கொய்ய வேண்டிய முறைப்படி, நீராடித் தோய்த்து உலர்ந்த ஆடை உடுத்து, தன்மேனியைத் தீண்டாமலும் சொரியாமலும், இழிந்த பொருள்களையும் நாய் மாடு முதலியவற்றையும் தீண்டாமலும், வாய் பேசாமலும் திருவைந்தெழுத்தைத் தியானித்துக் கொண்டே கொய்து.

தாம் பெற்றிருக்கிற சிவதீட்சை முறைக்கு ஏற்ப சபீச நீர்ப்பீச முறைகளோடும், ஓதுமுறை நிற்குமுறை அறிந்து திருமந்திரார்த்தத்தைச் சிந்தித்தலையே 'இயல்பொடு அஞ்செழுத்து ஓதி' என்றது.

சிவார்ச்சனை செய்வோர் நாளிடையிட்டுச் செய்தலாகாது ஆதலின் நாடோறும் குறித்த நேரத்தில் செய்யவேண்டும் என்பார் 'தப்பிலாது' என்றார்.

அருச்சிக்குங்கால் பூக்களை வீசி எறிதலும் மேனியின்மீது நேராக எறிதலும் கூடாது என்பார் பொற்கழல்களுக்கு இடுக என்றார். அங்ஙனம் இடவேண்டிய யான் இடாது மாதர் கண்ணால் நொந்தேன்; என்னை இறைவன் ஆட்கொண்டான் என்கின்றார்.

மயக்கநோயுற்றாரைச் சிலமணிகள் காட்டித் தெளிவிப்பது போலத் தடமுலையார்தங்கள் மைப்புலாங் கண்ணால் ஏறுண்டு கிடப்பேனை மலரடிகாட்டித் தெளிவித்தான்; அடியேன் தெளிந்தேன்; அன்பு பூண்டேன்; அவன் ஆண்டுகொண்டான்; அருளினான்; அதில் ஏதோ ஓர்வகை அற்புதம் என்மாட்டு விளைகிறது; அதனை இன்னதென்று உணர என்னால் முடியவில்லை என்கின்றார்.

**குறிப்பு :- இணைமலர் - தமக்குத்தாமே ஒத்த பூக்கள் என்று முரைப்பர். இயல்பு - முறை. நல்லியல்பு - நன்மன மென்றுங் கொள்க. இறை வழிபாட்டில் தவறக் கூடாதென்பார், தப்பிலாது என்றார். மைப்பு - மைதீட்டிய தன்மை எனவுங் கொள்வர். மைப்பு - கருமேகம், உலவுமென்பது உலாம் என்றாயிற்று. உலவும் - பொருந்தும். கிடப்பேனை - கிடப்பேனுக்கு.**

576. ஊச லாட்டுமிவ் வுடலுயி ராயின இருவினை அறுத்தென்னை,
ஓசையா லுணர்வார்க் குணர்வரியவன் உணர்வு தந் தொளியாக்கிப்,
பாச மானவை பற்றறுத் துயர்ந்ததன் பரம்பெருங் கருணையால்,
ஆசை தீர்த்தடி யாரடிக் கூட்டிய அற்புதம் அறியேனே. 8

***உரை :-*** *இந்த உடம்பையும் உயிரையும் ஊஞ்சல்போல் அங்கு மிங்கும் ஆட்டுகின்ற நல்வினை தீவினை என்னும் இரண்டையுங் களைந்து, நூலுணர்வினால் அறியலுறுவார்க்கு அறியமுடியாத பெருமான் எனக்கு ஞானத்தைத் தந்து, உண்மையை வெளிப்படுத்தி மும்மலக் கட்டுக்களின் தொடர்பைத் தொலைத்து, மிக மேலான தனது பேரருளால் (வாசனா மலமாய்) அவாவை யறுத்து, அடியார்களுடைய திருவடியின்கண் என்னைச் சேர்ப்பித்த அருஞ்செயலை இன்னதென் றறியமாட்டேன்.*

*இருவினை - நல்வினை தீவினை. இருவினைகளே உடலையும் உயிரையும் ஒன்றச்செய்து பிறப்பிறப்பு, விண் மண், சுவர்க்கம் நரகம் என்ற இடங்களுக்குப் போய்வரும்படித் தூண்டுவன ஆதலின், உயிர்க்கு உடலை ஊசலாகவும், உடலில் ஏறியவுயிர் பிறப்பிறப்பு, விண் மண், சுவர்க்க நரகங்கட்குச் சென்று வருதலால் ஊசலாடுபவனாகவும் அமைய, இறைவன் வினைக்கயிற்றையறுத்தவுடன் உயிர் உடற்பலகையை விட்டுச் சிவனடியார் திருவடிகளையே தாரகமாகப் பற்றிநிற்கும் என்பதும் உய்த்துணர உதவுவது இத்திருப்பாடல்.*

*ஓசை - ஒலி வடிவாய வேதங்கள். அவற்றையே துணையாகக் கொண்டு இறையியல்பினை ஒருவாறுணரத் தலைப்படுவார்க்கு உணர்தற்கு முடியாதவன் இறைவன். இதன் கருத்து உரை உணர்வு கடந்து நின்ற ஒருவன் என்பது. ஓசை - பிரணவ நாதம்; அது சங்கொலிபோல யோகநிலையிலிருக்கும்போது கேட்கும். அவ்வொலி கேட்கப்படுமாயின் சிவனைக் காணலாம் என்பர் யோகநூலார். இவர் யோகம் சிவராசயோகமாய்ச் சிவஞானத்திற்கு வாயில் என்பதை உணராதார். இவர்களுக்கு ஒலிகேட்டலே சிவதரிசனம் என்பது கருத்து. ஆதலின் இவர்கட்கு உணரப்படாதவர் இறைவன் என்பதுமாம். இது மூலன் மரபில் வரும் சிவயோகியர் கருத்து. இவை அனைத்தையும் எண்ணி 'ஓசையாலுணர்வார்க்கு உணர்வரியவன்' என்றதை உணர்க.*

*அருளல்லவற்றை அருளென்றுணரும் மருளை, இறைவன் போக்கிச் சிவஞானத்தையுதவியதை 'உணர்வுதந்து' என்றும், அறிவு பெற்றதும் அறியாமை நீங்குதலின் 'ஒளியாக்கி' என்றும் கூறினார்.*

*பாசத்தைப் பற்றறுத்து என்னாது பாசமானவை பற்று அறுத்து எனப் பாசத்தை வினைமுதல்போலக் கூறினார். ஒளியான உயிர் மீளவும் பாசத்தைச் சென்று பற்றாது. பாசம் வாசனை பற்றி நெய்க் குடத்தை அணுகும் எறும்புபோல மொய்க்கவும்கூடும் எனத் திருவுளத் தடைத்து இறைவன் பாசமானவை வந்து உயிரைப்பற்றும் ஆற்றலையும் அறுத்து வறுத்தவித்துப் போலாக்கினான் என்பார் இங்ஙனம் கூறினார். பாசமானவைகளை உயிர் பற்றுதலை அறுத்து என்பாரும் உளர்.*

***குறிப்பு :-*** ***இவ்வுட லுயிரான ஊசலாட்டும் என மாற்றுக. நல்வினை மேலுலகிற் கிழுக்க, தீவினை கீழுலகிற்கிழுக்க, உடலும் உயிரும் ஊஞ்சல்போல் அங்குமிங்கும் அலைதலால் 'ஊசலாட்டு' என்றார். ஓசை என்பது நூற்கல்விக் காகுபெயர். 'நூலுணர் உணரா நுண்ணியோன் காண்க' என்றதுமறிக. உணர்வு - பரஞானம். ஒளியாக்கி - வெளிப்படுத்தி. உயர்ந்தபரம் - மிக உயர்ந்த. ஆசை - வாசனாமலத் தொடர்பு என்பாருமுளர்.***

**577. பொச்சை யானஇப் பிறவியிற் கிடந்துநான் புழுத்தலை நாய்போல,**
**இச்சை யாயின ஏழையார்க் கேசெய்தங் கிணங்கியே திரிவேனை,**
**இச்ச கத்தரி அயனுமெட் டாததன் விரை மலர்க் கழல்காட்டி,**
**அச்சன் என்னையும் ஆண்டுகொண் டருளிய அற்புதம் அறியேனே. 9**

***உரை :-*** *காட்டினைப் போன்ற இந்தப் பிறவியிற் பொருந்திப் புழுப்பற்றிய தலையையுடைய நாய்போலப் பெண்களுக்கே விருப்ப மானவற்றைச் செய்து அவர்களோ டிசைந்தே அலைகின்ற எனக்கு இவ்வுலகத்திலே திருமாலும் பிரமனும், எட்டமுடியாத தனது வாசனை பொருந்திய திருவடித் தாமரைகளைக் காட்டியருளி, அப்பன் அடியேனையும் ஆட்கொண்டருளிய அருஞ்செயலை இன்னதென்று அறியமாட்டேன்.*

*பொச்சை - காடு. கடத்தற்கரியதாய், கடந்தே தீரவேண்டியதாய், வனவிலங்கு மிகவுடையதாய், அச்சுறுத்துவதாய், ஊறு விளைவிப்பதாய காடு; எல்லையற்றதாய், கடந்தே தீர வேண்டியதாய், ஐம்புலக்களிறும், மனக்குரங்கும், காம கோபமாதியான பாம்புகளும், தன்னலப்பேயும் நிறைந்ததாய், அதனால் துன்பமும் இன்பவடிவு தாங்கிய துன்பமுமாகவந்து அச்சுறுத்துவதாய். ஆன்மாவின் அறிவு இச்சை செயல்களை மறைத்து, வினைப்போகத்தில் ஆழ்த்தும் துன்பத்தைச் செய்வதாயுள்ள பிறவி.*

*குறிப்பு :- பொச்சை - குற்றம் என்பாருமுளர். வழிதெரியாது அலைதற்கு இடமாகிய காடுபோல உண்மை நெறி இன்னதென்று அறிய முடியாத வண்ணம் இடர்நிறைந்த பிறவி என்பார் பொச்சையான பிறவி என்றார். புழுத்தலை - புழுத்து அலை என்பாருமுளர். அங்கு - அவ்வாறே - அவர்களிச்சைப்படியே. அச்சன் - அப்பன்.*

**578. செறியும் இப்பிறப் பிறப்பிவை நினையாது செறிகுழ லார்செய்யுங்
கிறியுங் கீழ்மையுங் கெண்டையங் கண்களும் உன்னியே கிடப்பேனை
இறைவன் எம்பிரான் எல்லையில் லாததன் இணைமலர்க் கழல்காட்டி
அறிவு தந்தெனை ஆண்டு கொண்டருளிய அற்புதம் அறியேனே. 10**

***உரை :-*** *நெருங்கி மேன்மேல் வரும் இந்த பிறப்பிறப்புக்களை நீக்கும் வழியை எண்ணாமல் அடர்ந்த கூந்தலை உடைய மாதர் செய்யும் பொய்ச் செயல்களையுங் கீழான தன்மைகளையுங் கெண்டை மீன் போன்ற அவர்களது அழகிய கண்களையும் நினைந்தே பயனற்றுக் கிடக்குமியல்புடைய எனக்குக் கடவுளாகிய எமது தலைவன் அளவற்ற பெருமையுடைய தனது திருவடித் தாமரைகளிரண்டையுங் காட்டியருளி உண்மை யறிவினைக் கொடுத்து என்னை யாட் கொண்டருளிய அற்புதச் செயலை இன்னதென்று அறியமாட்டேன்.*

*செறியும் இப்பிறப்பு, செறியும் இவ்விறப்பு இவை நினையாது எனக்கூட்டி, திருவருளாகிய திருவடிவந்து பொருந்தும் பிறப்பு இறப்பு என்க. செறிதற்குக் காரணமான பிறப்பு இறப்பு எனலுமாம். செறியும் - நலிவதான என்பது பழையவுரை. என்னை நெருங்கியிருக்கின்ற இப்பிறப்பு என்பது புத்துரை. கிறி - பொய்ம்மை. கீழ்மை - நாணமின்றி ஒழுகுதல்.*

*இப்பிறப்பு இறப்புக்கள் வினைக்கழிவிற்கும் வினைநுகர்ச்சிக்கும் ஓய்விற்குமாக உதவப்பெற்றன என்பதை, இதனால் ஆன்மா உண்மையுணர்ந்து வினை ஏறாதவாறு பதிபுண்ணியம் செய்து உயரக் கடமைப்பட்டது என்பதையும் நினைத்துப் பார்க்காமல் விட்டது என்பார் தன்மேல் ஏற்றி 'இவை நினையாது கிடப்பேனை' என்றார்.*

*குறிப்பு :- தான் எடுத்த பிறவியைக் குறித்தலால் இப்பிறப்பு என்றார். கிடப்பேனை - கிடப்பேனுக்கு உருபு மயக்கம். திருவடிகள் கிரியாசக்தியும் ஞானசக்தியு மாதலால் எல்லையில்லாத வென்றார்.*

*இப்பத்துப் பாடல்களும் திருவடியைத் தரிசிப்பதும், அர்ச்சிப்பதும், எடுத்த தேகம் சிவப்பணிக்கென்றே கருதி*

இடைவிடாது தொண்டுசெய்வதும், வணங்குவதும், வாழ்த்துவதும், பிறப்பின் பயன் என நினையாது, தையலார் சுழித்தலைப்பட்டு, தலைதடுமாறி, பொய் பலபேசி, அவர்கள் கண்கள் தாக்கக் கலங்கி, எல்லாச் சாதனங்களும் அவர்களோடு கூடிச் சிற்றின்பந் துய்க்கவே என்று கருதி, பித்துக்கொண்டு, இச்சையாயினவே செய்து, அவர்கள் கிறியும் கீழ்மையும்பேச அவர்களுறுப்பிற் கிடந்து மயங்கிக் கிடப்பதே பிறந்ததன் பயனாக எண்ணியிருந்த என்னைத் திருவடிகாட்டித் தெளிவித்துச் சிவஞானமுதவி ஆட்கொண்டருளிய அற்புதம் என்னளவில் அநுபவிக்கத்தக்க தொன்றே அன்றி, அறியத்தக்க தொன்றன்று என வியந்து கூறிய அற்புதப்பத்தாம் என்க.

**திருச்சிற்றம்பலம்.**

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 42. சென்னிப்பத்து

*திருப்பெருந்துறையிலே அடிகள் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, இறைவன் அன்று குருநாதனாக எழுந்தருளிவந்து திருவடி சூட்டியதால் விளைந்த இன்பம் எண்ணத்தில் தோன்ற அவ்வின்ப வுணர்ச்சியால், இன்றும் தம் சென்னியில் திருவடி விளங்குவதாகக் கண்டு இதனை அருளிச் செய்கின்றார்கள்.*

*இப்பத்தின் ஒவ்வொரு பாட்டினிறுதியடியும் 'சென்னி மன்னி' யென்ற சொற்றொடர் வருதலானும், தம் சென்னியில் திருவடி விளங்கும் அனுபவத்தை அறிவிப்பதாலும் 'சென்னிப்பத்து' எனப் பெயர் பெற்றது.*

*திருவாசகத் திருவுள்ளகிடையென்னும் பழைய குறிப்பு, சிவ விளைவு அதாவது, சீவனுக்கு நிச்சயப்படுத்துதல் என்னும். இதன் கருத்து, சிவம் என் சென்னியில் விளைந்தது; திருவடியாக மலர்ந்தது எனத் தம்மனுபவம் அறிவித்து, இப்பேறு நுமக்கும் உளதாம் எனச் சீவனுக்கு உறுதிப்படுத்தியதாம்.*

--------

***சிவ விளைவு***

***ஆசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**579. தேவ தேவன்மெய்ச் சேவகன் தென்பெ ருந்துறை நாயகன்**
**மூவ ராலும் அறியொ ணாமுத லாய ஆனந்த மூர்த்தியான்**
**யாவ ராயினும் அன்பரன்றி அறியொணாமலர்ச் சோதியான்**
**தூயமா மலர்ச் சேவ டிக்கண்நம் சென்னி மன்னிச்சுடருமே. 1**

***உரை :-** விண்ணவர்க்குத் தலைவன், மெய்யான வீரன், அழகிய திருப்பெருந்துறை மன்னன், மும்மூர்த்திகளாலும், அறியக் கூடாத ஆதியான பேரின்ப வடிவினன், அன்பர் தவிரப் பிறர் எவராலும் அறிய முடியாத பூவொளி மேனியன், அவரது பரிசுத்தமான பெருமை பொருந்திய தாமரைபோன்ற செய்ய திருவடியின்கண் நமது தலை நிலைபெற்றுப் பொருந்தி விளங்கும்.*

*அன்பர் அன்றி யாவராயினும் அறியொணா மலர்ச்சோதியான் - சிவாகமவிதிப்படிச் சிவாநுபூதிமானாகிய ஆசாரியன் இருந்து காட்டி உபதேசிக்க, அங்ஙனம் நிற்கும் முறைமையில் நிற்கும் மெய்யன்பரன்றிப் பிறர் யாவராயினும் அவர்களால் அறியமுடியாத இதயத்தாமரையில் விளங்கும் ஒளிவடிவினன் என்பது. சிவபூசையில், புறத்தே சிவலிங்கத்துச் சிவனை ஆவாகனம் செய்யும்போதும், அதற்கு முன்பு அகப்பூசையாகிய அந்தர்யாக பூசை புரியும்போதும், சிவனை இதயமாகிய பதினாறிதழ்த்தாமரையின் நடுவில் பெருவிரலளவின தாகிய சோதி வடிவாகத் தியானிப்பதும், அப்பெருமானைப் புறப்பூசைக்கண் சிவலிங்கத்தினிடத்து ஆவாகிப்பதும் மரபாதலின், இங்ஙனம் முட்டாது மலர்கொண்டு பூசிக்கும் மெய்யன்பர்க்கு அன்றி, வேறு எத்தகையார்க்கும் அறிய ஒண்ணாத மலரின்கண் விளங்கும் சோதியாயினன் சிவன் என்றார்.*

*தூய சேவடி, மாமலர்ச் சேவடி எனக் கூட்டுக. பாசங்கள் சென்று பற்றாது இயற்கையே தூய்மையான சேவடி, அநுபூதி மான்கட்குத் தாமரையாகிய பெரிய மலர்போல அநுபவிக்கத்தக்க திருவடி என்க.*

*சேவடி இரண்டாயினும், சிவாநுபவ முதிர்ச்சியால் சென்னியில் ஊசிகுத்த இடமின்றிப் பல்லாயிரக்கணக்காகப் பல்கித் தோன்றுவதாக அடிகள் அநுபவிப்பதால் 'சேவடிக் கணம்' என்றார். கணம் - தொகுதி. மன்னி - நிலைபெற்று.*

***குறிப்பு :-** மும்மூர்த்திகளுள், பிரமனும், அயனும் ஞானம் பெறாதவர்கள். உருத்திரன் ஞானம்பெற் றிருப்பினும், அதிகார மலமுடையர். ஆதலான் மூவரையுங் கூறினர். மலர்ச்சோதி, மென்மையுங் குளிர்ச்சியு முடைய சோதி.*

**580.** **அட்டமூர்த்தி அழகன் இன்னமு தாய ஆனந்த வெள்ளத் தான்**
**சிட்டன் மெய்ச்சிவ லோக நாயகன் தென்பெ ருந்துறைச் சேவகன்**
**மட்டு வார்குழல் மங்கை யாளையோர் பாகம்வைத்த அழகன்தன்**
**வட்ட மாமலர்ச் சேவ டிக்கண் நம் சென்னி மன்னி மலருமே. 2**

***உரை :-** எட்டு வடிவங்களையுடைய அழகன், இனிய அமுத மயமான பேரின்பப் பெருக்குடையான், பெரியோன், சிவலோகத் தலைவனாகிய மெய்ப்பொருள், அழகிய திருப்பெருந்துறையில் வீற்றிருந்த வீரன், தேன்மணங் கமழும் நீண்ட கூந்தலையுடைய உமையைத் தன் திருமேனியில் ஒரு பாகத்தே வைத்த வனப்பன்.*

*அவனது வட்ட வடிவாகிய தாமரை மலர் போன்ற செய்ய பாதங்களின்மாட்டே நமது தலையானது நிலைபெற்று விளங்குவதாக.*

*உமாதேவியை ஒரு பாகத்து வைத்த அட்டமூர்த்தியாகிய அடிகள் திருவடிமலர்க்கூட்டம் என் சென்னியில் நிலைபெற்று மலரும் என்பது கருத்து.*

*அட்டமூர்த்தி என்பதனால் இறைவனுடைய எல்லாமாயிருக்குந் தன்மையும், அழகன் என்பதால் எல்லாவுயிர்களின் உள்ளத்தைக் கவரும் ஆற்றலும், ஆனந்தவெள்ளத்தான் என்பதால் அளவிலின்ப முடைமையும், சிட்டன் என்பதால் முழுமுதற்றன்மையும், சிவலோக நாயகன் என்பதால் வீடுபேற்றினையளிப்பவன் அவன் ஒருவனே என்ற தனிமையும், தென்பெருந்துறைச் சேவகன் என்பதால் எளிவந்த கருணையுடைமையும், மங்கையாளை ஓர்பாகம் வைத்த அழகன் என்பதால் போகியாயிருந்துயிர்க்குப் போகம் நல்குதலையும் உணர்த்தியமை காண்க.*

*சிட்டன் - எல்லாரையும் கற்பிப்பவன். சிஷ்டன் என்பதன் திரிபு. அதனால் பெரியவன் என்று பொருள் காணப்பெற்றது. யாவர்க்கும் பெரியோன் என்பது பழையவுரை. சிட்டம் - ஒழுக்கம் எனப் பொருள் கொள்வாரும் உளர். சேவகன் - வீரன். குதிரைச்சேவகன் என்பது பழையவுரை.*

***குறிப்பு :-** நிலம், நீர், தீ, கால், வான், ஞாயிறு, திங்கள், உயிர் என்பன இறைவனது அட்டமூர்த்தம். சிட்டன் - ஆசாரமுடைய பெரியோன். மட்டு - தேன். மலரும் - விளங்கும்.*

**581. நங்கை மீரெனை நோக்குமின் நங்கள் நாதன் அம்பணி கொண்டவன்**
**தெங்கு சோலைகள் சூழ்பெ ருந்துறை மேய சேவகன் நாயகன்**
**மங்கை மார்கையில் வளையுங் கொண்டெம் உயிருங் கொண்டெம் பணிகொள்வான்**
**பொங்கு மாமலர்ச் சேவ டிக்கண்நம் சென்னி மன்னிப் பொலியுமே. 3**

***உரை :-** பெண்களே, என்னைப் பாருங்கள். நமது தலைவன் கங்கையை அணியாகக் கொண்டவன். தென்னைமரச் சோலைகள் சூழ்ந்த திருப்பெருந்துறையில் வீற்றிருந்த வீர முதல்வன். பெண்களது கையிலுள்ள வளையல்களையும் எமது உயிரையுங் கவர்ந்து கொண்டு எமது பணிவிடைகளையும் ஏற்றுக்கொள்வானாகிய அவனது விளங்குகின்ற தாமரை மலர்போன்ற செய்ய பாதங்களின் கண்ணே*

நமது தலைகள் நிலையாகப் பொருந்திச் சிறப்புறுவனவாக.

பெண்களே! வாருங்கள்; நம் வளையலையும் உயிரையும் கொண்டு எம்மைப் பணிகொள்ளும் ஆன்மநாதப்பெருமானுடைய திருவடிமலர்கள் நம் சென்னி மன்னிப் பொலியும் என்பது கருத்து.

ஆன்மநாயகன் ஒருவனேயாக, ஏனைய அயன் அரி முதல் மக்களீறான அனைவரையும் நங்கைமார்களாக அடிகள் அறிதலின், அனைவரையும் நங்கைமீர் என விளிக்கின்றார். நங்கைமீர் என்றது நாயகனை அறிந்து அனுபவிக்கத்தக்க பரிபாகமுற்ற யுவதிகளை என்க. பரிபாகமெய்தாத பேதையும் பெதும்பையுமாயின், நாயகனுடைய அனுபவம் அறியார்கள் ஆதலின் இங்ஙனம் பரிபாகமுற்ற மெய்யன்பரையே விளித்ததாகக் கொள்க.

யான் தலைவனோடு கூடி எங்ஙனம் களித்து இன்பமே வடிவாய்த் தன்வசமழிந்து வாழ்கின்றேன்; இங்ஙனம் இன்பவாழ்வு வாழ்கின்ற என்னைப் பாருங்கோள் என்று எடுத்துக்காட்டாகத் தம்மையே உணர்த்துகிறார்; நீங்களும் இத்தகைய இன்பம் எய்தலாம் என்ற சீவநிச்சயம் உண்டு பண்ணுதற்காக.

உன் நாயகனோடு புணர்ந்து இன்பம் நுகர, இன்பமயமேயாக உனக்கு உரிமை உண்டு; எங்கட்கும் உண்டோ? என ஐயம் அவர்கட்குத் தோன்றக்கூடுமெனத் திருவுளத்தெண்ணி, அவன் எனக்குமட்டும் நாதன் அல்லன், நம் அனைவருக்குமே நாதன் எனத் தேற்றுகிறார்.

அந்த நங்கைமார்கள் ஐயோ! அவன் கையில் சூலம், வாள், எரி முதலிய கொலைக்கருவிகள் இருக்கின்றனவே! ஆதலால், யாங்கள் அவனை அணுகவும் அஞ்சுகிறோம் என்றதாக எண்ணி அவை யாவும் கொலைக் கருவிகளாயினும் கொல்வன அல்ல; அழகுக்காக அணியப் பெற்றனவே; இக்கருவிகளைக் கொண்டு கொன்றதாக அவன் வரலாற்றில் எங்காவது கண்டும் கேட்டும் இருக்கின்றீர்களா? அஞ்சாதே வாருங்கள் என்கிறார்.

**குறிப்பு :- அம்பு, அப்பு என்பதன் மெலித்தல் விகாரம். அப்பு - நீர்; கங்கை. 'நம்பணி'யெனப் பாடமோதி, நமது வேலையை ஏற்றுக் கொண்டவன் என்பாரு முளர். சேவகன் - ஆண்மை யுடையவன். உடம்பு மெலியும்படி உருக்குதலால், வளைகள் கழல்வன வாயினவென்ற கருத்ததுபற்றி, 'வளையுங் கொண்டு' என்றார். உயிர்ப் போதத்தை யொழித்தலால், 'உயிருங் கொண்டு' என்றார். பசுபாசத்தை யறுத்தல் கூறியவாறு. பொங்கு - விளங்கு.**

582. பத்தர் சூழப் பராபரன் பாரில் வந்து பார்ப்பானெனச்
சித்தர் சூழச் சிவபிரான் தில்லைமூதூர் நடஞ்செய்வான்
எத்தனாகி வந்தில் புகுந்தெம்மை ஆளுங்கொண்டெம் பணி கொள்வான்
வைத்த மாமலர்ச் சேவடிக்கண் நம் சென்னி மன்னி மலருமே. 4

***உரை :-*** *அன்பர்கள் புடைசூழ மிக மேலோனாகிய பெருமான் அந்தணனாக வடிவங்கொண்டு நிலமிசை எழுந்தருளி வந்தமையோடு ஞானிகள் சூழ, அச்சிவபெருமான் தில்லையாகிய பழைய பதியிலே சபையின்கண் கூத்தியற்றுவான், தந்திரக்காரனாக வந்து எமது வீட்டிற் புகுந்து எம்மை அடிமையாக்கி எமது பணிவிடையை ஏற்றுக் கொள்ளுவான். அவன் சென்னிமிசை வைத்த திருவடித் தாமரைக் கண்ணே நமது தலைகள் பொருந்தி விளங்குவனவாக.*

*இறைவன் பெரிய எத்தன். எத்தன் - தந்திரக்காரன்; ஏமாற்றிப் பிழைப்பவன். வருகின்றகாலத்துச் சிவனடியார்கள் பலர் புடைசூழக் குருநாதனாக வந்தான்; சித்தர்கள் பக்கங்களில் நின்று சேவிக்கத் தில்லை மன்றினுள் திருநடம் புரிந்தான்; பின்னரோ மெதுவாக எம் வீட்டில் யாம் தனியே இருக்கும் போது புகுந்துவிட்டான்; எம்மை இல் ஆளாகக் கொண்டான்; எம்மை ஆட்டிப் படைக்கின்றான்; அவன் அருளால் சூட்டிய காதல் அடையாளமாகிய மலர்கள் இதோ எம்சென்னியில் நிலைபெற்றுள்ளன என்று சிவவிளைவைத் தெரிவித்தல் காண்க.*

***குறிப்பு :-*** *பராபரன், சிவபிரான் வந்து நடஞ்செய்வான்... புகுந்து பணிகொள்வான், வைத்த.... மலருமே யென முடிக்க, சித்தர் - சித்துடையவர், ஞானிகள். இல், உள்ளத்திற்கறிகுறி.*

**583. மாய வாழ்க்கையை மெய்யென் றெண்ணி மதித்திடா வகை நல்கினான்,**
**வேய தோளுமை பங்கன் எங்கள் திருப் பெருந்துறை மேவினான்,**
**காயத் துள்அமு தூறஊறநீகண்டு கொள்ளென்று காட்டிய,**
**சேய மாமலர்ச் சேவ டிக்கண்நம் சென்னி மன்னித் திகழுமே. 5**

***உரைநடை :-*** *இரண்டா மடியை முதலிற் கொள்க.*

***உரை :-*** *மூங்கிலின் தன்மையுடைய தோளினளாகிய உமை பாகன், திருப்பெருந்துறையில் விரும்பி வீற்றிருந்தவன், பொய்யாகிய உலக வாழ்க்கையை மெய்யென்று கருதி அதனைப் பொருட் படுத்தாத முறையை எனக்கு அளித்தான். உடம்பிலே ஆனந்த அமுதமானது*

சுரக்கச் சுரக்க, நீ பேரின்ப நிலையை அறிந்து கொள்வாயென, அடையாளங் காண்பித்த செம்மையாய திருவடித் தாமரைக்கண்ணே நமது தலைகள் பொருந்தி விளங்குவனவாம்.

வண்டூதப் பூவினுள் தேன் சுரப்பதுபோல, கன்று முட்ட ஆவின்மடியிற் பால்சுரப்பதுபோல, அவன் என்னுடன் தோய என் உடலில் இன்ப அமுது ஊறிக்கொண்டே இருந்தது; இன்ப நுகர்ச்சியில் யான் பரவசப்பட்டு அவ்வநுபவத்தையும் அறியமாட்டாது மயங்கிக் கிடந்தேன்; அப்பொழுது சிறிது தெளிவித்து இவ்வநுபவத்தைக் கண்டுகொள் என்று காட்டியது என்தலையில் அவன் சூட்டிய திருவடிமலர்; அம்மலர் என்றும் நிலைபெற்று விளங்கிக்கொண்டேயிருக்கிறது என்ற செய்யுள் அநுபவத்தைச் சொற்கள்தோறும் ஊன்றி நின்று அறிக.

காயத்துள் அமுது ஊற ஊற என்பது சிவவிளைவையும், சேவடி மன்னி மலரும் நீங்களும் வாருங்கள் எனக் குறிப்பான் அழைப்பது சீவநிச்சயத்தையும் தெரிவித்தல் காண்க.

**குறிப்பு :-** மாயம் - பொய், சூழ்ச்சி, மயக்கம். வேய் - மூங்கில். வேய - குறிப்புப் பெயரெச்சம். திருவண்டப்பகுதியுள், காயத்தமு தூறலை வர்ணித்தமை காண்க. பங்கன், மேவினான், நல்கினான், சேவடிக்கண் திகழுமேயென முடிக்க.

**584.** **சித்தமே புகுந்தெம்மை யாட்கொண்டு தீவினைகெடுத்துய் யலாம்,**
**பத்தி தந்துதன் பொற்கழற்கணே பன்மலர் கொய்து சேர்த்தலும்,**
**முத்தி தந்திந்த மூவுலகுக்கும் அப்புறத்தெமை வைத்திடும்,**
**அத்தன் மாமலர் சேவடிக்கண்நம் சென்னி மன்னி மலருமே. 6**

**உரை :-** உள்ளத்தே புகுந்தருளி எம்மை அடிமையாகக் கொண்டு, தீவினைகளை யொழித்து உய்வதற்குரிய அன்பினைத் தந்து அவ்வன்பு காரணமாகத் தனது அழகிய திருவடியின் கண்ணே நாம் பல்வகைப் பூக்களைக் கொய்து சாத்துதலும், வீடளித்து நம்மை, மேல், நடு, கீழ் என்ற மூவிடத்துமுள்ள உலகங்களுக்கு அப்பால் உள்ள பேரின்ப நிலையில் வைத்திடும் அப்பனுடைய செவ்விய திருவடித் தாமரைக்கண், நமது தலைகள் பொருந்தி மகிழ்ச்சியுடன் விளங்கும்.

சித்தத்துள் புகுந்து எம்மை ஆட்கொண்ட பின்பு, யாம் செய்யும் செயல்கள் யாயும் சிவச்செயல்களே ஆம். ஆதலால், வினை ஏறாது.

ஆகவே சஞ்சித ஆகாமியவினை இல்லையாம். கருடன் பக்கத்தி லிருப்பவனைப் பாம்பு கடியாததுபோலச் சிவச்சார்பில் பிராரத்த வினையும் வலிகுன்றிப் பார்வை அளவில் கழியும் என்பதனைத் 'தீவினை கெடுத்து' என்றார்.

உய்யலாம் பத்தி - உய்தற்கு உபாயமாகிய அன்பு. அன்பு, உயிரின் பொதுக்குணமாக உலகியலில் போகப்பொருள்மீது திருப்பப்பெறின், வினைக்கு ஏதுவாய் உய்தியைக் கொல்லும்; இறைவனிடம் செலுத்தப் பெறுமாயின், வினைகளைக் கெடுத்து உய்தியைத் தரும். இவற்றுள் இறைவன் உதவியது 'உய்யலாம் பத்தி' என்றதாம்.

புலர்வதன் முன் பூப்பறித்திட்டு வழிபடுதலே அன்பர் செயலாதலின் அங்ஙனம் யான் பூசித்தலும், அதற்குப் பயனாக வீடு பேற்றைத் தந்தான்; கிரியையும் யோகமும் கலந்த நெறியாய் ஞான வாயிலான பூசைக்கு ஞானிகள் எய்தும் பேரின்பத்தை நல்கினான்; என் தகுதி நோக்கியதன்று அவன் கைவண்மை; தன் தகுதி நோக்கியது என்று பாராட்டியவாறு.

மூவுலகு - மண், விண், பாதலம் என்பன. இவை மாயா காரியமான உலகுகள். முத்தியுலகு மாயாதீதமானதாதலால், இம்மூன்றுலகுக்கும் அப்புறத்ததாகிய வீட்டுலகத்தே எம்மை விளங்க வைத்தனன்.

***குறிப்பு :-*** *சித்தம் - நினைவென்பாரு முளர். பொன் - அழகிய. தத்துவச் சார்பாய உலகங் கடந்த முதல்வனோடு கலத்தலாகிய நிலை யென்பார் 'மூவுலகுக்கு மப்புறத்தே' என்றார்.*

**585.** **பிறவி யென்னுமிக் கடலை நீந்தத்தன் பேரருள் தந்தரு ளினான்**
**அறவை யென்றடி யார்கள் தங்க ளருட்கு ழாம் புக விட்டுநல்**
**உறவு செய்தெனை உய்யக்கொண்ட பிரான்தன் உண்மைப் பெருக்கமாம்**
**திறமை காட்டிய சேவடிக்கண்நம் சென்னி மன்னித் திகழுமே. 7**

***உரை :-*** *பிறவியாகிய இந்தக் கடலை நீந்துவதற்குத் தன் பேரருள் கொடுத்தருளினான். என்னை ஆதரவில்லாதவ னென்பது கருதி அடியார்களுடைய அருட்கூட்டத்திற் புகுவித்து, அவர்களை எனக்குச் சுற்றத்தாராக்கி, என்னைப் பிழைக்கும்படி ஆட்கொண்ட வள்ளலின் மெய்யான மிகுதிப்பட்ட திறமைகளைக் காண்பித்தருளிய சேவடிக் கண் நமது தலைகள் பொருந்தி விளங்குவனவாம்.*

*குறிப்பு :- அறவை - எல்லாம் அற்றவன்; அநாதை. பெருக்கமாந் திறமை - மிகுதியான திறமை.*

**586.** **புழுவி னாற்பொதிந் திடுகுரம்பையிற் பொய்தனையொழி வித்திடும்**
**எழில்கொள் சோதியெம் ஈசன் எம்பிரான் என்னுடையப்பன் என்றென்று**
**தொழுத கையினராகித் தூய்மலர்க் கண்கள் நீர்மல்குந் தொண்டர்க்கு**
**வழுவிலா மலர் சேவடிக்கண் நம் சென்னி மன்னி மலருமே. 8**

*உரை :- புழுக்களினாற் பொதியப்பட்டுள்ள உடம்பிலே நிலையாத வாழ்க்கையை நீக்கிவிடும் எழுச்சியுடைய ஒளியான எமது ஆண்டவனே, எம்பெருமானே, என்னுடைய தந்தையே என்று சொல்லிச் சொல்லிக் கூப்பிய கையையுடையராய்ப் புனிதமான பூப் போன்ற கண்களிலே நீர் பெருகப் பெற்ற அடியவர்கட்குத் தவறாது நலம் பயக்குஞ் செய்ய திருவடித் தாமரையின்கண் நமது தலைகள் பொருந்தி விளங்குவனவாம்.*

*குறிப்பு :- பொய் - நிலையில் வாழ்க்கை. எழில் - எழுச்சி; அழகு. உள்ளம் புனிதமாகவே, கண்களும் புனிதமாயின போலும்; ஆதலால், 'தூமலர்க் கண்கள்' என்றார்.*

**587.** **வம்ப னாய்த்திரி வேனை வாவென்று வல்வி னைப்பகை மாய்த்திடும்**
**உம்ப ரான்உல கூடறுத்தப் புறத்த னாய்நின்ற எம்பிரான்**
**அன்ப ரானவர்க் கருளி மெய்யடி யார்கட் கின்பந் தழைத்திடுஞ்**
**செம்பொன் மாமலர்ச் சேவ டிக்கண் நம் சென்னி மன்னித் திகழுமே.**
**9**

*உரை :- வீணனாய் அலைவேனை 'நீ இங்கே வா' என்றழைத்து எனது கொடிய வினையாகிய பகையினை அழித்திடும் வானவன், உலகங்களெல்லாவற்றினூடும் இயைந்து அவற்றிற்கப்பாற்பட்டவனாய் நின்ற எமது தலைவன், அன்பராயினார்க்கு பேரின்பத்தைப் பெருக்கும் அவனது செவ்விய பொன்போன்ற தாமரை மலரையொத்த திருவடியின்கண், நமது தலைகள் பொருந்தி விளங்குவனவாம்.*

*குறிப்பு :- வம்பன் - பயனற்றவன். உம்பரான் - மேலுலகத்தான் 'உலகூடறுத்து' என்றது அனற்பிழம்பாய் அயன்மால் அடிமுடி தேட நின்ற நிலையைக் குறிக்கும்.*

588. முத்த னைமுதற் சோதியை முக்கண் அப்பனை முதல் வித்தினைச்
சித்த னைச்சிவ லோக னைத்திரு நாமம் பாடித் திரிதரும்
பத்தர் காள்இங்கே வம்மின்நீர் உங்கள் பாசந்தீரப் பணிமினோ
சித்த மார்தரும் சேவ டிக்கண்நம் சென்னி மன்னித் திகழுமே. 10

***உரை :-*** *இயல்பாகவே பாசநீக்கமுள்ளவனை, ஆதியான ஒளியானவனை, மூன்று கண்களையுடைய தந்தையை, எல்லாவற்றிற்கும் அடிப்படையான வித்துப் போல்வானை, ஞான வடிவனை, சிவலோக நாதனை, அவன் திருப்பெயர் கூறிப்பாடி அலையும் அன்பர்களே இங்கே வாருங்கள்; நீர், உங்கள் மலமறும்படி வணங்குங்கள். என் உள்ளத்தில் நிறைந்த செய்ய திருவடிக்கீழ் நமது தலைகள் பொருந்தி விளங்குவனமாம்.*

*சிவநாமங்களைப் பாடித் திரியும் பத்தர்களே! இங்கே வாருங்கள்; உங்கள் கட்டு அகலக் கழல் பணியுங்கள்; மனம் நிறைந்த அவன் திருவடிகள் என் சென்னியில் நிலைபெற்று விளங்கும் என்பது கருத்து.*

*முத்தன் - மலங்களினின்று விடுபட்டவன். ஆதி முத்தரும் அநாதி முத்தரும் என முத்தர் இருவகையர். ஆதி முத்தர் மல கன்மங்களி லிருந்து இறைவன் அருளால் விடுதிபெற்று உயர்ந்தோர். அநாதிமுத்தர் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவர். அநாதி முத்தன் சிவபெருமான் ஒருவனே ஆதலால் அடைமொழியின்றி 'முத்தனை' என்றார்.*

*சோதி - ஒளிப்பொருள். அவை சூரியன் சந்திரன் தீ முதலியவை. அவற்றிற்கெல்லாம் ஒளி வழங்கும் பொருளாதலின் 'முதற்சோதியை' என்றார்.*

*முக்கண் அப்பன் - சோம சூரிய அக்கினிகளைக் கண்ணாக உடைய தந்தை. முக்கண் விநாயகர் முதலிய ஏனையோருக்கும் உளவாயினும் சிவபெருமானுக்கே உரியதாகலின் 'முக்கண் அப்பனை' என்றருளினார்.*

*உலக வித்து எது? மாயை; மாயைக்கு வித்து எது? சத்தி; சத்திக்கு வித்து யார்? சிவமென பீஜாங்குர நியாயத்தின் முடிவு சிவத்தினிடம் சென்று தங்குதலின் 'முதல் வித்தினை' என்றனர்.*

*சித்தன் - சித்திகளில் வல்லவன்; இறைவன். எல்லாம் வல்ல*

*சித்தரானமைபற்றிச் 'சித்தனை' என்றார்.*

*இவ்வண்ணம் உரை மனங்கடந்து நிற்கும் ஒண்மையனாயினும், எம்மனோர் கண்டுய்யச் சிவலோகம் எனப்பெறும் திருப்பெருந்துறைக் கண்ணும் எழுந்தருளியுள்ளான் என்பார் 'சிவலோகனை' என்றார்.*

*திருநாமம் - அவனுடைய பெயர்கள். நாமம் - உருவத்தைப் பற்றி நிற்பது. உருவங்கள் பலவற்றிடையே வேறுபாடுணர்தற்காகக் காரணம் கருதியும் கருதாமலும் வழங்கப்பெறுவது. இறைவன் உருவற்ற பொருளாகவே, அவற்கு நாமம் இல்லையாயினும், ஆன்மாக்கட்கு அருள்செய்வதற்காக உருமேனி தாங்கியும் நாமந்தாங்கியும் வருவன் ஆதலின் அப்பெயர்களைப் பாடி அன்பர்கள் ஏத்துகின்றனர். அங்ஙனம் பாடியேத்தும் அன்பர்காள் வம்மின் என்று அழைக்கின்றார்.*

***குறிப்பு :-** இறையன்பர்களைத் திருப்பெருந்துறை ஞானாசாரியன்பால் வந்து மலமறப் பெறுமாறு தூண்டுதல் இதனுட் கூறப்பட்டது. சித்தம் என்பது நினைவையுங் குறிக்கும்.*

***இறைவன் திருவடி தூயமாமலர் போல்வது; வட்டமானது; பொங்குமாமலர் போன்றது; சிவந்தது; முத்தியைத் தருவது; உலகங் கட்கெல்லாம் அப்புறத்தில் எம்மை வைப்பது; மெய்ம்மை பெருக்கும் ஆற்றல் வாய்ந்தது; பொற்றாமரை போன்றது; பாசம் தீர்ப்பது என அதன் இயல்பை விளக்கி, அத்தகைய திருவடி நம் சென்னிமேல் விளங்கும்; பத்தர்காள்! நங்கைமீர்! வாருங்கள்; பணியுங்களெனச் சீவனுக்கு உறுதியை உபதேசிப்பது சென்னிப்பத்து.***

***திருச்சிற்றம்பலம்.***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 43. திருவார்த்தை

*வாதவூர்வள்ளல் திருப்பெருந்துறையில் தம் சென்னிமிசை திருவடி மன்னித்திகழ்வதை அநுபவித்து வீற்றிருக்கும் நாளையில், சூழவுள்ள சிவபத்தர்களை நோக்கி, அவர்கட்கும் ஆர்வம் விளையக் குருந்தடியிற் குருவாக இறைவன் வந்த காலத்து உபதேசித்த உபதேச மொழிகளின் அநுபவப்பொருளை அறிகின்றவர்களே எம் இறைவராவர் என அவ்வுபதேச வார்த்தையின் அருமையை வியந்து பாராட்டுகின்றார்கள்.*

*வார்த்தை - சொல். கன்னியர் தம்முள் தனித்துக் கூடியிருக்குங் காலத்து, ஒருத்தியைப் பார்த்து ஒருத்தி உன் தலைவன் யார்? ஒளியாது சொல் என வினவ, மற்றவள், வார்த்தை சொல்வதாக அமைந்தது இப்பகுதி. முன்னர், 'எம் கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க' (173) என்றதுபோல, இப்பகுதியுள் இறைவனுடைய அருட்செயல்களின் அடிப்படையுண்மையை அறியும் அநுபூதிமான்களே எம்பிரானாவர் என்றமை தெளிக.*

*இதுவரை நின்னால் அறியப்படாதது இது; நான் சொன்னவுடன் நீயும் அறிந்து இன்புறுவாய் என்றும் கூறியதாம்.*

*"மலம் அறுக்கும் திருவார்த்தைப் பத்தும், இலகுமருள் அறிவிக்க அறிதல்" என்பது பழையவுரை காட்டும் அகத்தியச் சூத்திரம். இதன் பொழிப்பு, முற்பதிகத்துத் திருவடியின்பமலர் சூட்டியதைக் கண்டு, அதன்மேல் அவனே தானாய் ஆனந்தம் பெறுதலும், அடியார்க்கு அருளுதலும், அருட்பெருங்கருணையை எடுத்தெடுத்துரைத்தலும் அன்பின் முறைமையாம் என அறிவிக்கிறது என்பது.*

*"அறம்பெருகும் பெருந்துறையிற் றமையாண்ட செயன்முதலாய் அரன் சீராட்டின், திறமறிவார் எம்பிரா னாவரென உரைத்தல் திரு வார்த்தை யாகும்" என்பது பழைய திருப்பெருந்துறைப் புராணம்.*

*இவை அனைத்தையும் ஒருங்கு எண்ணின், குருவாக எழுந்தருளிய அரனாருடைய திருவிளையாடல்களின் அடிப்படையுண்மை அனுபவப் பொருளறிவாரே எம் தலைவராவர் என்று மகளிரோடு வார்த்தையாடுதல் திருவார்த்தையாம் என்பது பெறப்படும்.*

--------

***அறிவித்து அன்புறுதல்***

***அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**589.** மாதிவர் பாகன் மறைபயின்ற வாசகன் மாமலர் மேய சோதி
கோதில் பரங்கரு ணையடியார் குலாவு நீதிகுண மாகநல்கும்
போதலர் சோலைப் பெருந்துறையெம் புண்ணியன் மண்ணிடை
வந்திழிந்
தாதிப் பிரமம் வெளிப்படுத்த அருளறிவார் எம்பிரா னாவாரே. 1

***உரை :-*** *பெண்ணமர்ந்த பாகத்தன், மந்திரங்கள் பொருந்திய மொழி உடையான், இதயமலரில் வீற்றிருக்கும் ஒளியானவன், குற்றமற்ற மேலான அருள் வடிவன், அடியார்கள் கொண்டாடும் நீதியானவன், நீதியினையே குணமாகக் கொண்டருள் புரிகின்ற அரும்புகள் மலர்கின்ற சோலை சூழ்ந்த திருப்பெருந்துறையில் தங்கி யருளிய எமது புண்ணியமூர்த்தி, மண்ணுலகத்தே இறங்கி வந்து, எல்லாவற்றிற்கும் முதலாகிய பெரும்பொருளை வெளிப்படுத்திய அருட்செய்கையை அறியுந் தன்மையார் எமது தலைவராவர்.*

*மாமலர் மேயசோதி - மூலமுதல் பிரமரந்திரம் வரை நாலிதழ் முதல் ஆயிரம் இதழ் வரையுள்ள தாமரை விளங்குவதாகவும், அவற்றுள் இறைவன் சோதியாக எழுந்தருளியிருப்பதாகவும் யோக நூலார் உரைப்பர். அவற்றுள், ஆயிர இதழ்த்தாமரையுள் இருக்கும் சோதியே ஈண்டு ஓதப்பட்டதென்க.*

*காரணமின்றி உயிர்கள்மாட்டு எஞ்ஞான்றும் செலுத்தப் படுதலின் அதனைக் ‘கோதில் பரங்கருணை’ என்றார். இதனைக் காட்டிலும் மிக மேன்மையானது ஒன்றின்மையின் பரங்கருணை என்றதும் காண்க.*

***குறிப்பு :-*** *இவர்தல் - ஊர்தல், அமர்தல். மறை - இரகசிய மெனக் கொண்டு உபதேசமொழி பயின்ற வாசகனென்பாருமுளர். கைம்மாறு கருதாத கருணை யாதலால் ‘கோதில் பரங்கருணை’ என்றார். மலர் என்பது இதயத்திற்கு ஆகுபெயர். அடியார் குலாவு நீதி குணமாக நல்கும் என்பதற்கு அடியார் கைக்கொண் டொழுகு முறையைக் குணமாகக் கொண்டருளுமெனவுங் கூறுவர். போது - விரியும் பருவத்தரும்பு. வெளிப்படுத்த என்பது ‘வெளிப்படுத்திய’ என்பதன் குறுக்கம்.*

590. மாலயன் வானவர் கோனும் வந்து வணங்க அவர்க்கருள் செய்தாஈசன்,
ஞாலம் அதனிடை வந்திழிந்து நன்னெறி காட்டி நலம்திகழுங்,
கோல மணியணி மாடநீடு குலாவும் இடவை மடநல்லாட்குச்,
சீல மிகக்கருணை யளிக்குந் திறமறிவார் எம்பிரா னாவாரே. 2

***உரை :-*** *திருமாலும், பிரமனும் தேவர்கட்கரசனாகிய இந்திரனும் வந்து பணிய அவர்கட்கு அருள்புரியும் ஆண்டவன், உலகத்தினிடை குருவாகி இறங்கிவந்து ஞானநெறியினை அறிவுறுத்தி அழகு விளங்குகின்ற நல்ல வடிவுடைய ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட மாடங்களை உடையதாய் நெடுநாள் விளங்குகின்ற திருவிடை மருதூரில் ஒரு பெண்ணடியவர்க்குக் குணநய மிகும்படியாக அருள் செய்த வகையினை அறிபவர்கள் எமது தலைவராவர்.*

*நன்னெறி - நல்ல வழி; பேரின்பமயமாகிய வீட்டுலகினை எய்துதற்குரிய எளிய இன்பமானவழி. அது பக்திநெறி என்க. நலம் திகழும் மாடம், மணியணி கோல மாடம் எனக் கூட்டுக. இடைவைக்கண் உள்ள மாடங்கள் வெறும் போகாலயங்களாக மட்டுமில்லாமல் சிவப்பணி செய்யும் தவச்சாலைகளாகவும் விளங்குதலின் நன்மைவிளங்கும் மாடமென்றார். உமையொரு பாதியனாக இறைவன் போகியாயும் யோகியாயும் இருத்தல் போலச் சைவசீலர்களும் இல்லறத்தினின்றே பதிபுண்ணியங்களைச் செய்து வீடுபேற்றிற்கும் வழிதேடுவர் என்க. இது மாடங்களின் ஒழுக்க நலம் உரைப்பது.*

*மணிகளால் அலங்கரிக்கப்பெற்ற அழகிய மாடம் என்றது மாடங்களின் செல்வவளம் கூறியது. நீடு குலாவும் இடைவை - உயர்ந்து விளங்கும் இடைமருதூர்.*

*சீலம் மிகக் கருணை அளிக்கும் திறம் - ஒழுக்கம் உயர்ந்து தோன்றக் கருணையளித்த தன்மையை. அறிவார் எம்பிரானார் என்க.*

*வரகுணபாண்டியன் சிறந்த சிவபத்தன். வேப்பம்பழங்களைச் சிவலிங்கமெனக் கருதி வழிபட்டவன். தவளைகள் ஒலியை வேத பாராயணமாக எண்ணிப் பரிசில் வழங்கியவன். இடைமருதூர்க் கோயிலில் கிடந்த நாய்க்கட்டத்தைத் தானே எடுத்து எறிந்தவன். இத்தகைய அன்பன் திருமணம் புரிந்துகொண்டான். மணவறையை விட்டு எழுந்ததும், தன் மனைவி மிக்க அழகியாக இருப்பதை எண்ணிச் சிறந்த பொருள்கள் சிவபெருமானுக்கே உரியனவாயிற்றே ஆதலால் இவளை மகாலிங்க மூர்த்தியினிடமே அனுப்பிவிடுவோம்*

*என்று எண்ணினான். திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றான். மகாலிங்கமூர்த்தியை ஏற்றுக்கொள்ளும்வண்ணம் வேண்டினான். பெருமானும் தமது சிவலிங்கத் திருமேனியில் அவள்மறைய இடந்தந்து கருணை பாலித்தார். அரசன் மகிழ்ந்து அரண்மனைக்குச் சென்றான். மறுநாள் விடியற்காலை அருச்சகர் வழிபாட்டிற்காக வந்தபோது சிவலிங்கத் திருமேனியில் பெண்ணின் வலக்கைமட்டும் தொங்கிக் கொண்டிருந்தது. இதனைக் கண்ட அரசன் என்ன குறையோ? என்று வருந்தினான். இறைவன் அசரீரியாக, திருமணக்காலத்தில் இக்கை உன்னால் தீண்டப்பெற்றது; மற்றும் அதனை விட்டுவைத்து உன் அன்பை உலகவர் உணர்ந்து ஈடேறவும் 'பெரிய அன்பின் வரகுணதேவன்' என உன்னைப் பாராட்டவுமாக விட்டுவைத்தோம் என்று கூறியருளினார். வரகுணன் தான் கரத்தைத் தீண்டியதும் பிழை என்று பெரிதும் வருந்தப் பெருமான் அதனையும் ஏற்றருளினா ரென்பது வரலாறு.*

*இடைவை மடநல்லாட்குச் சீலம் மிகக் கருணை அளிக்கும் திறம் என்பது அரசிக்குக் கற்பொழுக்கமாகிற சீலம் உயர்ந்து தோன்றக் கையை மட்டும் விட்டு, அவளை ஏற்று வீட்டுலகு அளித்த தன்மையென இவ்வரலாற்றோடு முழுதும் இணைதல் காண்க.*

***குறிப்பு :-** வந்திழிந்து என்பதை இழிந்து வந்து எனமாற்றுக. நலம் - அழகு. கோலம் - வடிவு. இடவை - திருவிடை மருதூர். அது பழம்பதியாதலின் 'நீடுகுலாவு' மென்றார். இதனை 'நல்லாட்கு' என்பதோடு முடித்து நெடிது அன்பு பாராட்டு மெனவு முரைப்பர். சீலம் - நல்லொழுக்கம். சீலமிகுதலைக் கண்டு அருள் செய்தாரென்றலுமுண்டு.*

**591. அணிமுடி ஆதி அமரர்கோமான் ஆனந்தக் கூத்தன் அறுசமயம்**
**பணிவகை செய்து படவதேறிப் பாரொடு விண்ணும் பரவியேத்தப்**
**பிணிகெட நல்கும் பெருந்துறை யெம் பேரரு ளாளன்பெண் பாலுகந்து**
**மணிவலை கொண்டு வான் மீன்விசிறும் வகையறிவார் எம்பிரா**
**னாவாரே. 3**

***உரை :-** அழகிய சடைமுடியை உடைய முதல்வன், விண்ணவர் தலைவன், ஆனந்தக் கூத்துடையவன், அறு சமயங்களும் தன்னை வணங்கும்படி செய்து மண்ணுலகத்தாரும், விண்ணுலகத்தாரும் வாழ்த்தி வழிபட அவர்கள் பிறவிநோய் ஒழியும்படி அருள் செய்யும்*

*பெருந்துறையையுடைய நமது பெருங் கருணையாளன் (வலைஞர் மகளாகிய) உமையம்மையாகிய பெண்ணினை மணக்க விரும்பித் தோணியேறி, அழகிய வலை கொண்டு பெரிய கெளிற்று மீனை வீசிப் பிடிக்குந் திறத்தை அறியுந் தன்மையார் எமது தலைவராவர்.*

***குறிப்பு :-*** *அறுசமய மென்றது உட்சமயங்களை. அவை கணபதி வழிபாடு, முருகன் வழிபாடு, அம்மை வழிபாடு, திருமால் வழிபாடு, கதிரவன் வழிபாடு, சிவ வழிபாடு என்று முரைக்கலாம். படவதேறி என்பதை மணிவலை கொண்டு என்பதனோடு முடிக்க. இதனுட் கூறப்பட்டதைத் திருவிளையாடற் புராணம் வலைவீசிய படலத்துட் காண்க.*

**592.** வேடுரு வாகி மகேந்திரத்து மிகுதுறை வானவர் வந்து தன்னைத்
தேட இருந்த சிவபெருமான் சிந்தனை செய்தடி யோங்களுய்ய
ஆடல் அமர்ந்த பரிமாஏறி ஐயன் பெருந்துறை ஆதிஅந்நாள்
ஏடர் களையெங்கும் ஆண்டுகொண்ட இயல்பறிவார் எம்பிரா
னாவாரே. 4

***உரை :-*** *மகேந்திர மலையில் வேட்டுவ வடிவங்கொண்டு தன் பாலிரத்தற்குரிய மிகுந்த குறைகளை உடைய விண்ணவர் போய்த் தன்னைத் தேடும்படியாக வீற்றிருந்தருளிய சிவபெருமான், அடியோங்கள் உய்வதை எண்ணி வலிமை பொருந்திய குதிரையில் ஏறினவன், தலைவனாகிய திருப்பெருந்துறை முதல்வன், அக்காலத்தில் தன்னுடைய நண்பர்களை எவ்விடத்து மாட்கொண்ட ருளிய தன்மையை அறியவல்லா ரெமது தலைவராவர்.*

*திருப்பெருந்துறை முதல்வன் எம்மை ஆட்கொள்ளக் குருநாதனாக எழுந்தருளிவந்த அந்நாளில், என்னைவிட்டு என் தோழர்களை ஆண்டுகொண்ட தன்மையை அறிபவர்களே எம் தலைவராவர் என்பது கருத்து.*

*இறைவன் திருவுள்ளக்கருத்தை உள்ளவாறறிந்து சொல்பவரே எம் தலைவர் என்பதாம்.*

*மிகு குறை வானவர் - மிக்க குறைகளையுடைய தேவர்கள், அவர்கட்குள்ள குறைகளாவன; சூரபன்மனாதியரால் விளையும் குறைபாடுகளும், காம கோபாதிகளில் கட்டுண்டு சாப தாபங்களைப் பெற்றுத் தீர்வுகாணாது வருந்துதலுமாம். தம் குறைகளை விண்ணப்பித்துப் போக்கிக்கொள்ள அவர்கள் வந்து தேடுகின்றனர்.*

இறைவன் வேடருருவம் தாங்கி, அவர்களுக்குச் சிவாகமப்பொருளை உபதேசித்து உய்யுநெறிகாட்டாது மறைந்திருந்தார். அவர்களுடைய பிராரத்த கன்மங்கள் நுகரப்பட்டுத் தொலைந்த பிறகு மன்னு மாமலை மகேந்திரமதனில் சொன்ன ஆகமம் தோற்றுவித்து அருளினாரென்பது வரலாறு.

எங்கும் ஆண்டுகொண்ட என்பது மலையில் வேடனாகவும், அலையில் வலைஞனாகவும், நாட்டில் குதிரைவீரனாகவும் எழுந்தருளி அவரவர் வடிவில் அவரவர்களை ஆண்டு உய்யக்கொள்வது இறைவன் இயல்பு என்பதை உணர்த்துகின்றது.

***குறிப்பு :-*** *'வேடுருவாகி' யென்பதை, 'தேடவிருந்த' என்பதனோடு முடிக்க. மகேந்திரம் பொதிகை மலைக்குத் தெற்கே யுள்ளதென சிவதருமோத்திரங் கூறும். அதனைக் கயிலாய மென்பாரு முளர். வேடுருவாகி யென்பதற்கு வேண்டுருவாகி யெனப்பொருள் கொண்டு இறைவனியக்க வடிவங் கொண்டிருந்தா ரென்பர். அக்கதை கேனோபனிடதத்திற் கூறப்பட்டது. அடியோங்களுய்யச் சிந்தனை செய்து என மாற்றுக. சிந்தனை செய்து என்பதைச் சிவ பெருமானுக்கும், அடியோங்கள் என்பதற்கு மியைப்பதுண்டு. ஆடல் - வலிமை. ஏறி என்பதை வினையெச்சமாகக் கொண்டு ஆண்டுகொண்ட என்பதனோடு முடிப்பது முண்டு. ஏடர்கள் - நண்பர்கள்.*

**593.** **வந்திமை யோர்கள் வணங்கியேத்த மாக்கரு ணைக்கட லாய்அடியார்**
**பந்தனை விண்டற நல்கும்எங்கள் பரமன் பெருந்துறை ஆதிஅந்நாள்**
**உந்து திரைக்கட லைக்கடந்தன் றோங்கு மதிலிலங் கைஅதனிற்**
**பந்தணை மெல்விர லாட்கருளும் பரிசறிவார் எம்பிரா னாவாரே. 5**

***உரை :-*** *விண்ணவர்கள் வந்து தன்னை வணங்கி வாழ்த்த அவர்கட்குப் பேரருள் புரியுங்கடலாய், அன்பர்களுடைய பாசக்கட்டு நீங்கி யொழியும்படி அருள் செய்யுமெங்கள் மேலோனாகிய திருப் பெருந்துறை முதல்வன், அக்காலத்திலே, திரைவீசுகின்ற கடலைக் கடந்து உயர்ந்த மதில் சூழ்ந்த இலங்கையின்கண், பந்தின் வடிவமைந்த மெல்லிய விரலை உடைய வண்டோதரிக்கு அருள்புரிந்த வகையினை யறிவார் எமது தலைவராவர்.*

*ஒருவன் தண்ணீர்வார்த்து வளர்க்கப் பிறனுக்கு இளநீர் வழங்கும் முடத்தெங்குபோல இறைவன், வானோர் வணங்க அடியார்கட்கு*

*வீடருளுதல் எங்ஙனம் பொருந்துவதாம் எனின், வானோர்கள் மிகு குறையுடையோர்; தொண்டர்களோ குறை ஒன்றுமில்லாதோர்; ஆகவே எமக்குப் பகை விலகவேண்டும், நலம் மிகவேண்டுமென்று காமியத்தைக் காதலிக்கும் தேவர்கள் வணங்கி ஏத்தவும், யார்க்கும் எதனையும் பருவமறிந்து ஊட்டியருளும் பரமன் அவர்களைக் கடைக்கணியாது, பற்றற்றான் பற்றினைப் பற்றிய அடியார்களுக்குப் பெரிய கருணைக்கடலாகி வீடருளுகிறான் என்பதாம்.*

*மண்டோதரி இராவணன் மாளிகையிலிருந்து இறைவனைத் தியானித்தாளாக, இறைவன் குருமேனி தாங்கியிருந்த கோலத்துடன் அங்குச் சென்று அவளுக்குக் காட்சியளிக்க, இறைவனுடைய பேரழகில் ஈடுபட்டுப் பேரின்பத்தைவிரும்பிக் கேட்க இருந்த அவள் மயங்கிச் சிற்றின்பத்தில் தன்னுடைய சிந்தையைச் செலுத்தினாள். அவளுடைய அறியாமையைக் கண்ட இறைவன், அவள் கற்பொழுக்கம் கெடாதிருக்க உடனே அந்த இடத்தைவிட்டு மறைந்தார். அவள் வருந்தினாள். அவள் கொண்டது ஒருதலைக் காமமாதலின் பெண்குழந்தை ஒன்று அவளுக்குப் பிறந்தது. அதனைப் பெட்டியுள் வைத்துக் கடலில் விட்டாள். அதுவே மிதிலையில் வந்து ஒதுங்கிப் புதையுண்டு ஜனகனுடைய உழுகால் நுனியில் வெளிவந்தது என்பது வரலாறு.*

*இத்திருப்பாடலும், இறைவன் மண்டோதரிக்கு அருளியது போல் யாம் எவ்விருப்பை நிறைவேற்ற வேண்டினும் அருளுவன் என்று உயிர்களுக்கு அறிவுறுத்தி அன்புறுதல் காண்க.*

***குறிப்பு :-** கடலாய் என்பதை நல்கும் என்பதோடு முடிக்க. பந்தனை - கட்டு; பாசம். விண்டு - பிரிந்து; நீங்கி. உந்துதிரை என்பதைத் திரை உந்து என மாற்றுக. அன்று - சாரியை.*

**594.** **வேவத் திரிபுரம் செற்றவில்லி வேடுவ னாய்க்கடி நாய்கள்சூழ**
**ஏவற்செ யல்செய்யுந் தேவர்முன்னே எம்பெருமான்தான் இயங்கு காட்டில்**
**ஏவுண்டபன்றிக் கிரங்கியீசன் எந்தை பெருந்துறை ஆதிஅன்று**
**கேவலங் கேழலாய்ப் பால்கொடுத்த கிடப்பறிவார் எம்பிரானாவாரே. 6**

***உரை :-** திரிபுரங்கள் வெந்துபோகும்படி கோபித்த வில்லாளன், வேட வடிவங்கொண்டு, காவல் நாய்கள் சூழ்ந்துவரத் தாம் ஏவுகின்ற பணியைச் செய்யும் விண்ணவர் முன்செல்ல எம்பிரான் தான் செல்லுகின்ற காட்டில் அம்பு தைத்திறந்த தாய்ப் பன்றிக்கு இரங்கி*

*ஆண்டவன் அப்பன், திருப்பெருந்துறை முதல்வன், அந்நாளில் தனிப் பன்றி வடிவங்கொண்டு, பன்றிக் குட்டிகளுக்குப் பால்கொடுத்த திருவுள்ளக் கருத்தை யறியுந் தன்மையார் எமது தலைவராவர்.*

*கிடப்பு - கிடக்கை. திருவுள்ளக்குறிப்பு அஃதாவது தமது காருண்ணிய ஆட்சியில் விலங்கினங்களுங்கூட வருந்துதல் கூடாது என்று அவைகட்கு ஏற்ப அவையேயாய் அருளும் சிறப்பாம்.*

***குறிப்பு :-*** *கடி - காவல். ஏவு - அம்பு. கேவலம் - தனிமை. வில்லி, எம்பெருமான், ஈசன், எந்தை, ஆதி, காட்டில் இரங்கி அன்று, கொடுத்த, கிடப்பு, அறிவார் என முடிக்க.*

**595. நாதம் உடையதோர் நற்கமலப் போதினில் நண்ணிய நன்னுதலார்**
**ஓதிப் பணிந்தலர் தூவியேத்த ஒளிவளர் சோதியெம் ஈசன்மன்னும்**
**போதலர் சோலைப் பெருந்துறை யெம் புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப்**
**பேதங் கெடுத்தருள் செய்பெருமை அறியவல்லார் எம்பிரானாவாரே. 7**

***உரை :-*** *வண்டின் ரீங்கார ஒலியினையுடைய அழகிய தாமரை மலர்களில் விரும்பி வைகும், அழகிய நெற்றியையுடையராகிய, கலைமகளும், திருமகளும் வாழ்த்தி வணங்கி மலர்தூவி வழிபடும்படி ஒளி மிகுகின்ற சோதி வடிவனாகிய எமது ஆண்டவன், வீற்றிருக்கும் மலர்கள் விரிகின்ற பொழில் சூழ்ந்த திருப்பெருந்துறையின்கண் எமது புண்ணியமூர்த்தி மண்ணுலகத்தே குருவாய்த் தோன்றியருளி வேற்றுமையைக் கெடுத்து அருள்செய்கின்ற பெருமையை அறிய வல்லவர்கள் எமது தலைவராவர்.*

*திருமால் தன் பகைவனை வென்ற வெற்றிச்செருக்குடன், வளைத்த வில்லையூன்றி அதன் நுனியில் முகவாய்க்கட்டையை வைத்து அயர்ந்தானாக, தேவர்கள் செல்லுருவெடுத்து அவன் வில்லின் நாணை அறுக்க, வில் திடீரென நிமிர்ந்து அவனுடைய தலையை எற்றியது. அதைக்கண்ட திருமகள் புற்றிடங்கொண்ட பெருமானைப் போற்றி மங்கலம் பெற்றாள் என்பது திருவாரூர்த் தலவரலாறு.*

*கலைமகளும், பிரமன் சிரம் கொய்யப்பெற்றபோது வருந்தி, அவனுயிரை மீளப்பெற்றாள் என்பது கண்டியூர்த் தலபுராண வரலாறு.*

*ஒளிவளர் சோதி - ஒருகாலைக்கொருகால் ஒளிமிக்கு வளர்கின்ற தீப்பிழம்பான அண்ணாமலையார் என்றதாம்.*

*பேதம் - வேற்றுமை. சீவன் சிற்றறிவும் சிறுதொழிலும் மலபந்தமும் உடையவன்; சிவன் முற்றறிவும் அருட்செயலும் அளவிலாற்றலும் இயல்பாகவே பாசங்களினீங்கிய தன்மையும் உடையவன் என்ற வேற்றுமை அகன்று அடியேன் அவனுடைய நிறைவில் நிறைவாய் விளங்க அருளியதைப் 'பேதங் கெடுத்தருள்செய் பெருமை' என்பதால் குறிப்பித்தவாறு.*

*இவ்வண்ணம் சிவ சீவ பேதத்தைப் போக்கிச் சிவமாக்கி ஆட்கொள்ளுந்தன்மையை அறிவித்த அவரே எம் தலைவர் என்று அன்புறுதல் காண்க.*

***குறிப்பு :-*** *நாதம் - வண்டுகளினொலி. நன்னுதலார் என்றமையாற் கலைமகளுந் திருமகளுங் கூறப்பட்டனர். சோதி என்பதைப் பெருந்துறை என்பதோடு சேர்ப்பது முண்டு. பேத மென்பது பாசத்தாலேற்பட்ட வேற்றுமை. பாசத்தை நீக்கி அத்துவிதக் கலப்பினை யருள் செய்தலால் 'பேதங் கெடுத்து' என்றார்.*

**596.** **பூவலர் கொன்றைய மாலைமார்பன் போருகிர் வன்புலி கொன்ற வீரன்**
**மாதுநல் லாளுமை மங்கைபங்கன் வண்பொழில் சூழ்தென்**
**பெருந்துறைக்கோன்**
**ஏதில் பெரும் புகழ் எங்கள் ஈசன் இருங்கடல் வாணற்குத் தீயில்**
**தோன்றும்**
**ஓவிய மங்கையர் தோள்புணரும் உருவறிவார் எம்பிரானாவாரே. 8**

***உரை :-*** *அழகு விளங்குகின்ற கொன்றைப் பூவினாலாகிய மாலையை யணிந்த மார்பன், போர் செய்தற்குரிய நகங்களைக் கொண்ட வல்லமை மிகுந்த புலியினைக் கொன்ற வீரன், உமை மங்கை பாகன், வளம்பொருந்திய சோலை சூழ்ந்த அழகிய திருப்பெருந்துறை மன்னன், குற்றமற்ற பெரும்புகழை யுடைய எங்கள் ஆண்டவன், பெரிய கடலரசனுக்கு நெருப்பிற் றோன்றிய சித்திரம் போன்ற அழகிய நங்கையர் தோள்களைச் சேர்ந்தருளும் அவன் திருவடியை அறிய வல்லார் எமது தலைவராவர்.*

*கன்மமே பிரமம் என்ற கொள்கையையுடைய தாருகாவனத்து முனிவர்கள், கங்காளவடிவுடன் காபாலியாய் வந்து தம் பத்தினியாரை நிலைகலங்கச் செய்த பிட்சாடனமூர்த்தியைக் கொல்லுவதற்காக அபிசார ஓமம் செய்தனர். ஓமகுண்டத்திலிருந்து புலி, பாம்பு, மான்*

*முதலிய பொருள்கள் தோன்றி, இறைவனைக் கொல்ல வந்தன. இறைவன் புலியை உரித்து, அதன் தோலை அரைக்கு ஆடையாக உடுத்தினார் என்பது வரலாறு. அதனை விளக்குவது 'போருகிர் வன்புலி கொன்ற வீரன்' என்பது.*

*ஆகமங்களை உபதேசிக்கின்ற காலத்து இறைவி பராமுகமா யிருக்க இறைவன் அவரை வலைப்பெண்ணாகச் சபித்தார். அம்மை இறைவனை வணங்கிச் சாபவிடையும் பெற்று, மதுரையின் கடற்கரையில் வலைஞர் குலத்திலே தீயினின்று தோன்றி வளர்ந்து வந்தார். இறைவன் அவரை மணந்துகொண்டாரென்பது வலைவீசிய திருவிளையாடல் வரலாறு.*

***குறிப்பு :-** பூ - அழகு. அலர் - விளங்கு. உகிர் - நகம். தாருகாவனத்து முனிவர் விடுத்த வேள்விப் புலியினைக் கொன்று அதன் தோலை யுரித்துப் போர்த்த கதை வெளிப்படை. ஏதில் - குற்றமில்லாத. ஈசன் என்பதை உரு என்பதனோடு முடிக்க. வாணன் - வாழ் + நன் - வாழ்பவன். இங்கே அரசனென்ற பொருளில் வந்தது. ஓவியம் - சித்திரம்.*

**597.** **தூவெள்ளை நீறணி எம்பெருமான் சோதிம கேந்திர நாதன் வந்து**
**தேவர் தொழும்பதம் வைத்தஈசன் தென்னன் பெருந்துறை ஆளி அன்று**
**காதல் பெருகக் கருணைகாட்டித் தன்கழல் காட்டிக் கசிந்துருகக்**
**கேதங் கெடுத்தென்னை ஆண்டருளுங் கிடப்பறிவார் எம்பிரா னாவாரே. 9**

***உரை :-** பரிசுத்தமான திருவெண்ணீறணிந்த எமது பெருமானாகிய ஒளி வடிவமான மகேந்திரமலைக் கதிபதி, தானே வந்தருளி விண்ணவர் வணங்குகின்ற திருவடியை (என்தலை மீது) வைத்தாண்டவன், அழகிய நல்ல திருப்பெருந்துறை மன்னன், அந்நாளில் எனக்கு அன்பு மிகும்படி அருள்காட்டித் தனது திருவடி களையுங் காட்டி யருளி, உள்ளங் கனிந்துருகும்படி, துன்பங்களைத் தொலைத்து என்னை ஆட்கொண்டருளுந் திருவுள்ளக் கருத்தை அறிவா ரெமது தலைவராவர்.*

***குறிப்பு :-** ஆளி - ஆள்பவன். கேதம் - துன்பம். எம்பெருமான், நாதன், ஈசன், ஆளி, அருளுங் கிடப்பு அறிவார் என முடிக்க.*

598. அங்கணன் எங்கள் அமரர்பெம்மான் அடியார்க் கமுதன் அவனிவந்த
எங்கள் பிரான்இரும் பாசந்தீர இகபரமாயதோர் இன்பமெய்தச்
சங்கங் கவர்ந்துவண் சாத்தினோடுஞ் சதுரன் பெருந்துறை ஆளி அன்று
மங்கையர் மல்கும் மதுரைசேர்ந்த வகையறிவார் எம்பிரா னாவாரே. 10

***உரை :-*** *அழகிய அருட்கண்ணை உடையவன், எங்கள் விண்ணவர் தலைவன், அடியார்கட்குச் சாவா மருந்தானவன், நில உலகிலே குருவாகிவந்த எங்கள் பெருமான், மிக்க திறமையுடையவன், திருப்பெருந்துறை மன்னன், அவன் அடியார்களுடைய பெரிய மும்மலப் பற்று நீங்கவும், இம்மை மறுமையில் ஆவதோர் பேரின்ப மடையும் பொருட்டும் அந்நாளில் சங்கினாலாகிய வளையல்களை எடுத்துக் கொண்டு மிகுந்த சரக்கோடு (வளையல் விற்பதற்குப்) பெண்கள் நிறைந்த மதுரைப்பதியை அடைந்த விதத்தை யறியவல்லார் எமது தலைவராவர்.*

*எங்களுக்கும் பெருமான், அமரர்க்கும் பெம்மான் என்பார் 'எங்கள் அமரர் பெம்மான்' என்றார். ஆனால் எங்கட்கும் மலம் நீக்கி ஞானம் நல்கிப் பேரின்பமூட்டும் பெருமானாக இருக்கிறார். தேவர்கட்கோ வினைகாரணமாக வரும் துன்பங்களைப் போக்கி இம்மைப்பயனை இடையீடின்றி நுகரச்செய்யும் தலைவனாக இருக்கிறார் என்பார். நம்பெருமான் அனைவர்க்கும் பெம்மான் என ஒருங்கோதாது 'எங்கள் அமரர் பெம்மான்' என வேறு பிரித்து ஓதினார்.*

*கரும்பில் கிடக்கும் புழு என்றும் இனிப்பையன்றி, வேறு எதனையும் காணாததுபோல, சிவபெருமானுடைய திருவடியிலே தோய்ந்து கிடக்கும் மெய்யடியார்கள் சிவானுபவம் ஒன்றையே உடையவர்கள் ஆதலின் அவர்கட்கு அமுதம் போன்றவனாக விளங்குபவன் என்பார் 'அடியார்க்கு அமுதன்' என்றார்.*

*இரும்பைப் பொன்னாக்குதற்கு ஒருவகைச் சாமர்த்தியம் இன்றியமையாதது போல, அநாதியே மலத்தால் கட்டுண்டு கிடக்கின்ற எங்களைத் தூய்மையாக்குவதற்கும் தனித்ததோர் வன்மை வேண்டும்; அவ்வன்மைக்கு அவனே உறைவிடம் என்பார் 'சதுரன்' என்றார்.*

*கோழி குன்றின் உச்சியிலும், குஞ்சு அடிவாரத்திலும் இருந்தால் குஞ்சு கோழியின் தாயன்பைக் காண முடியாதது போல, இறைவன் மகேந்திர நாதனாகவே இருப்பின், மக்கள் அறிந்து பயன் கொள்ளார்*

என்று எண்ணி, எமக்கு அண்ணியனாகத் தம் தலைநகரையே திருப்பெருந்துறையாக மாற்றியமைத்துக் கொண்டார் என்பார் 'பெருந்துறையாளி' என்றார்.

**குறிப்பு :-** அங்கணன், பெம்மான், அமுதன், பிரான், சதுரன், ஆளி, தீர, எய்த, கவர்ந்து, சேர்ந்தவகை யறிவாரென முடிக்க. சங்கங் கவர்ந்து என்பதற்குச் சங்கங் கவர எனப் பொருள் கொள்வாருமுளர். பெண்களுடைய சங்கு வளையல்களைக் கவர்வதற்கு மதுரை சேர்ந்தார் என்பது கருத்து. சாத்து - சரக்கு. வாணிகக் கூட்டம்.

இவ்வண்ணம் முழுமுதற்கடவுள் இறைவனே என்பதை உணர்த்தி, வரகுணன் மனைவி, மண்டோதரி முதலாயினார்க்கு உண்மைஞானம் உணர்த்தி ஆட்கொண்டு, வலைவீசி, பன்றியாய்ப் போரில் பால்கொடுத்து, சிவ சீவ வேறுபாட்டை ஒழித்து, பிறவித் துன்பத்தைத் துடைத்து, எம் வளையலைக் கவர்ந்து, மதுரைக்குச் சென்ற திருவுள்ளக்கிடக்கை, பரிபாகமுற்ற உயிர்களுக்கு உண்மை ஞானம் உணர்த்துதலும் மண்டோதரிபோல இம்மையின்பம் வேண்டுவார் அதனை எய்தச்செய்தலும் ஆகிய எளிவந்த செயலைச் செய்து அவரவர் நிலையில் அவரவர்களை ஆட்கொள்ளுதலும், வரகுணன்மனைவி போன்றார்க்குச் சிவசாயுச்சியமளித்தலுமேயாம் என்பதை விளக்குவது இப்பகுதி என்க.

**திருச்சிற்றம்பலம்.**

*தில்லையில் அருளிய*

## 44. எண்ணப் பதிகம்

*இறைவன் ஆணையின் வண்ணம் திருத்தில்லையில் எழுந்தருளியிருக்கும் வாதவூரடிகள், திருவருள்பெற்று, திருவடிக்கண் என்றும் நீங்காத அன்பு பூண்டு, ஒழியா இன்பத்துறைதலே தம் எண்ணம் என்று விண்ணப்பிக்கின்றார்கள்.*

*எண்ணம் - மனத்தில் உறுதி பயப்பதாய் உருக்கொள்ளும் நினைவு. தம் வாழ்க்கையின் எதிர்கால இலட்சியமே எண்ணம். இது விருப்பத்தை அடியாகக்கொண்டு தோன்றுவது. எண்ணத்தின் நிலைத்த பயனைக்கொண்டே உயர்ந்த எண்ணம், தாழ்ந்த எண்ணம் என்ற பகுப்பு உண்டாகிறது. அடிகள் இப்பதிகத்தில், ஒழியாவின்பத்தால் என்றும் உவகையுடன் இருப்பதே எண்ணம் என எதிர்கால இலட்சியத்தை விண்ணப்பிப்பதால் இப்பதிகம் எண்ணப்பதிகம் எனப் பெயர்பெற்றது.*

*மங்கையர் நிலையில் தாமிருந்து மற்றப் பெண்களோடு உரையாடிக் கொண்டிருந்தபோது, அவர்களில் ஒருத்தி உன் தலைவன் யார் என்று வினவ, கணவன் தகுதி கூறி இவரே எம்பிரானாவார் என அறிவித்ததாக முற்பதிகத்திற் குறிப்பிட்ட அடிகள், இப்பதிகத்தால் அத்தகைய கணவனைக்கூடப்பெறின் தம் எண்ணம் இதுவாம் எனக் கூறுகின்றார். ஆதலால் முற்பதிகத்தோடு இதற்குள்ள இயைபு தெளிவாகிறது.*

*இன்பத்தில் மூழ்கியிருக்கின்ற ஒருவருக்கு மேலும்மேலும் இன்பம் இடையறாது இருத்தல் வேண்டும் என்கின்ற விருப்பம் விளைவதுபோலச் சிவாநுபவத்தும் உவகை பிறக்க, அநுபவம் இடையறவு படாமைப்பொருட்டு, பிறப்பு அறவேண்டும்; பத்திமை பெற வேண்டும்; திருவருளைக் காணவேண்டும்; அதற்குத் தடையாயினவற்றில் நிகழும் பற்றறுதல்வேண்டும் என இவ்வெண்ணங்களை அறிவிப்பதால் இப்பகுதி எண்ணப்பதிகம் ஆயிற்று எனலாம்.*

--------

## *ஒழியா இன்பத்துவகை*

### *ஆசிரிய விருத்தம்*

*திருச்சிற்றம்பலம்*

**599.** பாருரு வாய பிறப்பற வேண்டும் பத்திமை யும்பெற வேண்டுஞ்
சீருரு வாய சிவபெரு மானே செங்கமல மலர் போல்
ஆருரு வாயஎன் னாரமுதேஉன் அடியவர் தொகை நடுவே
ஓருரு வாயநின் திருவருள் காட்டி என்னையும் உய்யக்
கொண்டருளே. 1

***உரைநடை :-*** *சீரு.... சிவபெருமானே... அமுதே என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *சிறப்புடைய திருவடிவங் கொள்ளுஞ் சிவபெருமானே, செந்தாமரைப் பூப்போன்ற அரிய செம்மேனியினனாகிய எனது கிடைத்தற்கரிய அமுதமானவனே, நிலவுலகிலே உடம்பெடுப்பதாகிய பிறப்பு ஒழியவேண்டும். அன்புடைமையைப் பெறவேண்டும். உனது அன்பர் கூட்டத்தின் நடுவே ஒப்பற்ற திருவடிவுடைய உன் திருவருள் காட்டி அடியேனையும் உய்திக்கு ஏற்றுக் கொண்டருள்க.*

***குறிப்பு :-*** *பார் - நிலவுலகம். 'செங்கமல மலர்போலும்' என்பதைச் 'சீருவாய' என்பதனோ டியைக்கலாம். ஆருருவாய - என்பதற்கு, அரிய இயல்புடைய என்றும் பொருள் கொள்ளலாம். ஓருரு வென்றது, ஞானாசாரிய வடிவத்தை. என் எண்ணம் பிறப்பற வேண்டும். பத்திமையும் பெறவேண்டும். அடியவர் தொகை நடுவே உய்யக் கொண்டருள வேண்டும்.*

**600.** உரியேன் அல்லேன் உனக்கடிமை உன்னைப் பிரிந்திங் கொருபொழுதுந்
தரியேன் நாயேன் இன்னதென் றறியேன் சங்கரா கருணையினால்
பெரியோன் ஒருவன் கண்டு கொள்என்றுன் பெய்கழல் அடிகாட்டிப்
பிரியேன் என்றென் றருளிய அருளும் பொய்யோ எங்கள் பெருமானே.
2

***உரைநடை :-*** *'எங்கள் பெருமானே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *எமது தலைவனே! உனக்கடியமையா யிருத்தற்கு, உரிய தகுதி உடையேனல்லேன். ஆனால் உன்னைவிட்டு நீங்கி ஒரு சிறிது நேரங்கூட நான் (தனியே இருத்தலைப்) பொறுக்க மாட்டேன்.*

*நாயனைய யான் இது என்ன காரணம் என்றறிந்திலேன். பெரியோன் ஒருவன் என்மீது வைத்த இரக்கத்தால் உன்னுடைய கழல் செறிந்த திருவடிகளைக் காட்டி, அவற்றைப் பார்த்துக்கொள் என்று கட்டளையிட்டு, உன்னைப் பிரியமாட்டேனென்று என்னிடம் கூறிப்போனது பொய்யாகுமோ?*

*முகமறியாத இருவர், விதிகூட்ட மணந்தவழி இருவர் மனத்துளும் ஊமைத்தசும்புள் நீர் நிறைந்தாற்போல அன்பு நிறைய ஒருவரின்றி ஒருவர் வாழமாட்டாமையை உணர்வதுபோல, என்னை ஆட்கொண்டபோதே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும் நீ கொண்டதால் நின்னையின்றி வாழமுடியாது என்ற காதன்மை விளைந்தது; அதனால் 'பிரிந்து இங்கு ஒருபொழுதும் தரியேன்' என்கின்றார்.*

*அவன் ஆண்டபின் என்னறிவு கெட்டமையின் இத்தகைய இன்றியமையாமை எங்ஙனம் விளைந்தது என்பதனையும் அறியேன் என்பார். 'நாயேன் இன்னதென்று அறியேன்' என்றார்.*

*அங்ஙனம் என் அறிவு கெட ஆட்கொண்டும் இறைவன் பிரிந்தமையின், குருவாக எழுந்தருளியவர் சிவனே என்பதை உணர்ந்திருந்தும் முன்னிலைப் புறமொழியாகப் 'பெரியோன் உன் அடிகாட்டிப் பிரியேன் என்றதும் பொய்யோ' என்றார்.*

*சூளுரைப்போர் ஞாயிறு காட்டியும், தெய்வத்திருவடி காட்டியும் சூளுரைப்பர் ஆதலின் பெரியோன் இதோ பார்! என்று உன் அடிகாட்டிப் பிரியேன் என்றான்; அதுவும் பொய்யோ என்கின்றார். அடியைக் கண்டதற்கு அடையாளமாகக் 'கழலடி' என்கின்றார்.*

***குறிப்பு :-** திருப்பெருந்துறையில் இறைவன் உபதேசம் பண்ணினதைக் கூறி, அது பொய்யாமோ வென்றது. அது உண்மை யானால், இறைவன் தன்னைப் பிரியாதிருத்தல் வேண்டுமென்று குறிப்பித்தார். 'பெரியோன்' என்று இறைவனைப் படர்க்கையாகக் கூறியது ஒரு நயம்.*

**601. என்பே உருக நின் அருள் அளித்துன் இணைமலர் அடி காட்டி**
**முன்பே என்னை ஆண்டுகொண்ட முனிவா முனிவர் முழுமுதலே**
**இன்பே அருளி எனையுருக்கி உயிருண்கின்ற எம்மானே**
**நண்பே யருளாய் என்னுயிர் நாதா நின்னருள் நாணாமே. 3**

***உரைநடை :-** கடைசியடியை என் உயிர் நாதா நாணாமே நின்னருள் நண்பே யருளாய், என அமைத்துப் பொருள் கொள்ளுக.*

*உரை :- எலும் புருகும்படியாக நின் திருவருளை மிக நல்கி உன் தாமரையடிகள் இரண்டையுங் காட்டிப் (பக்குவம் வரு) முன்னரே என்னை ஆட்கொண்டருளிய தவவடிவனே, துறவிகளின், முழுத் தலைவனே, பேரின்பமே கொடுத்தருளி என்னை உருகுவித்து, எனது உயிர்ப்போதத்தைத் தொலைக்கின்ற எமது பெரியோனே, எனது உயிர்க்குயிரானவனே, கூசாமல் உன்னுடைய திருவருள், எனது நட்பாகும்படி அருள் செய்யவேண்டும். எலும்பு ஒன்றற்கும் கரையாத உறுதியானது. உணர்வற்றது. அதனையும் உருக வைத்தது உன்னருள் என அருளின் ஆற்றலை உணர்த்துகிறார்.*

*குறிப்பு :- முனிவா - துறவியே என்று முரைப்பர். உயிருண்டல் - தற்போத மிழப்பித்தல்.*

**602.** பத்தில னேனும் பணிந்தில னேனும்உன் உயர்ந்தபைங் கழல்காணப்
பித்தில னேனும் பிதற்றில னேனும் பிறப்பறுப் பாய்எம் பெருமானே
முத்தனை யானே மணியனையானே முதல்வனே முறையோஎன்(று)
றெத்தனை யானும் யான் தொடர்ந் துன்னை இனிப்பிரிந் தாற்றேனே.
**4**

*உரைநடை :- எம்பெருமானே - என்பதை முதலிற் கொள்க.*

*உரை :- எமது தலைவனே! அடியேன் உன்னிடத்திற் பற்று இல்லாதவனாயினும், உன்னை வழிபடேனாயினும், உனது மேலான பசுமையான திருவடிகளைக் காண்பதற்கு ஆசைப்படேனாயினும், உன்னைத் துதித்திலேனாயினும், எனது பிறப்பைக் களையவேண்டும். ஏனெனில், முத்துப் போன்றவனே, மாணிக்கம் போன்றவனே, ஆதியானவனே, உன் பெயரைக் கூறி ஓலமிட்டு உன்னை எந்த அளவிலாவது யான் தொடர்ந்து பற்றினமையால், இனிமேல் உன்னைப் பிரிந்து, பிரிவாற்றாமையைப் பொறுத்திருக்க மாட்டேன்.*

*குறிப்பு :- பத்து, பற்று என்பதன் மருவு. பத்தி யென்பதன் குறை யென்பாருமுளர். முறையோ, என்றல் தகுதியோ வென்று கேட்டல்.*

**603.** காணும தொழிந்தேன் நின்திருப் பாதங் கண்டுகண் களிகூரப்
பேணும தொழிந்தேன் பிதற்றும தொழிந்தேன் பின்னைஎம் பெருமானே
தாணுவே அழிந்தேன் நின்னினைந் துருகுந் தன்மைஎன் புன்மைகளாற்
காணும தொழிந்தேன் நீயினி வரினுங் காணவும் நாணுவனே. **5**

***உரை :-*** *எம்பெருமானே, நினது திருவடிகளைப் பார்ப்பதை விட்டேன். பார்த்து எனது கண்கள் மகிழும்படியாகப் போற்றுவதை விட்டேன். புகழ்வதையும் விடுத்தேன். உறுதியானவனே, (பின் வேறு யாதுசெய்தேன் என்னில்) நான் அறிவு அழிவுற்றேன். உன்னை நினைந்துருகுகின்ற (அடியார்) தன்மைகளையும், எனது கீழ்மை காரணமாக, பார்ப்பதை விடுத்தேன். ஆதலால், நீ இனிமேல் பழைய வடிவந் தாங்கி வந்தாலும் உன்னைப் பார்ப்பதற்குங் கூசுவேன்.*

***குறிப்பு :-*** *காணுமது - காணுஞ் செயல். பேணுதல் - வணங்குதல். பின்னை, வினைமாற்றுப் பொருளில் வந்தது. தாணு - நடுதறி. நிலையானது. இறைவன் நடுதறி போல சிவலிங்கத்தில் விளங்குகிறார்.*

**604.** பால்திரு நீற்றெம் பரமனைப் பரங்கரு ணையோடும் எதிர்ந்து
தோற்றிமெய் யடியார்க் கருட்டுறை யளிக்குஞ் சோதியை நீதியிலேன்
போற்றியென் அமுதே எனநினைந் தேத்திப் புகழ்ந்தழைத் தலறியென்
னுள்ளே
ஆற்றுவனாக உடையவ னேஎனை ஆவஎன் றருளாயே. 6

***உரைநடை :-*** *'உடையவனே' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *முதல்வனே, பால்போலும் வெள்ளிய திருநீறணிந்த பெரியோனாக உனது மேலான திருவருட் சத்தியோடு எதிர்பட்டுத் தோன்றி உண்மையன்பர்க்கு அருள்வழி நல்கும் ஒளியான உன்னை அறவழி நில்லாத நான், வணங்கி, எனது சாவா மருந்தே யென வெண்ணி வழிபட்டுத் துதித்துக் கூவியரற்றி என் நெஞ்சகத்தே ஆறுதலுடையவனாகும்படி, ஐயோ வென்றிரங்கி அருள் செய்வாயாக.*

*எதிர்ந்து தோற்றி - அடியார்கள் தேடிச்செல்லாது, அவர்களுக்கு எதிரே தாம் வந்து தோற்றி யென்க. பிறவிக்கடலில் விழுந்து வருந்துவார்க்கு அருள் துறைபோல்வது ஆகலின் 'அருட்டுறை' என்றார்.*

***குறிப்பு :-*** *கருணை - அருட்சத்தி. தோற்றி - தோன்றி; செய்யுள் பற்றி வலித்தது.*

***திருச்சிற்றம்பலம்.***

*தில்லையில் அருளிய*

## 45. யாத்திரைப் பத்து

*வாதவூர்வள்ளல் தில்லையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, தம்மைப்போல உள்ளம் உருகும் அடியார்கள் பலரையும் அழைத்து 'இப்பொய்மாயப் பிறவியைவிட்டுத் திருவடியைச் சாருங்காலம் வந்துவிட்டது; வாருங்கள்' என்று அழைக்கும் முறையில் இதனை அருளிச் செய்கின்றார்கள்.*

*யாத்திரை - பயணம். தம்முடன் வருவாரையும் அழைத்துக் கொண்டு பயணம் போதலை அறிவிக்கும் பத்துப் பாடல்களைக் கொண்டது இப்பகுதி.*

--------

***அனுபவ அதீதம் உரைத்தல்***

***அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**605. பூவார் சென்னி மன்னனெம் புயங்கப் பெருமான் சிறியோமை,**
**ஓவா துள்ளம் கலந்துணர்வாய் உருக்கும் வெள்ளக் கருணையினால்,**
**ஆ! ஆ! என்னப் பட்டன்பாய் ஆட்பட்டீர்வந் தொருப் படுமின்,**
**போவோங் காலம் வந்ததுகாண் பொய்விட் டுடையான் கழல்புகவே. 1**

***உரை :-*** *மலர் நிறைந்த முடியுடைய அரசனாகிய எமது பாம்பணிந்த பெருமான், சிறியோங்களாகிய நம்மை ஓயாமல் உள்ளத்திற் புகுந்து அறிவில் அத்துவிதமாய்க் கலந்து உருகுவிக்கும் அருள்வெள்ளங் காரணமாக, இரங்கி அருள் அளிக்கப்பெற்று, அன்பராய் ஆட்பட்டவர்களே வந்து ஒருங்கு சேருங்கள். நிலையா வுலகை விடுத்து, நம்மையுடையவனது திருவடியை அடைதற்குப் போவோமாக. அதற்குரிய சமயம் வந்துவிட்டது.*

*பூவார்சென்னி மன்னன் - திருமுடியில் பூக்களைச் சாத்தும் மன்னனாகிய வியாக்கிரபாத முனிவரும், புயங்கப் பெருமான் - பாம்பரசனாகிய ஆதிசேடனது அவதாரமாகிய பதஞ்சலிபகவானும், சிறியோமைக்கலந்து இறைவன் சுகவாரியாய் ஏகவுருவாய் இருப்பதைக்*

*காட்டி என்றும், பொய்விட்டு என்பதற்குத் தத்துவக் குப்பைகளை உதறித்தள்ளி எனவும் விளக்கந்தரும்.*

***குறிப்பு :-*** *புயங்கம் - பாம்பு; அல்லது ஒருவகைக் கூத்து. உடையான் கழல்புகவே பொய்விட்டு என மாற்றுக. 'போவோம்' என்பதைப் புகவே என்பதோடு முடிக்க. 'காலம் வந்தது காண்' என்பதை இறுதியிற் சேர்க்க.*

**606.** **புகவே வேண்டா புலன்களில்நீர் புயங்கப் பெருமான் பூங்கழல்கள்**
**மிகவே நினைமின் மிக்கவெல்லாம் வேண்டா போக விடுமின்கள்**
**நகவே ஞாலத் துள்புகுந்து நாயே அனைய நமையாண்ட**
**தகவே யுடையான் தனைச்சாரத் தளரா திருப்பார் தாந்தாமே.** **2**

***உரைநடை :-*** *இறுதியிரண்டடியை முதலிற் கொள்க.*

***உரை :-*** *தெளிவாக உலகத்தே போந்து நாய்போன்ற (இழிவுடைய) நம்மை ஆட்கொண்ட தகுதியுடைய பெருமானை அடைவதற்குத் தளராது ஊக்கமாயிருப்பவர் தாம் (பிறபொருள் வசப்படாது) தாமாகவே இருக்குந் தம் வயமுடையராவர். ஆதலால், ஐம்புல விடயங்களில் நீங்கள் செல்லவே கூடாது. புயங்கக் கூத்துடைய பெருமானது அழகிய திருவடிகளையே மிகுதியுஞ் சிந்தியுங்கள். ஒழிந்தன வெல்லாம் நமக்கு வேண்டப்படா. அவற்றைப் பற்றாது அவைதாமே அகன்றொழிய விட்டு விடுங்கள்.*

*தீயினைச்சார்ந்த இரும்பு கருமைமாறித் தீ நிறம் பெறுதலைப் போலத் தளர்ச்சி தாப கோபங்கள் இயற்கையிலேயே இல்லாத பெருமானைச் சார்ந்து உயிர்களும் தளர்ச்சி நீங்கும் சிவமேயாக வீற்றிருக்கும் என்பார் 'தகவேயுடையான் தனைச்சாரத் தாம் தாமே (ஆகி) தளராதிருப்பார்' என்றார். இது ஏது.*

*நீர் புலன்களில் புகவே வேண்டா - அமுதம் கிடைக்க இருக்கின்ற நேரத்திற் புளியங்காயை அல்லது காஞ்சிரங்காயை விரும்பிச் செல்வார்போலத் தாந்தாமாகவிளங்கும் வீட்டின்பம் கிடைக்கின்ற வேளையிலே பொறியுணர்ச்சி வயப்பட்டுப் புலன்களின் மேற் செல்லவேண்டா என்று அறிவிக்கின்றார்.*

***குறிப்பு :-*** *புலன்கள் - பொறிக்கு விடயமானவைகள். மிகவே, என்றது இறை நினைவே மிகுதிப்பட்டுப் பிற நினைவுகள் இலவாதலை*

*வேண்டி. மிக்க - மிகையான. இறை நினைவொழிந்த பிற நினைவுகள், மிகையாமென்ற கருத்துப்பற்றி 'மிக்க வெல்லாம்' என்றார். நகவே - விளங்கவே, யாரும் அறிய. மெய்யன்பர் சிரிக்கும்படி யென்றுரைப்பாரு முளர். தகவு - பெருந்தன்மை.*

**607.** தாமே தமக்குச் சுற்றமுந் தாமே தமக்குவிதி வகையும்
யாமார் எமதார் பாசமார் என்ன மாயம் இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடும் அவன்தன் குறிப்பே குறிகொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப் புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே. **3**

***உரைநடை :-*** *இறுதியடியில் பொய்நீக்கிப் பொன்னடிக்கே போமாறமைமின் என மாற்றுக.*

***உரை :-*** *தம் வயதுடையார் தாமே தமக்கு உறவினராவர். தாமே தமக்குக் கட்டளை விதிக்கும் வகையினர். நாம் ஆர், எம்முடையது யாது, நம்மைப் பந்தித்த மலக்கட்டு யாது, இவைகளெல்லாம், என்ன மயக்கங்கள். இவை யொழியும்படி, நமது அரசனுடைய பழைய அடியாரோடு சேர்ந்து அவனது திருவுள்ளக் குறிப்பே நமது நோக்கமாகக் கொண்டு நிலையாதனவற்றை விடுத்து புயங்கக் கூத்தனாய் நம்மை யாள்கின்றவனது அழகிய திருவடிக்கே போய்ச் சேருமாறு தகுதியாகுங்கள்.*

***குறிப்பு :-*** *சிவமாந்தன்மை யுடையார்க்குச் சுற்றமும் விதி வகையும் தாமேயாவர். மேலே, 'செய்தனவே தவமாக்கும்' என்றது காண்க. ஆர் என்பதை 'எமது' 'பாசம்' என்பவற்றோடு சேர்த்தமை வழுவமைதி. சிவமே நோக்குவார். தம்மையும் தமதுடைமையும் பாசமாகிய இவற்றை நினைத்தல் கூடாதென்பது குறிக்கப்பட்டது.*

**608.** அடியார் ஆனீர் எல்லீரும் அகல விடுமின் விளையாட்டைக்
கடிசே ரடியே வந்தடைந்து கடைக்கொண் டிருமின் திருக்குறிப்பைச்
செடிசே ருடலைச் செலநீக்கிச் சிவலோகத்தே நமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன் தன் பூவார் கழற்கே புகவிடுமே. **4**

***உரை :-*** *அடியாராகிய நீங்கள் எல்லாரும், உலகில் விளையாடு தலைத் தூரவிட்டிடுங்கள். மணம் பொருந்திய இறைவன் திருவடியையே போய்ச் சேர்ந்து அவனது திருவுள்ளக் குறிப்பைக் கடைப்பிடித்திருங்கள். பாவம் ஏறுதற்குரிய உடம்பு ஒழியக் களைந்து*

*சிவலோகத்திலே நம்மை அமர்த்துவானாகிய நீறணிந்த திருமேனியை யுடைய புயங்கக் கூத்துடையானது மலர் நிறைந்த திருவடிக்கே உங்கள் உள்ளத்தைச் செலுத்துங்கள்.*

***குறிப்பு :-*** *விளையாட்டென்றது, தம்மையும் உலகையும் பற்றிய நினைவுகளின் சார்பாயுள்ளவற்றை. அவை பயனிலவாதலின் விளையாட்டென்றார். கடி - மணம். திருக்குறிப்பை என்பதைக் கடைக் கொண்டு என்பதனோடு முடிக்க. செடி - பாவம், வரும் பிறவிக் கேதுவாகிய ஆகாமிய மென்பாருமுளர். பொடி - திருநீறு.*

**609. விடுமின் வெகுளி வேட்கைநோய் மிகவோர் காலம் இனியில்லை**
**உடையான் அடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோ டுடன் போவதற்கே ஒருப்படுமின்**
**அடைவோம் நாம்போய்ச் சிவ புரத்துள் அணியார் கதவ தடையாமே**
**புடைபட் டுருகிப் போற்றுவோம் புயங்கன் ஆள்வான் புகழ்களையே. 5**

***உரை :-*** *கோபம், ஆசை முதலிய பிணிகளைக் களையுங்கள். மேன்மைப்பட வேறொரு சமயம் இல்லை. முதல்வனது திருவடிக் கீழ்ப் பெரிய அடியார் கூட்டத்துடன் போயடைவதற்கே இசையுங்கள். சிவலோகத்தின் அழகு நிறைந்த கதவுகள் அடைபடு முன்னமே போய்ச் சேர்வோம். அதன் மருங்கு பொருந்தி, உள்ளமுருகிப் புயங்கப் பெருமானாகிய நம்மை யாள்பவனது கீர்த்திகளையே துதிப்போமாக.*

*வெகுளி - தன்னால் விரும்பப்பெற்ற பொருளைப் பெறாத போதும், பெற்றிழந்தபோதும், பிறர் பெற்றபோதும், மானம், பொருள், குலம், கல்வி முதலியன இழித்துரைக்கப்பட்டபோதும் விளையும் சீற்றமாகிய மனத்தின் தன்மை.*

*வேட்கை - பொருள்கள் மேற்றோன்றுகின்ற பற்றுள்ளம். நோய் - அதுபற்றி விளைவதாகிய துன்பம். இவையனைத்தும் மனத்தைப் பற்றி நின்று உயிர்க்கு இன்பம் விளையாதவண்ணம் ஊறு செய்வன வாதலின் இவற்றை விடுங்கள் என்றார்.*

*நாம் புதுவழியிலே போகின்றோமல்லேம்; புதியவன்பாற் சார்கின்றோமல்லேம்; நம்மை அநாதிகாலந்தொட்டு ஆளாகவுடைய முதல்வன் திருவடியைக் குறித்துத்தான் நம் பயணம் தொடங்குகிறது. நம்மிலும் பழகிய பழவடியார் கூட்டத்தோடுதான் செல்கிறோம். அவர்கள் போகின்றபோது நாமும் உடன் போனால், கோவுடனே கூடிக் குருட்டாவும் ஊர்புகுவதுபோல அவன் திருவடியை அடைதல்*

எளிதாகும். இப்படி ஒரு காலம் இனி வாய்க்காது என்பார் 'உடையானடிக்கீழ்ப் போவதற்கே ஒருப்படுமின்; பெருஞ்சாத்தோடு உடன்போவதற்கே ஒருப்படுமின்' என்றார். சாத்து - கூட்டம்.

நொண்டிப்பசு வருவதற்குள் படல் அடைத்ததுபோலச் சிவபுரத்துள் வாயிற்கதவுகள் அடைபட்டுப் போகாதவண்ணம், பக்கங்களில்நின்று புயங்கனுடைய எல்லையற்ற புகழ்களை மனமுருகிப் போற்றுவோம் என்கிறார். அவன் புகழ் பலவாதலின் நாம் பக்கம் நின்று புதிது புதிதாகப் பற்பல புகழ்களைச் சொல்லிப்போற்ற இறைவன் திருச்செவியேற்பதாற் காவலர்கள் கதவடையார்கள் என்ற குறிப்புத்தோன்றப் 'புகழ்கள்' எனப் பன்மையிற் கூறினார்.

***குறிப்பு :-*** *வெகுளியை விடுமின், வேட்கை நோய் மிக, ஓர் காலம் இனியில்லை யென் றோதிப் பொருளுரைப்பாரு முளர். சாத்து - திரள், சிவபுரம் - வீட்டிற்கு உருவகம். அதன் புடை அபரமுத்தித் தானம்போலும். ஊழிமுடிவிற் சாயுச்சியத்திற்குரியரல்லர் மீட்டும் பிறத்தல் கூடுமாதலின், 'அணியார் கதவடையாமே' என்றார். 'புகைபட்டு' என்பதற்கு உடம்பின் பகுதிகளெல்லாம் உருக்கத்தி லீடுபடும்படி எனப் பொருளுரைப்பது முண்டு.*

**610.** **புகழ்மின் தொழுமின் பூப்புனைமின் புயங்கன் தாளே புந்திவைத்திட்**
**டிகழ்மின் எல்லா அல்லலையும் இனியோர் இடையூ றடையாமே**
**திகழுஞ் சீரார் சிவபுரத்துச் சென்று சிவன்தாள் வணங்கிநாம்**
**நிகழும் அடியார் முன்சென்று நெஞ்சம் உருகி நிற்போமே. 6**

***உரை :-*** *புயங்கப் பெருமானது திருவடிகளையே புகழுங்கள். வணங்குங்கள், அவைகளுக்கே மலர் சூடுங்கள். அவைகளையே அறிவிற் பதித்து எல்லாத் துன்பங்களையும் இகழுங்கள். இனிமேல் நாம் ஒருவகையான தீங்கும் நம்மை யடையாவண்ணம், விளங்கும் புகழ் நிறைந்த சிவபுரத்துக்குப் போய்ச் சேர்ந்து அங்கே சிவபெருமான் திருவடிகளை வணங்கி, அங்கே வாழும் அன்பர்முன் போய் மனமுருகி நிற்போமாக.*

***குறிப்பு :-*** *'புயங்கன்றாளே' என்பது நடுநிலைத் தீபகமாய்ப் 'புகழ்மின்' முதலிய வினைமுற்றுக்களோடும், புந்தி வைத்திட்டு என்பதனோடு மியைவது.*

611. நிற்பார்நிற்க நில்லாவுலகில் நில்லோம் இனிநாம் செல்வோமே
பொற்பால் ஒப்பாந் திருமேனிப் புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே
நிற்பீர் எல்லாந் தாழாதே நிற்கும் பரிசே ஒருப்படுமின்
பிற்பால் நின்று பேழ்கணித்தாற் பெறுதற் கரியன் பெம்மானே. 7

***உரை :-*** *நிலையில்லாத உலகிலே நிற்க விரும்புவார் நிற்பாராக. அங்கே நாம் நிற்கமாட்டோம். இனி நாம், அழகினால் தன்னையே ஒத்த திருமேனியுடைய புயங்கப் பெருமானாகிய நம்மை யாள்பவனது பொன்போன்ற திருவடிகட்கே செல்வோமாக. அவனது பொன்னடி யடைதற்கே நிற்கின்றீ ரெல்லீரும், தாமதியாமல் நிற்கு முறையையே கடைப்பிடியுங்கள். பிற்பட்ட பகுதியில் நின்று தலை சாய்த்தால் இறைவன் பெறுதற் கரியனாவன்.*

***குறிப்பு :-*** *பொற்பால், என்பதற்குப் பொன்னின் தன்மையெனப் பொருள் கொண்டு பொன்னினொளி போலும் திருமேனியென்று உரைத்தலுமொன்று. 'பொன்னடிக்கே' என்பது நடு நிலைத் தீபகம். பேழ்கணித்தல் - தன்னை பெரிதும் மதித்தல். விழித்தல் என்று பொருளுமுரைப்பாரு முளர்.*

**612. பெருமான் பேரா னந்தத்துப் பிரியா திருக்கப் பெற்றீர் காள்
அருமா லுற்றுப் பின்னைநீர் அம்மா அழுங்கி அரற்றாதே
திருமா மணிசேர் திருக்கதவந் திறந்த போதே சிவபுரத்துத்
திருமா லறியாத் திருப்புயங்கன் திருத்தாள் சென்று சேர்வோமே. 8**

***உரை :-*** *சிவபெருமானது பேரின்பம் நீங்காதிருக்கப் பெற்றீர்கள்; நீர் (அதனை விடுத்துக்) கடத்தற்கரிய உலக மயக்கமுற்றுப் பிற்பாடு, துன்புற்று அம்மா வென்றலறாதே, சிவபுரத்தின் அழகிய பெருமணிகள் பதித்த திருக்கதவுகள் திறந்திருக்கும்போதே திருமாலறிய வொண்ணாத திருப்புயங்கப் பெருமான் திருவடிகளைப் போய்ச் சேர்வோமாக.*

***குறிப்பு :-*** *பேரின்ப நுகர்ச்சியை நெகிழ விட்டால், வாசனா மலத்தாற் கேடு வருதல் கூறப்பட்டது. மூன்றாமடியில், 'சிவ புரத்து' என்பதைத் திருமாமணிக்கதவம் என்பதோடு முடிக்க.*

**613. சேரக் கருதிச் சிந்தனையைத் திருந்த வைத்துச் சிந்திமின்
போரிற் பொலியும் வேற்கண்ணாள் பங்கன் புயங்கன் அருளமுதம்**

ஆரப் பருகி ஆராத ஆர்வங்கூர அழுந்துவீர்,
போரப் புரிமின் சிவன்கழற்கே பொய்யிற் கிடந்து புரளாதே. 9

***உரை :-*** *சிவபுரஞ் சேர்வதை யெண்ணி, உள்ளத்தைத் திருத்தமாக அமைத்து (இறையடியையே) நினையுங்கள். போரில் விளங்கிப் பயன்படும் வேல்போன்ற கண்ணையுடைய உமைபாகனாகிய புயங்கப் பெருமானது திருவருள் அமுதத்தை நிரம்ப உண்டு முடிவுறாத அன்பு மிகுதிப்பட (ப்பேரின்பத்தில்) ஆழ்வீர்கள். நிலையற்ற பொய்வாழ்விற் கிடந்து புரளாமல், சிவனது திருவடியையே போய்ச் சேர விரும்புங்கள்.*

*குறிப்பு :- வாசனா மல மொழிதற் பொருட்டுத் திருவைந் தெழுத்தை நினைத்தலும், அயரா அன்பினாற் சிந்தித்தலும் கூறப்பட்டன. போர, போகவென்பதன் மரூஉ. 'போத' வென்பதன் மரூஉவாகக் கொண்டு, 'போதிய அளவு' என்று முரைப்பர். 'சிவன் கழற்கே, போரப் புரிமின்' என மாற்றுக.*

**614.** புரள்வார் தொழுவார் புகழ்வாராய் இன்றே வந்தாள் ஆகாதீர்
மருள்வீர் பின்னை மதிப்பாரார் மதியுட் கலங்கி மயங்குவீர்
தெருள்வீ ராகில் இதுசெய்மின் சிவலோ கக்கோன் திருப்புயங்கன்
அருளார் பெறுவார் அகலிடத்தே அந்தோ அந்தோ அந்தோவே. 10

***உரை :-*** *(அன்பினாலே) புரண்டு வலம் வருவாராயும், வணங்கு வாராயும் இறைவனைப் போற்றித் துதிப்பாராயும் இப்பொழுதே வந்து ஆளாகாமற் போனீராயின் பிற்பாடு, மருட்சி யடைவீர். அறிவினுட் கலக்கமடைந்து மயங்குவீர்கள். உங்களை யார் மதிப்பார்? (ஒருவரும் மதியார்). தெளிவடைவீராகில், ஆட்படுதலாகிய இதனைச் செய்யுங்கள். சிவலோக நாதனாகிய புயங்கப் பெருமானது (வீடுநல்குந்) திருவருளை உலகத்தே யார் பெறுதல் கூடும்? ஐயோ! ஐயோ!! ஐயோ!!!*

*இறைவன் திருவடிக்கு ஆளானவர் அபிமானம் அழிந்து அன்பு மேலீட்டால் அடியற்ற மரம்போல் கீழேவிழுந்து புரள்வர்; இடைவிடாது தொழுவர்; இறைவன் புகழை வாயோவாது புகழ்வர்; அங்ஙனம் நீவிரும் செய்துகொண்டு இன்றே இக்கணமே ஆளாக வேண்டிய நீங்கள் அங்ஙனம் ஆகாதிருக்கின்றீர்கள்; அம்மட்டோ மயங்குகின்றீர்கள் என்பார் 'ஆளாகாதீர் மருள்வீர்' என்றார். இரண்டையும் கூட்டி ஆளாகாதவர்களாய் மயங்குகின்றீர்கள் எனலுமாம்.*

*"மக்களே போல்வர் கயவர்" என்றாற்போல, நீவிர் மதியுடையீர் போலக் காணப்பெறினும் புத்தியினுள் கலங்கப் பெற்றீர் என்றார்*

*வெளியில் தெளிந்தவர்கள் போலக் காணப்பெறுதலின்.*

*யாம் இவ்யாக்கையைப் பெற்றதன்பயன் சிவபெருமானை வணங்கியும் வாழ்த்தியும் புரண்டும் தெருளுதலே என்பதை உணர்வீராயின் என்பார் 'தெருள்வீராகில்' என்றார்.*

*காந்தம் கவர்தலும் இரும்பு நகர்தலும் ஒருங்கு நிகழ்தல் போல, நீங்கள் ஆளாவிர் ஆயின் உடனே அவனும் அருள் வழங்குவன்; அது செய்யீராயின் அவனருள் பெறுவார் யார்? என்றார் என்க.*

*ஆற்றுநீர் பாய்ச்சிப் பயன்பெறுவாரின்மையின் கடலொடு கலந்து பயன்படாமைபோலத் திருவருளும் பெறுவாரின்மையின் வீணாயிற்றே என்று இரங்கி 'அந்தோ அந்தோ அந்தோ' என மும்முறை அடுக்கிக் கூறினார்.*

*இத்திருப்பாடல் மெய்யடியார்களை விரைந்து அருள்பெற அழைத்தலின் யாத்திரைப்பத்தினது ஆதலும், 'புரள்வார் தொழுவார் புகழ்வாராய்' என்றமையால் அநுபவாதீதம் உரைப்பதாதலும் காண்க.*

***குறிப்பு :-** இப்பதிக முழுவதும் விரைவில் வீடுபெற விரும்பு வார்க்கு அடிகள் மொழிந்த எச்சரிக்கை அறிவுரையாக இருக்கின்றது. இறையன்பில்லாரை மக்களும் பொருட்படுத்தா ரென்ற கருத்துப் பற்றி, 'மதிப்பார் ஆர்' என்றார். உலகவாழ்வைக் கருதின் ஆண்டும் நயமில்லை யென்றவாறு. 'நின்னருட் கண்ணால் நோக்காதார் அல்லாதாரே' என்ற தேவாரமுங் காண்க. மயங்குதல் - வழியறியாது திகைத்தல். அகலிடம் - பூமி. அந்தோ - ஐயோ. இரக்கம் பற்றி மும்முறை கூறினர்.*

***இந்த யாத்திரைப்பத்தால், சிவாநுபவத்துள் தோய்ந்து அதீதநிலையை அண்மிய வாதவூரடிகள் அன்பாய் ஆட்பட்டீர்! அடியாரானீர்! பேரானந்தத்துப் பிரியாதிருக்கப் பெற்றீர்காள்! காலம் வந்தது; வந்தொருப்படுமின்! கழல்கள் நினைமின்; குறிப்பே குறிக்கொண்டு போமாறமைமின்; கூட்டத்தோடு போதற்கே ஒருப்படுமின்; புகழ்மின்; தொழுமின்; பூப்புனைமின்; சிவன் கழற்கே போகப்புரிமின்; தெருள்வீராகில் இது செய்ம்மின் என அடியார்களை ஊக்கப்படுத்தி உண்மையுணர்த்தி, இறைவன் தாளைச் சார்ந்தவர்கள் என்றும் தளரார்; அவனே சுற்றமும் மற்றும் பற்றுமாவான்; சிவலோகத்து நம்மை வைப்பான்; சிவபுரத்தில் கதவு அடைப்பதற்குமுன்னரே செல்வோம்; பக்கம் நின்று போற்றுவோம்; அடியார்முன் சென்று நெஞ்சம் உருகி நிற்போம்; யாம் பெறாவிட்டால் அவனருளைப் பெறுவார் வேறு யார்? என்று பயணப்படுவதைக் காண்க.***

***திருச்சிற்றம்பலம்.***

*தில்லையில் அருளிய*

## 46. திருப்படை எழுச்சி

*மணிவாசகப் பெருந்தகை தில்லையிலே எழுந்தருளியிருக்குங் காலத்து, சாதகர்களாகிய அடியார்களும், ஏனைய மக்களும் பாசபந்தத்தால் மாயையில் சிக்குண்டு அல்லற்படுவதைக் கண்டு மனமிரங்கி, மக்களே! நம்மைத் துன்பப்படை வந்து தாக்க இருக்கிறது; மாயப்படை வந்து சூழ இருக்கிறது; படையெடுத்துப் புறப்படுங்கள்; நாம் வான நாடு ஆள்வோம் என ஞான வீரத்தை எழுப்ப இதனை அருளிச் செய்தார்கள்.*

*படையெழுச்சி - படையெழுதல். நல்லநாள் பார்த்து, குடையும் வாளும் முரசும் நாட்கொண்டு, பறைசாற்றி வீரர்களை ஒருங்கு திரட்டிக் கொண்டு, காலமும் இடமும் செவ்விதினோக்கிப் பகைவர் மேல் படை கிளம்புதலே படையெழுச்சியாகும். இது மாயப்படையின்மேல் ஞானியர் படையெழுதலை உணர்த்துதலின் திருப்படையெழுச்சி எனப்பட்டது.*

*யாத்திரைப்பத்தால், சிவபுர யாத்திரை செய்யவேண்டியதன் இன்றியமையாமையையும், இன்றே செய்யவேண்டியது என்பதையும், பயனையும் உணர்த்திய ஆசிரியர், யாம் பயணம்போகிறபோது இடைநடுவே மாயப்படை அல்லல் வடிவில்வந்து நம்மைத் தாக்கும்; நம் பயணம் வெறுவிதான ஊர்ப்பயணமாதல் கூடாது; படையெழுச்சியாக விளங்கட்டும் என்று கிளர்ச்சியூட்டுகின்றார்கள்.*

*இதில் ஞானமே வாளாகவும், நாதமே பறையாகவும், தியானமே வெண்கொற்றக் குடையாகவும், திருநீறே கவசமாகவும், தொண்டர்கள் படைவீரராகவும், இறைவனே போர்த்தலைவனாகவும், சிவலோக ஆட்சியே படையெழுச்சியின் பயனாகவும் உணர்த்தப் பெறுகின்றன.*

*ஆன்மாக்களின் பழைய பகை; ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றுமாம். அவைகளை வெல்லப் போதிய ஆற்றல் ஆன்மாக்களுக்கு இயற்கையாக இல்லை; இறைவன் உயிர்களுக்கு அந்த ஆற்றலையுதவவும், பழகித்தேறவும் படைப்புட்படுத்துகிறான். உயிர்கள் அவனுதவியைக் கொண்டு மாயையின் மயக்க ஆற்றலை உணர்ந்து அதனை அழிக்கின்றன. அடுத்து இறைவன், இருவினை ஒப்பான உள்ளத்தை உதவுகிறான்; உயிர்கள் கன்மமலச் சேனையை வெல்லுகின்றன. பின்பு சிவஞானத்தை உதவுகிறான்; உயிர்கள் ஆணவ வலி குன்றி ஞானவடிவு எய்துகின்றன. இதனால் ஆணவமலச் சேனை அழிகிறது. இங்ஙனம் சுத்த சத்துவ குணத்தைத் தாங்கித் திருவெண்ணீறு அணிந்து, சிவனடியார்களோடு*

*மருவி வாழ்தலே முத்தியுலகு ஆளுதற்குரிய உபாயம் என்பதே படையெழுச்சியாதல் தெளிக.*

--------

***பிரபஞ்சப் போர்***

***கலி விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**615.** **ஞானவாள் ஏந்தும்ஐயர் நாதப் பறையறைமின்**
**மானமா ஏறும்ஐயர் மதிவெண் குடைகவிமின்**
**ஆனநீற் றுக்கவசம் அடையப் புகுமின்கள்**
**வானவூர் கொள்வோம்நாம் மாயப்படை வாராமே.** **1**

***உரை :-*** *சிவஞானமாகிய வாளினைக் கையிலேந்திய தலைவரது பிரணவ நாதமாகிய பறையை அறையுங்கள். பெருமை பொருந்திய விடையிலேறுந் தலைவர்க்குத் திங்களாகிய (அறிவாகிய) வெள்ளைக் குடையை எடுத்துப் பிடியுங்கள். ஆக்கத்தைத் தருந் திருவெண்ணீறாகிய மெய்ப்பையினுள்ளே முழுவதும் புகுந்து கொள்ளுங்கள். மாயாகாரியமாகிய சேனைகள் வந்து நம்மைத் தாக்கு முன்னே அருள் வானிலுள்ள இன்பப்பதியை நாம் கைப்பற்றுவோமாக.*

*நாதப்பறை அறைதலாவது சூக்கும ஐந்தெழுத்தை உயிர்ப்பாய்ப் புறம்போந்து உட்புகுந்து நிலவச்செய்தல். பிரணவ பஞ்சாக்கரத்தோடு கூடிய சூக்கும பஞ்சாக்கரத்தை ஒலியாமல் ஒலித்தலே பறையறைதலாம் என்க. முன்னரும் 'பிறவிப்பகை கலங்கப் பேரின்பத்தோங்கும் பருமிக்க நாதப்பறை' என்றது காண்க.*

*மான மா - மானத்தோடு கூடிய மாவாகிய இடபம். இது படையெழுச்சி ஆதலின், மானத்தையுடைய மா என்றார். மா - விலங்கு, குதிரை இரண்டுமாம். ஈண்டு இறைவன் ஏறும் ஊர்தி இடபமாதலின் அது கொள்ளப்பட்டது. எத்தகைய இடையூறு நேரினும் பின்வாங்காமையும், எதிர்சென்று தாக்குதலும் மானம்; அவற்றை யுடைய மா என்றார்.*

*மதி வெண்குடை - மதிமண்டலமாகிய வெண்குடை. மதி மண்டலம் பிரமரந்திரத்தைச் சூழ ஆயிர இதழ்த்தாமரை வடிவினதாய், இறைவன் ஒளிவடிவாகத் திகழும் இடமாய் விளங்குவது. அதனைக் குடையாக உருவகித்தார். அதனைத் தியானத்தால் காண வேண்டலின் தியானமேகுடையாய் என்பாருமுளர்.*

*மாயப்படை அழிய என்னாது வாராமே என்றது, யாம் போருக்கு ஆயத்தமானாற் போதும்; மாயப்படை தாமே பின் வாங்கி வாங்கி ஓடிவிடும்; அழித்தலாகிய கருணையற்ற செயலைச் சைவ சீலர்களாகிய நாம் செய்யவேண்டாம் என்பது குறிப்பு.*

***குறிப்பு*** *:- பிரணவ பஞ்சாக்கரம், வாசனாமலம் நீங்க ஒலிக்கப்படுவது. சிவஞானமாகிய அறிவினுள் இறைவன் விளங்குதலின், 'மதிவெண்குடை' என்றார். ஆன - நன்மைக்கான. வானம் - சிதாகாசம் அல்லது அருள். அடைய - முற்றிலும்.*

**616.** **தொண்டர்காள் தூசிசெல்லீர் பத்தர்காள் சூழப்போகீர்**
**ஒண்திறல் யோகிகளே பேரணி உந்தீர்கள்**
**திண்திறல் சித்தர்களே கடைக்கூழை செல்மின்கள்**
**அண்டர்நா டாள்வோம்நாம் அல்லற்படை வாராமே.** **2**

***உரை*** *:- தொண்டர்களே! முன்னணியாகச் செல்லுங்கள். அன்பர்களே! புடைசூழ்ந்து செல்லுங்கள். ஒளிமிக்க வலிமையுடைய யோகிகளே! பெரும்படைப் பகுதியைச் செலுத்துங்கள். திட்டமான உடல்வன்மையுடைய சித்தர்களே! பிந்திய அணி வகுப்பிற் செல்லுங்கள். தேவநாட்டை, நாம் துன்பப்படை வராமல் ஆள்வோமாக.*

***குறிப்பு*** *:- ஞான நிலையிலுள்ள அடியார்களை முன்னும், கிரியை வல்லாரை மருங்கிலும், யோகிகளைப் பெரும்படை நிலவும் நடுவிலும், உடல்வலியின் பொருட்டுக் காயசித்தி முதலியவற்றிற் சிறந்த சித்தர்களைப் பின்னணியிலும் வைத்தனர். 'அண்டர் நாடு' என்பது வீட்டுலகத்தைக் குறிக்கும்.*

***திருச்சிற்றம்பலம்.***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 47. திருவெண்பா

*அடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளி ஆனந்த மயக்கறுத்த அத்தனுடைய பிரிவால் அத்தன் தமக்காற்றிய அருளிப்பாடுகள் அனைத்தும் அநுபவநிலையைப் பெருக்க, திருவெண்பாவாகிய இதனை அருளிச் செய்கின்றார்கள்.*

*இப்பதிகம் வெண்பா யாப்பான் அமைந்திருத்தலின் இப்பெயர் பெற்றது எனலாம். ஆயினும் முன்னர்த் திருத்தசாங்கமும், பின்னர்ப் பண்டாய நான்மறையும் வெண்பா யப்பினவாகவும் இதற்கு மட்டும் இப்பெயரமைய ஏது என்னை எனின், தசாங்கம் தலைவனைத் தன்னின் வேறாகவைத்து அவன் ஊரும் பேரும் கிளியைக் கேட்டின்புறும் கருத்தினதாக அமைந்தது. பண்டாய நான்மறை அநுபவ முதிர்ச்சியை அறிவித்து, தாம் கைமாறு செய்யமாட்டாமை அறிந்து செயலற்ற தன்மையை அறிவிப்பது. இது திருவருள்பெற்ற சீவன் முத்தர் செய்தியை உணர்த்தும் பொருட்சிறப்பால் யாப்பானே பெயர்பெற்றது என்க. திரு - ஞானம். திருவெண்பா - சிவஞானியர் நிலையாகிய சிவஞானத்தைத் தெரிவிக்கும் வெண்பா என்க.*

*தொட்டதைப் பொன்னாக்கும் பரிசவேதிபோலச் சிந்தையைத் தீண்டிய அளவில் சீவகுணமாகிய அறியாமைக் காரிருளைப் போக்கி ஞானவொளியை நல்கிச் சிவமாக்கிய திருவருளின் தன்மையை விரித்துரைப்பது என்பதாம்.*

--------

***அணைந்தோர் தன்மை***

***நேரிசை வெண்பா***

*திருச்சிற்றம்பலம்*

**617. வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப்**
**பொய்யும் பொடியாகா தென்செய்கேன் – செய்ய**
**திருவார் பெருந்துறையான் தேனுந்து செந்தீ**
**மருவா திருந்தேன் மனத்து. 1**

***உரைநடை :-*** *இறுதி இரண்டடியை முதலிற்கொள்க.*

***உரை :-*** *செம்மையுடைய அழகு பொருந்திய திருப்பெருந்துறை*

முதல்வனாகிய தேன்போன்ற இன்பம் நல்குகின்ற செஞ்சோதியை உள்ளத்தே பொருந்தா திருந்தேன். கொடிய இருவினையும் வெந்தொழியுமாறு உடம்பு உருகி இப் பொய் வாழ்வும் நீறிப் போகா திருக்கிறதே, நான் என் செய்வேன்?

இறைவனாகிய தீயை என்மனத்துப் பொருந்த இடாததால், வினைகள் வெந்தொழிய உடலுருகி, பொய்யும் சாம்பராகவில்லை, என் தவறு இது; யான் என் செய்வேன் என்பது கருத்து.

வினை இரண்டு - நல்வினையும் தீவினையும். நல்வினையும் பொன்விலங்கு போலப் பிறவிக்கேதுவாதலின் அதனை வெய்ய வினை என்றார். 'இருள்சேரிருவினையும் சேரா' என்ற குறளுக்கு 'நல்வினையும் தீவினையும் பொன்விலங்கும் இரும்புவிலங்கும் போலப் பிறவிக்கு ஏதுவாகலான் இருவினையும் சேரா என்றார்' என்ற பரிமேலழகருரையும் ஈண்டுக் காண்க. "தீவினையைச் சுட்டெரித்து" என்பது பண்டாரசாத்திரம்.

தேனுந்து செந்தீ - இனிமை தருகின்ற செந்நிறமான தீ. இல்பொருளுவமையடியாகப் பிறந்த உருவகம். பௌதிகத்தீக்கும் சிவத்தீக்கும் உள்ள வேறுபாடு இதுவே என்பது குறிப்பு.

***குறிப்பு :-*** ***உடம்புள்ளவரை, பிராரத்தவினை நுகரக் கிடத்தலின், உடம்பும் வாழ்க்கையும் ஒழிய விரும்பினமை கூறினர். இறைவனை அயரா அன்பினால் வழிபட்டால், உடல் வாழ்க்கையொழிந்திருக்கு மென்று குறிப்பிக்கிறார்.***

**618. ஆர்க்கோ அரற்றுகோ ஆடுகோ பாடுகோ**
**பார்க்கோ பரம்பரனே என்செய்கேன் – தீர்ப்பரிய**
**ஆனந்த மாலேற்றும் அத்தன் பெருந்துறையான்**
**தானென்பார் ஆரொருவர் தாழ்ந்து. 2**

***உரைநடை :-*** *இறுதியடிக ளிரண்டையும் முதலிற்கொள்க.*

***உரை :-*** *மேலான மேலோரின் மேலோனே, நீக்க முடியாத பேரின்பப் பித்தினை மிகுவிக்கின்ற அப்பன் திருப்பெருந்துறைப் பெருமானே என்று என்னிடம் கூறுவார் ஒருவர் யார். நான் அவரை வணங்கி. ஆரவாரிப்பேனா, அலறுவேனா, ஆடுவேனா, பாடுவேனா, பார்ப்பேனா என்ன செய்வேன்.*

*பேரானந்தப் பெரும்பேறு அளிக்கும் தந்தை திருப்பெருந்*

*துறையானே என்பவர் யாரோ அவரை வணங்கி எல்லாம் செய்வேன் என்பது கருத்து.*

*ஆர்க்கோ - ஆரவாரிப்பேனோ. ஆரவாரம் - பொருளற்ற பேரொலி. இது பரபரப்பால் விளைவது. ஆனந்தம் அருளிய தந்தை திருப்பெருந்துறையானே என்ற உண்மையைப் பிறர் சொல்லக் கேட்ட ஆனந்தத்தால் 'ஆர்க்கோ' என்கின்றார்.*

*அரற்றுதல் - புலம்புதல்; எல்லைமீறிய இன்பப்பெருக்கால் வந்த அழுகையால் 'அரற்றுகோ' என்கின்றார்.*

*நாடவர் நந்தம்மை நகைப்பரே என்ற நாணமும் ஆனந்த மேலீட்டால் அகலுதலின் ஆடுவேனோ என்றது. அங்ஙனமே பாடுகோ என்பதும்.*

*பார்க்கோ - கருவி கரணங்கள் செயலோய்ந்து, கண் ஒன்றே காரியப்படப் பார்த்துக்கொண்டேயிருப்பேனோ என்பதாம். ஐந்து பேரறிவும் கண்களே கொள்ளப் பார்க்கும் நிலை இது என்க.*

***குறிப்பு :-** தாழ்ந்து என்பதை ஆர்க்கோ என்பதோடு முடிக்க. துணை யன்பரின்றித் தாம் ஆனந்த உணர்ச்சியைப் புலப்படுத்த முடியாது வருந்துவதை இதனுட் குறித்தார்.*

**619.** **செய்த பிழையறியேன் சேவடியே கைதொழுதே**
**உய்யும் வகையின் உயிர்ப்பறியேன் – வையத்**
**திருந்துறையுள் வேல்மடுத்தென் சிந்தனைக்கே கோத்தான்**
**பெருந்துறையில் மேய பிரான்.** **3**

***உரைநடை :-** இறுதி யிரண்டடியை முதலிற்கொள்க.*

***உரை :-** திருப்பெருந்துறையில் வீற்றிருந்த பெருமான் உலகத்தே வந்திருந்து அவனது ஆயுதப் பையுட் கிடந்த வேலினை எடுத்து என் உள்ளத்தே அழுந்தும்படி, எய்துவிட்டான். அவன் அங்ஙனஞ் செய்தற்கு யான் செய்த தவறியாதென அறிந்திலேன். அவனது செவ்விய திருவடிக் கமலங்களையே கை கூப்பினேன். உய்தி கூடு முறையின் தோற்றமும் அடியேன் அறிந்திலேன்.*

*யான் செய்த தவறுகள் இன்ன, உய்யு நெறி யாது என்பதையும் அறியாது ஏதோ திருவருள் வசத்தால் திருவடியைத் தொழுத எனக்கு அவன் உறையுள் வேலைச் செருகினாற்போலச் சிந்தையுள் திருவருளைச் சேர்த்தான் என்பது கருத்து.*

*உயிர்ப்பு - தோற்றம்.*

*உறையுள் வேலைச்செருகினால் செறிவாக இருப்பதுபோலவும், வேல் தெரியாமல், மேலுறையாகிய தோலே தெரிவது போலவும் திருவருள் என்னுடைய மனத்துள் மறைத்து வைக்கப்பெற்றது; அதனால் பசுபோதம் கழன்றது; அதனால் சிவபெருமான் சேவடியையே தொழுதுகிடக்கின்றேன் என்று அனுபவம் அறிவித்தவாறு காண்க.*

***குறிப்பு*** *:- வேல், ஞானத்திற்கு அறிகுறி. வழிபாடொன்றே யன்றி வேறுபாயத்தை நாடாதிருக்கவும் இறைவன் குருவாய் வந்து ஞான மளித்தனன் என்றார். மடுத்துக் கோத்தான் - அழுத்திப் பொருத்தினான்.*

**620.** **முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்**
**பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன் – தென்னன்**
**பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்**
**வருந்துயரந் தீர்க்கும் மருந்து.** **4**

***உரை*** *:- அழகிய நல்ல திருப்பெருந்துறையில் வீற்றிருந்த பேரருளாளன். எனது முற்பிறப்பிற்செய்த இருவினைகளை அடியோ டறுத்து எனக்கு எதிர்பட்டு நின்றான். இனி வரும் பிறப்பினைத் தொலைத்த பெருந்துறையாளன், இப்பிறப்பில் வரக்கூடிய துயரத்தைத் தீர்க்கும் மருந்துமாவன்.*

***குறிப்பு*** *:- முன்னை வினை சஞ்சிதத்தையும், பின்னை வினை ஆகாமியத்தையும், இப்பிறப்புத் துயர் பிராரத்தத்தையுங் குறிக்கும். 'முன்னின்றான்' என்பதை முதலடியின் முதற்கண் கொண்டு, முன்னின்று, வேரறுத்து என முடிப்பது முண்டு.*

**621.** **அறையோ அறிவார்க் கனைத்துலகும் ஈன்ற**
**மறையோனும் மாலும்மால் கொள்ளும் – இறையோன்**
**பெருந்துறையுள் மேய பெருமான் பிரியா**
**திருந்துறையும் என்நெஞ்சத் தின்று.** **5**

***உரை*** *:- எல்லா வுலகையும் படைத்த வேதியனாகிய பிரமனும் திருமாலும் அடிமுடி காணாது மயக்கங் கொள்ளுதற் கேதுவாய இறைவன் திருப்பெருந்துறையின்கண் வீற்றிருந்த பிரான், இப்போது எனது உள்ளத்திலே நீங்காது தங்கி வாழ்வன். இறைவனைத் தேடி*

*அலைவார்களுக்கு யான்கூறும் உறுதி இது என்றவாறு.*

*மாலும் பிரமனும் அறியாது மயங்கும் இறைவன் என் நெஞ்சத்தில் என்றும் உறைகின்றான்; அவனைத்தேடி அலைவார்க்கு உறுதியாகச் சொல்லுகிறேன் என்பது கருத்து.*

*இறைவன் எல்லா உயிர்களிடத்தும் பரிபாக நிலைக்கேற்பப் பாலில் நெய்போலவும், தயிரில் நெய்போலவும், மணியுள் ஒளி போலவும் தங்குதலை உடையவன். இறுத்தல் - தங்குதல்.*

***குறிப்பு :-** அறையோ, பந்தயத்துக் கழைத்தல், சொல் என்ற பொருளுமுண்டு. அறிவார்க்கறையோ என்பதை இறுதியிற் கொள்க.*

**622. பித்தென்னை ஏற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்**
**மத்தமே யாக்கும்வந் தென்மனத்தை – அத்தன்**
**பெருந்துறையான் ஆட்கொண்டு பேரருளால் நோக்கும்**
**மருந்திறவாப் பேரின்பம் வந்து. 6**

***உரை :-** அப்பனாகிய திருப்பெருந்துறையாளன் என்னை ஆண்டருளிப் பேரருளால் பார்க்கும் அமுதமாவான். அழியாத பேரின்பமாவானாகிய சிவபெருமான் எழுந்தருளிவந்து, என்னை மிக்க ஆசை மிகுகின்றவ னாக்குவான். பிறப்பினைத் தொலைப்பான். என் மனத்தைச் சொல்லுதற்கரிதாய மிக்க களிப்பு வடிவமேயாக்குவான்.*

*ஆளாகக் கொள்வதற்கு முன்பு அன்புடன் அணைத்துப் பேசியும் ஆட்கொண்ட பின்பு வன்பாக ஒறுத்துப்பேசியும் அடியவனை அவமதிக்கும் செல்வர்போலாது அன்புடன் ஆட்கொண்டு பெரிய அருளால் நோக்குகின்ற மருந்து போல்பவன் என்றது இறைவனுடைய எல்லையில் கருணையை உணர்த்துகின்றது.*

*கண்டு கேட்டு உறுதலாகிய இன்பங்கள் பொறிகள் புலன்களோடு பொருந்துங்காலத்து விளைவதாய்ப் பின்னர் வெறுப்பாந்தன்மையன; காலத்தானும் நுகர்ச்சியானும் வரையறைக் குட்பட்டன. இறைவனிடமிருந்து பெறும் இன்போ என்றும் அழியாததாய், அளவிடற்கு அரியதாய், தோயுந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாகப் பயப்பதாதலின் 'இறவாப் பேரின்பம்' என்றார்.*

*மத்தம் - மதத்தால் விளையும் களிப்பு. வந்து என்மனத்தை மத்தமே ஆக்கும் எனக் கூட்டுக. சிவானந்தத்தால் விளையும் களிப்பு*

இத்தன்மையதாய் இருந்தது என்று சொல்லவொண்ணாமையால் 'பேச்சு அரிதாம் மத்தமே ஆக்கும்' என்றார்.

*குறிப்பு :-* அத்தன், பெருந்துறையான் மருந்து இன்பம் வந்து பித்தென்னை யேற்றும். பிறப்பறுக்கும் என் மனத்தை வந்து பேச்சரிதாம் ஆக்கும் என முடிக்க.

**623.** வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா அமுதாய் அமைந்தன்றே — சீரார்
திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி. 7

*உரை :-* சிறப்புப் பொருந்திய அழகிய தெற்கின்கண் உள்ள திருப்பெருந்துறைப் பெருமான், எனது உள்ளத்திற் பொருந்திய ஒப்பற்றவன் வளர்க்கும் அருளொளியானது, பிறவிக்கு மீண்டு வாரா வழியினைக் கொடுத்து, எனக்கு மாறுபடாது வந்து தெவிட்டாத அமுதமாய் அமைந்தது.

குழந்தையின் போக்கிலேயே நடந்து குழந்தையைத் திருத்தும் செவிலிபோலச் சிவஞானப் பேரொளி சிந்தையில் வந்த போது, என்னுடைய குணஞ்செயல்கட்கு ஒத்ததாய், மாறுபாடின்றியிருந்தது என்னைத் திருத்திச் சிவனடிக்கு வழிப்படுத்தியது என்பார் 'எனக்கு மாறின்றி' என்றார்.

அடிகளார்மனம் மறந்தும் பிறதெய்வம் பேணாத பெருஞ் சிறப்பாகிய கற்புடையது ஆதலின் 'என்சிந்தைமேய ஒருத்தன்' என்றார். ஒருத்தன் - ஒப்பற்றவன் எனலுமாம்.

ஞானம் அனுபவம் மிகுந்தோறும் பெருகுவது ஆகலின் பெருக்கும் ஒளி என்கின்றார்.

*குறிப்பு :-* மாறின்றி - பகையின்றி; பகையிலதாக்கி என்று முரைப்பர்.

**624.** யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவர்க்குங் கீழாம் அடியேனை — யாவரும்
பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை. 8

*உரை :-* எல்லார்க்கு மேம்பட்ட எல்லையற்ற சிறப்புடைய பெருமானே, எல்லார்க்குங் கீழ்ப்பட்ட அடியேனை, யாருக்குங்

*கிடைத்தறியாத பேரின்பத்துள் அமைத்தனையாகிய உனக்கு எமது பெரியோனே, கைம்மாறு செய்யும் விதத்தை அறிந்திலேன்.*

*பிரமன், திருமால், இந்திரன் முதல் உயர்நிலையில் அஷ்ட வித்யேச்சுரர் வரையிலுள்ள அனைவருக்கும் மேலான கருதலளவையிலும், எண்ணலளவையிலும் அடங்காத புகழை உடையவன் இறைவன் எனத் தலைவனது மேன்மையும், தேவர் முதல் நரகர் ஈறான அனைவருக்கும் கீழான தன்மையையுடைய அடியேன் எனத் தன் இழிதகைமையும் தோன்ற இங்ஙனம் கூறினார்.*

*வள்ளல்கள் இரப்பவன் தகுதியும் தேவையும் நோக்காது தன் பெருமை ஒன்றே நோக்கி வரையாது வழங்கல்போலக் கீழான என்னை மிக மேலான நீ ஒருவரும் பெற்றறியாத இன்பவுலகத்துள் இருக்கச் செய்தாய்; அதனால் எம்போல அடியார் பலருக்கும் பெருமானாக இருந்த நீ எனக்கேயுரிய எம்பெருமான் ஆயினை; அத்தகைய உனக்கு யான் என்ன உபகாரம் செய்வேனென்ற நயந்தோன்றக் கூறியவாறு காண்க.*

625. மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவருங் காணாச் சிவபெருமான் – மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே இன்பம் மிகும். 9

***உரை :-*** ***மும்மூர்த்திகளும், முப்பத்துமூன்று தேவர்களும் அவர்கள் அல்லாத பிற தேவர்களும் காண முடியாத சிவபெருமான் குதிரையேறி நிலவுலகத்தே இறங்கி வந்து காட்டியருளிய நீண்ட திருவடிகளை வணங்கவே, உடம்பினுள்ளே பேரின்ப வுணர்ச்சி வளரும்.***

***மற்றொழித்த தேவர்களாவார் இவர்கள் அல்லாத விண்ணுலக வாசிகள் அனைவரும். இவர்கள் கன்மபூமியிற் பிறவாது இன்ப பூமியில் பிறந்தமையினால் அன்பு நெறியோ அறிவு நெறியோ இலராய் அமுதத்தை உண்டு அரிவையர் இன்பமே துய்த்து அல்லல் உறுவர் ஆதலால் சிவபெருமான் அவர்களால் அறியப்படாதவன் ஆயினன் என்பதாம்.***

***அங்ஙனம் விண்ணவர் கண்ணுக்கே தெரியாத பெருமான் அடியேன் பொருட்டு ஒரு குதிரை வீரனாகிக் கன்ம பூமியாகிய இதில் வந்து அவதரித்தான்; இது அவனது எளிவந்த கருணை. இதனை***

*'மாவேறி வையகத்தே வந்து இழிந்த' என்பதால் குறிக்கின்றார்.*

*குறிப்பு :- முப்பத்துமூவர்; உருத்திரர் - பதினொருவர், ஆதித்தர் - பன்னிருவர், அசுவினிதேவர் - இருவர், வசுக்கள் எண்மர். திக்குப் பாலகர் முதலியோர் பிறதேவர்கள். மா - குதிரை.*

**626.** இருந்தென்னை ஆண்டான் இணையடியே சிந்தித்
திருந்திரந்து கொள்நெஞ்சே எல்லாந் – தருங்காண்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
மருந்துருவாய் என்மனத்தே வந்து. **10**

***உரை :-*** *திருப்பெருந்துறையில் வீற்றிருந்த பேரருளாளன், அமுத வடிவமாய் என் உள்ளத்தே வந்திருந்து என்னை ஆட்கொண்டருளி னன். அவனது திருவடிகளிரண்டையுமே (இடைவிடாது) நினைந் திருந்து நெஞ்சமே (நீ வேண்டிய) எல்லாவற்றையும் யாசித்துக் கொள். அவன் எல்லாந் தந்தருள்வான்.*

*ஆட்கொண்ட ஆதிகாலம்போல என்னைவிட்டுப் பிரியாது என்னுள் என்றும் இருந்து என்னை ஆண்டான்; ஆகையால், நீயும் அவன் இணையடியை இடைவிடாது சிந்தித்து நிட்டையிலிருந்து வேண்டியதைக் கேட்டுப் பெற்றுக்கொள் என்பதனை 'நெஞ்சே! இருந்து என்னை ஆண்டான் இணையடியே சிந்தித்திருந்து இரந்துகொள் எல்லாந்தரும்' என்பதால் உணர்த்துகிறார். இறைவன் பிறவிப்பிணிக்கு மருந்து போல்பவனாகலின் 'மருந்து உருவாய்' என்றார். காண் : முன்னிலை அசை.*

*திருவடியை இடைவிடாது சிந்தித்தலும், இன்பத்தை அவனிடமே கேட்டுப் பெறுதலும் அணைந்தோர் செயலானதை இத்திருப்பாடல் உணர்த்துகிறது.*

*குறிப்பு :- பெருங் கருணையாளன், மனத்தேவந்து இருந்தென்னை ஆண்டான், நெஞ்சே இணையடியே சிந்தித்திருந்து இரந்து கொள், எல்லாந் தருங்காண் என முடிக்க.*

**627.** இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றுந்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியாய் – அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து. **11**

***உரை :-*** *சிறப்புப் பொருந்திய திருப்பெருந்துறை முதல்வன், பிறவித் துன்பத்தின் தொடர்ச்சியை அறுத்து அருளொளியாய், அறியாமை இருளை நீக்கி, என்றுமுள்ள பேரின்பத்தைப் பெருக்கி அன்பினை உளதாக்கி, என்னுடைய உள்ளத்தையே தமது பதியாக விரும்பிக் கொண்டருளினன்.*

*இப்பதினொரு திருப்பாட்டானும் இறைவன் என் மனத்து அணைந்தமையால் வினைகள் அகன்றன; ஆனந்தம் பெருகிற்று; இன்ப அன்பு பெருகிற்று; அவன் துன்பம் துடைக்கும் மருந்தாயினன்; என் நெஞ்சத்து என்றும் இருக்கின்றான்; ஒளியுதவுகின்றான்; அமுதாய் இனிக்கின்றான்; அவனுக்குச் செய்யும் கைம்மாறு ஒன்றும் அறிகின்றிலேன்; அவனது திருவடியை வணங்க என் உள்ளத்தே ஊற்று எடுத்து ஓடுகின்றது; நெஞ்சே! நீ வேண்டியதைக் கேட்டுப் பெற்றுக்கொள் என்று அணைந்தோர்க்குரிய சுவாநுபூதி முறைகளைச் சொல்கின்றமை காண்க.*

***திருச்சிற்றம்பலம்.***

*திருப்பெருந்துறையில் அருளிய*

## 48. பண்டாய நான்மறை

*இது, முதற்குறிப்பாற் பெற்ற பெயர். எனவே, இதுவும் பொருளாற் பெயர் பெறாது, சொல்லாற் பெயர் பெற்றதாதலின், இதன் கண்ணும் பல பொருளும் கலந்து வருதல் பெறப்பட்டது. 'அநுபவத்துக்கு ஐயமின்மை உரைத்தல்' என்னும் முன்னோர் குறிப்பு, இரண்டாவதும், ஏழாவதுமாய் நின்ற வெண்பாக்களின் பொருளைச் சிறப்பாகக் கொண்டு உரைத்தது. ஏனைய திருப்பாட்டின் பொருளும் ஒருவாற்றான் இதற்கு இயைந்து நிற்கும். இது, திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது என்பதே பதிப்புக்களில் காணப்படுவது. இதன்கண் ஏழு திருப்பாட்டுக்களே காணப்படுகின்றன. இப்பாட்டுக்கள் அந்தாதியாய் வருவன.*

--------

***அனுபவத்துக் கையமின்மை உரைத்தல்***

***நேரிசை வெண்பா***

*திருச்சிற்றம்பலம்*

**628.** **பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனுங்**
**கண்டாரு மில்லைக் கடையேனைத் – தொண்டாகக்**
**கொண்டருளுங் கோகழிஎங் கோமாற்கு நெஞ்சமே**
**உண்டாமோ கைம்மா றுரை.** **1**

***உரை :-*** *பழமையாகிய நான்கு வேதங்களும் அவன்பாற் சேரா. திருமாலும், பிரமனும் அவனைக் கண்டதுகூட இல்லை. கீழ்ப்பட்ட என்னை அடிமையாக ஆட்கொண்டருளும் எமது திருப்பெருந்துறை அரசனுக்கு மனமே பதிலுபகாரம் உண்டோ? சொல்.*

***குறிப்பு :-*** *கோகழி - திருவாவடுதுறையையுங் குறிக்கும்.*

**629.** **உள்ள மலமூன்றும் மாய உகுபெருந்தேன்**
**வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த – வள்ளல்**
**மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்**
**கருவுங் கெடும்பிறவிக் காடு.** **2**

***உரை :-*** *உயிரைப் பற்றிய மும்மலமும் நீங்கியொழிய, குதிரை*

*யின்மேலேறிவந்த அருட் கொடையாளனாகிய பெருமான் சொரி கின்ற தேனனைய பேரின்ப வெள்ளத்தைத் தரும், அவன் வீற்றிருக்குந் திருப்பெருந்துறையைத் துதியுங்கள். துதிக்கவே, பிறவிக் காட்டின் மூலமுங் கெட்டொழியும்.*

*செம்பிற் களிம்புபோல மலம் ஆன்மாவிற்கு அநாதியாதலின் அதனை 'உள்ள மலம்' என்றார். உள்ள மலம் ஆணவம். மூன்று - அநாதியேயுள் ஆணவம் முதலான மூன்று என்க. அவையாவன ஆணவம், மாயை, கன்மம் என்பன. யாம், எமது, அவற்றால் விளையும் பாசம் என்பர் சிலர். யாம் என்பது ஆணவத்தின் காரியமாகிய முனைப்பு. எமது என்பது அதன் காரியமாகிய அறியாமையான் விளைந்த மாயாகாரியத்தோடுண்டான சம்பந்தம். பாசம் என்பது நான் என்று முனைக்கும் பொருளுக்கும், எனது என்னும் பற்றப்படுபொருள் களுக்குமிடையே நிகழ்வதாகிய ஆசையும் அதற்காம் முயற்சிகளாகிய வினைகளும் ஆம். இவ்வொற்றுமையறியாது மும்மலம் - யாம், எமது, பாசம் என்பனவே; ஆணவம், மாயை, கன்மம் என்பாரும் உளர்; அடிகள் 'யாம் ஆர் எமது ஆர் பாசம் ஆர் என்ன மாயம்' (607) என்பதால் யாம் முதலிய மூன்றையுமே மலம் என்றனர் என்பர்.*

*சைவநூலுக்குச் சைவநூல் வழிநின்று உரை கூறுதலே அமையும்; அன்றிச் சாத்தமும் தாந்திரிகமும் ஏகான்மவாதமும் முதலான புறச்சமய நெறிநின்று கூறுதல் பொருந்தாது என விடுக்க. அன்றியும் வேறல்லாதவற்றை வேறுபோலக் காட்டலாலும் பயனின்மை தெளிக. தலத்திற்குரியவனைக்கூட வாழ்த்த வேண்டாம், தலத்தை வாழ்த்துங்கள் போதும்; பிறவிக் காட்டின் கரு அற்றுவிடும் என்கின்றார்கள். காடு அழிப்பது கடினம்; வேரில் வெந்நீர் ஊற்றுவது போல அதன் கருவை அழிப்பது எளிதென உலகவரை ஊக்கியவாறாம்.*

*பிறவிக்காடு கருவறும் என உறுதியுரைத்தலின் அனுபவத்திற்கு ஐயமின்மையாகிய பதிகக்கருத்து இவ்வெண்பாவிற்றோன்றுதல் காண்க.*

***குறிப்பு :-** 'வெள்ளந் தரும்' என்பதற்கு, 'வெள்ளந் தருகின்ற' எனப் பொருள் கொண்டு, 'தரும்' என்பதை வள்ளலென்பதோடு முடிப்பதுண்டு. கரு - மூலம், வேர்.*

**630. காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்**
**நாட்டிற் பரிப்பாகன் நம்வினையை – வீட்டி**

அருளும் பெருந்துறையான் அங்கமல பாதம்
மருளுங் கெடநெஞ்சே வாழ்த்து. 3

***உரை :-*** *காட்டிலே வேடனாகியும், கடலில் வலைஞனாகியும், நாட்டிலே குதிரைப்பாகனாகியும் தோன்றியருளி (உயிர்களாகிய) நமது வினையைத் தொலைத்து அருள்புரியும் திருப்பெருந்துறைப் பெருமானது அழகிய திருவடிக் கமலங்களை நெஞ்சே மயக்கந் தீரும்படி துதிப்பாயாக.*

*குறிப்பு :- பார்த்தன் பொருட்டு வேடனாயினமை பாரதத்துட் காண்க. பிற கதைகள் திருவிளையாடலுட் காண்க. மருளும் என்பதில் உம்மை இறந்தது தழுவியது. வினையோடு மயக்கமும் என்பது கருத்து.*

**631.** **வாழ்ந்தார்கள் ஆவாரும் வல்வினையை மாய்ப்பாருந்**
**தாழ்ந்துலகம் ஏத்தத் தகுவாருஞ் – சூழ்ந்தமரர்**
**சென்றிறைஞ்சி ஏத்தும் திருவார் பெருந்துறையை**
**நன்றிறைஞ்சி ஏத்தும் நமர். 4**

***உரை :-*** *தேவர்போய் வலம்வந்து வணங்கித் துதிக்கும் சிறப்பமைந்த திருப்பெருந்துறையை நன்கு வணங்கித் துதிக்கும் நம்மவர் (உலகில் பயனுற) வாழ்ந்தார்களும், கொடிய வினையைத் தொலைப்பாரும் ஞாலமே வணங்கி வாழ்த்தத் தக்கவருமாவர்.*

**632.** **நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல**
**எண்ணி எழுகோ கழிக்கரசைப் – பண்ணின்**
**மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்**
**கழியா திருந்தவனைக் காண். 5**

***உரை :-*** *எழுச்சியுடைய திருவாவடுதுறைப் பதிக்கரசனை, நமது துன்பங்கள் போயொழியும்படி திருவுள்ளங்கொண்டு, திருப்பெருந் துறை அடைந்து, பின், பண்போன்ற சொல்லினளாகிய உமையம்மை யோடு உத்தரகோசமங்கை சேர்ந்து அதனைவிட்டு நீங்காதிருந்த பெருமானைக் காண்க.*

*குறிப்பு :- நெஞ்சிற்கு இது கூறப்பட்டது. எழுகோகழிக் கரசை நம்மிடர்கள் போயகல எண்ணி, பெருந்துறையை நண்ணிப் பண்.... காண் என முடிக்க.*

**633.** **காணுங் கரணங்கள் எல்லாம்பே ரின்பமெனப்**
**பேணும் அடியார் பிறப்பகலக் – காணும்**

பெரியானை நெஞ்சே பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப் பேசு. 6

***உரை :-*** *அறிதற்குரிய கருவிகளெல்லாம் பேரின்ப மயமாகக் கண்டு போற்றும் அன்பர்கள், தமது பிறப்பு நீங்கும்படி கண்டு வணங்கும் பெருமை யுடையானை, எப்போதுந் திருப்பெருந் துறையை விட்டு நீங்காதவனை மனமே நீ வாயாரப் புகழ்வாயாக.*

*'கூறுநாவே முதலாகக் கூறுங்கரணம் எல்லாம் நீ' (498) என்றமையால், தத்தம் புலன்களையறியும் பொறிகளும் அவற்றை வாயிலாகக் கொண்டியங்கும் மனம் முதலான அந்தக்கரணங்களும் ஆகிய அனைத்தும் சிவமேயாதலானும், சிவம் இன்பம் மங்களம் ஆதலானும் அணைந்தோராகிய சீவன்முத்தர் எங்கும் எதிலும் சிவமே கண்டு பேரின்பம் பேணினர் என்பார் 'காணுங் கரணங்கள் எல்லாம் பேரின்பம் எனப் பேணும் அடியார்' என்றார்.*

***குறிப்பு*** *:- காணும் - அறியும். கரணம் - அகக் கருவி, புறக் கருவி முதலியன.*

**634. பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த**
**மாசின் மணியின் மணிவார்த்தை – பேசிப்**
**பெருந்துறையே என்று பிறப்பறுத்தேன் நல்ல**
**மருந்தினடி என்மனத்தே வைத்து.** 7

***உரைநடை :-*** *நல்லமருந்... 'வைத்து' என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *(பிறவி நீக்குவதற்கு) நல்ல மருந்தான பெருமான் திருவடிகளை உள்ளத்தே கொண்டு, பேசப்பட்ட உண்மைப் பொருள்களுக்கு எல்லையான முடிவாய, இன்பமாய், சொல்லினைக் கடந்த, குற்றமற்ற மாணிக்கம் போன்றவனது புகழை யுரைத்துப் பெரிய வழியானவனே எனத் துதித்துப் பிறப்பினை யொழித்தேன்.*

*குருநாதன் பேச்சு; சிவம், சத்தி, உயிர், மலம், மாயை இவற்றை யுணர்ந்து உயிர்கள் உய்யச்சொன்ன ஒரு பேச்சாம். அது தான்கெட்டுத் தலைவனாகவே விளங்கும் 'சிவ சிவ' என்பதாம். அதனை நான் பேசாமற் பேசுகின்றபோது, அப்பேச்சுக் கிடைத்த பெருந்துறை என் நினைவிற்கு வர அதனைப் பெருந்துறையே என வாய்விட்டுக் கூறினேன்; இவ்விரண்டு உபாயத்தானும் அடியேன் பெற்ற பயன் பிறப்பறுதலாம் என்றார்.*

*மருந்துவைத்தால் நோயறுதல் இயல்பாதலின் மருந்தினடி*

*மனத்தே வைத்தேன், பிறப்பறுத்தேன் என்ற நயமுமுணர்க. மருந்து மிக்க வன்மையுடையதாகலின், அம்மருந்தை உண்டேனலேன், எண்ணினேன், நோய் நீங்கிற்று என்றலும் காண்க.*

*திருவடிப்பேறு கிடைத்தமையால் பிறவி நீங்கிப் பேரின்பம் கிடைக்க இருப்பதை அறிவித்தலின் இப்பாடல் அணைந்தோர் தன்மை அறிவித்ததாயிற்று.*

***குறிப்பு :- பெருந்துறை, அப்பெயருடைய பதிக்கும், பெரு நெறியாய பிரானுக்கும் வழங்குவது.***

***திருச்சிற்றம்பலம்***

*தில்லையில் அருளிய*

## 49. திருப்படையாட்சி

*உலகியலிற் படையென்பது தேரும் குதிரையும் யானையும் காலாளுமாம். அந்நால்வகைப் படைகளையும் தலைவன் ஆளுந்திறமே படையாட்சியாம். அதுபோல, சிவசேனாபதிக்குரிய படைகள் தொண்டர்களும், பத்தர்களும், யோகியரும், சித்தர்களுமாவர். இதனைத் திருப்படையெழுச்சியில் அடிகளே அறிவித்துள்ளார்கள். அவர்களைச் சிவபெருமான் ஆளுந்திறம் கூறுவது திருப்படையாட்சியாம். அப்படையை இறைவன் குற்றங்கள் பலவும் போக்கிக் குணங்கள் பலவும் ஆக்கி ஆளும் திறம் இதன்கண் கூறப்படுகின்றது. இதனானே இதற்கு, 'சீவோபாதி ஒழிதல்' எனக் குறிப்புரைத்தனர் முன்னோர். உபாதி - குற்றம். இதன்கண், "ஆகாதே" என வருவன பலவும் 'ஆகும்' எனற்பாலதனை, வலியுறுத்தற் பொருட்டு எதிர்மறை முகத்தான் அருளிச் செய்தார் என்றே கொள்ளப்படும். இது, தில்லையில் அருளிச்செய்யப்பட்டது என்பதே பதிப்புக்களில் காணப்படுவது. இதன்கண் எட்டுத் திருப்பாடல்களே காணப்படுகின்றன. அனைத்தும் பன்னிரு சீரடி விருத்தங்கள். பதினொரு சீரின் மிக்கவற்றைப் பொதுவே, 'ஆசிரிய விருத்தம்' என வழங்குப. அவற்றை, 'பெருங்கழி நெடில் விருத்தம்' எனவும், பன்னிருசீரிற் குறைந்தவற்றை, 'குறுங்கழி நெடில் விருத்தம்' எனவும் வழங்குவாரும் உளர். இது முதலாக வரும் மூன்று பகுதிகளும், பின்னர்க் கிடைத்துக் கிடைத்தவாறே இறுதிக்கண் கோக்கப்பட்டன போலும்! அல்லாக்கால், அச்சோப்பதிகம் ஏனைப் பதிகங்களோடும், ஏனைய இரண்டும் வெண்பாக்கட்கு முன்னர் ஏற்புடைய இடத்திலும் கோக்கப்பட்டு நிற்கும் என்க.*

--------

***சீவ உபாதி ஒழிதல்***

***பன்னிரு சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

***திருச்சிற்றம்பலம்***

**635.** **கண்க ளிரண்டும் அவன்கழல் கண்டு களிப்பன ஆகாதே**
**காரிகை யார்கள் தம் வாழ்விலென் வாழ்வுகடைப்படும் ஆகாதே**
**மண்களில் வந்து பிறந்திடு மாறு மறந்திடும் ஆகாதே**
**மாலறி யாமலர்ப் பாதம் இரண்டும் வணங்குதும் ஆகாதே**
**பண்களி கூர்தரு பாடலொ டாடல் பயின்றிடு மாகாதே**
**பாண்டிநன் னாடுடை யான்படை யாட்சிகள் பாடுது மாகாதே**

விண்களி கூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படு மாகாதே
மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே. 1

***உரைநடை :-*** *மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே என்பதை முதலிற் கொள்க.*

***உரை :-*** *மீன் பொருட்டு வலைவீசிய, வேடனாகிய கடவுள் வந்து நமக்கு வெளிப்பட்டுவிட்டால், இரண்டு கண்களும் அவனுடைய திருவடிகளைக் கண்டு மகிழ்வன ஆதல் நிகழாது. பெண்களுடைய வாழ்க்கையில், என்னுடைய வாழ்க்கை கீழ்ப்படுதல் நிகழாது. உலகங்களிற் போய்ப் பிறந்திடும் வண்ணம் கடவுள் திருவடிகளை மறந்திடுதல் நிகழாது. திருமாலறியாத இறைவன் திருவடித்தாமரை இரண்டும் வழிபடுதல் நிகழாது. பண்ணோடு கூடிய மகிழ்ச்சியைத் தருகின்ற பாடலுமாடலும் பழகுதலுமாகாது. நல்ல பாண்டிய நாட்டினை உடைய பெருமானது படையின் வீரச்செயல்களைப் பாடுதலும் நிகழாது. மண்ணுலகினர் மகிழ்வதற்கேதுவாகிய வேறுபடுத்திக் காட்டுஞ் சிறப்புத் தோன்றுதலுமாகாது.*

***குறிப்பு :-*** *இறைவன் வெளிப்பட்டு உயிர் அவனோடு அத்து விதமாய்க் கலந்த இடத்தே, சிவானுபவ உணர்ச்சியே நிலைத்து உயிர் புறச்செயலற்று இருத்தலின் செய்யுளிற் கூறிய புறச்செயல்கள் நிகழ இடமில்லை.வாழ்வில் என்பதற்கு வாழ்வினைப் பார்க்கிலும் என்று பொருள் கொள்வாருமுண்டு. வேதகம் என்பது விண்ணவர்களிலும் உயர்த்திக் காட்டுந் தனிச் சிறப்பு. உயிர் சிவனோடு இரண்டறக் கலந்த இடத்தே, ஏனைத் தேவரை யெண்ணாமையின், அச் சிறப்புத் தோன்றாதென்க.*

**636.** **ஒன்றினோடொன்று மோரைந்தி னொடைந்தும் உயிர்ப்பறுமாகாதே**
**உன்னடி யாரடி யாரடி யோமென உய்ந்தன வாகாதே**
**கன்றை நினைந்தெழு தாயென வந்த கணக்கது வாகாதே**
**காரண மாகும் அனாதி குணங்கள் கருத்துறு மாகாதே**
**நன்றிது தீதென வந்த நடுக்கம் நடந்தன ஆகாதே**
**நாமுமெ லாமடி யாருட னேசெல நண்ணுது மாகாதே**
**என்றுமென் அன்புநிறைந்த பராவமு தெய்துவ தாகாதே**
**ஏறுடை யான்எனை ஆளுடை நாயகன் என்னுள் புகுந்திடிலே. 2**

***உரைநடை :-*** *ஈற்றடியை முதலிற் கொள்க.*

***உரை :-*** *காளைவாகன முடையனாகிய, என்னை அடிமையாக வுடைய தலைவன் என்னறிவினுள் புகுந்து நிலைத்துவிடில், உயிரினோ டுடம்பும், ஐம்பொறிகளோடு, அவற்றிற்குரிய பொருளாகிய ஐம்புலன்களும் கலந்து பின்னொடுங்குதல் நிகழாது. உன்னடி யார்களுடைய அடியார்க்கடியோ மென்று கூறி உய்தற் கேதுவாய செயல்கள் நிகழமாட்டா. தனது கன்றை நினைந்து (அன்போடு) எழுந்து செல்லும் தாய்போல உயிர்கள்பாற் கருணை காட்டச் சென்ற முறையும் நிகழாது. மனம் முதலியவற்றிற்குக் காரணமாகும் முக்குணங்கள் அறிவிற் பொருந்துதலு மியலா. இது நல்லதோ, இது தீயதோ என்று ஒன்றினையாய்ந்த காலையேற்படுங் கலக்கம் நிகழ்தலு மியலாது. நாம் எல்லாம் அடியாரோடு உடன் செல்லக் கருதலுமியலாது, என்றைக்குமெனது நிறைந்த அன்பிற்குரிய மேலான அமுதமானவனைப் போயடைதலென்பதும் நிகழாது.*

*இறைவற்கடிமையாதலினும் அடியார்க்கடியனாதல் ஆயிரம் மடங்குச் சிறந்தது. அடியார் அடியார்க்கடியனாதல் அதைவிடச் சிறந்ததாகலின் இங்ஙனம் கூறினார். திருநாவுக்கரசு சுவாமிகள் இறைவற்கு அடிமையாகி உயர்ந்தார்; அப்பூதியடிகள் அடியவர்க்கு அடியராகி உயர்ந்தமை காண்க.*

*கன்று பசுவை நினைத்துக்கொண்டு ஓடுதலும், பசு கன்றை எண்ணி விரைதலும் என இருதகையன. கன்று பசுவை நினைத்து ஓடும்போது அதற்குள்ள பசியும் விருப்பும் வெளிப்படுகின்றன. கன்று விரைந்து மடியைமுட்டக் கறவை ஓரளவு பால்சுரக்கும். அது கன்றின் வயிற்றுக்குப் போதுமானதாக இல்லாமலும் இருக்கலாம். அதுபோல ஆன்மா ஞானதாகம் எடுத்துப் பிறவி வெப்பந்தணிய இறைவனை எண்ணி ஓடுமாயின், ஆன்மாவின் மல கன்மங்கள் தடைசெய்யப் போதிய பலன் கிடைக்காமலும் போகலாம். தாய்ப்பசு பால் சுரந்து மடியையுறுத்தக் கன்றை உள்ளி வருமாயின் கன்று பெரும்பயன் மிகுந்தது. அதுபோல இறைவன் அருள் சுரந்து ஆன்மாவைத் தேடி வருவானாயின் ஆன்மா அடையும் பயனுக்கு அளவு உண்டோ? இந்நயத்தை எம்மனங்கொண்டுய்ய, 'கன்றை நினைந்தெழு தாயென வந்த கணக்கது ஆகாது' என்றருளினர். சித்து - உயிர். அசித்து - உடல்.*

*காரணம் ஆதிகாரணமும், அநாதிகாரணமும் என இருவகை. நாம் பிறவியைச் சார்தற்கு அநாதியான காரணம் அநாதியே நம்மைச் சார்ந்துள்ள ஆணவமலம். ஆதிகாரணம் நாம் செய்த வினைகளும், அவற்றிற்கு மூலமான மூல கன்மமுமாம். அவை உயிரைச் சார்ந்து*

*அறியாமையும், மோகமாதிகளுமாகிய குணங்களாக வெளிப்படும். அவற்றை இறைவர் திருவுளத்து ஏற்று, புண்ணிய பாவங்களைச் செய்தல் உயிரின் இயற்கையன்று வினைமலச் சார்பால் வந்த குணங்களால் விளைந்த மாற்றம் என அவற்றைத் தீர்க்கத் திருவருள் புரிவார் என்பதை உட்கொண்டு 'காரணமாகும் அநாதி குணங்கள் கருத்துறுமாகாதே' என்றார். அடிகள் தம் கருத்துறுமாகாதே என்றார் என உரைப்பாரும் உளர்.*

***குறிப்பு :-*** *ஒன்றினோ டொன்றும் என்பதற்கு உடம்பினொடு பிராணனுமென்று கூறுவாருமுளர். உயிர்ப்பது - கலந்தியங்குவது. தாயென வந்த என்பதைக் கடவுளுக்கேற்றித் தாய்போலக் குருவாகி வந்ததெனப் பொருள் கொள்வதுமுண்டு. பராவமுதை யடைந்து விட்டபடியால் எய்தலாகாது என்றார்.*

**637.** பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடு மாகாதே
பாவனை யாய கருத்தினில் வந்த பராஅமு தாகாதே
அந்த மிலாத அகண்டமும் நம்முள் அகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாய பரஞ்சுடர் அண்ணுவ தாகாதே
செந்துவர் வாய்மட வாரிட ரானவை சிந்திடு மாகாதே
சேலன கண்கள் அவன் திருமேனி திளைப்பன ஆகாதே
இந்திர ஞால இடர்ப்பிற வித்துய ரேகுவ தாகாதே
என்னுடை நாயகனாகிய ஈசன் எதிர்ப்படு மாயிடிலே. **3**

***உரை :-*** *என்னுடைய தலைவனாகிய ஆண்டவன் எதிர் தோன்றிக் கலந்தருளுமாயின், பாசத் தொடர்பான வேறுமைப்பட்ட பல வியல்புகள் மறைதலும், மீட்டுத் தோன்றலும் நிகழா. கடவுளைப் பாவிப்பதால் உள்ளத்திற்றோன்றிய கற்பனைத் திருவடிவக்காட்சியா லுளதாம் மேலான அமுதமும் அனுபவித்தலாகாது. எல்லையற்ற கடடுப்படாத வடிவக்காட்சி நமதுள்ளத்தே புலனாதலும் நிகழாது. படைப்பு முதல் உதவிய மேலான சோதிப் பொருளைப் போயடைதல் நிகழாது. செவ்விய பவளவாயையுடைய பெண்டிரால் வரும் இடையூறுகள் ஒழிதல் என்பது நிகழாது. சேல் மீன்போன்ற கண்கள் இறைவனது திருவுருவத்தை நுகர்தலும் நிகழாது. இந்திர சாலம்போல மாயமான இடைஞ்சலான பிறவித் துன்பம் ஒழிதலென்பதும் நிகழாது.*

***குறிப்பு :-*** *பறிந்து மறிந்திடும் - வேர் பறிந்து தலைகீழாக விழும் என்பதாம். இச்செய்யுளுட் கூறியனவெல்லாங் கடவுளோடு இரண்டறக் கலப்பதற்கு முன் நிகழ்வன வென்றும் பின் நிகழா*

*வென்றுமறிக. ஆதிமுதல் பரமாய பரஞ்சுடரென்றது ஐந்தொழில் செய்யுந் தடத்த இலக்கணமுடைய கடவுளைக் குறிக்கும். இந்திர ஜால வித்தையை அறுபத்து நான்கு கலைஞானங்களிலொன்றென்ப. பந்த விகார குணங்கள் - ஆணவ மலச் சேர்க்கையால், ஆன்ம வியாபகத்தைத் தடுத்துச் சிற்றறிவும், சிறுதொழிலும் உடையனவாக விகாரப்படுத்தும் அறியாமை முதலான குணங்கள்.*

**638.** என்னணி யார்முலை ஆகம் அளைந்துடன் இன்புறு மாகாதே
எல்லையில் மாக்கரு ணைக்கடல் இன்றினி தாடுது மாகாதே
நன்மணி நாதம் முழங்கியென் உள்ளுற நண்ணுவ தாகாதே
நாதன் அணித்திரு நீற்றினை நித்தலும் நண்ணுவ தாகாதே
மன்னிய அன்பரில் என்பணி முந்துற வைகுவ தாகாதே
மாமறை யும்அறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே
இன்னியற் செங்கழு நீர்மலர் என்தலை எய்துவ தாகாதே
என்னையுடைப் பெருமான் அருள்ஈசன் எழுந்தருளப் பெறிலே. **4**

***உரை :-*** *என்னை அடிமையாகவுடைய பெருமானாகிய கருணை முதல்வன் தோன்றி வீடருளப்பெற்றால், எனது நகைகள் நிலவிய நகில்கள் அவனது திருமேனியிற் படிந்து இன்புறுதல் நிகழாது. எல்லையில்லாத பெருங்கருணைக் கடலில் இப்பொழுது நன்கு திளைத்தல் நிகழாது. நல்ல மணியோசை முதலியன என்னுள்ளே மிகுதியாகப் பொருந்தி முழங்குதல் நிகழாது. இறைவனணிகின்ற திருநீற்றினைப் பூசுதலும் ஏற்படாது. நிலைபெற்ற அன்பருள் எனது பணிவிடை முற்பட்டு இருத்தல் நிகழாது. பெருமை பொருந்திய மறை நூல்களறியாத திருவடிக் கமலங்களை வழிபடுதலும் நிகழாது. இனிய இயல்புடைய செங்கழுநீர்ப் பூப்போன்ற திருவடிகள் எனது தலையிற் பொருந்துதலும் நிகழாது.*

*சிவயோக நிட்டையிலிருக்கும் சிவஞானியர்க்கு மணிஓசை என்றும் ஒலித்துக்கொண்டேயிருக்கும் என்பதால் 'நன்மணிநாதம் என் உள்ளுற முழங்கி நண்ணுவதாகாதே' என்றார். சேரமான்பெருமாள் சிவபூசை செய்துமுடித்தவுடன் சிலம்பின் ஓசை கேட்பது வழக்கம் என்ற பெரியபுராண வரலாறும் இவ்வநுபூதியை விளக்குவது, மேலும், 'சொல்லிய லாதெழு தூ மணியோசை சுவை தருமாகாதே' எனவும், 'வீணைமுரன்றெழும் ஓசையிலின்பம் மிகுத்திடு மாகாதே' எனவும், 'சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை தழைப்பன வாகாதே' எனவும் வருவன யாவும் சிவயோகத்திருப்பவர்க்கு சங்கொலி, வீணையொலி,*

*மணியொலி, கடலொலி, பரநாத ஒலியாகிய பிரணவ ஒலி கேட்கப் பெறும் என்னும் யோகநூற்றுணிபும் எண்ணுதற்கு உரியது. இதன் விரிவைச் சிவநெறிப் பிரகாசத்தில் காண்க. இவ்வோசைகள் செவிப்பொறி வழியாகக் கேட்கப்பெறுவன அல்ல; சிந்தையில் நிறைவன ஆதலின் 'என் உள்ளுற நண்ணுவ தாகாதே' என்றார். இம்மரபு அறியாதார் சிலர் நல்ல மணி நாதம் செவிவழியாக முழங்கி என் உள்ளத்துள்ளே பொருந்துதலும் என உரை காண்பர்.*

***குறிப்பு :-* இறைவர் திருமேனியைத் தழுவுதல் அவனது திரு வடிவத்தில் ஒடுங்குதலாகும். அது தத்துவச் சார்புடைய தாதலின், தத்துவங் கடந்த அத்துவிதக்கலப்பில் அது நிகழாது என்றார். திரு அருட்பேறு சிவப்பேற்றிற்கு முற்பட்டதாகலின் சிவப்பேற்றின் பின் அது நிகழாது என்றார். மணிநாத முழங்குதல் யோகியர் உடம்பில் நிகழ்வது. அது ஞானநிலையில் நிகழாதென்றனர்.**

**639.** **மண்ணினில் மாயை மதித்து வகுத்த மயக்கறு மாகாதே**
**வானவ ரும்அறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே**
**கண்ணிலி காலம்அனைத்தினும் வந்த கலக்கறு மாகாதே**
**காதல்செ யும்அடி யார்மனம் இன்று களித்திடு மாகாதே**
**பெண்ணலி ஆணென நாமென வந்த பிணக்கறு மாகாதே**
**பேரறி யாதஅனேக பவங்கள் பிழைத்தன ஆகாதே**
**எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை எய்துவ தாகாதே**
**என்னையுடைப் பெருமான் அருள்ஈசன் எழுந்தருளப்பெறிலே.** **5**

***உரை :-*** *என்னையுடைய பெருமானாகிய கருணை யாண்டவன், எழுந்தருளப் பெற்றால், மண்ணுலகத்தினில் மாயா காரியங்களைக் கருதி அவற்றின் வகையாக எழுந்த மயக்கவுணர்ச்சி ஒழிதல் என்பது நிகழாது. தேவர்களுமறியாத திருவடிக் கமலங்களை வழிபடுதலும் நிகழாது. ஞானமில்லாதவனாய் இருந்த காலமெல்லாம் ஏற்பட்ட கலக்கங்கள் எழுந்தொழி என்பது நிகழா. அன்பு செய்யும் அடியார்களுடைய உள்ளத்தைப் புதிதாக மகிழ்வித்தல் நிகழாது. இவ்வுலகத்துத் திணைப்பாகுபாடு காரணமான பெண் ஆண் அலி யெனவும், அகங்காரம் காரணமாக நாமெனவும் நீயெனவும் பேசவந்த மாறுபாடுகள் ஒழிதல் என்பதும் நிகழாது. பேர்கூடச் சொல்ல முடியாத பல பிறவிகளுள் நின்று தப்பிப் பிழைத்தல் என்பதும் நிகழாது. எண்ணிலடங்காத அற்புதத்திறன்கள் என்னை வந்தடைதல் நிகழாது. பேரறியாத அநேக பவங்கள் - பலகோடிப் பிறவிகள். எண்ணிலியாகிய சித்திகள் - அளவற்ற சித்திகள். அவை எட்டு எனப்*

*பொதுவாகக் கூறினும் ஒவ்வொன்றிலும் எத்தனையோ வகைகள் உள்ளன. சித்திகள் முத்திக்கு வாயிலாகிய ஞானத்தை எய்துதற்குத் தடையாவன. அவை வந்து எய்துவன ஆகாதே ஈசன் எழுந்தருளப் பெறின் என்கின்றார்.*

***குறிப்பு :-*** *மண் - கன்மத்திற்குரியதான பூமி. இதில் மாயை மதித்து வகுத்த மயக்கு - நிலையாதவற்றை நிலையின என்றுணரும் மயக்கம். மாயையினாலாகிய மயக்கத்தை முதற்கண் குறிப்பித்தார். அது ஆணவத்தால் வந்த மயக்கின் வேறாகும். கண் - ஞானத்திற்கறிகுறி. கண்ணிலி காலம் - அளவற்ற காலம். கலக்கு - கலக்கமென்பதன் கடைக்குறை. பலங்கள் - பிறவிகள். கண்ணுதல் - எண்ணுதல்.*

**640.** **பொன்னிய லுந்திரு மேனிவெண் ணீறுபொலிந்திடு மாகாதே**
**பூமழை மாதவர் கைகள் குவிந்து பொழிந்திடு மாகாதே**
**மின்னியல் நுண்ணிடையார்கள் கருத்து வெளிப்படுமாகாதே**
**வீணை முரன்றெழும் ஓசையில் இன்பம் மிகுத்திடுமாகாதே**
**தன்னடி யாரடி என்தலை மீது தழைப்பன ஆகாதே**
**தானடி யோம்உட னேஉ(ய்)ய வந்து தலைப்படு மாகாதே**
**இன்னியம் எங்கும் நிறைந்தினி தாக இயம்பிடு மாகாதே**
**என்னைமுன் ஆளுடைஈசன் என்அத்தன் எழுந்தருளப் பெறிலே.**

**6**

***உரை :-*** *என்னை முன்னாளிலே யாட்கொண்டருளிய முதல்வன் என் அப்பன் எழுந்தருளப் பெற்றால், பொன்னின் தன்மையோடு விளங்குந் திருமேனிமீது வெள்ளிய திருநீறு விளங்குதலும் நிகழாது. பெருந் தவத்தினரது கரங்கள் கூப்பி மலர் மழையை இறைவன் திருவடிக்கண் சொரிந்திடுதலும் நிகழாது. மின்னலைப் போல அசையும் நுண்ணிய இடையையுடைய பெண்டிரது உள்ளக் கருத்து வெளிப்படுதலும் நிகழாது. வீணை முழங்கி உண்டாகின்ற இன்னிசையில் இன்பம் மிகுதிப்படுதலும் நிகழாது. இறைவனது அடியார்கள் திருவடிகள் எனது தலைமீது விளங்குதலும் நிகழாது. இறைவன் அடியார்களாகிய நாங்கள் உய்யும்படி எழுந்தருளி வந்து தோன்றுதலும் நிகழாது. இனிய வாத்தியங்கள் எவ்விடத்திலும் நிறைந்து இனிதாக ஒலித்தலும் நிகழாது.*

***குறிப்பு :-*** *பூமழை என்பதை பொலிந்திடுமென்பதனோடு முடிக்க. அடியோம் என்பதை உடனே என்பதனோடு முடித்தலு முண்டு. இயம் - வாத்தியம்.*

641. சொல்லிய லாதெழு தூமணி யோசை சுவைதரு மாகாதே
துண்ணென என்னுளம் மன்னிய சோதி தொடர்ந்தெழு மாகாதே
பல்லியல் பாய பரப்பற வந்த பராபர மாகாதே
பண்டறி யாதப ரானுப வங்கள் பரந்தெழு மாகாதே
வில்லியல் நன்னுத லார்மயல் இன்றுவிளைந்திடு மாகாதே
விண்ணவரும் அறியாத விழுப்பொருள் இப்பொருளாகாதே
எல்லையி லாதன எண்குண மானவை எய்திடு மாகாதே
இந்து சிகாமணி எங்களை ஆள எழுந்தரு ளப்பெறிலே. 7

***உரை :-*** *சந்திரனைத் தலையின்கண் மணியாக வைத்த பெருமான், எங்களை யாட்கொள்ள எழுந்தருளப் பெற்றால் சொல்லோசை கலவாது எழுகின்ற பரிசுத்தமான மணிஒலி சுவைபயத்தல் நிகழாது. திடீரென எனதுள்ளத்திற் பொருந்திய சோதியானது தொடர்பாகத் தோன்றுதல் நிகழாது. பல தன்மைகளை உடைய மனவிரிவு கெடும்படி தோன்றிய மிக மேலான பொருள் தோன்றுதல் நிகழாது. முன்பு அறியாத மேலான அனுபவங்கள் விரிந்து மேற்படுதலும் நிகழாது. வில்லின் வடிவுடைய அழகிய நெற்றியை யுடைய பெண்டிரது மயக்கம் இப்போதுபோல் உண்டாதல் இல்லை. வானவருமறியாத உயர்ந்த பரம்பொருள் விளங்கு மிவ்வடிவோடு தோன்றுதல் நிகழாது. அளவில்லாதனவாகிய இறைவனது எண்குணங்கள் அடைந்திடுதலும் நிகழாது.*

*பூதகாரியமாகிய மணியோசை கணகண என ஒலித்தது. கணீர் என்று ஒலித்தது என அனுகரணச் சொல்லாற் சொல்லிக்காட்டக் கூடியதாக இருக்கும். சிவதரிசனத்தால் விளையும் தூய மணியோசை அநுபவத்தால் அன்றிச் சொல்லியல்பாற் சொல்லிக்காட்ட இயலாததாய் எழுவது. அந்த ஓசையைச் சுவையாக மனனுணர்வால் அறியலாமேயன்றிச் செவிவழியாக உணரமுடியாதது என்ற நாததரிசன இலக்கணம் முழுதும் தோன்றச் 'சொல்லியலாதெழு தூமணியோசை சுவைதரும் ஆகாதே' என்றருளினர். இத்தகைய நாததரிசனத்தைக் கேட்டவர்கள் பதஞ்சலி முனிவரும், சேரமான் பெருமாளும், வாதவூரரும் ஆவர் என்க.*

*இதுவரை, யான்கண்டது சீவோபாதியாகிற சிறு அனுபவங்களே. கண்ட அனுபவம் கண்மூடியதும் தொலைந்தது. உண்ட அனுபவம் ஏழரை நாழிகையிற்றொலைந்தது. உற்ற அனுபவம் ஒரு கணத்திற்றொலைந்தது. இங்ஙனம் யான்கண்ட அனுபவம் மிகச் சிறிய அனுபவம். இப்போது யான் காணும் அனுபவம் கண்டது முதல்*

*பெருகி வளருந்தன்மைத்தாய பெரிய அனுபவம் என்பார் 'பண்டறியாத பரானுபவங்கள்' என்றார். அத்தகைய அனுபவங்கள் சகலநிலையில் யான் கண்ட அனுபவங்கள்போல ஒவ்வொரு காலத்தில் தோன்றி மறையாது, எங்கும் என்றும் பரந்தெழுகின்றன என்பார் 'பரந்தெழும் ஆகாதே' என்றார்.*

*'புயற்காற்று வீசும்போது பஞ்சுக்கு என்ன நிலை' என்பதுபோல இத்தனை பெரிய சிவானுபவக் காலத்து இளமையும் மடமையும் பற்றி விளைவதாகிய மாதரார்மயலுக்கு இடமேது? இல்லை என்பார் 'வில்லியல் நன்னுதலார் மயல் இன்று விளைந்திடுமாகாதே' என்றார்.*

*தாம் காணுகின்ற சிவமெனும் பொருள், தேவர்களும் அறியாத பெருமையினையுடைய பொருள் என வியப்புறுவார் 'விண்ணவரும் அறியாத விழுப்பொருள் இப்பொருளாகாதே' என்றார். 'இப்பொருள்' என்ற அண்மைச் சுட்டு எதிர் எழுந்தருளப்பெற்றமையை உணர்த்தி நின்றது.*

***குறிப்பு :-** சொல் கலவாது ஒலிக்கின்ற மணி ஓசையைச் சிலம்பொலி என்பர். அது ஞான யோகத்தால் அறியற்பாலது. துண்ணென மன்னிய சோதி என்றது, ஞானநிலையின் தொடக்கத்தி லுண்டாகும் விளக்கத்தை, பரப்பற வந்த பராபரமென்றது மனோலயத்தை உளதாக்கு மிறைவன் திருவடிவம். பரானுபவங்க ளென்றது, அபரமுத்திப் போகங்கள். இன்பொருளென்றது அடிகளுக்குத் தோன்றிய ஆசிரிய வடிவத்தை. எண்குணங்களை அடைந்து முடிந்த இடமாதலின் புதிதாக எய்திடுதற்கிடமில்லை யென்றார். இந்து சிகாமணி என்பதற்குச் சந்திரனைத் தலையிற் றரித்தவனாகிய மணிபோன்றவன் என்றுங் கூறுப.*

**642.** **சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை தழைப்பன ஆகாதே**
**சாதி விடாத குணங்கள் நம்மோடு சலித்திடு மாகாதே**
**அங்கிது நன்றிது நன்றெனு மாயை அடங்கிடு மாகாதே**
**ஆசைஎ லாம்அடி யாரடி யோம்எனும் அத்தனை யாகாதே**
**செங்கயல் ஒண்கண் மடந்தையர் சிந்தை திளைப்பன ஆகாதே**
**சீரடி யார்கள் சிவானுபவங்கள் தெரிந்திடு மாகாதே**
**எங்கும் நிறைந்தமு தூறு பரஞ்சுடர் எய்துவ தாகாதே**
**ஈறறி யாமறை யோன்எனை ஆள எழுந்தரு ளப்பெறிலே. 8**

***உரை :-** முடிவுணரப்படாத மறைப் பொருளாகிய பெருமான் என்னை யாட்கொள்ள எழுந்தருளப் பெற்றால் சங்குகள் பலவொன்று*

சேர்ந்து முழங்கினாற் போலெழுவதாகிய ஓசை மிகுதிப்படுதல் நிகழாது. குலங் காரணமாக வருகின்ற குணங்கள் நம்மோடு இயங்குதல் நிகழாது. அவ்விடத்தே இது நல்லது இது நல்லது என்ற மயக்கம் அடங்கி ஒழிதல் நிகழாது. பற்று முழுவதும் இறைவனடியார்க் கடியோம் என்னுமவ்வளவே என்றலுங் கூறவொண்ணாது. சிவந்த கயல்மீன்போன்ற ஒளியையுடைய கண்ணை உடைய பெண்டிர் மனம் பூரித்தலும் நிகழாது. சிறந்த அடியார்களது சிவானுபவங்களை இன்னதென விசாரித்தலும் நிகழாது. எவ்விடத்தும் நிறைந்து அமுதூறுதற்குக் காரணமாகிய பரஞ்சோதியை யடைதலும் நிகழாது.

எங்கும் நீக்கமின்றி நிறைதல் ஒளியின் குணமாதலின் 'எங்கும் நிறைந்த சுடர்' என்றும், எல்லாச்சுடருக்கும் சுடராதலின் 'பரஞ்சுடர்' என்றும், ஏனைய சுடர்கள்போல வெப்பமும் நீரும் ஊறாமல் அமுதமே ஊறுதலின் 'அமுதூறு பரஞ்சுடர்' என்றும் அருளியமை காண்க.

இவ்வண்ணம் இறைவன் எழுந்தருளியதால் உடலைப் பற்றிய சாதியும் அதன் குணங்களும் ஒழிந்து அடியார்க்கடியேன் என்னும் சிவானுபவம் சேரப்பெற்றுச் சிவச்சோதி அமுதூற நிற்றலை அனுபவிப்பதே திருப்படையாட்சியாதலை இத்திருப்பாடல் உணர்த்துகிறது.

***குறிப்பு :-* இவ்வெட்டுப்பாடல்களானும், இறைவன் மீன்வலை வீசிய கானவனாகவும், என்னையுடைய பெருமானாகவும், இந்து சிகாமணியாகவும் உருத்தாங்கி எழுந்தருளிவரப்பெற்று என்னுட் புகப்பெற்றால் விளையும் அனுபவங்களாகப் பிறவி அறுதலும், கண்களிப்பக் காண்டலும், பரநாத ஒலிகேட்டலும், பிறவிக்குக் காரணமான அநாதிகுணங்கள் அறப்பெறுதலும், நீறணிதலும், பிணக்கறுதலும், அடியார் அடி தலைமேலன ஆதலும், இன்பமய அமுதாக இறைவன் இனித்தலும் உணர்த்தப்பெறுகின்றன; ஆகவே சிவாநுபவமிக்குச் சீவோபாதியடங்கிய நிலை அறிவிக்கப்பெற்றதாம்.**

**திருச்சிற்றம்பலம்**

*தில்லையில் அருளிய*

## 50. ஆனந்தமாலை

*'ஆனந்தத்தை வேண்டும் பாமாலை ஆனந்த மாலை' என்க. 'ஆனந்தமாவது சிவானந்தமே' என்பது வெளிப்படை. 'சிவாநுபவ விருப்பம்' என்னும் முன்னோர் குறிப்பும் இதுவேயாதல் அறிக. 'மாலை' என்றமையால், பத்து திருப்பாட்டுக்களேனும் இதன்கண் இருந்திருத்தல் வேண்டும். இப்பொழுது காணப்படுபவை ஏழு திருப்பாட்டுக்களே. இவை அனைத்தும் அறுசீரடி விருத்தங்கள். இது, தில்லையில் அருளிச் செய்யப்பட்டது என்பதே பதிப்புக்களில் காணப்படுவது.*

--------

***சிவானுபவ விருப்பம்***

***அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**643.** **மின்னே ரனைய பூங்கழல்க ளடைந்தார் கடந்தார் வியனுலகம்**
**பொன்னே ரனைய மலர்கொண்டு போற்றாநின்றார் அமரரெல்லாங்**
**கல்நே ரனைய மனக்கடையாய்க் கழிப்புண் டவலக் கடல்வீழ்ந்த**
**என்னே ரனையேன் இனியுன்னைக் கூடும் வண்ணம் இயம்பாயே. 1**

***உரை :-*** *மின்னலைப் போன்ற அழகிய இறைவன் திருவடிகளை யடைந்தவர்கள் பெரிய உலகநெறியைக் கடந்தவர்களாவார். தேவர் களெல்லாம் பொன்போன்ற அழகிய மலர்களைத் தூவி இறைவனை வணங்கினர். கல்லையொத்த மனத்தினவனாய்க் கீழ்ப்பட்ட வனாய், அறிஞராற் கழிக்கப்பட்டுக் கவலைக்கடலில் வீழ்ந்த என்னையே போன்ற யான் இனிமேல் உன்னை வந்தடையும் விதத்தைக் கூறியருள்க.*

***குறிப்பு :-*** *பூங்கழல்கள் - பொலிவுடைய திருவடிகள். இழிவில் தனக்குத்தானே நிகரென்பார், என்னேரனைய என்றார்.*

**644.** **என்னால் அறியாப் பதம்தந்தாய் யானதறியா தேகெட்டேன்**
**உன்னால் ஒன்றுங் குறைவில்லை உடையாய் அடிமைக்காரென்பேன்**
**பன்னாள் உன்னைப் பணிந்தேத்தும் பழைய அடிய ரொடுங்கூடா**
**தென்நா யகமே பிற்பட்டிங் கிருந்தேன் நோய்க்கு விருந்தாயே. 2**

***உரை :-*** *என்னாலறிய வொண்ணாத பெருமையுடைய பதவியை நீ தந்தருளினை. யான் அதன் தன்மையறிந்து (பாதுகாவாது) கெடுதியுற்றேன். உன்னால் யாதொரு குறையு மேற்படவில்லை. நாதனே, அடியேனுக்கு யாரைத் துணையென்பேன். என் தலைவனே, பல நாளாக உன்னை வழிபட்டுத் துதிக்கும் பழமையான அன்பர்களோடுஞ் சேராது பின்னிட்டுப் பிணிக்கு விருந்தாக இவ்வுலகிலிருப்பே னாயினேன்.*

***குறிப்பு :-*** *என்னாயகமே என்பதை முதலிற் கொள்ளலாம். நோய்க்கு விருந்தாயிருந்தேன் என மாற்றுக. பதமென்பதற்குத் திருவடியென்று முரைப்பர். நாதனே நீ யடிமைக்கு எவ்வகைத் தொடர்புடையாய் எனவும் பொருள் கொள்வர்.*

**645.** சீல மின்றி நோன்பின்றிச் செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்றுவிழுந்து கிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி வாரா உலக நெறியேறக்
கோலங் காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றோ கூடுவதே. 3

***உரை :-*** *நல்லொழுக்க மின்றி, விரதமின்றி, அன்பில்லாமல் அறிவில்லாமல், தோற் பதுமையின் கூத்தாட்டத்தைப் போலச் சுற்றி யலைந்து பயனற்று கிடக்கும் எனக்குத் தன்பால் விருப்பங் காட்டி நன்னெறி காட்டிப் பிறவிக்கு மீளாது போய்ச் சேரும் வழியிலே மேற்கொண்டு செல்லுமாறு தனது திருவடிவத்தையுங் காட்டி யாட்கொண்ட பெருமானைக் கொடுமையுடையேன் எந்நாள் போய்ச் சேருவது? வாரா உலகம் - வீட்டுலகம். ஏனைய உலகத்தில் போக்கும், வரவும் புணர்ப்புமாகிய மூன்று நிலைகள் உண்டு வீட்டுலகத்தோ வரவும், புணர்ப்புமாகிய இரண்டே உண்டு. மீளவருதல் இல்லை.*

**646.** கெடுவேன் கெடுமா கெடுகின்றேன் கேடி லாதாய் பழி கொண்டாய்
படுவேன் படுவ தெல்லாம்நான் பட்டாற்பின்னைப் பயனென்னே
கொடுமா நரகத் தழுந்தாமே காத்தாட் கொள்ளுங் குருமணியே
நடுவாய் நில்லா தொழிந்தக்கால் நன்றோ எங்கள் நாயகமே. 4

***உரை :-*** *கெடுதியுறு மியல்புடைய யான் எப்படிக் கெடக் கூடுமோ அப்படிக் கெடுகின்றேன். தீங்கில்லாதவனே (நீ என்னை யாட்கொண்டமையான்) நான் கெடுதலால் வரும் பழியை நீ ஏற்றுக் கொள்ளலாயிற்று. துன்பப்படுதற்குரிய யான் படக்கூடிய துன்பமெல்லாம் அனுபவித்து விட்டால் அதற்குப் பின் நீ காப்பதில் என்ன பயன்? கொடிய பெரு நரகத்திலே ஆழாத வண்ணம் தடுத்தாட்*

*கொள்ளுங் குருவாகிய மாணிக்கமே, எங்கள் தலைவனே, நீ நியாய நிலையிலில்லாமற் போனால் அது நன்றாகுமா?*

***குறிப்பு :-*** *பிராரத்துவ வினையை முற்றிலும் அனுபவிப்பதற்கு முன்னேயே வீட்டினைத் தந்தருள வேண்டுமென்பது அடிகள் குறிப்பு. அன்பர் துன்பப்படுங்காலை அதனை நீக்குதல் இறைவர் கடன். அதனைச் செய்யாமை நடுவு நிலைக்கு மாறாகுமென்று குறிப்பித்தார்.*

**647. தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தாற் சவலையாய்**
**நாயேன் கழிந்து போவேனோ நம்பி யினித்தான் நல்குதியே**
**தாயே யென்றுன் தாளடைந்தேன் தயாநீ என்பா லில்லையே**
**நாயேன் அடிமை உடனாக ஆண்டாய் நான்தான் வேண்டாவோ. 4**

***உரை :-*** *தாயாகி வந்து நகிலினின்றும் பொழியும் பாலைத் தருபவனே (அதாவது தாய் முலையூட்டுதல்போல ஞானப்பாலளிப் பவனே) அதனைத் தராதுபோனாற் பாலின்றி மெலியுங் குழந்தையைப் போல் நாயேன் (அறியாமையினாற்) கழிவாய்ப் போவேனோ? அண்ணலே, இனியாவது அருள் தருவாயாக. உன்னைத் தாயே யென்றெண்ணி உன்னுடைய திருவடியை யடைந்தேன். நீ என்னிடத்தில் கருணையில்லாதிருக்கின்றாய். நானுன்னை யடைந்தவுடன் என்னையடிமையாக ஆட்கொண்டாய். (இப்போது) அடிமையாகிய நான் உனக்குத் தேவையில்லையோ.*

*சவலை - தாய் கருவுற்றதால் தாய்ப்பால் பெறாத கைக்குழந்தை. கருவுற்ற தாய் பாலின்மையால் பால் கொடாவிட்டாலும் வறுமுலையைச் சுவைக்கக்கொடுத்தாவது வளர்ப்பாளே நீ அதுவும் செய்திலை என்பார், தாயாய்ப் பாலைத் தருவானே என்னாது ‘முலையைத் தருவானே தாராதொழிந்தாற் சவலையாய்க் கழிந்து போவேனோ’ என்கின்றார்.*

*வறுமுலையும் சுவைக்காத சவலைக்குழந்தை நாளுக்குநாள் உடல்மெலிந்து கழிந்துபோம்; அதுபோல நான் ஆவேனோ என்கின்றார். தாயாகிய நீ உன் கடமையிற்றவறினும் தாய் என்ற நன்றி என்றும் குன்றேன் என்பார் தன்னை ‘நாயேன்’ என்றார்.*

*நம்பி - குணபூரணன். தாய் வெறுத்து ஒறுத்துத்தள்ளினும் தாயின் காலைக் கட்டிக்கொண்டு அழும் குழவிபோல நான் தாயே என்று உன் தாள் அடைந்தேன் இனியாவது நல்குதி என்று வேண்டுகிறார்.*

***குறிப்பு :-*** *தாயாய், சவலையாய் என்பவற்றில் ஆய் என்பதை உவமை யுருவாகக் கொள்ளுதலுமுண்டு.*

**648.** கோவே யருள வேண்டாவோ கொடியேன் கெடவே அமையுமே
ஆவாவென்னா விடிலென்னை அஞ்சேல் என்பார் ஆரோதான்
சாவா ரெல்லாம் என்னளவோ தக்கவாறன் றென்னாரோ
தேவே தில்லை நடமாடீ திகைத்தேன் இனித்தான் தேற்றாயே. 5

***உரை :-*** *அரசனே, நீ யருள்புரிய வேண்டியதில்லையா? கொடுமையேன் கெட்டுப்போதலே போதுமா? நீ ஐயோவென்றிரங்கா விடில் அஞ்சாதே யென்றெனக் குரைப்பார் வேறு யார் தான்? பயன் பெறாது இறப்பவர்களெல்லாம் என்னோடு சரியோ, நான் பயன் பெறாது இறந்தால் அது தக்க முறையன்றென்று அன்பர்கள் சொல்லாரோ? கடவுளே தில்லைக் திருக்கூத்தியற்றுபவனே, யான் திகிலடைந்தேன். இனியாவது நீயே அதனைத் தெளிவிப்பாயாக.*

*குடிகள் செய்த குற்றங்கண்டு தண்டித்தல் ஒன்றுதான் அரசின் கடமையன்று; குற்றம் திருத்தி அருள்செய்தலே அவர்கள் கடமையும் பெருமையுமாம்; அதனை நீ செய்திலை என்பார் 'கோவே அருள வேண்டாவோ' என்கின்றார்.*

**649.** **நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெல்லாம் பிச்ச தேற்றும் பெருந்துறையாய்
அரிய பொருளே அவிநாசி அப்பா பாண்டி வெள்ளமே
தெரிய அரிய பரஞ்சோதீ செய்வ தொன்றும் அறியேனே.** **6**

***உரை :-*** *நரிகளைக் குதிரை வாகனமாக்கி உலகம் எல்லாம் தெரியும்படி செய்து பாண்டியனது பெரிய ஊராகிய மதுரையிலுள்ள வர்களுக்கெல்லாம் திகைப்பினை மிகுதிப்படுத்துந் திருப்பெருந்துறைப் பெருமானே, பெறுதற்கரிய மெய்ப்பொருளே, அவினாசி என்னுந் திருப்பதியின்கண் வீற்றிருக்குமப்பனே பாண்டியனான கருணை வெள்ளமே, அறிதற்கரிய மேலான வொளியானவனே, வீடடைதற்குச் செய்யுமுபாயமொன்றும் அறிந்திலேனே.*

***குறிப்பு :-*** *பரி - தாங்குவது என்ற பொருளில் இங்கே வந்தது; பிற இடங்களில் அது குதிரையெனப் பொருள் படும். நிகழ் வித்து - செலுத்தி எனவுங் கொள்ளலாம். பெரிய தென்னன் எனப் பிரித்து பெருமையுடைய பாண்டியனெனவுங் கொள்ப. அவினாசி என்பது கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ளது. சுந்தர மூர்த்திகள் முதலைவாய்ப் பிள்ளை எழுப்பிய இடம்.*

***திருச்சிற்றம்பலம்.***

*தில்லையில் அருளிய*

## 51. அச்சோப்பதிகம்

*'அச்சோ' என்னும் முடிபினையுடைய பத்துப் பாடல்களின் தொகுதி அச்சோப் பதிகம். 'அச்சோ' என்பது வியப்பிடைச் சொல். முன் வந்த அதிசயப் பத்து, அற்புதப் பத்துக்களில் இறைவனது திருவருளின் பெருமையே கூறினார்; இதன்கண் தாம் பெற்ற பேறு பலர்க்குப் பெறுதற் கரிதாதலையே கூறுகின்றார். இதனையே பிறிதோராற்றல், 'அநுபவவழி அறியாமை' எனக் குறித்தனர் முன்னோர். அஃதாவது, 'தமக்குக் கிடைத்த ஆனந்தத்தை அநுபவிக்க வழி அறியாமை' என்றனர். 'அநுபவிப்பார் ஒருவரையும் காணாமையின், அநுபவிக்கும் வழியை அறிந்திலர்' என்றனர். இதன்கண் உள்ள பாடலை, 'கலிவிருத்தம்' என்றனர். எனினும், நாலடித் தரவுக் கொச்சகக் கலிப்பா' என்றலே பொருத்தமுடையதாம். இதன்கண் ஒன்பது திருப்பாட்டுக்களே உள்ளன. மற்றொரு பாட்டுப் பிற்காலத்தில் ஓர் ஏட்டிற் காணப்பட்டது எனக் காட்டினார் உளர்.*

--------

***அனுபவ வழி அறியாமை***

***கலி விருத்தம்***

*திருச்சிற்றம்பலம்*

**650. முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்**
**பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணஞ்**
**சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனைஆண்ட**
**அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 1**

***உரை :-*** *வீடடையும் வழியினை யறியாத முரண்பட்டவரோடு சேர்ந்து, அவர் நெறி நிற்க முயல்கின்ற எனக்கு அன்பு நெறியை யறிவுறுத்தித் தொல்லை வினைகளற்றொழியும் வண்ணம் மன மாசினை நீக்கிச் சிவமயமாக்கி எனையாட்கொண்டருளிய அப்பன் எனக்கு அருள் செய்த முறையை வேறு யார்பெற வல்லார்? இது அதிசயமே.*

*முத்தி நெறி - பேரின்பமாகிய முத்திக்கு உரிய நெறிகள். அவையாவன; அரன்பால் அன்பை அடிப்படையாகக்கொண்டு இயற்றப்படுகின்ற அரன் பணியாகிய சரியை, கிரியை, யோக ஞானங்களாம். அவை, தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயம்*

*சார்ந்து சைவநூல்களைக் குருவாயிலாகக் கேட்டுத் தெளிந்தோர்க்கே அறியப்படுவதாம். யாகாதி கன்மங்களும் பரப்பிரமம் தான் என்று அறியும் அறிவும்படைத்த சமயவாதிகள் போன்றோர் 'முத்திநெறி அறியாத மூர்க்கர்' ஆவர். அவர்களை மூர்க்கர் என்றது 'மூர்க்கனும் முதலையும் கொண்டதுவிடா' என்றாற்போலத் தாம் கொண்டமை விடாமையால் என்க.*

651. நெறியல்லா நெறி தன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணம்
குறியொன்றும் இல்லாத கூத்தன் தன் கூத்தையெனக்
கறியும் வண்ணம் அருளியவா றார்பெறுவார் அச்சோவே. 2

***உரை :-*** *நன்னெறியல்லாத வழியை நன்னெறியாக நினையு மியல்புடையேன் கீழ்ப்பட்ட நெறிகளை யடையாது திருவருளினையே கைகூடும்படி, (பெயர் வடிவு முதலிய) அடையாளங்கள் யாவும் இல்லாத திருநடப் பெருமான் தனது திருவருட் கூத்தினை அறியும்படி அடியேனுக்கு அருள் செய்தவாறு வேறு யார் பெற வல்லவர்? இஃதே அதிசயம்.*

*நெறியல்லா நெறி - அகமும், புறமும், அகப்புறமும், புறப்புறமுமாக ஆறு வகைப்படும் சமயங்களாய், நூற்றொருகோடியின் மேலும் விரிந்தனவாகிய நெறிகள். அவை ஒன்றுரைத்தது ஒன்று உரைக்கமாட்டாவாய், முற்றும் உணர்த்தி மனத்தைத் தெளிவிக்கும் ஆற்றல் அற்றனவாய், பிணக்கிற்கு இடமாக இருப்பன என்பார் 'நெறியல்லா நெறி' என்றார்.*

*அத்தகைய நெறிகள் சிறு நெறிகள்; திருவருள் நெறியே பெருநெறி; நெறியின் முடிந்த பயன் ஞான நடனத்தையே நாடுதல்; இதனை உள்ளவாறு உணர்தலே பரிபாகியின் கடமை எனக் கூத்தப் பெருமான் உணர்த்தினான். இப்பேறு வேறு எவர்க்கும் கிட்டாதது என்பதனைப் பின் இரண்டடிகளாலும் உணர வைக்கிறார்.*

**652. பொய்யெல்லாம் மெய்யென்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளாமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஐயன்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 3**

***உரை :-*** *நிலையாதனவற்றை நிலையின வென்றெண்ணி நெருங்கிய நகிலையுடைய பெண்டிரது அனுபவத்தின்கண் மயக்க முறுதற்குரிய என்னை (அதனிடை) மாண்டு போகாமற்றடுத்தருள் செய்து, பெண்ணை இடப்பாகங் கொண்ட பெருமானாகிய தலைவன் தன்னுடைய திருவடியையே அடையும் வண்ணம் எனக்கருள்*

*செய்தபடி வேறு யார் பெறவல்லவர்? இஃதே அதிசயம்.*

**653.** மண்ணதனிற் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா அன்பருளி எனையாண்டிட் டென்னையுந்தன்
சுண்ணவெண்நீ றணிவித்துத் தூய்நெறியே சேரும்வண்ணம்
அண்ணல்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. **4**

***உரை :-*** *மண்ணுலகிற் பிறந்திளைத்துச் செத்து வீழ்தற் குரியேனை, நினைப்பதற்கரிய அன்பினைக் கொடுத்து ஆட்கொண்டு, அடியேனையுந் தனது திருவெண்ணீற்றுப் பொடியை அணியச் செய்து புனிதமான உயர் நெறியையே அடையும்படி, பெருமான் எனக்கருளிய முறையை வேறு யார் பெறவல்லார்? இது அதிசயமே.*

*தந்தை தாயர்க்கு அன்புசெய்தல் தனயன் கடமைபோலவும் தனயனைக் கண்டபோது தாய்க்கு அன்பு தானே சுரத்தல்போலவும், சிவமாகிய தன்னைக் கண்டவுடனே தானே சுரக்கின்ற அன்பைத் தந்தான் என்பார் 'எண்ணமிலா அன்பு அருளி' என்றார். எண்ணமிலா அன்பு - எண்ணி இயற்றப்படாத தானே சுரப்பதாகிய அன்பு.*

*மகனைத் தன் அரியாசனத்து அமர்த்த விரும்பிய அரசன் ஆளுந்திறமையை அவற்கு அருளி, பின்னர் அமர்த்துவது போல, என்னை அடிமைகொள்ள எண்ணிய இறைவன் அன்பை அருளி அதற்குத் தகுதியாக்கினான் என்பார் 'அன்பு அருளி எனை ஆண்டிட்டு' என்றார்.*

*வெண்ணீறு முடிந்த முடிபாய், நீரில் இட்டுக் கரைக்கினும் நெய்யிட்டுக் குழைக்கினும் நெருப்பிட்டுக் கொளுத்தினும் தன் நிறம் மாறாததாய், நிலைத்ததாய் இருப்பதாகலின் முடிந்த சமயமாகிய சைவத்திற்குச் சிறந்த சாதனமாயிற்று. அதனைத் தனக்கு இறைவன் அணிவித்தான் என்பார் 'என்னையும் தன் சுண்ண வெண்ணீறு அணிவித்து' என்றார். தூய்நெறி - சிவநெறி. அண்ணல் - பெருமையிற் சிறந்தோன்.*

***குறிப்பு :-*** *எண்ணமிலா - மனத்தால் எதிர்பாராத என்று முரைப்பர். சுண்ணம் - பொடி.*

**654. பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நெஞ்சாய துயர்கூர நிற்பேன்உன் அருள்பெற்றேன்
உய்ஞ்சேன்நான் உடையானே அடியேனை வருகஎன்று
அஞ்சேல்என் றருளியவா றார்பெறுவார் அச்சோவே. 5**

***உரை :-*** *பஞ்சு போன்ற பாதமுடைய மாதர் கடைக்கண் பார்வையால் இடைஞ்சற்பட்டு, நெஞ்சிலே உண்டாகிய துயர் மிகும்படி நிற்குமியல்புடையேன் உனது திருவருளைப் பெற்றேன். நான் உய்ந்தேன். என்னை உடையவனே, அடியேனை 'நீவா, பயப்படாதே' என்று அருள் செய்த முறை வேறு யார் பெற வல்லார்? இது அதிசயமே. உய்ஞ்சேன்; உய்ந்தேன் என்பதன் மரூஉ.*

**655.** **வெந்துவிழும் உடற்பிறவி மெய்யென்று வினைபெருக்கிக்**
**கொந்துகுழல் கோல்வளையார் குவிமுலைமேல் வீழ்வேனைப்**
**பந்தமறுத் தெனையாண்டு பரிசறஎன் துரிசுமறுத்(து)**
**அந்தமெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 6**

***உரை :-*** *வெந்து விழும் உடம்பின் சார்பாய பிறப்பை நிலையான தென்றெண்ணி தீவினைகளை மிகச்செய்து பூங்கொத்துக்களை யணிந்த கூந்தலையும் சங்கினாலாய வளையல்களையு மணிந்த பெண்டிரது குவிந்த நகிலின் மேல் விருப்பம் வைக்குமியல்புடைய எனது பாசத்தை நீக்கி, ஆட்கொண்டு, என் உயிர்ப்போதங் கெடும்படி, என் குற்றத்தை யொழித்து முடிவான பேற்றை எனக்கருள் செய்த முறையை வேறு யார் பெறவல்லார்?*

***குறிப்பு :-*** *கொத்து என்பதன் மெலிவு, கொந்து. கோல் - சங்கு. பரிசு - தன்மை. துரிசு - குற்றம். அந்தம் - முடிவான இன்பம், முடிவான நிலை.*

**656.** **தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப்**
**பையவே கொடுபோந்து பாசமெனுந் தாழுருவி**
**உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் துட்பொருளை**
**ஐயன்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 7**

***உரை :-*** *பெண்டிர் மயக்கிலே அமிழ்ந்து விழுதற்குரியேனை மெதுவாகக் கொண்டுபோய் மலமாகிய அடிப்படையை உருவி (எறிந்து), உய்தி கூடும் வழியைக் காண்பித்து ஓங்காரத்தின் உண்மைக் கருத்தினை, அப்பன் எனக்கருள்செய்த விதம் வேறு யார் பெற வல்லார்? இது அதிசயமே.*

*பெண்மயக்குற்றாரை மீட்டல் அரிதாகலின், இறைவனும் மெதுமெதுவாக மீட்கவேண்டிய நிலையும், அவர்களில்லாத சேய்மைக்கண் பிரித்துவைத்தாலல்லது மயலை அறவே அகற்ற முடியாமை கருதிக் கொண்டுபோகவேண்டிய நிலையும் விளைந்ததை உணர்த்தப் 'பையவே கொடுபோந்து' என்றார்.*

*ஐயன் - குருவாக எழுந்தருளிய தலைவன். ஐயன் - ஆசாரியன். உய்யுநெறி உயிர்க்குத் தெரியாமலிருக்க மையல் எனும் கதவிட்டு, அதில் பாசம் என்னும் தாழ் பூட்டியிருந்ததாகலின், மயல் நீக்கி நெடுந்தூரம் கொண்டு உய்க்க, பாசம் என்னும் தாழை உருவினார் என்க. தாழ் - கதவிற்குக் குறுக்கேயிடப் பெறும் உழல்மரம். இன்று தாழ்ப்பாள் என வழங்கும். திருக்குறளிலும் 'அன்பிற்குமுண்டோ அடைக்குந்தாழ்' என வழங்கப்பெறுதல் காண்க. தாழையுருவியவுடன் கதவு திறக்கும்; உய்யுநெறி தோன்றும் என்பதாம். பாசத்தைத் தாழாக உருவகித்தமையின், ஆசை மயக்கமாகிய இவற்றைக் கதவாகக்கொள்ள வைத்தமை காண்க.*

*ஓங்காரத்துட்பொருளை எனக்கு அருளியவாறு - இறைசத்தி பாசம் எழில் மாயை ஆவியுற நிற்பதாகிய பிரணவ பஞ்சாக்கரப் பொருளை அருளியவாற்றை என்க.*

*'ஓம்' என்பது, அ, உ, ம், நாதம் (-), (0) பிந்து ஆகிய ஐந்தும் கூடியது. இவற்றுள் 'அ' சிவமாகிய இறை, 'உ' சத்தி, 'ம்' மலம், நாதம் - உயிர், பிந்து - மாயை எனக்கொள்க. இவற்றுள் நாதமும் பிந்துவும் சிவசத்தி மலங்களின் பின் சங்கேத மாத்திரமாய் அடங்கி நிற்பதாய்க் கொள்க. மூன்றென்பார் கூற்றுள் அகரம் இறையும் அருளுமாகவும், உகரம் உயிராகவும், மகரம் மலமும் மாயையாகவும் கொள்ளக் கிடப்பதென்க. இதனையே அறுமுகப்பரமனார் பிரமனை வினாவியதும், இறைவன் அம்மைக்கு அருளியபோது அறுமுகப் பரமன் உடனிருந்து கேட்டதும் என்க. இந்தப்பிரணவமே முற்கூறியவாறு பிரிந்து நின்று அந்தக் கரணங்களை உடனின்று செலுத்துமென்பதையும் உணர்த்தினார் என்க. இவ்வுண்மையை,*

*'அவ்வுட னுவ்வும் மவ்வும் மனம்புத்தி யகங்கா ரங்கள்*
*செவ்விய விந்து நாதம் சித்தமோ டுள்ள மாகும்*
*ஒவ்வெனும் எழுத்தா மைந்தும் உணர்வுதித் தொடுங்கு மாறும்*
*பவ்வமுத் திரையும் போலும் பார்க்கிலிப் பண்பும் தோன்றும்'*

*என்ற சித்தித் திருவிருத்தத்தால் அறியலாம்.*

*ஓங்காரத்துட் பொருளை உணர்த்தியருளிய அனுபவ வழியைப் பிறர் யாரும் அறியார்; அடியேற்குக் கிடைத்தது எனவியத்தலின் இத்திருப்பாடல் அநுபவ வழி அறியாமையாகிய அச்சோப்பதிகத் துறுப்பாயிற்று.*

**657.** சாதல்பிறப் பென்னுந் தடஞ்சுழியில் தடுமாறிக்
காதலின்மிக் கணியிழையார் கலவியிலே விழுவேனை

மாதொருகூ றுடையபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஆதியெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 8

*உரை :- நீர்ப்பெருக்குப்போல இடையறாதுவரும் ஆறுபோல இடையறாது வருவது வாழ்வு; அதில் இடையேதோன்றுவன இறப்பும் பிறப்புமாகிய சுழிகள்; அதில் அகப்பட்டு நிலைகொள்ளாது சுழன்று ஆழ்ந்து எழுந்து தடுமாறி என்க. தடஞ்சுழி என்றார் எண்ணற்ற உயிர்களைத் தம்முட் சுழற்றுதலால்.*

*பிறப்பு இறப்பென்னும் பெரிய சுழியிலகப்பட்டுத் தடுமாறிக் காமமிகுந்து அழகிய நகையுடைய மாதர் புணர்ச்சியிலே விழுமியல்புடைய என்னை, உமையொருபாகன் தனது திருவடியே அடையும்படி, (எவற்றிற்கும்) ஆதியாகிய அவன் அருள் செய்தவாறு யார் பெறவல்லார்? இது அதிசயமே.*

**658.** செம்மைநலம் அறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்தான்
நம்மையும்ஓர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 9

*உரை :- எவற்றிற்கும் ஆதியாகிய தலைவன், நேர்மையின் நயம் அறியாத மூடரொடுந் திரியு மியல்புடைய எனது மூவகைப் பாசங்களையுங் களைந்து, (ஒன்றுக்கும் பற்றாத) அடியேங்களையும் ஒரு பொருளாக மதித்து, நாயைச் சிவிகையிலேற்றினாற்போல உயர்வித்த தாய்போல்வான் எனக்கருளிய விதம் வேறு யார் பெற வல்லார்? இது அதிசயமே.*

***திருச்சிற்றம்பலம்.***

***திருவாசகம் முற்றிற்று.***

***ஆகத் திருப்பதிகங்கள் 51-க்குப் பாடல் தொகை - 658.***

## திருவாசகம்
## எட்டாம் திருமுறை (I)
## பாட்டு முதற்குறிப்பகராதி




திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடி உபதேசக்காட்சி.